எ - து. ஸ்நானந்தானமுதலான நித்திய கருமங்களனைத்தையும் செய்யமாட்டேன், நன்மையான இராச விபகாரத்திலும் சுகாசுகத்திலும் செல்லேன், சரீர நமுவுவதையல்லாமல் மற்றொன்றையும் விரும்பேன், மௌனத்தை யுடையவனாய் எழுதப்பட்ட சித்திரத்தைப்போல இராகத்துவேஷங்களில் இச்சையற்றிருப்பேன் எ-ம்.

இ-ம். கன்மங்களின்முயலாமல் நிஷ்கன்மனாயிருந்து தேகத்தை விடுவேன் என்பதாம். (125)

## வசனியா திருந்தல்.

எனவுரைத் தமலசீத மதியென வினியோ னின்சொல்
வினவுநல் விவேகந்தன்னால் விரிந்தலர் மனத்திராமன்
மனமகிழ் முனிவர்முன்னர் வாய்மொழி யமைந்து நின்றான்
கனமுகின் முன்னர்கேகா ரவந்தவிர் கலாபிபோன்றே.

இ-ள். அமலசீதமதியென - களங்கமற்ற குளிர்ந்த பூரணசந்திரனைப்போல, இனியோன் - இனிமையுள்ளவனும், இன்சொல் - இனியவசனத்தினாலும், வினவும் - விசாரிக்கின்ற, நல்விவேகந்தன்னால் - ஆத்மவிவேகத்தினாலும், விரிந்தலர்மனத்திராமன் - விகசிதமான மனதையுடையவனாயு மிருக்கின்ற இராமரானவர், மனமகிழ்முனிவர்முன்னர் - அகங்களிக்கின்ற முனிவர்கள் முன்னே, எனவுரைத்து - (இப்படி) யென்றுசொல்லி, கனமுகின் முன்னர் - கனமாகிய மேகத்தின்முன்னே, கேகாரவந்தவிர்கலாபிபோன்று - கேகாவென்னுஞ் சத்தத்தைத்தவிர்ந்த மயிலைப்போல, வாய்மொழியமைந்து நின்றான் - வசனியாமற் சும்மாவிருந்தார்—எ-று.

எ - து. களங்கமற்ற குளிர்ந்த பூரணச் சந்திரனைப்போல இனிமை யுள்ளவனும், இனியவசனத்தினாலும் விசாரிக்கின்ற ஆத்மவிவேகத்தினாலும், விகசிதமான மனதை யுடையவனாயு மிருக்கின்ற இராமரானவர், அகங்களிக்கின்ற முனிவர்கள் முன்னே இப்படியென்று சொல்லி கனமாகிய மேகத்தின் முன்னேகேகாவென்னுஞ் சத்தத்தைத் தவிர்ந்த மயிலைப்போல வசனியாமற் சும்மாவிருந்தார் எ-ம்.

இ-ம். சபையில் இராமர் தனதுஅபிப்பிராயத்தை முனிவர்களுக் கறிவித்து அவர்கள் அபிப்பிராயந் தெரிந்துகொள்ளும் நிமித்த மௌனமாக இருந்தார் என்பதாம். (126)

## முதலாவது வைராக்கியப்பிரகரணம்-முற்றிற்று.

ஆக பதிகங் காப்புட்படச் செய்யுள் ளஉகூ.

# வல், சுகர்கதை.



அவதாரிகை.

முன்கதையில் சுயமாயுண்டான சாதனசாதுஷ்டயத்தில் இரண்டாஞ்சாதனமான விராகையினால் சீவேஸ்வரசகங்களாகக் காணப்பட்ட யாவையு மனூர்த சடதுக்கமெனத் தேவத்தன்மை நிறைந்த சபையிற் சொல்லிய இராமன் அனுபவத்தினால் இவன் சகல பந்தங்களு நீங்கிச் சைதன்னியமாத்திர மாயிருப்பதை யுணர்ந்தோரில் விசுவாமித்திரமுனிமேற் சர்வவியாபகமான சாக்ஷாதகாரமே நீயென்றறிவிப்பிகும் பொருட்டுஇவ்வனுபவமுள்ள சுகமுனியின்கதையை நிருபிக்கின்றார்.

## மகிழ்ச்சியடைதல்.



மைம்மல மாமோகத்தை மாய்த்திடும் புதுமைத்தான
செம்மல்வா சகங்கள்கேட்டுத் திருந்தவை யிருந்தோரெல்லாம்
இம்மொழி கேட்பபோல வெழப்புள குவகைமிககார்
விம்மல்சேர் சித்தர்சேனை விண்மிசைக் களித்தவன்றே.

இ - ள். மைம்மல - களங்கமுள்ள, மாமோகத்தை - மகாசம்சாரத்தை, மாய்த்திடும் - கெடுக்கப்பட்ட, புதுமைத்தான - அதிசயமான, செம்மல்வாசகங்கள்கேட்டு - இளவரசான இராமன்வசனங்களைக்கேட்டு, திருந்தவை யிருந்தோரெல்லாம - திருத்தமான (தசரதன்) சபையிலிருந்த சகலரும், இம்மொழிகேட்பபோல - இவ்வசனத்தைக் கேட்கவந்ததுபோல, புளகெழ - மயிர்க்குச்செழ, உவகைமிக்கார் - களிப்பின்மிகுந்தார்கள், விம்மல்சேர் சித்தர் சேனை - ஒலித்தலையுடைய சித்தர்கணங்கள், விண்மிசைக்களித்த - ஆகாயத்தின்கண் மகிழ்ந்தன—எ-று.

எ - து. களங்கமுள்ள மகாசம்சாரத்தை கெடுக்கப்பட்ட அதிசயமான இளவரசான விராமன் வசனங்களைக்கேட்டு திருத்தமான தசரதன் சபையிலிருந்த சகலரும் இவ்வசனத்தைக் கேட்கவந்தது போல மயிர்க்குச்செழ களிப்பின்மிகுந்தார்கள், ஒலித்தலையுடைய சித்தர்கணங்கள் ஆகாயத்தின்கண்மகிழ்ந்தன—எ-ம்.

இ-ம். ஆகாயத்திற்சித்தர்சபையும பூமியிலிராசசபையும் இராமனது வை ராக்கியவசனத்தைக் கேட்டுஆநந்தத்தை யடைந்தனவென்பதாம். (1)

## சித்தர்கள் மகிழ்தல்.

நன்றுநன் றென்னுஞ்சொல்லு நன்மலர் மழையுங்கூடி
ஒன்றியோர் கடிகைபாதி யிழிந்தபின் னூழிகாலம்
வன்றுய ருழன்றுசிந்தை மயங்கிய யாங்களெல்லாம்
இன்றிரா கவன்சொலென்னு மின்னமு தமையப்பெற்றோம்.

இ - ள். நன்றுநன்றென்னுஞ்சொல்லும் - நல்லதுநல்லதுஎன்னும் வச னமும், நன்மலர்மழையும் - நல்லபுஷ்பமாரியும், கூடியொன்றி - சேர்ந்து, ஓர் கடிகைபாதி - அரைநாழிகைநேரம, இழிந்தபின் - (சபையில்) வந்து நிறைந்த பின்பு, ஊழிகாலம் கற்பகாலம, வன்றுயர் - வலியதுன்பத்தோடும், உழன்று - விண்ணிற்சஞ்சரித்து, சிந்தைமயங்கிய-மனேமயக்கமுள்ள, யாங்களெல்லாம்- நாங்களனைவரும், இன்று - இன்றையத்தினம், இராகவன் சொலென்னும் இராமன் வசனமென்கின்ற, இன்னமுது அமையப்பெற்றோம்-இனிய அமுதமுங் கிடைக்கப்பெறறோமென்று (சித்தர்கள் சொன்னார்கள்)-எ-று.

எ - து. நல்லது நல்லதென்னும் வசனமும், நல்லபுஷ்பமாரியுஞ் சேர்ந்து அரைநாழிகைநேரம சபையில்வந்து நிறைந்தபின்பு கற்ப காலம் வலியதுன்பத்தோடும விண்ணிற்சஞ்சரித்து, மனேமயக்கமு ள்ள நாங்களனைவரும், இன்றையத்தினம் இராமன் வசனமெனகிற இனியஅமுதமுங் கிடைக்கப்பெற்றோமென்று சித்தர்கள் சொன்னார் கள்—எ-ம

இ-ம். இராமன் வைராக்கியத்தினுற் சித்தர்கள் மயக்கந் தெளிந்ததென் பதாம். (2)

## சித்தர்கள் சபைக்கு வருதல்.

திருந்திய விவன்சொலாலே
தெளிவுறு சிந்தைபெற்றோம்
பெருந்தகை முனிவர்சொல்லும்
பொருளினிப் பெறுதுமென்னுப்

பொருந்திய விண்ணினின்று
பூதலத் திழிதலோடும்
இருந்தபே ரவையோரெல்லா
மெழுந்தெதிர் கொள்வதானார்.

இ - ள். திருந்தியஇவன்சொலால் திருத்தமான இவ்விராமன் வசனத்தினால், தெளிவுறுசிந்தைபெற்றோம் - தெளியப்பட்ட சித்தத்தையடைந்தோம், பெருந்தகைமுனிவர் - (இதற்கு) மேன்மையான முனிவர்கள், சொல்லும் - போதிக்கும், பொருளினிப் பெறுதுமென்று - வஸ்துவைமேலடைவோமென்று, பொருந்தியவிண்ணினின்று - தாங்களிருந்த ஆகாயத்தினின்று, பூதலத்திழித லோடும் - (சித்தர்கணங்கள்) பூமியிலிறங்கவும், இருந்தபேரவையோரெல்லாம் - மகாசபையி லிருந்தோரனைவரும், எழுந்தெதிர் கொள்வதானார் - எழுந்திருந்து எதிர்கொள்வதானார்கள் - எ-று.

எ - து. திருத்தமானஇவ்விராமன் வசனத்தினால், தெளியப்பட்ட சித்தத்தையடைந்தோம், இதற்கு மேன்மையானமுனிவர்கள் போதிக்கும் வஸ்துவைமேலடைவோமென்று, தாங்களிருந்த ஆகாயத்தினின்று சித்தர்கணங்கள் பூமியிலிறங்கவும், மகாசபையிலிருந்தோர் அனைவரும் எழுந்திருந் தெதிர் கொள்வதானார்கள் — எ-ம்

இ - பு. விஷயதோஷதிருஷ்டி நிருபணத்தினால் மனந்தெளிந்த சித்தர்கள்மேல் ஆத்மானுபவத்தையுந் தெரிந்துகொள்ள ஆத்மராமன் சபைக்கு வந்ததாம். (3)

சித்தபுடை நாருஞ் சந்தித்தல்.

வந்துறு சித்தர்க்கெல்லாம் வசிட்டனுங் காதிசேயு
முந்துபூ சனைகள் செய்தார் முனிவருக் கவருஞ் செய்தார்
அந்தநல் லவையின் வேந்து மருசனை யவர்கட் செய்தான்
நந்துமவ் வவர்களுமன்னர் நன்சொலாற் பூசை செய்தார்.

இ - ள். வந்துறுசித்தர்க்கெல்லாம் - வந்தடைந்த சித்தர்கள் அனைவர்க்கும், வசிட்டனுங்காதிசேயும் - வசிட்டநும் விசுவாமித்திரரும், முந்துபூசனைகள்செய்தார் - முந்தியாராதித்தார்கள், முனிவருக்கவருஞ் செய்தார் - (பின் பிந்த) முனிவர்களுக்கு அச்சித்தர்களும் பூசித்தார்கள், அந்த நல்லவையில் அந்தச்சபையிலுள்ள, வேந்தும் - அரசனான தசரதனும், அவர்க்கு - அச்

சித்தர்களுக்கு, அருச்சனைசெய்தான் - பூசைசெய்தான், ஈந்துமன்னவர்க்கும் - ஆக்கமுள்ள அவ்வரசனுக்கும், அன்னூர் - அச்சித்தர்கணங்கள், நன்சொலால்-முகமன்வசனத்தினுல், பூசைசெய்தார்-ஆராதித்தார்கள்—எ-று.

எ – து. வந்தடைந்த சித்தர்கள் அனைவர்க்கும் வசிட்டரும்,விசுவாமித்திரரும் முந்தியாராதித்தார்கள்;பின்பிந்த முனிவர்களுக்குஅச்சித்தர்களும் பூசித்தார்கள். அந்தச்சபையிலுள்ள அரசனுன தசரதனும் அச் சித்தர்களுக்குப் பூசைசெய்தான்,ஆக்கமுள்ள வவ்வரசனுக்கும் அச்சித்தர்கணங்கள் முகமன்வசனத்தினுல் ஆராதித்தார்கள்.

இ-ம். சித்தர்களுஞ் சபையிலுள்ளோரும் ஒருவருக்கொருவர் வணங்கும் கிரமம் அறிவித்ததாம். (4)

## இராமனது நிராசையைப் புகழ்தல்.

தொழுதுமுன் னிருந்தசெங்கட் டோன்றற்கு முபசாரங்கள்
பழுதில்பூ மழையானல்ல மொழிகளாற் பரிந்துசெய்து
விழுமிய குணத்தான்மிக்கோன் விரத்தியாய் விளம்புஞ்சொற்கள்
முழுதுநல் லுதாரமாகி முடிவிலற் புதமாமென்றூர்.

இ - ள். தொழுதுமுன்னிருந்த-வணங்கிமுன்னேயிருந்த, செங்கண்தோன்றற்கும் - செவ்வியகண்களையுடைய இராமருக்கும், உபசாரங்கள் - முகமன் வசனங்களை, பழுதில்பூமழையால் - பழுதற்ற புஷ்பவருஷத்தினுலும், நல்ல மொழிகளால் - அன்பான வசனங்களாலும், பரிந்துசெய்து - அன்புசெய்து, விழுமியகுணத்தான் மிக்கோன் - (முனிகளே) நன்மையான (மைத்திரியாதி) குணங்களின்மிகுந்த இராமர், விரத்தியாய விளம்புஞ்சொற்கள் - துறவாகச்சொல்லியவசனங்கள், முழுதுநல்லுதாரமாகி - முற்றுங்கெம்பீரமுடையதாய், முடிவிலற்புதமாமென்றூர் - அளவற்ற அதிசயமுள்ளதாமென்று சித்தர்கள்) சொன்னூர்கள்—எ-று.

எ - து. வணங்கி முன்னேயிருந்த செவ்விய கண்களையுடைய இராமருக்கும், முகமன்வசனங்களை பழுதற்றபுஷ்ப வருஷத்தினுலும் அன்பானவசனங்களாலும் அன்புசெய்து, முனிகளே நன்மையான மைத்திரியாதி குணங்களின் மிகுந்த இராமர், துறவாகச் சொல்

விய வசனங்கள் முற்றுங் கெம்பீரமுடையதாய், அளவற்ற அதிசய முள்ளதாமென்று சித்தர்கள் சொன்னார்கள்.

இ-ம் இராமனது வைராக்கியவசன ஆச்சரியகரமுள்ள ஆழ்ந்த கருத்தாக இருக்கின்றதென்று அதிசயித்ததாம். (5)

## சித்தர்கள் தங்களை யிகழ்தல்

ஈசனே படைத்ததாகி யெண்ணிற் முயற்சிமிக்க
மாசுறு மாயைதன்னில வருசுக மரிதுசாலத்
தேசுறு சதுரச்சிந்தைச் செல்வனுக் குணரற்பாற்றேற்
பேசுறு நாங்களெல்லாம பேதைய ரென்னச்சொன்னார்.

இ-ள். ஈசனேபடைத்ததாகி - தேவநிர்மாணமாய், எண்ணில்தீ-அளவற்றதீமையைச் (செய்ய) முயற்சிமிக்க - உற்சாகமிகுந்த, மாசுறுமாயைதன்னில்-குற்றம்பொருந்திய சம்சாரத்தில், வருசுகமரிது - வாராநின்ற சுகமரியதாம், சால-மிகவும், தேசுறு பிரகாசம்பொருந்திய, சதுரச்சிந்தை சிறந்தவைராக்கிய சித்தமுள்ள, செல்வனுக்கு - இராமனுக்கு, உணரற்பாற்றேல் - (அச்சம்சார மிட்டமென்) றுணரும்-தகுதியதாயின், பேசுறும் - (நமக்குமிஷ்டத்தைக்கொடுக்குமென்று சொல்லப்படும், நாங்களெல்லாம் - (அவரால் வெறுக்கப்பட்டவைகளை விரும்புதலின் தேவரிஷிகள் முதலிய) யாங்களனைவரும், பேதையரென்ன - அறிவில்லாதவர்களென்று, சொன்னார் - (அச்சித்தர்கள்) சொன்னார்கள் எ-று.

எ-து தேவநிர்மாணமாய், அளவற்ற தீமையைச்செய்ய, உற்சாகமிகுந்த குற்றம்பொருந்திய சம்சாரத்தில் வாராநின்ற சுகமரியதாம், மிகவும்பிரகாசம்பொருந்திய சிறந்தவைராக்கிய சித்தமுள்ள இராமனுக்கு, அச்சம்சாரமிஷ்டமென்றுணரும் பகுதிய தாயின் நமக்கு மிஷ்டத்தைக் கொடுக்குமென்று சொல்லப்படும். அவரால்வெறுக்கப்பட்டவைகளை விரும்புதலின் தேவரிஷிகள் முதலிய யாங்களனைவரும் அறிவில்லாதவர்களென்று அச்சித்தாகள் சொன்னார்கள்—எ-ம்.

ப-ம். மாயை, பிரமசந்நிதியில் ஆரோபித்ததென்பார், ஈசனேபடைத்தாயென்றும், சகாக்ஷாரான இராமனிச்சய மிப்படியிருக்க, போதாயனர் முதலிய முனிகள்உலகாசாரத்தை தவற்புறுத்திச் சொல்லியது அறியாமையென்பார், நாங்களெல்லாம் பேதையரென்னச் சொன்னாரென்றுங் கூறினார்.

இ-ம். மாயாரகிதரான இராமருக்கு அகம்மாயாசகிதரான யாங்களறிவிற் சமானமாம் என்பதாம். (6)

## இராமனுரைத்த அனுபவமே நிச்சயமெனல்.

ஈதவ ருரைத்தபின்ன ரிராமனை யினிதுநோக்கிக்
காதிசே யுரைப்பானீயே களங்கமில் புந்தியாலே
தீதற வனைத்துங்கண்டாய் தெளிவுறப் பிறிதொன்றில்லைப்
போதமார் சுகனுநீயும் புந்தியா லொப்பீரன்றே.

இ-ள். ஈதவ ருரைத்தபின்னர் - இப்படியச்சித்தர் (கணங்கள்) சொல்லியபின்பு, இராமனையினிதுநோக்கி - இராகவனை அன்பாகப்பார்த்து, காதிசேயுரைப்பான் - விசுவாமித்திரர் சொல்லுவார், நீயே-நீசுயமாகவே, களங்கமில்புந்தியால் - குற்றமற்றவறிவினால், தீதறவனைத்துங்கண்டாய் - குற்றமற யாவையுமறிந்தாய், தெளிவுற - (இனி) தெளிவாயறிய (வேண்டியபொருள்), பிறிதொன்றில்லை, வேறொன்றில்லை போதமார் ஞானநிறைந்த, சுகனும்-சுகமுனியும், நீயும்-நீரும், புந்தியாலொப்பீர்-அறிவினாற் சமானமாவீர்கள் எ-று.

எ-து. இப்படிஅச்சித்தர்கணங்கள் சொல்லியபின்பு, இராகவனை யன்பாகப்பார்த்து, விசுவாமித்திரா சொல்லுவார். நீ சுயமாகவே குற்றமற்ற அறிவினால் குற்றமறயாவையும் அறிந்தாய், இனித்தெளிவா யறியவேண்டிய பொருள் வேறொன்றில்லை, ஞானநிறைந்த சுகமுனியும நீரும் அறிவினாற் சமானமாவீர்கள— எ-ம.

இ-ம். சுயமாயுண்டானவிராசையே ஆத்மானுபவத்தைக் கொடுக்குமென்பதாம். (7)

## சுகமுனியின் அனுபவத்தை விசாரிக்கல்.

இகலற வுணர்வுற்றோரு மிளைப்பற நயப்பரென்று
மகமுனி யுரைப்பக்கேட்ட வள்ளலு முரைப்பானையா
அகமறு முணர்வுண்டாயு மாறுதன் முன்னமின்றிச்
சுகமுறப் பின்னுண்டான தெங்ஙனஞ் சுகனுக்கென்றான்.

இ-ள். இகலறவுணர்வுற்றோரும்-எதிரற்ஞானத்தைப பெற்றவர்களும், இளைப்பறநயப்பரென்று - விஸ்ராந்தியை யடைய விரும்புவார்களென்று, மக

முனியுரைப்ப - யாகத்துக்குரிய (விசுவாமித்திர) முனிசொல்ல, கேட்ட- இதைக்கேட்ட, வள்ளலுமுரைப்பான் - இராமருஞ்சொல்வார், ஐயா - என் னையனே, சுகனுக்கு - சுகமுனிக்கு, அகமறுமுணர் வுண்டாயும் - அகப்பாவ மற்ற அறிவுண்டாயிருந்தும், ஆறுதல் - விஸ்ராந்தியானது, முன்னமின்றி- முன்னில்லாமல், சுகமுற - இன்பமுற, பின்னுண்டான தெங்ஙனம் - பின்பு ண்டானதெப்படி, என்றான் - என்றுகேட்டார் — எ-று.

எ - து. எதிரற ஞானத்தைப் பெற்றவர்களும், விஸ்ராந்தியைய டைய விரும்புவார்களென்று, யாகத்துக்குரிய விசுவாமித்திர முனி சொல்ல, இதைக்கேட்ட இராமருஞ்சொல்வார். என்னையனே சுகமு னிக்கு அகம்பாவமற்ற அறிவுண்டாயிருந்தும, விஸ்ராந்தியானது முன்னில்லாமல், இன்பமுற பின்புண்டானதெப்படி என்று கேட் டார்— எ-ம்.

ப-ம். அபரஞானம்வந்தும், அதில்அலமைதிபெறும அனுபவமானபரஞா னம் வேண்டுமென்பார். நிலைறவுணர்வுற்றோரு மிளைப்பற நயபபரொன்றார்.

இ-ம். பரமசுகத்தைப் பெறவிரும்பினதாம். (8)

## சுகமுனியின் அனுபவத்தை யுரைத்தல்.



என்னலு முனிவன்சொல்வா னெழுபிறப் பறுக்குஞானந்
துன்னிய சுகனுநின்போற் றொல்லுல கியல்பைநாடி
மன்னிய விவேகமுண்டாய் மாசறு முணர்வுபெற்றும்
அந்நிலை யையமாகி யாறுத லற்றானன்றே.

இ - ள். என்னலும்-இப்படியென் றிராமன் கேட்கவும், முனிவன்சொ ல்வான் - விசுவாமித்திர முனிவர்சொல்லுவார், எழுபிறப்பறுக்குஞானம்-ஏழ் பவங்களைக்கெடுக்கின்ற ஞானமானது, துன்னிய-நிறைந்த, சுகனும் - சுகப்பி ரமரிஷியும், நின்போல - உன்னைப்போல், தொல்லுலகியல்பைநாடி - முன் னுள்ள சகசுபாவத்தை விசாரித்து, மன்னிய விவேகமுண்டாய் - நிலைபெற்ற விவேகமுள்ளவராய், மாசறுமுணர்வுபெற்றும் களங்கமற்ற ஞானத்தையடை ந்தும், அந்நிலையையமாகி- அந்நிச்சயத்திற்சந்தேகமுள்ளவராய், ஆறுதலற்றான்- விஸ்ராந்தியடைந்திலன் — எ-று.

எ - து. இப்படியென்று இராமன்கேட்கவும், விசுவாமித் திர முனிசொலலுவார். ஏழ்பவங்களைக் கெடுக்கின்ற ஞான மானது நிறைந்த சுகப்பிரமரிஷியும், உன்னைப்போல் முன்

னுள்ள சகசுபாவத்தை விசாரித்தது நிலைபெற்ற விவேகமுள்ளவராய். களங்கமற்ற ஞானத்தை யடைந்தும், அநிச்சயத்திற் சந்தேகமுள்ள வராய், விஸ்ராந்தியடைந்திலன்—எ - ம்.

இ - ம். களங்கமற்ற ஞானத்தை யடைந்தும் அநித்தியமாகத் தள்ளப்பட்ட வஸ்து சேடங்கள் நீங்காத அதனால் விஸ்ராந்தியுண்டாகவில்லை என்பதாம். (9)

## மாயாஸ்வரூபம் வினவுதல்.

விடலரு மசைவுவிட்டு விடயத்தின் மீண்ட நெஞ்சன்
வடவரை யுறைபுந் தாதை மருங்குற வெய்தி யிந்த
இடருறு மாயைவந்த தெங்ஙன நிற்ப தெங்ஙன்
தொடர்பிலா ருடைய தெம்மட் டென்றிது தோன்றிற்றென்றான்.

இ - ள். விடலரும் அசைவுவிட்டு - விடுதற்கரிய சஞ்சலத்தைநீக்கி, விடயத்தின் - விடயபோகத்தினின்றும், மீண்ட நெஞ்சன் - திரும்பிய மனதையுடைய சுகரும், வடவரை யுறைபுந் தாதை - மகாமேருவில் வசிக்கின்ற பிதாவின், மருங்குற எய்தி - பக்கத்திலடைந்து, இந்த இடருறு மாயை - இத் துக்கமயமானது, வந்தது எங்ஙனம் - வந்ததெப்படி, நிற்பது எங்ஙன் - நசிப்பதெப்படி, தொடர்பில் - தொடர்ச்சியில், ஆருடையது - ஆரையுடையது, எம்மட்டு - எவ்வளவுள்ளது, என்றிது தோன்றிற்று என்றான் - எப்போது உண்டாயிற்று என்று கேட்டார்—எ-று.

எ - து விடுதற்கரிய சஞ்சலத்தைநீக்கி, விடயபோகத்தினின்றும் திரும்பிய மனதையுடைய சுகரும், மகாமேருவில் வசிக்கின்ற பிதாவின் பக்கத்திலடைந்து இத்துக்கமயமான மாயையானது வந்ததெப்படி? நசிப்பதெப்படி? தொடர்ச்சியில் ஆரையுடையது? எவ்வளவுள்ளது? எப்போதுண்டாயிற்றென்று கேட்டார்—எ-ம்.

• இவன்சித்தஞ் சாபால்யமற்றதாய் மிகபங்கமுள்ள போகங்களினின்றும் மழைக்காலினின்றுஞ் சாதகங்கள்போல நிவர்த்தித்ததென்னும், சுலோகார்த்தத்தை விடயத்தின் மீண்ட நெஞ்சனென்னும் பதத்திலடக்கினார்.

ப-ம். மாயை சீவனையுடையதா? அல்லது ஈசனையுடையதா? என்பார் ஆருடையதென்றார்

இ-ம். மாயையின் உற்பத்தி ஸ்திதிலயத்தை விசாரித்ததாம். (10)

## அனுபவம் விளங்காமை.

அன்னவன் கேட்டவெல்லா மறிவுற வுரைத்தபோது
முன்னநா னுணர்ந்தவாறே மொழிந்தனை யெனவச்சொல்லால்
நன்னிலை பெறாமைகண்டு நல்லுணர் வெனக்குத்தோன்றா
மன்னவன் சனகனென்பான் வழுவறு முணர்வின் மிக்கோன்.

இ - ள். அன்னவன் - அந்தச் சுகரானவர், கேட்டவெல்லாம்-வினவின அனைத்தும், அறிவுற - அவன் அறிவிற்பொருந்த, உரைத்தபோது-சொல்லிய சமயத்தில், முன்னம் நானுணர்ந்தவாறே - முன்பியானறிந்த பிரகாரமே, மொழிந்தனையென - சொன்னீரென்று சொல்ல, அச்சொல்லால் - அவ்வசனத்தினால், நன்னிலைபெறாமைகண்டு - நல்நிச்சயமடையாமையைப் பார்த்து, நல்லுணர்வு - சுகபோகமானது, எனக்குத்தோன்றா - எனக்குத்தெரியாது, மன்னவன் - அரசனாகிய, சனகனென்பான் - சனகரென்பவர், வழுவறுங்-குற்றமற்ற, உணர்வின்மிக்கோன் - ஞானத்தில் மிகுந்தவர். எ-று.

எ - து. அந்தச் சுகரானவர் வினவின அனைத்தும் அவனறிவிற் பொருந்த சொல்லிய சமயத்தில் முன்பியானறிந்த பிரகாரமேசொன்னீரென்றுசொல்ல அவ்வசனத்தினால் நல்நிச்சயமடையாமையைப் பார்த்து சுகபோதமானது எனக்குத்தெரியாது, அரசனாகிய சனகரென்பவர் குற்றமற்ற ஞானத்தில் மிகுந்தவர்—எ-ம்.

ப - ம். ஆசாரியார் அறிவில்வைத்து உபதேசிக்கும் அதீதானுபவத்தில் அமையவில்லை யென்பார், நானுணர்ந்தவாறே மொழிந்தனையென்றும், சிடனறிதலைவிட்டு அனுபவத்தில் அழுந்தவில்லையென் றறிந்தாரென்பார், அச்சொல்லால் நன்னிலைபெறாமை கண்டென்றுங்கூறினார்.

இ - ம். ஆசாரியர் அறிவிப்பதெல்லாம் அஃதின்றிய அனுபூதியெனக் கொள்ளவேண்டும் என்பதாம். (11)

## பக்குவசோதனை.

ஆயவன் றனைபேகேட்கென் றருளொடு தாதையேவப்
போயினன் சனகன்வாழும் பொன்மனை வாயிற்சேர்ந்தான்
தூயவன் வரவுகேட்டுச் சோதிப்பான் கருதிமன்னன்
ஏயின னில்லைநாளே ழிருந்தனன் விகற்பமில்லோன்

இ - ள். ஆயவன்றனையேகேட்கென்று - அச் சனகரையே கேட்கக்கட வாயென்று, அருளொடு தாதையேவ - கிருபையுடன் பிதாவானவ ரனுப்ப, போயினன் - (மகாமேருவினின்றுபூமியிற்) சென்று, சனகன்வாழும் பொன் மனை - சனகராசன் வாழாநின்ற சுவர்ணமயமான வீட்டினது, வாயிற்சேர்ந் தான் - வாயலிற் அடைந்தான், தூயவன் வரவுகேட்டும் - மேலான சுகப்பிரம ரிஷியினுடைய வரவைத் (தூதர்களாற்) கேட்டு, சோதிப்பான்கருதி-சோதிக் கும்பொருட்டு நினைத்து, மன்னன் - அரசன், ஏயினனில்லை - (காணச்) சென் றானில்லை, விகற்பமில்லோன் - விகற்பமின்றிய சுகமுனியானவர், நாள் ஏழி ருந்தனன் - ஏழுநாளிருந்தார்—எ று.

எ - து. அச் சனகரையே கேட்கக் கடவாயென்று கிருபை யுடன் பிதாவானர் அனுப்ப, மகாமேருவினின்று பூமியிற்சென்று சனகராசன் வாழாநின்ற சுவர்ணமயமான வீட்டினது வாயலிலடைந் தான், மேலான சுகப்பிரமரிஷியினுடைய வரவைத் தூதர்களாற்கே ட்டுச் சோதிக்கும்பொருட்டு நினைத்து அரசன்காணச்சென்றானில்லை. விகற்பமின்றிய சுகமுனியானவர் ஏழுநாளிருநதார்—எ-ம்.

இ-ம். சுகமுனிவரது சாந்தியாதி குணங்களைச் சோதிக்கும்பொருட்டு முன்வாயிலிற் றடைசெய்ததாம். (12)

இதுவுமது.

---

மற்றுநா ளேழும்வேறோ ரிடத்துற வைத்தபின்னர்
பொற்றிர ளழகாரந்தப் புரத்திடை நாளேழ்வைத்துச்
சிற்றிடை மகளிர்போகஞ் சிறந்தவூ ணளிப்பத்துய்த்தான்
குற்றமுங் குணமுநாடான் குளிர்நிறை மதியமொத்தான்.

இ - ள். மற்றுநாள் ஏழும் - பின்னுமேழுநாள், வேறோரிடத்துற வை த்தபின்னர் - மற்றோரிடத்தி லிருக்கும்படி வைத்தபின்பு, பொற்றிரள் அழ கார்-மிகுந்தபொன்னினாற் செய்யப்பட்டு அழகுநிறைந்த, அந்தப்புரத்திடை- அந்தப்புரத்தில், நாள்ஏழ்வைத்துச் - ஏழுநாளிருத்தி, சிற்றிடைமகளிர்-சிறிய விடையை யுடைய மடவர்களால், போகம்-(சந்தனபுஷ்பமுதலான) போகங் களையும், சிறந்தவூண் - அறுசுவையுண்டிகளையும், அளிப்ப - கொடுப்பிக்க, துய்த்தான் - புசித்தான், குளிர்நிறைமதியம் - குளிர்ந்தபூரண சந்திரனுக்கு, ஒத்தான் - சமானமுள்ள சுகமுனியானவர், குற்றமும் - (இவ்விடயங்களின்) குற்றத்தையும், குணமும் - குணத்தையும், நாடான்-ஆராய்ந்திலன் —எ-று,

எ - து. பின்னும் ஏழுநாள் மற்றோரிடத்திலிருக்கும்படி வைத்தபின்பு மிகுந்த பொன்னினாற் செய்யப்பட்டு அழகுநிறைந்த அந்தப்புரத்தில் ஏழுநாளிருந்தி சிறியவிடையையுடைய மடவார்களால் சந்தனபுஷ்பமுதலான போகங்களையும் கொடுப்பிக்கப் புசித்தான், குளிர்ந்த பூரணச்சந்திரனுக்கு சமானமுள்ள சுகமுனியானவர், இவ்விடயங்களின் குற்றத்தையும் ஆராய்ந்திலன்—எ - ம்.

இ - ம். இடை ஏழுநாள் ஓர் வாயலில் தடுத்தலாற், குரோதசோதனையையும், கடையேழுநாள் அந்தப்புரத்திற் போகங்களைக் கொடுத்தலாற் காமசோதனையையுஞ் செய்ததாம். (13)

## சுகதுக்கங்களில் அழுந்தாமை.

மன்னவன் சனகன்றந்த போகத்தின் மகிழ்ச்சியாவும்
அன்னவன் முன்னஞ்செய்த வவமதித் துன்பமியாவும்
இன்னவன் மனதைச்சற்று மிழுத்தில விளமென்றென்றல்
பொன்னசலத்தின்மிக்க பொருப்பினை யிழுக்கவற்றோ.

இ - ள். மன்னவன் - அரசனாகிய, சனகன் தந்த - சனகராற் கொடுக்கப்பட்ட, போகத்தின்-போகங்களின், மகிழ்ச்சியாவும்- சுகமனைத்தும், அன்னவன்-அவன், முன்னஞ்செய்த-முன்செய்யப்பட்ட,அவமதித்துன்பமியாவும்-அவமானமான துக்கமனைத்தும், இன்னவன் மனதை - இச்சுகமுனியினது மனதை, சற்றுமிழுத்தில் - எவ்வளவேனும் அசைக்கவில்லை, இளமென்தென்றல்-இளமையு மென்மையுமுள்ள தென்றலானது, பொன்னசலத்தில் - அழகிய மலைகளில், மிக்க - பெரிதாகிய, பொருப்பினை - மேருவை, இழுக்கவற்றோ- அசைக்குந்திறத்ததோ—எ-று.

எ - து. அரசனாகிய சனகரால் கொடுக்கப்பட்ட போகங்களின் சுகமனைத்தும், அவன் முன்செய்யப்பட்ட அவமானமான துக்கமனைத்தும் இச்சுகமுனியினது மனதை எவ்வளவேனு மசைக்கவில்லை, இளமையு மென்மையுமுள்ள தென்றலானது அழகியமலைகளில் பெரிதாகிய மேருவை அசைக்குந் திறத்ததோ-எ - ம்.

இ - ம். மனமானது போகாபோகங்களிற் சலியாமற சமதிருஷ்டியில் இருந்ததாம். (14)

## சந்தித்து வினவுதல்.

ஆங்கவ னிலைமைநோக்கி யடிபணிந் தரசன்போற்றித்
தாங்குல கத்தின்செய்கை தவிர்ந்துபே ரனைத்தும்பெற்றோய்
ஈங்குறு பொருளே தென்ன வெங்ஙன மாயைதோன்றிற்
றோங்கிய தெங்ஙன்போவ துள்ளவா றுரைசெய்யென்றான்.

இ - ள். ஆங்கவனிலைமைநோக்கி - அவ்விடத்தவ ரகமகிழ்ச்சியைப் பார்த்து, அரசன் - சனகராசன், அடிபணிந்து - நமஸ்கரித்து, போற்றி - துதித்து, தாங்கு உலகத்தின்செய்கை-தாங்காநின்ற சகவியாபாரத்தை, தவிர்ந்து-நீங்கி, பேறுஅனைத்தும் பெற்றோய் - இலாபமனைத்தையுமடைந்த, சுகப்பிரமரிஷியே, ஈங்குறுபொருள்-இவ்விடத்தி லெழுந்தருளிய காரியம், ஏதென்ன-என்னவென்றுகேட்க, எங்ஙன மாயைதோன்றிற்று - எப்படி மாயையுண்டாயிற்று, எங்ஙன்ஓங்கியது - எப்படி வளர்ந்தது, எங்ஙன்போவது - எப்படிநசிக்கும், உள்ளவாறு - உள்ளபிரகாரம், உரைசெய் யென்றான் - (குருவே) யருளுமென்று சுகமுனிகேட்டார் —எ-று.

எ - து. அவ்விடத்தவர் அகமகிழ்ச்சியைப்பார்த்து சனகராசன் நமஸ்கரித்து துதித்து தாங்காநின்ற சகவியாபாரத்தை நீங்கி இலாபமனைத்தையு மடைந்த சுகப்பிரமரிஷியே! இவ்விடத்தி லெழுந்தருளிய காரியம் என்னவென்று கேட்க; எப்படி மாயையுண்டாயிற்று, எப்படிவளர்ந்தது, எப்படிநசிக்கும் உள்ளபிரகாரம் குருவேயருளுமென்று சுகமுனிகேட்டார்—எ-ம்.

இ - ம். ஸ்வரூபப்பிரத்தியக்ஷம் விளங்கும்பொருட்டு மாயாவுற்பத்தி ஸ்திதிலயந் தெரியவேண்டும் என்பதாம். (15)

## சனகர் வாக்கியத்தை ஒப்புக்கொள்ளுதல்.

மெய்ம்முறை முனிவர்கேட்ப வேந்தனும் வியாசன்சொன்ன
அம்முறை யுரைத்தலோடு மறிஞனும் விவேகத்தான்முன்
இம்முறை யறிந்தேனீயு மெந்தையி னதுவேசொன்னீர்
மெய்ம்முறை நூல்களெல்லாமொழிபொரு ளொன்றேயென்றார்.

இ - ள். மெய்ம்முறை - உண்மை (யாகக்கேட்கவேண்டிய) கிரமத்தை, முனிவன்கேட்ப - சுகப்பிரமரிஷிகேட்க, வேந்தனும் - சனகராசனும், வியா

சன்சொன்ன - வியாசர் (முன்) சொல்லிய, அம்முறை யுரைத்தலோடும்-அவ்வண்ணஞ் சொன்னமாத்திரத்தில், அறிஞனும்-ஞானவானுகிய சுகரும், விவேகத்தால்-(சுய) விவேகத்தினுல், முன்-முன்னமே, இம்முறை-இவ்வண்ணம், அறிந்தேன் - தெரிந்தேன், நீயும்-நீரும், எந்தையின் - என் பிதாவைப்போல, அதுவேசொன்னீர் - அந்தஅருத்தத்தையே சொன்னீர், மொய்ம்முறை நூல்களெல்லாம் - நிறைந்த வேதாந்த சாஸ்திரங்கள் அனைத்தும், மொழிபொருள் ஒன்றேயென்ருர் - சொல்லப்பட்ட வாக்கியார்த்தங்கள ஏகமேயென்றுசொன்ஞர்—எ-று.

எ - து. உண்மையாகக் கேட்கவேண்டிய கிரமத்தை சுகப்பிரமரிஷிகேட்க சனகராசனும் வியாசர்முன் சொல்லிய அவ்வண்ணஞ் சொன்னமாத்திரத்தில் ஞானவானுகிய சுகரும் சுயவிவேகத்தினுல் முன்னமே இவ்வண்ணம் தெரிந்தேன், நீரும் என்பிதாவைப்போல அந்த அருத்தததையே சொன்னீர், நிறைந்த வேதாந்த சாஸ்திரங்கள் அனைத்தும் சொல்லப்பட்ட வாக்கியார்த்தங்கள் ஏகமேயென்று சொன்ஞர்—எ-ம.

இ-ம். மகாவாக்கியார்த்தஙகள் அபேதமென்று அறிந்ததாம். (16)



சங்கற்பமயமான மாயாரூபத்தைச் சுருதிப்பிரமாணமா யறிந்தும்,
வியாசர் சனகரப்படியே போதித்தும், தனக்குவிஸ்ராந்தி
வாராததினுல் தனதுஅனுபவத்தைச் சொல்லி மேல்அதைப்
பெற்றுக்கொள்ளும்பொருட்டு வினவின் சுகருக்கப்
பிரகாரமே விஸ்ராந்தி யடையும்பொருட்டு
அபரோக்ஷானுபவத்தை யரசன் உபதேசித்தல.

வேறு.

தன்னுள்விகற் பித்தெழுந்த விகற்பம்போகிற்
றவிர்ந்திடு மாயையிற்பயனோர் சற்றுமில்லை
இன்னவகைத் தோருண்மை யியம்பவேண்டு
மியாவாமயக் கழுமாற்று மிறைவவென்ன
மன்னனதற் குரைசெய்வான் முனிவநீயே
மதித்துணர்ந்தும் பிதாவுரைக்க மறுததுங்கேட்டாய்
அன்னிலையே நிச்சயமிங் ககண்டஞான
வாகாய புருடனுள னயலொன்றில்லை.

இ - ள். தன்னுள்-ஆத்மாவில், விகற்பித்தெழுந்த - (ஸ்புரணரூபமாய்) வேறுபட்டுதித்த, விகற்பம் - (மாயா) வேற்றுமையானது, போகில் - உதித்த விடத்து ஒடுங்குமாயின், தவிர்ந்திடும்-கெடாநின்ற, மாயையில் - மாயையினிடத்தில், பயனோர்சற்றுமில்லை - பிரயோசனம் ஓர் அணுவளவாகினுங்கிடையாது, இன்னவகைத்து - அஃதித்தன்மைத்து, ஓர் உண்மை - ஒப்பற்றநிச்சயமான (ஆத்மஸ்வரூபத்தை), இயம்பவேண்டும் - சொல்லவேண்டும், இயாவர் மயக்கமு மாற்றும் - சகலருடைய மயக்கங்களையுங்கெடுக்கின்ற, இறைவ என்ன - குருவேயென்றுகேட்க, மன்னன் அதற்குரைசெய்வான் - அதற்காசன் சொல்லுவான், முனிவ - சுகரே, நீயேமதித்துணர்ந்தும் - நீரேவரையறுத்தறிந்தும், பிதாவுரைகக - பிதாவாகிய வியாசமுனிவர்சொல்ல, மறுத்தங்கேட்டாய் - தடுத்துங்கேட்டாய், அந்நிலையேநிச்சயம்-அந்தநிலையேசத்தியம், (ஆனாலும்) இங்கு-இவ்விடத்தில், அகண்ட-அகண்டபரிபூரணமான, ஞானவாகாய சிதாகாயமே சாக்ஷாத்கரித்த, புருடனுளன் - ஆத்மாவே புள்ளது, அயலொன்றில்லை - வேறொரு வஸ்துவுமில்லை—எ-று.

எ - து. ஆத்மாவில் ஸ்புரணரூபமாய் வேறுபட்டுதித்தமாயா வேற்றுமையானது உதித்தவிடத்து ஒடுங்குமாயின் கெடாநின்ற மாயையிடத்தில் பிரயோஜனம் ஓர் அணுவளவாகினுங்கிடையாது அஃது இத்தன்மைத்து ஒப்பற்ற நிச்சயமான ஆத்மஸ்வரூபத்தைச் சொல்லவேண்டும், சகலருடைய மயக்கங்களையுங்கெடுக்கின்ற குருவேயென்று கேட்க அதற்காசன சொல்லுவான், சுகரே! நீரே வரையறுத்தறிந்தும் பிதாவாகிய வியாசமுனிவர் சொல்ல தடுத்துங்கேட்டாய், அந்நிலையே சத்தியம; ஆனாலும் இவ்விடத்தில் பரிபூரணமான சிதாகாயமே சாக்ஷாத்கரித்த ஆத்மாவே யுள்ளது, வேறொரு வஸ்துவுமில்லை—எ-ம்.

ப-ம். ஆத்மவிதிருத்தமாகத்தோற்றப்பட்ட சகலவடிவங்களும், அத்துவிதாத்மசாக்ஷாத்காரமாய்ப் பிரகாசிக்கின்றதென்பார், ஆகாய புருடனுளன்அயலொன்றில்லை என்றார்.

இ-ம். ஆத்மஸ்புரணத்தி லுதித்த திரிசயத்தை ஆத்மசாக்ஷாத்காரமாக அறியின், விஸ்ராந்தியுண்டாமென்று உபதேசித்ததாம். (17)

## இதுவுமது

அவ்வறிவு சங்கற்பத் தாற்கட்டுண்ணு
மதுவிடில்வீ டுறுமந்த வறிவுதன்னைச்

செவ்விதினீ யறிந்தனையாற் போகத்திச்சைச்
செகக்காட்சி யனைத்தினையுந் தீர்த்தியானாய்
எவ்வமற நிறைமனத்தா லடையற்பால
யாவுமடைந் தாய்காட்சிக் கெட்டாதொன்றிற்
கவ்வையற வடைகின்றாய் முத்தனானாய்க்
கருத்திலுறு மயக்கமெனுங் கவலைதீர்வாய்.

இ - ள். அவ்வறிவு - அந்தஞானமானது, சங்கற்பத்தாற் கட்டுண்ணும்- (தனது) சங்கற்பத்தினாற் பந்தப்படும், அதுவிடில்வீடுறும் - அச் சங்கற்பநீங்கினாற் பந்தநிவிர்த்தியாம், அந்த அறிவுதன்னை - அப்படிப்பட்ட (ஆத்ம) ஞானத்தை, செவ்விதின் நீயறிந்தனையால் - செவ்வையாக நீ (இப்போ) தறிந்தாயாதலால், போகத்திச்சை - போகங்களிடத் தாசையையும், செகக்காட்சி யனைத்தினையும் - நிரிசயதிருஷ்டி யாவையும், தீர்த்தியானாய் - விட்டு நீங்கினாய், எவ்வமற - துன்பநீங்க, நிறைமனத்தால் - பூரணமனதினால், அடையற்பால - பெறத்தக்க, யாவுமடைந்தாய் - சர்வத்தையும் (பிரமமயமாகப்) பெற்றாய், காக்ஷிக் கெட்டாதொன்றில் காண்பதற்கோசரமாகிய வஸ்துவினிடத்தில், கவ்வையற அடைகின்றாய்-இரண்டறக்கலக்கின்றாய், முத்தனானாய் - (சீவன்) முத்தனானாய், கருத்திலுறு-மனதிலுண்டான, மயக்கமெனும் - (மாயா) மயக்கமென்கின்ற, கவலைதீர்வாய் - கவலை (யொன்றினையும்) விடுவாய்—எ-று.

எ - து. அந்தஞானமானது தனதுசங்கற்பத்தினாற்பந்தப்படும். அச்சங்கற்பநீங்கினாற் பந்தநிவிர்த்தியாம். அப்படிப்பட்ட ஆத்மஞானத்தை செவ்வையாக நீ யிப்போது அறிந்தாயாதலால் போகங்களிடத் தாசையையும், நிரிசயதிருஷ்டி யாவையும் விட்டு நீங்கினாய். துன்பநீங்க பூரணமனதினால் பெறத்தக்க சர்வத்தையும் பிரமமயமாகப் பெற்றாய், சீவன்முத்தனானாய், மனதிலுண்டான மாயாமயக்க மென்கின்ற கவலையொன்றினையும் விடுவாய்—எ-ம்.

இ-ம். யாதொன்று தனது விஸ்மரணத்தான் மறைபட்டது போலவும் அதன்விடுதியில் வெளிப்பட்டதுபோலவும் விளங்குகின்றதோ அச்சைதன்னியமே சர்வமாய் விளங்குகின்றதென்று அறிந்தாற் சந்தேக நீங்கும் என்பதாம். (18)

## விஸ்ராந்தியடைதல்.

சனகனெனு மன்னவர்கோ னிவ்வாறோதத்
 தன்னிலையாம பரமபொருளிற் றளர்ச்சியாறி
அனகசுகன் பயநீங்கிச் சோகமாறி
 யயர்வகன்று செயலடங்கி யையந்தீர்ந்து
கனகவரை யேறிநிரு விகற்பமான
 கலங்காத சமாதியிற்சிற் ககனத்தாற்றான்
றினகரனைச் செறிவருட மீராஞ் ஞாற்றிற்
 றிரியொடுநெய்ம் மாண்டவிந்த தீபம்போன்றே.

இ - ள். சனகனெனும் - சனகனென்கிற நாமத்தையுடைய, மன்னவர்கோன் - அரசர்க்கரசன், இவ்வாறோத - இந்தப்பிரகாரம உபதேசிக்க, தன்னிலையாம பரமபொருளில் - தனக்குத்தானே யிடமாயிருக்கின்ற பரவஸ்துவில், தளர்ச்சியாறி - விஸ்ராந்தியடைந்து, அனகசுகன் - களங்கமற்ற சுகப்பிரமரிஷியானவர், பயநீங்கி - (சநந) அச்சந்தவிர்ந்து, சோகமாறி - (மரண) துன்பநீங்கி, அயர்வுஅகன்று - (மன) வருத்தநீங்கி, செயல்அடங்கி - (விசாரிக்கும்) தொழிலொழிந்து, ஐயந்தீர்ந்து - (அனுபவத்திற்) சந்தேகநீங்கி, கனகவரையேறி - மகம்மேருவினுச்சியிற்சென்று நிருவிகற்பமான - நிருவிகற்பமாகிய, கலங்காத சமாதியில் - நிச்சலமானசமாதியில் தினகரனைச்செறி - சூரியனைக்கொண்ட கணக்கினால் வருடமீராஞ்ஞாற்றில் - ஆயிரம்வருடத்தில், திரியொடுநெய்மாண்டு - திரியுநெய்யுஞ்சுவறி, அவிந்த - (வியோகமாக்கினியி) னசித்த, தீபம்போன்று - விளக்கு ஒப்பாக, சிற்ககனத்துற்றான் - ஞானாகாசத்திற்கலந்தான் — எ-று.

எ - து. சனகனென்கின்ற நாமத்தையுடைய அரசர்க்கரசன் இந்தப்பிரகாரம் உபதேசிக்கத் தனக்குத்தானே யிடமாயிருக்கின்ற பரவஸ்துவில் விஸ்ராந்தியடைந்து களங்கமற்ற சுகப்பிரமரிஷியானவர் சநநஅச்சந்தவிர்ந்து மரணதுன்பநீங்கி மனவருத்தநீங்கி விசாரிக்குந் தொழிலொழிந்து அனுபவத்திற் சந்தேகநீங்கி மகம்மேருவின் உச்சியிற்சென்று நிருவிகற்பமாகிய நிச்சலமான சமாதியில் சூரியனைக்கொண்ட கணக்கினால் ஆயிரம்வருடத்தில் திரியுநெய்யுஞ்சுவறி வியோமாக்கினியில் நசித்த விளக்குக்கு ஒப்பாக ஞானாகாசத்திற் கலந்தான் — எ — ம்.

இ-ம். சீவன்முத்தித்தன்மையில் விதேகமுத்தியை யடைந்ததாம். (19)

## விசுவாமித்திரமுனி அநுபவ இலக்கணமுரைத்தல்.

சிந்தனையாங் களங்கமறச் சுத்தனாகித்
  திரைகடலிற் செறிந்தொன்றுந் திவலைபோல
வந்துறுவா தனைபோய்தற் பதத்தொன்றானன்
  மாயாமோ கந்தீர்ந்து வருத்தந்தீர்ந்தான்
அந்தநெறி யுனக்குமா மறிவதெல்லா
  மறிந்தமனத் திற்குரிய வடைவேதென்னிற்
சந்ததமு மகிழ்ச்சிசெறி போகமெல்லாந்
  தனதென்னுஞ் சுதந்தரத்தைத் தவிர்ந்துநிற்றல்.

இ - ள். சிந்தனையாங் களங்கமற-சிந்தையாகிய குற்றநீங்க, சுத்தனாகி-பரிசுத்தனாய், திரைகடலில் - அலைகளையுடைய சமுத்திரத்தில், செறிந்து ஒன்றும் - சேர்ந்தொன்றுகின்ற, திவலைபோல - துளிகளைப்போல, வந்துறு வாதனை - (தன்னிடத்) துண்டானஸ்புரணம், போய் - (தன்னிற்) கரைந்து, தற்பதத்தொன்றானன்-பிரமத்திலிரண்டறக்கலந்தான், மாயாமோகந்தீர்ந்து-(மாயாசம்பந்தமான) மோகம்விட்டு, வருத்தந்தீர்ந்தான் - விஸ்ராந்தியடைந்தான், அந்தநெறி - அம்மார்க்கம், உனக்குமாம் - நினக்குமாகும், அறிவதெல்லாம் - அறியத்தக்க சகலமும், அறிந்தமனத்திற்கு - அறிந்திருக்கின்ற மனதுக்கு, உரியஅடைவு ஏதென்னில்-உரிமையானகிரமம்யாதென்றால், சந்ததமும்-சதாகாலமும், மகிழ்ச்சிசெறி போகமெல்லாம் - களிப்புமிகுந்த போகங்களனைத்தும், தனதென்னும் - எனதென்கின்ற, சுதந்தரத்தை-சுதந்தர பாவத்தை, தவிர்ந்துநிற்றல் - விட்டிருக்கையாம்—எ-று.

எ - து. சிந்தையாகிய குற்றநீங்க பரிசுத்தனாய் அலைகளையுடைய சமுத்திரத்தில் சேர்ந்து ஒன்றுகின்ற துளிகளைப்போல தன்னிடத்துண்டான ஸ்புரணம்தன்னிற்கரைந்து பிரமத்தில் இரண்டறக்கலந்தான், அம்மார்க்கம் நினக்குமாகும். அறியத்தக்க சகலமும் அறிந்திருக்கின்ற மனதுக்கு உரிமையானகிரமம் யாதென்றால்? சதாகாலமும் களிப்புமிகுந்த போகங்களனைத்தும் எனதென்கின்ற சுதந்தரபாவத்தை விட்டிருக்கையாம்—எ - ம்.

இ-ம். அநுபவிக்கு யான் எனது என்னும் 'அகம்பாவம் அற்றிருக்கவேண்டும் என்பதாம். (20)

## பந்தமுத்தியின் இலக்கணங்கூறல்.

போகமுறு பாவனையாற் பொருளல்லாத
 பொருளிலெழு பந்தநிலை பொருந்தவன்பாஞ்
சோகமுறு பாவனைதான் சாந்தமாகிற்
 றுயர்பந்த மிகத்தேய்ந்து துலைந்துபோகும்
இராகவனே வாதனையி னேர்மைவீடா
 மிகப்பொருளின் வாதனையி னிறுகல்பந்தஞ்
சேகறவென் றவர்க்கேது வின்றிப்போகத்
 திரள்வெறுப்பா மேலவரே சீவன்முத்தர்.

இ - ள போகமுறு - விடய போகத்திற்பொருந்திய, பாவனையால்-பாவனையினால், பொருள் அல்லாத பொருளில் - அனாத்ம வஸ்துவில், எழுபந்தம் - உண்டாகாநின்ற பந்தமானது, நிலைபொருந்த - நிலைபெற, வன்பாம்-வலிமையாகும், சோகமுறு - துன்பமிகுந்த, பாவனைதான் - பாவனையானது, சாந்தமாகில் - நீங்கினால், துயர்பந்த மிகத்தேய்ந்து - துன்பமயமான பந்தமானது மிகவுங்குறைந்து, துலைந்துபோகும் நாசமடையும், இராகவனே-இராமா, வாதனையி னேர்மைவீடாம் வாசனாக்ஷயமே மோக்ஷமாம், இகம்-இகத்திலுள்ள, பொருளின் - விடய வஸ்துக்களின், வாதனையின் வாசனையினால், இறுகல்பந்தம் - கெட்டிப்படுவதே பந்தமாம், சேகற - வாசனையின் வலிமையற, வென்றவர்க்கு - செயித்தவர்களுக்கு, ஏதுவின்றி தபசுவிரதமுதலிய காரணமின்றி, போகத்திரள் - போக சமுகங்களில், வெறுப்பாம்-வெறுப்பாகின்ற, மேலவரே - மகான்களே, சீவன்முத்தர் - சீவன்முத்தரென்று கௌசிகர் சொன்னார்—எ-று.

எ - து. விடயபோகத்திற் பொருந்திய பாவனையினால் அனாத்ம வஸ்துவில் உண்டாகாநின்ற பந்தமானது நிலைபெற வலிமையாகும், துன்பமிகுந்த பாவனையானது நீங்கினால் துன்பமயமான பந்தமானது மிகவுங்குறைந்து நாசமடையும், இராமா! வாசனா க்ஷயமே மோட்சமாம், இகத்திலுள்ள விடயவஸ்துக்களின் வாசனையினால் கெட்டிப்படுவதே பந்தமாம், வாசனையின் வலிமையற செயித்தவர்களுக்கு தபசு விரதமுதலிய காரணமின்றி போகசமுகங்களில் வெறுப்பாகின்ற மகான்களே சீவன்முத்தரென்று கௌசிகர் சொன்னார் எ - ம்.

இ-ம். வாசனையுதய லயமே பந்தம் வீடென்பதாம். (21

## அருளிறை அறிவித்தல்.

இராமன்மனத் துணர்பொருளே பொருள்வேறில்லை
யெனவுயர்ந்தோர் வாக்கினு லியம்பக்கேட்டு
மாமனத்தி னிளைப்பாறி யையநீங்கு
மகத்தான விவனுக்கு மதித்துச்சொல்வான்
ஏமமுறு காலமூன் றறிந்தோனுகி
யிவ்வுலக குருவாகி யெல்லாநோக்கி
நாமமுறு வனைத்துகருஞ் சான்றாய்நின்ற
நல்வசிட்ட னெனச்சபையி னவின்றபின்னர்.

இ - ள் உயர்ந்தோர்வாக்கினால - மகான்கள் வசனத்தினால், இராமன் ஸ்ரீராகவன், மனத்துணர்-மனதினால் (தீர்ப்பா) யறிந்த, பொருளே பொருள்-வஸ்வேவஸ்துவாம், வேறில்லையென வேறொரு பொருளில்லை யென்று, இயம்பக்கேட்டு - வசனிக்ககக்கேட்டு, மாமனத்தி னிளைப்பாறி - மகாமனதில் விஸ்ராந்தியடைந்து, ஐயநீங்கும் சந்தேகந் தீராநின்ற, மகத்தான இவனுக்கு-மகாத்மாவாயிருக்கின்ற இந்த இராமனுக்கு, மதித்துச்சொல்வான் வரையறுத்துச் சொல்லுபவன், ஏமமுறு-மயக்கமுள்ள, காலமூன்று அறிந்தோனுகி - மூன்று காலங்களையுந் தெளிந்து அறிந்தவராயும், இவ்வுலககுருவாகி - இப்பூலோகத்தின் (கண்ணுள்ளமானிடர்களுக்கு) ஆசாரியராகியும், எல்லாநோக்கி-சர்வஞ்ஞராயும், நாமமுறுவனைத்தும நாமரூபமுள்ள சகலத்திற்கும்,சான்றாய் நின்ற-சாக்ஷியாகியு மிருக்கின்ற, நலவசிட்டனென - நல்லவசிட்டனே யென்று, சபையில் - அரசன் அவையில், நவின்றபின்னர் (விசுவாமித்திரர்) சொன்ன பின் — எ - று.

எ - து. மகான்கள் வசனத்தினால ஸ்ரீராகவன் மனதினால் தீர்ப்பாயறிந்த வஸ்துவே வஸ்துவாம். வேறொரு பொருளில்லையென்று வசனிககக்கேட்டு மகாமனதில் விஸ்ராந்தியடைந்து சந்தேகந் தீராநின்ற மகாத்மாவாயிருக்கின்ற இந்த இராமனுக்கு வரையறுத்துச் சொல்லுபவன் மயக்கமுள்ள மூன்று காலங்களையுந் தெளிந்து அறிந்தவராயும், இப்பூலோகத்தின்கண் உள்ள மானிடர்களுக்கு ஆசாரியராகியும், சர்வஞ்ஞராயும, நாமரூபமுள்ள சகலத்திற்கும் சாக்ஷியாகியு மிருக்கின்றநல்ல வசிட்டனேயென்று அரசன் அவையில் விஸ்வாமித்திரர் சொன்னபின்—எ-ம்.

இ-ம். சீடனறிந்த அறிவினால் அவன் அமைதிபிறந்து அனுபூதி யடையும் பொருட்டு அறிவிக்கத்தக்க ஆசாரியரை யறிவித்ததாம். (22)

## புக்குவர்க்கு உபதேசிக்க வேண்டுமெனல்.

நல்வசிட்டன் முகநோக்கி யுணர்தியோமுன்
னாமிருவர் பகைநீங்க நல்லோரெல்லாந்
தொல்வினைபோய் முத்திபெறக் கமலவேதா
சொன்னதனி ஞானத்தின் றொகுதியெல்லாங்
கல்விமிகு மிராமனுக்குச் செப்பல்வேண்டுங்
காதநீர் மாணாக்கன் கருத்திற்சொல்லுஞ்
செல்வவுப தேசமே ததுவேஞானச்
செழுநூலின் பொருளுமிது சிறப்புமீதே.

இ - ள். நல்வசிட்டன்முகநோக்கி (விசுவாமித்திரமுனி) நன்மையான வசிட்டருடைய வதனத்தைப்பார்த்து, உணர்தியோ - ஞாபகமிருக்கின்றதா-முன்னாமிருவர்பகைநீங்க - முன்னம் நம்மிருவருடைய விரோதந்தீரவும், நல்லோரெல்லாம் - நன்மார்க்கமுள்ள சகலரும், தொல்வினைபோய் - பழய (சஞ்சிதம்) விடுபட்டு, முத்திபெற - மோட்சமடையவும், கமலவேதா-தாமரையில் வசிக்கும் பிரமாவினால், சொன்ன - ஆத்மசாக்ஷாத்காரம் (விளங்கும்படி) யனுக்கிரகித்த, தனிஞானத்தின்-ஒப்பற்றஞானத்தின், தொகுதியெல்லாம்-கதைகளனைத்தையும், கல்விமிகுமிராமனுக்கு அறிவுமிகுந்த இராகவனுக்கு, செப்பல்வேண்டும்-போதிக்கவேண்டும், காதல்தீர்மாணாக்கன் - ஆசைநீங்கிய சீடனுடைய, கருத்தில - மனதில், சொல்லுஞ் செல்வவுபதேசம் - அனுக்கிரக்கின்ற பிரமவுபதேசம், ஏது - யாதொன்றோ, அதுவே - அவ் வுபதேசமே, செழும் செழுமையாகிய, ஞானம் - ஞானத்தையுணர்த்தும, நூலின் - சாத்திரத்தின், பொருளுமிது - அருததமும் இது, சிறப்பும் ஈதே - சிறப்புமிதுவே (யென்று சொன்னார்)-எ-று.

எ - து. விசுவாமித்திரமுனி நன்மையான வசிட்டருடைய வதனத்தைப்பார்த்து ஞாபகமிருக்கின்றதா? முன்னநம்மிருவருடைய விரோதந்தீரவும், நன்மார்க்கமுள்ள சகலரும் பழயசஞ்சிதம் விடுபட்டு மோட்சமடையவும், தாமரையில்வசிக்கும் பிரமாவினால் ஆத்மசாக்ஷாத்காரம் விளங்கும்படி அனுக்கிரகித்த ஒப்பற்ற ஞானத்தின் கதைகளனைத்தையும் அறிவுமிகுந்த இராகவனுக்கு போதிக்கவேண்

டும். ஆசைநீங்கிய சீடனுடைய மனதில் அனுக்கிரக்கின்ற பிரமவுப தேசம் யாதொன்றோ? அவ் வுபதேசமே செழுமையாகிய ஞானத் தையுணர்த்தும் சாத்திரத்தின் அருத்தமும் இது சிறப்பும் இதுவே யென்றுசொன்னூர்—எ-ம்.

இ-ம். ஆசாரியர் உபதேசம்பெற்று அனுபவமான மார்க்கததைச் சீட னுக்கு உபதேசிக்க வேண்டும் என்பதாம். (23)

## அபக்குவனுக்கு உபதேசிக்க லாகாதெனல்.



காதல்செறி பொல்லாமா ணுக்கனுக்குக்
கற்பித்த வுபதேசங் கருநாய்த் தோலுண்
மேதகுபா லெனவசுத்த மேவுமென்று
மிருகாதி சேய்பலவும் விளம்பக் கேட்டு
தீதறுநா ரதன்வேத வியாதனுதித்
திரண் முனிவர் நன் றிதெனச் சிறப்புசெய்தார்
காதிபுதல் வனைநோக்கிக் கமலத்தோனோர்
கமல முனி புதல்வனிவை கழறலுற்றான.

இ-ள். காதல்செறி - ஆசைமிகுந்த, பொல்லாமாணுக்கனுக்கு - துஷ்ட சீடனுக்கு, கற்பித்த உபதேசம் - போதித்த உபதேசமானது, கருநாய்த்தோ லுள் - கரியசுணங்கன் சருமத்துள், மேதகுபாலென - (வைக்கின்ற) மேலா னபாலைப்போல, அசுத்தமேவுமென்று - சுத்தமாகா தென்று, மிருகாதிசேய்- மேலானவிசுவாமித்திரர், பலவும்விளம்ப - நானுவிதங்களாலுஞ்சொல்ல, தீத றுநாரதன்-தீமைநீங்கியநாரதரும், வேதவியாதனுதி-வேதவியாசர் முதலான, திரண்முனிவர் - திரண்டமுனிவர்களும், கேட்டு - இதைக்) கேட்டு, இது- இதுவே, நன்றென - நல்லதென்று, சிறப்புசெய்தார் - (அவ்வசனத்தையே) சிறப்பித்தார்கள், காதிபுதல்வனைநோக்கி-கௌசிகரைப்பார்த்து, கமலத்தோ னோர் - பிரமாவுக்குச்சமானமான, கமல முனி புதல்வன்-பிரமபுத்திரரானவசி ட்டமுனி, இவைகழறலுற்றான் - இவைகளைச் சொல்லத்தொடங்கினார்-எ-று.

எ - து. ஆசைமிகுந்த துஷ்டசீடனுக்குப் போதித்த உபதேச மானது கரிபசுணங்கன் சருமத்துள்வைக்கின்ற மேலானபாலைப்போ லசுத்தமாகாதென்று மேலான விசுவாமித்திரர் நானுவிதங்களாலுஞ் சொல்ல தீமைநீங்கிய நாரதரும் வேதவியாசர் முதலான திரண்ட

முனிவர்களும் இதைக்கேட்டு இதுவேநல்லதென்று அவ் வசனத்தையே சிறப்பித்தார்கள். கௌசிகரைப்பார்த்து பிரமாவுக்குச் சமானமானபிரமபுத்திரரான வசிட்டமுனி இவைகளைச் சொல்லத்தொடங்கினார்—எ-ம்.

இ-ம். பக்குவனுக்கு உபதேசிக்கவேண்டுமென்பதை வற்புறுத்திச்சொன்னதாம். (24)

## உபதேசிக்கத் தொடங்கல்.

கலைமுனியே நீர்மொழிந்த படியேசெய்வேன்
கற்றுணர்ந்த பெரியோர்சொற் கடப்பார்யாரே
நிலையில்பவ மயக்கமறப் பதுமவேதா
நிடதமலை மேலுரைத்த நிமலஞானம்
அலைவின்மனத் திருக்கின்ற துரைப்பேனென்ன
வஞ்ஞானத் தொகுதிகெடவகண்டஞானத்
தொலைவில்பர பதமெவர்க்குந் தோன்றுமாறு
சுத்தவிந யத்துடனே சொல்வதானான்.

இ - ள். கலைமுனியே - கலை (ஞானங்களையுணர்ந்த), விசுவாமித்திரரே, நீர் மொழிந்தபடியே செய்வேன் - நீர்சொன்னபடியே உபதேசிப்பேன், கற்றுணர்ந்த பெரியோர்-அறிவை யாராய்ந்து அறிந்த மகான்கள், சொற்கடப்பார் யாரே - வசனத்தைக் கடக்கப்பட்டவர் எவர், நிலையில் பவமயக்கமற-நிலையில்லாத சநநமயக்கந் தீரும்பொருட்டு, பதுமவேதா - தாமரையில் வசிக்கும்பிரமாவாலே, நிடதமலைமேல் உரைத்த-நிடதமலைமேலிருந்து அனுக்கிரஞ்செய்த, நிமலஞானம்-நிருமலஞானக் (கதைகளானவை), அலைவின் மனத்திருக்கின்றது - சஞ்சலமில்லாத பரிசுத்தமனதின்கண் இருக்கின்றதை, உரைப்பேனென்ன-சொல்லுவேனென்று (சொல்லி), அஞ்ஞானத்தொகுதிகெட-அஞ்ஞானக்குழாங்கள் நசிக்க, அகண்டஞானம் - பூரண ஞானமான, தொலைவில் - நீங்காத, பரபதம் - பரமபதமானது, எவர்க்கும் தோன்றுமாறு-யாவருக்கும் உதயமாம்பொருட்டு, சுத்தவிநயத்துடனே சொல்வதானான்-பரிசுத்தமான தருமத்தோடுஞ் சொல்லத்தொடங்கினார்—எ-று.

எ — து. கலைஞானங்களைபுணர்ந்த விசுவாமித்திரரே! நீர்சொன்னபடியே யுபதேசிப்பேன், அறிவையாராய்ந் தறிந்த மகான்கள்வசனத்தைக்கடக்கப்பட்டவரெவர் நிலையில்லாத சநநமயக்கந்தீரும்பொ

ருட்டுத் தாமரையில்வசிக்கும் பிரமாவாலே நிடத மலைமேலிருந்து அனுக்கிரகஞ்செய்த நிருமலஞானக் கதைக ளானவை சஞ்சலமில் லாத பரிசுத்தமனதின்கண் இருக்கின்றதைச் சொல்லுவே னென்று சொல்லி அஞ்ஞானக்குழாங்கள் நசிக்கப் பூரணஞானமான நீங்காத பாமபதமானதுயாவருக்கும் உதயமாம்பொருட்டுப் பரிசுத்தமான தருமத்தோடுஞ் சொல்லத்தொடங்கினர் —எம்-..

நிடதமலை, மேருவின் சிகரத்தி லொன்றின் நாமமெனக்கொள்க.

இ-ம். பிரமருபதேசமான அகண்டசாக்ஷாத்கார வநுபவத்தை இராம னிமித்தஞ் சகலருக்குந்தோன்றும்படி போதிப்பதாம். (25)

சுகர்கதை முற்றிற்று.

திருவிருத்தம் - 161

# முமுட்சுப்பிரகரணம்.



## அவதாரிகை.

முற்கதையிற் சுகமுனியறிந்த அறிவைக்கொண்டே அவர் சுவானுபூதி சாக்ஷாத்கார மாகும்பொருட்டு அரசனருளியபடியே இராமனறிந்த அறிவைக்கொண்டு அவர் சுவானுபூதி சாக்ஷாத்காரமாகும் பொருட்டு அவர்க்குஉதயமான முத்திவிருப்பத்தை வற்புறுத்த வசிட்டமுனி முமுட்சுப்பிரகரணங் கூறுகின்றார்.

## சாஸ்திரீகம் முயற்சியே முத்திசாதனமெனல்



இராகவகேளிப்பவத்தி லென்றுமெல்லா
 மியல்புறுநன் முயற்சியினாலியார்க்குமெய்து
மாகலைநன் னூன்முயற்சி யொன்றுமொன்று
 வருநூலி லாமுயற்சி மற்றிவற்றின்
சோகமின்னூல் வழிவீடா நூலிலாமை
 துன்பமாஞ் சைசவத்திற் றொடருமிந்நூன்
மோகமினல் லோர்கூட்டங் குணங்களாலே
 முயற்சியுறு பெரியோர்க்கு முத்திப்பேறும்.

இ - ள். இராகவனே - இராமா (நீயிதைக்) கேட்பாய், இப்பவத்தில் இச்சநநத்தில், என்றும் - எப்போதும், இயல்புறு - ஒழுக்கமுள்ள, நன்முயற்சியினால்-(சாஸ்திரயுக்தமான) நல்ல எத்தனத்தினால், இயார்க்கும்- எவர்க்கும், எல்லாமெய்தும் - (புருடார்த்தமுள்ள) சகலமும் வரும், மாகலைநன்னூல் - ஆத்மஞான சாஸ்திரமான, முயற்சி ஒன்றும் - எத்தனமொன்றாகும், வருநூலிலாமுயற்சி - வாராநின்ற சாஸ்திர எத்தனமானதுஒன்றாம், மற்றிவற்றின் - மற்றிவ்விரண்டில், சோகமின்னூல்வழி- துன்பமின்றிய ஞானசாஸ்திர மார்க்கமானது, வீடாம் - மோக்ஷ(நிமித்த)மாம், நூலிலாமை - அசாஸ்திர (மார்க்கமானது,) துன்பமாம்-பந்த (நிமித்த)மாம், சைசவத்திற்றொடரும் - பாலப்பருவத்திற் (றுனே) தொடர்ந்துவருகிற, இந்நூல் - இந்த ஞானசாஸ்திரங்களிலும், மோகமில் - மயக்கமில்லாத, நல்லோர்கூட்டம் - சத்துக்கள் சங்கத்திலும், குணங்களால் - (மைத்திரியாதிசற்) குணங்களினாலும், முயற்சியுறு - முயற்சிபெற்ற, பெரியோர்க்கு - சத்துக்களுக்கு, முத்திபேறும் - மோக்ஷவிலாபமுண்டாகும்.—எ

எ - து. இராமா நீயிதைக்கேட்பாய் இச்சநநத்தில் எப்போதும் ஒடுக்கமுள்ள சாஸ்திரயுக்தமான நல்ல எத்தனத்தினால் எவர்க்கும் புருடார்த்தமுள்ள சகலமும்வரும், ஆத்மாஞான சாஸ்திரீகமான எத்தனமொன்றாகும், வராநின்ற சாஸ்திரியவெத்தனமானது ஒன்றாகும், மற்றிவ்விரண்டில் அன்பமின்றிய ஞானசாஸ்திரீக மார்க்கமானது மோக்ஷநிமித்தமாம, அசாஸ்திரீக மார்க்கமானது பந்தநிமித்தமாம், பாலப்பருவத்திற்றானே தொடர்ந்து வருகின்ற இந்த ஞானசாஸ்திரங்களினாலும் மயக்கமில்லாத சத்துக்கள் சங்கத்தினாலும் மைத்திரிபாதி சற்குணங்களினாலும் முயற்சிபெற்ற சத்துக்களுக்கு மோக்ஷஇலாப முண்டாகும்—எ-ம்.

ப - ம். இச் சநநமே வீடடைதற்குக் கருவியாமென்பார், இப்பவத்தில் நன்முயற்சியினால் இயார்க்கு மெய்துமென்றார்.

இ-ம். புருடார்த்தத்தை விரும்பினவன் சாஸ்திரீகமுயற்சியையே செய்யவேண்டும் என்பதாம். (1)

## பூர்வவாசனையே முக்கியமா யிருக்கின்றதெனல்.



முற்பிறப்பின் வாதனையின் வயத்தினின்றேன்
முயற்சியிலே னென்செய்கேன் முனிவவென்ன
அற்புதனே தன்வருந்த முயற்சியாலே
யடையலாம் பரமபத மயல்வேறின்று
சொற்பயில்வா தனைத்திரளின பேதஞ்சொல்லிற்
சுபமசுப மெனவிரண்டாஞ் சொன்னவற்றில்
அற்பமுறு பவந்தோறுந் தொடர்ந்துவந்த
வாதனையே ததுவொன்றே மருவிநிற்கும்.

இ - ள். முற்பிறப்பின் வாதனையின் - முற் சநநவாசனையின், வயத்தினின்றேன் - வசத்திலிருந்தேன், முயற்சியிலேன் - (சன்மார்க்க) எத்தனம் இல்லாதவனானேன், என்செய்கேன் (யான்) என்னசெய்வேன், முனிவ என்ன - (என) ஆசிரியரேயென் (றிராகவன்) கூற, அற்புதனே - (குண) திசயமுள்ளராமா, தன்வருத்தம் - தனது சுயப்பிரயாசமான, முயற்சியால் - எத்தனத்தினால், பரமபதம் - பிரமபதத்தை, அடையலாம்-பெறலாம், அயல்வேறு இன்று இதைத்தவிர) வேறொன்றுமின்று, சொற்பயில் - சொல்லப்பட்ட, வாதனைத்

திரளின் - வாசனு சமூகத்தின், பேதஞ்சொல்லில் - வேற்றுமையைக்கூறில், சுபம் அசுபமென இரண்டாம் - சுபவாசனை அசுபவாசனையென்று இரண்டுவிதமாம், சொன்னவற்றில் - சொல்லிய அவ்விரண்டில், அற்பமுறு - சொற்பமாகிய, பவந்தோறும் - சநநங்களிலெல்லாம், தொடர்ந்துவந்த - நட்புற்றுவந்த, வாதனையேது - வாசனையெதுவோ, அதுவொன்றே-அஃதொன்றுமே, மருவிநிற்கும் - பொருந்தியிருககும் —எ-று.

எ - து. முற் சநநவாசனையின் வசத்திலிருந்தேன், சன்மார்க்க எத்தனமில்லாதவனுனேன், யானென்னசெய்வேன், எனது ஆசிரியரேயென்று இராகவன்கூற, குணுதிசயமுள்ள இராமா! தனது சுயப்பிரயாசமான எத்தனத்தினுல் பாமபதத்தைப் பெறலாம். இதைத்தவிர வேறொன்றுமின்று. சொல்லப்பட்ட வாசனுசமூகத்தின் வேற்றுமையைக் கூறில் சுபவாசனை அசுபவாசனை யென்றிரண்டு விதமாம் சொல்லிய அவ்விரண்டில் சொற்பமாகிய சநநங்களிளெல்லாம் நட்புற்றுவநத வாசனையெதுவோ அஃதொன்றுமே பொருந்தியிருக்குமு—எ-ம்.

இ ம். மதிவிதி யென்றிரண்டாம், அவற்றில் ஆகாமியம், சஞ்சிதம்,பிராரத்தம் என மூன்றும் இவைகளிற் சுயஞ் சைதன்னியத்திலுண்டான சங்கற்பமே பந்த ஆகாமியமென்றும், அது வெகுமுகமாய்த் தனது சைதன்னியப் பிறிதிபலனமான விடயத்தை, எதிரிட் டனுபவிகக உன் முகமாய் அபேட்சித்த இவிடத்தில அப்போது அனுபவிக்கக்கூடாத போகமெல்லாங் கட்டுப்பட்டதே பநதசஞ்சிதமென்றும், இதிற்கட்டுபபட்ட விடயபோகங்களைச் சிற்பிறேரகத்தினுற் பின்னனுபவிககக்கொடுக்க அனுபவிப்பதே பந்த பிராரத்தமென்றும், அச்சங்கற்பஞ் சைதன்னிய உன்முகமானதே விடுதியாகாமியமென்றும், அது அந்தர்முகத்திற் றனது சைதன்னியததையுடைய உன்முகமாய் அபேட்சித்த இடத்தில் அப்போ தனுபவிககக்கூடாத நிரதிசயாநந்த சைதன்னியானுபவங் கட்டுப்பட்டதே விடுதிசஞ்சிதமென்றும்,இதிற் கட்டுப்பட்ட பிரமாநந்தபோகத்தைச் சைதன்னியப் பிரேரகத்தினுல் அனுபவிக்ககொடுக்க அனுபவிப்பதே முடிவானவிடுதி பிராரத்தமென்றும் சொல்லப்படும். அப்பந்த ஆகாமியத்தினுலுண்டான சஞ்சிதமும், அதனுல்வரும் பிராரத்தமும், சநநமரணதுக்கத்துக் கேதுவாய்த் துன்பப்படுத்துவதென்றும், விடுதியாகாமியத்தினுலுண்டான சஞ்சிதமும், அதனுல்வரும் பிராரத்தமும், சநநமரணரகிதமான நிரதிசயாநந்த சைதன்னியா காரமாககுதற் கேதுவாய்ச் சுகப்படுத்துவதென்றுஞ் சொல்லப்படும். தன்னுல் மதிக்கப்பட்ட இந்த ஆகாமியத்தை மதியென்றும், சஞ்சிதத்தினுல் விதிககப்பட்ட பிராரத்தத்தை விதியென்றும், அச்சஞ்சிதத்தையே பூர்வவாசனையென்றும் சொல்லபபடும். இதிற்

பந்த ஆகாமியத்தை, அசாஸ்திரீக முயற்சியென்றும், விடுதி ஆகாமியத்தை சாஸ்திரீக முயற்சியென்றும், பந்தசஞ்சிதத்தை அசுபவாசனையென்றும், விடுதி சஞ்சிதத்தை சுபவாசனையென்றும், பந்தபிராரத்தத்தை விடயானுபவ சாக்ஷாத்காரமென்றும், விடுதிபிராரத்தத்தை ஸ்வரூபானுபவ சாக்ஷாத்காரமென்றுஞ் சொல்லப்படும். ஆகையால் முற்பிறப்பின் வாதனையென்பது விதியெனவும், தன்முயற்சியென்பதும் மதியெனவுங்கொண்டு அவ்விதி வருவதுங் கெடுவதும் இம்மதியானதலின் இதனால் ஆத்மவிசாரமான சுத்தவாசனையைக் கொண்டு அவ்விதியினால்வரும் அசுத்த வாசனையைக்கெடுத்து அபரோக்ஷ சாக்ஷாத்கார மாகவேண்டு மென்பதாம். (-)

## சுபவாசனையை யடையவேண்டுமெனல்.

---

சுத்தவா தனைதொடரி லதனான்மெல்லத்
 தூயபர பதம்பெ றுவைச் சுத்தமல்லாப்
பெத்தவா தனைதொடரிற் றுன்பமாக்கும்
 பெரிதுவருந் தியுமிதனைப் போக்கவேண்டும்
வைத்தசுப மசுபமெனும் வழியிரண்டால்
 வாதனையா நதிபெருகும் வருத்தத்தாலே
மெத்தமுயன் றசுபவா தனையைத்தள்ளி
 மிக்கசுப வாதனையின் மேவிநிற்பாய்.

இ - ள். சுத்தவாதனை தொடரில் - சுத்தவாசனை தொடர்ந்தால், அதனால் - அதினாலே, மெல்ல - மிருதுவாக, தூய - பரிசுத்தமாகிய, பரபதம் பெறுவை - பரமபதத்தை யடைவாய், சுத்தமில்லா - பரிசுத்தமாகாத, பெத்தவாதனை தொடரில் - பந்தவாசனை தொடர்ந்தால், துன்பமாக்கும் - துக்கத்தை விளைக்கும், பெரிதுவருந்தியும் - மிகவும் வருத்த முற்றாயினும். இதனைப் போக்கவேண்டும் - இவ்வாசனையை நீக்கவேண்டும், வைத்த - விதித்த, சுபம் அசுபமெனும் - நன்மைதீமை யென்கின்ற, வழியிரண்டால் - இரண்டு மார்க்கத்தினால், வாதனையாம் - வாசனையாகிய, நதிபெருகும் - வெள்ளமதிகரிக்கும், வருத்தத்தால் - (பிரமவித்தையிற்பயிலும்) பிரயாசத்தினால், மெத்த முயன்று - மிகவுமுயற்சித்து, அசுபவாதனையைத்தள்ளி - தீய விடய வாசனையைநீக்கி, மிக்க சுப வாதனையில் - மிகுந்தநன்மையுள்ள ஸ்வரூபவாசனையில், மேவிநிற்பாய் - பொருந்தியிருப்பாய் — எ று.

ஏ - து. சுத்தவாசனை தொடர்ந்தால் அதினாலே மிருதுவாக பரிசுத்தமாகிய பரமபதத்தை யடைவாய், பரிசுத்தமாகாத

பந்தவாசனை தொடர்ந்தால் துக்கத்தைவிளைக்கும், மிகவும் வருத்த முற்றாயினும் இவ்வாசனையை நீக்கவேண்டும், விதித்த நன்மைதீமை யென்கின்ற இரண்டுமார்க்கத்தினால் வாசனையாகிய வெள்ளமதிகரிக் கும், பிரமவித்தையிற்பயிலும் பிரயாசத்தினால் மிகவுமுயிற்சித்து தீய விடய வாசனையைநீக்கி மிகுந்த நன்மையுள்ள ஸ்வரூபவாசனையில் பொருந்தியிருப்பாய்—எ-ம்.

இ-ம். சநநாந்தரங்களில் தொடர்ந்துவருகின்ற வாசனைகளின் பலா பலங் களையும், அதிற்றள்ளுவதையுங் கூட்டுவதையும் அறிவித்ததாம். (3)

## சுபவாசனையிற் செல்லுதலில் உண்டான பலனுரைத்தல்.

மிகமுயன் று வருந்தாமற் சமமாகின்ற
 வேண்டுகொளாற்றன்முயல்வால் விநோதந்தன்னாற்
பகர்மனமாஞ் சிறுமகவை நிறுத்தல்வேண்டும
 பலபிறப்பிற் பரிசயங்க ளகலப்பண்ணி
அகல்சுபவா தனையுதித்தான் முயற்சிபேறா
 மையுறினுஞ் சுபமடைவா யதுதீதல்ல
திகழ்மனமபோய்த் தற்பதத்தைத தெளியுமட்டுந
 தேசிகனூற் சொல்வழியிற் செலலுவாயே.

இ - ள் மிகமுயன்று - மிகவு முயற்சித்து, வருந்தாமல் - வருத்தப்ப டாமல், சமமாகின்ற - சமத்துவமாகின்ற, வேண்டுகொளால் - வேண்டுகையி னால், தன்முயல்வால் தனதுமுயற்சியினால், விநோதந்தன்னால் - (நயமான) விளையாட்டினால், பகர்மனமாம் - சொல்லப்பட்டமனமென்னும், சிறுமகவை- சிறுகுழந்தையை, நிறுத்தல்வேண்டும் - (அசுபவாசனையிற செல்லாமற்றடுத்து சுபவாசனையில்) நிறுத்தவேண்டும்-பலபிறப்பில்-(முன்னெடுத்த) நானாவிதமா ன சநநங்களில், பரிசயங்கள் - (பழகிய) அசுத்தவாசனைகளை, அகலப்பண்ணி- நீங்கச்செய்து, அகல் சுபவாதனை யுதித்தால் - மகத்தான சுத்தவாசனை யுதய மாயின், முயற்சிபேறாம் - முயற்சிக்குப் பிரயோசனமாம், ஐயுறினும் - (சுப வாசனை யென்செய்யுமோ வென்னுஞ்) சந்தேகம் வரினும், சுபமடைவாய்-சுப வாசனையையேயடைவாய், அதுதீதல்ல - அச்சுபவாசனையின் மிகுதிகொடித ல்ல, திகழ்மனம்போய் - விளங்குகின்ற மனஞ்சென்று, தற்பதத்தை - பிரமஸ் வரூபத்தை, தெளியுமட்டு - தெளியுமட்டும் தெளிகின்றபரியந்தம், தேசிகன்- ஆசாரியரும், நூல் - வேதங்களும், சொல் - (பியமோபதேசத்தையு மகாவாக்

கியார்த்தத்தையும்) போதிக்கின்ற, வழியில் - மார்க்கத்தில், செல்லுவாய் - (அனுபவமாய்) அனுஷ்டிப்பாய் —எ-று.

எ - து. மிகவுமுயற்சித்து வருத்தப்படாமல் சமத்துவமாகின்ற வேண்டுகையினால் தனது முயற்சியினால் நயமானவிளையாட்டினால்செய்யப்பட்ட மனமென்னும் சிறுகுழந்தையை அசுபவாசனையிற் செல்லாமற்றடுத்து சுபவாசனையில் நிறுத்தவேண்டும், முன்னெடுத்தநாநாவிதமான சநநங்களில் அசுத்தவாசனைகளை நீங்கச்செய்து மகத்தான சுத்தவாசனை உதயமாயின் முயற்சிக்குப் பிரயோசனமாம், சுபவாசனையென்செய்யுமோ என்னுஞ் சந்தேகம்வரினும் சுபவாசனையையேயடைவாய், அச்சுபவாசனையின் மிகுதிகொடிதல்ல, விளங்குகின்ற மனஞ்சென்று பிரமஸ்வரூபத்தைத் தெளிகின்ற பரியந்தம் ஆசாரியரும் வேதங்களும் பிரமோபதேசத்தையும் மகாவாக்கியார்த்தத்தையும் போதிக்கின்ற மார்க்கத்தில் அனுபவமாய் அனுட்டிப்பாய்—எ-ம்.

இ-ம். மனது, செலுத்துமிடத்திற செல்லுவதாகையால் அதனையபரோக்ஷஞான மடைகின்ற பரியந்தஞ் சுருதி, குரு, சுவானுபவமான மார்க்கத்திற் செலுத்தவேண்டும் என்பதாம். (4)

## ஆத்மானுசந்தானக் கிரமமுரைத்தல்.

தூயதா மிகத்தினிதாய்ப் பெரியோர்மேவுஞ்
 சுபத்தினான் மனமழுக்குந் துயருமற்ற
நேயமாம் பதமேவி யதுவுந்தள்ளி
 நிலைநிற்பாய் மீட்டனுகா நெறியதாக
மாயைதனை யொழித்தநிறை சாந்தியின்பம்
 வழுவாம லுதாரமா மதியாலெய்தி
ஆயமொழிப் பொருண் புன்பின் கருதுநெஞ்சை
 யமர்சமஞ்செய் தான்மாவி லனுசந்திப்பாய்.

இ - ள். தூயதாம் - பரிசுத்தமாயும், இகத்தினிதாய் - இப்பிறப்பில் இனிமையாயும், பெரியோர்மேவும் - சத்துக்கள்விரும்பப்பட்ட (தாயுமிருக்கின்ற), சுபத்தினால்-சுபவாதனையினால், மனம் - மனதை, அழுக்குந்துயருமற்ற - கனங்

கமுந் துக்கமுமில்லாத, நேயமாம்பதமேவி-ஆத்மபதத்தை யடைவித்து, அது வுந்தள்ளி - அச்சுத்த வாசனையையும்விடுத்து, நிலைநிற்பாய் - (சாக்ஷாத்கார) நிலையிலிருப்பாய், மீண்டணுகா நெறியதாக - (அவை) திரும்பிவாராத முறைமையாக, மாயைநினைவொழித்து - மாயா பாவனையைநீக்கி, நிறைசாந்தி-பூரணசாந்தத்தையும், இன்பம் - ஆநந்தத்தையும், வழுவாமல் - தவறாமல், உதாரமாம் - (விடயவாசனைத்) தியாகமுள்ள, மதியாலெய்தி - அறிவினாலடைந்து, ஆயமொழி - சிறந்த (தத்தோமசியென்னும்) வாக்கியத்தின், பொருள்- (அது நீயானுயென்னு) மருத்தத்தை, முன்பின்கருத்தும் - கூடஸ்தபிரமமென்னும் இரண்டையும் விசாரிக்கும், நெஞ்சை - மனதை, ஆன்மாவில் - (ஆனுவென்னும்) பிரமத்தில், அமர் சமஞ்செய்து - அமரும் ஐக்கியஞ்செய்து, அனுசந்திப்பாய் - (இராமாநீ) அனுசந்தானஞ்செய்வாய் —எ-று.

எ-து பரிசுத்தமாயும், இப்பிறப்பிலினிமையாயும், சத்துக்கள் விரும்பப்பட்டதாயுமிருக்கின்ற சுபவாதனையினால் மனதைக்களங்கமுந் துக்கமுமில்லாத ஆத்மபதத்தை யடைவித்து அச்சுத்தவாசனையையும் விடுத்து சாக்ஷாத்கார நிலையிலிருப்பாய், அவைதிரும்பிவாராத முறைமையாகமாயாபாவனையைநீக்கி பூரணசாந்தத்தையும்ஆனந்தத்தையும் தவறாமல் விடய வாசனைத்தியாகமுள்ள அறிவினாலடைந்து சிறந்த தத்தோமசி என்னும் வாக்கியத்தின் அது நீயானுயென்னும் அருத்தத்தை கூடஸ்த பிரமமென்னும் இரண்டையும் விசாரிக்கும் மனதை ஆனுப் என்னும் பிரமத்தில் அமரும் ஐக்கியஞ் செய்து இராமாநீ அனுசந்தானஞ்செய்வாய்—எ-ம்.

இ-ம்.சுத்தவாசனையாற் சித்தசுத்திவந்து அச் சித்தசுத்தியால் அறிவு உதயமாய், அவ்வறிவுதயத்தாற் கூடஸ்தபிரமவைக்கிய நிரதிசயாநந்தானுபவ சாக்ஷாத்காரந் தானென்று அனுஷ்டானஞ்செய்யவேண்டுமென்பதாம். சமமென்பதற்கு உதாரணம், பகவற்கீதை, ஞானிக்கு நான்பிரியன் அவனெனக்குப் பிரியன்ஞானியே நானெனன்பதெனதுமதம், அதுவுந்தள்ளி யென்பதற்குஉதாரணம், சூதசம்கிதை'வேதாந்த மகாவாக்கியத்தா லுண்டான, அபரோக்ஷானுபவ ஞானமுள்ளவனுக்கு' விதிநிஷேதம் வேண்டுவதின்றென்று வேதார்த்தத்தினிச்சயம். (5)

## குருபரம்பரையை அறிவித்தல்.

தேங்கமலத் தயனுரைத்த மொழிகேளென்னச்
செப்பியகா ரணமேதென் றிராமன்கேட்ப

ஓங்குமுனி யுரைசெய்வா னமுடிவற்றெங்கு
முளதாகி யனைத்திலுக்கு முறையுளாகி
வீங்குபொருள் களில்விளக்க மாகிமேவு
மெய்ஞ்ஞான விண்ணின்று விண்டுவந்தான்
ஆங்கவன்றன் மனக்கமலத் தயனுண்டாகி
யகிலமன விகற்பம்போ லளித்தானன்றே.

இ - ள். தேம் - மதுவையுடைய, கமலத்து - தாமரைப்பூவில் (வீற்றிரா நின்ற), அயன் - பிரமதேவன், உரைத்த - சொல்லிய, மொழிகேளென்ன-வாக்கியத்தைக் கேட்பாயென்று (வசிட்டர்) சொல்ல, செப்பியகாரணம்-(அவர்) சொல்லியகாரணம், ஏதென்று - என்னவென்று, இராமன்கேட்ப-இராகவன் கேட்க, ஓங்குமுனி - மேலாகிய வசிட்டமுனியானவர், உரைசெய்வான்-அநுக்கிரகஞ்செய்வார், முடிவற்று - அந்தமற்றதால், எங்கும் உளதாகி - எவ்விடத்திலும் நிறைந்திருப்பதால், அனைத்தினுக்கும் - சகலத்திற்கும், உறையுளாகி-இருப்பிடமாகி, வீங்குபொருள்களில் - சகலவஸ்துக்களிலும், விளக்கமாகி-பிரகாசமாய், மேவும்-பொருந்தி (விளங்கிய), மெய்ஞ்ஞான விண்ணின்று-உள்ளசிதாகாசத்திலிருந்து, விண்டுவந்தான் - விஷ்ணு உதயமாயினர், ஆங்கவன்றன் - அவருடைய, மனக்கமலத்து - இதயதாமரையில், அயனுண்டாகி-பிரமனுதயமாய், அகிலம் - பூமிமுதலிய (வேறுபாடுகளை), மனவிகற்பம்போல்-மனக்கற்பனையைப்போல், அளித்தான் சிருட்டித்தார் —எ-று.

எ - து. மதுவையுடைய தாமரைப்பூவில் வீற்றிராநின்ற பிரமதேவன் சொல்லிய வாக்கியத்தைக் கேட்பாயென்று வசிட்டர் சொல்ல, அவர் சொல்லியகாரணம் என்னவென்று இராகவன்கேட்க, மேலாகிய வசிட்டமுனியானவர் அனுக்கிரகஞ் செய்வார். அந்தமற்றதாய் எவ்விடத்திலு நிறைந்திருப்பதாய் சகலத்திற்கும் இருப்பிடமாகி சகல வஸ்துக்களிலும் பிரகாசமாய்ப் பொருந்திவிளங்கிய உள்ளசிதாகாயத்திலிருந்து விஷ்ணு உதயமாயினர், அவருடைய இதய தாமரையில் பிரமனுதயமாய் பூமிமுதலிய வேறுபாடுகள் மனக்கற்பனையைப்போல் சிருஷ்டித்தார்—எ-ம்.

## இதுவுமது.

உலகளித்த வயன்றனே நானுவாக்
வோங்கியபா ரதவருடத் துயிர்களெல்லாம்

அலகிறுய ருறக்கண்டு புதல்வர்நோவுக்
கழுங்குபிதா வெனவழுங்கி யவர்களுய்வான்
பலகருமந் தவந்தான நதிமற்றெல்லாம்
பவந்தீரா ஞானத்தாற் பவம்போமென்றே
கலகமிலா மனத்தளித்தா லென்னைத்தன்போற்
கமண்டலமுஞ் செபவடமுங் கைபிற்காண.

இ - ள். உலகளித்தவயன்ருனே - சகத்தை உண்டாக்கின பிரமதேவனே, நாலுவாக - நாலுவிதமாக, ஓங்கிய - உயர்வாகிய, பாரதவருடத்து - பாரதவருடத்தி (லுண்டான), உயிர்களெல்லாம் - சீவர்களியாவும், அலகில்-அளவில்லாத, துயருறக்கண்டு - துன்பமுறுவதைப்பார்த்து, புதல்வர்நோவுக்கு-புத்திராது துன்பத்துக்கு, அழுங்குபிதாவென - இரக்கப்படுகின்ற பிதாவைப்போல, அழுங்கி - இரக்கப்பட்டு, அவர்களுய்வான் - அவ்வுயிர்கள் மோக்ஷமடையும்பொருட்டுச் (சிந்தித்து), பலகருமம் - (செபமாதியான) நாநாவிதகிரியைகளும், தவம் - தேகத்தைவருத்துந்) தபசுகளும், தானம் - (சமஸ்த) தானங்களும், நதி-(கங்கைமுதலான) தீர்த்தங்களும், மற்றெல்லாம் - பிறவுமாகிய வினைத்திலுைம், பவந்தீரா -சநந (துக்கந்) தீராது, ஞானத்தால் - (ஆத்ம) ஞானத்திஞல், பவம்போமென்று சநந (துக்கம்) விடுமென்று, கலகமிலாமனத்து மற்ற மனதிஞல், தன்கலக்கபோல் - தன்னைப்போல, கமண்டலமும் - கமண்டலத்தையும், செபவடமும்செபமாலிகையையும், கைபிற்காண-காத்திற்காணும்படியாக, என்னை-நம்மை-அளித்தான் - உண்டாக்கிஞர்—எ று.

எ - து. சகத்தையுண்டாக்கின பிரமதேவனே நாலுவிதமாக உயர்வாகிய பாரதவருடத்திலுண்டான சீவர்களியாவும் அளவில்லாத துன்பமுறுவதைப்பார்த்து புத்திராது துன்பத்துக்கு இரக்கப்படுகின்ற பிதாவைப்போல இரக்கப்பட்டு அவ்வுயிர்கள் மோக்ஷமடையும்பொருட்டுச் சிந்தித்து செபமாதியான நாநாவித கிரியைகளும், தேகத்தை வருத்துந் தபசுகளும், சமஸ்த தானங்களும், கங்கை முதலான தீர்த்தங்களும், பிறவுமாகிய அனைத்திலுைம் சநநதுக்கந் தீராது; ஆத்மஞானத்திஞல் சநநதுக்கம் விடுமென்று கலக்கமற்றமனதிஞல் தன்னைப்போல கமண்டலத்தையும் செபமாலிகையையும் கரத்திற்காணும்படியாக நம்மை உண்டாக்கிஞர்—எ-ம்.

## இதுவுமது.

வந்திறைஞ்சு மென்னைத்தான் மகிழ்ந்துமேவும்
வனசத்தின் வடபாலோர் மடன்மேல்வைத்தென்
சிந்தைதனை நாழிகைபோ ரிரண்டுமாயை
சேர்கவெனச் சபித்தலுமே தியக்கமுற்றுப்
புந்தியுடன் மெய்யுணர்வை மறந்தேன்கல்லாப்
புல்லரைப்போற் புலம்புமெனைப் போதன்பார்த்து
வெந்துயரென் னெனமாயை விளைந்தவாறும்
வீடுறுமா றுங்கேட்டேன் விளங்கச்சொன்னான்.

இ - ள். வந்திறைஞ்சுமென்னை - பிறந்துநமஸ்கரித்த அடியேனை, தான் மகிழ்ந்துமேவும் - தான் மகிழ்ச்சியுடன்வசிக்கும், வனசத்தின் - தாமரையினது, வடபால் - உத்தரதிசையில், ஓர் மடல்மேல்வைத்து - ஒருதளத்தின் மேல் இருத்தி, என் சிந்தைதனை - என்னுடையமனதை, நாழிகை யோரிரண்டு - ஒருமுகூர்த்தம், மாயை சேர்கவென - மாயை யடையக்கடவதென்று, சபித்தலும் - சாபமிடவும், தியக்கமுற்று - கலக்கமடைந்து, புந்தியுடன்-புத்தியோடும், மெய்யுணர்வை மறந்தேன் - உண்மைஞானத்தைமறந்தேன், கல்லாப் புல்லரைப்போல் - கலவியில்லாத மூடர்களைப்போல, புலம்புமெனை- புலம்பாநின்ற என்னை, போதன்பார்த்து - பிரமன்பார்த்து, வெந்துயர் என்னென - வெவ்வியதுக்கம என்னவென்றுகேட்க, மாயை - சம்சாரமானது, விளைந்தவாறும் - உண்டானமார்க்கமும், வீடுறுமாறும் (அதுநீங்கி) மோக்ஷமடையுமார்க்கமும், கேட்டேன் - வினாவினேன், விளங்கச்சொன்னான் - நன்றாய் விளங்கும்படி யனுக்கிரகஞ்செய்தார்—எ-று.

எ - து. பிறந்து நமஸ்கரித்தவடியேனை தான்மகிழ்ச்சியுடன்வசிக்கும் தாமரையினது உத்தரதிசையில் ஒருதளத்தின்மேலிருத்திஎன்னுடைய மனதை ஒருமுகூர்த்தம் மாயை யடையக்கடவதென்று சாபமிடவும், கலக்கமடைந்து புத்தியோடும், உண்மைஞானத்தை மறந்தேன்,கல்வியில்லாத மூடர்களைப்போல புலம்பாநின்ற என்னைப் பிரமன்பார்த்து வெவ்வியதுக்கமென்னவென்று கேட்க, சம்சாரமானது உண்டான மார்க்கமும், அதுநீங்கி மோக்ஷமடையு மார்க்கமும் வினாவினேன், நன்றாய்விளங்கும்படி யனுக்கிரகஞ்செய்தார்—எ-ம். (8)

## இதுவுமது.

ஆன்மாவை யறிந்தலவற் றிருந்தவென்னை
யயன்பார்த்து காமேசின் னறிவைமாற்றி

ஊன்மாயைப் பின்பொழித்தே முயிரெலாநின்
னுபதேசம் பெற்றுய்ய வுபாயஞ்செய்தோன்
மேன்மாயும் வினைநிறைந்த சம்புத்தீவின்
மேவியபா ரதவருடம் விரைவின்மேவித்
தானமாளாக் கிரியினர்க்குக் கிரியைச்சாற்றி
சாதனமுள் ளோர்க்குணர்வைச் சாற்றுமென்றான்.

இ - ள். ஆன்மாவை - ஞானாத்மஸ்வரூபத்தை, அறிந்து - தானுயறிந்து, அலைவற்றிருந்த என்னை - சலனமற்றிருந்த என்னை, அயன்பார்த்து - பிரமதேவன்பார்த்து, நாமே நின்னறிவைமாற்றி யாமேநின்னுணர்வைநீக்கி, ஊன்மாயை - ஈனமான மாயையைக (கொடுத்து), பின்பொழித்தேம் - பின்பு அதைையறிவினால் நீக்கினோம், உயிரெலாம் - ஆதமாக்களியாவும் - நின்உபதேசம் பெற்று - உமதனுக்கிரகம்பெற்று, உய்ய - மோக்ஷமடைய, உபாயஞ்செய்தோம் - தந்திரஞ்செய்தோம், மேன்மாயும் - (ஞானமுதித்த) பின்கெடுகின்ற, வினைநிறைந்த - கிரியைகள் நிறைந்த, சம்புத்தீவில் - நாவலந்தீவில், மேவிய பாரதவருடம் - மேவாநின்ற பாரதவருடத்தில், விரைவின்மேவி - சீக்கிரத்திறசென்று, தான்மாளா - நானென்னும் அகம் நீங்காத, கிரியினர்க்கு - கிரியாகாண்டிகளுக்கு, கிரியைச்சாற்றி - (கிரமமாக) கருமகாண்டத்தைபபோதித்து, சாதனமுள்ளோர்க்கு - (மேற்) சாதனசதுஷ்டயமுள்ளவர்களுக்கு, உணர்வைச் சாற்றுகென்றான் - ஆத்மஞானத்தை யுபதேசஞ்செய்யென்று அருள்செய்தார் — எ - று.

எ - து. ஞானாத்மஸ்வரூபத்தைத் தானுயறிநது சலனமற்றிருந்த என்னை பிரமதேவன்பார்த்து யாமேநின்னுணர்வை நீக்கி ஈனமான மாயைக்கொடுத்து பின்பு அதையறிவினால் நீக்கினோம், ஆந்மாக்களியாவும் உமதனுக்கிரகம்பெற்று மோக்ஷமடையத் தந்திரஞ்செய்தோம் ஞானமுதித்தபின் கெடுகின்ற கிரியைகள் நிறைநத நாவலந்தீவில் மேவாநின்ற பாரதவருடத்தில் சீக்கிரத்திற்சென்று நானென்னும் அகம் நீங்காத கிரியாகாண்டிகளுக்குக் கிரமமாக கருமகாண்டத்தைத்தைப் போதித்து மேற்சாதன சதுஷ்டய முள்ளவர்களுக்கு ஆத்மஞானத்தை உபதேசஞ்செய்யென்று அருள்செய்தார்.

இ-ம். உலகத்திலுள்ள சீவர்கள் தமது ஆத்மஸ்வரூபத்தில் ரமிக்கச்செய்யும்பொருட்டு ஆசிரியர் திருவடிசூட்டியனுப்பின குறிப்பை யறிவித்ததாம். ()

## சற்குரு சற்சீடரிலக்கணம் அறிவித்தல்,

அவனுரைப்ப வந்துயிர்க ளுளநாளெல்லா
மாகுவனிங் கொருசெயலு மாசையில்லை
இவணிருந்து சுழுத்தியுறு செய்கையாலே
யிடர்மனத்தைக் கடந்துசெய லியாவுஞ்செய்கேன்
கவருறுமென் செயலொன்று மில்லைவீர
கலைநிறைவும் பேதைமையுங் கருமத்தாலே
விவரமதா யாராய்ந்து மேன்மையான
மெய்க்குருவைக் கொண்டுணர்வோர் மேதைமிக்கோர்.

இ - ள். அவனுரைப்ப - அப் பிரமா அனுக்கிரகஞ்செய்ய, வந்து - (அப்படியே) பாரதவருடத்தில்வந்து, உயிர்களுள - ஆத்மாக்களிருக்கின்ற, நாளெல்லாம் - காலங்களிலெல்லாம், ஆகுவன் - இருப்பேன், இங்கொருசெயலும் - இவ்விடத்து ஒரு கிரியைகளிலும், ஆசையில்லை - விருப்பமில்லை, இவணிருந்து - இவ்விடத்திலிருந்து, சுழுத்தியுறு - (நனவிற்) சுழுத்தியையடைந்த, செய்கையால் - ஒழுக்கத்தினால், இடர் - துன்பமுள்ள, மனத்தைக்கடந்து - மனதைத்தாண்டி, செயலியாவுஞ் செய்கேன் - தொழில்கள் அனைத்தையுஞ் செய்யேன், கவருறும் - (அபிமானத்தை) கிரகிக்கின்ற, என்செயல் - எனது செய்கை, ஒன்றுமில்லை - யாதொன்றுமில்லை, வீர - (பாசநாசஞ்செய்வதில் அதி) சூரனான இராமா, கலைநிறைவும் - (ஆசாரியர்) ஞானபூர்த்தியையும், பேதமையையும் - அஞ்ஞானத்தையும், கருமத்தால் - (ஆசார) விவகாரங்களால், விவரமதாய் – பகுத்தறிவோடும், ஆராய்ந்து - விசாரித்து, மேன்மையான - உயர்வான, மெய்க்குருவைக்கொண்டு - சற்குருவைப்பெற்று, உணர்வோர் - (ஆத்மாவை) அறிபவர்கள், மேதைமிக்கோர் - அறிவில்மிகுந்த (சீடர்கள்)—எ-று.

எ - து. அப்பிரமா அனுக்கிரகஞ்செய்ய அப்படியே பாரதவருடத்தில் வந்து ஆத்மாக்களிருக்கின்ற காலங்களிலெல்லாம் இருப்பேன், இவ்விடத்தொரு கிரியைகளிலும் விருப்பமில்லை, இவ்விடத்திலிருந்து நனவிற் சுழுத்தியையடைந்த ஒழுக்கத்தினால் துன்பமுள்ள மனதைத்தாண்டி தொழில்களனைத்தையுஞ் செய்வேன், அபிமானத்தைக் கிரகிக்கின்ற எனதுசெய்கை யாதொன்றுமில்லை பாசநாசஞ்செய்வதி லதிசூரனான இராமா! ஆசாரியர் ஞானபூர்த்தியையும், அஞ்ஞானத்தையும், ஆசார விவகாரங்களால் பகுத்

தறிவோடும்விசாரித்து உயர்வானசற்குருவைப்பெற்று ஆத்மாவைய றியபவர்கள் அறிவில்மிகுந்த சீடர்கள்—எ-ம்.

இ-ம். பாரம்பரியமான மரபிலுள்ள ஆசாரியரிடத்திற் பிரமோப தேசம் பெற்று ஆத்மானுசந்தானஞ் செய்யவேண்டுமென்பதாம். (10)

## ஆசாரியர் அபக்குவனுக்கு உண்மையை யுபதேசியா ரெனல்.

ஓதுகின்ற பொருண்முழுது முன்பின்கூட்டி
 யுணர்பவர்க்கல் லதுபசுவை யொப்போர்க்கெல்லாந்
தீதகன்ற குருவுண்மை செப்பாரன்றே
 திகழ்சாந்தி விசாரமொடு செறிசந்தோடஞ்
சாதுசங்க மெனவீட்டின் வாயில்காக்குஞ்
 சதுஷ்டயரு முறவாகிற் றடைவேறுண்டோ
மேதினிகா வலர்மனையிற் கடைகாப்பாளர்
 விடுவதுபோல் வீட்டிலவர் விடுவாரன்றே.

இ-ள். ஓதுகின்ற - ஆசாரியர் அனுக்கிரகஞ்செய்கின்ற, பொருண்முழுதும் - அருத்தங்களியாவையும், முன்பின்கூட்டி - துவக்குங் (கருத்தையு) முடிக்குங் (கருத்தையுஞ்) சேர்த்து, உணர்பவர்க்கலலது - அறிபவர்க்கேயன்றி, பசுவை - (பார்த்தவிடயமயமாகும்) பசுத்தன்மையை, ஒப்போர்க்கெல்லாம் - ஒப்பான (சீவத்தன்மையையுடைய) சகலருக்கும், தீதகன்றகுரு - குற்றமற்றஆசிரியர், உண்மைசெப்பார் - தத்துவஞானத்தைச்சொல்லார், திகழ்சாந்தி - பிரகாசியாநின்ற சாந்தியும், விசாரமொடு - விசாரணையும், செறி - மிகுந்த, சந்தோடம் - சந்தோஷமும், சாதுசங்கம் - சாதுசங்கமும், என - என்றுசொல்லப்பட்ட, வீட்டின் - மோக்ஷத்தின், வாயில் - வாயிலை, காக்கும் - காக்கின்ற, சதுஷ்டயரும் - நான்குபேர்களும், உறவாகில் - இஷ்டமானால், தடைவேறுண்டோ - (மோக்ஷமடைவதற்கு) விக்கினம்வேறுண்டோ, மேதினிகாவலர் - பூமியைக் காக்கின்ற அரசர்களின், மனையிற்கடை - வீட்டின்வாயிலை, காப்பாளர் - காப்பவர்கள், விடுவதுபோல - (இராசதரிசனத்துக்கு) விடுவதுபோல, வீட்டில் - மோக்ஷத்தில், அவர்விடுவர் - அவர்கள்விடுவார்கள்—எ-று.

எ-து. ஆசாரியர் அனுக்கிரகஞ் செய்கின்ற அருத்தங்களியாவையும் துவக்குங்கருத்தையு முடிக்குங் கருத்தையுஞ் சேர்த்து அறிபவர்க்கேயன்றி பார்த்த்விடயமயமாகும் பசுத்தன்மையை ஒப்பான சீவதன்மையையுடைய சகலருக்கும் குற்றமற்ற ஆசிரியர் தத்துவஞா

ணத்தைச் சொல்வார். பிரகாசியாநின்றசாந்தியும், விசாரணையும், மிகுந்தசந்தோஷமும், சாதுசங்கமும் என்றுசொல்லப்பட்ட மோக்ஷத்தின் வாயிலைக்காக்கின்ற நான்குபேர்களும் இஷ்டமானால் மோக்ஷமடைதற்கு விக்கினம்வேறுண்டோ? பூமியைக்காக்கின்ற அரசர்களின் வீட்டின்வாயிலைக் காப்பவர்கள் இராசதரிசனத்துக்கு விடுவதுபோல மோக்ஷத்தில் அவர்கள் விடுவார்கள்—எ-ம்.

இ-ம். முமுட்சுகளுக்குச் சாந்திமுதலிய நான்கு குணங்களும் வேண்டும் என்பதாம். (11)

## சாந்தியாதிகுணங்களில் ஒன்றையாவது அடைய வேண்டுமெனல்.

அன்னால்வர் தமிலொருவ ரன்பானாலு
 மனைவருமொத் தன்பாவ ராதலாலே
பன்னாளு மிகமுயன்று யாதுநீத்தும்
 பற்றியொரு வரையேனும் பழகவேண்டு
மன்னாத பிறப்பறுக்க நல்லோர்நன்னூன்
 மாதவத்தா லறிவைமுதல் வளர்க்கவேண்டும்
இன்னாத மாயையெனு நஞ்சம்போத
 மென்கின்ற காருடமந் திரத்தான்மீளும்.

இ - ள். அன்னால்வர்தமில்-அந்தநால்வர்களில், ஒருவர்அன்பானாலும்-ஒருவன் அன்பனானால், அனைவரும் ஒத்துஅன்பாவர் - நால்வருமொத்து அன்பராவார்கள், ஆதலால் - ஆகையினால், பன்னாளும்-சதாகாலமும், மிகமுயன்று-மிகவுமுயற்சித்து, யாதுநீத்தும்- (அதற்கிடரானவைகளில்) ஏதானாலுந்தள்ளி, ஒருவரையேனும் - ஒருவரையாவது, பற்றி - பிடித்துக்கொண்டு, பழகவேண்டும் - பழக்கஞ்செய்யவேண்டும், மன்னாத - நிலையில்லாத, பிறப்பறுக்க-சநநத்தைகெடுக்க, நல்லோர்-சத்துக்கள் (சங்கத்தினாலும்), நன்னூல் - ஆத்மஞானசாஸ்திர (விசாரணையினாலும்), மாதவத்தால்-மகா நிஷ்டையினாலும், அறிவை-பிரக்ஞையை, முதல் - முதன்மையாக, வளர்க்கவேண்டும் - விருத்திசெய்யவேண்டும், இன்னாத - துன்பமாகிய, மாயையெனும்-சம்சாரமென்கின்ற, நஞ்சம் - விடமானது, போதமென்கின்ற-ஞானமென்கிற, காருடமந்திரத்தால்-

எ - து. அந்த நால்வர்களில் ஒருவன் அன்பனானால் நால்வருமொத்து அன்பவராார்கள், ஆகையினால் சதாகாலமும் மிகவு முயற்

சித்து அதற்கிடானவைகளில் ஏதானுலுந்தள்ளி ஒருவரையாவது பிடித்துக்கொண்டு பழக்கஞ்செய்யவேண்டும், நிலையில்லாத சநநத்தைக்கெடுக்க சத்துக்கள் சங்கத்தினுலும், ஆத்ம ஞானசாஸ்திரவிசாரணையினுலும், மகாநிஷ்டையினுலும் பிரக்ஞையை முதன்மையாக விருத்திசெய்யவேண்டும். துன்பமாகிய சம்சாரமென்கின்ற விடமானது ஞானமென்கிற கலுழமந்திரத்தினுல் திரும்பும்—எ-ம்.

இ-ம். சாந்தியாதி குணங்களைப்பெற்றுச் சுருதி குரு சுவானுபவங்களினுல் வருளம் ஞானத்தினுல் மாயையைக் கெடுக்கவேண்டும் என்பதாம்.

## விடயத்தைக் கெடுத்த இடத்துண்டான நன்மையையும் அதைக்கெடுக்கா இடத்துள்ள விபரீதத்தையுங் கூறல்.

சாமழைக ணெய்தன்மலர் மழையையொக்குந்
　தழற்பள்ளி பனிநீரிற் சயனமொக்குஞ,
சிரமரிதற் சுகமுறுநித் திரையையொக்குந
　தேகமரி வதுகலைவைச் செறிபூசொக்கும
நிரலதிக நாராச மருமம்பாய்த
　நெடுங்கோடைச் சிவிறியினல் னீரையொக்கும்
விரவரிய விடயமெனும் விடவிடேசி
　விவேகமிகுத் தவர்க்கல்லால் விலக்கொணுதே.

இ - ள். சாமழைகள் - அம்புவருடங்கள், நெய்தன்மலர்மழையை - ஆம்பல் புட்பவருஷத்தை, ஒக்கும் - ஒப்பாகும், தழற்பள்ளி - அக்கினிப்படுக்கை- பனிநீரிற்சயனம் ஒக்கும் - பனிநீரிற்றெளித்த மெத்தையை ஒப்பாகும், சிரமரிதல் - சிரசையறுப்பது, சுகமுறு - சுகம்பொருந்திய, நித்திரையை - (சுழுத்தி) நித்திரையை, ஒக்கும் - ஒப்பாகும், தேகமரிவது - உடலையறுப்பது, கலைவைச் செறிபூசு - சந்தனம்பூசுதலை, ஒக்கும் - ஒப்பாகும், நிழல் - ஒழுங்காகிய, அதிகநாராசம்-கணக்கற்ற சலாகைகள், மருமம் பாய்தல் மார்பில்தைப்பது, நெடுங்கோடை - நீண்டவேனிற்காலத்தில், சிவிறியின் - துருத்தியினுல் (வீசும்), நன்னீரையொக்கும் குளிர்ந்தசலத்தை ஒப்பாகும், விரவரிய-சேரக்கூடாத விடயமெனும் - விடயமென்கின்ற, விடவிடேசி - விடவிடேசியானது, விவேகமிகுத்தவர்க்கு அல்லாமல - விவேகஞான மதிகரித்தவர்களுக்கேயன்றி, விலக்கொணுது - (மற்றவர்களுக்கு) விலக்கக்கூடாது—எ-று.

எ - து. அம்புவருடங்கள் ஆம்பல்புட்பவருடத்தை ஒப்பாகும். அக்கினிப்படுக்கைபனிநீரிற்றெளித்த மெத்தையை ஒப்பாகும். சிரசையறுப்பது சுகம்பொருந்திய சுழுத்தி நித்திரையை ஒப்பாகும். உடலையறுப்பது சந்தனம்பூசுதலை ஒப்பாகும். ஒழுங்காகிய கணக்கற்றசலாகைகள் மார்பிற்றைப்பது நீண்டவேனிற் காலத்தில் தாருத்தியினால்வீசும் குளிர்ந்தசலத்தையொப்பாகும். சேரக்கூடாத விடயமென்கின்ற விடவிடூசியானது விவேகஞானம் அதிகரித்தவர்களுக்கேயன்றி மற்றவர்களுக்கு விலக்கக்கூடாது—எ-ம்.

இ-ம். மனதைப் புலன்வழியிற்செலுத்தாமல் ஆத்மவிசாரத்திற் செலுத்துவதனாற்சுகமுண்டாய் அம்புவருடமுதலிய உபத்திரங்கள் புட்பவருஷங்கள் முதலியவைபோலச் சுகமாய்ச்சகிக்கத்தக்கவைகளாம் என்பதாம்.

## ஆத்மவிசார இலக்கணங்கூறல்.

ஊனமிலா ஞானநூல் விசாரத்தாலே
யுயர்வீடு நண்ணுமென லுண்மையன்றோ
தானறியு மனுபூதி ஞானநன்னூற்
சற்குருவிம் மூவகையுந் தம்மிலொத்தே
ஆனவகை யியற்றில்விடா தான்மாத்தோன்று
மற்பவறி வினர்கற்ற வரியமெய்ந்நூல்
ஈனமுறு மடமைதரு மிதுபோன்மற்ற
வெந்தநூல் களுமடமை யியற்றுதன்றே.

இ - ள். ஊனமிலா - குறைவில்லாத, ஞானநூல் - ஆத்மஞானசாஸ்திரங்களின், விசாரத்தால் - (தெளிவான) விசாரணையினால், உயர்வீடு நண்ணுமெனல் - மேலான நிருவாணசுகம் உண்டாகுமென்பது, உண்மையன்றோ - உள்ளதல்லவா, தானறியும் அனுபூதி - தானறிகின்ற அனுபவமும், ஞானநன்னூல் - ஆத்ம ஞானசாஸ்திரங்களின் (முடிவானவாக்கியார்த்தங்களும்), சற்குரு - சற்குரு (வினுபதேசவாக்கியார்த்தங்களுமாகிய) இம்மூவகையும் - இந்த மூன்று பிரிவும், தம்மிலொத்து - தம்மிடத்திற்பொருந்தி, ஆன - ஒன்றான, வகையியற்றில் - பிரகாரம் அனுஷ்டிக்கில், விடாத ஆன்மாத்தோன்றும் - (ஒன்றையும்) விட்டுநீங்காத ஆத்மஞானம் பிரகாசிக்கும், அற்பவறிவினர் - ஏகதேசவறிவையுடையவர்கள், கற்ற - அப்பியாசித்த அரியமெய்ந்நூல் - அரியஞானசாஸ்திரமானது, ஈனமுறுமடமைதரும் - இழிவுள்ள அஞ்ஞானத்தைக்கொடுக்கும், இது

போல் - இந்த (ஞானநூலைப்) போல, மற்ற எந்த நூல்களும் - (பத்திகாண்டங் கருமகாண்டமுதலிய) எச்சாத்திரங்களும், மடமை இயற்ருது - அஞ்ஞானத்தைக்கொடாது —எ-று.

எ - று. குறைவில்லாத ஆத்மஞான சாஸ்திரங்களின் தெளிவான விசாரணையினுல் மேலான நிருவாணசுக முண்டாகுமென்பது உள்ளதல்லவா? தானறிகின்ற அனுபவமும், ஆத்மஞான சாஸ்திரங்களின் முடிவான வாக்கியார்த்தங்களும், சற்குருவின் உபதேசவாக்கியார்த்தங்களுமாகிய இந்த மூன்றுபிரிவும் தம்மிடத்திற்பொருந்தி ஒன்ருன பிரகாரமனுஷ்டிக்கில் ஒன்றையும்விட்டு நீங்காத ஆத்மஞானம் பிரகாசிக்கும். எந்நேரமுமிவையுடையவர்கள் அப்பியாசித்த அரியஞானசாத்திரமானது இழிவுள்ள அஞ்ஞானத்தைக் கொடுக்கும் இந்த ஞானநூலைப்போல பத்திகாண்டங் கருமகாண்டமுதலிய எச்சாத்திரங்களும் அஞ்ஞானத்தைக் கொடாது—எ-ம்.

இ-ம். ஆத்மஞானம் பிரத்தியட்சமாவதற்குச் சுருதி குரு சுவானுபவமொத்து விசாரிக்கவேண்டும் அஃது இன்றேல் துன்பமுண்டாமென்பதாம்.

## அஞ்ஞான இழிவும் முத்திக்குச் சகாய அவகாசமும் உரைத்தல்.

மடமையொடு வாழ்கின்ற வாழ்வினீசர்
மனைதொறுமோட் டிரந்துழல்கை வரிசையாகும்
அடர்தனநட் புறவுபர தேசந்தீர்த்த
மாச்சிரம மெய்வருத்த மனைத்தினுலுந்
தொடருகவி யில்லாமனை வருந்தத்தாலே
தாயபத முறுமுத்தித் துவாரபாலர்க்
கடவுகுணங் கேட்டியுயர் சாந்திவந்தாற்
காதலுந்தன் பமுங்கதிர்முன் கங்குல்போற்போம்.

இ - ள். மடமையொடு வாழ்கின்ற வாழ்வின் - (இப்படிப்பட்ட) அஞ்ஞானத்தோடு வாழ்கின்ற வாழ்விலும், நீசர் மனைதொறும் - சண்டாளர்கள் வீடுகடோறும், ஓட்டிரந்துழல்கை - ஓட்டிற் பிச்சைவாங்கிச் சுழல்வது, வரிசையாகும் - சீரானவாழ்வாகும், அடர்தனம் - மிகுந்த திரவியங்களும், நட்பு- மித்திரர்களும், உறவு-பந்துக்களும், பரதேசம் - காசிமுதலான (புண்ணிய) தேசங்களும், தீர்த்தம்-(கங்கைமுதலான) தீர்த்தங்களும், ஆச்சிரமம் - (முனிவர்கள் வாசஸ்தலங்களும், மெய்வருத்தம் - சரீரத்தை வருத்துந் (தபசுகளுமாகிய) அனைத்தினுலும் - எல்லாவற்றுலும், (எப்பொழுதும்) தொடருதவி

யில்லை - (பரகதியைத்) தொடரத்தகுந்த சகாயங்களில்லை, மனவருத்தத்தால் - மனோநிக்கிரகத்தினால், தூயபதமுறும் - பரிசுத்தமான பரமபத முண்டாகும், முத்தித் துவாரபாலர் - மோக்ஷவாயிற்காக்கின்ற நான்குபேர்களுக்கு, கடவகுணங்கேட்டி - எப்போது நீங்காமலிருக்கின்ற குணங்களை (இராமா) நீ கேட்பாய், உயர்சாந்தி - மேலானசாந்தம், வநதால் - கிடைத்தால், காதலும் - ஆசையும், துன்பமும் - துக்கமும், கதிர்முன் - சூரியன்முன்னே, கங்குல்போற்போம் - இருளைப்போல நீங்கும்—எ-று.

எ - று. இப்படிப்பட்ட அஞ்ஞானத்தோடு வாழ்கின்றவாழ்விலும், சண்டாளர்கள்வீடுகள்தோறும் ஓட்டிற்பிச்சைவாங்கிச்சுழல்வது சிரானவாழ்வாகும். மிகுந்த திரவியங்களும், மித்திரர்களும், பந்துக்களும், காசிமுதலான புண்ணியதேசங்களும், கங்கைமுதலான தீர்த்தங்களும், முனிகளின வாசஸ்தலங்களும், சரீரத்தைவருத்துந் தபசுகளுமாகிய எல்லாவற்றாலும எப்பொழுதும் பரகதியைத தொடரத்தகுந்த சகாயங்களில்லை மனோநிக்கிரகத்தினால் பரிசுத்தமான பரமபதமுண்டாகும் மோக்ஷவாயிற்காக்கின்ற நான்குபேர்களுக்கு எப்போது நீங்காமலிருக்கின்ற குணங்களை இராமா! நீ கேட்பாய், மேலான சாந்தம் கிடைத்தால் ஆசையும், துக்கமும் சூரியன்முன்னே இருளைப்போல நீங்கும்—எ-ம்

இ-ம். அறியாமையையுந் தபமுதலான கிரியைகளையுநீக்கி சாந்தியைப் பெற்று மனதை ஆத்மாவிற் கரையும்படி சந்திக்கவேண்டு மென்பதாம். ( 5)

## சாந்தியும் அதையடைந்தவன் இலக்கணமுங்கூறல்.



நல்லவருந் தீயவரு மன்னைபோல
நம்புதற்கா யமுதுண்ண நண்ணினாலு
மல்லன்மலர் மகட்புணர்ந்த போதுமொவ்வா
மகிழ்ச்சிதருஞ் சாந்தியுளோர் மரணஞ்செல்வங்
கொல்லமரெய் தினுமசையார் புலைனந்தாலுங்
குற்றமுநன் மையுநுகர்ந்து குளிரார்வாடார்
தொல்லறிஞர் மகமபுரிந்தோர் முனிவர்மொய்ம்பர்
தூயவரியா ரினுமவிளங்குந் தூய்மையோரே.

இ - ள். நல்லவரும் - சிஷ்டர்களும், தீயவரும் - துஷ்டர்களும், அன்னை போல - தாயைப்போல, நம்புதற்காய் - நமபுதற்கு (த்தகுந்த) தாகி, அமுதுண்ண - அமுதமானது (தான்) புசிக்கும்படி, நண்ணினாலும் - கிடைத்தாலும், மல்லன்மலர்மகள் - வளப்பமுள்ள பங்கயமலரிலுறையும் இலட்சுமியான

வன், புணர்ந்தபோதும் - வந்து பொருந்தினபோதிலும், ஓவ்வா-சமானமாகாத, மகிழ்ச்சிதரும் - ஆநந்தத்தைக் கொடுக்கின்ற, சாந்தியுளோர் - சாந்தியையுடையவர்கள், மரணம் - நசித்தலும், செல்வம் - வாழ்தலும், கொல்லமர்-கொலைசெய்கின்ற யுத்தங்களும், எய்தினும் - வந்தாலும், அசையார் - சஞ்சலியார்கள், புலன்ஐந்தாலும் பஞ்சவிடயங்களிலும், குற்றமும் - அசுபத்தையும், நன்மையும் - சுபத்தையும், நுகர்ந்து - புசித்து, வாடார் - துங்கியார்கள், குளிரார் - சந்தோஷியார்கள், தொல்லறிஞர் - முதிர்ந்த அறிவுள்ளவர்கள், மகம்புரிந்தோர் - யாகதீக்ஷதர்கள், முனிவர் - (கலை) மறையோர், மொய்ம்பர்-பலத்தையுடைய அரசர்கள், தூயவர் - பரிசுத்தமுள்ளவர்கள், யாரினும் மற்றெவர்களிலும், தூய்மையோர் - (இச்சாந்தகுணமுள்ள) பரிசுத்தவான்கள், விளங்கும் - (மேன்மையாகப்) பிரகாசிப்பார்கள்—எ-று.

ம - து சிஷ்டர்களும, துஷ்டர்களும் தாயைப்போல நம்புதற்குத் தகுந்ததாகி, அழகானது தான் புசிக்கும்படி கிடைத்தாலும் வளப்பமுள்ள பங்கயமலரிலுறையும இலட்சுமியானவள் வந்து பொருந்தினபோதிலும் சமானமாகாத ஆநந்தத்தைக் கொடுக்கின்ற சாந்தியையடையவர்கள் நசித்தலும, வாழ்தலும், கொலைசெய்கின்ற யுத்தங்களும் வந்தாலும் சஞ்சலியார்கள். பஞ்சவிடயங்களினாலும் அசுபத்தையும், சுபத்தையும புசித்து துக்கியார்கள், கலைமறையோர், பலத்தையுடைய அரசர்கள், பரிசுத்தமுள்ளவர்கள், மற்றெவர்களிலும் இச்சாந்தகுணமுள்ள பரிசுத்தவான்கள் மேன்மையாகப் பிரகாசிப்பார்கள்—எ-ம.

இ-ம். சகல செல்வங்களும் வலியவந்து மகிழ்ச்சிக்கு மேலான மகிழ்ச்சியைக் கொடுக்கின்ற சாந்தியுள்ளவன் ஒன்றினாலுஞ் சுகதுக்கமடையாமல் அறிஞர் முதலான சகலருக்கு மேலானவன் என்பதாம். (16)

## சாந்தியை யடைதலும் ஆத்மவிசாரமுமுரைத்தல்.



ஆரியர்பே றுவதாகி யயலோகங்கெல்லா
மரிதான சாந்தியமு தருந்திமேலோர்
சீரியவீட் டினையுற்றார் நீயுமந்தச்
செயல்புரிவாய் நன்னூலாற் றெளிந்தசுத்த
நேரியபுத் தியினாலே விசாரந்தன்னை
நிறைந்திடுக வதுநிறைந்தா னிகரில்புந்தி
கூரியதாய் வீடுணரும் விசாரநாமே
கொடும்பவநோய்க் கருமருந்தாங் குறிப்புளோர்க்கே.

இ - ள். ஆரியர்பேணுவதாகி - அறிவுடையவர்கள் விரும்புவதாகி, அயலோர்க்கெல்லாம் - ஏனையோர் அனைவர்க்கும், அரிதான - அரிதாயிருக்கின்ற, சாந்தியமுது - சாந்தாமுதத்தை, அருந்தி-புசித்து, மேலோர - மகான்கள், சீரியவீட்டினை யுற்றார்-சிறப்பாகிய மோக்ஷத்தை யடைந்தார்கள், நீயும்-(இராமா) நீயும், அந்தச் செயல்புரிவாய் - அவ்வொழுங்கத்தின்படி செயக்கடவாய், (இனி விசாரணை) நன்னூலால் - நல்ல (ஞான) சாத்திரத்தினால், தெளிந்த - தெளிவான, சுத்தம்-பரிசுத்தமுள்ள, நேரியபுந்தியினால் - நுட்பஅறிவினால், விசாரந்தன்னை - (ஆத்ம) விசாரணையை, நிறைத்திடுக - பூரணமாகச் செய்க, அதுநிறைந்தால் - அவ்வாத்மவிசாரணை பூரணமானால், நிகரில் புந்தி-சமானமில்லாத அறிவானது, பரியதாய் - அதிக நுட்பமாக, வீடுணரும் - பரமபதத்தை யறியும், விசாரந்தானே - இவ்விசாரணையே, குறிப்புளோர்க்கு - (காரிய காரணங்களைக்) குறித்தறியும் அறிவுள்ளவர்களுக் (குண்டான,) கொடும் பவநோய்க்கு - கொடிய சநநவியாதிக்கு, அருமருந்தாம் - அரிதான ஔடதமாம்—எ - று.

எ - து. அறிவுடையவர்கள் விரும்புவதாகி ஏனையோர் அனைவர்க்கும் அரிதாயிருக்கின்ற சாந்தாமுதத்தைப் புசித்து மகான்கள் சிறப்பாகிய மோக்ஷத்தை யடைந்தார்கள். இராமா நீயும் அவ்வொழுக்கத்தின்படி செய்யக்கடவாய். இனி விசாரணை நல்ல ஞானசாத்திரத்தினால், தெளிவான பரிசுத்தமுள்ள நுட்பவறிவினால், ஆத்மவிசாரணையை பூரணமாகச் செய்க. அவ்வாத்மவிசாரணை பூரணமானால் சமானமில்லாத அறிவானது அதிக நுட்பமாக பரமபதத்தையறியும். இவ்விசாரணையே காரியகாரணங்களைக் குறித்து அறியும் அறிவுள்ளவர்களுக்குண்டான கொடிய சநநவியாதிக்கு அரிதான ஔடதமாம்—எ - ம்.

இ-ம். சாந்தியை யடைந்து ஆத்மவிசாரஞ்செய்தாற் சநநங்கெடும் என்பதாம். (17)

## விசாரணையின் பலமும்

## சந்தோஷ இலக்கணமுங்கூறல்.

கருகியகங் குலின்மறையாக் கதிர்க்குமட்காக
  காண்பரிய பொருளெல்லாங் காணுங்கண்ணும்
தெருளுறநா ளுருலகம் வந்தவாறுந்
  செறிபிறவி யாரதெனுந் திகழ்விசாரம்
இருளுறுமா பதத்தினுக்கு மருந்தாமப்பா
  லேற்றமுள சந்தோட மேதென்றோதில்
வருபொருளி லின்பமறத் துய்த்தவர்ரா
  வளபொருளிற் றுன்பமிலா மகிழ்ச்சிதானே.

இ - ள். கருகிய கங்குலில் - கறுத்தஅந்தகாரத்தில், மறையா - மறையாததாயும், கதிர்க்கு மட்கா - (மிகுந்த) பிரகாசத்துக் (கொளி) மழுங்காததாயும், காண்பரிய - பார்ப்பதற்கரிய, பொருளெல்லாம் - வஸ்துக்களியாவையும், காணும் - பார்ப்பதாயுமிருக்கின்ற, கண்ணால் - (விசார) திஷ்டியினால், தெருளுற - தெளிவுற, நானார் - யானெப்படிப்பட்டவன், உலகம் வந்தவாறு ஏன் - சகத்தான சம்சாரமுண்டான கிரமமென்ன, செறிபிறவியாரது - மிகுந்த சம்சாரம் யாரையுடையது, என்னும் - என்கிற, திகழ் - (பரிகார யுத்தியோடும்) விளங்கிய, விசாரம் - (ஆபத்திலும் விசாரிக்கத்தக்க) விசாரணையானது, இருளுறும் - அஞ்ஞான அந்தகாரமான, ஆபத்தினுக்கு - ஆபத் (தென்னும் வியாதி) க்கு, மருந்தாம்-ஔடதமாம், (இனிச்சந்தோஷம்) அப்பால்- அதன்பின்பு, ஏற்றமுள சந்தோடம் - மேலாகியசந்தோஷமானது, ஏதென்று ஓதில் - யாதென்றுசொல்லில், வந்துபொருளில் - வரப்பட்ட (நன்மை தீமையான) வஸ்துக்களில், இன்பமறத் துய்த்து - விருப்பு (வெறுப்) பில்லாமற் புசித்து, வாராவன பொருளில் - வாராதவஸ்துக்களில், துன்பமிலா - துயரமில்லாத, மகிழ்ச்சிதான் - ஆநந்தந்தான் —எ-று.

எ - து. கறுத்த அந்தகாரத்தில் மறையாததாயும், மிகுந்த பிரகாசத்துக்கு ஒளிமழுங்காததாயும், பார்ப்பதற்கு அரியவஸ்துககளியாவையும் பார்ப்பதாயுமிருக்கின்ற விசாரதிஷ்டியினால் தெளிவுற; யானெப்படிப்பட்டவன்? சகத்தான சம்சாரமுண்டான கிரமமென்ன? மிகுந்த சமசாரம் யாரையுடையது? என்கிற பரிகார யுத்தியோடும் விளங்கிய ஆபத்திலும விசாரிக்கத்தக்க விசாரணையானது அஞ்ஞான அந்தகாரமான ஆபத்தென்னும் வியாதிக்கு ஔடதமாம். (இனிச்சந்தோஷம்) அதன்பின்பு மேலாகிய சந்தோஷமானது யாதென்று சொல்லில்வரப்பட்ட நன்மைதீமையான வஸ்துக்களில் விருப்பு வெறுப்பில்லாமல் புசித்து வாராதவஸ்துக்களில் துயரமிலலாத ஆநந்தந்தான்— எ-ம்.

இ-ம். விசார ஞானத்தினாற் சித்தையுஞ் சடத்தையுஞ் சிறசடமானமாயையும் விசாரித்து அஞ்ஞானத்தைக கெடுத்து ஆநந்தத்தை யடைய வேண்டுமென்பதாம். (18)

## சந்தோஷத்தின்பலமும் சாதுசங்கமுங் கூறல்.

நிகாறுசந் தோடவமு தமையப்பெற்று
  னெடும்போக நஞ்சாமந் நிலைசந்தோடம்
அகலுறவா ளிசையில்விழுநெஞ் சறிவைநோக்கி
  லழுக்குறுகண் ணுடியிலா நகம்போற்றேன்று

மகிழ்குணமெய் தியபுருட மகிமையோனை
மாதவரு நராதிபரும் வணங்காநிற்பார்
சகமெனுமா யையைவெல்லத் தகவோர்க்கெல்லாந்
தப்பாத சகாயமாஞ் சாதுசங்கம்.

இ - ள். நிகராறு - சமானமில்லாத, சந்தோஷ அமுதம் - சந்தோஷஅமுதத்தை, அமையப்பெற்றால் - பொருந்தப்பெற்றால், நெடும்போகம் நஞ்சாம்-மிகுந்த விடயபோகம் விஷமாகும், அந்நிறை சந்தோடம் - அப்பூரண மகிழ்ச்சி, அகலுற-நீங்க, ஆசையில் விழும் - விடய சுகத்தில் அழுந்துகின்ற, நெஞ்சு மனது, அறிவைநோக்கில் - ஆத்மஞானத்தைப்பார்க்கில், அழுக்குறுகண்ணடியில் - களங்கமுள்ள தருப்பணத்தில், ஆநநம்போல் - முகத்தைப்போல, தோன்றா - தோற்றாது, மகிழ்குணமெய்திய - சந்தோஷகுணத்தையடைந்த, புருடமகிமையோனை - புருஷசிரேஷ்டனை, மாதவரும்-மகாதவசிகளும், புருடமகிமையோனை - புருஷசிரேஷ்டனை, மாதவரும் - மகாதவசிகளும், நராதிபரும் - நரேந்திரரும், வணங்காநிற்பர் - வணங்குவார்கள், (இனிச்சாதுசங்கம்) சகமெனுமாயையை - உலகமென்னுமாயையை, வெல்லத்தகவோர்க்கு எல்லாம் - செயிக்கத்தக்க சகலருக்கும், சாது சங்கம் - சாதுக்கள்சங்கமானது, தப்பாதசகாயமாம்-தவிராதசகாயமாகும் —எ-று.

எ - து. சமானமில்லாத சந்தோஷ அமுதத்தைப் பொருந்தப் பெற்றால் மிகுந்த விடயபோகம் விஷமாகும். அப்பூரணமகிழ்ச்சி நீங்க. விடயசுகத்தி லழுந்துகின்றமனது ஆத்மஞானத்தைப்பார்க்கில் களங்கமுள்ள தருப்பணத்தில் முகத்தைப்போல தோற்றாது. சந்தோஷகுணத்தையடைந்த புருடசிரேஷ்டனை மகாதவசிதளும் நரேந்திரரும் வணங்குவார்கள். (இனிச்சாதுசங்கம்) உலகமென்னுமாயையை செயிக்கத்தக்க சகலருக்கும் சாதுக்கள் சங்கமானது தவிராத சகாயமாகும்- -எ-ம்.

இ-ம். முமூட்சுக்கள் சகல போகங்களுங் கைக்கும்படியான சந்தோஷத்தையும் சம்சாரத்தை வெல்லத்தக்க சாதுசங்கத்தையும் அடையவேண்டும் என்பதாம். (19)

## சாதுசங்கத்தின் பலன்கூறல்.

அறகருறைவை நிறைவாக்குஞ் சம்பத்தாக்கு
மாபத்தைச் சுபமாக்கு மசுபந்தன்னைச்
சிறக்குமுயாந் தவர்கூட்ட மென்னுமங்கைச்
சீதநீ ராடினர்க்குச் செந்தீவேள்வி
இறக்கரிய தவந்தானந் தீர்த்தம்வேண்டா
மிடர்பந்த மறுத்தெவர்க்கு மினியோராக்கிப்

பிறப்பெனும்வே லைப்புணையா முணர்வுசான்ற
பெரியோரை யெவ்வகையும் பேணல்வேண்டும்.

இ - ள். அறக்குறைவை - மிகவுமற்பமான (அறிவை), நிறைவாக்கும்-பூரணமாக்குவதாயும், ஆபத்தை-(விடயங்களால்வரும்) ஆபத்துக்களை, சம்பத்தாக்கும் - (அழிவின்றிய) சம்பத்தாக்குவதாயும், அசுபந்தன்னை - (ஒன்றிலுஞ்சுகியாத) அமங்கலத்தை, சுபமாக்கும் - சர்வத்திலுஞ் சுகிக்கின்ற மங்கலமாக்குவதாயு மிருக்கின்ற, சிறக்கும் உயர்ந்தவர் கூட்டமென்னும் - சிறந்தமகான்கள் சங்கமென்கிற, கங்கை - சானவியினது, சீத நீர் - குளிர்ந்தசலத்தில், ஆடினர்க்கு - ஸ்நானஞ்செய்தவர்களுக்கு, செந்தீவேள்வி - சிவந்த அக்கினி காரியமான யாகங்களும், இறக்கரியதவம்-கெடாத தவசுகளும், தானம் - மகாதானங்களும, தீர்த்தம் - புண்ணிய தீர்த்தங்களும், வேண்டா - வேண்டுவதில்லை, இடர்பந்தம் அறுத்து - துக்கமாகிய பந்தநாசஞ்செய்து, எவர்க்கும் இனியோராகி - யாவர்க்கும் இனிமையுள்ளவராயும், பிறப்பெனும் வேலை - சநநமென்னுஞ் சமுத்திரத்தைக் கடப்பதற்கு, புணையாம்-கப்பலாயு மிருக்கின்ற, உணர்வுசான்ற அறிவுநிறைந்த, பெரியோரை மகான்களை, எவ்வகையும் - எவ்விதத்திலும், பேணல்வேண்டும் - விரும்பவேண்டும் —எ-று.

எ - து. மிகவும் அற்பமான அறிவைப் பூரணமாக்குவதாயும், விடயங்களால் வரும்ஆபத்துக்களை அழிவின்றிய சம்பத்தாக்குவதாயும், ஒன்றிலுஞ்சுகியாத அமங்கலத்தை சர்வத்திலுஞ்சுகிக்கின்றமங்கலம்ஆக்குவதாயுமிருக்கின்ற சிறந்தமகான்கள்சங்கமென்கின்றசானவியினது குளிர்ந்தசலத்தில் ஸ்நானஞ்செய்தவர்களுக்கு சிவந்த அக்கினிகாரியமானயாகங்களும், கெடாததவசுகளும், மகாதானங்களும், புண்ணிய தீர்த்தங்களும வேண்டுவதில்லை துக்கமாகியபந்தநாசஞ்செய்து யாவர்க்கும் இனிமையுள்ளவராயும், சநநமென்னுஞ் சமுத்திரத்தைக் கடப்பதற்குக் கப்பலாயுமிருக்கின்ற அறிவுநிறைந்தமகான்களை எவ்விதத்திலும் விரும்பவேண்டு—எ-ம.

இ-ம். ஞானாநந்தச் செல்வத்தைக் குறைவற நிறைவுசெய்கின்ற சாதுசங்கம் எவ்விடத்திலுஞ் சேரவேண்டு மென்பதாம். 20

## சாந்தியாதியுள்ளோர்க்குரிய இந்நூலின் பயனுரைத்தல்.

நிறைபவந்தீ ருபாய்நான்கா மிவர்களோடு
நிறைநட்பார் பவக்கடலை நீத்தாரன்றாய்

குறையுமன மோகந்தீ ரிச்சொற்கேட்பாய்
குணம்விரும்பா திச்சொல்லைக் குறிக்கொண்டோர்க்கு
மறையுணர்வு வலிதின்வருங் காமமாதி
மயக்கமறுஞ் சாற்கால வாவிநீர்போற்
கறைதவிர்ந்து மனந்தெளியுங் கவசத்தோரைக்
கணைகள்போன் மிடிமுதலாங் கவலைதாக்கா.

இ - ள். நிறைபவந்தீர் - நெருங்கிய சம்சாரத்தைத்தீர்க்கின்ற, உபாயம்-சாதனங்கள், நான்காம் - நால்வகையாம், இவர்களோடு - இந்நால்வர்களுடன், நிறைநட்பார் - மிகுந்த அன்புள்ளவர்கள், பவகடலை - சநநசாகரத்தை, நீத்தார் கடந்தார்கள், அன்றேய் அச் (சாந்தியாதி குணமுள்ள) இராமா, குறையும் - இளைக்கின்ற, மனமோகந்தீர்-மனோமயக்கந் தீர்க்கின்ற, இச்சொற்கேட்பாய் - இக்கதையைக் கேட்பாய், குணம் விரும்பாது-இதன் குணத்தைவிரும்பாமல், இச்சொல்லை - இக்கதையை (மாத்திரம்), குறிக்கொண்டோர்க்கு-குறிப்பாகக் கொண்டவர்களுக்கு, மறை - வேதத்தின்முடிவாகிய, உணர்வு-ஆத்ம ஞானமானது, வலிதின்வரும் - தானேவரும், காமமாதி - இராகத்துவேடமுதலான, மயக்கமறும் - மயக்கங்கள்தீரும், சாற்காலம் - சாற்காலத்தில், வாவிநீர்போல் - தடாகசலத்தைப்போல, கறைதவிர்ந்து - களங்கமற்று, மனந்தெளியும் - சித்தந்தெளியும், கவசத்தோரை - வச்சிர கவசந் தரித்தவர்களை, கணைகள்போல்-பாணங்கள்போல, மிடிமுதலாம் - தரித்திர முதலாகிய, கவலை - துன்பம், தாக்கா - தாக்காது—எ-று.

எ - து நெருங்கிய சம்சாரத்தைத்தீர்க்கின்ற சாதனங்கள் நால்வகையாம். இந்நால்வர்களுடன் மிகுந்த அன்புள்ளவர்கள் சநநசாகரத்தைகடந்தார்கள் அச் சாந்தியாதிகுணமுள்ளஇராமா! இளைக்கின்ற மனோமயக்கந் தீர்க்கின்ற இக்கதையைக்கேட்பாய் இதன் குணத்தை விரும்பாமல் இக்கதையைமாத்திரம் குறிப்பாகக் கொண்டவர்களுக்கு தேகத்தின் முடிவாகிய ஆத்மஞானமானது தானேவரும், இராகத்துவேட முதலான மயக்கங்கள் தீரும் சாற்காலத்தில் தடாகசலத்தைப்போல களங்கமற்று சித்தந்தெளியும் வச்சிரகவசந்தரித்தவர்களை பாணங்கள்போல தரித்திர முதலாகிய துன்பம் தாக்காது —எ-ம்.

இ-ம். சாந்தியாதிகுணங்களை அனுசரித்தவர்களுக்குக் காமாதிதோஷங்களைத்தீர்த்து ஆத்மஞானத்தை வலிதிற்கொடுக்கின்ற இக்கதைகளை அவசியஞ்சிரவணஞ்செய்யவேண்டும் என்பதாம். (21)

## நிராசையுள்ள விசாரணையின் பலன்கூறல்.

தருபயஞ்செய் மாயைமன மீராதாகுஞ்
 சமபாவந் தரங்கந்தீர் சாகரம்போன்
மருவலுறும் விசாரத்தான் மிக்கோர்க்கெல்லாம்
 வாரிதிபோ லாழமும்பொன் வரைபோன்மொய்ம்புந்
திருமதியின் குளிர்ச்சியும்வந் தெய்துநன்னூற்
 செய்கையினல் லோர்புந்தி செவ்வையான
கருமவழி மகிழ்வெய்து மறுவிலாத
 கற்புடையா டன்மனையிற் களிக்குமாபோல்.

இ-ள். தருபயஞ்செய் - நடுக்கம்வரச் செய்கின்ற, மாயை - மாயையினால், மனமீராதாகும் - (விசாரமுள்ள) மனம்வருந்தாதாம், தரங்கந்தீர் சாகரம்போல் - அலையில்லாத சமுத்திரம்போல, சமபாவம் - சமத்துவத்தை, மருவலுறும் - அடையும், விசாரத்தால் - விசாரணையினால், மிக்கோர்க்கெல்லாம் - மிகுந்தவர் அனைவர்க்கும், வாரிதிபோல்-சமுத்திரத்தினுழம்போல, ஆழமும்-கெம்பீரமும், பொன்வரைபோல் - மகாமேருவின் (வலிமையைப்) போல, மொய்ம்பும் - வலிமையும், திருமதியின் - சிறப்பாகிய பூரணசந்திரனைப்போல குளிர்ச்சியும் - சீதளமும், வந்தெய்தும் - வரும், நன்னூல்-ஆத்மஞானசாத்திரத்தின், செய்கையில் - ஒழுங்கில், நல்லோர் - நற்குணமுள்ளவர்கள், புந்தி- அறிவானது, செவ்வையான - (தனக்கு) அனுகூலமான (சமாதி முதலிய), கருமவழி - கன்மத்தில், மறுவிலாத கற்புடையாள் - களங்கமற்ற கற்புள்ளவள், தன்மனையில் - தனது அந்தப்புரத்தில், களிக்குமாபோல் - (தனது நாயகனையே தெய்வமாகக்) களிக்குமாறுபோல, மகிழ்வெய்தும் - இன்பமடைவன்—எ-று.

எ-து. நடுக்கம் வரச்செய்கின்ற மாயையினால் விசாரமுள்ள மனம் வருந்தாதாம். அலையில்லாத சமுத்திரம்போல சமத்துவத்தை அடையும் விசாரணையினால் மிகுந்தவர் அனைவர்க்கும் சமுத்திரத்தின் ஆழம்போல கெம்பீரமும் மகாமேருவின் வலிமையைப்போல வலிமையும், சிறப்பாகிய பூரணசந்திரனைப்போல சீதளமும்வரும். ஆத்மஞானசாத்திரத்தின் ஒழுங்கில் நற்குணமுள்ளவர்கள் அறிவானது தனக்கு அனுகூலமான சமாதி முதலிய கன்மத்தில் களங்கமற்ற கற்புள்ளவள் தனது அந்தப்புரத்தில் தனது நாயகனையே தெய்வமாகக் களிக்குமாறுபோல இன்பமடைவன்—எ-ம்.

இ-ம். ஆத்மவிசாரமுள்ள மனது மாயையினால் கெடாமற் சமபாவம் பொருந்தி கெம்பீர முதலான குணங்களோடு சற்கிருத்தியத்தில் மகிழ்ச்சியை யடையுமென்பதாம். (22)

## சீவன்முத்தன் ஆசாரச்சிறப்பு.

அற்புதங்க ளனைத்துமிலா விவனுக்கந்த
வருஞ்சீவன் முத்திபத மடைவின்முற்றுஞ்
சொற்பலனுக் கதீதனா யுலகர்போலத்
தோன்றிடுவோன் புந்தியிலோர் தொழில்பற்றுதோன்
நற்பயன்பொல் லாப்பயனாற் சுகஞ்சோர்வில்லோ
னண்ணியது புசித்தினிதி னன்றாய்நிற்போன்
பொற்புறுநல் லாசார விரோதமான
போகங்க டமிற்சிறிதும் பொருந்திடாதோன்.

இ-ள். அற்புதங்கள் அனைத்துமிலா - ஆச்சரியங்கள் இயாவுமில்லாத இவனுக்கு - (இராகமுடைய) இவனுக்கு, அந்த அருஞ்சீவன்முத்திபதம் - முன்சொன்ன அரிதான சீவன்முத்திஸ்தானம், அடைவின் முற்றும் - கிரமமாக முதிரும், சொற்பலனுக்கு அதீதனாய் - வசனத்துக்கெட்டாதவனாய், உலகர் போலத் தோன்றிடுவோன் - உலகத்தாரைப்போலக் காணப்படுவான், புந்தியில் - அறிவில், ஓர் தொழில் பற்றாதோன் - ஓர் கருமங்களிலும் பிடிப்பற்றவன், நற்பயன் - நல்ல பிரயோசனத்தினாலும், பொல்லாப்பயனால் - பொல்லாத பிரயோசனத்தினாலும், சுகஞ்சோர்வு இல்லோன் - சுகமுந்துக்கமுமில்லாதவன், நண்ணியது - கிடைத்ததை, இனிதின் - அன்பாக, புசித்து - அனுபவித்து, நன்றாய் நிற்போன் - சுகாசனத்திலிருப்பவன், பொற்புறு நல்லாசாரம் - அழகிய சத்துக்கள் ஒழுக்கத்துக்கு, விரோதமான - வேறாகிய, போகங்கள் தமில் - போகங்களிடத்தில், சிறிதும் பொருந்திடாதோன் - எவ்வளவுஞ் சம்பந்தப்படாதவன்—எ-று.

எ-அ. ஆச்சரியங்கள் இயாவுமில்லாத இராகமுடைய இவனுக்கு முன்சொன்ன அரிதான சீவன்முத்திஸ்தானம். கிரமமாக முதிரும் வசனத்துக்கு எட்டாதவனாய் உலகத்தாரைப்போலக் காணப்படுவான். அறிவில் ஓர்கருமங்களிலும் பிடிப்பற்றவன். நல்லபிரயோசனத்தினாலும், பொல்லாத பிரயோசனத்தினாலும் சுகமுந்துக்கமுமில்லாதவன். கிடைத்ததை, அன்பாக அநுபவித்து சுகாசனத்திலிருப்பவன், அழகிய சத்துக்கள் ஒழுக்கத்துக்கு வேறாகிய போகங்களிடத்தில எவ்வளவுஞ் சம்பந்தப்படாதவன்—எ-ம்.

ஓ ம். விசாரத்தினாற் கிரமமாக சீவன்முத்தி பதத்தைப் பெற்றவனும் மகான்கள் ஆசாரங்களுக்குப் பிரிதானபோகங்களை விரும்பக்கூடாது என்பதாம். (28)

## சீவன்முக்தி விசாரணையின் உயர்வும் அஃதுஇன்றிய இடத்துஇழிவுங் கூறல்.

ஒருகணமு மொழியாமற் சுகமதாகி
  யுடல்கடவா ஞுப்சான்றோ ருசாவினாலே
பெருகியவிவ் வீட்டுநெறி விசாரஞ்செய்வோன்
  பிறவிதீர் மெய்ஞ்ஞானம் பெற்றோனாகி
வெருளுமறு பிறப்பினுறு தாயர்யோனி
  விதனமுறான் சிறிதாகி மிளிர்போகத்தின்
மருளுமனப் பாவியராய் வெருள்வோர்தாயர்
  வயிற்றின்மலப் புழுவென்றே வழங்கற்பாலோர்.

இ-ள். ஒருகணமும் - ஒருக்ஷணமும், ஒழியாமல் - நீங்காமல், சுகமதாகி - இன்பத்தையுடையவனும், உடல்கடவானுப் - தேக (ஸ்மரணம்வரும்படி) யதிக்ரமியாமல், சான்றோர் உசாவினால் - சத்துக்களிடத்தில் வினாவுதலினால், பெருகிய - வளர்ந்த, இவ்வீட்டுநெறி - இம்மோக்ஷமார்க்கத்தை, விசாரஞ்செய்வோன் - விசாரிப்பவன், பிறவிதீர் - சநநந்தீர்க்கின்ற, மெய்ஞ்ஞானம்பெற்றோனாகி - ஆத்மஞானத்தை யடைந்தவனாய், வெருளு - மயங்குகின்ற, மறுபிறப்பின் - மறுசநநத்தை, உறு - அடைந்து, தாயர்யோனி - மாதாவினல்குலினால், விதனமுறான் - வேதனையைப் பொருந்தான், சிறிதாகி - அற்பமாய், மிளிர் - விளங்குகின்ற, போகத்தில் - விடையானுபவத்தில், மருளுமனம் - மயங்குகின்ற மனதையுடைய, பாவியராய் - பாவிகளாய், வெருள்வோர் - (முன்சொன்ன உபாயங்களில்) மருட்சியுடையவர்கள், தாயர் - மாதாவினுடைய, வயிற்றில் - கருப்பத்தி (லிருக்கின்ற), மலப்புழுவென்றே - மலத்திற் புழுத்த கிருமியென்றே, வழங்கற்பாலோர் - சொல்லுந்தன்மையை யுடையவர் — எ-று.

எ-து. ஒருக்ஷணமும் நீங்காமல் இன்பத்தை யுடையவனும், தேகஸ்மரணம் வரும்படி அதிக்கிரமியாமல் சத்துக்களிடத்தில் வினாவுதலினால் வளர்ந்த இம்மோக்ஷ மார்க்கத்தை விசாரிப்பவன், சநநந்தீர்க்கின்ற ஆத்மஞானத்தை யடைந்தவனாய் மயங்குகின்ற மறுசநநத்தை அடைந்து மாதாவினல்குலினால் வேதனையைப் பொருந்தான், அற்பமாய் விளங்குகின்ற விடையானுபவத்தில் மயங்குகின்றமனதை யுடைய பாவிகளாய் முன்சொன்ன உபாயங்களில் மருட்சியுடைவர்கள், மாதாவினுடைய கருப்பத்தி லிருக்கின்ற மலத்திற்புழுத்த கிருமியென்றே சொல்லுந்தன்மையை யுடையவர்—எ-ம்.

இ-ம்- சத்துக்கள் சகாயமாய் ஆத்மவிசாரஞ்செய்வதே ஞானசுகம் அதன்றிப் போகத்திற்செல்வதே சநநதுக்கமாதலால் இதைநீக்கி யதைப்பெறவேண்டுமென்பதாம், (24)

## விசாரணையின் அளவுகூறல்.

தருமவர்க டம்மிற்று மெய்தப்பட்ட
　தருமமொடு பொருடேடுஞ் சரிதையோராய்த்
துகடீர்தம் மிடத்திளைப் பாறிமாறுத்
　துரியமெனுஞ் சாந்திநிலை தோன்றுமட்டு
மிகுநூல்க ளுபசாந்தி யொழுக்கம்போத
　மிக்கவர்கூட் டாமிவற்றால் விசாரம்வேண்டு
நிகரிலா விசாரத்தாற் றோன்றிநிற்கு
　நிமலதுரி யத்தினிலை நிகழ்த்தற்பாற்றே.

இ - ள். தருமவர்கள் தம் - (அறிவில்) தகுந்த அச் சத்துக்கள் சங்கம், இல் - இல்லாதசமயத்தில், தருமமொடு - தருமத்துடன், தாமெய்தப்பட்ட - தாஞ் (சம்பாதித்) தடையப்பட்ட, பொருள் - திரவியங்களால், தேடும் -சேகரிக்கும், சரிதையோராய் - (ஆகாராதியைச்செய்யுந்) தொழிலையுடையோராய், துகள்தீர் தம்மிடத்தில் - குறறமற்ற ஆத்மாவில், இளைப்பாறி - விஸ்ராந்தியடைந்து, மாறு - நீங்காத, துரியமெனும் - துரியமென்கின்ற, சாந்திநிலை - உபசாந்திநிச்சயம், தோன்றுமட்டும் - உதயமாகிற பரியந்தம், மிகுநூல்கள் - மிகுந்த (ஆத்மஞான) சாத்திரங்களும், உபசாந்தி - உபசாந்த மனமும், ஒழுக்கம் - நன்னடையும், போதம் - (உயர்ந்த) அறிவும், மிக்கவர் கூட்டரவு - சாதுக்கள் சங்கமுமாகிய, இவற்றால் - இவைகளினுல், விசாரம்வேண்டும் - ஆத்மவிசாரஞ் செய்யவேண்டும், நிகரிலா - சமானமில்லாத, விசாரத்தால் - விசாரணையினல், தோன்றிநிற்கும் - உண்டாயிருக்கின்ற, நிமலதுரியத்தினிலை - நிமலதுரியநிச்சயத்தை, நிகழ்த்தற்பாற்று - சொல்லுந்தன்மையையுடையது—எ-று.

எ - து. அறிவில் தகுந்த அச்சத்துக்கள் சங்கம் இல்லாத சமயத்தில் தருமத்துடன் தாஞ்சம்பாதித் தடையப்பட்ட திரவியங்களால் சேகரிக்கும் ஆகாராதியைச்செய்யுந் தொழிலை யுடையோராய் குற்றமற்ற ஆத்மாவில் விஸ்ராந்தியடைந்து நீங்காத துரியமென்கின்ற உபசாந்தி நிச்சயம் உதயமாகிறபரியந்தம் மிகுந்த ஆத்மஞானசாத்திரங்களும், உபாசந்த மனமும், நன்னடையும், உயர்ந்த அறிவும், சாதுக்கள் சங்கமுமாகிய இவைகளினுல் ஆத்மவிசாரஞ் செய்யவேண்டும். சமானமில்லாத விசாரணையினுல் உண்டாயிருக்கின்ற நிருமலமான துரியநிச்சயத்தைச் சொல்லுந் தன்மையையுடையது—எ - ம்.

இ-ம். துரியஸ்தானமான விஸ்ராந்தி யுண்டாகிற பரியந்தம் விசாரணை வேண்டுமென்பதாம். (25)

## துரியநிலைபெற்றவன் அனுபவமுரைத்தல்.



பாவனைதீர் துரியமதி னிளைப்புநீங்கிப்
பவமென்னுங் கடல்கடந்து பாரஞ்சேர்ந்தோன்
சீவனென நின்றாலுஞ் சீவத்தன்மை
தீர்ந்தாலு மில்லறத்திற் செறிவுற்றாலுங்
கேவலஞ்சந் நியாசியா யிருந்தபோதுங்
கிளர்சுருதி மயக்கத்தாற் கிடைப்பட்டாலு
மியாவதுஞ்செய் துந்தவிர்ந்தும் பயனொன்றில்லை
யிமகிரியு முக்கடல்போ லியல்பினிற்பன்.

இ - ள். பாவனைதீர் - பாவனைநீங்கிய, துரியமதின் - துரியத்தில், இளைப்புநீங்கி - விஸ்ராந்தியடைந்து, பவமென்னும் - சநநமென்கின்ற, கடல்கடந்து - சமுத்திரத்தைத்தாண்டி, பாரஞ்சேர்ந்தோன் - மோக்ஷதீரத்தையடைந்தவன், சீவனெனநின்றாலும் - சீவத்தன்மையோடிருந்தாலும், சீவத்தன்மை தீர்ந்தாலும் - சீவத்தன்மைதீர்ந்து (சிவமாயிருந்) தாலும், இல்லறத்தில் - குடும்பத்தில், செறிவுற்றாலும் - பொருந்தினாலும் - கேவலம் - தனிமையான, சந்நியாசியாயிருந்தபோதும் - துறவியாயிருந்தபோதிலும், கிளர் - விளங்குகின்ற, சுருதிமயக்கத்தால் - சுருதி(ஸ்மிருதி)களின்பிரமையினால், கிடைப்பட்டாலும் - கட்டுப்பட்டாலும், யாவையும் - அனைத்தையும், செய்தும் - செய்தாலும், தவிர்ந்தும் - தவிர்ந்தாலும், பயனொன்றில்லை - (அவற்றாலாகிய) பிரயோசனமொன்றில்லை, இமகிரியுமுக்கடல்போல் - இமோர்ப்பவதமில்லாத சமுத்திரம் போல, இயல்பினிற்பன் - ஆத்மசுபாவத்திலிருப்பான்—எ-று.

ப - து. பாவனைநீங்கிய துரியத்தில் விஸ்ராந்தியடைந்து சநநமென்கின்ற சமுத்திரத்தைத்தாண்டி மோக்ஷதீரத்தை யடைந்தவன் சீவத்தன்மையோடிருந்தாலும், சீவத்தன்மைதீர்ந்து சிவமாயிருந்தாலும், குடும்பத்தில் பொருந்தினாலும், தனிமையான துறவியாயிருந்த போதிலும், விளங்குகின்றசுருதிஸ்மிருதிகளின் பிரமையினால் கட்டுப்பட்டாலும், அனைத்தையும் செய்தாலும், தவிர்ந்தாலும், அவற்றாலாகிய பிரயோசனமொன்றில்லை. இமோர்ப்பர்வத மில்லாத சமுத்திரம் போல ஆத்மசுபாவத்திலிருப்பான்—எ-ம்.

இ-ம். சநநசாகரத்தைக்கடந்து பாவனாதீதமான துரியத்தையடைந்தவனுக்கு வருணாச்சிரமஉசித ஆசாரங்களால் வருந்தருமாதருமங்கள் ஒன்றுமில்லை யென்பதாம். (26)

## தன்னையறியு முத்தியுந் திருஷ்டாந்தமும் வேண்டுமெனல்.

உவகமுள தேற்சிறுவ ருரையுங்கொள்க
 வொழிந்தயு னுரைசெயினுந் திரணமொப்ப
எகவிடு வாய்ஞான மெளிதுதோன்ற
 வியம்புமுவ மானமெலா மேகதேசம்
ஆகநினை வாயுருவ மற்றஞான
 மாகார மாமுவமைக் கண்டாதென்னு
மூகானு பவமில்லா விகற்பத்தாலே
 மொழிகுதர்க்க மறிவழிக்கு முயலவேண்டா.

இ - ள். உவகமுளதேல் - (சுருதிகுருசுவானு பவமென்னும்) முத்தியிருக்குமாயின், சிறுவரையுங்கொள்க - குழந்தைகள் வசனத்தையுங் கொள்ளக்கடவாய், ஒழிந்தது - (அந்த) யூகமில்லாததை, அயனுரைசெயினும் - பிரமதேவன் சொன்னாலும், திரணமொப்ப - துரும்புக்கொப்பாக, எகவிடுவாய் - தள்ளுவாய், ஞானம் (அகாரணமான பிரம) ஞானம், எளிது தோன்ற - எளிதிலுதயமாம்பொருட்டு, இயம்பும் - சொல்லப்பட்ட, உவமானமெலாம் - (காரணமுள்ள) உவமைகளியாவும் ஏகதேசமாக - ஏகதேசமென்று, நினைவாய் - கருதுவாய், உருவமற்ற நிராகாரமான, ஞானம் - உண்மை ஞானமானது, ஆகாரமாமுவமைக்கு - நாமரூபாகாரமாகிய திருஷ்டாந்தத்துக்கு, அண்டாதென்னும் - பொருந்தாதென்று சொல்லும், மூகர் - மூடர்கள், அனுபவமில்லா - பிரத்தியக்ஷ (ஞான) மில்லாத, விகற்பத்தால் - (தனது) பேத (ஞான) த்தினால், மொழிதர்க்கம் - சொல்லுகின்ற குதர்க்கயுத்தியானது, அறிவழிக்கும் - ஞானவிசாரஞ்செய்யும் அறிவைக்கெடுக்கும், முயலவேண்டாம் - (இராமா அதில) முயற்சிக்காதே—எ-று.

எ - து. சுருதி குரு சுவானுபவமென்னும் யுத்தியிருக்குமாயின் குழந்தைகள் வசனத்தையுங் கொள்ளக்கடவாய், அந்தயூகமில்லாததை பிரமதேவன் சொன்னாலும் துரும்புக்கொப்பாகத் தள்ளுவாய், அகாரணமான பிரமஞானம் எளிதிலுதயமாம்பொருட்டு சொல்லப்பட்டகாரணமுள்ள உவமைகளியாவும் ஏகதேசமென்றுகருதுவாய், நிராகாரமான உண்மைஞானமானது நாமரூபாகாரமாகிய திருஷ்டாந்தத்துக்கு பொருந்தாதென்றுசொல்லும் மூடர்கள் பிரத்தியக்ஷ ஞானமில்லாத தனது பேதஞானத்தினால் சொல்லுகின்ற குதர்க்கயுத்தியானது ஞானவிசாரஞ்செய்யும் அறிவைக் கெடுக்கும், இராமா அதில் முயற்சிக்காதே—எ-ம்.

இ-ம். அனுபவயுத்தியினால் உவமிக்கப்படாதவஸ்துவைஉவமானங்களைக் கொண்டறியக்கூடாதென்னுங் குதர்க்கயுத்திகளைத் தள்ளவேண்டு மென்பதாம்.

## ஞானமுண்டாவதற்கு ஏதுவு அறிவுத்தல்.



தந்திரியி லெழுமிசைபோற் சாந்திமுன்னுஞ்
சற்குணத்தின் ஞானமெழுந் தம்பிற்றுமாம்
இந்தவிரண் டுங்குளமு மலரும்போல
வினிதுவளர்ந் திடுமொக்க விரண்டுங்கற்கில்
வந்தணுகுந் தனித்தனியே யிரண்டுங்கற்கில்
வருபயனொன் றிலதாமிவ் வாய்மைகேள்வி
முந்துமறம் பொருளின்பங் கீர்த்திவாணாண்
முழுதளிக்கு மனத்தெளிவான் முத்திநல்கும்.

இ - ள். தந்திரியிலெழும் - நரம்பிலுண்டாகும், இசைபோல் - நாதம் போல, சாந்திமுன்னும் - சாந்திமுதலாகிய, சற்குணத்தில் - சற்குணங்களில், ஞானமெழும் - (ஆத்ம) ஞானமுதயமாம், தம்பிற்றுமாம் - ஞானத்தினுஞ் சற்குணங்களும்) அச் (சற்குணங்களான் ஞானமும் விளங்குவன) வாம், இந்தவிரண்டும் - இவ்விரண்டும், குளமு மலரும்போல - தடாகமும் தாமரைப்பூவும் போல, இனி துவளர்ந்திடும் - நன்றாய்வளரும், இரண்டும் - (சற்குணமுஞான முமாகிய) இவ்விரண்டையும், ஒக்க - சமமாக, கற்கில் - அப்பியாசஞ்செய்யில், வந்தணுகும் பிரமப்பிரயோசனம்) வரும், தனித்தனியே - வேறுவேறாக, இரண்டுங்கற்கில் - இவ்விரண்டையும் அப்பியாசிக்கில், வருபயனொன்றிலதாம்- வருகின்றபிரயோசன மொன்றுமில்லாததாய், இவ்வாய்மைகேள்வி - இவ்வுண் மையான (கதையின்) கேள்வியானது, முந்தும் அறம் - முதலான (சகலதிதி யாகமென்னுந்) தருமமும், பொருள் - (அழிவற்ற) பொருளும், இன்பம் - (நித்தி) யாநந்தமும், கீர்த்தி - (சத்துக்களாற்) புகழ்ச்சியும், வாணாள் - (சுக) சீவன முமாகிய, முழுதளிக்கும் - யாவையுங்கொடுக்கும், (அதுவன்றி) மனத்தெளி வால் - மனத்தினது தெளிவினால், முத்தி - (நிரதிசயாநந்தமென்னு) மோக்ஷத் தையும், நல்கும் - கொடுக்கும் — எ-று.

எ - து. நரம்பிலுண்டாகும் நாதம்போல சாந்திமுதலாகிய சற் குணங்களில் ஆத்மஞானமுதயமாம், ஞானத்தினாற் சற்குணங்களும், அச்சற்குணங்களான் ஞானமும் விளங்குவனவாம்; இவ்விரண்டும் தடாகமும் தாமரைப்பூவும்போல நன்றாய்வளரும் சற்குணமு ஞான முமாகிய இவ்விரண்டையும் சமமாக அப்பியாசஞ்செய்யில் பிரமபிர யோசனம் வரும் வேறுவேறாக இவ்விரண்டையும் அப்பியாசிக்கில் வருகின்ற பிரயோசனமொன்றும் இல்லாததாம் இவ்வுண்மையான கதையின்கேள்வியானது முதலான சகத் தியாகமென்னுந்தருமமும்

அழிவற்றபொருளும் நித்தியாநந்தமும் சத்துக்களாற் புகழ்ச்சியும் சுகசீவனமுமாகிய யாவையுங்கொடுக்கும் அதுவன்றி மனத்தினது தெளிவினால் நிரதிசயானந்தமென்னு மோக்ஷத்தையும் கொடுக்கும்.

இ-ம். சற்குணத்தையும் ஞானத்தையும் ஒன்றுக்கொன்று சம்பந்தமாகக் கற்கின்றதனு லுண்டாகுமிந்த அபரோக்ஷானுபவமுள்ள கதைகள் சீவன்முத்தியையும் விதேகமுத்தியையுங் கொடுக்குமென்பதாம். (28)

முமூட்சுப்பிரகரண முற்றிற்று.

ஆ. கதை 3-க்கு கவிதை-189.

# ஞானவிண்மகன் கதை.

அவதாரிகை.

ஞானவிண்மகன்கதை முற்பிரகாணத்திற் சாதன சதுஷ்டயத்தில் மூன்று சாதனமுநிறைந்து நான்காஞ்சாதனமான முமூட்சுவில் அதிதீவிரனை இராமனுக்கு அகராவித சொரூபத்தையும், அஃதடையுமுயற்சியையும், அதற்குக்கருவியான சுத்தவாசனையையும், அதற்குச்சகாயமான சாந்தியாதிகுணங்களையுஞ்சொல்லி அத்தூரியஞானம் பிரசன்னமாம்பொருட்டு சிருஷ்டிக்குமுன் சத்தாமாத்திரமாகியும், சிதோதயமாகியும், சதாநந்தமாகியும் பிரகாசிக்கின்ற பிரமத்தின் லீலாசங்கற்பத்திற் பிரதிபலனமான சைதன்னியமே சகத்துற்பத்தியென்றும், அதன் விளக்கமே சகஸ்திதியென்றும், அதனடக்கமே சகசாந்தமென்றும், இம்மூன்றிலுமொருதன்மையவாக விளங்குமதிஷ்டான சைதன்னியமே நிருவாணசுகமென்றும், சொல்லியஇன்னுன்குபிரகாணத்தாற் சர்வமும்பிரமமயமென்பதை உபதேசிக்கவேண்டி ஒன்பது கதைகளால் நிறைந்த உற்பத்திப் பிரகரணத்திற் சைதன்னியத்தி லுண்டான சங்கற்பஞ் சைதன்னியமேயென்பதுதோன்ற, முந்தின ஞானவிண்மகன் கதையை சைதன்னிய ரூவமாக நிரூபிக்கின்றார்.

## ஆத்மசொரூப பிரத்யட்ச நிருபணம்.

வேறு.

முத்தியை நயந்தோர்செய்கை மொழிந்தனஞ் சகந்தோன்றும்
அத்திற மினிதுகேட்பா யனுபவப் பேற்றினாலே
ஓத்துமுன் னில்லப்பேர்பெற்ற வுணர்வுநஞ் சீவனித்தைச்
செச்சொழி பமானகந்தை முன்னிலைச் சீவனென்ப,

இ - ள். முத்தியைநயந்தோர் - மோட்ச (மடைய) விரும்பின முமுட்சுக்களின், செய்கை - ஆசாரத்தை, மொழிந்தனம் - (நீயனுசரிக்கும்படி கிரமமாகச்) சொன்னோம், சகங்கள்தோன்றும் - (இனி) யுலகங்களுண்டாகின்ற, அத்திறம் - அக்காரணத்தை, இனிதுகேட்பாய் - நன்றாகச் சிரவணஞ் செய்யக்கடவாய், அனுபவப்பேற்றின்-சுவானுபூதியாகிய பெருமையினை, ஒத்து-பொருந்தினதாயும், முன்னிலை பிரத்தியட்சமென்று, பேர் - (மதஸ்தர்களிடப்பட்ட) நாமங்களை, பெற்ற-பெற்ற (தாயுமிருக்கின்ற), உணர்வு - (அபரோக்ஷ) ஞானமே, நஞ்சீவன் - நமது ஆத்மா, இத்தை - இச்சீவனை, சித்தொடு - பிரமஞானத்துடன், புமான் - கூடஸ்தனென்றும், அகந்தை - கருத்தத்துவ ஈஸ்வரனென்றும், முன்னிலைச்சீவனென்ப - பிரத்தியட்ச சிதாபாசனென்றுஞ் சொல்வர் — எ-று.

எ - து மோட்சமடைய விரும்பின முமுட்சுக்களின் ஆசாரத்தை நீயனுசரிக்கும்படி கிரமமாகச்சொன்னோம் இனி யுலகங்களுண்டாகின்ற அக்காரணத்தை நன்றாகச் சிரவணஞ்செய்யக்கடவாய், சுவானுபூதியாகிய பெருமையினை பொருந்தினதாயும், பிரத்தியட்சமென்று மதஸ்தர்களிடப்பட்ட நாமங்களைப் பெற்றதாயுமிருக்கின்ற அபரோக்ஷஞானமே நமது ஆத்மா இச்சீவனை பிரமஞானத்துடன் கூடஸ்தனென்றும், கருத்தத்துவ ஈஸ்வரனென்றும், பிரத்தியட்ச சிதாபாசனென்றுஞ் சொல்வர் — எ-ம்.

இ-ம். மதஸ்தர்களில் தார்க்கிகர், விடயசம்பந்த ஞாஞனுபவத்தை அனுபூதிபிரத்தியட்சமெனவும், சாங்கியர் புத்தி சம்பந்த ஞாஞனுபவத்தை பிரதிபத்தி பிரத்தியட்சமெனவும், மீமாம்சர்கள் ஆத்மானுபவ சம்பந்தஞானத்தை வேதனபிரத்தியட்சமெனவுங் கொண்டனர், அவைகளில் விடயத்தோடு ஞானங்கூடி அனுபவிக்குஞ் சமயத்தில் அவ்விரண்டையும் அழிந்தெழாநின்ற சத்தும், சமாதியில் அறிவில் அறிவுங்கூடி யனுபவிக்குஞ்சமயத்து அவ்விரண்டையும் அழித்தெழாநின்ற சிதாநந்தமும், சகத்தில் ஆநந்தத்தை ஆநந்தங்கூடி யனுபவிக்கும் சமயத்தில் அவ்விரண்டையுங் களைத்தெழாநின்ற நிரதிசயாநந்தமும் ஏகமாயிருக்கின்ற, துரியாதீதஞானமே அபரோட்ச ஞானமென்பார், அனுபவப்பேற்றினாலே யொத்து முன்னிலைப் பேர்பெற்ற உணர்வுநஞ் சீவனென்றார் வடநூற்பிரகாரம் அனுபவம் பிரதிபத்தி வித்தை முன்னிலைப்பேர் பெற்ற மேதை நஞ்சீவனிக்கு சித்தொடு புமான அகந்தை முன்னிலைத் திரிசயமென்ப வென்பபாடமோகி முன்னிலை - பிரத்தியட்சமென்றும், பேர்பெற்ற - (பேதவாதிகளால்) நாமமிடப்பெற்ற, அனுபவம் - விடயப்பிரத்தியட்சமும், வித்தை - வேதன பிரத்தியட்சமும், பிரதிபத்தி - ஞாதாபிரத்தியட்சமுமாகிய இத்திரி) புடிபிரத்தியட்சமாக விளங்குகின்ற, மேதை - ஞானமே, நஞ்சீவன் - நமது ஆதமா, இத்தை - இஞ்ஞானத்தையே, சித்தொடு - ஞானத்துடன், அகந்தை - அகம்பாவமுள்ள, புமான் - ஞாதாவென்றும், முன்

னிலைத்திரிசயமென்ப - பிரத்தியட்சஞேயமென்றுஞ் சொல்வார்கள் —எ-று. தார்க்கிகர்களும் பூர்வமீமாம்சர்களும் திரிபுடியை விடயமாகவுடைய ஞானமே பிரத்தியட்சஞானமென்றுரைத்தனர், அவைபேதமாகலின் கூடாவாம். நமது சித்தாந்தம் பிரத்தியட்சஞானமே சபசத்தார்த்தமாகலின் அவை அபேதமெனக்கொள்க.

இ-ம். சுயஞ்சைதன்னிய பிரத்தியட்சப்பிரகாசமே ஞான்குசைதன்னியமாகவும் திரிபுடியாகவும் தோற்றுகின்றது என்பதாம். (1)

## ஆத்மாவே சகமாக விளங்குகின்றதெனல்.

சீவனெவ் வறிவினாலே தெரிவுறு மதுவே தார்த்தந்
தாவுறும் விவிதமான சங்கற்ப விகற்ப முற்று
மேவிய மயக்கத்தாலே விரிந்தநீ ரலையாமாபோற்
பூவலயங்களாகிப் பொலிந்தது புகன்ற சீவன்.

இ-ள். சீவன் - சீவஞானவன், எவ்வறிவினால்-எந்த அறிவோடும், தெரிவுறும் - பிரகாசிக்கின்றானோ, அது - அந்தஞானமே, பதார்த்தம் - (வியோமாதியான) வஸ்துக்களாம், தாவுறும் - (தோன்றியழிதலில்) தாவாநின்ற, விவிதமான - நாநாவிதமான, சங்கற்பவிகற்பம் - சங்கற்பவிகற்பங்களை, உற்றுமேவிய - பொருந்தியிருக்கின்ற, மயக்கத்தால் - மயக்கத்தினால், விரிந்தநீர் - பரவியசலமே, அலையாமாபோல் - திரையானதுபோல, புகன்றசீவன் - சொல்லிய சீவஞானவன், பூவலயங்களாய் - பூமி (முதலான சகலவஸ்துக்க)ளாய், பொலிந்தது - பிரகாசித்தது—எ-று.

எ-து. சீவஞானவன் எந்த அறிவோடும் பிரகாசிக்கின்றானோ அந்த ஞானமே வியோமாதியான வஸ்துக்களாம், தோன்றியழிதலில் தாவாநின்ற நாநாவிதமான சங்கற்பவிகற்பங்களை பொருந்தியிருக்கின்ற மயக்கத்தினால் பரவிய சலமே திரையானதுபோல சொல்லிய சீவஞானவன் பூமிமுதலான சகலவஸ்துக்களாய் பிரகாசித்தது எ—ம.

இ-ம். ஆத்ம சங்கற்பமே சகம்போலத் தோற்றப்படுகின்றதாம். (2)

## ஆத்மாவேசகத்தாயினதற்குக் காரணம் யாதெனில்.

பண்ணுகாரணமொன்றில்லைப் படைக்குமுன் படைக்கவேண்டும்
என்னும்வீறிலையிறைந்தனே யிபைந்த காரணமதாகி
முன்னுறு பொருளாங்காட்சி மெய்ப்பொருட் டிரளகளாகித்
தன்னுள்ளே சகமாய்க்காற்றுட் சலனம்போ லறிவுட்டங்கும்.

இ - ள். படைக்குமுன் - சிருஷ்டிக்குமுன்னமே, பண்ணும் - சொல்லப்பட்ட, காரணமொன்றில்லை - அகாரணமான, தானே - சததாமத்திரமே, படைக்க வேண்டுமென்னும் லீலையினால் - சிருஷ்டிக்க வேண்டுமென்கிற லீலா சத்தியினால், இயைந்த காரணமதாகி - பொருந்தினகாரணமாய், முன்னுறு - பிரத்தியட்சமான, பொதுவாங்காட்சி - சாமானிய திருட்டியே, மொய்ப்பொருள் திரள்களாகி - நெருங்கிய பொருட்கூட்டங்களாகி (யிருக்கின்ற), சகமாய் - உலகமாய், தன்றுள் - தனதுவியாபகத்தி (லுண்டாய்), அறிவுள் - ஞானத்தில், காற்றுள் சலனம்போல - வாயுவினிடத்தில் சலன (சத்தியைப்போல), தங்கும் - தங்கியிருக்கும்—எ-று.

எ - து. சிருஷ்டிக்கு முன்னமே சொல்லப்பட்ட அகாரணமான சத்தாமாத்திரமே சிருஷ்டிக்கவேண்டுமென்ற லீலாசத்தியினால் பொருந்தினகாரணமாய் பிரத்தியட்சமான சாமானிய திருஷ்டியே நெருங்கிய பொருட்கூட்டங்களாகி யிருக்கின்ற உலகமாய் தனது வியாபகத்திலுண்டாய் ஞானத்தில் வாயுவினிடத்தில் சலனசத்தியைப்போல் தங்கியிருக்கும்—எ-ம்.

இ-ம். பரமபிரகாசமே சகத்தாதலின் அதற்கதுவே காரணமானதாம்.

பிரமங்காரணமாயிற் சகங்காரியமாம் அதனால் துவிதமும் அதன் வியாபகத்துட் சகம் விளங்குகின்றதெனின் விசிட்டாத்துவிதமுமாமேயெனின்.

---

எல்லையிற் றிசைகள் காலம் புறமெனு மிவற்றிற் கேற்ற
பலவுரு வாயெங் கெவ்வா றெழுந்ததப் படியங் காகுஞ்
செல்லுமிந் நெறியா லிந்தச் செகமெனும் பிரமகற்பம்
புலனுகா ரணமிலாத பொருளெனப் புந்தி செய்க.

இ - ள். எல்லையில் - அளவில்லாத, திசைகள் - திக்குகளும், காலம் - காலங்களும், புறமெனும் - பிரத்தியேகமென்கிற, இவற்றிற்கு - இச்சர்வ ஆத்மஞானத்துக்கு, ஏற்ற - இசைந்த, பலவுருவாய் - நானாவிதவடிவங்களாய், எங்கு எவ்வாறு எழுந்தது - எவ்விடத்து எப்படி யுண்டாயிற்றோ, அப்படி - அவ்வண்ணம், அங்காகும் - அவ்விடத்தாகும், செல்லும் இந்நெறியால் நடக்கின்ற இவ்விதத்தினால், இந்தச்செகமெனும் - இவ்வுலகமென்கின்ற, பிரமகற்பம் - பிரமகற்பிதமானது, புலனுகாரணம் இலாத - பொருந்திய (வேறு) காரணமில்லாத, பொருளென - வஸ்துவென்று, புந்திசெய்க - அறியக்கடவாய்—எ-று.

எ - து அளவில்லாத திக்குகளும், காலங்களும், பிரத்தியேகமென்கின்ற இச்சர்வ ஆத்மஞானத்துக்கு இசைந்த நானாவித வடிவங்

களாய் எவ்விடத்தெப்படி யுண்டாயிற்றோ அவ்வண்ணம் அவ்விடத்தாகும், நடக்கின்ற இவ்விதத்தினால் இவ்வுலகமென்கின்ற பிரமகற்பிதமானது பொருந்திய வேறுகாரணமில்லாத வஸ்துவென்று அறியக்கடவாய்—எ - ம்.

இ-ம். எவ்வெவ்விடங்களில் எப்படி யெப்படி ஸ்புரிக்கின்றதோ அப்படியப்படிதானே விளங்குகின்றபடியாற் சகங் காரியமாகாது, அதனாற் பிரமங்காரணமாகாது, இக்காரியகாரணமின்மையினால் துவிதமும், காரணத்துட் காரியம் வேறுபடாமல் அபேதமாயிருத்தலின் விசிட்டாத்துவிதமுமின்றித் தானே சகலமுமாய் விளங்குதலின் அத்துவிதமேயாமென்பதாம். (4)

## அப்படியாயிற் சகந்தோற்றப்படுகின்றதேயெனின்

இதனை முன் னிலைபாஞ்சீவ னிமைப்பினிற் படைத்ததாகும்
அதன்வடி வாகி நிற்கு மனுமான முதல வெல்லாம்
விதமுறு காட்சிமெய்ம்மை பந்தமஃ தின்மைவீடாந்
திதமறு மிதுபோமாறு செப்புதுந தெரியக்கேட்பாய்.

இ - ள். இதனை - இச்சகத்தை, முன்னிலையாஞ்சீவன் - பிரத்தியட்சமாகிய ஆத்ம (சைதன்யமே), இமைப்பினில் - நொடியளவில், படைத்ததாகும் - சிருஷ்டித்ததாகும், அனுமான முதல் எல்லாம் - அனுமான முதலிய (பிரமாணங்க) ளியாவும், அதன் வடிவாகி நிற்கும் - அப்பிரத்தியட்சத்தின் அம்சமாகவேவிளங்கும், விதமுறு - நானாவிதமாகிய, காட்சிமெய்ம்மை-திரியஸ்தினுண்மையே, பந்தம் - பந்தமாம, அஃதின்மைவீடாம் - அஃதில்லாமையே மோட்சமாம், திதமறுமிது - திரமில்லாதவித்திரி (ஸ்யமானது), போமாறு நீங்கும்படி, செப்புதும், சொல்லுவோம், தெரியக்கேட்பாய் - நன்றாய்த் தெரியக்கேள்—எ - று.

எ - து. இச்சகத்தை பிரத்தியட்சமாகிய ஆத்மசைதன்னியமே நொடியளவில் சிருஷ்டித்ததாகும். அனுமானமுதலிய பிரமாணங்களியாவும் அப்பிரத்தியட்சத்தின் அம்சமாகவே விளங்கும், நானாவிதமாகிய திரியஸ்தினுண்மையே பந்தமாம, அஃதில்லாமையே மோட்சமாம், திறமில்லாத வித்திரிஸ்யமானது நீங்கும்படி சொல்லுவோம் நன்றாய்த்தெரியக்கேள்—எ - ம்.

இ-ம். பிரத்தியட்சசைதன்யத்தைத் தவிரவேறு வஸ்துதோற்றவில்லையென்பதாம். (5)

## அப்படிப்பட்ட பிரமம் எப்பொழுது வெளிப்படு மெனின்

மண்டிய சுழுத்திதன்னில் வருகனுப் போவதென்னக்
கண்டன வுலகமெல்லாங் கற்பனை முடிவிற்போக
எண்டரு மலைவுதோற்றம் பெயரெலா மின்றியாழ்ந்து
தண்டலி லிருடேசின்றித் தனித்ததோ ருண்மைநிற்கும்.

இ - ள். மண்டிய சுழுத்திதன்னில் - மிகுந்தசுழுத்தி அவத்தையில், வருகனுப் போவதென்ன - வாராநின்ற சொற்பனங் கெடுவதுபோல, கண்டன உலகமெல்லாம் - காணப்பட்டனவாகிய சகங்களியாவும், கற்பனை முடிவிற்போக - கற்ப அந்தத்திற்கெட, எண் தருமலைவு - எண்ணத்தினலுண்டான சஞ்சலமும், தோற்றம் - உருவமும், பெயர் - நாமமு (மாகிய), எல்லாமின்றி- இயாவுமில்லாமல், ஆழ்ந்து - கெம்பீரமாய், தண்டலில் இருள் - தடையற்ற (அஞ்ஞான) அந்தகாரமும், தேசு - (விருத்திஞான) பிரகாசமும், இன்றி-இல்லாமல், தனித்தது - தானேதானுயிருக்கின்றதாகிய, ஓர் உண்மை - ஒப்பற்ற தத்துவஞானமானது, நிற்கும்-மிஞ்சியிருக்கும்-எ-று.

எ - து. மிகுந்த சுழுத்தி அவத்தையில் வாராநின்ற சொற்பனங் கெடுவதுபோல காணப்பட்டனவாகிய சகங்களியாவும் கற்பாந்தத்திற்கெட எண்ணத்தினுலுண்டான சஞ்சலமும் உருவமும், நாமமுமாகிய இயாவுமில்லாமல கெம்பீரமாய் தடையற்ற அஞ்ஞானந்தகாரமும விருத்திஞான பிரகாசமும இல்லாமல் தானேதானு யிருக்கின்றதாகிய ஒப்பற்ற தத்துவஞானமானது மிஞ்சியிருக்கும—எ-ம.

இ-ம். அத்தியந்த பிரளயத்திற் சங்கற்ப ரூபமான சகல சகங்களு நீங்கி ஞானஞ்ஞான ரகிதமான சுயஞ்சைதன்யமே விளங்குமென்பதாம். (6)

## இப்படிபபட்ட சுயஞ்சைதன்யத்திற்குச் சத்தியாதி நாமம் வந்ததென்னெனின்

சத்தியம பிரமமான்மா பரமுதற் சாற்றவேண்டி
இத்திறப் பெயர்மேலோரா லிடப்பெற்ற விந்தவான்மா
சித்திர மாகத்தானே வேறுபோற் றிகழ்ந்ததீது
மெத்திமேல் வருசீவப்பேர் மேவிய போலவாகும்.

இ - ள். சாற்றவேண்டி - வாக்கினுல்விவரிக்கும்பொருட்டு, சத்தியம்-சத்தியமும், பிரமம் - பிரமமும்; ஆன்மா - ஆத்மாவும், பரம்- பரமும், முதல்-முதலாகிய, இத்திறப்பெயர் - இத்தன்மையவாகிய நாமங்களை, மேலோரால் இட

ப்பெற்ற சத்துக்களால் தரிக்கப்பட்ட, இந்த ஆன்மா - இவ்வாத்மாவானது, சித்திரமாக - அதிசயமாக, தானே வேறுபோல்திகழ்ந்து - தான்றானே மற்றொன்றுபோற் பிரகாசித்து, தீதுமெத்தி - குற்றம்பொருந்தி, மேல்வரு- இனி வருவதான, சீவப்பேர் - சீவநாமத்தை, மேவியபோலவாகும் - பொருந்தினது போலவாகும் -எ-று.

எ - து வாக்கினால் விவரிக்கும்பொருட்டு சத்தியமும், பிரமமும், ஆதமாவும, பரமுமமுதலாகிய இததன்மையவாகிய நாமங்களை சத்துக்களாற் றரிககப்பட்ட இவவாதமாவானது அதிசயமாகத்தான்றானே மற்றொன்றுபோற் பிரகாசித்து குற்றம்பொருந்தி இனி வருவதான சீவநாமத்தைப் பொருந்தினது போலவாகும—எ-ம்.

இ-ம். ஆத்மாவானது மகான்களால விவகரிக்கும்பொருட்டு பரியாயநாமங்களைப்பெற்றுத் தானே சீவனைபபோல விளங்குமென்பதாம். (7)

அச்சைதன்யமே மனமாய் அதனாற் சகமெப்படியாயிற்றெனின்.

சீவனென் கின்றசொல்லும பொருளுமாய்ச் செறிந்தவான்மா
பாவனை மனனத்தாலே பருத்தெழு மனமதாகு
மேவரும பிரமந்தன்னில் வேலையி லலைபோல்வநது
தாவுறு முளளந்தானே நினைநதவா சகங்கற்பிககும.

இ - ள். சீவனென்கின்ற சொல்லும் - சீவனென்கிற சத்தமும், பொருளும - அதனாத்தமுமாய், செறிந்த வான்மா - நிறைந்த ஆத்மாவானது, பாவனைமனனத்தாலே - பாவித்தலுள்ள சங்கற்பததினால், பருத்தெழுமனமதாகும் - தடித்தெழாநின்ற மனமாம், மேவரும்பிரமந்தன்னில்-அகோசரமானபிரமத்தில், வேலையின் அலைபோ - சமுத்திரத்தின் திரையைப்போல, வந்து உண்டாகி, தாவுறுமுள்ளம-சஞ்சலிககின்றமனது தானே, நினைந்தவா-(தனது) சஙகறபப்படியே, சகஙகறபிககும் - உலகத்தை யுண்டாககும—எ-று.

எ - து. சீவனென்கின்ற சத்தமும் அதனருத்தமுமாய் நிறைந்த ஆத்மாவானது பாவித்தலுள்ள சங்கறபத்தினால்தடித்தெழாநின்றமனமாம், அகோசரமானபிரமத்தில் சமுததிரத்தின் திரையைப்போல உண்டாகி சஞசலிககின்ற மனது தானே தனது சங்கற்பப்படியே உலகததைபுண்டாக்கும்—எ-ம்.

இ-ம். சிவசப்தார்த்தமான ஆத்மஸ்மரணமே மனமாய்அதின்சஙகற்பமே சகமாயிற்றென்பதாம். (8)

## அப்படியாயின் வேறுபடாமேமெயெனின்.

உன்னுறு மனத்தினாலே யுலகமா மிந்திரசாலந்
துன்னுறு பணிகளென்னுஞ் சொற்பொருட் பொன்னையன்றி
அன்னிய மில்லைப்பொன்னாற் பணியென வறையவேண்டா
பன்னிய வுலகாஞ்சொற்குப் பரமன்றிப் பொருள்வேறில்லை.

இ - ள். உன்னுறுமனத்தினாலே - நினைக்கப்பட்டமனோ (சங்கற்பத்) தினாலே, உலகமாமிந்திரசாலம் - சகமென்னும் இந்திரசாலமானது, துன்னுறுஞ் - உண்டாயிருக்கும், பணிகளென்னுஞ்சொற்கு - ஆபரணமென்னுஞ் சத்தத்துக்கு, பொருள் - அருத்தமானது, பொன்னையன்றி - கனகத்தையல்லாமல், அன்னியமில்லை - வேறின்று, பொன்னால் - கனகத்தினால், பணியென - ஆபரணமென்று, அறையவேண்டா - சொல்லவேண்டாம், பன்னிய - சொல்லிய, உலகாஞ்சொற்கு - சகமென்னுஞ் சத்தத்துக்கு, பரமன்றி - பிரமமேயல்லாமல், பொருள் - அருத்தம், வேறில்லை - வேறின்று —எ-று.

எ - து. நினைக்கப்பட்ட மனோசங்கற்பத்தினாலே சகமென்னுமிந்திரசாலமானது உண்டாயிருக்கும், ஆபரணமென்னுஞ் சத்தத்துக்குஅருத்தமானது கனகத்தையல்லாமல் வேறில்லை கனகத்தினால் ஆபரணமென்று சொல்லவேண்டாம. சொல்லியசகமென்னுஞ் சத்தத்துக்கு பிரமமேயல்லாமல் அருத்தம் வேறில்லை--எ-ம்.

இ-ம். சகம் பிரமப்பிரகாசமேயன்றி வேறின்றென்பதாம். (9)

## அசத்தாகிய மனதினாற் சகம் எப்படி யுண்டாயிற்றெனின்.

செல்லுறுநதியாற்றோன்றுந் திரைகள்போன் மனத்திலுண்டாய்
இல்லையு மாகியுண்டு போலெழு மிந்தஞாலம்
அல்லல்செய் மோகம்பந்தந் தமமல மவித்தைமாயை
புல்லுசம் சாரமென்றே ஞானிகள் புகலப்பட்ட.

இ - ள். செல்லுறுநதியால் தோன்றும் - ஓடாநின்ற (கானல்) ஆற்றில் தோன்றும், திரைகள்போல் - அலைகளைப்போல, மனத்தில் - (அசத்தான) மனதில், உண்டாயில்லையுமாகி - உண்டாகாததா (யிருந்தும்), உண்டுபோலெழும் - உள்ளதுபோலத்தோற்றுகின்ற, இந்தஞாலம் - இச்சகமானது, அல்லல்செய் - துன்பத்தைச்செய்யாநின்ற, மோகம் - மோகமென்றும், அவித்தை - அவித்தையென்றும், மாயை - மாயையென்றும், புல்லுசம்சாரமென்று - சார்

ந்திருக்கின்ற சம்சாரமென்றும், ஞானிகள் - அறிஞர்களால், புகலப்பட்ட சொல்லப்பட்டன—எ-று.

எ - து. ஓடாநின்ற கானலாற்றில் தோற்றும் அலைகளைப்போல அசத்தானமனதில் உண்டாகாததாயிருந்தும், உள்ளதுபோலத்தோற்றுநின்ற இச்சகமானது துன்பத்தைச் செய்யாநின்ற மோகமென்றும, பநதமென்றும், தமதென்றும், மலமென்றும், அவித்தையென்றும், மாயையென்றும், சார்ந்திருக்கின்ற சம்சாரமென்றும் அறிஞர்களால் சொல்லப்பட்டன—எ-ம்.

இ-ம். இல்லாத கானற்சலத்தில் அலைதோன்றுவதுபோல இல்லாதமனதினுல் சகந்தோற்றுகின்றதாம். (10)

## பந்தரூபமும அதனிவிர்த்தியும் ஞானோதயமும் யாதெனின்.

வேறு.

பநதத்துருவங் கேட்டுணரிற் பாவீட்டுருவு மேல்வெளியாம்
இந்தசசகநீ நான்முதலா மிவைமெய்யென்றல் பந்தமதாம்
அந்தக்கருத்து நிற்பளவு மரிதாமுததிவித்தினிடைத்
தொந்தத்தருப்போற்காண்பவன்பாற் றோன்றுதுறையுங்காண்பவெலாம்.

இ-ள். பந்தத்துருவம் - (நாஞ்சொல்லாநின்ற) பந்தசொரூபத்தை, கேட்டுணரில் - (நீ) கேட்டறிவாயானுல, பாவீட்டுருவு - மேலாகிய மோட்சசொரூபம், மேல்வெளியாம் - இனி (நன்றாய்) வெளிப்படும், இந்தச்சகம் - இவ்வுலகத்தையும், நீநான்முதலாமிவை - நீ நான்முதலாகிய (இப்பேதங்களையும்) மெய்யென்றல் - உளதென்பது, பநதமதாம் - பந்தரூபமாகும், அந்தக்கருத்து நிற்பளவும் - அச் சங்கற்பமான (திரியஸ்யமிருக்கின்ற) பரியந்தம், முத்தி - மோட்சமானது, அரிதாம் - அரியதாம், வித்தினிடை - விதையினிடத்தில், தொந்தத் தருபோல்-அடங்கியிருக்கின்ற விருட்சத்தைப்போல, காண்பவன்பால் - திருஷ்டாவினிடத்தில், காண்பவெலாம் - திரிஸ்யங்களியாவும், தோன்றுதுறையும் - உண்டாகாமல் அடங்கியிருக்கும். - எ-று.

எ - து. நாஞ்சொல்லாநின்ற பநதசொரூபததை நீகேட்டறிவாயானுல் மேலாகிய மோட்சசொரூபம் இனி நன்றாய் வெளிப்படும் இவவுலகததையும நீநானமுதலாகிய இப்பேதங்களையும் உளதென்பது பந்தரூபமாகும் அச் சங்கற்பமான திரியஸ்யமிருக்கின்ற பரியந்தம் மோட்சமானது அரியதாம் விதையினிடத்தில் அடங்கியிருக்கின்ற விருட்சததைப்போல திருஷ்டாவினிடத்தில் திரியஸ்யங்களியாவும் உண்டாகாமலடங்கியிருக்கும்—எ-ம்.

இ-ம். விசாரிக்குமட்டுஞ் சகமாயிருந்து உடனே கெடுக்கின்ற பந்தாசத்திற் சுயஞ்சைதன்யம் பிரகாசிக்குமென்பதாம். சகபர்தமென்பதற்கு உதாரணம். சூதசம்கிதையில் சிவபூசாயோக காண்டத்தில் அறிவின் சொரூபத்துக்கு விதிரேகமாக யாதொன்று தோன்றுகின்றதோ வதுவே சம்சாரமென்று சொல்லப்படுகின்றது. (11)

## திருஷ்டாவிற்றிரியஸ்யமெப்படி யிருக்கின்றதெனின்.

பிறிவாம்பொருளின் மனத்திருந்த பேதப்படியே யுதரத்திற்
செறிவாஞ்சிருட்டிசமத்காரஞ்சிதைவற்றுண்டாய்ச்செறிவதுபோல்
அறிவாஞ்சரீரி யெனும்பொருளி னகன்றவுதரத்தங்குரமாய்
நெறியார்சகத்தின்வடிவமெலா நீங்காவியல்பாய்நிறைந்திருக்கும்.

இ — ள். பிறிவாம்பொருளின் - பிரிவுள்ள (வடபீசமுதலிய காரண)வஸ்துவின், உதரத்தில் - கருப்பத்தில். மனத்திருந்த அதற்குள்ளிருந்த, பேதப்படியே - (பத்திரபுட்பாதிகளான) பேதப்பிரகாரமே, செறியாஞ்சிருட்டி -நெருங்காநின்ற சிருட்டியின், சமத்காரம் - ஆச்சரியசத்தியானது, சிதைவற்று- கெடாமல், உண்டாய்ச்செறிவதுபோல் - உண்டாயிருப்பதுபோல, அறிவாஞ்சரீரியெனும் - ஞானாத்மா என்னும், பொருளின் - வஸ்துவினுடைய, அகன்ற உதரத்து - வியாபகமானகருப்பத்தில், அங்குரமாய் - முளையாகி, நெறியார் - முறையாகப்பொருந்திய, சகத்தின்வடிவமெலாம் - உலகத்தி(னுடை)ரூபமான சகமும், நீங்கா - நீங்காமல், இயல்பாய் நிறைந்திருக்கும் - சுபாவமாகநிறைந்திருக்கும்—எ-று.

எ - து பிரிவுள்ள வடபீசமுதலிய காரண வஸ்துவின்கருப்பத்தில் அதற்குள்ளிருந்தபத்திரபுட்பாதிகளான பேதப்பிரகாரமேநெருங்காநின்ற சிருஷ்டியின ஆச்சரிய சத்தியானது கெடாமலுண்டாயிருப்பதுபோல ஞானாத்மாவென்னும வஸ்துவினுடைய வியாபகமானகருப்பத்தில் முளையாகி முறையாகப் பொருந்திய உலகத்தினுடைரூபமான சகலமும் நீங்காமல் சுபாவமாக நிறைந்திருக்கும்—எ-ம்.

இ-ம். வித்தில் விருட்ச மிருப்பதுபோலத் திருஷ்டாவில் திரியஸ்யசத்திலடங்கியிருக்குமென்பதாம். (12)

## திருக்குவிலுண்டாஞ் சகலமுந் திருக்குவே என்பதற்குத் திருஷ்டாந்த மியாதெனின்.

பருவங்களிலேவிதை முளைக்கும் படிபோற்காணப்படுமவற்றிற்
கருதுங்கருத்துமுடலெடுக்குங் ககனத்துதித்தோன்கதையாதே

இருளுஞ்சகத்தினுற்பத்தி யெளிதாய்விளங்கு மிதுகேட்பாய்
பெருகுங்ககனம்பிறப்பிடமாய்ப் பிறந்தான்மறையோர்பெருங்குலத்தோன்.

இ - ள் பருவங்களில் - பக்குவமான காலதேசங்களில், விதை - வித்தானது, முளைக்கும்படிபோல் - முளைக்கின்ற தன்மைப்போல, காணப்படுமவற்றை - திரிஸ்யத்தை, கருதுங்கருத்தும் - சங்கற்பிக்கின்றமனதும், உடலெடுக்கும் - (தேவதிரியக்குமுதலிய) வடிவமாம், ககனத்துதித்தோன் கதையாலே - ஞானாகாயத் துதயமானவன் சரிதையினால், இருளுஞ்சகத்தினுற்பத்தி - அந்தகாரமயமான சகசிருஷ்டி, எளிதாய்விளங்கும் - வெகுவா (யுனக்குப்) பிரகாசிக்கும், இது கேட்பாய் - இக்கதையை (நீ) கேட்கக்கடவாய், மறையோர் பெருங்குலத்தோன் - சிறந்தபிராமவமிசத்தையுடையவன், பெருகுங்ககனம் - வியாபகமான (ஞானா) காசமே, பிறப்பிடமாய் - தானுண்டாவதற்குக் காரணமாக, பிறந்தான் - ஞானவிண்மகனுண்டானார் - எ - று.

எ - து. பக்குவமான காலதேசங்களில் வித்தானது முளைக்கின்ற தன்மைபோல திரிஸ்பத்தை சங்கற்பிக்கின்ற மனதும் தேவதிரியக்குமுதலிய வடிவமாம் ஞானாகாயத்து உதயமானவன் சரிதையினால் அந்தகாரமயமான சகசிருஷ்டி வெகுவாயுனக்குப் பிரகாசிக்கும் இக்கதையை நீகேட்கக்கடவாய் சிறந்தபிரம வமிசத்தையுடையவன் வியாபகமான ஞானாகாசமேதானுண்டாவதற்கு காரணமாக ஞானவிண்மகனுண்டானார் — எ - ம.

இ-ம் ஆத்மவுல்லாசத்தில் அகன் சுபாவமாயுண்டான சகலமும் ஆத்மசாட்சாத்காரமாக வெளிப்படுதற்கு இஞ்ஞானவிண்மகன் கதையேதிருஷ்டாந்த மென்பதாம். (13)

## ஞானபுருடன் சரிதையை விளவுதல்.



ஒழிவிற்றியானமுயிர்க்கிதம்வீறுடையோ னெடுநாளுய்ந்திருப்ப
இழியுமுலகைவிழுங்குறுநா மிவனைவிழுங்கா திருந்தமையென்
அழிவுசெய்யுமெனதுவலி யழுந்துங்கல்லின் வான்முளைபோற்
கழியமழுங்கிற்றெனவெண்ணிக் காலனவனூர்கடி தணைந்தான்.

இ - ள். ஒழிவிற்றியானம் - பிரிவற்றசமாதியும், உயிர்க்கிதம் - சீவகாருண்ணியமும், வீறு - தருமமுமாகிய இவைகளை, உடையோன் - உள்ளவனாகிய (ஞானவிண்மகன்), நெடுநாளுய்ந்திருப்ப - அநேககாலஞ் சீவித்திருக்க (மனவில்), இழியுமுலகை - ஈனமாகு (மிச் சகத்தை, விழுங்குறுநாம் - புசிக்கின்றயாம், இவனைவிழுங்காதிருந்தமையென் - இவனைப் புசிக்காமலிருந்ததென்ன, அழிவுசெய்யுமெனதுவலி - (அனைத்தையு)ஞ்சிப்பிக்கு மெனது வல்லபம், கல்லில் - பாடாணத்தில், அழுந்து - அழுந்துகின்ற, வான்முளைபோல் -

கத்திமுனையைப்போல, கழியமழுங்கிற்றென மிகவுமழுங்கிப்போயிற்றென்று, எண்ணி - நினைத்து, காலன் - காலனானவன். அவனூர் கடிந்து அணைந்தான் - அவனூரிற் சீக்கிரத்திற் சேர்ந்தான் — எ-று.

எ - து பிரிவற்ற சடாதிபும் சிவகாருண்யமும் தருமமுமாகிய இவைகளை உள்ளவனாகிய ஞானவிண்மகன் அநேககாலஞ் சீவித்திருக்குமளவில் ானமாகும் இசசகத்தை புசிக்கின்றயாம் இவனைப்புசிக்காமலிருநததென்னே? அனைதையு நசிப்பிககு மெனதுவல்லபம் பாடாணத்தில் அழுநதுகின்ற கததிமுனையைபபோல மிமவுமழுங்கிப்போயிற்றென்று நினைத்துககாலனானவன் அவனூரிற் சீக்கிரத்திற் சேர்நதான- —எ - ம

இ - ம். காலன் வேறுபடாதவனை வேறுபடுத்தச்சென்றதாம். (14)

அப்புருடன் அகப்பட்ட பரிசு வெனின்.

வினையின்முயல் வார்தங்கரு மமவிடுவ ரண்டோ வெனமறையோன்
மனையின்வாயிற புகுமளவின் மண்டுமூழிக் கடுங்கனல்போற்
கனையுங்கடுநீ யெரித்திடவுங் கடிதுபுகுந்து கண்டவனைப்
பனைசெய்கரமா யிரத்தாலும் பற்றியிழுத்துப் பயனற்றான்.

இ — ள். வினையின்முயல்வார் - (ஒரு) தொழிலில் முயற்சிப்பவர்கள், தன் கருமம் - தனதுதொழிலை, விடுவதுண்டோவென - விட்டுவிடுவார்களோ (என்று, மறையோன் - பிராமணனுடைய, மனையின்வாயில் - வீட்டுவாயிலில், புகுமளவில் - (காலனானவன்) புகுந்தமாத்திரத்தில், மண்டும் - மிகுகின்ற, ஊழிக்கடுங்கனல்போல - கொடியவூழித்தீயைப்போல, கனையும் - சத்தியாநின்ற, கடுநீ - (அவரது மகிமையென்னுங்) கொடிய தீயானது, எரித்திடவும் - எரிக்கவும், கடிது - (அதைப்) பிளந்துகொண்டு, புகுந்து - பிரவேசித்து, கண்டவனை - பார்த்த அப்புருடனை, பனைசெய - பனைகொப்பாகிய, கரமாயிரத்தாலும - ஆயிரங்கைகளினாலும, பற்றியிழுத்து - பிடித்திழுத்து, பயனற்றான் - பிரயோசனம் பெறாதவனாயினன் எ-று.

எ - து. கருதொழிலில் முயற்சிப்பவர்கள் தனது தொழிலை விட்டுவிடுவார்களோவென்று பிராமணனுடைய வீட்டுவாயிலில் காலனானவன் புகுந்தமாத்திரத்தில் மிகுகின்ற கொடிய ஊழித்தீயைப் போல சத்தியாநின்ற அவரது மகிமையென்னும கொடிய தீயானது எரிக்கவும் அதைப்பிளந்துகொண்டு பிரவேசித்து பார்த்த அப்புருடனை பனைக்கொப்பாகிய ஆயிரங்கைகளினாலும் பிடித்திழுத்து பிரயோசனம் பெறாதவனாயினன்— எ - ம்.

இ-ம். காலாதீதனுகையாற் காலனாற்பிடிக்கப்படவில்லையென்பதாம். (15)

## இயமனுத்தியுரைத்தல்.

அவன்சங்கற்ப புருடனைப்போ லசைவற்றிருப்ப வடற்பரிதாய்
இவனங்ககன்றுநமன்பாற்போயிவ்வா றுரைப்பயமனுரைப்பான்
புவனங்கருமத் தாலன்றிப் பொன்றாதுதவிப் பொருளவையே
தவறும்படிசெய் கருமங்கள் சகாயமாகச் செல்கென்றான்.

இ - ள். அவன் - அந்தஞானவிண்மகன். சங்கற்பபுருடனைப்போல் - சங்கற்பத்தையே (வடிவாயுள்ள) புமானைப்போல, அசைவற்றிருப்ப - அசையாமலிருக்க, அடற்பரிதாய் - வெல்லக்கூடாமல், இவனங்ககன்று - இக் காலன் அவ்விடத்தி (னின்று) நீங்கி, நமன்பாற்போய் - யமனிடத்திற்சென்று, இவ்வாறுரைப்ப - இங்கே நடந்தபிரகாரஞ்சொல்ல, யமனுரைப்பான் - (அதற்கு) யமன் சொல்லுவான், புவனம் - (கன்மத்தினுலுண்டாகிய) சகத்து - கருமத்தாலன்றி - கன்மத்தினுல் அல்லாமல், பொன்றாது - நசியாது, உதவிப்பொருள் (நமக்குச்) சகாயமானவஸ்துக்கள், தவறும்படிசெய் - மரிக்கும்படி (முன்) செய்த, கருமங்கள் - கன்மங்களேயாம், அவையே - அக்கன்மங்களையே, சகாயமாக - கொல்வதற்குச் சகாயமாககொண்டு, செல்கென்றான்-போவென்று சொன்னான்—எ-று.

எ - து. அந்தஞானவிண்மகன் சங்கற்பத்தையே வடிவாயுள்ள புமானைப்போல அசையாமலிருக்க வெல்லக்கூடாமல் இக்காலன் அவ்விடத்தினின்று நீங்கி யமனிடத்திற்சென்று இங்கே நடந்த பிரகாரஞ் சொல்ல அதற்கு யமன் சொல்லுவான். கன்மத்தினுலுண்டாகிய சகத்து கன்மத்தினு லல்லாமல் நசியாது, நமக்குச் சகாயமான வஸ்துக்கள் மரிக்கும்படி முன்செய்த கன்மங்களேயாம். அக்கன்மங்களையே கொல்வதற்குச் சகாயமாகக் கொண்டுபோவென்று சொன்னான்—எ - ம்.

ப-ம். கன்மத்தினுலுண்டான தேகங் கன்மத்தினுற் கெடுமென்பார், புவனங் கருமத்தாலன்றிப் பொன்றாதென்றார்,

இ-ம். தேகத்தைக்கெடுத்தற்கு முன்னுள்ள சஞ்சிதகன்மத்தானியமித்த மரணகன்மத்தைப்பரிசோதித்ததைக்கொண்டு செல்லவேண்டுமென்பதாம்.

### கருமம அகப்பட்டதாவெனின்.



காலனிதுகேட் டவன்செய்த கருமநதேடி நதியோடை
ஞாலந்திசைக ளெலாமுழன்று நண்ணுதாக மீனடெய்திச்
சீலநமனுக் குரைசெய்யச் சிந்தித்தவனு முரைசெய்வான்
மூலவிசும்பிற் பிறத்தலினுன் முடிவிலவனும் விசும்பன்றே.

இ - ள். காலனிதுகேட்டு - காலன் இவ்வசனத்தைக்கேட்டு, அவன் செய்த - அப்பிராமணன் (முன்) செய்த, கருமந்தேடி - கருமங்களைத்தேடி, நதி - தீர்த்தங்களிலும், ஓடை - தடாகங்களிலும், ஞாலம் - பூமண்டலத்திலும், திசைகளெலாம் - திக்குகளனைத்திலும், உழன்றும் - அலைந்தும், நண்ணுதாக - அகப்படாததாக, மீண்டெய்தி - திரும்பிவந்து, சீலமனுக்குரைசெய்ய - அறிவுள்ள யமனுக்குச்சொல்ல, சிந்தித்து - (வெகுநேரம்) ஆலோசித்து, அவனும் - அந்தயமனும், உரைசெய்வான் - சொல்லுவான், மூலவிசும்பில் - கேவலாகாயத்தில், பிறந்தவிளுல் - உதித்ததினுல், முடிவிலவனும் - நசிப்பில்லாத அப்பிராமணனும், விசும்பன்றே - ஞானுகாயமல்லவோ-எ-று.

எ - து. காலன் இவ் வசனத்தைக்கேட்டு அப்பிராமணன் முன் செய்த கருமங்களைத்தேடி தீர்த்தங்களிலும் தடாகங்களிலும் பூமண்டலத்திலும் திக்குகளனைத்திலும், அலைந்தும் அகப்படாததாக திரும்பிவந்து அறிவுள்ள யமனுக்குச்சொல்ல வெகுநேர மாலோசித்து அந்த யமனும் சொல்லுவான். கேவலாகாயத்தில் உதித்ததினுல் நசிப்பில்லாத அப் பிராமணனும் ஞானுகாயமல்லவோ—எ-ம்.

ப-ம். திரியஸ்பலனைக்குறித்து உலகத்திற் பேதபாவத்தாற் செய்யுங் கன்மங்களைப் பரிசோதித்தாரென்பார், இவன்செய்யுங் கருமந்தேடி, நதியோடையுழன்றென்றும், முற்பவத்திற்செய்த கன்மங்கள் இப்பவத்தில் அனுபவித்தற்குப் புவனத்திற் பரிணமித்திருக்கின்றதோவெனப் பரிசோதித்தாரென்பார், ஞாலந்திசைகளெல்லாம் உழன்று என்றுங்கூறினர்.

இ-ம். சஞ்சிதவினைகாரணமாக வுதியாமல் ஞானங் காரணமாகவுதித்தலாற் பூர்வகன்மம் அகப்படவில்லை என்பதாம். (17)

## ஆனலவன் காரியப்படுத லின்றேவெனின்.

விண்ணிற்பிறந்தோன் காரணத்தை மேவாமையினுற் கருமங்கள்
பண்ணிற்றிலன்கா ரணமிலதேற் பண்ணுங்கரும முளதாமோ
எண்ணற்குரிய சகாயமுனக் கிலதாமென்று யமன்கூற
நண்ணற்கரிதென் றுயர்கால னடந்தான்மனையி னனிவியந்து.

இ - ள். விண்ணிற்பிறந்தோன் - ஞானுகாயத்துதித்த பிராமணன், காரணத்தை - (சககாரி நிமித்த) காரணத்தை, மேவாமையினுல் - பொருந்தாதலுல், கருமங்கள் - கருமங்களை, பண்ணிற்றிலன் - செய்துஞ் செய்தானில்லை, காரணமிலதேல் - காரணமேயில்லையாயின், பண்ணும் - அவன்செய்கின்ற, கருமமுளதாமோ - கருமங்களுள்ளதாமோ, எண்ணற்கு - (நீ) நினைப்பதற்கு, உரிய - உரித்தான, சகாயம் - அவனது சஞ்சிதத்தால் விதிக்கப்பெற்ற (மரணகருமமென்னும்) உதவியானது, உனக்கிலதாமென்று - உனக்கில்லையென்று,

யமன்கூற - தருமராசன்சொல்ல, நண்ணற்கரிதென்று - அவனைக்கிட்டக்கூடாதென்று, உயர்காலன் - மேன்மையாகிய காலனானவன், மனையில் - தனதிடத்தில், நனிவியந்து - மிகவுமதிசயித்து, நடந்தான் - போயினான்—எ று.

எ - து. ஞானகாயத் துதித்த பிராமணன் சககாரிநிமித்த காரணத்தை பொருந்தாததனால் கருமங்களைச் செய்துஞ் செய்தானில்லை. காரணமேயில்லையாயின் அவன்செய்கின்ற கருமங்களுள்ளதாமோ? நீ நினைப்பதற்கு உரித்தான அவனது சஞ்சிதத்தால் விதிக்கப்பெற்ற மரணகருமமென்னும் உதவியானது உனக்கில்லையென்று தருமராசன்சொல்ல அவனைக்கிட்டக்கூடாதென்று மேன்மையாகிய காலனானவன் தனதிடத்தில் மிகவுமதிசயத்துப்போயினான்—எ-ம்.

இ-ம். சிதாகாயத்தினிமித்த காரணமுஞ் சககாரி காரணமுமின்றி உபதானகாரணமாத்திரமா யுதித்தவனுதலாற் காரியமும் காரணமும் காரணகாரியமும் மரணகன்மமுமின்றி நித்தியனாயிருப்ப னென்பதாம். (18)

## பிரமாவை இருப்புருடனாகக் கூறிற்றேவெனின்.

---

என்னவுரைத்தமுனிமுகம்பார்த் திராமனுரைப்பானீயிசைத்த
அன்னான்சுயம்பு விஞ்ஞான மங்கமானே னொன்றாகத்
துன்னநின்றோன்பிரமனெனத் துணிந்தேனெனலுந் தூயமுனி
முன்னமுரைத்தஅயன்றனையே மொழிந்தகதையின்முறைகேளாய்.

இ - ள். என்னவுரைத்த - (இப்படி) யென்றுசொல்லிய, முனிமுகம்பார்த்து - (வசிட்ட) முனியின் வதனத்தைபபார்த்து, இராமனுரைப்பான் - இராகவர்சொல்வார், நீயிசைத்த - தேவரீர் அனுக்கிரகித்த, அன்னான் - அந்த ஞானவிண்மகனை, சுயம்பு - தானேயுண்டானவனும், விஞ்ஞானம் - விஞ்ஞானமே, அங்கமானேன் - வடிவமானவனும்,ஒன்றாகத் துன்னநின்றோன் - ஒன்றாக நிறைந்திருக்கின்றவனுயு (மிருக்கின்ற), பிரமனென - பிரமாவாக, துணிந்தேனெனலும் - நிச்சயித்தேனென்று சொல்லவும், தூய்முனி - பரிசுத்தமாகிய (வசிட்ட) முனி, முன்னமுரைத்தது - முன்னஞ்சொல்லியது, அயன்றனையே - பிரமாவையே, மொழிந்தகதையின் - சொல்லிய கதையின், முறைகேளாய் - முறைமையை (இராமா நீ) கேடபாய்—எ-று.

எ - து. இப்படியென்று சொல்லிய வசிட்டமுனியின் வதனத்தைப்பார்த்து இராகவர் சொல்லுவார். தேவரீர் அனுக்கிரகித்த அந்த ஞானவிண்மகனை தானே யுண்டானவனும் விஞ்ஞானமேவடிவமானவனும் ஒன்றாக நிறைந்திருக்கின்றவனுயு மிருக்கின்ற பிரமா

வாக நிச்சயித்தேனென்று சொல்லவும் பரிசுத்தமாகிய வசிட்ட முனி முன்னுஞ் சொல்லியது பிரமாவையே சொல்லிய கதையின்முறைமையை இராமா நீ கேட்பாய்—எ-ம்.

இ-ம் பிரமத்திலுண்டானபிரமனையே ஓர்புருடனாக உருவகப்படுத்தினதாம். (19)

## காலன் பிரமனையழிக்கத் துணிந்தானோ வெனின்.



செயல்செய்காலன் யமனுடனே செப்பும்வழக்குத்தாமுணர்ந்தேம்
உயருமனுவி னந்தத்தி லுலகமெல்லா முண்டெழுந்த
அயர்வில்கால னயன்றனையு மடர்ப்பமுயன்ற வப்போதில்
துயரில்காலன் முகநோக்கித் துங்கயமனுங் கிவைசொன்னான்.

இ - ள். செயல் - (நாசத்) தொழிலை, செய்காலன் - செய்யாநின்ற காலனானவன், யமனுடனே செப்பும்வழக்குத்தாம் - யமனுடனே சொல்லும் ஞாயங்களை, உணர்ந்தேம் - யாமறிந்தோம், உயருமனுவின் - மேலானமனுவினுடைய, அந்தத்தில் - முடிவில், உலகமெல்லாம் - சகங்களனைத்தையும், உண்டெழுந்த - புசித்தெழுந்த, அயர்வில்காலன் - சோம்பலில்லாதகாலனானவன், அயன்றனையும் - பிரமாவையும், அடர்ப்ப-செகுத்தற்கு, முயன்ற அப்போதில்-எத்தனஞ்செய்த அச்சமயத்தில், துயரில் - துக்கமில்லாத, காலன்முகநோக்கி-காலனது முகத்தைப்பார்த்து, துங்கம் - உயர்வாகிய, யமன் ஆங்குஇவைசொன்னான் - இமயன் அங்கு இவைகளைச்சொன்னான் —எ-று.

எ - து. நாசத்தொழிலைச் செய்யாநின்ற காலனானவன் யமனுடனே சொல்லும் ஞாயங்களை யாமறிந்தோம், மேலான மனுவினுடைய முடிவில் சகங்களனைத்தையும் புசித்தெழுந்த சோம்பலில்லாத காலனானவன் பிரமாவையும் செகுத்தற்கு எத்தனஞ் செய்த அச்சமயத்தில் துக்கமில்லாத காலனதுமுகத்தைப்பார்த்து உயர்வாகிய இயமன் இவைகளைச் சொன்னான்—எ-ம்.

இ-ம். பிரமனது சொரூபத்தை யுணராமற் கெடுக்க நினைத்தது என்பதாம். (20)

## ஆனால் அவர் சொரூபமியாதெனின்



நிகரில்பரம வாகாய நிமலவடிவாய் நிற்கின்ற
இகலிலயனை யடர்த்தற்கென் றெண்ணுமெண்ண மெளிதாமோ

திகழும்வெளியே வடிவாகிச் செறிந்தபூத வடிவிலனும்
புகல்சங்கற்ப புருடனைப்போற் பொன்றுதயனும்பொலிந்திடுமால்.

இ - ள். நிகரில் - சமானமில்லாத, பரமஆகாயம் - பிரமஆகாயமே, நிமல வடிவாய் - நிருமல ஆகாரமாய், நிற்கின்ற - இருக்கின்ற, இகலில் அயனை - எதிரில்லாதபிரமாவை, அடர்த்தற்கென்று - அழித்தற்கென்று, எண்ணும்எண்ண மெளிதாமோ - நினைக்கின்ற நினைவு எளிதின் முடியுமோ, திகழும் - பிரகாசிக்கின்ற, வெளியேவடிவாகி - ஆகாயமேவடிவமாய், செறிந்த நெருங்கிய, பூதவடிவில்-பூதவடிவமில்லாதவனாய், புகல் - (முன்)சொல்லிய, சங்கற்பபுருடனைப்போல் - சங்கற்பபுமானைப்போல, பொன்றாது - நசியாமல், அயனும் - பிரமதேவனும்,பொலிந்திடும் - பிரகாசிப்பான்—எ-று.

எ - து. சமானமில்லாத பிரமாகாயமே நிருமலாகாரமாயிருக்கின்ற எதிரில்லாத பிரமாவை அழித்தற்கென்று நினைக்கின்ற நினைவு எளிதின் முடியுமோ? பிரகாசிக்கின்ற ஆகாயமே வடிவமாய் நெருங்கிய பூதவடிவமிலலாதவனாய் முன்சொல்லிய சங்கற்ப புமானைப்போல்நசியாமல் பிரமதேவனும் பிரகாசிப்பன்—எ-ம்.

இ-ம். பஞ்சபூதவடிவமின்றிச் சிதாகாயமே வடிவமாகப் பிரகாசிக்கின்றதாம். (21)

ஆயின் வேறு வடிவமின்றோவெனின்.



ஞானவிண்ணாய்க் கேவலமாய் நடுவுமுடிவு முதலில்லா
தானசுயம்பு வாம்பிரம மடுத்ததனது மனவசத்தான்
மானமுருவ முடையதுபோன் மன்னுபுமான்போல் வயங்கிடுமால்
ஈனுமலடி மகன்போல விதுமெய்ம்மையினால் வடிவிலதாம்.

இ - ள். ஞானவிண்ணாய் - சிதாகாயமாகியும், கேவலமாய் - தனிமையாகியும், முதல் - முதலும், நடுவும் - மத்தியும், முடிவும்-அந்தமும், இல்லாது - இல்லாததான, சுயம்புவாம் - சுயம்பாயிருக்கின்ற, பிரமம் - பிரமமானது, அடுத்த - அடுத்திருக்கின்ற, தனதுமனவசத்தால் - தனது சங்கற்பவசத்தினால், மானமுருவம் உடையதுபோல் - பிரமாணமான சரீரம் உடையதுபோலவும், மன்னுபுமான்போல் நிலையாகிய புருடனைப்போலவும், இதுமெய்ம்மையினால் - இந்தஉண்மையினால், வயங்கிடும் பிரகாசிக்கும், ஈனு - பிரசவியாத, மலடி மகன்போல-வந்தியாள் புத்திரனைப்போல, வடிவிலதாம் - ஆகாரமில்லையாம்.

எ - து. சிதாகாயமாகியும், தனிமையாகியும், முதலும், மத்தியும், அந்தமும் இல்லாததான சுயம்பாயிருக்கின்ற பிரமமானது அடுத்திருக்கின்ற தனது சங்கற்பவசத்தினால் பிரமாண

மான சரீரமுடையதுபோலவும், நிலையாகிய புருடனைப்போலவும், இஃதுண்மையினால் பிரகாசிக்கும், பிரசவியாதவந்தியாள் புத்திரனைப்போல ஆகாரமில்லையாம்—எ-ம்.

இ-ரு. ஆதிமத்தியாந்த ரகிதமான சுயஞ் சைதன்யமே தனது உல்லாச சத்தியினால் வடிவமுள்ளதுபோலத் தோற்றினாலும் அது பிரமமேயன்றி நாம ரூபமன்று என்பதாம். (22)

பிரமனுக்குச் சிருட்டியாதி தொழிலிருக்க பௌதிக சரீரமில்லாத காரணம்யாதெனின்.

என்றுகாலன் றனக்கியமனிசைத்தானென்றோன் முகநோக்கி
நின்றவாதி வாகியமாய் நிகழ்ந்தவாதி பௌதிகமாய்
ஒன்றுமுடலமுயிர்க்கெல்லா முபயவிதமா [illegible] பிரமனுக்குத்
துன்னுமாதி [illegible]

இ-ள். என்று - [illegible] - மிருத்துவுக்கு, இய மன் இசைத்தான் - நமன்சொன்னான் என்றோன் - என்றுகூறிய வசிட்டரது, முகநோக்கி - வதனத்தைப்பார்த்து, நின்ற - நின்றதான, ஆதிவாகியமாய் - ஆதிவாகிய சரீரமாயும், நிகழ்ந்த - பிரகாசித்த, ஆதிபௌதிகமாய் ஆதிபௌதிக சரீரமாயும், ஒன்றும் உடலம் - பொருந்திய சரீரங்கள், உயிர்க்கெல்லாம் - ஆத்மாக்களனைத்திற்கும், உபயவிதமாம - இரண்டுவிதமாயிருக்க, பிரமனுக்கு - பிரமாவுக்கு, துன்னும் - நெருங்கிய ஆதிவாகியமாம் - ஆதிவாகிய சரீரமாகிய, சூக்குமவுடல் ஒன்றாயதென்ன - சூட்சுமசரீரம ஒன்றானதென்ன என்று (இராமன்) கேட்க—எ-று.

எ-து. இப்படியென்று மிருத்துவுக்கு நமன் சொன்னானென்று கூறிய வசிட்டரது வதனத்தைப்பார்த்து நின்றதான ஆதிவாகிய சரீரமாயும், பிரகாசித்த ஆதிபௌதிக சரீரமாயும், பொருந்திய சரீரங்கள் ஆத்மாக்கள் அனைத்திற்கும் இரண்டு விதமாயிருக்க பிரமாவுக்கு நெருங்கிய ஆதிவாகிய சரீரமாகிய சூட்சுமசரீரம் ஒன்றானதென்னவென்று இராமன்கேட்க—எ-ம்.

இதுவுமது.

பிரமவொளியாற் பிறந்தசகம் பிறக்குமுயிர்க்குக் காரணமாய்
விரவுமதனா லுயிர்க்கெல்லா மேவுமுடலமிரண்டாகும்
பரமபிரமத் தினைபொழிய பரிகாரணம்வே றிலாமையினால்
வரவிலயனுக் கோருடலாய் மருவுமாதி வாகியமே.

இ-ள். பிரமவொளியால் - பிரமபிரகாசத்தினால், பிறந்தசகம் - உண்டாகிய வுலகம், பிறக்குமுயிர்க்கு - உண்டாகுஞ் சீவர்களுக்கு, காரணமாய் - கார

ணமாக, விரவுமதனால் - பொருந்துகின்றதனால், உயிர்க்கு எல்லாம் - சீவர்கள் அனைத்திற்கும், மேவுமுடலம் - பொருந்திய சரீரம், இரண்டாகும் - இரண்டேயாம், பரமபிரமத்தினையொழிய - மேலானபிரம சொரூபத்தைத் தவிர, பயில்காரணம் - சொல்லப்பட்டகாரணம், வேறிலாமையினால் - வேறில்லாததினால், வாவிலயனுக்கு - (வேறாக) உதியாத பிரமனுக்கு, ஆதிவாகியம் - ஆதிவாகியமானது, ஒருடலாய் - ஒருசரீரமாக, மருவும் - பொருந்தும்—எ-று.

எ - து. பிரமப்பிரகாசத்தினால் உண்டாகிய உலகம் உண்டாகுஞ் சீவர்களுக்கு காரணமாக பொருந்துகின்றதனால் சீவர்கள் அனைத்திற்கும் பொருந்திய சரீரம் இரண்டேயாம். மேலான பிரமசொரூபத்தைத் தவிர சொல்லப்பட்ட காரணம் வேறில்லாததினால் வேறாக உதியாத பிரமனுக்கு ஆதிவாகியமானது ஒருசரீரமாகப் பொருந்தும்—எ - ம்.

இ-ம். உயிர்களுக்குப் பிரமமும் உபாதான காரணமாகையால் ஆதிவாகிய சரீரமும், சகத்துசககாரியகாரண மாகையால் ஆதிபௌதிக சரீரமுமாக இரண்டாம். பிரமாவுக்குப் பிரமமே காரணமாகையால் ஆதிவாகிய சரீரமொன்றேயா மென்பதாம். (24)

## சகத்தைச் சிருஷ்டிக்கு மனோரூபம் இயாதெனின்.



சகக்காரணமா மயனுக்குத் தானேதோன்று மனவடிவாய்
மிகத்தாஞ்சகத்து விரிந்திடலால் விரிந்தவெல்லா மனவடிவென்
றுகப்பாலுரைத்த வசிட்டனைப்பார்த் துலகமாயை தனைவிரித்த
மகத்தாமனத்தின் வடிவுதனைவகுத்தோதென்ன முனிசொல்வான்.

இ-ள். சகக்காரணமாம் - உலகத்துக்குக் காரணமாகிய, அயனுக்கு-பிரமனிடத்தில், தானேதோன்றும் சுயமாக வுண்டாகின்ற, மனவடிவாய் - மனதின் சொரூபமாய், மிக - மிகவும், சகத்துவிரிந்திடலால் - உலக (முண்டாகிப்) பரந்தபடியால், விரிந்தவெல்லாம் - (அப்படி) பரவிய (சகங்களி)  யாவும், மனவடிவென்று - மனோரூபமேயென்று, உகப்பாலுரைத்த - (மிகுந்த) அன்போடுசொன்ன, வசிட்டனைப்பார்த்து - வசிட்டமுனியைப்பார்த்து, உலகமாயைதனை - சகமென்னு மாயையை, விரித்த - மலர்த்திய, மகத்தாமனத்தின் மகாமனதினது, வடிவுதனை - உருவத்தை, வகுத்தோதென்ன - பகுத்துச் சொல்லுமென்று (இராமன்கேட்க.) முனிசொல்வான் - (வசிட்ட) முனிசொல்லுவார்—எ-று.

எ - து. உலகத்துக்குக் காரணமாகிய பிரமனிடத்தில் சுயமாக உண்டாகின்ற மனதின் சொரூபமாய் மிகவும் உலகமுண்டாகிப் பரந்தபடியால் அப்படிப் பரவிய சகங்களியாவும் மனோரூபமே

யென்றுமிருந்த அன்போடுசொன்ன வசிட்டமுனியைப் பார்த்து சகமென்னுமாயையை மலர்த்திய மகாமனதினது உருவத்தைப் பகுத்துச்சொல்லுமென்று இராமன்கேட்க வசிட்டமுனிசொல்லுவார் எ-ம்.

இ-ம். சகமாகத் தோற்றுகின்ற பிரமசங்கற்பத்தை விசாரித்ததாம்.

இதுவுமது.

சடசூனியமா யெங்கனுஞ்சேர் தனிநெஞ்சுக்குப் பேரொழிய
உடனுங்ககனந் தனைப்போல வுள்ளும்புறம்பு முருவிலதாம்
படர்தீர்மெய்பொய்யெனும பொருளிற்பயிறேறறரவேமனமாகுந்
தொடர்சங்கற்ப மெங்குளதாந் தோன்றுமனமு மங்குளதே.

இ - ள். சடம் - அவித்தைமயமாயும், சூனியமாய் – உருவமில்லாததாயும், எங்கணுஞ்சேர் - எவ்விடஙகளிலுஞ் சேர்நதிருககின்ற, தனிநெஞ்சுக்கு - தனிததமனதுககு, பேரொழிய - நாமமாத்திரமேயன்றி, உடனும் - (அனைத்து) உடனுகின்ற, ககனந்தனைப்போல - ஆகாயத்தைப்போல, உள்ளும்புறம்பும் - அகத்திலும்புறத்திலும, உருவிலதாம - வடிவமில்லாததாம், படர்தீர்மெய் - குற்றமற்றமெய்யும், பொய் - பொய்யும, எனும் - என்கின்ற, பொருளின் - வஸ்துவின், பயிறேற்றரவே - பொருந்தியதோற்றமே, மனமாகும் - மனதாகும், தொடர்சங்கற்பம - தொடர்ந்த சஙகற்பமானது, எங்குளது - எங்கேயுள்ளதோ, தோன்றுமனமும் - உண்டாகின்றமனதும், அங்குளது - அங்கே யுண்டானதாம் — எ-று.

எ - து. அவித்தை மயமாயும், உருவமில்லாததாயும், எவ்விடங்களிலுஞ் சேர்நதிருக்கின்ற தனிததமனதிற்கு நாமமாத்திரமேயன்றி அனைத்து உடனுகின்ற ஆகாயத்தைப்போல அகததிலும் புறத்திலும் வடிவமில்லாததாம். குற்றமற்ற மெய்யும பொய்யும் என்கின்ற வஸ்துவின் பொருநதிய தோற்றமே மனதாகும். தொடர்ந்த சங்கற்பமானது எங்கே யுள்ளதோ? உண்டாகின்ற மனதும் அங்கேயுண்டானதாம்—எ-ம.

## இதுவுமது.

மனத்தின்வடிவு சங்கற்ப மற்றிவ்விரண்டு மொன்றாகும்
அனர்த்தமோக மலம்பநத மவித்தைமாயை தமமுதலாம்
இனத்தபெயர்சங் கற்பத்துக் கேற்றபெயரா மிதுநழுவிற்
கனத்தசகக்காட் சியுமபோகுங் கதிர்விட்டெறிக்கும் பரவடிவம்.

இ - ள். மனத்தின்வடிவு - மனதினது படிவம், சங்கற்பம் - சங்கற்பமேயாம், இவ்விரண்டுமொன்றாகும் - இவ்விரண்டும் ஒன்றேயாம், அனர்த்தம் - அனர்த்தமும், மோகம் - மோகமும், மலம் - மலமும், பந்தம் - பந்தமும், அவி

த்தை - அவித்தையும், மாயை - மாயையும், தமம் - தமசும், முதலாம் - முதலான, இனத்தபெயர் - கூட்டமாகிய நாமங்கள், சங்கற்பத்துக் கேற்ற பெயராம் - சங்கற்பத்துக்குத் தகுந்த நாமங்களாம், இது நழுவில் - இச்சங்கற்பநசிக்கில், கனத்த - பருத்த, சகக்காட்சியும்போம் - திரிஸ்ய திருஷ்டியு நீங்கும், பரவடிவம் - பிரமசொரூபமானது, கதிர்விட்டெறிக்கும் - ஒளிவிட்டுப் பிரகாசிக்கும்—எ-று.

எ - து. மனதினது வடிவம் சங்கற்பமேயாம் இவ்விரண்டும் ஒன்றேயாம், அநர்த்தமும், மோகமும், மலமும், பந்தமும், அவித்தையும், மாயையும், தமசும் முதலானகூட்டமாகிய நாமங்கள் சங்கற்பத்துக்குத் தகுந்த நாமங்களாம். இச்சங்கற்பநசிக்கில் பருத்த திரிஸ்யதிருஷ்டியு நீங்கும். பிரமசொரூபமானது ஒளிவிட்டுப் பிரகாசிக்கும்—எ - ம்.

இ-ம். சங்கற்பரூபமாய்ச் சடசித்துக்களிற் சஞ்சரிக்கின்ற மனதுக்கு மோகமுதலிய நாம மாத்திரமேயன்றி உருவமின்று என்பதாம். (27)

## ஆத்மா எந்தஇடத்து எப்படி விளங்குகின்றதெனின்.

நிற்பநடப்ப வெனுமனைத்தி னிழலாடாது வெறிதிருக்குந்
தற்பணந்தா னெப்படியோ தானேவிளங்கு மப்படியே
கற்பமுறுநீ நான்முதலாங் காட்சிவிகற்ப மெலாமடங்கி
அற்பமெனினுங் காட்சியறி லதுவேதனிக்கே வலநிலைமை.

இ - ள். நிற்ப நடப்ப எனும் - சராசரமென்கின்ற, அனைத்தின் - சமஸ்தத்தின், நிழல் - சாயையானது, ஆடாது - (புணர்ந்தும்) புணராமல், வெறிதிருக்கும் - கேவலமாயிருக்கும், தற்பணந்தான் எப்படியோ கண்ணடியானது எப்படியோ, அப்படியே - அந்தப் பிரகாரமே, தானேவிளங்கும் - (சைதன்ய) மாத்திரம் பிரகாசிக்கும், கற்பமுறு - கற்பனை பொருந்திய, நீ நான் முதலாம் - நீ நான் என்பமுதலாக, காட்சி - காணப்பட்டனவாகிய, விகற்பமெலாமடங்கி - வேற்றுமைகளனைத்துமடங்கி, அற்பமெனினும் - அற்பமாகிலும், காட்சி-திரியஸ்யமானது, அறில் - (சேடமின்றி) நசிக்கில், அதுவே அந் நசிப்பே, தனிக்கேவலநிலைமை - ஒப்பற்ற கைவல்ய நிச்சயமாம்—எ-று.

எ - து. சராசரமென்கின்ற சமஸ்தத்தின் சாயையானது புணர்ந்தும் புணராமல் கேவலமாயிருக்கும் கண்ணடியானதெப்படியோ! அந்தப் பிரகாரமே சைதன்னியமாத்திரம் பிரகாசிக்கும். கற்பனை பொருந்திய நீ நான் என்ப முதலாகக் காணப்பட்டனவாகிய வேற்றுமைகளனைத்து மடங்கி அற்பமாகிலும் திரிஸ்யமானது சேடமின்றி நசிக்கில் அந்நசிப்பே ஒப்பற்ற கைவல்லிய நிச்சயமாம்—எ - ம்.

இ-ம். சகமுதலான பேதபாவனை நீங்கியவிடத்தில் தானாய் விளங்குகி ன்ற அனுபவமே சுயம் பிரகாசமென்பதாம். (28)

## மனோநாச முண்டாகுங்காலம் யாதெனின்.

வேறு.

காண்பரிய மனங்காட்சிப் பொருளையெல்லாங்
கனவுதரு கனவுபோற் காட்டாநிற்கும்
பூண்பதிலா மனஞ்சலன சத்தியாலே
பொலியுமசை யுந்தியங்கும் போகுமீளும்
வீண்பயிலுஞ் செருக்குமிகு மகங்கரிக்கும்
வேற்றுருவாம் பெருங்கற்ப மேவும்போதிற்
சேண்படவெல் லாப்பொருளுந் தீரமாய்ந்து
செறியுமுப சாந்தமே சேடமாகும்.

இ-ள். கனவுதரு - சொற்பனங்கொடுக்கின்ற, கனவுபோல் - சொற்பன த்தைப்போல, காண்பரிய மனம் - பார்ப்பதற்கு (உருவம்) இல்லாத மனது, காட்சிப்பொருளையெல்லாம் - (இல்லத) திரிஸ்ய வஸ்துக்கள் அனைத்தை யும், காட்டாநிற்கும் - காட்டும், பூண்பதிலாமனம் - (ஒன்றிலுந்)தரியாதமன மாது, சலனசத்தியால் - சஞ்சலசத்தியினால், பொலியும் பிரகாசிக்கும், அசை யும் - சஞ்சலிக்கும், தியங்கும் - கலங்கும், போகும் - செல்லும், மீளும் - திரு ம்பும், வீண்பயிலுஞ் செருக்குமிகும் - வீணாகப்பொருந்திய களிப்பின்மிகும், அகங்கரிக்கும் - அகங்காரத்தையடையும், வேற்றுருவாம் - வேறுவடிமாகிய, பெருங்கற்பம் – மகாபிரளயம், மேவும்போதில் - பொருந்துங்காலத்தில், சேண்பட எல்லாப்பொருளும் - ஆகாயமுதலிய சகலவஸ்துக்களும், தீரமாய்ந்து ஒருங்கேயழிந்து, செறியும் உபசாந்தமே- பூரணமானசாந்தமே, சேடமாகும்- மிச்சமாம்—எ-று.

எ-து சொற்பனங் கொடுக்கின்ற சொற்பனத்தைப்போல பா ர்ப்பதற்குஉருவமில்லாதமனது இல்லாத திரிஸ்பவஸ்துக்கள் அனைத் தையும் காட்டும். ஒன்றிலுந் தரியாத மனமானது சஞ்சலசத்தியினா ல் பிரகாசிக்கும், சஞ்சலிக்கும், கலங்கும், செல்லும், திரும்பும்,வீணா கப்பொருந்திய களிப்பின் மிகும், அகங்காரத்தையடையும், வேறு வடிவமாகிய மகா பிரளயம்பொருந்துங் காலத்தில் ஆகாயமுதலிய சகல வஸ்துக்களும் ஒருங்கேயழிந்து பூரணமான சாந்தமே மிச்ச மாம்—எ-ம்.

இ-ம். மித்தையானமனது மித்தையான சகத்தைக் காட்டிக்கொண்டி ருந்து அத்தியந்தப் பிரளயத்தில் நசிக்குமென்பதாம். (29)

## ஆத்மசொரூப இலக்கணம் யாதெனின்.

வேறு.

அத்தமி யாதசோதி யருக்கனு யளவிலாதாய்
மெத்திய பிணியிலாதாய மேவரும் பிறப்பிலாதாய்
எத்தலங் களினுமென்று மியாவுமா யாவுஞ்செய்து
முத்தியு மாகியோங்கு முதற்பரம பொருளொன்றுண்டு.

இ - ள். அத்தமியாத - அத்தமானமாகாத, சோதி - (சுயஞ்) சோதியென்னும், அருக்கனும் - சூரியனும், அளவிலாதாய் - எல்லையற்றதாயும், மெத்திய பிணியிலாதாய் - அறபதுன்பமும் இல்லாததாயும, மேவரும் - பொருந்து தற்கரிய, பிறப்பிலாதாய் - உற்பத்தி யில்லாததாயும், எத்தலங்களினும் - எவ் விடங்களினும, என்றும - எக்காலத்திலும, யாவுமாய் - சகலமுமாய், யாவுஞ் செய்தும் - சகலத்தையும உண்டாக்கியும, முத்தியுமாகி - சகலமும் விடுபட்ட தாயும், ஓங்கும - வியாபித்திருக்கின்ற, முதல்-முதன்மையான, பரமபொருள் ஒன்றுண்டு-பிரமசொரூபமானதொன்றுள்ளது—எ-று.

எ — து. அத்தமானமாகாத சுயஞ்சோதியென்னுமசூரியனும், எல்லையற்றதாயும, அற்பதுன்பமில்லாததாயும், பொருநது தற்கரிய உற்பத்தியிலலாததாயும, எவ்விடங்களினும எக்காலத்திலும், சகலமுமாய் சகலத்தையும உண்டாக்கியும, சகலமும விடுப்பட்டதாயும், வியாபித்திருக்கின்ற முதன்மையான பிரமசொரூபமான தொன்றுள்ளது— எ-ம

இ-ம். உதயாத்தமனமின்றி சுயமாய்ப் பிரகாசிக்கின்ற பிரமம சர்வவியா பகமான சத்தாமாத்திரமாயிருக்குமென்பதாம். (30)

## ஆத்மவிலாசம் யாதெனின்

வேறு.

பகர்வரிதாய் முத்தராற் பயில்வதாகிப்
பரமுதலாம் புதிதான பலபேர்பெற்று
மிகவுணர்சாங் கியர்புருட னென்றுஞ்சுத்த
வேதாந்தம் விளங்கினோர் பிரமமென்றுந
துகளறுவிஞ் ஞானிகள்விஞ் ஞானமென்றுஞ்
சூனியர்சூ னியமென்றுஞ் சொலலப்பட்டுந்
திகழிரவி தேசுக்குந் தேசாய்நின்று
தேசளித்துத் திகழ்வித்துத் திகழாநிற்கும.

இ - ள். பகர்வரிதாய் - வசனாதீதமாயும், முத்தராற் பயில்வதாகி - சத்து க்களால் வசனிப்பதாயும், பரமுதலாம் - பிரமமுதலிய, புதிதான - கற்பிதமா

கிய, பலபேர்பெற்று - பலநாமங்க(ளிடப்)பெற்று, மிகவுணர்சாங்கியர் - மிகவும்அறிவுள்ளசாங்கியர்கள், புருடனென்றும் - ஆத்மாவென்றும், சுத்தவேதாந்தம் - பரிசுத்தவேதாந்த (ஞானம்), விளங்கினோர் - விளங்கினவர்கள், பிரமமென்றும்-பிரமசொரூபமென்றும், தூஉளறுவிஞ்ஞானிகள் - குற்றமற்றவிஞ்ஞானிகள், விஞ்ஞானமென்றும் - விஞ்ஞானசொரூபமென்றும், சூனியர் - சூனிய (வாதி)கள, சூனியமென்றும் - சூனியசொரூபமென்றும், சொல்லப்பட்டு - உரைக்கப்படுவது (மன்றி), திகழ் - விளங்காநின்ற, இரவிதேசுக்கும்-சூரியப்பிரகாசத்துககும், தேசாய்நின்று - பிரகாசமாயிருந்து, தேசளித்து - (யாவற்றிற்கும்) பிரகாசத்தைக்கொடுத்து, திகழ்வித்து - பிரகாசிப்பித்து, திகழாநிற்கும் - (யாதொருவஸ்து வானதுதானும்) பிரகாசரூபமாய் விளங்கும்-எ-று.

எ - து வசனாதீதமாயும், சத்துக்களால் வசனிப்பதாயும், பிரமமுதலிய கற்பிதமாகிய பலநாமங்களிடப்பெற்று மிகவும் அறிவுள்ள சாங்கியர்கள் ஆத்மாவென்றும், பரிசுத்த வேதாந்தஞானம் விளங்கினவர்கள் பிரமசொரூபமென்றும், குற்றமற்ற விஞ்ஞானிகள் விஞ்ஞானசொரூபமென்றும், சூனியவாதிகள் சூனிய சொரூபமென்றும் உரைக்கப்படுவது மன்றி விளங்காநின்ற சூரியபிரகாசத்துக்கும் பிரகாசமாயிருந்து, யாவற்றிற்கும் பிரகாசத்தைக்கொடுத்துப் பிரகாசிப்பித்து யாதொருவஸ்துவானது தானும் பிரகாசரூபமாய் விளங்கும்—எ-ம்.

(இ-ம். அகோசரமான பிரமம் அவரவர் நிச்சயித்தபடி விளங்குவதன்றியும் யாவையும் பிரகாசிக்கின்ற சுயம்பிரகாசமாய் விளங்குமென்பதாம் சூனியவாதியும் விஞ்ஞானவாதியும் பவுத்தமதபேதமெனககொள்க. (31)

## ஆத்மவிவகாரம் யாதெனின்.

உரைபகர்வோ னுசாவிடுவோன் கேட்போன் காண்போ
னுணர்பவன்சிந் திப்பவனு யுலகின்மெய்யில்
திரமுறமே வியுமேவாப் பொருளினின்றுந்
தினகரன்றே செனச்சிற்றின் றிகழ்ச்சியுண்டாம்
விரைமனம்வேர் காணமல ரண்டங்காயாய்
விண்ணெழுமா யைக்கொடியை விதிர்க்குங்காற்றும்
புரைசெயுடற் செப்பனைத்துண் மணியாய்நிறகும்
புணர்புரியட் டகவுடலைப் போய்மீள்விக்கும்.

இ - ள். உரைபகர்வோன் - வசனிப்பவனும், உசாவிடுவோன் - ஆராய்பவனும், கேட்போன் - கேட்பவனும், காண்போன் - பார்ப்பவனும்,

உணர்பவன்-புசிப்பவனும், சிந்திப்பவனும், நினைப்பவனும் உலகில் - சகத்தில், மெய்யில்-தேகத்தில், நிரமுறமேவியும் திடமாகப்பொருந்தியும், மேவா - பொருந்தாததாயுமிருக்கின்ற,பொருளினின்றும்-வஸ்துவினின்றும்,தினகரன் தேசுஎன-சூரியப்பிரகாசத்தைப்போல, சிற்றின் நிகழ்ச்சியுண்டாம்-ஞானப்பிரகாசமுண்டாகும், விண் - (அவ்) ஆகாயத்தினின்றும், விரைமனம்வேர்-வாசனைபொருந்தியமனதே வேராகவும், கரணமலர் - இந்திரியங்களே புட்பங்களாகவும், அணடங்காயாய் - அண்டங்களே காயாகவும், எழும் - உதயமாகும், மாயைக்கொடியை - மாயையென்னும் வல்லியை, விதிர்க்குங்காற்றும் - அசைக்கும் அநிலமாயும், புரைசெய்-குற்றஞ்செய்யாநின்ற, உடற்செப்பனைதனுள் - சரீரசம்புடங்களுக்குள், மணியாய்நிற்கும் - இரத்தினமாயு மிருக்கும், புணர்புரி யட்டக வுடலை - பொருந்தாநின்ற புரியட்டக சரீரத்தை, போய்மீள்விக்கும் - (சித்தானது) போக்கு வரவைச்செய்விக்கும்—எ று.

எ - து, வசனிப்பவனும், ஆராய்பவனும், கேட்பவனும். பார்ப்பவனும், புசிப்பவனும், நினைப்பவனும். சகத்தில் தேகத்தில் திடமாகப்பொருந்தியும் பொருந்தாததாயுமிருக்கின்ற வஸ்துவினின்றும் சூரியப் பிரகாசத்தைப்போல ஞானப் பிரகாசமுண்டாகும். அவ் வாகாயத்தினின்றும் வாசனைபொருந்திய மனதே வேராகவும் இந்திரியங்களே புட்பங்களாகவும், அண்டங்களே காயாகவும் உதயமாகும மாயையென்னும் வல்லியை அசைக்கும அநிலமாயும்குற்றஞ்செய்யாநின்ற சரீரசம்புடங்களுக்குள் இரத்தினமாயுமிருக்கும் பொருந்தாநின்ற புரியட்டக சரீரத்தை சித்தானது போக்கு வரவைச் செய்விக்கும்—எ-ம்.

இ-ம். யாவுமாய் விளங்குகின்ற பிரமந் தனது சிற்சத்தியி லுண்டானமாயை முதலிய அனைத்தையு மாட்டிவிக்கு மென்பதாம். (32)

ஆத்மசுபாவம் யாதெனின்.



வேறு.

சுத்தவறி வாதலா லாகாய பாவனையாற் சூழ்விண்ணுதும்
அத்திறனேயெப்பொருளும் பாவித்தபோதுள்ள ததுவாமந்தச்
சித்திடையே மூவுலகுந் திடர்கான லெனத்தோன்றிச் சிதையும்பல்கால்
இத்தனையுஞ் செய்யவுந்தா னித்தனையுஞ் செய்யாம லிருந்தமன்றே.

இ - ள். சுத்த அறிவாதலால் - பரிசுத்தஞானமாதலால், ஆகாயபாவனையால் - (அது) வியோம சிந்தனையால், சூழ்விண்ணுதும் - நிறைந்த ஆகாயமாம், அத்திறனே - அப்பிரகாரமே, எப்பொருளும் - எவ்வஸ்துவையும், பாவித்தபோது - பாவனைசெய்தபோது, அது - அவ்வஸ்துக்களே, உள்ள

தாம் - உளதாயிருக்கும், அந்தச்சித்திடையே - அந்தஞானத்தில், மூவுலகும்- திரிபுவனமும், திடர்கானலெனை - கானற்சலம்போல, பல்கால் - எப்போதும் தோன்றி - உண்டாகி, சிதையும் - கெடும், இத்தனையும் - இவ்வளவையும், செய்யவும் - செய்தும், தான் இத்தனையுஞ் செய்யாமல் - தான் இவ்வளவையுஞ் செய்யாமல், இருக்கும் - (இருந்தபடி) யிருக்கும்—எ-று.

எ - து. பரிசுத்தஞானமாதலால், அதுவியோமசிந்தனையால் நிறைந்த ஆகாயமாம் அப்பிரகாரமே எவ்வஸ்துவையும் பாவனைசெய்தபோது அவ்வஸ்துக்களை உளதாயிருக்கும். அந்த ஞானத்தில் திரிபுவனமும் கானற்சலம்போல எப்போதும் உண்டாகி கெடும். இவ்வளவையும் செய்தும் தானிவ்வளவையுஞ் செய்யாமல் இருந்தபடியிருக்கும் எ-ம்.

இ-ம். சித்தானது பாவிக்குமபமாய் விளங்குவதன்றியுஞ் சிருஷ்டியாதிகளைச்செய்துஞ் செய்யவில்லை என்பதாம். (33

## ஆத்மதரிசனத்தில் யாது அடங்குமெனின்.

நிருவிகற்ப வான்மாவிற் சகத்தோற்ற மொடுக்கமிவைநேராயில்லை
மருவிகற்ப மேதுமொவ்வாப் பராபரமாமப்பொருளையங்கக்கண்டாற்
பெருமனைக்கட் டறுமையமறுங் கருமமறுமென்றான் பெரியோன்வள்ளல்
ஒருகடுகிற் பொன்மேரு நுழைந்ததல்லப் பிரமாண்ட மொடுங்குமென்றான்.

இ-ள். நிருவி[illegible] [illegible] சொரூபத்தில், சகத்தோற்ற [illegible] [illegible], இவை [illegible] நிலைகள், நேராயில்லை - நேரே யுண்டாவதில்லை, மருவிகற்பமேதும் - மருவுகின்ற விகற்பமேதும், ஒவ்வா - பொருந்தாத, பராபரமாம் - பராபரமாகிய, அப்பொருளை - அவ்வஸ்துவை, ஐயங்கக்கண்டால் - பிரகாசிக்கததரிசித்தால், பெருமனைக்கட்டறும் - பெரியமனோபந்தமறும், ஐயமறும் - சந்தேகங்கெடும், கருமமறும் - (சகல) கருமங்களுங்கெடும், பெரியோன் - மகாமுனி, என்றான் - இப்படியென்றுசொன்னார், வள்ளல் - இராமரானவர், ஒருகடுகில் - ஓர் கடுகுக் குள்ளே, பொன்மேரு - மகாமேருவானது, நுழைந்தல்லவோ - நுழைந்தாலல்லவோ? பிரமாண்டம் பிரமாண்டமானது, ஒடுங்குமென்றான் - (அணுவுக்கணுவான பிரமத்தில்) அடங்குமென்றார் - எ-று.

எ - து. நிருவிகற்பமான ஆத்மசொரூபத்தில் உலகத்தினுற்பத்திலயமான இவைகள் நேரே யுண்டாகவில்லை, மருவுகின்ற விற்பபேதம் பொருந்தாத பராபரமாகிய அவ்வஸ்துவை பிரகாசிக்கத் தரிசித்தால் பெரிய மனோபந்தமறும். சந்தேகங்கெடும். சகல கருமங்களுங்

கெடும். மகாமுனி இப்படியென்று சொன்னார். இராமரானவர் ஓர் கடுகுக்குள்ளே மகாமேருவானது நுழைந்காலல்லவோ பிரமாண்டமானது அணுவுக்கணுவான பிரமத்தில் அடங்குமென்றார்—எ-ம்.

இ-ம். பிரமதரிசனத்திற்சங்கற்பமுதலிய அண்டங்கள்அடஙகுமென்பதாம்.

## அதிசூட்சுமமான பிரமத்தில் சகத்தெப்படி அடங்குமெனின்.

அருந்தவன்சொல்லுவானூலானல்லோராற்றிங்களாலன்றிநாளாற்
றெரிந்துவிடும்பன்னூலின்சித்தாந்த மிதுவிதனைச்சிந்தைசெய்யிற்
புரிந்தபுவியார்நிற்கப் போயொளிக்கு நிட்டையுடன்போதஞானம்
விரிந்துணர்வோர்க்குயர்சீவன்முத்திபெறலாமிதுவேவிதேகமுத்தி.

இ-ள். அருந்தவன் - அரிய தவத்தையுடைய வசிட்டர், சொல்வான் சொல்லுவார், நூலால் - (ஆத்மஞான) சாஸ்திரங்களினாலும், நல்லோரால் - சாதுக்கள் (சங்கத்தினாலும்) திங்களால் அன்றி - மாதத்தினால் அல்லாமல், நாளால் - தினங்களினால், தெரிந்துவிடும் - (இச்சங்கைக்கு உத்தரம்) தெரியும், பன்னூலின் - பலசாஸ்திரங்களினது, சித்தாந்தம் - நிச்சயமும், இது - இதுவேயாம், இதனை - இவ்வருத்தமுள்ள) இக்கதையை, சிந்தைசெய்யில் - விசாரிக்கில், நிட்டையுடன் - நிட்டையோடும், போதஞானம் - பூரணஞானத்தை, விரிந்துணர்வோர்க்கு - வியாபகமா யறிபவர்களுக்கு, புரிந்தபுவி - கற்பித்த சகமானது, ஆர்நிற்க - இருக்க, போயொளிக்கும் - ஒடுங்கும், உயர் - மேலான, சீவன்முத்தி பெறலாம் - சீவன்முத்தி பதத்தையடையலாம், இதுவே - இச்சீவன்முத்தியே, விதேகமுத்தி - விதேகமுத்தியாம்—எ - று.

எ - து. அரியதவத்தையுடைய வசிட்டர்சொல்லுவார் ஆத்மஞானசாஸ்திரங்களினாலும், சாதுக்கள் சங்கத்தினாலும், மாதத்தினால் அல்லாமல் தினங்களினால் இச்சங்கைக்கு உத்தரந்தெரியும்பல சாஸ்திரங்களினது நிச்சயமும் இதுவேயாம். இவ அருத்தமுள்ள இக்கதையை விசாரிக்கில் நிட்டையோடும் பூரணஞானத்தைவியாபகமா யறிபவர்களுக்கு கற்பித்த சகமானதுஇருக்க ஒடுங்கும். மேலான சீவன்முத்தி பதத்தை யடையலாம். இச்சீவன்முத்தியேவிதேக முத்தியாம்—எ-ம்.

இ-ம். அணுவுக்கணுவான பிரம மகத்துககு மகத்து என்கின்ற சுருதி யுத்தி அனுபவத்தாற் பரோக்ஷஞான முண்டாய் அகனாற் சமாதியைக்கொண்ட பரோக்ஷஞான முதிககிற் சகமிருநதும் மில்லாமற் சீவன்முத்தியுண்டாமென்பதாம்.

## சீவன்முத்தர் இலக்கணம் யாதெனின்.

என்பதுசொல் லியமுனியை யுடலிறந்த வீடுமுடலிருந்தவீடு
நன்பழநூல்வழியியற்றநவிலகென்றவிராமனுக்குநல்லோன்சொல்வான்
வன்பல்செய்கையிற்பயின்றுமுன்றோன்றுமவிண்டோன்றுவகைமையுற்றோர்
இன்பமுறவருஞ்சீவன்முத்திபதம்பெற்றுயர்ந்தவியல்பினோரே.

இ-ள். என்பதுசொல்லிய முனியை - (சீவன்முத்தி) என்பதைப்போதித்த வசிட்டமுனியை, உடலிறந்தவீடும்-விதேகமுத்தியையும், உடலிருந்த வீடும் - சீவன்முத்தியையும், நன்பழநூல்வழி - நல்ல பழமையான சாஸ்திர மார்க்கத்தில், இயற்ற - (யான்) முயற்சிக்க, நவில்கென்ற - சொல்லுமென்று கேட்ட, இராமனுக்கு - இராகவருக்கு, நல்லோன் சொல்வான் - நன்மையுள்ள வசிட்டர் சொல்லுவார், வன் பலசெய்கையில் - வலிமையான பலவிவகாரங்களில், பயின்றும் - கூடியும், விண் - (சிதா) காயமானது, முன்றோன்றும் - பிரத்தியட்சமாய், தோன்று - (திரிஸ்யந்) தோற்றுந்தான், வகைமையுற்றோர் - வகையை யுடையவர்கள், இன்பமுறவரும் - சதாநந்தம் பொருந்த வருகின்ற, சீவன்முத்திபதம் - சீவன்முத்திபதத்தை, பெற்றுயர்ந்த - அடைந்துயர்ந்த, இயல்பினோர் - சுபாவமுடையவர்கள்—எ-று.

எ-து சீவன்முத்தி யென்பதைப் போதித்த வசிட்டமுனியை விதேகமுத்தியையும், சீவன்முத்தியையும், நல்ல பழமையான சாஸ்திரமார்க்கத்தில், யான் முயற்சிக்க சொல்லுமென்று கேட்ட இராகவருக்கு நன்மையுள்ள வசிட்டர்சொல்லுவார். வலிமையான பலவிவகாரங்களில் கூடியும சிதாகாயமானது பிரத்தியட்சமாய் திரிஸ்யந்தோற்றுந்தான வகையையுடையவர்கள் சதாநந்தம் பொருந்த வருகின்ற சீவன முத்திபதத்தை அடைந்து உயர்ந்த சுபாவமுடையவர்கள்—எ-ம்.

ப-ம். காட்சியான சகமானது ஞானகாரமாய்த் தோற்றுகின்றதென்பார். முன்தோன்றும் விண்ணென்றார்.

இ-ம்- அபரோக்ஷானுபவமுள்ளதே சீவமுத்தித்தன்மை என்பதாம்.

இதுவுமது.

மிகவருகா மாதிகளாம் விகாரமடைந் தும்விண்போன்
மிகநொய்தாஞோ
அகமெனலின் றிச்செயல்கள் செய்தாலுந் தவிர்ந்தாலு
மழுததமற்றோர்
சகநெறிகள் செய்திடினு மன்னியர்போற் கண்டுகுளிர்
தன்மைசான்றோர்
திகழ்மனமு நினைவுமிருந் தஞ்சிறிது மில்லாதோர்
சீவன்முத்தர்.

இ-ள். மிகவரும் - மிகவும் வாராநின்ற, காமாதிகள் - இராகத்துவே ஷாதிகளினால், ஆம்-உண்டாகின்ற, விகாரமடைந்தும் - விகாரஞ்சேர்ந்தும், விண்போல் - ஆகாயத்தைப்போல, மிகநொய்தானோர் - மிகவுஞ் சொச்சமான வர்கள், அகமெனல் இன்றி - அகம்பாவமென்ப தில்லாமல், செயல்கள் செய்தாலும் - தொழில்களைச் செய்தாலும், தவிர்ந்தாலும் - விட்டாலும், அழுத்த மற்றோர்-அதிலழுந்தாதவர்கள், சகநெறிகள்-உலகாசாரங்களை, செய்திடினும்-செய்தாலும், அன்னியர்போல் பிறரைப்போல, கண்டு - அதைப்பார்த்து, குளிர்தன்மைசான்றோர் குளிர்ந்த தன்மையைச் சார்ந்தவர்கள், திகழ்மனமும் - பிரகாசிக்கின்ற மனமும், நினைவுமிருந்தும் - கருத்து மிருந்தும், சிறிது மில்லாததோர் - அற்பமும் பற்றில்லாதவர்கள், சீவன்முத்தர் - சீவன்முத்தர்கள்-எ-று.

எ-து. மிகவும் வாராநின்ற இராகத்துவேஷாதிகளினால் உண்டாகின்ற விகாரஞ்சேர்ந்தும், ஆகாயத்தைப்போல மிகவுஞ் சொச்சமானவர்கள், அகம்பாவமென்பதில்லாமல், தொழில்களைச் செய்தாலும், விட்டாலும், அதிலழுந்தாதவர்கள் உலகாசாரங்களை செய்தாலும், பிறரைப்போல அதைப் பார்த்துக்குளிர்ந்த தன்மையைச சார்ந்தவர்கள் பிரகாசிக்கின்ற மனமும் கருத்துமிருந்தும அற்பமும் பற்றில்லாதவர்கள் சீவன்முத்தர்கள்-எ-ம.

ப-ம். விடயத்தில் விருப்பம் வந்தவிடத்தில் அசம்பிரியந் தன்பிரியமாகவும், வெறுப்பு வந்தவிடத்தில் தன் சாதகனவிட்டு நீங்காமலும், சொச்சமாயிருப்பனென்பார். மிகவருகாமாதிகளால் விகாரமடைந்தும், விண்போல்மிக நொய்தானோரென்றும், இது நான் என்னுஞ் சுட்டறந்து யானே சகலமென்னும் அனுபவத்தினாலே விகாரங்களைச் செய்துஞ், செய்யாமல் தனது உல்லாசமாய் விளங்குவனென்பார். அகமெனல் இன்றிச் செயல்கள் செய்தாலுந் தவிர்ந்தாலுமழுத்த மற்றோரென்றும், தனது சன்னிதிமாத்திரத்தில் நடக்கின்ற செயல்களனைத்திற்குஞ் சாக்ஷியாய் யிருப்பனென்பார். சகநெறிகள் செய்திடினும் அந்நியர்போற்கண்டு குளிர்தன்மை சான்றோரென்றும் தனதுல்லாசமான சங்கற்பமுண்டாயடங்கு இடத்திலானாய் விளங்கும் பிராஞ்ஞயாயிருப்பனென்பார், திகழ்மனமு நினைவுமிருந்துஞ் சிறிதுமில்லாததோர் சீவன்முத்தரென்றுங் கூறினார்.

இ-ம். யாவுங் கூடியுங் கூடாமற் சித்தாயிருப்பவனே சீவன்முத்தனே என்பதாம். (35)

இதுவுமது.

துக்கசுகங் களிலமிழ்ந்தி மிதவாதுஞ் சிநிலேசுபாவமானோர்
புக்கசுழுத் தியினனவாய் நனவின்றி வாதனைதீர் போதமுற்றோர்
மிக்கசம மாயுலகால் வெருளாம லுலகினையும் வெருட்டாமேலோர்
சிக்கறநன் னினைவிருந்து நினைவிலா தவரவரே சீவன்முத்தர்.

இ - ள். துக்கம் - துன்பங்களில், அமிழ்ந்தி - மூழ்கி, சுகங்களில் - இன்பங்களில், மிதவாத - மேற்கொள்ளாத, புந்திநிலை - அறிவினிச்சயமே, சுபாவமானோர் - இயல்பானவர்களும், புக்கசுழுத்தியில் - அடைந்த சுழுத்தியவத்தையில், நனவாய் - சாக்கிரமாகி, நனவு - சாக்கிரத்தில், இன்றி - அஃது இல்லாதிருக்கின்ற, யாதனைதீர் - வாசனையிறந்த, போதம் - (சுழுத்தி) ஞானத்தை, உற்றோர் - பொருந்தினவர்களும், மிக்க சமமாய் - மேலான சமமாகி, உலகால் - சகத்தினால், வெருளாமல் - பயப்படாமல், உலகினையும் - சகத்தையும், வெருட்டா - பயமுறச்செய்யாத, மேலோர் - மகான்களும், சிந்தற - (சம்சார) பந்தமற, நல்நினைவிருந்தும் - நற்சிந்தனையிருந்தும், நினைவிலாதவர் - சிந்தனையில்லாதவர்களுமாகிய, இவரே சீவன்முத்தர் - இவர்களே சீவன்முத்தர்களாம்—எ-று.

எ - து. துன்பங்களில்மூழ்கி இன்பங்களில் மேற்கொள்ளாத அறிவினிச்சயமே இயல்பானவர்களும், அடைந்த சுழுத்தியவத்தையில் சாக்கிரமாகி சாக்கிரத்தையில் அஃது இல்லாதிருக்கின்ற வாசனையிறந்தசுழுத்திஞானத்தைப்பொருந்தினவர்களும், மேலானசமமாகி சகத்தினால் பயப்படாமல்சகத்தையும் பயமுறச்செய்யாதமகான்களும, சமசாரபந்தமற நற்சிந்தனையிருந்தும் சிந்தனையில்லாதவர்களுமாகிய இவர்களே சீவன் முத்தர்களாம்--எ-ம்.

ப-ம். துன்பம் வரும்போதுதனதானந்தத்திலழுந்துவாரென்பார். துக்கத்திலழுந்தவில்லையென்றும், சுகம வரும்போது தனது சுகமாய் மேவிடுவாரென்பார், சுகத்தின் மிதக்கவில்லையென்றும், நனவில அனுபவமானசுபாவப்பிரகனைப்படிய சுழுத்தியிலிருக்கின்றாரென்பார், சுழுத்தியில் நனவாயென்றும், சுழுத்தியிற் சகலதொழிலும் விட்டுச் சுகபோதமாவிருப்பதுபோலச் சாக்கிரத்திலிருப்பனென்பார், நனவின்றி யாதனைதீர் போதமுற்றோரென்றும் விடயம்வரும்போது அது தன்னைக்கெடுக்குமென்று அஞ்சாமல் அதனை வியாபிப்பனென்பார், உலகால் வெருளாமலென்றும், பிரமதேசசாய்ப் பிரகாசிக்கின்ற மகிழ்ச்சியுள்ள முகத்தை யாவரும் விரும்பப்படுவரென்பார், உலகினையும் வெருட்டாரென்றும், சைதன்னியஸ்பூரணத்தால் நவநவமாய் விளங்குவனென்பார், நினைவிருந்துநினைவிலாரென்றுங்கூறினார்.

இ-ம். சீவன்முத்தர் சகசானுபவமாய் விவகரித்ததாம். (38)

## விதேகமுத்தியிலக்கணம் யாதெனின்.

நிலையான விச்சீவன் முத்தியைவிட் டுடலிறந்தா னிறைந்தவாயு
அலையாம னிற்பதுபோ லுடலில்லா முத்திபெறு மதனின்றன்மை
தொலையாது மறையாது தோன்றாது நணித்தல்ல தூரத்தல்ல
உலையாது முடியாது நானல்லப் பிறனல்ல வொன்றுமல்ல

இ-ள். நிலையான - நிச்சயமாகிய, இச்சீவன் முத்தியை - இந்தச்சீவன் முத்தி (பதத்தை), விட்டு - நீங்கி, உடலிறந்தால் - சரீரநசித்தால், நிறைந்த வாயு - பூரணமான காற்றானது, அலையாம நிற்பதுபோல் - அசைவற்(றாகாய மா,யிருப்பதுபோல, உடலில்லாமுத்திபெறும் - விதேகமுத்தியை யடைவன், அதனின்தன்மை - அதனியல்பானது, தொலையாது - நசியாது, மறையாது - மறைவுபடாது, தோன்றாது - தோற்றாது, நணித்தல்ல - சமீபம்அன்று, தூரத்தல்ல - சேய்மையன்று, உலையாது - நடுங்காதது, முடியாது - முடிவில்லாதது, நானல்ல - யானன்று, பிறனல்ல - பிறனன்று, ஒன்றுமல்ல - ஒன்றுமன்று—எ-று.

எ-து. நிச்சயமாகிய இந்தச்சீவன்முத்திப்பதத்தை நீங்கிசரீர நசித்தால் பூரணமான காற்றானது அசைவற்று ஆகாயமாயிருப்பது போல விதேகமுத்தியையடைவான். அதன் இயல்பானது நசியாது, மறைவுபடாது, தோற்றாது, சமீபமன்று, சேய்மையன்று, நடுங்காதது, முடிவில்லாதது, யானன்று, பிறனன்று, ஒன்றும் இல்லை--எ-ம்.

அன்று என்றும் ஒருமை அல்லவெனப் பன்மையாயிற்று.

ப-ம். சகலத்திலும் வியாபகமாய் நிறைந்திருகின்ற தென்பார், தொலையாதென்றும் சர்வமுமாய் பிரகாசிக்கின்றதென்பார், மறையாதென்றும் பார்ப்பவனிற் பார்வையாயிருக்கின்றதென்பார், தோன்றாதென்றும் அறிதற்கெட்டாததென்பார், நணித்தல்லவென்றும் அறிவில் அறிவாய் நிறைந்திருக்கின்ற தென்பார், தூரத்தல்லவென்றும் நிச்சலமாயிருக்கின்றதென்பார், உலையாதென்றும் ஏகோதயமாய் விளங்குகின்றதென்பார் முடியாதவென்றும் நானென்பதில் தானாய்விளங்குகின்றதென்பார், நானல்லவென்றும் தானென்பதற்கு நான் வேறல்லாததென்பார், பிறனல்லவென்றும், அதுவதுவாய் விளங்குகின்றதென்பார், ஒன்றுமல்லவென்றுங்கூறினார்.

இதுவுமது.

இருளன்றி யொளியன்றி யளவன்றி யலைவன்றி யியல்பொன்றின் றிப்
பொருகின்ற பூதங்கள் பலபொருள்க ளன்றிநிறை புரணமாகி
உருவன்றி யருவன்றி யுளதன்றி யுண்டில்லை யன்றியொன்றாய்
வருகின்ற திரிபுடியி னடுத்தோன்று மறவாத மதித்துக்கொள்வாய்.

இ-ள். இருளன்றி - இருளுமல்லாமல், ஒளியன்றி - பிரகாசமுமல்லாமல், அலைவன்றி - அலைவுமல்லாமல், அளவன்றி-பிரமாணமுமில்லாமல், இயல்பொன்றின்றி-ஒருகுணமுமில்லாமல், பொருகின்றபூதங்கள்-ஒன்றுக்கொன்று பொருந்துகின்ற பஞ்சபூதங்களும், பலபொருள்கள் - நாநாவிதமானவஸ்துக்களும், அன்றி - அல்லாமல், நிறைபுரணமாகி-நிறைந்திருக்கின்ற பூரணசொருபமாயும், உருவன்றி - உருவமுமில்லாமல், அருவன்றி - அருவமுமில்லாமல், உளதன்றி-சத்துமல்லாமல், உண்டில்லையன்றி - சத்து அசத்துமல்லாமல், ஒன்றாய் -

ஏகமாயும், வருகின்ற - வராநின்ற, திரிபுடியின் - ஞாதுருஞானஞாயங்களின், நடுத்தோன்றும் - மத்தியிற்றோன்று (வதை), மறவாது - மறவாமல், மதித்துக் கொள்வாய் - வரையறுத்து அறிவாய் —எ-று.

எ - து. இருளுமல்லாமல், பிரகாசமுமல்லாமல், அலேவுமல்லாமல், பிரமாணமுமில்லாமல், ஒருகுணமு மில்லாமல், ஒன்றுக் கொன்று பொருந்துகின்ற பஞ்சபூதங்களும் நாநாவிதமான வஸ்துக்களும் அல்லாமல், நிறைந்திருக்கின்றபூரணசொரூபமாயும், உருவமுமில்லாமல், அருவமுமில்லாமல், சத்துமல்லாமல், சத்து அசத்துமல்லாமல், ஏகமாயும், வராநின்ற ஞாதுரு ஞான ஞாயங்களின் மத்தியிற்றோன்றுவதை மறவாமல் வரையறுத்து அறிவாய்—எ-ம்.

ப-ம். சுயம்பிரகாசமென்பார், இருளன்றியென்றும் தன்னையறிதற்குவேறு அறிவில்லையென்பார், ஒளியன்றியென்றும் போதல் வருதல் இல்லாததென்பார். அலேவின்றியென்றும் வியாபகத்து மட்டில்லையென்பார், அளவின்றியென்றும் திரிகுணரகிதமென்பார், இயல்பொன்றின்றியென்றும், சாக்ஷாத்காரமானதன்னிடத்தில் வேறுபொருளில்லையென்பார், பூதங்கள்பலபொருள்கள் அன்றென்றும் நிறைவென்பார், பூரணமென்றும் விடயிகரிக்காததென்பார், உருவன்றியென்றும் திரிஸ்யமல்லாத ஆநந்தவடிவமென்பார், அருவன்றியென்றும் சித்தைத்தவிரச் சத்தியில்லையென்பார், உளதன்றியென்றும் சத்துஅசத்தென்று நிருவகிக்கக்கூடாத அகோசரமென்பார், உண்டில்லையன்றியென்றும் திரிபுடி மூன்றினுள்ளும் ஏகமாய்விளங்குகின்றதென்பார், ஒன்றால் வருகின்ற திரிபுடியின்நடுத்தோன்றுமென்றும் நினைப்புமறப்பு இன்றி சுயமாய் விளங்குகின்றதென்பார், மறவாது மதித்துங்கொள்வாயென்றுங்கூறினர்.

இ-உ-க-ம். சர்வமும் பிரமமயமான அபரோக்ஷ ஞானத்ம சாட்சாத்காரமாய் விளங்கும் அனுபவமே விதேகமுத்தியென்பதாம். (40)

## வஸ்துவின் இலக்கணம் பாடுதனின்.

அவ்வகையாம் பரவடிவை யறிவுநிறை வுறவிரிவாயருள்வாயென்ற
செவ்வியவள்ளலுக்குமுனி செப்புவான்பெருங்கற்பஞ்சேர்ந்தபோதி
எவ்வகைமு லங்களுக்கு மூலமாம் பிரமமே யிலங்காநிற்கும் [ல்
வவ்வுமனத் தொழின்மாற்றி தனேமாய்த்தாற் பெயரிறந்த வஸ்துவாகும்.

இ - ள். அவ்வகையாம் - அத் தன்மையாகிய, பரவடிவை - (சிதானந்தமான) பிரமசொரூபத்தை, அறிவுநிறைவுற - ஞானம்பூரணமாம் (பொருட்டு), விரிவாயருள்வாய் - விபரமா யனுக்கிரகஞ்செய்வாய், என்ற - என்றுகேட்ட, செவ்வியவள்ளலுக்கு - அழகுள்ள இராமருக்கு, முனிசெப்புவான் - வசிட்ட

முனிசொல்லுவார், பெருங்கற்பஞ்சேர்ந்தபோதில் - மகாகற்பம் வந்தபோது எவ்வகைமூலங்களுக்கும் - எவ்வகைப்பட்ட காரணங்களுக்கும், மூலமாம்-காரணமான, பிரமமே - பிரமசொரூபமே, இலங்காநிற்கும்-பிரகாசிக்கும், வவ்வும்-(விடயங்களைக்) கிரகிக்கின்ற, மனத்தொழின்மாற்றி - மனோவிருத்தியைநீக்கி தன்மையாய்த்தால்-அகங்கார ஆத்மாவைககெடுத்தால், பெயரிறந்தவஸ்துவாகும்-நாமமற்ற பிரமவஸ்துவாகும்—எ-று.

எ - து. அத்தன்மையாகிய சிதானந்தமான பிரமசொரூபத்தை ஞானம் பூரணமாம்பொருட்டுவிபரமாய் அனுக்கிரகஞ்செய்வாய்என்றுகேட்ட அழகுள்ள இராமருக்கு வசிட்டமுனிசொல்லுவார். மகாகற்பம்வந்தபோது எவ்வகைப்பட்ட காரணங்களுக்கும் காரணமான பிரமசொரூபமே பிரகாசிக்கும். விடயங்களைக்கிரகிக்கின்ற மனோவிருத்தியைநீக்கி அகங்காராத்மாவைக் கெடுத்தால் நாமமற்ற பிரமவஸ்துவாகும்—எ-ம்.

இ-ம். அத்தியந்திக பிரளயத்திற் சத்தாமாத்திரமாய் பிரகாசிக்கின்ற பிரமம் அகம்பாவமற்ற இடத்தில் அகோசாமாய் விளங்குமென்பதாம். ()

இதுவுமது.

தெறித்தறியும் பொருளைக்காச் சீவவறிவதுவாகச் செப்பலாகும்
விரித்தபுல னனுபவித்து மனுபவியா மனமதுவாய் விளம்பலாகும்
புரித்தவுணர் வொளிநெஞ்சமுலகிவற்றினறிவதுவாய்ப்புகலலாகும்
பரித்ததொழிற் செயினுங்கற்போலிருக்கு நிலையதுவாய்ப் பகரலாகும்.

இ – ள். தெறித்தறியும் - எதிரிட்டறிகின்ற, பொருளைக்கா - சகத்தைப்பாராத, சீவவறிவு - சீவசைதன்னியத்தை, அதுவாகச்செப்பலாகும் - அப்பிரமமாகச்சொல்லலாம், விரித்த - பரவிய, புலனனுபவித்தும் - விடயங்களையனுபவித்தும், அனுபவியாமனம் - அனுபவியாதமனதை, அதுவாய் விளம்பலாகும் - அப்பிரமமாகச்சொல்லலாம், புரித்தவுணர் - உண்டான விடயஞானமும், ஒளி-(சூரியாதி) பிரகாசமும், நெஞ்சம் - மனமும், உலகு - திரிஸ்யமுமாகிய, இவற்றின் - இவைகளின், அறிவு - (சர்வசாட்சியாகிய) அறிவை, அதுவாய்ப்புகலலாகும் - அப் பிரமமாகச்சொல்லலாம், பருத்த தொழிற்செயினும் மிகுந்த கருமங்களைச்செய்தாலும், கற்போலிருக்குநிலை மலைபோலிருக்கின்ற நிச்சயத்தை, அதுவாய்ப்பகரலாகும் - அப் பிரமமாகச்சொல்லலாம் எ-று.

எ - து. எதிரிட்டறிகின்ற சகத்தைப்பாராத சீவசைதன்னியத்தை அப்பிரமமாகச் சொல்லலாம். பரவிய விடயங்களை அனுபவித்தும். அனுபவியாத மனதை அப் பிரமமாகச் சொல்லாம். உண்டான விடயஞானமும் சூரியாதிபிரகாசமும் மனமும் திரிஸ்யமுமாகிய இவைகளின் சர்வசாட்சியாகிய அறிவை அப் பிரமமாகச் சொல்ல

லாம். மிருந்த கருகமங்களைச்செய்தாலும் மலைபோலிருக்கின்றநிச்சயத்தை அப் பிரமமாகச் சொல்லலாம்—எ-ம்.

இ-ம். திரிஸ்யதிருஷ்டியின்றித் திருக்குதிருஷ்டியிற் சீவிக்கின்ற சிவனும், விடயானுபவமின்றி ஆத்மானுபவமா யனுபவிக்குமனமும், திரிபுடிக்குச் சாட்சியான அறிவும், சுவானுபவத்தினாற் கன்மங்களைச் செய்துஞ் செய்யாம லிருக்கின்ற நிச்சயமும், பாமார்த்த சொரூபமேயென்பதாம். (42)

இதுவுமது.

முடிவுகன வஞ்ஞான மில்லாநீ டுயிலதுவா மும்மையாகி, அடர் தருஞா தாருஞான ஞேயமெழுந் தொடங்குமிட மதுவேயாகுந், திட விசும்பன் றாயிருந்தும விசுமபான நிலையதுவாஞ் சித்தம்புந்தி, படர் மனமபோய்த தாவரம்போற பெறுமுளாறி வொப்பாமப் பரமரூபம்

இ-ள். முடிவு - அந்தமும், கனவு-சொற்பனமும், அஞ்ஞானம் - சடமும், இல்லா - இலலாத, நீள்துயில நீண்ட (யோக) நித்திரையானது, அது வாம் - அவ்வஸ்துவாகும், மூமமையாகி - மூன்றாகி, அடர்தரும் - நெருங்கிய ஞாதுரு ஞாதாவும், ஞானம் - அறிவும், ஞேயம - விடயமென்னும், மும் மையாகி - திரிபுடியானது, எழுந்தொடுங்கும் - உண்டாகியடங்கும், இடம், ஸ்தானமானது, அதுவேயாகும் - அவ்வஸ்துவேயாம், திடவிசும்பு - பூதாகாயம், அன்றாயிருநதும் - அலலாததாயிருந்தும், விசும்பானநிலை - (ஞானா)காய மான நிலைமையானது, அதுவாம் அவ்வஸ்துவாகும், சிததம் சித்தமும் புந்தி - புத்தியும், படர்மனம - விரிந்தமனமு (மாகிய இவைகள்), போய் - நீங்கி, தாவரம்போல - மரங்களைப்போல, பெறும் - பெற்ற, உளறிவு - உள்ளு ணர்வானது, அப் பரமரூபம்-அப் பிரமசொரூபத்தை, ஒப்பாம்- ஒக்கும்—எ-று.

எ-து. அந்தமும், சொற்பனமும், சடமும், இல்லாத நீண்ட யோக நித்திரையானது அவ்வஸ்துவாகும். மூன்றாகி நெருங்கிய ஞாதாவும், அறிவும், விடயமென்னும் திரிபுடியானது உண்டாகி அடங்கும் ஸ்தானமானது அவ்வஸ்துவேயாம். பூதாகாயம் அல்லாத தாயிருநதும ஞானாகாயமான நிலைமையானது அவ்வஸ்துவாகும். சித்தமும், புத்தியும், விரிந்தமனமும்மாகிய இவைகள் நீங்கி மரங்களைப் போல பெற்ற உள்ளுணர்வானது அப் பிரம சொரூபத்தை ஒக்கும்—எ-ம்.

இ-ம். அறிதுயிலும், திரிபுடியினாதாரமும், ஞானாகாசமும், அந்தக்கரண ஞானமின்றி சுழுத்தி ஞானமுள்ள தாவரவறிவும் பிரமஞானத்துக்கு உவமான மாகச் சொன்னதாம். (43)

இதுவுமது.

அயனொடுமால் சங்கரனுஞ் சதாசிவனு மிந்திரனு மருக்கன்றானும்
வியனிலுப சாந்தராம் வேலையினி லுபாதியெலாம் விட்டுநீங்கிப்
பயனில்சக மென்கின்ற பற்றகன்று சின்மயமாம் பரமரூபம்
உயர்விகற்ப மிலாவடிவா யெங்குநிறை சிவமாகி யொன்றாய் நிற்கும்.

இ - ள். அயனொடும் - பிரமாவோடும், மால் - விஷ்ணுவும், சங்கரனும்- உருத்திரனும், சதாசிவனும் - சதாசிவனும், இந்திரனும் - தேவேந்திரனும், அருக்கன்றானும் - சூரியனும் ஆகிய இவர்கள், உபசாந்தராம் - உபசாந்தர்களாகின்ற, வேலையினில் - காலத்தில், வியனில் - மேன்மையில்லாத, உபாதியெலாம் - உபாதிகளியாவையும், விட்டு நீங்கி - விடுபட்டு, பயனில் - பிரயோசனமில்லாத, சகமென்கின்ற - உலகமென்கின்ற, பற்றகன்று - இச்சைவிட்டு, சின்மயமாம் - ஞானமயமாகிய, பரமரூபம் - பிரமசொரூபமானது, உயர் - மேலான, விகற்பமிலா வடிவாய் - நிர்விகற்பசொரூபமாய், எங்குநிறை - எங்கும் (பரிபூரணமாய்) நிறைந் (திருக்கின்ற), சிவமாகி - சிவசொரூபமாய், ஒன்றாய் நிற்கும் - அத்துவிதமாயிருக்கும்—எறு.

எ - து. பிரமாவோடும், விஷ்ணுவும், உருத்திரனும், சதாசிவனும், தேவேந்திரனும், சூரியனுமாகிய இவர்கள் உபசாந்தர்களாகின்றகாலத்தில் மேன்மையில்லாத உபாதிகளியாவையும் விடுபட்டு பிரயோசனமில்லாத உலகமென்கின்ற இச்சைவிட்டு ஞானமயமாகிய பிரமசொரூபமானது மேலான நிர்விகற்ப சொரூபமாய் எங்கும் பரிபூரணமாய் நிறைந்திருக்கின்ற சிவசொரூபமாய் அத்துவிதமாயிருக்கும்—எ-ம்.

இ-ம். சிவேஸ்வாசகமென்னும் வாசனாட்சயமே நிருவிகற்பஞானமான சிவசொரூப மென்பதாம். (44)

ஞானவிண்மகன் கதை முற்றிற்று.

ஆக கதை 4-க்கு கவிதை 233.

# லீலை கதை.

## அவதாரிக்கை.

முற்கதையிற் சுயஞ்சைதன்னியனுன பரமாத்மாவே ஜீவேஸ்வர சகமாகத் தோற்றப்பட்டாலும் அவை அப் பிரமத்துக்குப் பின்னப்படாமையைக் காட்டி அச் சைதன்னிய உல்லாசமாயுண்டான மனேமாயையின் பல வானதுற்கடனு கடனுசாமர்த்தியங்களை பிரகாசமாயறிவித்து அம்மாயையை நிவிர்த்திப்பிக்கும் பொருட்டு லீலைகதையைச் சொல்லுகின்றூர்.

## லீலைபதுமன் குண நிரூணம்.

இந்தப் பொருளைய மறுத்திளைப் பாறுமாறோர்
முந்தக் கதைகேள் குணமுற்றிவி வேகமுற்றேன்
விந்தைப் புயத்தோன் பதுமப்பெயர் வேந்தன்மண்மேற்
சிந்தைக் கினிதாங் குணலீலையைச் செம்மதேவி.

இ - ள். இந்தப்பொருள் - இவ் அருத்தத்தில், ஐயமறுத்து இளைப்பாறுமாறு - சந்தேகந்தீர்ந்து விஸ்ராந்தி யடையும்பொருட்டு, ஓர் முந்தக் கதைகேள் - ஒருபழமையான கதையை (இராமநீ) கேட்பாய், மண்மேல் - பூமியின்கண், குணமுறறி (சத்துவ) குணமுதிர்ந்து - விவேகமுற்றோன் - விவேகம்பெற்றவன், விந்தைப்புயத்தோன் - விசயலட்சுமி (வசிக்கின்ற) புயத்தை யுடையவன், பதுமப்பெயர்வேந்தன்-பதுநாமத்தையுடையஓர்அரசன்(உளன்), அச் செம்மல்தேவி – அவ்வரசன்மனைவியானவள், சிந்தைக் கினிதாம்-(அவர்) மனதுக்கினிமையான,குணம்-குணத்தையுடைய, லீலை-லீலாநாமத்தையுடையவளாம்—எ-று.

எ - து. இவ் அருத்தத்தில் சந்தேகந்தீர்ந்து விஸ்ராந்தியடையும்பொருட்டு ஒரு பழமையான கதையை இராமா நீ கேட்பாய். பூமியின்கண் சத்துவகுணமுதிர்ந்து விவேகம் பெற்றவன், விசயலட்சுமி வசிக்கின்ற புயத்தையுடையவன், பதும நாமத்தையுடைய ஓரரசனுளன். அவ் வரசன் மனைவியானவள் அவர்மனதுக்கினிமையான குணத்தையுடைய லீலாநாமத்தை யுடையவளாம்—எ—ம்.

## லீலைசுகிக்கும் உபாயம் விசாரித்தல்.



அன்னு னிழல்போன் மனம்போலய லற்றவன்னுள்
நன்னாயகன் மூப்பிறப்பின்றி நற்காளையாகி
எந்நாளுமொத்தின் புறவென்கொ லுபாயமென்னத்
தொன்னுன்மறையோர்க் குரைத்தாளவர் சொல்லலுற்ருர்.

இ - ள். அன்னுனிழல் - அவ் வரசனதுசாயை (போலவும்), மனம்போல்-மனதைப்போலவும், அயலற்றவன்னுள் - பிரிவுற்ற அந்தலீலையானவள், நன்னாயகன் - நல்லகணவன், மூப்பிறப்பின்றி - சராமரணமில்லாமல், நற்காளையாகி - நல்லஎவ்வனமுள்ளவராய், எந்நாளுமொத்தின்புற - எப்போதுங்கூடிச்சுகிக்க, என்கொல் உபாயமென்ன - என்னவுபாயமென்று, தொன்னுன்மறையோர்க்கு - பழமையான சதுர்வேதப்பிராமணர்களுக்கு, உரைத்தாள்-சொன்னுள், அவர்சொல்லலுற்ருர் - அவர்கள்சொல்லத்தொடங்கினுர்கள்—எ-று.

எ - து. அவ்வரசனது சாயைபோலவும், மனதைப்போலவும், பிரிவற்ற அந்த லீலையானவள் நல்லகணவன் சராமரணமில்லாமல் நல்ல எவ்வனமுள்ளவராய் எப்போதுங் கூடிசசுகிக்க என்னவுபாயமென்று பழமையான சதுர்வேதப் பிராமணர்களுக்குச்சொன்னுள்; அவர்கள் சொல்லத்தொடங்கினுர்கள்—எ-ம.

ப-ம். எப்போதும் அழிவற்ற அறிவோடும் பிரிவற்ற ஆநந்தத்தை யனுபவிக்கும் உத்தியை விசாரித்ததென்பார், மூப்பிறப்பின்றி நற்காளையாகி யெந்நாளுமொத்து இன்புற என் கொல் உபாய மென்னவென்ருர்.

இ-ம். சத்தைவிட்டு நீங்காத சுகத்தை விரும்பினதாம்.

## லீலை சிந்தித்தல்.



செபமுந் தவமுமுத லியாவையுஞ் சித்திநல்கும்
புவனங்களிற் பொன்றுதல் போக்கரிது யாக்குமென்ன
இவள்சிந்தை செய்வா ளிறைவற்குமுன் யாமிறந்தாற்
கவலொன்றறத் தற்பதவாழ்வுகை கூடலாகும்.

இ - ள். செபமுந்தவமும் - செபங்களுந்தபசுகளும், முதலியாவையும்-முதலியவனைத்தும், சித்திநல்கும் - சித்தியைக்கொடுக்கும், புவனங்களில் - உலகங்களில், பொன்றுதல் - மரித்தலை, இயார்க்கும் - இயாவருக்கும், போக்கரிது - நீக்கக்கூடாது, என்ன - என் (றந்தணர்கள்) சொல்ல, இவள் சிந்தை செய்வாள் - இந்தலீலை சிந்திப்பாள், இறைக்குமுன் - (நமது) நாயக (னிறத்தற்கு) முன்பு, யாமிறந்தால் - நாமரித்தால், கவலொன்றற - (நமக்கு)

ஓர் வருத்தமுமின்றி, தற்பதவாழ்வு - நிர்வாணசுகமானது, கைகூடலாகும் - கிடைக்கும்—எ-று.

எ - து. செபங்களுந் தபசுகளும் முதலியவனைத்தும் சித்தியைக் கொடுக்கும் உலகங்களில் மரித்தலை இயாவருக்கும் நீக்கக்கூடாது என்று அந்தணர்கள்சொல்ல, இந்தலீலை சிந்திப்பாள். நமது நாயக னிறத்தற்கு முன்பு நாமரித்தால் நமக்கோர் வருத்தமுமின்றி நிர் வாண சுகமானது கிடைக்கும்—எ-ம்.

ப - ம். மூவர் முதலிய சித்தர்களும் முடிவில் நசிப்பாரென்பார், பொன் றுதல் போக்கரிதியார்க்குமென்றும் சத்திநசிக்கிற்சத்தனுமென்பார், இறை வற்குமுன் யாமிறந்தால் தற்பதவாழ்வு கைகூடலாகுமென்றுங்கூறினர்.

இதுவுமது.

இறைவன் முதற்சாகி லச்சீவனை யிந்தவீட்டில்
உறையும் படிசெய் ததுவென்னையு வந்துகாண்க
நிறையின்ப மெய்தியிருப் பேனிது நேருமாறு
மறைதந்த வாணிபத மேத்துவன் வாழ்த்தியன்றே.

இ - ள். இறைவன்முதற்சாகில் - (எனது) நாயகன்முன்னேயிறந்தால், அச் சீவனை - அச் சீவாத்மாவை, இந்தவீட்டிலுறையும்படிசெய்து - இம்மனை யில் வசிக்கும்படிசெய்து, அது - அச்சீவன், என்னை உவந்துகாண்க-என்னைச் சந்தோஷித்துப்பார்க்க, நிறையின்பம் - பூரணானந்தத்தை, எய்தியிருப்பேன் - அடைந்திருப்பேன், இதுநேருமாறு - இந்நிலை வரும்பொருட்டு, மறைதந்த வாணிபதம் - வேதார்த்தங்களைப் போதித்த சரஸ்வதியினது பாதங்களை, வாழ்த்தி - துதித்து, ஏத்துவன் - தோத்திரஞ்செய்வேன்—எ-று.

எ - து. எனது நாயகன் முன்னே யிறந்தால் அச் சீவாத்மாவை இம் மனையில் வசிக்கும்படி செய்து அச் சீவன் என்னைச் சந்தோஷித் துப் பார்க்கப் பூரணாநந்தத்தை யடைந்திருப்பேன். இந்நிலை வரும் பொருட்டு வேதார்த்தங்களைப் போதித்த சரஸ்வதியினது பாதங்க ளைத் துதித்துத் தோத்திரஞ் செய்வேன்—எ-ம்.

(இ-உ-க-ம்.) சத்தைவிட்டு நீங்காத சித்தே ஆநந்தமாதலால் அதைப் பிரிவற்றிருக்கும் யுத்தியைக்கருதினதாம். (4)

## சரஸ்வதியை மூர்த்தியாகக் கொண்டுபாசித்தல்.

மன்னற் குறையாதி ஜனமந்திரங் கற்பம்வல்லோர்
சொன்னத்தி னின்று சார்பூசார் பூசைபண்ணி

அன்னத்தை நாளுங்கி னுக்கோர்பக லற்பமாயுண்
டின்னிட்டை யாலேமதி பத்துநடந்த வெல்லே.

இ - ள். மன்னற்குறையாது - தன் அரசனுக்குச் சொல்லாமல், நன்மந்திரம் - நல்ல மந்திரங்களிலும், கற்பம் - நல்ல சாஸ்திரங்களிலும், வல்லோர் - வல்லமை (யுடையபெரி) யோர்கள், சொன்னத்தினின்று - அனுக்கிரகஞ் செய்த மார்ககத்தினின்று, சுரர் - தேவரையும், பூசுரர் - பிராமணரையும், பூசைபண்ணி — ஆராதித்து, அன்னத்தை - அசனத்தை, நாள நான்கினுககு - (திரிராத்திரிநீங்கிய) நான்காந்தினத்தில், ஓர்பகல்-ஓர்போது, அற்பமாயுண்டு-கொஞ்சமாகப்புசித்து, இன்னிட்டையால் - இனிதான நிஷ்டையினால், மதி பத்து நடந்த - பத்துமாதஞ்சென்ற, எல்லே - காலத்தில்.

எ - து தன் அரசனுக்குச் சொல்லாமல் நல்ல மந்திரங்களிலும் நல்லசாஸ்திரங்களிலும் வலலமையுடைய பெரியோர்கள் அனுக்கிரகஞ் செய்த மார்க்கத்தினின்று தேவரையும். பிராமணரையும் ஆராதித்து அசனத்தைத் திரிராத்திரி நீங்கிய நான்காந்தினத்தில் ஓர்போது கொஞ்சமாகப் புசிதது இனிதான நிஷ்டையினால் பத்துமாதஞ் சென்றகாலததில்—எ-ம். (5)

## பிரசன்னயான உபாசனாமூர்த்தியைத் துதிசெய்தல்

வானூர்மதி போனிறவாணி மகிழ்ந்துதோன்றி
நீநாடிய தென்னெனநீள்புவ மாநெருப்புக்
கானவமுதக் கதிரேயகத் துன்பமென்னும
பானுளகற்றுங் கதிரேயெனப் பாதமேத்தி.

இ - ள். வானூர் மதிபோல் - ஆகாயத்திற்றோன்றிய பூரணச்சந்திரனைப் போல, நிறவாணி - நிறத்தையுடைய சரஸ்வதியானவள், மகிழ்ந்துதோன்றி - சந்தோஷித்து பிரத்தியட்சமாய், நீ நாடிய தென்னென - (லீலையே) நீவிரும்பிய காரியமென்னவென்று கேட்க, நீள்பவமாம் - நீண்ட சநநமாகிய, நெருப்புகு - அக்கினிக்கு, ஆனு - நீங்காத, அமுதக்கதிரே - சந்திரகிரணமே, அகத்துன்பமென்னும் - மனோதுக்கமென்கின்ற, பானுள் அகற்றும் - இருட்டை நீக்குகின்ற, கதிரேயென - சூரியப்பிரகாசமே என்று, பாதமேத்தி பதத்தைத்துதித்து—எ-று.

எ - து. ஆகாயத்திற்றோன்றிய பூரணசநதிரனைப்போல நிறத்தையுடைய சரஸ்வதியானவள் சந்தோஷித்து பிரத்தியட்சமாய் லீலையே! நீ விரும்பியகாரிய மென்ன வென்றுகேட்க, நீண்ட சநநமாகிய அக்கினிக்கு நீங்காத சந்திரகிரணமே மனோதுக்கமென்கின்ற

இருட்டை நீக்குகின்ற சூரியப்பிரகாசமே யென்று பதத்தைத் துதி த்து—எ-ம். (4)

## தேவி அனுக்கிரகித்தல்.

என்னாயகன்றுஞ் சிலச்சீவனிவ் வில்லினிற்க
முன்னாகவுன்னை நினைபோதிலேன் முன்புதோன்ற
அன்னாயவரங்க ளிரண்டுமளித்தி யென்ன
நன்னாமகளன் பொடுநல்கி நயந்துபோனாள்.

இ - ள். என்னாயகன் துஞ்சில் - என்கணவன் இறங்கில், அச்சீவன் - அந்தச்சீவன், இவ்வில்லில் நிற்க - இவ்வீட்டிலிருக்கவும், முன்னாக - பிரத்தியட்சமாகும்படி, உன்னைநினைபோதில் - உன்னை நினைக்குஞ்சமயத்தில், என்முன்பு தோன்ற - என்முன்னே பிரத்தியட்சமாகவும், அன்னாய - அப்படியான, வரங்களிரண்டும் - இரண்டு வரங்களையும், அளித்தியென்ன - அனுக்கிரகிக்க வேண்டுமென்று (லீலைகேட்க) நல்நாமகள் - நல்ல சரஸ்வதியானவள், அன்பொடுநல்கி - கிருபையுடன் அனுக்கிரகித்து, நயந்துபோனாள் - சுகமாயெழுந்தருளினாள்—எ-று.

எ - து. என்கணவனிறக்கில் அந்தச்சீவன் இவ்வீட்டிலிருக்கவும், பிரத்தியட்சமாகும்படி உன்னை நினைக்குஞ் சமயத்தில் என்முன்னே பிரத்தியட்சமாகவும், அப்படியான இரண்டுவரங்களையும் அனுக்கிரகிக்க வேண்டுமென்று லீலைகேட்க, நல்ல சரஸ்வதியானவள் கிருபையுடன் அனுக்கிரகித்துச் சுகமாயெழுந்தருளினாள்—எ - ம்.

ப - ம். சத்தன் பேதபாவத்தைப் பிரியினும் அபேத பாவத்தைப் பிரியக் கூடாததென்பார், என்னாயகன் துஞ்சில் அச்சீவன் இந்த இல்லில் நிற்கவென்றார்.

இ-ம்.விரும்பினவண்ணமடையும் வரத்தைப்பெற்றதாம். (7)

## காலசக்கரத்தினால் ஆயுள் நீங்குதல்.

பக்கத்தொடு திங்களுறும் பருவங்க டேர்க்கால்
தொக்கிச்செறி நாளதிற் கூம்பு தொடர்ந்த வாண்டு
புக்குற்றதோ ரச்சிமைப் போததினை பியாதி
மிக்குத்திரி காலவன்றேர் விரைந்தோட லோடும்.

இ - ள். பக்கத்தொடு - பட்சத்துடன், திங்கள் - மாதமும், உறும்பருவங்கள் - பொருந்தின இருதுக்களு (மாகிய), தேர்க்கால் - வண்டில்களும், தொக்கிச்செறி - கூடநெருங்கிய, நாளதிற்கூம்பு - தினங்களாகிய மேற் பரப்பு

களும், தொடர்ந்த ஆண்டு - சேர்ந்தவருடமாகிய, புக்குற்றதோரச்சு - புகுந்த ஒப்பற்ற அச்சும், இமைப்போது - கணப்போதாகிய, அதனுபி - அதனடுவும், ஆதி - முதலான (இவைகளையுடைய), மிக்குத்திரி - மிகவுஞ் சுழலுகின்ற, காலவன்றேர் - காலசக்கரமானது, விரைந்தோடலோடும் - வேகமாகச் செல்லவும்—எ-று.

எ - து. பட்சத்துடன் மாதமும் பொருந்தின இருதுக்களுமாகிய வண்டில்களும், கூடிநெருங்கிய தினங்களாகிய மேற்பரப்புகளும், சேர்ந்தவருடமாகிய புகுந்தவொப்பற்ற அச்சும், கணப்போதாகிய அதனடுவும் முதலான இவைகளையுடைய மிகவுஞ்சுழலுகின்ற காலசக்கரமானது வேகமாகச் செல்லவும்—எ - ம். (8)

## சத்தன்பிரிந்த விசனத்தைத் தேவிமாற்றுதல்.

இன்பங் கரையற் றிடலீலை யிருந்தவெல்லை
அன்பன் சிலநாளி லிறந்தன னன்னமன்னாள்
துன்பஞ் சுடும்வெம்மை பொறாதுயிர் துஞ்சுமுன்னே
முன்பின்றி விண்ணின்று சொன்மாதிவண் மோகமாற்றி.

இ - ள். இன்பம் - ஆனந்தமானது, கரையற்றிட - எல்லையறும்படி, லீலையிருந்தவெல்லை - லீலையானவளிருந்தகாலத்தில், அன்பன் - (தனது) நாயகன், சிலநாளில் - சிறிதுதினத்தில், இறந்தனன் - மரணமடைந்தான், அன்னமன்னாள் - ஒதிமத்துக்கொப்பான, (லீலையான) வள், துன்பஞ்சுடும் - சோ (காக்கினி) யெரிகின்ற, வெம்மைபொறாது - வெப்பம் பொறுக்கமாட்டாமல், உயிர்துஞ்சுமுன்னே - சீவன் பிரிவதற்குமுன்னமே, முன்பின்றி - பிரத்தியட்சப்படாமல், விண்ணின்று - ஆகாயத்தினின்றுக்கொண்டு, சொன்மாது - சரஸ்வதியானவள், இவண்மோகமாற்றி - இந்தலீலையின் மோகத்தைக் கெடுத்து—எ-று.

எ - து. ஆனந்தமானது எல்லையறும்படி லீலையானவளிருந்த காலத்தில், தனது நாயகன் சிறிது தினத்தில் மரணமடைந்தான். ஒதிமத்துக்கொப்பான லீலையானவள் சோகாக்கினி யெரிகின்ற வெப்பம்பொறுக்கமாட்டாமல் சீவன் பிரிவதற்கு முன்னமே பிரத்தியட்சப்படாமல் ஆகாயத்தி னின்றுக்கொண்டு சரஸ்வதியானவள் இந்தலீலையின் மோகத்தைக் கெடுத்து—எ - ம். (9)

## சத்தன் பிரிந்த இடத்தும் பிரியாதிருக்கும் உத்தி யுரைத்தல்.



மாய்வுற்ற வேந்தை மலரான் மறைவித்து வைப்பாய்
எய்வுற்ற பூவுலருமெய் யழியாது சீவன்
பாய்வுற் றகலாது பொன்மண்டபம் பற்றிநிற்குந்
தோய்வுற் றிவன்றோள் விரைவிற்றுயர் தீர்தியென்றாள்.

இ - ள். மாய்வுற்றவேந்தை - மரணமடைந்த அரசனை, மலரால் - புட்பங்களினால், மறைவித்துவைப்பாய் - மூடிவைப்பாய், எய்வுற்ற - பொருந்திய, பூவுலரும் - புட்பங்கள் வாடும், மெய்யழியாது - சரீரங்கெடாது, சீவன் பாய்வுற்றகலாது - சீவனீங்காமல், பொன்மண்டபம் - சொன்னமயமான அந்தப்புரத்தை, பற்றிநிற்கும் - அடைந்திருக்கும், இவன்றோள் - இவ்வரசனது புயத்தை, தோய்வுற்று - பொருந்தி, விரைவில் - சீக்கிரத்தில், துயர்தீர்தியென்றாள் - துக்கந்தீரக்கடவாயென் (றருளிச் சரஸ்வதி மறைந்த)னள்—எ-று.

எ - து, மரணமடைந்த அரசனை புட்பங்களினால் மூடிவைப்பாய், பொருந்திய புட்பங்கள் வாடும் சரீரங்கெடாது, சீவ னீங்காமல் சொன்னமயமான அந்தப்புரத்தை அடைந்திருக்கும். இவ்வாசனுடைய புயத்தைப்பொருந்தி சீக்கிரத்தில் துக்கநீரக்கடவாயென் றருளிச் சரஸ்வதி மறைந்தனள்—எ-ம்.

ப-ம். விசேடஞானநீங்கினுஞ் சாமான்யஞானநீங்காதென்பார், சீவன் பாய்வுற்றகலாதென்றும் அவ்விசேடஞானத்தோடுங் கூடிய சத்தைவிரைவிற் கூடிச் சுகிப்பாயென்பார், தோய்வுற்றிவன்றோள் விரைவில் துயர்தீர்தி யென்றுங் கூறினர்.

இ-ம். பிரிந்தவிடத்தும் பிரியாதிருக்கும் நிலையைப்பெற்றதாம். (10)

## விசேடத்தோடுஞ் சேர்ந்திருக்க விரும்புதல்.



வாடாவ சரீரிதன், சொற்படி மன்னைவைத்தாள்
ஓடாதஷ்வாவியுடை யாளுளத் துன்னவாணி
நீடாது வந்தாளென தன்பனை நீங்கிவாழ்தல்
கூடாதவன் சேர்வுழி கூட்டுவதில்லை யென்றாள்.

இ - ள். வாடா - கெடாத, அசரீரிதன் - அம்மூர்த்தமானசரஸ்வதியின், சொற்படி - வசனப்படிக்கு, மன்னைவைத்தாள் - அரசனைப் (பூவினான்மறைத்து) வைத்தாள், ஓடாத ஆவியுடையாள் - பிரியாத உயிரையுடைய லீலையானவள், உளத்துன்ன - உள்ளத்தின் கண்சிந்திக்க, நீடாதுவந்தாள் - சீக்கிரத்தில் வந்தவளாகிய, வாணி - சரஸ்வதியை (நோக்கி), எனதன்பனை - எனது நாயகனை, நீங்கிவாழ்தல்கூடாது பிரிந்துவாழ்வதுகூடாது, அவன்

சேர்வுழி - அவர்சேர்ந்த இடத்தில், வல்லைக்கூட்டுதி - சீக்கிரத்திற்சேர்ப்பாய், என்றுள் - என்றுலீலைசொன்னுள்--எ-று.

எ — து. கெடாத அம்மூர்த்தமான சரஸ்வதியின் வசனப்படிக்கு அரசனைப் பூவினுள்மறைத்து வைத்தாள், பிரியாத உயிரையுடையலீலையானவள உள்ளத்தின் கண்சிந்திக்க சீக்கிரத்தில்வந்தவளாகியசரஸ்வதியைநோக்கி எனதுநாயகனைப் பிரிந்துவாழ்வதுகூடாது, அவர் சேர்ந்தவிடத்தில் சீக்கிரத்திற் சேர்ப்பாயென்று லீலைசொன்னுள்—எ-ம்.

## விரும்பினது அடையத் தேவிமத்தியகத ஞானத்தை உபதேசித்தல்.

மனவான மும்வானமுமாசறு ஞானவானும்
எனவான மூன்றின் முதல்வான மிரண்டுமின்றிக்
கனஞான வானெய்துதல் கண்டதை விட்டுபோத
நனவா யயலொன்றை யுற்றுனடு ஞானவானும்.

இ - ள். மனவானமும் - மனுகாயமும், வானமும் - பூதாகாயமும், மாசறுஞானவானும் - களங்கமற்ற ஞானுகாயமும், எனவானமூன்றில்-என்கின்ற மூன்றுகாயத்தில், முதல்வானமிரண்டுமின்றி - முந்தின இரண்டு ஆகாயமுமில்லாமலிருக்கின்ற, கனஞானவான்-மகத்தானசிதாகாயமானது,கண்டதை-காணப்பட்ட (வொரு) வஸ்துவில், எய்துதல்விட்டு-அடைதலைவிட்டு, போதநனவாய்-மிகவுந்தெளிவாக, அயலொன்றையுற்றுல் - பக்கத்தி (லிருக்கின்ற) ஒருவஸ்துவை யடைந்தால், (அப்போது) நடுஞானவானும் - மத்தியகதமான சிதாகாயமாம்—எ-று.

எ — து. மனுகாயமும், பூதாகாயமும், களங்கமற்ற ஞானுகாயமும் என்கின்ற மூன்றுகாயத்தில் முந்தின இரண்டாகாயமுமில்லாமலிருக்கின்ற மகத்தான சிதாகாயமானது காணப்பட்ட வொருவஸ்துவில் அடைதலைவிட்டு மிகவுந்தெளிவாகப்பக்கத்தி லிருக்கின்றவொருவஸ்துவை யடைந்தால் அப்போது மத்தியகதமான சிதாகாயமாம்.

இ ம். சத்தனது பேதஞானமறிவித்ததற்கு அபேதஞானத்தைப்போதித்ததாம். (12)

## மத்தியகதஞானம் விளங்கும் உத்தியுரைத்தல்.

சங்கற்ப சாலந்தவிர்ந்தா லுபசாந்தமாகித்
துங்கப்புவி யாவையுமா லியசோதி தோன்றும்

இங்கற்பமுங் காணபன வில்லைவெறும் பொய்யென்றால்
அங்கப்பொழு தவ்வறிவா லதுசேர்த லாகும்.

இ - ள். சங்கற்பசாலம் - சங்கற்பசமூகங்கள், தவிர்ந்தால் - ஒழிந்தால், உபசாந்தமாகி - சாந்தமாகவும், துங்கம் - பரிசுத்தமாகவும், புவியாவையு மாகிய - சகங்களனைத்துமாகவும் (விளங்குவ) தாகிய, சோதிதோன்றும் - சிற்பிரகாசமுதயமாம், இங்கு-இவ்விடத்தில், அற்பமும் - எவ்வளவும், காணபன வில்லை - திரிஸ்யங்களில்லை, வெறும் பொய்யென்றால் - அத்தியந்தபாவமென், றறிந்தால், அப்பொழுது - அச்சமயத்தில், அவ்வறிவால் - அந்தஞானத்தினால், அதுசேர்தலாகும் - அச் சிதாகாயத்தை யடையலாம்—எ-று.

எ - து, சங்கற்பசமூங்கள் ஒழிந்தால் சாந்தமாகவும், பரிசுத்த மாகவும், சகங்களனைத்துமாகவும் விளங்குவதாகிய சிற்பிரகாச முதய மாம். இவ்விடத்தில் எவ்வளவும் திரிஸ்யங்களில்லை அத்தியந்த பாவ மென்று அறிந்தால் அச்சமயத்தில்அந்த ஞானத்தினால் அச்சிதா காயத்தை யடையலாம்—எ-ம.

இ-ம். பேதபாவநீங்கிச் சர்வம் பிரமமயமாய் விளங்கும், சுயம் பிரகாச மாயின் சங்கற்ப நிறைவேறும் என்பதாம். (13)

## நிஷ்டைகூடல்.

நம்மா லதுசேர் கெனநாமக ணல்கி யேக
இம்மாது விகற்ப மிறந்த சமாதி யெய்தித்
தம்மா லுறைகூட கல்புள்ளெனத் தாவு நெஞ்ச
மைம்மா லுறுகூட் டினைமாற் றின ளக்கணத்தில்.

இ — ள். நம்மால - நமது (கிருபை) யினால், அதுசேர்கென - அச் சிதா காயத்தை யடையக்கடவாயென்று, நாமகள்நல்கியேக - சாஸ்வதி யனுக்கிர கித்துச்செல்ல, இம்மாது - (பின்பு) இந்த லீலையானவள், விகற்ப மிறந்தசமா தியெய்தி - நிர்விகற்பசமாதியையடைந்து தம்மாலுறை - தங்களால்வசிக்கும், கூடு அகல்புள்ளென - கூட்டைவிட்டு நீங்கிய பறவைகளைப்போல, தாவுநெஞ் சம் - அவாவுகின்ற மனமானது, மைம்மாலுறு - களங்கமும் விருப்பமுமுள்ள, கூட்டினை - சரீரத்தை, அக்கணத்தில் - அந்தட்சணத் தில், மாற்றினள்-நீக்கி னள்—எ-று.

எ — து. நமது கிருபையினால் அச் சிதாகாயத்தை யடையக் கடவா யென்று சாஸ்வதி அனுக்கிரகித்துச்செல்ல, பின்பு இந்தலீலை யானவள்நிர்விகற்ப சமாதியையடைந்துதங்களால் வசிக்கும்கூட்டை

விட்டு நீங்கிய பறவைகளைப்போல அவாவுமின்றமனமானது களங்க மும்விருப்பமுமுள்ளசரீரத்தை அந்தட்சணத்தில் நீக்கினாள்—எ-ம்.

இ-ம். தேவி அனுக்கிரகத்தினால் நிட்டைகூடி சாமான்ய ஞானத்தினின் றும் விசேடஞானம் வெளிப்பட்டதாம். (14)

## சத்தன் பேதபாவனா ரூபத்தைத் தரிசித்தல்.



மங்காத ஞானவிசும் பூடொரு மாநகர்க்கே
வெங்கா தலனெட் டிரண்டாண் டுளவீரனாகில்
சிங்கா தனமேற் செறிவேந் தருஞ்சேனை நாலும்
பொங்கா தரமா தரும்போற்ற விருத்த லோடும்

இ-ள். மங்காத கெடாத, ஞானவிசும்பூடு - ஞானாகாயமத்தியில், ஒரு மாநகர்க்கு - ஒருபெரிதானபட்டணத்துக்கு, வெங்காதலன் - விருப்பமுள்ள புருடனானவன், எட்டிரண்டாண்டுள-பதினாறுவயதுள்ள, வீரனாகி - வீர(முள் ளவாச)னாய், சிங்காதனமேல் அரியணையின்மேல், செறிவேந்தரும் - நெருங் கியவரசர்களும், சேனைநாலும் நான்குபடைகளும், பொங்காதரமாதரும்-மிகு ந்த ஆசையையுடைய ஸ்திரீகளும், போற்ற - புகழும்படி, இருத்தலோடும் - வீற்றிருக்கவும்-எ-று.

எ - து. கெடாத ஞானாகாய மத்தியில் ஒருபெரியதான பட்ட ணத்துக்கு விருப்பமுள்ள புருடனானவன் பதினாறுவயதுள்ள வீர முள்ள அரசனாய் அரியணையின்மேல் நெருங்கிய அரசர்களும் நான் குபடைகளும் மிகுந்த ஆசையையுடைய ஸ்திரீகளும் புகழும்படி வீ ற்றிருக்கவும்—எ-ம.

## தரிசித்துமீண்டு தேவியைச் சிந்தித்தல்

### வேறு.

தன்னுயிர்கேழ் வனையந்த லீலைநோக்கிச்
சபைபுகுந்தாள் மிகவியந்தாட் சபையைச் சூழ்ந்த
மன்னவரு முனிவரரு மறைவல்லோரும்
மங்கையரு நாற்படையு மற்றுளோரும்
நன்னிலமுங் குன்றிகளு மூருநாடும்
நதித்திரளும் பலபொருளுநண்ணிநோக்கி
மின்னனையாண் மீண்டுதன திடத்தின்மேவி
வெண்ணிறவா ணியைநினைத்தாள் விருப்பினோடும்.

இ - ள். தன்னுயிர்கேழ்வனை - தனதுபிராணநாயகனை, அந்தலீலைநோ க்கி அந்தலீலையானவள்பார்த்து, சபைபுகுந்தாள் - (அவனிருக்கும்

யையடைந்தான், மிக்வியந்தான் - மிகவுமதிசயித்தான், சபையைச்சூழ்ந்த - சபையைச்சூழ்ந்திருக்கின்ற, மன்னவரும் - (மேற்குவாயிலில்) அரசர்களும், முனிவாரும் - (கீழ்வாயிலில்) முனீஸ்வரர்களும், மறைவல்லோரும் - வேதங்களில் வல்லமையையுடைய பிராமணர்களும், மங்கையரும் - (தென்வாயிலில்) ஸ்திரீகளும், நாற்படையும் - (உத்தரவாயிலில்) சதுரங்கசேனைகளும், மற்றுளோரும் - ஏனையோரும், நன்னிலமும் - நல்லபூமியும், குன்றுகளும் - மலைகளும், ஊரும் - நகரங்களும், நாடும் - நாடுகளும், நதித்திரளும் - நதிச்சமூகமும், பலபொருளும் - பலவஸ்துக்களு(மாகியவிவைகளை), நண்ணிநோக்கி - போய்ப்பார்த்து, மின்னனையாள் - மின்னற்கொடிக்கு ஒப்பாகிய லீலையானவள், மீண்டு - திரும்பி, தனதிடந்தின்மேவி தனது அந்தப்புரத்திலுள்ள (சரீரத்திற்) புகுந்து, வெண்ணிறவாணியை - வெண்ணிறத்தையுடைய சரஸ்வதியை, விருப்பினோடும் - பிரியத்தோடும், நினைத்தாள் - சிந்தித்தாள்—எ-று.

எ - து. தனது பிராணநாயகனை அந்த லீலையானவள்பார்த்து அவனிருக்குஞ் சபையை யடைந்தாள்; மிகவு மதிசயித்தாள் சபையைச் சூழ்ந்திருக்கின்ற மேற்குவாயிலில் அரசர்களும், கீழ்வாயிலில் முனீஸ்வரர்களும், வேதங்களில் வல்லமையுடைய பிராமணர்களும், தென்வாயிலில் ஸ்திரீகளும், உத்தரவாயிலில் சதுரங்க சேனைகளும், ஏனையோரும், நல்லபூமியும், மலைகளும், நகரங்களும், நாடுகளும், நதிச்சமுகமும், பலவஸ்துக்களுமாகிய இவைகளைப் போய்ப்பார்த்து மின்னற்கொடிக்கொப்பாகிய லீலையானவள் திரும்பி தனது அந்தப்புரத்திலுள்ள சரீரத்திற்புகுந்து வெண்ணிறத்தையுடைய சரஸ்வதியைப் பிரியத்தோடும் சிந்தித்தாள்—எ-ம்.

## சீவன்மரித்த இடத்திருக்க மறுபிறப்புற்றது இயாதெனின்.

வந்துயரா தனத்திருந்த வாணிதன்னை
வணங்கியென தன்பனுக்கு மரித்தபின்பு
பந்தமுறு மயக்கமே வடிவாய்நிற்கப்
பழையபடி பிறப்புற்ற படியீதென்ன
இந்தவுல குறுமயக்கம் போகச்சொல்வா
யெனலீலை கேட்டனுமே யிறைவிசொல்வாள்
உந்துசிருட்டியின்முன்பு மயக்கமட்டே
வுருவாமிச் சிருட்டிவே றுதித்ததாகும்.

இ - ள். வந்து - பிரத்தியக்ஷமாய், உயராதனத்திருந்த - மேலான சிங்காசனத்தெழுந்தருளிய, வாணிதன்னை - சரஸ்வதியை, வணங்கி - நமஸ்கரித்து, எனதன்பனுக்கு - என்நாயகனுக்கு, மரித்தபின்பு - இறந்தபின்

(இனித்திரிஸ்யமான சர்க்கத்தைக்காட்டிலும்), பழையபடி - முன்போலவே, பந்தமுறுமயக்கமேவடிவாய் - பந்தமுள்ள பிரமாத்மகமாகியும், நிற்கும் - (அம் மூர்த்தமாகியு) மிருக்கின்ற, பிறப்பு - (வேறான) சர்க்கமானது, உற்றபடியீ தென்ன - உண்டானபிரகாரம் இபபடிப்பட்டதென்று, இந்தவுல குறுமயக் கம் - இச்சர்க்கத்தினுடைய சத்தியத்துவபிரமை, போக - நீங்கும்பொருட்டு, சொல்வாயென - அருள்வாயென்று, லீலைகேட்டலும் - லீலைகேட்கவும், இறைவிசொல்வாள் - சரஸ்வதியுரைப்பாள், உந்துசிருட்டியின் முன்பு - முன்னுயர்வான (பிராமண) சிருட்டியின், மயககமட்டே - (அரசப்) பிராந்தியினளவே, உருவாம் - (பதுமனென்னும்) வடிவமான, இச்சிருட்டி - இந்தச்சிருட்டியானது, வேறுதித்ததாகும் - வேறாகத்தோற்றினதாகும் —எ-று.

எ - து. பிரதஷிட்சமாப் மேலான சிங்காசனத்தெழுந்தருளிய சரஸ்வதியை நமஸ்கரித்து, எனதுநாயகனுக்கு இறந்தபின் இனித் திரிஸ்யமான சர்க்கத்தைக்காட்டிலும் முன்போலவே பந்தமுள்ள பிரமாத்மகமாகியும, அமூர்த்தமாகியு மிருக்கின்ற வேறான, சர்க்கமானது உண்டான பிரகார மிப்படிப்பட்டதென்று இசசர்க்கத்தினுடைய சத்தியத்துவ பிரமை நீங்கும்பொருட்டு அருள்வாயென்று லீலைகேட்கவும் சரஸ்வதியுரைப்பாள். முன்னுயர்வான பிராமண சிருட்டியின் அரசப்பிராந்தியினளவே பதுமனென்னும வடிவமான இந்தச் சிருட்டியானது வேறாகத்தோற்றினதாகும்—எம்.

இ-ம். அபேதஞானம் இருந்தவிடத்திருகக பேதஞானமான முன் சிருட்டியின் மனோமயக்கமே மேற்சிருட்டியானதை யறிவித்ததாம். (17)

## முன்சிருட்டியை அறிவிக்கத் தொடங்கல்.



அப்படியே யுன்கணவற் கிரண்டாஞ்சென்ம
  மாயினதா லீதுரைப்ப வறிந்துகேட்பாய்
மைப்படி விலாவிமல ஞானவிண்ணின்
  மற்றொருபான் மாயாமண் டபமொன்றுண்டாஞ்
செப்பரிய விசும்பென்னு மயூரப்பீலித்
  திரையாலே மறைத்திருக்குஞ் செம்பொற்குன்றுங்
கப்புறுபொற் றூணிலுறை யுலகபாலர்
  காரிகையா ரெனும்பொறிகள் கலந்துநிற்கும்.

இ ள். அபபடியே - அவவண்ணமே, உன்கணவற்கு - உனதுநாயகனுக்கு, இரண்டாஞ்சென்மம் - இரண்டாவதான விடூரதசெநமம், ஆயினது -

உண்டாயிற்று, ஈதுரைப்பவறிந்து - இதனது (வான்முறையைச்) சொல்லத் தெரிந்துகொண்டு, கேட்பாய் - (சங்கையுண்டானாற் கேள், மைப்படிவிலா - களங்கமற்ற, விமலஞானவிண்ணில் - நின்மலமானசிதாகாயத்தில், ஒருபால், ஓர்பக்கத்தில், மாயாமண்டபம் - மாயாமண்டபமானது, ஒன்றுண்டாம் - ஒன்றுண்டாயிருக்கின்றது, செப்பரிய - சொல்லுதற்கரிய, விசும்பு என்னும் - ஆகாயமென்கின்ற, மயூரப்பிலித்திரையால் - மயிலிறகின் திரையினால், மறைத்திருக்கும் - மூடியிருக்கும், செம்பொற்குன்றாய் - மகமேருவாகிய, கப்புறு - கிளைகளையுடைய, பொற்றாணிலுறை - சொன்னஸ்தம்பத்தில் வசிக்கின்ற, உலகபாலர் - (இந்திரன்முதலிய) உலகபாலகர்களுடைய, காரிகையாரெனும் - (இந்திராணிமுதலிய) ஸ்திரீகளென்னும், பொறிகள் - சித்திரப்பதுமைகள், கலந்து நிற்கும் - பதித்திருக்கும் — எ-று.

எ — து. அவ்வண்ணமே உனதுநாயகனுக்கு இரண்டாவதான விடுரதசநகம் உண்டாயிற்று. இதனது வான்முறையைச் சொல்லத் தெரிந்துக்கொண்டு சங்கையுண்டானாற்கேள், களங்கமற்ற நின்மலமான சிதாகாயத்தில் ஓர்பக்கத்தில் மாயாமண்டபமானது ஒன்றுண்டாயிருக்கின்றது, சொல்லுதற்கரிய ஆகாயமென்கின்ற மயிலிறகின் திரையினால் மூடியிருக்கும், மகமேருவாகிய கிளைகளையுடையசொன்ன ஸ்தம்பத்தில் வசிக்கின்ற இந்திரன் முதலிய உலகபாலகர் களுடைய இந்திராணிமுதலிய ஸ்திரீகளென்னும் சித்திரப்பதுமைகள் பதித்திருக்கும் — எ-ம். (18)

இதுவுமது.

ஒருகோணந் தனிற்பூதப் புற்றுமாங்கே
 யுறைகின்ற மலைகளெனு மோடுமுண்டாம்
வருகாதற் புத்திரர்சூழ் விருத்தவால
 மறையவனுங் கொருவனுறை மனையதாகுங்
குருவான வாயுவின்மார்க் கத்துலாவு
 •கோலவிமா னப்புழுவின குழுவைமேவும்
அருகான விண்ணிலுறை சித்தர்கூட்ட
 மானகொது கிரைகின்ற வரவநண்ணும்.

இ - ள். ஒருகோணந்தனில் - ஒருபக்கத்தில், பூதப்புற்றும் - பிருதிவியென்னும் புற்றுகளும் ஆங்கேயுறைகின்ற - அவ்விடத்தில்வசிக்கின்ற, மலைகளெனும் - (சித்தகுல) அசலங்களென்கின்ற, ஓடுமுண்டாம் - ஓடுகளுமுண்டாயிருக்கின்றன, வருகாதல் - ஆசையுள்ள, புத்திரர்சூழ் - (மரீசிமுதலான) புதல்வர் சூழ்ந்திருக்கின்ற, விருத்தவாலமறையவனும் - வார்த்திகமும் பரிசுத்தமுமுள்ள பிரமாவாகிய, ஒருவனுறை - ஒரு புருடன் வசிக்கின்ற, மனையதாகும் - இடமாகும், குருவான - பெருமை பொருந்திய, வாயுவின் மார்க்கத்து - மாகாசமென்

ணும் (வேணுவில்), உலாவு - சஞ்சரிக்கின்ற, கோலம் - அழகிய, விமானப்புழு வின்-விமானத்தையுடைய தேவகீடங்களினது, குழுவைமேவும் - கூட்டங்களைப்பொருந்தும், அருகாண - சமீபமாகிய, விண்ணிலுறை-ஆகாயத்தில் வசிக்கின்ற, சித்தர் கூட்டமான - சித்தர் குழாமாகிய, கொசுகு - மசகங்கள், இறைகின்ற - சப்திககின்ற, அரவநண்ணும் - (கும்மென்கின்ற) சப்தம்பொருந்தும் எ-று.

எ—து. ஒருபக்கத்தில் பிருதிவியென்னும் புற்றுகளும், அவ்விடத்தில் வசிக்கின்ற சத்தகுலாசலங்களென்கின்ற ஒடுகளும் உண்டாயிருக்கின்றன. ஆசையுள்ள மரீசிமுதலான புதல்வர்சூழ்ந்திருக்கின்றவார்த்திகமும் பரிசுத்தமுமுள்ள பிரமாவாகிய ஒரு புருடன் வசிக்கின்ற இடமாகும். பெருமை பொருந்திய மகாகாசமென்னும் வேணுவில் சஞ்சரிக்கின்ற அழகிய விமானத்தையுடைய தேவகீடங்களினது கூட்டங்களைப் பொருநதும். சமீபமாகிய ஆகாயததில் வசிக்கின்ற சித்தர்குழாமாகிய மசகங்கள் சப்திக்கின்ற சப்தம் பொருநதும்-எ-ம்.

இதுவுமது,

வானவர்தா னவரென்னுந் தீயமக்கண்
 மதர்த்தவிளை யாட்டோசை மாறுதாகும்
ஆனதொரு மாமாயா மண்டபத்தி
 லாங்கொருபா லொருகோணத் தகத்தினுள்ளே
மானமிகு மலையென்னு மோட்டிலொன்றின்
 மலைகளினு லாறுகளால் வனங்கடன்னுன்
மேனலமார் நகரொன்றுண் டதனில்வாழ்வோன்
 வெங்கனலோன் வேதியரின் மிகவுமிக்கோன்.

இ-ள். வானவர் - தேவர்களும், தானவர் - அசரர்களும், என்னும்-என்கின்ற, தீயமக்கள் - துஷ்டப்பிள்ளைகளினது, மதர்த்தவிளையாட்டு - செருக்குற்ற விளையாட்டி (லுண்டாகிய), ஓசைமாறுதாகும் - சப்தமாறுமலிருக்கும், ஆனது - (இப்படி) யான, ஒரு மா மாயாமண்டபத்தில் - ஒப்பற்ற மகாமாயா மண்டபததில், ஆங்கொருபால் - அவ்விடத்தொருபக்கத்தில், ஒருகோணத்து-ஒரு திக்காகிய, அகத்தினுள் - (ஒரு) கிரகமத்தியில், மானமிகு - பெருமைமிகுந்த; மலையென்னும-வரையென்கின்ற, ஓட்டிலொன்றில் - ஒருபூமியில், மலைகளினுல் - பருப்பதஙகளினுலும், ஆறுகளால் - நதிகளினுலும், வனங்கடன்னுல் - கானஙகளினுலும், மேனலமார் - மேலாகிய வளப்பநிறைந்த, நகரொன்றுண்டு - கிரிக்கிராம)மென்னு மொருபட்டணமுண்டு, அதனில்வாழ்வோன் - அதனிடமாகவாழ்கின்றவன், வெங்கனலோன் - அக்கினியோத்தஜை

புடையவன், மறையவரின் - பிராமணர்களில், மிகவு மிக்கோன் - மிகவுமேன் மையானவன்—எ-று.

எ - து. தேவர்களும், அசுரர்களும் என்கின்ற துஷ்டப்பிள்ளைகளினது செருக்குற்ற விளையாட்டிலுண்டாகிய சப்தமாறுமலிருக்கும் இப்படியான ஒப்பற்ற மகாமாயா மண்டபத்தில் அவ்விடத்து ஒருபக்கத்தில் ஒரு சிக்காகிய ஒரு கிரகமத்தியில் பெருமை மிகுந்தவரை யென்கின்ற ஒரு பூமியில் பருப்பதங்களினாலும், நதிகளினாலும், கானகங்களினாலும், மேலாகிய வளப்பநிறைந்த கிரிக்கிராமமென்னுமொரு பட்டணமுண்டு. அதனிடமாக வாழ்கின்றவன் அக்கினியோத்ரத்தை யுடையவன், பிராமணர்களில் மிகவு மேன்மையானனவன்—எ-ம்.

இ-ம். முன்சிருட்டியை யறிவிக்கு நிமித்தம் செல்லுமார்க்கத்தி லுண்டான அதிசயங்களைச் சொல்லியதாம். (20)

## முன்சிருட்டியினமங்களும் அவர்குணங்களு முரைத்தல்.

வடிவுபொருள் வயதொடுக்கஞ் சேட்டைவிஞ்ஞை
வசிட்டனுக்கொப் போனந்த வசிட்டனென்றே
படியுமுணர் வினனல்லன் பெயராலிந்தப்
பனவனையும் வசிட்டனெனப் பகரலாகும்
அடிபரவு மருந்ததியை யொப்பாளந்த
வருந்ததியி லுணர்வினளன் றமைந்தபேரால்
நெடியவருந் ததியாகு மிவற்குத்தேவி
நிலத்திலிவள் விண்ணிலவ ணிகர்வேறில்லை.

இ - ள். வடிவு - அழகிலும், பொருள் - செல்வத்திலும், வயது - வயதிலும், ஒடுக்கம் - அடக்கத்திலும், சேட்டை - செய்கையிலும், விஞ்ஞை - கல்வியிலும், வசிட்டனுக்கொப்போன் - வசிட்டனுக்குச் சமானமானவன், அந்த வசிட்டனென்று - அவ்வசிட்டனென்று (சொல்லும்படியான), படியுமுணர் வினனல்லன் - குணம்பொருந்திய அறிவை யுடையவனல்லன், பெயரால் - நாமத்தினால், இந்தப்பனவனையும் - இப்பிராமணனையும், வசிட்டனென - வசிட்டனென்று, பகரலாகும் - சொல்லலாம், அடிபரவும் - (அவனது) பதத்தைப் பணிகின்ற,அருந்ததியை - அருந்ததிக்கு,ஒப்பாள் - சமானமாவாள், அந்த அருந்ததியின் - அந்த அருந்ததியினது, உணர்வினளன்று - அறிவையுடையவளல்ல, அமைந்த பெயரால் - பொருந்திய நாமத்தினால், நெடிய அருந்ததியாகும் - உயர்ந்த அருந்ததியாவள், இவற்குத்தேவி - இவ்வசிட்டனுக்கு நாயகி, நிலத்திலிவள் - பூலோகத்தில் இவளும், விண்ணிலவள் - தெய்வலோகத்தில் அவளுமாம், நிகர்வேறில்லை - இவர்களுக்குச் சமானம்வேறில்லை—எ-று.

எ - து. அழகிலும், செல்வத்திலும், வயதிலும், அடக்கத்திலும், செய்கையிலும், கல்வியிலும் வசிட்டனுக்குச் சமானமானவன். அவ்வசிட்டனென்று சொல்லும்படியான குணம்பொருந்திய அறிவையுடையவனல்லன். நாமத்தினால் இப்பிராமணனையும் வசிட்டனென்று சொல்லலாம். அவனது பதத்தைப்பணிகின்ற அருந்ததிக்கு சமானமாவாள். அவ்வருந்தியினது அறிவையுடையவளல்ல; பொருந்திய நாமத்தினால் உயர்நத அருந்ததியாவள். இவ்வசிட்டனுக்கு நாயகி பூலோகத்திலிவளும், தெய்வலோகத்தில் அவளுமாம். இவர்களுக்குச் சமானம்வேறில்லை—எ-ம்.

## அவர் பிராந்தி நிருபணம்.

இந்தவருந் ததிகணவ னென்றுசொன்ன
 விவ்வசிட்ட னம்மலையி னிலங்குசாரன்
முந்தியொரு நாளிருப்ப வேட்டைக்காங்கோர்
 முடிநிருபன் சேனையொடு முன்வந்தெய்த
வந்தநிரு பனைநோக்கி வசிட்டன்றேர்வா
 னகோவகோ மன்னவர்வாழ் வறவுநன்றாஞ்
சுந்தரமாம புவிக்கரசாய்ச் சேனைசூழத்
 துணைக்கவரிப் பரிமாறச் சுகிப்பமெந்நாள.

இ-ள். இநத அருந்ததிகணவன் - இவ் அருந்ததிபுருடன், என்றுசொன்ன - என்றுசொல்லிய, இவ் வசிட்டன் - இவ் வசிட்டனெனவர், அம் மலையினிலங்குசாரல் - அவ் வரையில் விளஙகுகின்ற தாழ்வரையில், முந்தியொருநாளிருப்ப - முன் ஒருநாளிருக்க, வேட்டைக்கு-வேட்டைநிமித்தம், ஆங்கோர் - அவ்விடத்திலொரு, முடிநிருபன் - கிரீடத்தையுடைய அரசன், சேனையொடு- படைகளுடன், முன்வந்தெய்த - முன்னேவர, அந்த நிருபனைநோக்கி - அவ் வரசனைப்பார்த்து, வசிட்டன் தேர்வான் - வசிட்டன் யோசிப்பான், அகோவகோ - ஆச்சரியம் ஆச்சரியம், மன்னவர்வாழ்வு - அரசர்கள் செல்வம், அறவுநன்றாம் - மிகவுநன்மையாம், சுந்தரமாம்புவிக்கு - அழகான உலகத்துக்கு, அரசாய் - இராசாவாய், சேனைசூழ - படைகள் சூழ்ந்து(வர), துணைக் கவரி- இரண்டு சாமரஙகளை, பரிமாற . வீச, எந்நாள் - எக்காலத்தில், சுகிப்பம் - சுகத்தையடைவோம் எ-று.

எ - து. இவ் அருந்ததி புருடன் என்று சொல்லிய இவ் வசிட்டனெனவர் அவ் வரையில விளங்குகின்ற தாழ்வரையில் முன்னொரு நாளிருக்க வேட்டை நிமித்தம் அவ்விடத்தில் ஒரு கிரீடத்தையுடைய அரசன் படைகளுடன் முன்னேவா அவ்வாசனைப்பார்த்து

வசிட்டன் யோசிப்பான். ஆச்சரியம் ஆச்சரியம் அரசர்கள் செல்வம் மிகவு நன்மையாம். அழகான உலகத்துக்கு இராசாவாய் படைகள் சூழ்ந்துவர இரண்டு சாமரங்களைவீச, எக்காலத்தில் சுகத்தையடை வோம்—எ—ம்.

இதுவுமது.

கொடிகுடையி னிழனெருங்க வாழ்ந்துமாதர்
குங்குமக்கொங் கையின்மூழ்கிக் குளிப்போமெந்நாண்
முடிவருமிப் பயனென்று பெறுவமென்றே
மொய்காத லன்றுமுதன் முளைத்தநெஞ்சன்
மடியறுதன் கருமத்தி னின்றான்மூப்பு
வசனஞ்சேர் பனியின்வர மனைவிநிற்போல்
அடிபரவி யெனைவேட்டும் வாமுமீந்தே
னந்தணனு மிறப்புற்றா னாசையோடும்.

இ - ள். கொடி - (வெற்றிக்) கொடிகள், நெருங்க - நெருங்கும்படி, குடைநிழல் - (வெண்கொற்றக்) குடைநிழலில், வாழ்ந்து - சுகித்து, மாதர் - மகளிருடைய, குங்குமக்கொங்கையில் - செஞ்சாந்தணிந்த தனங்களில், மூழ்கிக்குளிப்போ மெந்நாள் - படிந்திருப்பது எந்தநாள், முடிவறுமிப்பயன் - முடிவில்லாத அப்பிரயோசனத்தை, என்றுபெறுவமென்று - எப்பொழுது அடைவோமென்று, மொய்காதல் - நிறைந்தவாசை, அன்றுமுதல் - (அரசனைக்கண்ட) அன்றுமுதலாக, முளைத்தநெஞ்சன் - உண்டாயிருக்கின்ற மனதையுடையவன், மடியறு தன் கருமத்தினின்றான் - கெடாத தனது கன்மத்திலிருந்தான், மூப்பு - வார்த்திகமானது, வனசஞ் சேர்பனியின் - தாமரையைச் சேர்ந்த பனியைப்போல, வர - (அவனுக்) குண்டாக, மனைவி - (அவர்) தேவியானவள், நிற்போல் - உன்னைப்போல, அடிபரவி - பாதத்தை வணங்கி, எனைவேட்டும் வாமும் - எனைவிரும்பிக்கேட்ட (சீவன் அவ்வீட்டினின்று நீங்காத) வரத்தையும், ஈந்தேன் - கொடுத்தேன், அந்தணனும் - பிராமணனாகிய (வசிட்டனும்) ஆசையோடும் - (இராசபோக) இச்சையோடும், இறப்புற்றான் - மரணமடைந்தான்—எ-று.

எ - து. வெற்றிக்கொடிகள் நெருங்கும்படி வெண்கொற்றக் குடைநிழலில் சுகித்து மகளிருடைய செஞ்சாந்தணிந்த தனங்களில் படிந்திருப்பது எந்நாள். முடிவில்லாத இப்பிரயோசனத்தை எப்பொழுதடைவோமென்று நிறைந்த ஆசை அரசனைக்கண்ட அன்று முதலாக உண்டாயிருக்கின்ற மனதையுடையவன் கெடாத தனது கன்மத்திலிருந்தான். வார்த்திகமானது தாமரையைச்சேர்ந்த பனியைப்போல அவனுக்குண்டாக அவர்தேவியானவள் உன்னைப்போல பாதத்தைவணங்கி எனை விரும்பிக்கேட்ட சீவன் அவ்வீட்டினின்று

நீங்காத வரத்தையும்கொடுத்தேன், பிராமணனாகிய வசிட்டனும் இராசபோக இச்சையோடும் மரணமடைந்தான்—எ-ம்.

இ-ம். சீவனதபேதஞானம் அவ்விடத்திருக்கவும், பேதஞானமான மனது செல்லுழித் தான் செல்லவும் வரம்பெற்றனன் என்பதாம். (23)

## இச்சித்த வடிவமாதல்.

அவன்மனை யாகாசத்திற் சீவாகாச
மாய்நின்றா னாகாச வடிவானோனை
கவருறுமுன் னாளழுந்து சங்கற்பத்தாற்
காவலன்றா னேயாகிக் கலந்துநின்றான்
தவமறையோன் சவமாக மனைவிசோர்ந்து
தன்னிதயத் திரண்டாகிச் சரீரந்தன்னை
உவமையுறு கணவனுடன் சவமாய்ப்போக்கி
யுயர்சூக்க வுடலொடவ னுடன்போயுற்றாள்.

இ-ள். அவன் - அவ (வசிட்ட) னுணவன், மனையாகாசத்தில் - கிரகாகாயத்தில், சீவாகாசமாய் - சீவாகாய வடிவமாய, நின்றான் - இருந்தான், ஆகாசவடிவானோனை - ஞான ஆகாயவடிவமான வசிட்டனை, கவருறு - வளருகின்ற, முன்னாள் - முன்னாளில், அழுந்தும - (இராசசெலவத்தில்) அழுந்திய, சங்கற்பத்தால் - (மனோ) சங்கற்பத்தினால், காவலன்றானேயாகி - அரசனாய், கலந்துநின்றான் - பொருந்தியிருந்தான், தவமறையோன் - தவத்தையுடைய பிராமணன், சவமாக - பிரேதமானதைக (கண்ட), மனைவிசோர்ந்து - நாயகியானவள துன்பமடைந்து, தன்னிதயத்து - தனமனதில, இரண்டாகி - இரண்டுவிதமாக நினைத்து, சரீரதன்னை - (தனது) தூலசரீரத்தை, உவமையுறு - சமானமாகிய, கணவனுடன் - நாயகனுடன், சவமாய்ப்போக்கி - பிரேதமாகததள்ளி, உயர்சூககவுடலொடு மேலான சூட்சும சரீரத்தோடு, அவனுடன் போயுற்றாள் அந்த நாயகனுடன்போய்ச் சேர்ந்தாள்—எ-று.

எ-து அவ்வசிட்டனுணவன கிரகாகாயத்தில் சீவாகாயவடிவமாயிருநதான். ஞானகாயவடிவமான வசிட்டனே, வளருகின்றமுன்னளில இராச செலவததி லழுந்திய மனோசங்கற்பத்தினால் அரசனாய்ப் பொருநதியிருநதான். தவத்தையுடைய பிராமணன் பிரேதமானதைக்கண்ட நாயகியானவள் துன்பமடைந்து தன்மனதில் இரண்டுவிதமாக நினைதது தனது தூலசரீரத்தை சமானமாகிய நாயகனுடன் பிரேதமாகத் தள்ளி மேலான சூட்சும சரீரத்தோடு அந்த நாயகனுடன் போய்ச் சேர்ந்தாள் —எ-ம. (24)

இதுவுமது.

ஆயமறை யோன்மக்கண் மனைவும்பூமி
யடவிகடா வரங்களெலா மங்கேயுண்டாய்
மேயவுயிர் போயவற்கு நாளெட்டாகும்
விண்வடிவாஞ் சிவனுமவ் வீட்டினிற்கும்.
போயபவத் துனக்கன்ப னுனவந்தப்
பூசுரன்பூ பதியாகிப் புணர்ந்தானென்று
தூயவருந் ததிபெயர்கொள் பிணவியாகித்
துணைவியா மந்தமடற் றோகைநீயே.

இ - ள். ஆயமறையோன் - (இத்தன்மைய) வான பிராமணனுடைய, மக்கள் - புத்திரரும், மனையும் - வீடும், பூமி - பூமியும், அடவிகள் - வனங்களும், தாவரங்கள் - மலைகளும், எல்லாம் - சகலமும், அங்கேயுண்டாய் - அவ்விடத்திலிருக்க, அவற்கு - அவருக்கு, மேயவுயிர்போய் - பொருந்தியசீவன்பிரிந்து, நாளெட்டாகும் - எட்டுநாளாகும், விண்வடிவாஞ்சிவனும் - சிதாகாயரூபமானசிவனும், அவ்வீட்டினிற்கும் - அந்தவீட்டிலிருக்கும், போய பவத்து - முன்சநநத்தில், உனக்கன்பனை - உனக்குநாயகனுகிய, அந்தப்பூசுரன் அந்தப் பிராமணன், பூபதியாகி - அரசனாகி, புணர்ந்தான் - பொருந்தினன், அன்று - அப்போது, தூய - பரிசுத்தமாகிய, அருந்ததிபெயர்கொள் - அருந்ததியென்னு நாமமுள்ள, மனைவியாகி - பிராமணஸ்திரீயாகி, துணைவியாம் - (அவன்) மனைவியாகிய, அந்தமடற்றோகைநீயே - அந்தமடமயில் (போன்ற பெண்ணனைவள்) நீதான்—எ-று.

எ - து. இத்தன்மையவான பிராமணனுடைய புத்திரரும், வீடும் பூமியும், வனங்களும், மலைகளும், சகலமும் அவ்விடத்திலிருக்க அவருக்குப் பொருந்திய சீவன்பிரிந்து எட்டுநாளாகும். சிதாகாய ரூபமான சிவனும் அந்த வீட்டிலிருக்கும். பூன சநநத்தில் உனக்கு நாயகனுகிய அந்தப் பிராமணன் அரசனாகிப் பொருந்தினன் அப்போது பரிசுத்தமாகிய அருந்ததியென்னு நாமமுள்ள பிராமணஸ்திரீயாகி அவன் மனைவியாகிய அந்த மடமயில்போன்ற பெண்ணனைவள் நீதான்—எ-ம்.

இ-ம். பிராம்மணனது சாமான்யஞானம் அவ்விடத்திருக்க, விசேட ஞானமே யாசசிருட்டியை யவடைந்ததென்பதாம். (25)

## மூன்று சிருஷ்டியிலுள்ள வடிவமும் பிராந்தியெனல்.

புதியனசக் கரவாகத் திணையதென்னப்
பூதலஞ்சே ருமையொடுபு ராரியென்ன

அதிகநலத் துணைவரா மிருவராயிங்
கரசுசெயு நீரவரே யாதலாலே
மதிநுதலாய் முதற்பிறப்பின் மயக்கஞ்சொன்னோ
மற்றிதுதான் மயக்கமாத் திரமதாகும்
உதகமுறு மாகாய வுடலாஞ்சென்ம
மொளிபெறத்தோன் றியதென்று னுலகிலன்னை.

இ - ள். புதியன - புதுமையான, சக்கரவாகர் துணையதென்ன - சக்கரவாகப்புள் சேர்க்கைபோலவும், பூதலம் - பூமியின்கண், சேர் - (இடதுபாகத்திற்) சேரும், உமையொடு புராரியென்ன - பார்பதி பரமேஸ்வரரைப்போலவும், அதிக - மிகவும், நலத் துணைவராம் - நன்குள்ள ஸ்திரீபுமானுக, இருவராய் - இருவருமாய், இங்கரசுசெயும் - இவ்விடத்தில் அரசாட்சிசெய்கின்ற, நீரவரே - நீங்களந்த அருந்ததிவசிட்டரே, ஆதலால - ஆகையால், மதிநுதலாய் - மூன்றாம்பிறைபோன்ற நெற்றியையுடைய லீலாய், முதற் பிறப்பின் - முன்பிராமணசிருஷ்டியின், மயக்கம் - (இராசாவாகநினைத்த) பிராந்தியை, சொன்னோம் - கூறினோம், இதுதான் - இப்பதமசிருஷ்டியும், மயக்கமாத்திரமாகும் - பிராந்தி பாத்திரமேயாம், உதகமுறுமாகாயம் - சலப்பிரதி விம்ப ஆகாயம் போல, உடலாஞ்சென்மம் - வடிவமானவிடூரதசநநம், ஒளிபெறத்தோன்றியது - (உனக்குப்) பிரகாசமாகத்தோற்றியது, என்றான் உலகிலன்னை - என்றுலோகமாதாவாகிய சரஸ்வதிசொன்னாள்—எ-று

எ - து புதுமையான சக்கரவாகப்புள்சேர்க்கைபோலவும, பூமியின்கண் இடதுபாகத்திற் சேரும் பார்பதிபரமேஸ்வரரைப்போலவும், மிகவும் நன்குள்ள ஸ்திரீபுமானுக இருவருமாய் இவ்விடத்தில் அரசாட்சி செய்கின்ற நீங்களந்த அருந்ததிவசிட்டரே ஆகையால் மூன்றாம் பிறை போன்ற நெற்றியையுடைய லீலாய்! முன்பிராமணசிருஷ்டியின் இராசாவாகநினைத்த பிராந்தியைக்கூறினோம் இப்பதமசிருஷ்டியும் பிராந்திமாத்திரமேயாம். சலப்பிரதி விம்பாகாயம்போல வடிவமானவிடூரதசநநம உனக்குப்பிரகாசமாகத் தோற்றியதென்று லோகமாதாவாகிய சரஸ்வதி சொன்னாள்—எ-ம்.

இ-ம். முன் வசிட்டபிராந்தியே பதுமனுகவும், அப் பதுமப் பிராந்தியே விடூரதனுகவு மானதேயன்றி, எதார்த்தமா யிவர்களுக்கு ஓர்வடிவமும் இல்லை என்பதாம். (26)

## வசிட்டராதுசீவன் அங்ஙனநிற்க

## இங்ஙனம் பத்மன் ஆனுரென்பது எங்ஙனமெனின்.



இந்தவுரை கேட்டலுமே லீலைசொல்வா
ளிறைவிபொய்யே யியம்பினையீ தெங்ஙன் கூடும்
அந்தணன் வீட் டுறைசீவ னதுவெங்கேயோ
வன்னியமா யிருந்யா மடைந்ததெங்கே
முந்தூறுமவ் வேற்றுலகத் திருப்பாரந்த
மொய்கிரிக டசதிசைகண் முற்றுஞ்சேர
வந்தினிநிங் கியாங்களுறை மனையினூடே
மருவுமடை வெப்படியோ மாசிலாளே.

இ - ள். இந்தவுரைகேட்டலும் - இவ்வசனத்தைக்கேட்ட அளவில், லீலை சொல்வாள் - லீலையுரைப்பாள், இறைவி - தேவீ, பொய்யே இயம்பினை-அசத்தியமேசொன்னாய், ஈதெங்ஙன்கூடும் - இஃது எப்படிபொருந்தும், அந்தணன்வீட்டுறை - பிராமணன்மனையில்வசிக்கின்ற, சீவனது வெங்கேயோ-சீவனெங்கே இருக்கின்றது, அன்னியமாயிருந்த யாம் - (இவ்விடத்து) வேறாக விருந்த நாங்கள், அடைந்ததெங்கே - சேர்ந்ததுஎங்கே, முந்தூறும்-முன்பொருந்திய, அவ்வேற்றுலகத்திருப்பார்-அந்தவேறுலகத்திருக்கின்றவர்கள், அந்த மொய்கிரிகள் - அந்த நெருங்கியமலைகளும், தசதிசைகள் - பத்துதிக்குகளும், முற்றுஞ்சேரவந்து - முழுதுங் கூடிவந்து, இனிது - இனிமையாக, இங்கு - இவ்விடத்தில், யாங்களுறை - நாங்களிருக்கின்ற, மனையினூடு - வீட்டுக்குள், மருவுமடைவு - பொருந்தும்வழி, மாசிலாளே - குற்றமற்ற சரஸ்வதியே, எப்படி - எவ்வித (மென்றுகேட்டாள்)—எ-று.

எ - து. இவ்வசனத்தைக்கேட்ட அளவில் லீலை யுரைப்பாள், தேவீ! அசத்தியமே சொன்னாய். இஃது எப்படிப் பொருந்தும் பிராமணன் மனையில் வசிக்கின்ற சீவனெங்கே யிருக்கின்றது? இவ்விடத்து வேறாகவிருந்த நாங்கள் சேர்ந்த தெங்கே? முன்பொருந்திய அந்த வேறுலகத்திருக்கின்றவர்கள் அந்த நெருங்கிய மலைகளும், பத்துதிக்குகளும் முழுதுங் கூடிவந்து இனிமையாக இவ்விடத்தில் நாங்க ளிருக்கின்ற வீட்டுக்குள் பொருந்தும் வழி குற்றமற்ற சரஸ்வதியே எவ்வித மென்றுகேட்டாள்—எ-ம்.

இதுவுமது.

மத்தவயி ராவதமோர் கடுகிஞேர்பால்
 மறிபடுமோ வடமேரு வந்தோர்கஞ்ச
வித்தினிடை புகுந்திருந்தோர் வண்டின்குஞ்சால்
 மிகநெரியு மோகொசுகு வெகுண்டுமோதி
யுத்தமியற் றிடச்சிங்க மனேகமத்தோ
 டோரணுவி னிடைப்புகுமோ வுரைத்தநின்சொல்
இத்திறமே யொன்றுக்கு மிசையாதாகு
 மெனலீலை சொல்லுதலு மிறைவிசொல்வாள்.

இ - ள். மத்த - மதர்த்த, அயிராவதம் - இந்திரன்யானையானது, ஓர் கடுகிஞேர்பால் - ஒருகடுகினுடைய ஒருபக்கத்தில், மறிபடுமோ - கட்டுப்படுமோ, வடமேருவந்து - மகம்மேருவானதுவந்து, ஓர் கஞ்சவித்தினிடை- ஒரு தாமரை விதைக்குள், புகுந்திருந்து - நுழைந்திருந்து, ஓர்வண்டின்குஞ்சால் - ஓர் அளியின்பார்ப்பினுல், மிகநெரியுமோ - மிகவுநெரியுமா, கொசுகு- மசகமானது, வெகுண்டு கோபித்து, மோதி - அடித்து, யுத்தமியற்றிட- போர்செய்ய, சிங்கமனேகமத்தோடு - சிங்கங்கள் பலவற்றுடன், ஓரணுவினிடைப்புகுமோ - (பயந்து) ஓரணுவுக்குள் நுழையுமோ, உரைத்த - சொல்லிய, நின்சொல் - உனதுவசனம், இத்திறமே-இவ்வண்ணமே, ஒன்றுக்குமிசையாதாகுமென - ஒன்றுக்கும் பொருந்தாதென்று, லீலைசொல்லுதலும் - லீலை கூறவும், இறைவிசொல்வாள் - தேவிகூறுவாள். எ—று.

எ - து மதர்த்த இந்திரன் யானையானது ஒரு கடுகினுடைய வொருபக்கத்தில் கட்டுப்படுமோ? மகம்மேருவானதுவந்து ஒருதாமரை விதைக்குள் நுழைந்திருந்து ஓரளியின்பார்ப்பினுல் மிகவு நெரியுமா? மசகமானது கோபித்து அடித்துப் போர்செய்ய சிங்கங்கள் பலவற்றுடன் பயந்து ஓரணுவுக்குள் நுழையுமோ? சொல்லிய உனது வசனம் இவ்வண்ணமே ஒன்றுக்கும்பொருந்தாது என்று லீலைகூறவும் தேவிகூறுவாள்—எ - ம.

## சிருஷ்டிகளின் பிராந்தி நீங்க தத்துவம் உபதேசித்தல்.

பொய்யாக வுரைத்திலம்யா மிதனினுண்மைப்
 புகலக்கே ளீனைப்போல்வார் புகதேணீதி
மெய்யாகக் கொள்வதலாற் பேதியார்கள்
 வேதியன்றன் சீவனவ னூரில்வீட்டில்.

எய்யாமை யுறைகின்ற திந்நாடு
  மிவ்வாசும் விண்வடிவே யிவற்றையெல்லாம்
மையாரும் விழிமடவா யந்தவிண்ணே
  வடிவான வவன்றனே மகிழ்ந்துபார்க்கும்.

இ - ள். யாம் - நாம், பொய்பாகவுரைத்திலம் - பொய் சொல்லவில்லை, இதனினுண்மை - இதனுண்மையை, புகலக்கேள்-சொல்லக்கேட்பாய், எனைப்போல்வார் - என்னையொத்தவர்கள், புகதேணிசி - ஈஸ்வர நியதியை, மெய்யாக - சத்தியமாக, கொள்வதலால்-கொள்ளுவதேயன்றி, பேதியார்கள்-பேதிக்கார்கள், வேதியன்றன் - பிராமணனுடைய, சீவன் - சீவனானது, அவனூரில் வீட்டில் - அவனகரத்திலுள்ளமனையில், எய்யாமை-அதிரிஸ்யமாய், உறைகின்றது - வசிக்கின்றது, இந்நாடு - இந்நாடுகளும், இவ்வாசும் - இப்பத்ம அராசாங்கமும், விண்வடிவே - ஞானாகாயரூபமேயாம், இவற்றையெல்லாம்-இவையனைத்தையும், மையாரும் - மைதீட்டிய, விழிமடவாய் - கண்களையுடைய லீலாய், அந்தவிண்ணேவடிவான - அச்சிதாகாயமே படிவமாகிய, அவன்றனே-அவ்வசிட்டனே, மகிழ்ந்து பார்க்கும் - சந்தோஷித்து (மனாகாயத்திற்) பார்ப்பான்---எ-று.

எ - து. நாம் பொய்சொல்லவில்லை, இதனுண்மையைச்சொல்லக்கேட்பாய் என்னை யொத்தவர்கள் ஈஸ்வர நியதியைசத்தியமாகக் கொள்ளுவதேயன்றி பேதிக்கார்கள். பிராமணனுடைய சீவனானது அவனகரத்திலுள்ள மனையில் அதிரிஸ்யமாய் வசிக்கின்றது, இந்நாடுகளும் இப்பதம அராசாங்கமும் ஞானாகாயரூபமேயாம். இவையனைத்தையும் மைதீட்டிய கண்களையுடைய லீலாய் அச்சிதாகாயமே படிவமாகிய அவ்வசிட்டனே சந்தோஷித்து மனாகாயத்திற் பார்ப்பான்.

இ-ம். சர்வமுந் தானாய்விளங்குகின்ற சைதன்யமே தனது அபேதஞானத்தினாற் பேதஞானத்தைத் தானாகப் பார்க்குமென்பதாம். (29)

இதுவுமது.

தொன்மையா மந்தநினை வுங்களுக்குத்
  தோன்றாது வேறாகித் தோன்றுங்கண்டாய்
பன்மையா நனைவு கனவிற்றோன்றாப்
  பரிசெனவிம் மாணத்தின் பான்மைதோன்றாத்
தன்மையமாஞ் சத்தந்தினால் விளங்குமநகத்
  தடஞான விசும்பிடையோர் தனியுலகேகே
வன்மையா மிப்பூமி தோன்றிநிற்கு
  மணிநினைவிற் கண்ணடியில் வயங்குமாபோல்.

இ - ள். தொன்மையாம் - பழமையாகிய, அந்தநினைவு - அந்த (ஞான) பூரணம், உங்களுக்குத்தோன்றாது-(இப்பொழுது) உங்களுக்குத்தோற்றாமல்,

வேருகித்தோன்றும் திரிஸ்யமாகத்தோற்றும், பன்மையாநனு நினைவு - நாநாவிதமான சாக்கிரபூரணம், கனவிற்றோன்ருப் பரிசென - சொற்பனத்திற்ருேற்ருத தன்மையைப்போல, அம்மாணத்தின் பான்மைதோன்ரு - அந்த வசிட்டஸ்மரணத்தின் றன்மைதோற்ருமல் (இப்பதுமஸ்மரணத்தின் றன்மைதோற்றும்), தன்மயமாஞ்சத்ததனுல் - தானுகிய சத்தினுல், விளங்கும் - பிரகாசிக்கின்ற, அந்தத்தடஞானவிசும்பிடை - முற்கூறிய வியாபகமான ஞானுகாயத்தில், ஓர்தனிமூலைக்கு - ஒருதனித்த பககத்தில், மனநினைவில் - மனோ சங்கற்பத்திலும், கண்ணடியில் - ஆடியிலும், வயக்குமாபோல் - (அடுத்தசாயை) பிரகாசிக்கின்றதுபோல, தன்மையாமிப்பூமி - கடினமாயிருக்கின்ற இவ்வுலகமானது, தோன்றிநிற்கும் - தோற்றும்—எ-று.

எ - து. பழமையாகிய அந்தஞாணஸ்பூரணம் இப்பொழுதுஉங்களுக்குத் தோற்ருமல் திரிஸ்யமாகத்தோற்றும், நாநாவிதமான சாக்கிரஸ்பூரணம் சொற்பனத்திற்ருேற்ருத தன்மையைப்போல அந்த வசிட்டஸ்மரணத்தின் வன்மைத்தோற்ருமல் இப்பதுமஸ்மரணத்தின்றன்மைதோற்றும, தானுகியசத்தினுல்பிரகாசிக்கின்றமுற்கூறிய வியாபகமான ஞானுகாயத்தில் ஒரு தனித்தபக்கத்தில் மனோசங்கற்பத்திலும், ஆடியிலும், அடுத்தசாயை பிரகாசிக்கின்றதுபோலகடினமாயிருக்கின்ற இவ்வுலகமானது தோற்றும்—எ-ம்.

இ-ம். சத்தாமாத்திரமாக விளங்குஞ் சைதன்னியத்தின் ஏகதேசஸ்பூரணமே உலகமுதலிய யாவுமென்பதாம். (50)

இதுவுமது.

தெளிபரம வணுவாஞ்சிற் சொருபத்தொன்றுஞ்
செகமெலா மொளியுருவாய்ச் செறிந்திருக்கும்
ஒளிபெறவுள் ளேயுள்ளே யாதலான்முன்
னுரைசெய்த பூமியுஞ்சித் துள்ளேதோன்றும்
வெளிபெறவீ தறியென்றே வாணிகூற
வேதியனெட் டாம்பகலில் வீந்தானென்ருய்
எளிதிலமைக கநேகபந டங்கள்போன
மெத்தமென வீசக்கு நீண்டிமாறி சொல்வாள்.

இ - ள் ஒளிபுருவாய் - பிரதிபாசாத்மகமாய், ஒன்றும் - பொருந்திய, சகமெலாம் - உலகங்களனைத்தும், தெளிபரமவணுவாம் - தெளிந்த பரமாணுவாகிய, சிற்சொருபத்து - ஞானசொருபத்தில், ஒளிபெற - பிரகாசமாக, உள்ளேயுள்ளே - உள்ளுக்குள்ளே, செறிந்திருக்கும் - நெருங்கியிருக்கும், ஆதலால் - ஆதலினாலே, முன்னுரைசெய்த - முற்கூறிய, பூமியும் (பிரமணனிருந்த) பூமி (முதலானவை) களும், சித்துள்ளே தோன்றும்

ஞானத்துள்தோற்றும்,வெளிபெற - பிரத்தியட்சமாக,கூறியென்று - இதை த்தெரிவாயென்று, வாணிகூற - சரஸ்வதிசொல்ல வேதியன் - (அப்) பிரா மணன், எட்டாம்பகலில் - எட்டாந்தினத்தில், வீந்தானென்றாய் - மரித தானென்றுசொன்னாய், எளிதிமெலமக்கு - எளிதாக எங்களுக்கு, அநேக வருடங்கள் போனது அநேகவருடங்கள்சென்றது, என்னென லீலைக்கு - என்னவென்றுகேட்ட லீலைக்கு, மீண்டு - திரும்பவும் இறைவி சொல்வாள்- தேவியுரைப்பாள்—எ-று.

எ - து. பிரதிபாசாத்மகமாய் பொருந்திய உலகங்களனைத்தும் தெளிந்த பரமாணுவாகிய ஞானசொரூபத்தில் பிரகாசமாக உள்ளுக் குள்ளே நெருங்கியிருக்கும், ஆதலினால் முற்கூறிய பிராமணனிருந்த பூமிமுதலானவைகளும் ஞானத்துள்தோற்றும். பிரத்தியட்சமாக இதைத்தெரிவாயென்று சரஸ்வதி சொல்ல அப்பிராமணன் எட்டாந் தினத்தில் மரித்தானென்றுசொன்னாய், எளிதாக எங்களுக்கு அநேக வருடங்கள் சென்றது என்னவென்றுகேட்ட லீலைக்கு திரும்பவும் தேவியுரைப்பாள்—எ-ம.

இ-ம். சைதன்னிய வியாபகத்திற் பிரதிபாமாத்திரமாய்த் தோற்றுகின்ற சகலசகத்தும் அதன் சுப்பிரகாசமே யென்பதாம். (31)

எண்தினம் அநேகதினமானது எங்ஙனமெனின்.

வேறு.

தேயநீடியில லாமைபோற் காலமுஞ் சிறிதுநீளியதல்ல
மாயபேதமிற் சிற்சுடர்தோனறிடு மாத்திர மொழிநதில்லை
மேயபொய்மா ணத்தினுலொரு கணமெய்ம்மறந்திடச சீவன்
போயதனனபா வனைமறநதிப்பவம் பொருநது பாவனையெய்தும்.

இ - ள். தேயநீடியில்லாமைபோல் - (முன்சொல்லிய சித்துவிலாசமாய் விளங்கிய) தேசத்துக்கு விபுத்துவுமில்லாததுபோல, காலமுஞ்சிறிது நீளிய தல்ல - காலத்துக்கும் அற்பமும் விபுத்துவமில்லை, மாயபேதமில் - மாயாவிக ற்பமில்லாத, சிற்சுடர் - ஞானப் பிரகாசமானது, தோன்றிடு மாத்திரமொழி ந்து - தோற்று தன்மாத்திரமன்றி, இல்லை - (காலதேசத்தினளவுவேறு) இல்லை, மேயபொயமரணத்தினல் - பொருந்திய மித்தியாமரணத்தினால், ஒருகணமெய்மறந்திட - ஒருக்ஷணம் பிரஞாபங்கம்வர, சீவன்போயது - சீவன் பிரிந்துபோனது, அன்னபாவனைமறந்தும் - முன் சரீரபாவனையைமறந்து, இப்பவம்பொருந்து - இச்சரீரத்திற்பொருந்திய, பாவனையெய்து - பாவனை யையடையவும்—எ-று.

எ - து. முன்சொல்லிய சித்துவிலாசமாய் விளங்கிய தேசத் துக்கு விபுத்துவமில்லாததுபோல காலத்துக்கும் அற்பமும்விபுத்து வமில்லை. மாயாவிகற்பமில்லாத ஞானப் பிரகாசமானதுதோற்று தன் மாத்திரமன்றி காலதேசத்தினளவு வேறில்லை, பொருந்திய மித்தியா

மரணத்தினால் ஒருக்ஷணம் பிரஞானபங்கம்வர சீவன் பிரிந்துபோனது, முன் சரீரபாவனையைமறந்து இச்சநநத்திற்பொருந்திய பாவனையையடையும்— எ - ம்.

ப - ம். ஞானத்துக்கு விபுத்துவமேயன்றிக் காலத்துக்கில்லையென்பார் சிற்சுடர்தோன்றிடுமாத்திரம் ஒழிந்திலலையென்றார். (32)

இதுவுமது,

தாங்குகின்றதீங் கிதுவிதனால் மிகதாங்கிடப் படுவோனும
வீங்குகின்ற நம் மெய்துபிதாவிவன் வீவ தித்தனையாண்டிங்
கோங்குகின்றநஞ் சிற்றமீதின்பமா யுறைவிட மிதுவென்றே
தேங்குகின்றபொய் மரணமூற் சைத்திறநதெளிந தபின்சிந்திக்கும்.

இ - ள். ஈங்கிது - இவ்விடத்திலிது, தாஙகுகின்றது - (நம்மைத்) தாங்குகின்றது, இதனால் மிகத்தாஙகிடபபடுவோனும் - இதனால் மிகவுஞ் சுமக்கப்படுகின்றவனும், இது - ஈது, வீஙகுகின்றநம்மெய் - பருககின்றநமது சரீரம், இவன்பிதா - இவன் (நமது) தநதை, வீவதித்தனையாண்டு இறப்பது இத்தனைவருடத்தில், ஈது - இது, இஙகோஙகுகின்ற நஞ்சுற்றம் - இங்கு விருத்தியாகின்ற நமது பநதுககள், இது - இது, இன்பமா யுறைவிடமென்று - பிரியமாய் வசிககின்ற ஸதானமெனறு, தேஙகுகின்றபொய் - மிகுகின்ற மித்தையாகிய, மரணமூறசசத்திறம - மரண மூறசையின்தன்மை, தெளிநதபின் - தெளிநதபின்பு, சிநதிககும - (சீவன்) சிநதிப்பன-எ-று.

எ - து. இவவிடததிலிது நமமைததாஙகுகின்றது, இதனால் மிகவுஞ் சுமக்கப்படுகின்றவனும, ஈது பருககின்ற நமது சரீரம், இவன் நமது தந்தை, இறப்பது இத்தனை வருடததில், இது இங்கு விருத்தி யாகின்ற நமது பநதுக்கள், இது பிரியமாய்வசிக்கின்றஸ்தானமென்று மிகுகின்ற மிததையாகிய மரணமூற்சையின்தன்மை தெளிந்தபின்பு சீவன் சிநதிப்பன்—எ-ம.

ப - ம், முற்பவத்துள்ள அறிவுமயஙகிய பிறபவமெடுக்கினும் இஃதுந் தெளிந்தவிடததுத் தெரியுமென்பார் மரணமூறசசததிறந் தெளிநதபின் சிந்திககுமென்றார். (33

இதுவுமது

ஆதலானமுதற பவமமறைநதிம பவமறியலா யினதென்னப்
போமாம்விழி நீதாவகோ வகோரணமாய்த்தெளிவுற்றேன்
காதநீர்வுறவ வையவருமுறைவிடங் காட்டென விவளோத
வேதகமயகி யுமைசெய்வா ளதற்கிந்தவினையுடல விலங்காகும்.

இ — ள். ஆதலால் - ஆகையினால், முதற்பவமறைந்து முற்சொன்ன முறையிட்டு, இப்பவம் - இப்பிறப்பு, அறியலாயினதென்ன அறியப்பட்ட

தென்று ( சரஸ்வதி) சொல்ல, போதமாம்விழி - ஞானமாகிய கண்ணே, நீதர - நீயனுக்கிரகஞ்செய்ய, அகோ அகோ - ஆச்சரியம் ஆச்சரியம், - பூரணமாய்த் தெளிவுற்றேன் - பூர்ணமாகத்தெளிந்தேன், காதல் தீர்வுறவு, - (இதயக்கிரந்தி யாகிய) இச்சை தீரும்படி, அனையவர் - இவ் வசிட்டாதிகள், உறைவிடங்காட்டென - வசிக்கும் இடத்தைக் காண்பியென்று, இவளோத - இந்த லீலைசொல்ல,வேதநாயகியுரைசெய்வாள் -,தேவ சொரூபியாகிய சரஸ்வதி சொல்வாள், அதற்கு - அதைக்காண்பதற்கு, இந்த வினையுடல் விலங்காகும் - இவ்வினை வடிவமான தூலசரீரந் தடையாகும்—எ-று.

எ - த், ஆகையினால் முற்செனந மறைபட்டு இப்பிறப்பு அறியப்பட்டதென்று சரஸ்வதிசொல்ல, ஞானமாகிய கண்ணேநீ அனுக்கிரகஞ்செய்ய ஆச்சரியம் ஆச்சரியம்! பூர்ணமாகத் தெளிந்தேன். இதயக்கிரந்தியாகிய இச்சை தீரும்படி இவ் வசிட்டாதிகள் வசிக்குமிடத்தைக் காண்பியென்று இந்த லீலைசொல்ல தேவசொரூபியாகிய சரஸ்வதி சொல்லுவாள், அதைககாண்பதற்கு இவ்வினை வடிவமான தூலசரீரந தடையாகும்---எ-ம்

இ-ம். சீவஞனவன் விஸ்வனுப் நனவினின்று நித்திரை மயக்கத்தாற் கனவிற்சென்று அங்கிலோர் கடிகையில் அநேகநகடிகையின் சங்கதிகளைச் சத்தியமாகக் காண்பதுபோலச் சித்தானது பிராணனுய் முற்பவத்தினின்று மரணமயக்கத்தாற் பிற்பவத்திற்சென்று அங்கு மறந்து இங்கில் விரித்துச் சிந்தித்த சஙகற்பஞ் சத்தியாக வேண்டின வெகுதினமாகத் தோற்றினதேயன்றி வேறின்று என்பதாம். (34)

## முற்பவத்தை அறியவேண்டுமென்பதற்கு உபதேசித்தல்.

இந்த யாக்கையைமறந்துவேறறிவதற்றிலங்குசிற்சுடர்மெய்யாம்
அந்த நல்லறிவேவடிவாய்மலமறுத்தியே லதுகூடுந
தந்தமக கொரு வடிவிலாவுலகங்க டமணியம பணியாகி
வந்த வாறெனவுங் கண் மோகததி ஞன்மதித்திடப் படுமென்றே.

இ - ள். இந்தயாக்கையை மறந்து - இச்சரீரத்தை மறந்து, வேறு அறிவதற்று - விஸ்மரணமின்றி, இலங்கு - விளங்காநின்ற, சிற்சுடர் - ஞானப்பிரகாசமாகியும், மெய் - சத்தாகியுமிருககின்ற, அந்த நல்லறிவே - அவ் வாநந்த போதமே, வடிவாய் - சொரூபமாய், மலமறுத்தியேல் - (மாயா) மலத்தைநீக்குவையாயின், அதுகூடும் - அவ்விடத்தைப் பார்க்கலாம், தந்தமக்கொருவடிவு - தங்களுக்கென்று ஒருருவம், இலா - (பிரமத்தையன்றிவே) றில்லாத உலகங்கள் - சகங்களாக, தமணியம்பணியாகி - சுவணமாபரணமாய், வந்தவாறென - வந்தவுகையைப்போல, உங்கணமோகத்தினல் - உங்கள் மயக்கத்தினல், மதித்திடப்படும் - அறியப்படும்—எ-று.

எ — து. இச்சரீரத்தை மறந்து விஸ்மரணமின்றி விளங்காநின்ற ஞானப்பிரகாசமாகியும், சத்தாகியுமிருக்கின்ற அவ் வாநந்தபோதமே சொரூபமாய் மாயாமலத்தை நீக்குவையாயின் அவ்விடத்தைப்பார்க்கலாம் தங்களுக்கென்று ஒருருவம் பிரமத்தையன்றி வேறில்லாத சகங்களாக சுவர்ணமே ஆபரணமாய் வந்தவகையைப்போல உங்கள் மயக்கத்தினாலே அறியப்படும்—எ-ம்.

இ-ம். திரிஸ்ய நீங்கித் திருக்குவடிவமாயில் தெரிசிக்கலா மென்பதாம்.

## இதுவுமது.

தத்துவமாபயில் வாதனையன்றியே சங்கடன் மயமாகா
மெத்துசெய் தொழிலும் விட்டிலையாதலான் மேவுதற்கரிதன்னூர்
சுத்தநற் பதமெமை போன்றோர் சிற்பது தொடர்மன வடிவாக
வைத்தசூக்கமெய் தீர்க்கபாவனையினால் வளர்ந்து பேருடலாகும்.

இ-ள். தத்துவம்பயில் - உண்மை (ஞானத்தைப்) பயிர்ச்சி செய்கின்ற, வாதனையன்றி - சுத்த வாசனையைத்தவிர, சகங்கடன்மயமாகா - உலகங்கள் ஆத்மசொரூபமாகா, மெத்துசெய்தொழிலில் விட்டிலை - மிருதுவாகச்செய்கின்ற (சக) விருத்தி நீங்கினதில்லை, ஆதலால் - ஆகையால், உன்னூன்மேவுதற்கரிது - உன்னால் அடையப்படாது, சுத்தநற்பதம் - பரிசுத்தமான பிரமத்தில், எமைபோன்றோர் சிற்பது - எம்போன்றவர்களிருப்பது, தொடர்மனவடிவாக- (உன்போன்றவர்களைத் தொடர்ந்த) தொடாநின்ற மனோரூபமாக, வைத்தசூக்கமெய் - வைத்திருக்கின்ற சூட்சுமசரீரம், தீர்க்கபாவனையினால் - மிகுந்த பாவனையினால், வளர்ந்து பேருடலாகும் - வளர்ந்து தூலசரீரமாகும்.—எ-று.

இ-ம். சாதனமன்றிச் சாத்தியங்கூடாதென்பதாம். (36)

எ - து. உண்மைஞானத்தைப் பயிர்ச்சிசெய்கின்ற சுத்தவாசனையைத்தவிர உலகங்கள் ஆத்மசொரூபமாகாது. மிருதுவாகச்செய்கின்ற சகவிருத்தி நீங்கினதில்லை, ஆகையால் உன்னால் அடையப்படாது. பரிசுத்தமான பிரமத்தில் எம்போன்றவர்களிருப்பது உன்போன்றவர்களுக்குத் தொடாநின்ற மனோரூபமாக வைத்திருக்கின்ற சூட்சுமசரீரம் மிகுந்தபாவனையினால் வளர்ந்து தூலசரீரமாகும்—எ-ம்.

## இதுவுமது.

கட்டிபாம்பனி வெம்மையாற் கரைந்துபோங்கணக் கெனமெய்ஞ்ஞானஞ், சுட்டிநோக்கலும் வாதனை விடுதலூந தூலமுமாமுடல் விட்டுத், திட்டமாகிய சூக்கமெய்தில பெறுஞ்சீவன் முத்தியுமாகு, முட்டஞானமே நிறையுமுன்னிவ்வுட னிறத்திமுற்பவன் காண்பாய்.

நமும், உதாரமும் - சகலத்தியாகமும், விராகமும் - நிராசையும், நிறை ந்து - பூரணமாய், நீள்சகம் - நீண்ட உலகமென்பது, என்றும்!- எப்பொழு தும், ஒன்றுமில்லெனா - ஒன்றுமில்லை யென்று, கலைவழி - வேதநூல்மார்க்கத் தினல், யூகமாய் யுத்தியாய், சாதகராஞேர் - அப்பியாசியானவர்கள், உணர் வர் - (அனுபவமா) யறிவார்கள்—எ-று.

எ - து. இப்படியென்று அனுக்கிரகித்த சரஸ்வதியை அந்தப் பிரகாரம வர முயற்சிக்குந்தன்மை யென்னவென்று இந்த லீலையா னவள் கேட்க சிரவணமும் மனனமும் நிறைந்த நித்தியாசனமும் அப்பழமையான வஸ்துவினிடமான நிஷ்டையாய் நிலையான ஆநந்த மும் சகத்தியாகமும் நிராசையும் பூரணமாய்நீண்ட உலகமென்பது எப்பொழுதும் ஒன்றுமில்லையென்று வேதநூல் மார்க்கத்தினல் யுத் தியாய் அப்பியாசியானவர்கள் அனுபவமா யறிவார்கள்—எ-ம.

ஆ ம். இந்திரியமுதலிய கரணங்களியாவையும் அகமுகப்படுத்தி அதனுற் சுகசென்னியமானவிடத்தில் திரிஸ்யமில்லையென்று அனுஷ்டிப்பதே சாதக மென்பதாம்.

இதுவுமது.

அகமி தங்களிச் சிருட்டியின்முன் வரும் பாவ மாதலினென்று
மிகவு மில்லெனாத தெளிதரு போதமும் வேறுகாண் பனவற்று
நிகழு ஞானததாற காமமேமுதற் பகை நீங்கிட வந்தெய்துஞ
சுகமு மெனறவை சாதகமாகவே தொடர்வர் சாதகராஞேர.

இ - ள். அகமிதங்கள் - (நானிது என்னுஞ்சகங்) கள், இச்சிருட்டியின் முன் - இந்தச்சிருட்டியாதியில, வரும்பாவமாதலின்-உண்டாகாதபடியினல், என்று மிகவுமில்லெனா - எப்பொழுதும் இல்லவே யில்லையென்று, தெளிதரு போதமும் - தெளிந்தஞானமும், வேறுகாண்பவனற்று - திரிஸ்யதிருஷ்டி நீங்கி, நிகழுஞானத்தால் - பிரகாசிக்கின்ற ஞானத்தினல், காமமுதற்பகை ராகத்துவேஷாதிகள் என்னுஞ் சத்துருக்கள், நீங்கிட - பிரிந்திட, சுகமும் இன்பமும், வந்தெய்துமென்று - வந்தடையுமென்று, இவைசாதகமாகவே இவையப்பியாசமாகவே, தொடர்வர்-தொடர்வர்கள், சாதகராஞேர்-(பிரம) அப்பியாசிகள் --எ-று.

எ - து. நானிதுவென்னுஞ் சகங்கள் இந்தச் சிருஷ்டியாதியில் உண்டாகாதபடியினல எப்பொழுதும இல்லவேயில்லையென்றுதெளி ந்த ஞானமும் திரிஸ்யதிருஷ்டி நீங்கிப் பிரகாசிக்கின்ற ஞானத்தினல் ராகத்துவேஷாதிகளென்னுஞ் சத்துருக்கள்பிரிந்திட இன்பமும் வந் தடையுமென்று இவை யப்பியாசமாகவே தொடர்வர்கள் பிரமாப்பி யாசிகள் —எ-ம்.

" இ - ள். அங்குலங்கள் பத்தளவென - பத்தங்குலப் பிரமாணமென்னும் படி, அறிவினுலாகிய வடிவுற்ற - ஞாஞகாரமான, மஙகைதன்னெடும் - லீலையோடும், முன்னுள ஞானத்தால் - முன்புள்ளஞானசரீரத்தால், வயங்கியகலைமாதும் - பிரகாசித்த சரஸ்வதியும், துங்கம் - உயர்வாகிய, விண்ணிடை - ஆகாயத்தில், எழுந்தனர் - எழும்பினுர்கள், அளவறுதூரம் - வெகுதூரம், நீங்கிடவேகி - நீங்கும்படிசென்று, பொஙகும் - பொங்காநின்ற, ஊழியினெடுங்கடல் - பிரளயமகாசமுத்திரத்துக்கு, அனைய - ஒப்பாகிய, வான் புகுந்து ஆகாயத்திற்சென்று, இவையிவைகண்டார் — இவையிவைகளைப்பார்த்தார்கள் —எ-று.

எ — து. பத்தங்குலப் பிரமாணமென்னும்படி ஞாஞகாரமான லீலையோடும் முன்புள்ள ஞானசரீரத்தால் பிரகாசித்த சரஸ்வதியும் உயர்வாகிய ஆகாயத்தில் எழும்பினுர்கள். வெகுதூரம் நீங்கும்படி சென்று பொங்காநின்ற பிரளய மகாசமுத்திரத்துக்கு ஒப்பாகிய ஆகாயத்திற்சென்று இவையிவைகளைப் பார்த்தார்கள் — எ-ம்.

## இதுவுமது.

மட்டிலாததாய்த் தெளிந்துகோமளதாய் மந்தமாருதத்தின்ப
முட்டிலாததாம் விசும்பிடைமனத்தினு முடுகுசித்தர்கடுன்றி
அட்டமெங்கணு மரக்கரும்பிசாசரு மளவின்றிநாய்காகம்
ஒட்டகங்கரம்போன்முகயோகினியொழுங்குவிண்ணுழலுற்று.

இ - ள். மட்டிலாததாய் - அளவில்லாததாயும், தெளிந்துகோமளமதாய் - தெளிந்திருக்கின்றமிருதுவாயும், மந்தமாருதத்து தென்றற்காற்றினது, இன்பமுட்டில்லாததாம் - சுகந்தடையில்லாததாயுமிருக்கின்ற, விசும்பிடை சிதாகாயத்தில், மனத்தினுமுடுகும் - மனோவேகத்திலும் வேகமாய்ச் (சஞ்சரிக்கின்ற), சித்தர்கடுன்றி - சித்தர் (கணங்க) ணிறைந்து, அட்டமெங்கணும் - எட்டுதிசைகளிலும், அரக்கரும் - இராட்சதர்களும், பிசாசரும் - பிசாசர்களும், அளவின்றி - கணக்கற் (றிருக்கின்ற), நாய் - ஞாளியைப்போலவும், காகம் - காக்கையைப்போலவும், ஒட்டகம் - ஒட்டையைப்போலவும், கரம்போல் - கழுதையைப்போலவுமிருக்கின்ற, முகம் - வதனங்களையுடைய, யோகினி - யோகினிகள், ஒழுங்கு - வரிசையாக, விண் - ஆகாயத்தில், உழலுற்று - சுழன்று - எ - று.

எ - து அளவில்லாததாயும், தெளிந்திருக்கின்ற மிருதுவாயும், தென்றற்காற்றினது சுகந்தடையில்லாததாயு மிருக்கின்ற சிதாகாயத்தில் மனோவேகத்திலும் வேகமாய்ச் சஞ்சரிக்கின்ற சித்தர்கணங்கணிறைந்து 'எட்டுத்திசைகளிலும்,' இராட்சதர்களும், பிசாசர்களும், கணக்கற்றிருக்கின்ற ஞாளியைப்போலவும், காக்கையைப் போலவும், ஒட்டையைப்போலவும், கழுதையைப் போலவுமிருக்கின்ற

வதனங்களையுடைய யோகினிகள் வரிசையாக ஆகாயத்தில் சுழன்று எ-ம்.

இதுவுமது.

களிகொணடகத்திடாகினித்திரள் கடுங்காற்றினுற்றிரிகின்ற
வெளிறுகங்கையுஞ்சுவரிலா மனையிடைமேவிவீணையின்பாடல்
றெளியுநாரதத்தும்புருகானமுஞ் சித்திரத்தினிற்கோட்டுந்
துளிகொள்கற்பத்தின்முகில்களுமாதர்தந்தொகுதியுமுளதாகி.

இ - ள். களிகொணடகத்து - களிப்புள்ள நிருத்தத்தையுடைய, இடாகினித்திரள்களும் - இடாகினிக்கூட்டங்களும், கடுங்காற்றினுற்றிரிகின்ற- வேகமுள்ளவாயுவினுற் சஞ்சரிக்கின்ற, வெளிறுகங்கையும் - வெண்மையான கங்காநதியும், சுவரிலாமனையிடைமேவி - சுவரில்லாதவீட்டிற்பொருந்தி, வீணையின்பாடல் - வீணுகானத்தில், தெளியும் தெளிகின்ற, நாரதத்தும்புருகானமும் - நாரதர் தும்புருகானங்களும், கோட்டும்-எழுதப்பட்ட, சித்திரத்தின் - சித்திரத்தைப்போல, இல் - சத்தமில்லாமல், துளிகொள் - வருஷிக்கின்ற, கற்பத்தின்முகில்களும - கற்பாந்தமேகங்களும், மாதர்தந்தொகுதியும் - மகளிர் கூட்டங்களும், உளதாகி - உண்டாகி—எ-று.

எ - து. களிப்புள்ள நிருத்தத்தையுடைய இடாகினிக்கூட்டங்களும், வேகமுள்ள வாயுவினுற் சஞ்சரிக்கின்ற வெண்மையான கங்காநதியும், சுவரில்லாத வீட்டிற்பொருந்தி வீணுகானத்தில் தெளிகின்ற நாரதர் தும்புருகானங்களும், எழுதப்பட்ட சித்திரத்தைப் போல சத்தமில்லாமல் வருஷிக்கின்றகற்பாந்தமேகங்களும், மகளிர் கூட்டங்களும் உண்டாகி—எ-ம். (43)

(இதுவுமது)

எல்லையின்றிய யோசனைதூரங்களியார்க்குமெய்தரிதாகிக்
கல்லையொத்தறவிறுகுறத்திரண்டநீள்காரிருளுடைத்தாகி
யொல்லையோடுதேரிரவியுங்கனலுமேயொப்பதாமொளிபுண்டாய்ச்
சொல்லுமித்திரளியாவையும்பறபலவிடந்தொறுந்தொடர்வுற்று.

இ - ள். எல்லையின்றிய - அளவில்லாத, யோசனைதூரங்கள் - பதின்கடிகைதூரங்களில், இயார்க்குமெய்தரிதாகி - எவர்க்குமடையக் கூடாததாகியும், கல்லையொத்து - பாடாணத்துக்கொப்பாய், அறவும் - மிகவும், இறுகுறத்திரண்ட- கெட்டியாகத் திரண்டிருக்கின்ற, நீள்காரிருளுடைத்தாகி - மிகுந்தகருமையானவிருளையுடையதாயும், ஒல்லையோடு சீக்கிரமாகச்செல்கின்ற, தேரிரவியும் - இரதத்தையுடைய சூரியனும், கனலும் - அக்கினியும், ஒப்பதாம் சமானமாகிய, ஒளியுண்டாய் ; பிரகாசத்தையுடையதாயும், சொல்லும் - சொல்லப்பட்ட, இத்திரள்யாவையும் - இக்கூட்டங்களியாவையு (முடைய) , பற்பலவிடந்தொறும் - பலபலவிடங்களிலும், தொடர்வுற்று - தொடர்ந்து—எ-று.

எ — து. அளவில்லாத பதின்கடிகைதூரங்களில் எவர்க்குமடையக்கூடாததாகியும், பாடாணத்துக்கொப்பாய் மிகவும் கெட்டியாகத் திரண்டிருக்கின்ற மிருத்த கருமையான இருளையுடையதாயும சீக்கிரமாகச் செல்கின்ற இரதத்தையுடைய சூரியனும், அக்கினியும் சமானமாகிய பிரகாசத்தையுடையதாயும, சொல்லப்பட்ட இக்கூட்டங்களியாலவயு முடைய பலபல விடங்களிலும தொடர்நது—எ-ம்.

இதுவுமது.

கொதுகினீடிரளத்தியின்காயிடைக் குழுமுவதெனவெங்கு
சதுமுகன்றருமுயிரெலா மணைவுறுந் தன்மைமூன்றுலகுண்டாம
அதுலவானகங்கடந்தனர் மீட்டுமோ ரவனியின்வரவெண்ணிப்
பதுமவண்டத்தை நீக்கிவேறடைந்திரு நகர்புக்கார்.

இ - ள். கொதுகினீடிரள் - கொசுகின் பெருங்கூட்டங்கள், அத்தியின்காயிடை - அத்திக்கனியிடத்தில், குழுமுவதென - சப்திப்பதுபோல, எங்கும் - எவ்விடங்களிலும், சதுமுகன்றரும் - பிரமனுண்டாக்கிய, உயிரெலாம் - சீவர்களியாவும், அணைவுறுந்தன்மை - சேர்ந்திருக்குங் குணமுள்ள, மூன்றுலகுண்டாம் - திரிபுவனங்களையுமுடைய, அதுலவானகங்கடந்தனர் - சமானமில்லாத ஆகாயத்தைத்தாண்டினூர், மீட்டும் - திரும்பவும், ஓரவனியின்வரவெண்ணி - ஒரு பூமியைச்சேரச் சிந்தித்து, பதுமவண்டத்தை - பிரமாண்டத்தைக்கடந்து, வேறடைந்திரு - வசிட்டனிருந்த லோகத்தில், பருப்பத நகர்புக்கார் - கிரிக்கிராமமென்னும பட்டணத்தையடைந்தார்கள்—எ-று.

எ — து. கொசுகின் பெருங்கூட்டங்கள் அத்திககனியினிடத்தில் சப்திப்பதுபோல எவ்விடங்களிலும பிரமனுண்டாக்கிய சீவர்களியாவும சேர்ந்திருக்குங் குணமுள்ள திரிபுவனங்களையுடையசமானமில்லாத வாகாயத்தைத தாண்டினூர், திருமபவும ஒரு பூமியைச்சேரச் சிந்தித்து பிரமாண்டத்தைகடந்து வசிட்டனிருந்தலோகததில் கிரிக்கிராமமென்னும் பட்டணத்தையடைந்தார்கள்—எ-ம்.

இ-ம். ஆத்மவியாபகத்தி லுண்டான நண விசித்திரங்களை யதுதானே பார்த்து அதிசயித்ததாம். (45)

புத்திரரைக் காண்டல்.

வேறு.

வினையர்சுற்றமுந் தனையருந்துக்க மாய்வெம்பு
முனையவேதியன் மனைபுகுந்தார் கண்ணி லனுகா

இளையபோதின்மெய் சங்கற்பமெய்திய லீலை
மனையுளோரெமைக் காண்கெனச்சங்கற்பம் வகுத்தாள்.

இ - ள். வினையர் - ஏவற்காரரும், சுற்றமும் - உறவினரும், தனையரும்-புத்திரரும், துக்கமாய் வெம்பும் - துன்பமாகவாடுகின்ற, அனையவேதியன் - அப்பிராமணனது, மனைபுகுந்தார் - வீட்டினுழைந்தவர்கள், கண்ணிலனுகார்-(அவர்களுக்கு) அதிரிஸ்யமாயிருக்கும், இளையபோதில் இப்படிப்பட்ட சமயத்தில், மெய்சங்கற்பம் - சத்தியசங்கற்பத்தை, எய்தியலீலை - அடைந்த லீலையானவள், மனையுளோர் - வீட்டின்கணுள்ளவர், எமைக்காண்கென - எங்களைப் பார்க்கக்கடவார்களென்று, சங்கற்பம்வகுத்தாள்-சங்கற்பஞ்செய்தாள்—எ-று.

எ - து. ஏவற்காரரும், உறவினரும், புத்திரரும், துன்பமாக வாடுகின்ற அப்பிராமணனது வீட்டி னுழைந்தவர்கள் அவர்களுக்கு அதிரிஸ்யமாயிருக்கும், இப்படிப்பட்ட சமயத்தில் சத்திய சங்கற்பத்தை அடைந்த லீலையானவள் வீட்டின்கணுள்ளவர் எங்களைப் பார்க்கக் கடவார்களென்று சங்கற்பஞ் செய்தாள்—எ-ம்.

## துக்கநிவர்த்தி செய்தல்.

வேறு.

பூமகளும் மலைமகளும் போல்வாரை வனதெய்வம் போலுமென்றே, தாமவர்கண் டருச்சித்தார் தலைமகன்பார்த் தெமதன்னைதாதை மாய, யாமனுகுந் துயரொழிப்பீ ருயர்ந்தோரை யெதிர்ந்தோருக் கெய்தாதுண் டோ, மாமதியினீரென்னத் தலைதடவித் துயரொழித் தாள வயங்குலீலை.

இ - ள். பூமகளும் - இலட்சுமியையும், மலைமகளும் - பார்வதியையும், போல்வாரை - ஒத்த லீலாதேவிகளை, வனதெய்வம்போலுமென்று - வனதேவதையைப்போல (இருக்கின்ற) தென்று, தாமவர் - (பந்துபுத்திராதிய) தாங்கள், கண்டருச்சித்தார் - தரிசித்துப்பூசித்தார்கள், தலைமகன்பார்த்து-(அதில்) மூத்தினகுமாரன்பார்த்து, எமதன்னைதாதைமாய - எங்கண் மாதாபிதாககள் மரிகக, யாமனுகுந்துயர் - நாங்களடைந(திருக்கின்ற) துககத்தை, ஒழிப்பீர்-நீக்குவீர், உயர்ந்தோரை - மேலானவர்களை, எதிர்ந்தோருக்கு - தரிசித்தவர்களுக்கு, எய்தாதுண்டோ - கிடையாத (பயனுளன்) றுண்டா, மாமதியினீரென்ன - பேரறிவை யுடையவர்களேயென்றுசொல்ல, வயங்குலீலை - பிரகாசிக்கின்ற லீலையானவள், தலைதடவி - சிரசைத்தொட்டு, துயரொழித்தாள் - அவர்கள் துக்கத்தை நீக்கினுள்-எ-று.

எ — து. இலட்சுமியையும், பார்வதியையும் ஒத்த லீலாதேவிகளை வனதேவதையைப்போல இருக்கின்றதென்று பந்துபுத்திர

ராகிய தாங்கள் தரிசித்துப் பூசித்தார்கள் அதில் மூத்தின குமாரன் பார்த்து எங்கள் மாதாபிதாக்கள்மரிக்க நாங்களடைந்திருக்கின்ற துக்கத்தைநீக்குவீர், மேலானவர்களை தரிசித்தவர்களுக்குக் கிடையாத பயமென்றுண்டா? பேரறிவையுடையவர்களே யென்று சொல்லபிரகாசிக்கின்ற லீலையானவள் சிரசைத்தொட்டுஅவர்கள் துக்கத்தை நீக்கினல்—என்பதாம்

## லீலையையு முற்று வினவுதல்.

இருவருமவ் வயின்மறைந்தா ருலகத்தின்சற்பாவ மிவ்வாறுகும், கருதியது முடிக்தனமேற் கருத்தென்கொ லென்றுகலைக்கன்னி கேட்ப, மருவுசமாதியிறகண்ட மன்னவையோ ரெனைக்காணு வகையுமிந்தத், திருமனையோா கண்ட மையு மென்கொலெனச் செப்பெரு டெய்வமன்னுள்.

இ - ள். இருவரும - சரஸ்பதி லீலையெனனு மிருவரும, அவவயின் மறைந்தார் - அவ்விடத்தில அந்தரத்தானமானுர்கள், உலகத்தின் சற்பாவம் சகத்சத்தை, இவவாறுகும் - இவ்வண்ணமாம், கருதியது - நினைததனை, முடித்தனம் - (பார்த்து) முடிததோம, மேறகருத்தென்கொலென்று மே (லுன்னுடைய) கருதநதெனனவென்று, கலைகன்னிகேட்ப - சரஸ்வதிகேட்க, மருவு சமாதியில - அடைநதிருககின்ற சமாதியினிடமாய், கண்டமன்னவையோர் - பார்த்த அரசசபையிலுள்ளவர்கள், எனைககாணுவகையும - என்னைககாணுத வகையும, இந்ததிருமனையோர் - இவவழகியவீட்டிலுள்ளவர்கள், கண்டமையும் - பாாததவிதமும, என்கொலென — என்ன வென்று, தெய்வமன்னுள் - தெய்வததுககொப்பான லீலையானவள், செப்பென்றுள்-சொலலெனறுகேட்டான்-எ-று.

எ - து. சரஸ்வதி லீலையென்னுமிருவரும் அவ்விடத்திலந்தரத்தானமானுர்கள், சகத்சத்தை இவ்வண்ணமாம் நினைத்ததைப பார்த்துமுடித்தோம, மேலுன்னுடைய கருத்தென்னவென்று சரஸ்வதி கேட்கஅடைந்திருக்கின்ற சமாதியினிடமாய்ப்பார்த்த அரசசபையிலுள்ளவர்கள் என்னைக்காணுதவகையும் இவ்வழகிய வீட்டிலுள்ளவர்கள் பார்த்தவிதமும் என்னவென்று தெய்வத்துக் கொப்பான லீலையானவள் சொல்லென்று கேட்டாள்—எ-ம்.

## தேவி லீலையினையு நீங்கப் போதித்தல்.



சாதகத்தாலன்றியிரண் டொன்றாகாதகம்பாவந் தனைநீங்காமற்
போதமடைந்தனையதனாற்சத்தியமாஞ் சங்கற்பம்பொருந்திற்றில்லை
ஆதலினா லவைகாணா ரகம்பாவ மற்றவறி வறிதலாலே
பேதமற நீவிதிக்க விவர்கண்டா ரெனவாணி பேசலோடும்.

இ - ள். சாதகத்தாலன்றி - ஞானப்பியாசத்தினாலல்லாமல், இரண்டொன்றாகாது - துவிதமத்துவிதமாகாது, அகம்பாவந்தனைநீங்காமல் - நானென்னும் பாவனையைப்பிரியாமல், போதமடைந்தனையதனால் - ஞானத்தையடைந்தபடியால், சத்தியமாஞ்சங்கற்பம் - மெய்ச்சங்கற்பமானது, பொருந்திற்றில்லை - (உனக்) குண்டாகவில்லை, ஆதலினாலவர்காணார் - ஆதலால் அச்சபையிலுள்ளவர்களுன்னைப்பாரார், அகம்பாவமற்றவறிவு - (இப்பொழுது) நானென்னும்பாவனையிறந்த சொரூபஞானத்தை, அறிதலால் - உணர்தலினால், பேதமற நீவிதிக்க - அபேதமாக நீ சங்கற்பிக்க, இவர்கண்டாரென - இப்புத்திரர் (முதலாயினோர்) பார்த்தார்களென்று, வாணிபேசலோடும் - சரஸ்வதி சொல்லியவுடன்—எ-று.

எ - து ஞானப்பியா சத்தினாலல்லாமல் துவிதம் அத்துவிதமாகாது நானென்னும் பாவனையைப்பிரியாமல் ஞானத்தை யடைந்தபடியால் மெய்ச்சங்கற்பமானது உனக்குண்டாகவில்லை, ஆதலால் அச்சபையிலுள்ளவர்கள் உன்னைப்பாரார் இப்பொழுது நானென்னும் பாவனையிறந்த சொரூபஞானத்தை உணர்தலினால் அபேதமாக நீ சங்கற்பிக்க இப்புத்திரர் முதலாயினோர் பார்த்தார்களென்று சரஸ்வதி சொல்லியவுடன்—எ-ம்.

இ-ம். அகம்பாவத்தோடும் அஃதின்மையோடும்பெற்ற ஞானத்தின் பலாபலனை யுரைத்ததாம். (49)

## முற்பவங்களைக் காண்டல்.

பெருவெளியா யுன்னருளான் முழுதுணர்ந்தேன் முக்குணத்தின் பிறப்புமறந்தேன், இருவடிவாய் பிரமத்திலகன்றெண்ணூற்றுடல் பலவா யெடுத்தேன்முன்னம்; ஒருதனிமா யாவிகற்பத் தோருலகாந் தாமரைமே லுறைவண்டாக, மருவியவிஞ் சைபர்மகளாய வாதனை தான்மனித வடிவுமானேன்.

இ-ள். உன்னருளால் - (சரஸ்வதியே) உனது கிருபையினால், பெருவெளியாய் - வெட்டவெளியாக, முழுதுணர்ந்தேன் - (எனது பூர்வசென்மம்) யாவையுமறிந்தேன், முக்குணத்தின் - திரிகுணங்களினாலுண்டான, பிறப்பு

மற்றேன் - பவமுநீங்கினேன், பிரமத்தில் - பிரமத்தினின்றும், இருவடியாய் வேறுருவமாய், அகன்றெண்ணூற்றுடல் - நீங்கியெண்ணூறுசரீரம், பலவாயெடுத்தேன் - நாநாவிதங்களா யெடுத்தேன், முன்னம் - முன்னமே, ஓர் தனி - ஒப்பற்ற, மாயாவிகற்பத்து - மாயாவிகற்பத்தினு (லுண்டாகிய), ஒரு உலகாம் - ஒப்பற்ற வுலகங்களாகிய, தாமரைமேல் - தாமரைபுட்பத்தில், உறைவண்டாக - வசிக்கின்ற அளியைப்போல, மருவிய - (சகலவுலகங்களிலுஞ்) சஞ்சரித்த, விஞ்சையர்மகளாய் - வித்தியாதர ஸ்திரீயாகவும், வாதனைதீதால் - வாசனையின் தீமையால், மனிதவடிவுமானேன் - நரவடிவாகவுமானேன் - எ-று.

எ - று. சரஸ்வதியே யுனது கிருபையினால் வெட்டவெளியாக எனது பூர்வசென்மம் யாவையுமறிந்தேன், திரிகுணங்களினாலுண்டான பவமுநீங்கினேன். பிரமத்தினின்றும் வேறுருவமாய் நீங்கியெண்ணூறு சரீரம் நாநாவிதங்களாயெடுத்தேன், முன்னமே ஒப்பற்ற மாயாவிகற்பத்தினாலுண்டாகிய ஒப்பற்ற வுலகங்களாகிய தாமரைபுட்பத்தில் வசிக்கின்ற அளியைப்போல சகல வுலகங்களிலுஞ் சஞ்சரித்த வித்தியாதரஸ்திரீயாகவும் வாசனையின்றீமையால் நரவடிவாகவுமானேன் - எ - ம்.

இதுவுமது.

வேறொரு மாயாவிகற்பத் தரமகளாய்த் தழையுடுக்கும் வேடப்பெண்ணாய்ச், சூறைவலைப் புள்ளரசாய்க்கொதுகுமுதற் பலபிறப்பிற் சுழன்றுசோர்ந்து, சிறுகடற்றிரையிலசை திரணம்போன் மாயையிலே தியங்கினேனை, ஏறவித்தாய்க் கரையென்ன விவள்சொன்னாளிருவரும்விண் ணெழுந்துபோனார்.

இ - ள். வேறொரு - மற்றொரு, மாயாவிகற்பத்து - மாயாவிகற்பமான (லோகத்தில்), அரமகளாய் - இந்திராணியாகவும், தழையுடுக்கும் - பத்திரவஸ்திரத்தைத் தரிக்கின்ற, வேடப்பெண்ணாய் - வேடஸ்திரீயாகவும், வலை - வலையை, சூறை - அறுத்த, புள் - பறவையாகவும், அரசாய் - (சவுராஷ்டிரதேசத்) தரசனாகவும், கொதுகு - கொசுகாகவும் (பிறந்து), முதற்பலபிறப்பில் - (இவை) முதலாகிய பலசநநங்களில், சுழன்றுசோர்ந்து - உழன்றுவாடி, சிறுகடற்றிரையில் - சப்தியாகின்ற சமுத்திரஅலையில், அசைதிரணம்போல் - அலைகின்ற துரும்பைப்போல, மாயையிலே தியங்கினேனை - மாயாவசதி (யூர்த்தகதியும்அதோகதியுமாகக்) கலங்கினவென்னை, கரையேறவித்தாயென்ன - முத்தி தீரத்திலேற்றுவித்தாயென்று, இவள்சொன்னாள் - இந்த லீலைதோத்திரஞ்செய்தாள், இருவரும் - (பின்) இரண்டுபேர்களும், விண்ணெழுந்துபோனார் - ஆகாயத்திலெழும்பினார்கள் — எ-று.

எ - து. மற்றொரு மாயாவிகற்பமான லோகத்தில் இந்திராணியாகவும், பத்திரவஸ்திரத்தைத் தரிக்கின்ற வேடஸ்திரீயாகவும், வலையை அறுத்த பறவையாகவும், சவுராஷ்டிரதேசத் தாசனாகவும் கொக்காகவும் பிறந்து, இவை முதலிய பல ஜநநங்களில் உழன்று வாடி சப்திபாகின்ற சமுத்திரத்தின் அலையில் அலைகின்ற துரும்பைப் போல மாயாவசத்திலார்த்தகதியும் அநாதகதியுமாகக் கலங்கின என்னை முத்திதீரத்தில் ஏற்றுவித்தாயென்று இந்த லீலை தோத்திரஞ் செய்தாள், பின்பிரண்டுபேர்களும் ஆகாயத்திலெழும்பினார்கள்—எ-ம.

(இ-உ-க-ம்) பிரமத்தினின்று நீங்கினமுதல் இதுபரியந்தம் வியாபித்திருந்த பூரணஞானம் உதயமானபடியால் அகற்று மிளித்தவடிவங்களியாவுங் கனவு வடிவமாகத் தெரிந்தனம். (51)

செயித்தல்.

யோகநெறியால்விண்போய்ப் பதுமனிடஞ் சேர்ந்துசவவுடல்
கண்டப்பால், ஏகியிவன் மறுபிறப்பாம் வேந்தனையெய்தலுமவன்
மேலெதிர்ந்து வந்தோ, வேகவினையாகியொரு வேல்வேந்தனமர்
தொடங்கி மிகவுமோத, மாகமயிலனையார்கணோக்கினா ரிருபடையு
மலைந்தவன்றே

இ-ள். யோகநெறியால் - யோகமார்க்கத்தினால், விண்போய் - ஆகாயத்திற்சென்று, பதுமனிடஞ்சேர்ந்து - பதுமனரசனிடத்திலடைந்து, சவவுடல் கண்டு - (அப்பதுமராசனது) சவசரீரத்தைப் பார்த்து, அப்பாலேகி - (பின்) அப்புறஞ்சென்று, இவன் மறுபிறப்பாம் வேந்தனை - இப்பதுமன் இரண்டாஞ் சநநமாகிய விடூரத அரசனை, எய்தலும் - அடையவும், அவன்மேலெதிர்ந்து வந்தோ - அவ்வரசன்மேலெதிர்த்துவந்து, வேகவினையாகி - கடுமையான போரையுடையவனாய், ஒருவேல்வேந்தன் - ஒப்பற்றவேலையுடைய (சிந்து) அரசன், அமர்தொடங்கி - யுத்தத்தைத் தொடங்கி; மிகவுமோத - மிகவுமடிக்க, மாகம் - ஆகாயத்தில் (இருந்து), மயிலனையார்கள் - மயிலையொத்த சரஸ்வதி லீலையானவர்கள் நோக்கினார் - பார்த்தார்கள், இருபடையும் - இரண்டு சேனையும் மலைந்த - யுத்தம்பண்ணின-எ-று.

எ - து யோகமார்க்கத்தினால் ஆகாயத்திற்சென்று பதும அரசனிடத்திலடைந்து அவனது சவசரீரத்தைப்பார்த்து பின்பு அப்புறஞ் சென்று இப்பதுமன் இரண்டாஞ் சநநமாகிய விடூரத அரசனை அடையவும், அவ்வரசன்மேலெதிர்த்துவந்து கடுமையானபோரையுடையவனாய் ஒப்பற்ற வேலையுடைய சிந்து அரசன் யுத்தத்தைத்

துடங்கி மிகவுமடிக்க ஆகாயத்திலிருந்து மயிலையொத்த சாஸ்வதி லீலையானவள் பார்த்தார்கள். இரண்டுசேனையும் யுத்தம்பண்ணின.

இதுவுமது.

மட்டிலா விருபடையு மறலிநடுக் குறவெம்போர் மலைக்குங்காலை
எட்டிலோர் கூறாக வெதிர்ந்தவனா லிவன்சேனையிறக்கலோடும்
பட்டுளோர் பிணக்குன்றான் மறைந்தனனோசமர் கண்டுபயப்பட்ட
னோ, தட்டிலா வெய்யவன்போ யிருணிறைந்த திருபடையுந் தணந்துபோன

இ - ள். மட்டிலாவிருபடையும் - அளவற்ற இருவர்சேனைகளும், மறலிநடுக்குற - நமனடுங்கும்படியாக, வெம்போர் - கொடியசண்டை, மலைக்குங்காலை - பொருதுங்காலத்தில், எட்டிலோர்கூறாக - எட்டிலொருபங்காகும்படி, எதிர்ந்தவனால் - எதிரியினால், இவன்சேனை இறக்கலோடும் - இவன்படைமரித்தமாத்திரத்தில், பட்டுளோர் - மரித்தவர்களது பிணக்குன்றால் - பிரேதமலையினால், மறைந்தனனோ - மறைந்தானோ, சமர்கண்டு - போரைக்கண்டு, பயப்பட்டானோ - பயந்தானோ, தட்டிலா - குற்றமற்ற, வெய்யவன்போய் - சூரியன்போய், இருணிறைந்தது - அந்தகாரம் நிறைந்தது, இருபடையும் - இரண்டுசேனையும், தணந்துபோன - பிரிந்துபோயின — எ-று.

எ - து. அளவற்ற இருவர்சேனைகளும் நமனடுங்கும் படியாக, கொடியசண்டை பொருதுங்காலத்தில், எட்டிலொருபங்காகும்படி எதிரியினால் இவன்படைமரித்தமாத்திரத்தில், மரித்தவர்களது பிரேதமலையினால் மறைந்தானோ போரைக்கண்டு பயந்தானோ குற்றமற்ற சூரியன்போய் அந்தகாரம் நிறைந்தது. இரண்டு சேனையும் பிரிந்து போயின—எ-ம்.

இதுவுமது.

பகைவேந்தன்படைவாங்கப்படாதசிறு படையோடும்பரிந்துமீண்டு
தகைவேந்த னரமியற்றிற் றுயிலுதலு மிவர்களுறத் தலத்திலெய்த
நகையார்ந்த நிலவனைய விவரொளியாவிளைப்பாறி நயனக்கஞ்ச
முகைதோன்ற விழித்தெழுந்து புகழ்ந்திறைஞ்சி யரிச்சித்தான்முன்னின்றோரை.

இ - ள். பகைவேந்தன் - சத்துருவாகிய அரசனது, படைவாங்க - சேனைநீங்க, படாதசிறுபடையோடும் - மரியாதசிலசேனையுடன், பரிந்துமீண்டு - (மனமுறிந்து) திரும்பி, தகைவேந்தன் - தளர்வையுடைய விரோத அரசன், அரமியற்றில் - மேன்மாடியில், துயிலுதலும் - நித்திரைசெய்யவும், இவர்க

ளும் - இந்தச்சரஸ்வதியும் லீலையும், அத்தலத்திலெய்த - அவ்விடத்தில் வர, நகையார்ந்த - பிரகாசம்பொருந்திய, நிலவனைய - சந்திரனது அமுதகிரணத்தையொத்த, இவரொளியால் - இவர்கள் தேயுசினால், இளைப்பாறி - சிரமந்தீர்ந்து, நயனம் - கண்களென்னும், கஞ்சமுகைதோன்ற - தாமரை மொக்கு மலர, விழித்தெழுந்து - விழித்தெழுந்து, புகழ்ந்திறைஞ்சி - தோத்திரஞ்சொல்லிவணங்கி, முன்னின்றோரை - முன்னேயிருந்த சரஸ்வதிலீலையை, அரிச்சித்தான் - பூசித்தான்—எ-று.

எ - து சத்துருவாகிய அரசனது சேனைநீங்க மரியாத சிலசேனையுடன் மனமுறிந்து திரும்பி தளர்வையுடைய வீடுரத அரசன்மேன்மாடியில் நித்திரைசெய்யவும், இந்தச்சரஸ்வதியும், லீலையும் அவ்விடத்தில்வர பிரகாசம்பொருந்திய சந்திரனது அமுத கிரணத்தையொத்த இவர்கள் தேயுசினால் சிரமந்தீர்ந்து கண்களென்னும் தாமரைமொக்கு மலர விழித்தெழுந்து தோத்திரஞ்சொல்லி வணங்கி முன்னேயிருந்த சரஸ்வதி லீலையைப்பூசித்தான்—எ-ம்.

## மாயாவிசித்திரத்தைக் காண்பிக்கப் பின்சிருஷ்டியின் வமிசாவழியை அறிவித்தல்.



இவனதுநற் குலப்பழமை லீலைக்கு விளம்பிவிப்ப வெண்ணி வாணி, அவனருகிற்றுயிலமைச்சன் விழிக்கவென வெண்ணுதலுமவனப்போதே, கவர்துயில்விட் டெழுந்திறைஞ்சகண்டகலைமகளவனைக் கருணைகூர்ந்து, புவனபதி குலத்தொன்மைப் புகலென்றாளமைச்சனிவை புகலலுற்றான்.

இ-ள். இவனது - இவ் அரசனுடைய, நற்குலப்பழமை - நல்லவமிசபரம்பரையை, லீலைக்கு விளம்பி விப்பவெண்ணி - லீலைக்குச்சொல்லும்படி நினைத்து, வாணி - சரஸ்வதியானவள் அவனருகிற் றுயிலமைச்சன் - அவனதுசமீபத்தின் நித்திரைசெய்யும் மந்திரியானவன், விழிக்கவெனவெண்ணுதலும் -விழிக்கக்கடவதென்று சங்கற்பிக்கவும், அவனப்போதே அம்மந்திரியானவன் அப்பொழுதே, கவர்துயில்விட்டு - தன்னைக்கவர்ந்திருந்த நித்திரையைவிட்டு, எழுந்திறைஞ்ச - எழுந்திருந்துவணங்க, கண்டகலைமகள் - பார்த்த சரஸ்வதியானவள், அவனைக்கருணை கூர்ந்து - அவனிடத்திற் கிருபைமிகுந்து, புவனபதிகுலத்தொன்மை - இப்பூமிக்கு அரசாகிய இவன் குலத்தின் பூர்வசரித்திரத்தை, புகலலென்றாள் - சொல்லென்று கேட்டாள், அமைச்சன் - (அதற்கு) மந்திரி, இவை புகலுற்றான் - இவைகளைச் சொல்லத்தொடங்கினான்—எ-று

எ - து. இவ்வரசனுடைய நல்ல வமிச பரம்பரையை லீலைக்குச் சொல்லும்படி நினைத்து சரஸ்வதியானவள் அவனது சமீபத்தில்நித்

திரை செய்யு மந்திரியானவன் விழிக்கக்கடவனென்று சங்கற்பிக்கவும், அம்மந்திரியானவன் அப்பொழுதே தன்னைக் கவர்ந்திருக்கும் நித்திரையை விட்டு எழுந்திருந்தவணங்க, பார்த்த சரஸ்வதியானவள் அவனிடத்திற் கிருபையிருந்து இப்பூமிக்கு அரசாகிய விவஸ்வத குலத்தின் பூர்வ சரித்தை சொல்லென்று கேட்டாள், அதற்கு மந்திரி இவைகளைச் சொல்லத்தொடங்கினன்—எ - ம.

இதுவுமது.

மன்னவரெண் மனுகுலத்தின் மன்னவனுங் கும்பரதன் மன்னர் மன்னன், அன்னவன்பத் திரரதனை யளித்தான்மற் றவனகிலரதனைத் தந்தான்ன், இன்னவன்பே ரிரதனைத்தா னீன்றானிங்கிவன் சிந்துரதனைப்பெற்றான, சொன்னவன்சேய் சைலரதனவனுக்குக் காமரதன் றோன்றலானன்.

இ - ள். மன்னவர் - அரசரில், எண் - மதிக்கப்பட்ட, மனுகுலத்தில்-(வைவசுத) மனுவின் வமிசத்தில், மன்னவனுங்கும்பரதன் - அரசனாகிய கும்பரதனவன், மன்னர்மன்னன் - இராசாதிராசனாகிய, அன்னவன் பத்திரரதனை யளித்தான் - அவன் பத்திரரதனைப்பெற்றான், அவன் - அவ்வரசன், அகிலரதனைத்தந்தான் - அகிலரதனைப் பெற்றான், இன்னவன் - இவ்வரசன், பேரிரதனைத்தானீன்றான் - பிரகத்ரதனைப்பெற்றான், இவன் சிந்துரதனைப்பெற்றான் - இவ்வரசன் சிந்துரதனையீன்றான் சொன்னவன் சேய் - சொல்லிய அவ்வரசனது புத்திரன், சைலரதன் சைலரதனும், அவனுக்கு - அவ்வரசனுக்கு, காமரதன் றோன்றலானன் - காமரதன் தோன்றினன் --எ று.

எ - து அரசரில மதிக்கப்பட்ட வைவசுத மனுவின் வமிசத்தில் அரசனாகிய கும்பரதனானவன் இராசாதிராசனாகிய அவன் பத்திரரதனைப் பெற்றான், அவ்வரசன அகிலரதனைப்பெற்றான், இவ்வரசன் பிரகத்ரதனைப்பெற்றான், இவ்வரசன் சிந்துரதனையீன்றான், சொல்லிய அவ்வரசனது புத்திரன் சைலரதனும், அவ்வரசனுக்கு காமரதன் தோன்றினன்—எ - ம்.

இதுவுமது.

இனையவன்சேய் மகாரதன் மற் றிவன்சிறுவன் விண்டூரதனிவன் குமாரன், வினையமிகு மனோரதனிங் கிவனளித்த விடூரதனிவ் வேந்தர்வேந்தன், அனையிவர்க்குச் சுமுத்திரையா மையிரண்டு வயதிலிவர்க் காசுநல்கி, நினைவொடுங்கும் பிதாவனமே னீங்கினனிவன்செங்கோ னெறியினின்றான்.

இ — ள். இனையவன்சேய் - இப்படிப்பட்டவனுடைய புத்திரன், மகாரதன் - மகாரதனும், இவன் சிறுவன் - இவனுடைய புத்திரன், விண்டூரதன்-

விண்டூரதனும், இவன்குமாரன் - இவனுடையபுத்திரன், வினையமிகுமனோ ரதன் - போர்மிகுந்தமனோரதனும், இங்கினவளித்த - இவ்விடத்தில் இவன் பெற்ற, விடூரதனிவ்வேந்தர்வேந்தன் - விடூரதனனாசாதிராசனும், இவர்கரு- இவருக்கு, அனை - தாயானவள், சுமுத்திரையாம் - சுமுத்திரை யென்னும்பெ யரையுடையவளாம், ஐயிரண்டுவயதில் - பத்துவயதில், இவர்க்காசுநல்கி-இவ ருக்கு அரசாட்சியைக்கொடுத்து, நினைவொடுங்கும்பிதா - மனதடங்கிய பிதா வானவர், வனமேனிங்கினன் - (துறந்துதவ) வனத்திற்சென்றார், இவன்செங் கோனெறியினின்றான் - இவனீதிமார்க்கத்தாற் (பூமி) பாலனம் பண்ணி னார்—எ-று.

எ - து. இப்படிப்பட்டவனுடைய புத்திரன் மகாரதனும், இவ னுடைய புத்திரன் விண்டூரதனும், இவனுடையபுத்திரன் போர்மிகு ந்த மனோரதனும், இவ்விடத்திலிவன்பெற்ற விடூரதனனாசாதிராச னும, இவருக்குத் தாயானவள் சுமுத்திரையென்னும பெயரையுடை யவளாம், பத்துவயதில் இவருக்கு அரசாட்சியைக் கொடுத்து மன தடங்கிய பிதாவானவர் துறந்து தவவனத்திற் சென்றார், இவன் நீதி மார்க்கத்தாற் பூமிபாலனமபண்ணினான்—எ-ம்.

## விடூரதமயக்கநீங்கி ஞானம உதயமாம்பொருட்டு முற்பவம் அறிவித்தல்.



என்பளவில் வேந்தனைநின் முற்பிறவி ஞானத்தாலெளிதுகாண்கென்
றன்பினொடு கையினு லவன் முடியை நாமகடொட் டருளலோடுந்
தன்பகையா மனவிருள்போய் லீலையுடன் வாழ்பதுமன்றானுய்க்கண்
டான், இன்பமுற வியப்புற்றான் மாமாயை யிருந்தபடி யென்னே
[யெனறான்

இ - ள். என்பளவில் - எனறு (மந்திரிசொன்ன) மாத்திரத்தில், வேந் தனை - இராசாவை, நின்முதற்பிறவி - உனது முதற்சநநத்தை, ஞானத்தால்- ஞான (சகண்ணி)னால், எளிது காண்கென்று இலேசாய்த் தெரிந்துகொள் ளக்கடவாயென்று, அன்பினொடு - அன்பினுடன், கையினலவன்முடியை (தனது) அஸ்தத்தினால் அவ்வாசனதுசிரசை, நாமகள்தொட்டு - சரஸ்வதியா னவள் பரிசித்து, அருளலோடும் - அனுக்கிரகித்தவுடன், தன்பகையாமனம்- தனது பகையாகிய மனதிலிருக்கின்ற, இருள்போய்-மாயாந்தகாரநீங்கி, லீலை யுடன் - லீலையோடும், வாழ்பதுமன் - (கூடி) ச்சுகிக்கின்றபதும அரசன், தானு ய்க்கண்டான் - தனதுவடிவமாகப்பார்த்தான், இன்பமுற - ஆநந்தம்பொரு ந்த, வியபபுற்றான் - அதிசயித்தான், மாமாயை - மகாமாயையானது, இருந்த படியென்னேயென்றான் - இருந்தவிதம்என்னவென்று சொன்னான்—எ-று.

எ - து. என்றுமந்திரிசொன்னமாத்திரத்தில் இராசாவைஉனது முற்சநநத்தை ஞானக்கண்ணினல் இலேசாய்த்தெரிந்துக் கொள்ளக் கடவாயென்று அன்பினுடன் தனது அஸ்தத்தினல் அவ்வாசனது சிரசை சரஸ்வதியானவள்பரிசித்து அனுக்கிரகித்தவுடன்தனது பகையாகியமனதிலிருக்கின்றமாயாந்தகாரநீங்கி லீலேயோடும், கூடிச் சுகிக்கின்ற பதுமஅரசன் தனது வடிவமாகப் பார்த்தான், ஆநந்தம் பொருந்த அதிசயித்தான், மகாமாயையானது இருந்தவிதம் என்னவென்று சொன்னன்—எ-ம்.

இ-ம். தேவியனுக்கிரகத்தினல் ஞானமுதயமாய் மாயாவிசித்திரத்தைப் பார்த்து அதிசயித்ததாம்.

## ஒருநாள்எழுபதுவருடமான மயக்கந்தீர விசாரித்தல்.

தாயரிவ ராற்றெளிந்தே னெனநாடி யவர்சரணந் தலைமேற்சூடித்
போயபவத் துடனீங்கி நாளொன்று மிவ்வுடலிற் புக்கபின்னைச்
சேயவெழு பதுவருடஞ் சென்றதாற் செய்ததெலாந் தெளியாநின்
றேன், மாயமிது வென்கொலென மன்வனகேட்டலுங்கருணைவாணி
[சொல்வாள்

இ - ள். தாயரிவரால் - மாதாவாகிய இவர்களால், தெளிந்தேனென (மாயையைத்) தெரிந்தேனென்று, நாடி - சிந்தித்து, அவர்சரணம் - அவர்கள் பாதத்தை, தலைமேற்சூடி-சிரசின்மேல்தரித்து, போயபவத்துடனீங்கி-போன சநநத்தின் சரீரநீங்கி, நாளொன்றும் - நாள் ஒன்றுகவும், இவ்வுடலிற்புக்க பின்னை - அச்சரீரத்தில்வந்தபின்பு, சேயவெழுபதுவருடம் - அதிகமானஎழுபதுவயது, சென்றதால் - நடந்தபடியால், செய்ததெலாம் - நடந்தசகலமும், தெரியாநின்றேன் - தெரிந்தேன், மாயமிதுவென்கொலென - இதென்னமாயா விசித்திரமென்று, மன்னவன்கேட்டலும் - அரசன் கேட்கவும், கருணை - கிருபையே (வடிவமாயுள்ள), வாணிசொல்வாள்-சரஸ்வதி அநுக்கிரகஞ்செய்வாள்—எ-று.

எ - து. மாதாவாகிய இவர்களால் மாயையைத்தெரிந்தே னென்றுசிந்தித்து அவர்கள் பாதத்தைச்சிரசின்மேல்தரித்து போனசநநத்தின் சரீரநீங்கி நாள் ஒன்றுகவும் இச்சரீரத்தில் வந்தபின்பு அதிகமான எழுபதுவயது நடந்தபடியால் நடந்தசகலமும் தெரிந்தேன், இதென்ன மாயாவிசித்திரமென்று அரசன்கேட்கவும் கிருபையை வடிவமாயுள்ள சரஸ்வதி அனுக்கிரகஞ்செய்வாள்—எ-ம்.

## மயககந்திரப் போதித்தல்.



இறப்பென்னு மாமூர்ச்சை யெய்தியபின் னப்பொழுதவ் விடத்திற்றானே, பிறப்பென்னு மாமோகம் பெரிதுண்டாம் விண்போலப் பிறங்கித் தூய்தாஞ், சிறப்புள்ள வுன்மனதிற்செய் தொழிலாம் மயக்கமே தெரியாநின்ற, துறந்துன்னு மெழுபதுயாண் டுனக்ககன்றன்பதனை யுணர்ந்துநோக்காய்.

இ - ள் · இறப்பென்னும் - மரணமென்கிற, மாமூர்ச்சையெய்தியபின் - பெரியமயக்கம் வந்தபின்பு, அப்பொழுது - அக்காலத்தில், அவ்விடத்திற்றானே - அவ்விடத்திலேயே, பிறப்பென்னுமாமோகம் - சநநமென்கின்ற மகாமோகமானது, பெரிதுண்டாம் - மிகவுமுண்டாயிருக்கும், விண்போல- ஆகாயத்தைப்போல, பிறங்கித்தூய்தாம் - நிறைந்து பரிசுத்தமான, சிறப்புள்ள - சிறப்பையுடைய, உன்மனதில் - நின்மனதில், செய்தொழிலாம் - செய்கன்மமாகிய, மயக்கமே - பிராந்தியே, தெரியாநின்றது - காண்கின்றதான, உறத்துன்னும் - பொருந்தநெருங்கிய, எழுபதுயாண்டு - எழுபது வருடமானது உனக்ககன்றதென்பதனை - உனக்கு நீங்கினது என்பதை, உணர்ந்து நோக்காய் - (நீ) அறிந்துபார்ப்பாய்—எ - று.

எ - று. மரணமென்கின்ற பெரியமயக்கம் வந்தபின்பு அக்காலத்தில் அவ்விடத்திலேயே சநநமென்கின்ற மகாமோகமானது மிகவுமுண்டாயிருக்கும். ஆகாயத்தைப்போல நிறைந்து பரிசுத்தமானசிறப்பையுடைய நின்மனதில் செய்கன்மமாகிய பிராந்தியே காண்கின்றதான பொருந்த நெருங்கிய எழுபது வருடமானது உனக்குநீங்கினதென்பதை நீயறிந்துபார்ப்பாய்—எ - ம்.

இ-ம். இறந்து பிறக்கு மயக்கத்திலுண்டான மனோவிகற்பத்தாற் காலவளவு தோற்றினதேயன்றி எதார்த்தமாயிற்று என்பதாம். ஆறுயிரத்திற்பதினறுவயதேயென வியாக்கியானமிருக்கினும் முப்பத்திராயிரத்தில் எழுபது வயதேயென மூலமிருத்தலின் அஃதே யிந்நூலாசிரியர் கருத்தெனக்கொள்க என்பதாம். (60

## இதுவுமது.

கடிகையிரண் டினிநெடிய காலமுறுங் கனவொக்குங் கழிந்தவாறுட், படியுறுமா யாவிகற்ப நனவிலே வெகுவிதமாய்ப் பரந்து தோன்று, நெடியபிறப் பிறப்பென்று நினைக்கில்லை மெய்ஞ்ஞான நினைக்குரூப, முடிவில்பதத் திருக்கின்றாய் சகமெல்லாங் கண்டிருந்து முழுதுங்காணாய்.

இ-ள். கடிகையிரண்டினில் - ஒரு முகூர்த்தகாலத்தில், நெடியகால மூறும் - அநேக காலம்வருகின்ற, கனவொக்கும் - சொப்பனத்தை யொத்திருக்கும், கழிந்த - நீங்கிய, வாணாள் - ஆயுளானது, படியுறு - குணம்பொருந்திய, மாயாவிகற்பம் - மாயையின் விகற்பத்தினால், நனவில் - சாக்கிரத்தில், வெகுவிதமாய் - நாநாவிதமாக, பரந்துதோன்றும் - விரிந்துதோற்றும், நெடியமிருந்த பிறப்பிறப்பு - சநநமரணங்கள், என்று நினைக்கில்லை எப்போது உனக்கில்லை, மெய்ஞ்ஞானம் - உண்மைஞானமே, நினக்குருபம் - உனக்கு சொரூபம், முடிவில் பததிருக்கின்றாய் - அந்தமில்லாத (பாம) பதத்திலிருக்கின்றாய், சகமெல்லாங்கண்டிருந்தும் - உலகங்களியாவையும் பார்த்தும், முழுதுங்காணாய் - ஒன்றையும் பாராய்—எ-று.

எ-து. ஒரு முகூர்த்த காலத்தில் அநேககாலம் வருகின்ற சொப்பனத்தை யொத்திருக்கும், நீங்கிய ஆயுளானது குணம் பொருந்திய மாயையின் விகற்பத்தினால் சாக்கிரத்தில் நாநாவிதமாக விரிந்து தோற்றும். மிகுந்த சநநமரணங்கள் எப்போது முனக்கில்லை, உண்மை ஞானமே உனக்கு சொரூபம அந்தமில்லாத பாமபதத்திலிருக்கின்றாய் உலகங்களியாவையும் பார்த்தும் ஒன்றையும பாராய் எ-ம.

இ-ம். ஆயுளானது மாயாவிசித்திரத்தில் தோன்றினதேயன்றி ஆத்ம சொரூபமான சித்தில் இன்றென்பதாம். (61)

இதுவுமது.

எல்லாமா மியல்பினா லுன்னாலுன் னிடத்திலிருந் திலங்காநின் றூய்ச, சொல்லாமைந் தரைப்பிடித்த தொட்டிலிற் பேய்சுடலையிற போந் தொன்மைபோலப், பொல்லாத மூகர்க்குப்புவியுறுதியாய்த் தோன்றும் பொன்காணதோர், அல்லாது பணியென்பர் தற்பாத் தைக் காணாதோ ரகிலமென்பார்.

இ-ள். எல்லாமாம்-சமஸ்தமுமாயிருக்கின்ற, இயல்பினால் - சுபாவத்தினால், உன்னால் - உனதறிவினால், உன்னிடத்திலிருந்து - உன (தர்ம்சொரூபத்தில் இருந்து, இலங்காநின்றாய் - பிரகாசிக்கின்றாய், சொல்லாமைந்தரை - பேசத்தெரியாத குழந்தைகளை, தொட்டிலில் - தொட்டிலி (லிருக்கும்பருவத்தில்), பிடித்தபேய் - பிடித்தபிசாசானது, சுடலையிற்போம் - மயானத்தினீங்குகின்ற, தொன்மைபோல - பழமையைப்போல, பொல்லாதமூகர்க்கு - தீமையையுடைய மூடர்களுக்கு, புவியுறுதியாய்த் தோன்றும் - சகமானது சத்தியமாகத்தோற்றும், பொன்காணாதோர் - சுவர்ணமென்று அறியாதவர்கள், அல்ல - (பொன்) னல்ல, அது - அப்பொன்னை, பணியென்பர் - ஆபரணமென்று சொல்லுவார்கள், தற்பரத்தைக்காணாதோர் - (அவைபோல) சொரூபதிருஷ்டியில்லாதவர்கள், அகிலமென்பார்-சகமென்பார்கள்—எ-று.

எ - து சமஸ்ஸ்தமுமாயிருக்கின்ற சுபாவத்தினால் உனது அறிவினால் உனதாத்ம சொரூபத்தினிருந்து பிரகாசிக்கின்றாய்பேசத்தெரியாத குழந்தைகளை தொட்டிலிலிருக்கும் பருவத்தில் பிடித்தபிசாசானது மயானத்தில் நீங்குகின்ற பழமையைப்போல திமையையுடைய மூடர்களுக்குச் சகமானது சத்தியமாகத்தோற்றும், சுவர்ணமென்றறியாதவர்கள் பொன்னல்ல, அப்பொன்னை ஆபரணமென்று சொல்லுவார்கள். அவைபோல சொரூப திருஷ்டி யில்லாதவர்கள் சகமென்பார்கள்— எ-ம்.

இ-ம். திருக்ஷைத்தரிசித்தவர்கள் திரிசியபேதம் அறிவார்களென்பதாம்.

இதுவுமது.

தனைமுதலாய்க் காண்கின்ற சகமெல்லா நீள்கனவாஞ் சகத்திற்றோன்றும், இனையபொருள் களுங்கனவிற் காண்கின்றபொருள்களாமென்றுதேர்வாய், அனையபொருள் களுங்காணுமறிவுமாத் திரம்வடிவா யனைத்துமேவி, வினையில்செறி வாய்க்கனமாய்ச் சுத்தமாகிப்பிரம விண்ணேயுண்டாம்.

இ-ள். தனைமுதலாய் - (யானெனதென்னும்) அகங்காரமுதலாக, காண்கின்ற - பாராநின்ற, சகமெல்லாம் - உலகங்களியாவும், நீள்கனவாம்-நீண்டசொப்பனமாம், சகத்திற்றோன்றும் - உலகத்தினிடத்தில் தோன்றாநின்ற, இனையபொருள்களும் - இப்படிப்பட்ட வஸ்துக்களும், கனவிற்காண்கின்ற - சொப்பனத்திற்காணுகின்ற, பொருள்களாமென்று - வஸ்துக்களாமென்று, தேர்வாய் - உணர்வாய், அனையபொருள்களுங்காணு - அப்படிப்பட்ட வஸ்துக்களுங்காணுக, அறிவுமாத்திரம்வடிவாய் - ஞானமே சொரூபமாய், அனைத்துமேவி - எவற்றிலுங்கூடி, வினையில்செறிவாய் - தொழிலில்லாத நிறைவாய், கனமாய் - மகத்தாய், சுத்தமாகி - பரிசுத்தமாய், பரமவிண்ணேயுண்டாம், பரமாகாயமேயிருக்கும் எ-று.

எ - து, யானெனதென்னும் அகங்கார முதலாகப் பாராநின்ற உலகங்களியாவும் நீண்டசொப்பனமாம், உலகத்தினிடத்தில்தோன்றாநின்ற இப்படிப்பட்ட வஸ்துக்களுஞ் சொற்பனத்திற் காணுகின்ற வஸ்துக்களாமென்று உணர்வாய், அப்படிப்பட்ட வஸ்துக்களுங்காணுக ஞானமே சொரூபமாய் எவற்றிலுங்கூடி தொழிலில்லாதநிறைவாய், மகத்தாய், பரிசுத்தமாய், பரமாகாயமேயிருக்கும் — எ-ம்.

இ-ம். சகத்தெனவும் தீர்க்கசொற்பனத்தில் வஸ்துக்களென்னும் பேதந்தோன்றுவதேயன்றிச் சுயஞ்சைதன்யத்தில் இல்லை என்பதாம். (68)

இதுவுமது

முழுதுமாம்முழுதுடைத்தாய்ச் சத்திமுழு தும்முள்ளமூர்த்திதானே பழுதிலா தெவ்விடத்தெப்படிதோன் றுமவ்விடத்தப்படியே தோன் றும், வழுவிலாமெய்ஞ்ஞானநிலைலீலை பொருட்டாநும் வழங்கப்பெற் றாய், நழுவிலா வுண்மையொடுந தெளிந்தனையாம் போதுமென நவி லலோடும்.

இ - ள். முழுதுமாய் - எல்லாமாகியும், முழுதுடைத்தாய்-எல்லாமுடை, யதாகியம், சத்திமுழுதும்முள்ள சத்திகளெல்லா மிருக்கின்ற, மூர்த்திதானே- சொரூபமே, பழுதிலாது - பழுதுபடாமல், எவ்விடத்தெப்படிதோன்றும் - (காலகன்மபரிபாகத்தினால) எந்தவிடத்தில எப்படிதோன்றுமோ, அவ்விடத் தப்படியேதோற்றும் - அஙகுஅவ்வண்ணமே தோற்றும், வழுவிலா மெய்ஞ் ஞானநிலை - குற்றமற்றவுண்மைஞானநிலையை, லீலைபொருட்டு - லீலை நிமித் தம், நாம்வழஙகப்பெற்றாய் - நாமுபதேசிகக நீயடைநதாய், நழுவிலாவுண்மை யோடும் - கெடாததததுவத்துடன், தெளிந்தனை - தெளிந்தாய், யாம்போது மென - நாங்களே கிரேமென்று, நவிலலோடும் (சரஸ்வதி) சொல்லவும்.

ஏ - து. எல்லாமாகியும், எல்லா முடையதாகியும், சத்திகளெ ல்லா மிருககினற சொரூபமே பழுதுபடாமல் காலகனம பரிபாகத்தி னால் எநத இடத்தி லெபபடித்தோனறுமோ அங்கு அவ்வண்ணமே தோற்றும. குறறமறற உண்மைஞான நிலையை லீலை நிமிததம் நாமு பதேசிகக நீயடைநதாய். கெடாத தத்துவததுடன் தெளிநதாய். நாங்களே கிரேமென்று சாஸ்வதிசொல்லவும்—எ-ம்.

இ-ம், சைதன்ய பூரணம் ஏககாலத்து எப்படித்தோற்றுவதோ அப்படி சகலமுந் தோறறுவதேயன்றி வேறுதுகுறிதென்னு மாயுளின் பேத மின்று என்பதாம். (64)

## முற்பவமடைதற்கு வினவுதலையும் அதற்கு உத்தரத் தையுங் கூறல்.

இதுபுகலக் கேட்டாசனெனையடைநதோர் களும்வேண்டிற்றெய்தா நிற்பர், புதுமணிநேருமைப்பணிநது புகழ்நதேன்வேணடியதெய்தல் புதுமைத்தாமோ, பதுமவுட னுனடைவ தென்றென்னவிப்போரிற் படுவைபட்டால, அதுபுகுவை யெனக்கலைமா தளிதத லுமேற் றலத் தொருவ னகூறுவதானுன.

இ - ள். இதுபுகல - இவ் அனுபவததைப் போதிகக, கேட்டாசன் சிரவணஞ்செயதவிடுரதன், எனையடைந்தோர்களும் - என்னை (யாசகமா) யடைந்தவர்களும், வேண்டிற்றெய்தாநிற்பர் - வேண்டியதைப் பெறுவார் கள், புதுமணிநேருமை - புதுமையான (சிந்தா) மணியையொத்த வுங்களை.

பணிந்து - வணங்கி, புகழ்ந்தேன் - தோத்திரஞ்செய்தவனுகியநான், வேண்டியதெய்தல் - (அடைய) வேண்டியதடைதல், புதுமைத்தாமோ - ஆச்சரியமாமா, பதுமவுடனு னடைவதென்றென்ன - (முற்) பதுமசரீரத்தையானடைவதென்றுஎன்றுகேட்க, இப்போரிற்படுவை - இந்தயுத்தத்தின் மரிப்பாய், பட்டால் - மரித்தால், அது புகுவையென - அச்சரீரத்தை யடைவாயென்று கலைமாதளித்தலும் - சரஸ்வதி அனுக்கிரகிக்கவும், மேற்றலத்தொருவன் - மேல்வீட்டி லொருவன் (வந்து), அறைவதானுன் - சொல்லத்தொடங்கினுன் எ-று.

எ - து இவ் அனுபவத்தைப்போதிக்கச் சிரவணஞ்செய்தவிரோதன் என்னைபாசகமா யடைந்தவர்களும் வேண்டியதைப்பெறுவார்கள், புதுமையான சிந்தாமணியையொத்த உங்களைவணங்கித் தோத்திரஞ் செய்தவனுகிய நான் அடையவேண்டிய தடைதல் ஆச்சரியமாமா? முற்பதும சரீரத்தை யானடைவதென்று என்று கேட்க இந்த யுத்தத்தில் மரிப்பாய், மரித்தால் அச்சரீரத்தை யடைவாயென்று சரஸ்வதி யனுக்கிரகிக்கவும் மெல்வீட்டி லொருவன் வந்து சொல்லத்தொடங்கினுன் —எ - ம். (65)

## முற்பவமடைதற்கேதுவான சரித்திரமுறைத்தல்.



அப்புமழை சொரிந்துவரு மடர்சேனைக் கடலெங்கு மடர்ந்து நிற்க, வெப்புடைய கனற்கொழுந்தா லந்நகரஞ் சாம்பராய் வேவா நின்ற, திப்புதுமை கண்டிலைகொ லிகல்வேந்தே யென்பளவி லிறைஞ் சார்சேனை, முப்புவனங் களுநடுங்க மோகரிக்கு மோசைசெவி முடுகக்கேட்டான.

இ - ள். அப்புமழைசொரிந்துவரும் - அம்புவருடஞ் சொரிந்துவருகின்ற, அடர்சேனைக்கடல் - நிறைந்த சேனைசமுத்திரமானது, எவரு மடர்ந்து நிற்க எவ்விடத்தும் நிறைந்திருக்க, வெப்புடைய - வெம்மையாகிய, கனற்கொழுந்தால் - அக்கினிச்சுவாலையினுல், அந்நகரம் - அப்பட்டணம், சாம்பராய் வேகாநின்றது - சாம்பலாகவேகின்றது, இப்புதுமை - இவ்வதிசயத்தை, கண்டிலைகொல் - காணவில்லையோ, இகல்வேந்தே - பலமபொருந்திய அரசனே, என்பளவில் - என்று சொல்லுஞ்சமயத்தில், இறைஞ்சார்சேனை - பகைவர் படையானது, முப்புவனங்களும் நடுங்க - மூன்றுலகங்களும நடுங்குமபடி, மோகரிக்குமோசை - கெற்சிக்கின்ற சப்தத்தை, செவிமுடுகக்கேட்டான் - காது செவிபட (அரசன்) கேட்டான்—எ-று.

எ - து. அம்புவருடஞ் சொரிந்து வருகின்ற நிறைந்தசேனு சமுத்திரமானது எவ்விடத்தும நிறைந்திருக்க வெம்மையாகிய அக்கினிச் சுவாலையினுல் அப்பட்டணம சாமபலாகவேகின்றது, இவ்வதி

பயத்தைக் காணவில்லையோ பலம்பொருந்திய! அரசனே என்று சொல்லுஞ்சமயத்தில் பகைவர்படையானது மூன்றுலகங்களுந் நடுங்கும்படி கெறசிக்கின்ற சப்தத்தைக் காதுசெவிடுபட அரசன் கேட்டான்—எ - ம். (66)

(இதுவுமது)

ஒட்டலர்சேனையின்முழக்கு முலைந்தலறு நகரொலியு முருமே
றென்ன, முட்டியெழ வடவனல்போன் முழங்கனலின் புகையெங்கு
மூடிக்கொள்ள, கெட்டனகண் களுஞ்செவியுங் கிளர்நகர மழிந்ததுவிக் கேடியாவுந், திட்டமுற லீலையுமவாணியுமவேந்து மந்திரியுந்
தெரியக்கண்டார்.

இ - ள். ஒட்டலர் - சத்துருக்களின், சேனையின்முழக்கும்-படையினது சப்தமும், உலைந்தலறும் - அலைவுற்று அலராநின்ற, நகரொலியும் - பட்டணத்திலுள்ளவர்களின் சப்தமும், உருமேறென்ன - இடியைப்போல, முட்டியெழ - எதிர்த்தெழ, வடவனல்போல் - வடவாக்கினியைப்போல, முழங்கனலின் - சப்திக்கப்பட்ட அக்கினியினது, புகையெங்கு மூடிக்கொள்ள - தூமமானது எவ்விடத்துஞ் சூழ்ந்துகொள்ள, கண்களுஞ்செவியும - நேத்திரமுஞ் சுரோத்திரமும், கெட்டன - அழிந்தன, கிளர்நகர மழிந்தது பிரகாசிக்கின்றபட்டணமழிந்தது, இக்கேடியாவும் இக் கேடு அனைத்தையும், திட்டமுற - பிரத்தியட்சமாக, லீலையும் லீலையும் - வாணியும் - சரஸ்வதியும், வேந்தும் அரசனும், மந்திரியும் - அமைச்சனும், தெரியக்கண்டார் - பிரத்தியட்சமாகப்பார்த்தார்கள் - எ-று.

எ - து. சத்துருக்களின் படையினது சப்தமும, அலைவுற்று அலராநின்ற பட்டணத்தி லுள்ளவர்களின் சப்தமும, இடியைப் போல எதிர்த்தெழ வடவாக்கினியைப்போல சப்திக்கப்பட்ட அக்கினியினது தூமமான தெவ்விடத்துஞ் சூழ்ந்து கொள்ள நேத்திரமுஞ் சுரோத்திரமும் அழிந்தன. பிரகாசிக்கின்ற பட்டணமழிந்தது. இக்கேடு அனைத்தையும் பிரத்தியட்சமாகலீலையும, சரஸ்வதியும், அரசனும், அமைச்சனும், பிரத்தியட்சமாகப்பார்த்தார்கள்—எ-ம். (67)

இதுவுமது.

வேறு.

செருவிறல்வேகதன்றேவி தெருமந்துநடுங்கிவந்தாள்
வருமிவள் பாங்கிமன்னு மாளிகைமகளிர்யாரும்
பெருகியநிதியுங்கொண்டார் பேணலாரென்னக்கேட்டான்
அருகுறுதேவியுங்க ளடைக்கலமென்றுபோனுன்

இ - ள். செருவிறல் - யுத்தத்தில்வீரமுள்ள, வேகதன்றேவி - அரசனுடையமனைவியானவள், தெருமந்து - பிரமித்து நடுங்கிவந்தாள் - நடுக்

கழுற்றுவந்தாள், வருமிவள்பாங்கி - இவளுடன் வராநின்ற தோழியானவள், மன்னு - அரசனே, மாளிகைமகளிர் யாரும் அரண்மனையிலுள்ள மாதர்களனைவரையும், பெருநிதியும் - மிகுந்ததனங்களையும், பேணலார் - சத்துருக்கள், கொண்டாரென்ன - கொள்ளையிட்டார்களென்று சொல்ல, கேட்டான் - (அதைக்) கேட்டவிரோத அரசன், அருகுறுதேவி - என்பக்கத்திலுள்ள தேவியானவள், உங்களுடைக்கலமென்றுபோனான் - உங்களுடைக்கலமென்று சொல்லி யுத்தத்துக்குப்போயினன்— எ-று.

எ - து. யுத்தத்தில் வீரமுள்ள அரசனுடைய மனைவியானவள் பிரமித்து நடுக்கமுற்றுவந்தாள், இவளுடன் வராநின்ற தோழியானவள் அரசனே! அரண்மனையிலுள்ள மாதர்களனைவரையும் மிகுந்த தனங்களையும சத்துருக்கள் கொள்ளையிட்டார்களென்று சொல்ல, அதைக்கேட்ட விரோத அரசன் என்பக்கத்திலுள்ள தேவியானவள் உங்களுடைக்கலமென்று சொல்லி யுத்தத்துக்குப்போயினன்—எ-ம்.

## லீலைவடிவமாகவே வந்த புதியலீலையின் காரணம் வினவுதல்.

எதிர்நிழல்போலவந்த லீலையையிந்தலீலை
அதிசயமெய்தி நோக்கி யருங்கலைமாதைநோக்கி
புதிதுநானிங்குவந்த பொருளென்கொ லென்றலோடு
மதிநிறவாணியந்த மயக்கந்தீர்த் துரைப்பதானாள்.

இ-ள். எதிர்நிழல்போல - (கண்ணாடி) யிலெதிரிட்ட தனது சாயையைப்போல, வந்தலீலையை - வந்த (விரோதன் மனைவியாகிய, லீலையை, இந்தலீலை (பதுமன் மனைவியான) அந்த லீலையானவள், அதிசயமெய்தி நோக்கி - ஆச்சரியமடைந்துபார்த்து, அருங்கலை மாதைநோக்கி - அருமையான சரஸ்வதியைப்பார்த்து, புதிது - நூதனமாக, நானிங்குவந்த பொருளென்கொல் - நானே யிவ்விடத்தில் வந்திருக்கின்ற உண்மையென்ன, என்றலோடும் - என்றுகேட்டவுடன், மதிநிறவாணி - சந்திர நிறத்தையுடைய சரஸ்வதியானவள், அந்த மயக்கந்தீர்த்து - அம்மயக்கத்தை நீக்கி, உரைப்பதானாள் - சொல்லத் தொடங்கினாள் எ-று.

எ — து. கண்ணாடியிலெதிரிட்ட தனது சாயைபோல வந்த விரோதன் மனைவியாகிய லீலையை பதுமன்மனைவியான இந்த லீலையானவள் ஆச்சரியமடைந்து பார்த்து அருமையான சரஸ்வதியைப்பார்த்து நூதனமாக நானே இவ்விடத்தில் வந்திருக்கின்ற உண்மையென்ன வென்று கேட்டவுடன் சந்திரநிறத்தையுடைய சரஸ்வதியானவள் அம்மயக்கத்தை நீக்கிச் சொல்லத்தொடங்கினாள்—எ-ம்.

## தேகாந்தபூரணமே இப்புதிய லீலையாயிற்றெனல்.



நின்னைநீங்காதுவாழ நினைத்தனன்மரணகாலத்
தன்னதவ்விடத்தேபெற்றா னன்பினாலுனதுகாந்தன்
இன்னல்கூர்மரணந்தன்னி லெண்ணியதெய்துமியார்க்குந்
தன்னெதிருற்றதன்றித் தோன்றுமோதற்பணத்தில.

இ-ள். உனது காந்தன் - நினது புருடனாகிய பதுமன், அன்பினால் - (உன்னிடத்தி லிருக்கின்ற) வாஞ்சையினால், நின்னை நீங்காதுவாழ - உன்னைப்பிரியாமற் சுகித்தகதற்கு, மரணகாலத்து - மரணசமயத்தில், நினைத்தனன் - நினைத்தான், அன்னது - அந்நினைவின்படியே, அவ்விடத்தேபெற்றான் - அவ்விடத்தில் உன்னைப்பெற்றான், இன்னல்கூர் - துன்பமிகுந்த, மரணந்தன்னில் - மரணத்தில், இயார்க்கும் - யாவர்க்கும், எண்ணியதெய்தும் - சிந்தித்ததடையும், தனனெதிருற்றலன்றி - தன்முன்னிருந்ததன்றி, தற்பணதில் - கண்ணாடியில், தோன்றுமோ - (வேறு) தோற்றுமோ—எ-று.

எ-து. நினதுபுருடனாகிய பதுமன் உன்னிடத்திலிருக்கின்ற வாஞ்சையினால் உன்னைப்பிரியாமற் சுகித்ததற்கு மரணசமயத்தில் நினைத்தான். அந்நினைவின்படியே அவ்விடத்தி லுன்னைப்பெற்றான், துன்பமிகுந்த மரணதில் யாவருக்கும் சிந்தித்ததடையும் தன் முன்னிருந்ததன்றி கண்ணாடியில் வேறு தோற்றுமோ—எ-ம்.

இதுவுமது.

நாசமுற்பத்திமூர்ச்சை நனாக்கனாச்சுழுத்தியெல்லாம்
ஏசுறவொன்றினுள்ளொன் றில்லையாலிலதுண்டென்ன
மாசறுமயக்கமட்டே மட்டறவளராநின்ற
தாசறுமனுபவங்க ளிருவகையவற்றைக்கேட்பாய்.

இ-ள். நாசம் - மரணமும், உற்பத்தி - சநநமும், மூர்ச்சை மனோமயககமும், நனா - சாக்கிரமும், கனா - சொப்பனமும், சுழுத்தி - சுழுத்தியுமாகிய, எல்லாம் - இவைகளனைத்தும், ஏசுற - குற்றம்பொருந்த, ஒன்றினுள் - ஒன்றினிடத்தில், ஒன்றில்லையால் - ஒன்றில்லாதபடியினால், இலது - இல்லையென்பது, உண்டென்ன - உள்ளதென்பது, மாசறுமயக்கமட்டே - களங்கமுற்ற பிரமையினளவே, மட்டறவளராநின்றது - அளவின்றி விருத்தியாகின்றது, ஆசறுமனுபவங்கள் - குற்றமற்ற அனுபவங்களானவை, இருவகை - இரண்டுவிதமாம், அவற்றைக்கேட்பாய் - அவைகளைக்கேள்—எ-று.

எ-து. மரணமும், சநநமும், மனோமயக்கமும், சாக்கிரமும், சொப்பனமும், சுழுத்தியுமாகிய இவைகளனைத்தும் குற்றம்

பொருந்த ஒன்றனிடத்தில் ஒன்றில்லாதபடியினால் இல்லையென்பது உள்ளதென்பது களங்கமுற்ற பிரமையினளவே அளவின்றியிருத்தியாகின்றது, குற்றமற்ற அநுபவங்களானவை இரண்விதமாம் அவைகளைக்கேள்—எ—ம்.

இ-ம். மயக்கத்திலுண்டான சத்தாவத்தையு நிலையற்றன வென்பதாம்.

இதுவுமது.

முன்னனுபவத்துக்கேற்ற முறைமையாய்ச்சிலவைதோன்றும்
பின்னுறுபுதுமைத்தாகிப் பேதமாய்ச்சிலவைதோன்றும்
நின்னுடனின்னாசார நின்குலநின்னொழுக்கம்
என்னவேறன்றிநின்றா ளெதிர்நிழல்போலலீலை.

இ - ள். முன்னனுபவத்துககேற்ற முன்னனுபவத்துக்குத்தகுந்த, முறைமையாய் - முறையாக, சிலவைதோன்றும் - சிலவுண்டாயிருக்கும், பின்னுறுபுதுமைத்தாகி - பின்புள்ளநூதனமாகி, பேதமாய்ச்சிலவைதோன்றும் - பேதமாகச்சில உண்டாயிருக்கும், (ஆகையால்) நின்னுடல் - உனது வடிவம், நின்னாசாரம் - உனதாசாரம், நின்குலம் - உனதுகுலம், நின்னொழுக்கம் - உனது நடை, என்ன - என்னும்படி, லீலை - (இந்த)லீலையானவள், எதிர்நிழல்போல - முன்தோற்றிய உனதுநிழலைப்போல, வேறன்றிநின்றாள் - பேதமில்லாமலிருந்தாள்—எ-று.

எ — து. முன் அனுபவத்துக் குத்தகுந்த முறையாகச்சில உண்டாயிருக்கும், பின்புள்ள நூதனமாகிய பேதமாகச்சில உண்டாயிருக்கும், ஆகையால் உனதுவடிவம், உனது குலம், உனது நடை என்னும்படி இந்தலீலையானவள் முன்தோற்றிய உனது நிழலைப்போல பேதமில்லாம லிருந்தாள்—எ—ம்.

இ-ம். பாவனைப் பிரகார முன்னனுபவத்திற்கொத்தவண்ணம் புதியலீலை தோற்றினள் என்பதாம். (72)

## புதியலீலை வினாவுதல்.

புரவலனினைவாலுன்னைப் போலிவ டான்றினினாள்
விரவுமிப் போரிற்பட்டு விடூரதன்பதுமனென்னும்
நரபதியாகுமென்ற நாமகளவசனங்கேட்டு
பாவினைபுதியலீலை பணிந்திதுபகர்வதானாள்.

இ - ள். புரவலனினைவால் - இராசாவினினைவினால், உன்னைப்போல் நின்னைப்போலவே, இவடோன்றினிள் - இவளுமுண்டானாள், விரவுமிப்போரிற்பட்டு - கலந்தவிந்த யுத்தத்திலிறந்து, விடூரதன் - விடூரதனு

னவன், பதுமனென்னு நரபதியாகுமென்ற - பதுமனென்கின்ற அரசனுவனென்றுசொல்லிய, நாமகள் வசனங்கேட்டு - சரஸ்வதியினதுவாக்கியத்தைக்கேட்டு, பரவினபுதியலீலை - புகழ்ந்த நூதன லீலையானவள், பணிந்திது பகர்வதானுள் - வணங்கியிதைச் சொல்லத்தொடங்கினுள் எ று.

எ — று. இராசாவினிணைவிஞல் நின்னைப்போலவே இவளுமுண்டானுள், கலந்த இந்த புத்தத்தினிறந்த விரோதனுனவன்பதுமனென்கின்ற அரசனுவனென்று சொல்லிய சரஸ்வதியினது வாக்கியத்தைக்கேட்டு புகழ்ந்த நூதனலீலையானவள் வணங்கி இதைச்சொல்லத்தொடங்கினுள்—எ-ம். (73)

## புதியலீலை விரும்பினவரத்தைத் தேவி அனுக்கிரகித்தல்.

பண்டுநான்பூசைசெய்த பாமகள்போலுநீயே
விண்டவராலென்காந்தன் வீடிறுலுறைவதெங்கே
கண்டுநானங்கேயிந்தக் காயத்தோடெய்திவாழத்
தண்டலிலவரநல்கென்னத் தந்தனமென்றலோடும.

இ-ள். பண்டுநான் பூசைசெய்த - முற்காலத்தில் நான்பூசித்த, பாமகள்போலுநீயே, சரஸ்வதியைபபோலிருக்கின்ற நீயே, விண்டவரால - சத்துருவிஞல், என்காந்தன்வீட்டிறுல்-எனது புருடனிறந்தால், எவங்கே-எவ்விடத்தில், உறைவது-வசிப்பதோ, கண்டு - (அதைப்) பார்த்து, நானங்கே-யானந்தவிடத்தில், இந்தக்காயத்தோடு இச்சரீரத்துடன், எய்திவாழ - போய்வாழும்படி, தண்டலில்வரம் - தடையில்லாதவரத்தை, நல்கென்ன - அருளெனக்கேட்க, தந்தனமென்றலோடும் - ஈந்தனமெனவும -எ-று.

எ - து முற்காலத்தில. நான்பூசித்த சரஸ்வதியைப்போலிருக்கின்ற நீயே சத்துருவிஞல் எனது புருடனிறந்தால எவ்விடத்தில்வசிப்பதோ அதைபபார்த்து யான் அந்தவிடத்தில் இச்சரீரத்துடன் போய்வாழுமபடி தடையில்லாத வரத்தை அருளெனக்கேட்க ஈந்தனமெனவும—எ-ம.

## பழையலீலை வினவுதல்.

புகன்றநாமகளைநோக்கிப் புராதனலீலைசொல்வாள்
நிகழ்ந்தவெனவுடலோடன்றி நிறைவேற்றுடலையேவி
உகந்தலோகந்தாத்து முயாகிரிநகரினூடும்
அகன்றவாறென்கொலென்ன வாரணத்தன்னைசொல்வாள்.

இ - ள். புகன்றநாமகளைநோக்கி - (இப்படி) சொன்ன சரஸ்வதியைப் பார்த்து, புராதனலீலைசொல்வாள் - பழையலீலைசொல்லுவாள், திகழ்ந்த - விளங்கிய, என்னுடலோடன்றி - என (ஆதிபௌதிக) சரீரத்துடன் செல்லாமல், நின்ற - இருந்த, வேற்றுடலைமேவி - வேறான (ஆதிவாகிக) சரீரத்தைப் பொருந்தி, உகந்தலோகாந்தரத்தும் - உயர்ந்தமறுலோகத்திலும், உயர்கிரிநகரினூடும் - மேலானகிரிக்கிராமத்திலும், அகன்றவாறென்கொலென்ன - நான்நீங்கினவிதமென்னவென்று கேட்க, ஆரணத்தன்னைசொல்வாள் - வேதமாதாசொல்லுவாள் — எ-று.

எ - து. இப்படிச்சொன்ன சரஸ்வதியைப்பார்த்து பழைய லீலைசொல்லுவாள். விளங்கிய எனது ஆதிபௌதிக சரீரத்துடன் செல்லாமல் இருந்த வேறான ஆதிவாகிக சரீரத்தைப் பொருந்தி உயர்ந்த மறுலோகத்திலும், மேலான கிரிக்கிராமத்திலும், நான் நீங்கினவிதமென்னவென்று கேட்க, வேதமாதா சொல்லுவாள்—எ-ம்.

இ-ம். எனக்குச் செல்லக்கூடாதென்னும் தூலசரீரம் இவளுக்கெப்படிச் செல்லுமென்பதாம். (75)

## தேவியுத்தரம்.

### வேறு.

ஒருவருக்குநாமொன்றுநல்கல முணர்வின்வண்ணமேயுயிர்களெய்துமாற, கருதிமுந்நீ கதிவிரும்பினைப் காதலித்தசிற் கண்ணளித்தனம், பெருகுகாதலா லிந்தவண்ணமிப் பேதைவேண்டவிப் பேறுநல்கினம், இருதயத்திலே நினைந்ததெய்திடு மெமதுபார்வையாலியார்க்குமென்றனள்.

இ - ள். ஒருவருக்கும் - ஒருவருக்காகிலும், நாமொன்றுநல்கலம் - யாமொன்றுங்கொடுப்பதில்லை, உணர்வின்வண்ணமே - நினைவின்படியே, உயிர்களெய்தும் - சீவர்களடையும், முந்திகருதி - முன்னமேநினைத்து, நீகதிவிரும்பினை - நீஞானத்தையாசித்தாய், காதலித்தசிற்கண்ணளித்தனம் - விரும்பின ஞானதிருஷ்டியைக் கொடுத்தோம், பெருகுகாதலால் - மிகுந்த ஆசையினால், இந்தவண்ணம் - இந்தப்படி, இப்பேதைவேண்ட - இப்பெண்விரும்ப, இப்பேறுநல்கினம் - இவ்வாக்கியங்கொடுத்தோம், இருதயத்தில் - மனதில், நினைந்தது - கருதினது, எமதுபார்வையால் - எம்முடைய கிருபாநோக்கினால், இயார்க்குமெய்திடும் - யாவருக்குங்கிடைக்கும், என்றனள் - என்று சரஸ்வதி சொன்னாள் - எ-று.

எ - து. ஒருவருக்காகிலும் யாமொன்றுங் கொடுப்பதில்லை, நினைவின்படியே சீவர்களடையும் முன்னமே நினைத்து நீ ஞானத்

கையாசித்தாய், விரும்பின ஞானதிருஷ்டியைக் கொடுத்தோம், மிகுந்த ஆசையினால் இந்தப்படி இப்பெண்விரும்ப இவ்வார்த்தைக் கொடுத்தோம், மனதில் கருதினது எம்முடைய கிருபாநோக்கினால் யாவருக்குங் கிடைக்கும் என்று சரஸ்வதி சொன்னாள்—எ-ம்.

இ-ம். ஆத்மாக்கள் பாவனைப்படி ஈஸ்வரன் கூட்டிவிக்கின்ற தென்பதாம். (76)

## ஈஸ்வரானுக்கிரகம்பெற்ற மகான் மரிக்குங் காரணமியாதெனின்.

திறல்வீடுரதன் சினமிகுத்தனன் றேரிலேறினன் சேனையோடு போய், மறலியூர்புகும் வழிநெருக்கமாய் மருவலாரொலா மடியமோதினன், இறலுறுங்கொலென் றெண்ணியன்பறு லீலைவாணிதாளேத் தியன்னையே, விறன்மிகுந்துநின் கருணைமேவியும் வினையின்மாளுமோ வேந்தனென்னவே.

இ - ள். திறல்விரோதன் - பலமுள்ளவிரோத அரசன், சினமிகுந்தனன் - கோபமிகுந்தவனாய், தேரிலேறினன் - இரதத்திலேறி, சேனையோடுபோய் - சேனை (சமுத்திரத்துடன்) யுத்தகளத்திற் சென்று, மறலியூர்புகும்வழி-இமயபுரிக்குச்செல்கின்ற மார்க்கமானது, நெருக்கமாம் - நெருங்கும்படி, மருவலாரொலாமடிய - சத்ருருக்களனைவருங்கெட, மோதினன் - அடித்தான், இறலுறுங்கொலென்றெண்ணி - மரிப்பானென்று சிந்தித்து, அன்பறுலீலை (நாயகனிடத்திற்) பிரியமாறுதலீலைகள், வாணிதாளேத்தி - சரஸ்வதியினது பாதத்தைத்துதித்து, அன்னையே - (எமது) தாயே, விறன்மிகுந்தும் - வீரத்தன்மைமிகுந்திருந்தும், நின்கருணைமேவியும் - உனதுகிருபையிருந்தும், வேந்தன் - (எம)தரசன், வினையின்மாளுமோ -(இப்) போரின்மரிப்பாரோ, என்ன- என்றுகேட்க—எ-று.

எ - து. பலமுள்ள விரோத அரசன் கோபமிகுந்தவனாய் இரதத்திலேறி சேனைசமுத்திரத்துடன் யுத்தகளத்திற்சென்று இமயபுரிக்குச் செல்கின்ற மார்க்கமானது நெருங்கும்படி சத்ருருக்களனைவருங்கெட அடித்தான், மரிப்பானென்று சிந்தித்து நாயகனிடத்தில் பிரியமாறுதலீலைகள் சரஸ்வதியினது பாதத்தைத்துதித்து எமது தாயே வீரத்தன்மை மிகுந்திருந்தும், உனது கிருபையிருந்தும், எமது அரசன் இப்போரின் மரிப்பாரோ என்றுகேட்க—எ-ம். (77)

## தேவிஉத்தரம்.



கதிவிரும்பலாற் கலைவிரோதன் கப்பிலாப்பதங் கலப்பதாயினன், எதிரியானவிச் சிந்துவென்பவ னிகலிவெல்லவென்றெனை யிறைஞ்சலால், விதியில்வென்றவன் வேந்தனாமெனவிளம்புபோதிலே விடியரேன்றலும், அதிரமோதிமே லடர்ந்தவெங்களத் தனிகமொன்று மற்றழிந்துபோனதே.

இ - ள். கலைவிரோதன் - கல்வியையுடைய விரோதனானவன், கதிவிரும்பலால் - பரகதியை இச்சித்தலால், கப்பிலாப்பதம் - இரண்டற்ற பரமபதத்தை கலப்பதாயினன் - கலக்கும்படியாயினன், எதிரியான இச்சிந்துவென்பவன் - எதிர்த்துவந்த இச் சிந்து அரசனென்பவன், இகலிவெல்லவென்று-(தனது) வல்லமையினால் (இவனை) செயிக்கவேண்டுமென்று, எனையிறைஞ்சலால் - என்னைப்பூசித்ததினால், விதியில்வென்று - நிமித்தபடியே செயித்து, அவன் வேந்தனாமென அவன் அரசனானவனென்று, விளம்புபோதில் - சொல்லுஞ் சமயத்தில், விடியரேன்றலும் - உதயகாலமாகவும், அதிரமோதி - அதிரும் படியத்தஞ்செய்து, மேலடர்ந்தவெங்களத்து - மேனெருங்கிய வெம்மையாகிய யுத்தகளத்தில், அனிகமொன்றும் அற்றழிந்துபோனது - (இரண்டிடத்திலுஞ்) சேனையொன்றுமில்லாமலிறந்தது —எ று.

எ - து. கல்வியையுடைய விரோதனானவன் பரகதியை இச்சித்தலால் இரண்டற்ற பரமபதத்தைக் கலக்கும்படியாயினன் எதிர்த்துவந்த இச் சிந்து அரச னென்பவன் தனதுவல்லமையினால் இவனைச் செயிக்க வேண்டுமென்று என்னைப் பூசித்ததினால் நியமித்தபடியே செயித்து அவன் அரசனானவனென்று சொல்லுஞ்சமயத்தில் உதயகாலமாகவும் அதிரும்படி யுத்தஞ்செய்து மேலநெருங்கிய வெம்மையாகிய யுத்தகளத்தில் இரண்டிடத்திலுஞ் சேனையொன்றுமில்லாமல் இறந்தது—எ- ம்.

இ-ம். அவரவர்பாவனையே இதற்குககாரணமென்பதாம். (78)

## முற்பவமடைதற்கு ஏதுவான யுத்தமுரைத்தல்.



சிந்துநாயனாந திறல்விரோதச் செல்வவேந்தனாஞ் சிலைகளேந்தினார், இந்துபானுவுந் திசைகள்வானமு மெய்யும்வாளியாலெங்குமூடினார், முந்துவெங்கணைத் திரளெரிந்துதீ முடுகியூழியின் முடிவையொத்தலும், உந்துபாகனுந் தேருமவிலனுமற்றுயர் விரோதனொருவனாயினன்.

இ - ள். சிந்துநாமனும் - சிந்துவென்னும் பெயரையுடைய அரசனும், திறல்விடூரதன் - வீரமுள்ள விடூரதனாகிய, செல்வவேந்தனும் - சம்பத்துள்ள அரசனும், சிலைகளேந்தினன் - வில்லுகளையெடுத்தார், இந்துபானுவும் - சந்திரனுஞ் சூரியனும், திசைகள் - திக்குகளும், வானமும் - ஆகாயமும், எய்யும், வாளியால் - விடப்பட்ட அம்புகளினால், எங்குமூடினார் - எவ்விடத்துநிறைந்தார்கள், முந்துவெங்கணை - முன்னெதிர்க்கின்ற வெப்பமான பாணங்களின், திரளெரிந்து - கூட்டங்கள் எரிந்து, தீமுடுகி - அக்கினிச் சுவாலையியாவித்து, ஊழியின் முடிவையொத்தலும் - யுகமுடிவைப்போலிருக்கும் அளவில், உந்துபாகனும் - தேரை நடத்தாநின்ற சாரதியும், தேரும் - இரதமும், வில்லும் - தனுசும், அற்று - அறுபட்டு, உயர்விடூரதன் - மேன்மையான விடூரத அரசன், ஒருவனாயினன் - தனியனானான்-எ-று.

எ - து. சிந்துவென்னும் பெயரையுடைய அரசனும் வீரமுள்ள விடூரதனாகிய சம்பத்துள்ள அரசனும் வில்லுகளையெடுத்தார். சந்திரனும், சூரியனும், திக்குகளும், ஆகாயமும், விடப்பட்ட அம்புகளினால் எவ்விடத்து நிறைந்தார்கள். முன்னெதிர்க்கின்ற வெப்பமான பாணங்களின் கூட்டங்களெரிந்து அக்கினிச்சுவாலை வியாபித்து யுக முடிவைப்போ லிருக்குமளவில் தேரை நடத்தாநின்றசாரதியும், இரதமும், தனுசும், அறுபட்டு மேன்மையான விடூரத அரசன் தனியனானான்—எ-ம். (79)

புதியலீலை புருடன்சென்றுமிடத்திற் செல்லுதல்.

பிறைநெடுஞ்சரங் கவசம்வீழ்வுறப்
பிளந்துமெய்யெலாம் பிளந்துசிந்தலும்
பொறையழிந்துவீழ்ந் தவனைநோக்கிவெண்
புண்டரீகையைப் புதியலீலைபார்த்
திறைவனாவிபோ மெல்லையாயின
னிவனைநண்ணநா னேகநல்கென
அறைதலோடுமவ் வன்னைநல்கின
ளவளும்விண்ணினோய் தாகியேகினள்.

இ - ள். பிறைநெடுஞ்சரம்-அர்த்த சந்திரபாணத்தினால், கவசம்வீழ்வுற - (வச்சிர) கவசம் சிதறிவிழும்படி, பிளந்து - பிளந்து, மெய்யெலாம் - தேகத்தி (னவயவங்கள்) யாவும், பிளந்து சிந்தலும் - பிளக்கப்பட்டுச் (சின்னபின்னமாய்ச்) சிதறுமளவில், பொறையழிந்து வலிமைநீங்கி, வீழ்ந்தவனை - (பூமியிற் சாய்ந்த விடூரதனை, நோக்கி-பார்த்து - வெண்புண்டரீகையை, வெண்டாமரையாளை - புதியலீலைபார்த்து, புதியலீலைநோக்கி, இறைவனாவிபோ மெல்லையாயினன் - என்னுயகனுயிர் பிரியுஞ்சமயத்தை யடைந்தான், இவனை நண்ண-

இவரைபொருந்த, நானேகநல்கெனு - யான்செல்ல அருளென்று, அறைத லோடும் - சொன்னமாத்திரத்தில், அவ்வன்னை நல்கினுள் - அத்தாயாகிய (சரஸ்வதி) அனுக்கிரகத்தாள், அவளும் - அந்தலீலையும், விண்ணில் - ஆகாயத்தில், நொய்தாகி - லேசாகி, ஏகினுள் - போனுள்—எ-று.

எ - து. அர்த்த சந்திரபாணத்தினுல் வச்சிரகவசம் சிதறிவிழும் படிபிளந்து தேகத்தின அவயவங்களியாவும் பிளக்கப்பட்டுச் சின்ன பின்னமாய்ச் சிதறுமளவில் வலிமை நீங்கிப்தபூமியிற்சாய்ந்த விடூரதனைப்பார்த்து வெண்டாமரையாளை நூதனலீலைபார்த்து என்னுயகனுயிர்பிரியுஞ்சமயத்தை யடைந்தான், இவரைப்பொருந்த யான்செல்ல அருளென்று சொன்னமாத்திரத்தில் அத்தாயாகிய சரஸ்வதி யனுக்கிரகித்தாள், அந்த லீலையும் ஆகாயத்தில் லேசாகிப்போனுள்—எ-ம்.

ப-ம். ஈஸ்வரானுக்கிரகத்தினுல் துலசரீரம் அணுத்துவமான தென்பார், நொய்தாகியென்றூர். (80)

இதுவுமது.

கரு முகிற்றலங் கடந்துவாயுவின் கதிகடந்துவெங் கதிரினெல்லை விட், டருகுதாரகர்பதமகன்றுமே லயனையாதியா மமரர்நாடொரீஇ, மருவுமிந்தவண் டம்பிளந்துபோய் வாரியாதியாய் வளைந்தயாவையும், உருவியெல்லையு முடிவுமற்றதா முண்மைஞானவின் ணெல்லையெய்தினுள்.

இ - ள். கருமுகிற்றலங்கடந்து - மேகமண்டலத்தைக்கடந்து, வாயுவின் கதிகடந்து - வாயுமண்டலத்தைக்கடந்து, வெங்கதிரினெல்லைவிட்டு - வெம்மையான சூரியமண்டலத்தைக்கடந்து, அருகுதாரகர் பதமகன்று - சமீபமான நட்சத்திரமண்டலத்தைக் கடந்து, மேலயனையாதியாம் - மேற்சத்திய லோகமுதலிய, அமரர் நாடொரீஇ - தேவலோகங்களைக் கடந்து, மருவும் - பொருந்தாநின்ற, இந்த வண்டம் பிளந்துபோய் - இவ்வண்டத்தைக் கிழித்துக்கொண்டுபோய், வாரியாதியாய் வளைந்தயாவையும் - சலமுதலான ஏழாபரணத்தையும், உருவி - ஊடுருவி, எல்லையும் - அளவும், முடிவும் - அநந்தமும், அற்றதாம் - இல்லாததான, உண்மைஞானவிண் - தத்துவ சிதாகாயத்தை, ஒல்லையெய்தினுள் - சீக்கிரத்தி லடைந்தாள—எ-று.

எ - து. மேகமண்டலத்தைக் கடந்து, வாயுமண்டலத்தைக் கடந்து, வெம்மையான சூரியமண்டலத்தைக்கடந்து, சமீபமான நட்சத்திரமண்டலத்தைக் கடந்து, மேற் சத்திய லோகமுதலிய தேவலோகங்களைக்கடந்து பொருந்தாநின்ற இவ்வண்டத்தைக் கிழித்துக்கொண்டுபோய் சலமுதலான ஏழாபரணத்தையும் ஊடுருவி, அளவும்

அந்தமும் இல்லாததான தத்துவசிதாகாயத்தைச் சீக்கிரத்தில் அடைந்தாள்—எ-ம்.

ஆபரணமேழாவன-புனல், அக்கினி, வாய்வு, ஆகாயம், அகங்காரதத்துவம், மதகத்துவம், பிரகிருதியெனக்கொள்க. (81)

## இதுவுமது.

கற்பகோடிவெங் கருடனோடினுங் கடக்கொணுவத்திக் காடுகாய்த்தபோல்,உற்பவங்களாமண்டகோடியொன் றொன்றைநோக்குறா துளவவற்றினுள், அறபமின்றியாவரணபேதமேயயல்வளைப்புறு மண்டமொன்றனுள் தற்பதங்கடந் தெய்தியம்புயச்சவங்கிடந்தமண்டபமடைந்தனள்.

இ - ள். கற்பகோடி - அளவில்லாதகாலம், வெங்கருடனோடினும் - வேகமாகக்கலுழன் பறந்தாலும், கடக்கொணு - கடக்கக்கூடாததாயும், அத்திக்காடுகாய்த்தபோல - அத்திவனங் காய்த்திருக்கின்றனபோல, உற்பவங்களாமண்டகோடி - உதித்தனவாகிய அளவற்ற பிரமாண்டங்கள், ஒன்றொன்றை நோக்குறாதுள - ஒன்றையொன்று பார்க்கக்கூடாததாயிருக்கின்ற, அவற்றினுள் - அவ்வண்டங்களுக்குள், அறபமின்றி - பெரிதாக, ஆவரணபேதம் - ஆவரணபேதமானது, அயலவளைப்புறும் - அருகில் வளைந்துகொண்டிருக்கின்ற அண்டமொன்றினுள் - ஓரண்டத்தினுள், தற்பதங்கடந்தெய்தி - ஞானகாயத்தைக் கடந்துபோய், அமபுயன்-பதும ஆசனது, சவங்கிடந்த - பிரேதமிருந்த, மண்டபமடைந்தனள் அந்தப் புரத்தைச்சேர்ந்தாள்—எ-று.

எ - து அளவில்லாத காலம் வேகமாகக் கலுழன் பறந்தாலும், கடக்கக்கூடாததாயும், அத்திவனங்காய்த்திருக்கின்றனபோல உதித்தனவாகிய அளவற்ற பிரமாண்டங்கள் ஒன்றையொன்று பார்க்கக்கூடாததாயிருக்கின்ற அவ்வண்டங்களுக்குள் பெரிதாக ஆவரணபேதமானது அருகில் வளைந்துகொண்டிருக்கின்ற ஓரண்டத்தினுள் ஞானகாயத்தைக் கடந்துபோய் பதுமஆசனது பிரேதமிருந்த அந்தப்புரத்தைச் சேர்ந்தாள்—எ-ம்.

இ-ம். தேவியனுக்கிரகத்தினற் புதிய லீலை பதுமனிடஞ்சேர்ந்ததாம்.()

## விடூரதன் முற்பவமடையச் செல்லுதல்.



தமரவண்டுசூழ் மலரின்மூடுமிச்சவ சரீரமாந் தாணிபாலனே, யெமதுநாயகன் கருணைவாணியா லென்கொனுன்முன்னமிங் கெய்தினேமெனு, அமரவெண்ணிவெண் கவரிவீசியக் கனபனோர்புறத்

**தவளிருந்தபின், விமலஞானியாம்விறல்விரோதன் மேவிசீவன் விண்மீதுபோயதே.**

இ - ள். தாமரவண்டுசூழ் - பெருங்கானஞ்செப்பும் அளிகள் நிறைந்த, மலரின்மூடும் - புட்பக்களினுன் மறைக்கப்பட்ட, இச்சவசரீரமாம் - இப்பிரேததேகமாகிய, தாணிபாலனே - பூபாலனே, எமது நாயகன் - எம்முடைய கணவன், கருணைவாணியால் - கிருபையுள்ள சரஸ்வதியினுல், என்சொல்-எப்படியோ, முன்னமிங் கெய்திரேமெனு - முன்னமே இவ்விடம் வந்தோமென்று, அமரவெண்ணி - நன்ருய்ச்சிந்தித்து, வெண்கவரிவீசி - வெண்சாமரம் வீசிக்கொண்டு, அங்கு - அவ்விடத்தில், அன்பனோர்புறத்து - (தனது) நாயகனுடையஒருபக்கத்தில், அவளிருந்தபின் - அப்புதியலீலையிருந்தபின்பு, விமலஞானியாம் - நின்மலஞானியான, விறல்விரோதன் - மகாஞனவிரோதஅரசன், மேவிசீவன் - பொருந்திய சீவனனது, விண்மீதுபோயது - ஆகாயத்திற்சென்றது—எ·று

எ - து. பெருங்கானஞ்செப்பும் அளிகள் நிறைந்த புட்பங்களினுன் மறைக்கப்பட்ட இப்பிரேததேகமாகிய பூபாலனே எம்முடைய கணவன் கிருபையுள்ள சரஸ்வதியினுல் எப்படியோ முன்னமே யிவ்விடம்வந்தோமென்றுநன்ருய்ச் சிந்தித்து வெண்சாமரம்வீசிக்கொண்டு அவ்விடத்தில் தனது நாயகனுடைய ஒருபக்கத்தில் அப்புதிய லீலை யிருந்தபின்பு நின்மலஞானியானமகாஞனவிரோத அரசன் பொருந்திய சீவனனது ஆசாயத்திற்சென்றது—எ-ம (83)

## முற்பவத்திற் புதவிக்கு நிமித்தம் அபேதஞானத்தால் பேதஞானத்தைத் தடுத்தல்

ஞானநோக்கினு ரவனைநோக்கிவிண் டணைந்தபின்வரு நங்கைமார்தமைத், தானறிந்திடா தகன்றசீவன்போய்ச் சவமிருந்தமண்டபமடைந்திடப், போனமாதரும் புதியலீலையைப் புரிந்துநோக்கினுர் பொன்செய்மண்டபத், தானசீவதங் கைகந்து நீளவு மடியாசனத்தவண்டிருந்தினுள்.

இ — ள். ஞானநோக்கினர் - ஞானதிருஷ்டியை யுடைய லீலை சரஸ்வதியென்னுமிருவர், அவனைநோக்கி - அவ்விரோத சீவனைப்பார்த்து, விண்ணடைந்து - ஆகாயத்திற்சென்று, பின்வரும் - பின்வருகின்ற, நங்கைமார்தமை சிறந்தமாதர்களை, தானறிந்திடாது - தான் அறியாமல், அகன்ற சீவன்போம் - நீங்கினசீவனனது (நகரத்திற்) சென்று, சவமிருந்தமண்டபம் - (பதுமப்) பிரேதமிருந்த அந்தப்புரத்தை, அடைந்திட - அடைய, போனமாதரும் - (உடன்) சென்ற இவ்விரண்டுஸ்திரீகளும், புதியலீலையை - புதிதானலீலையை, புரிந்துநோக்கினர்-விரும்பிப்பார்த்தார்கள், பொன்செய்மண்டபத்து-சுவர்ண

த்தினுற்செய்த மண்டபத்தில், ஆனசிவனே - பொருந்திய சிவனே, தகைந்து-தடுத்து, மீளவும் - திரும்பவும், அம்புயாசனத்தவள் - பதுமாசனத்தையுடைய சாஸ்வதியானவள், நிறுத்தினுள் - மேற்செல்லாமல் தடுத்தாள்—எ-று.

எ - து ஞானதிருஷ்டியை யுடைய லீலை சாஸ்வதியென்னுமிருவர் அவ்விடூர சிவனைப்பார்த்து ஆகாயத்திற்சென்று பின்வருகின்ற சிறந்த மாதர்களைத் தானறியாமல் நீங்கினசிவனுனது நகாத்திற் சென்று பதுமப்பிரேத மிருந்த அந்தப்புரத்தையடைய உடன்சென்ற இவ்விரண்டுஸ்திரீகளும் புதிதான லீலையை விரும்பிப்பார்த்தார்கள், சுவர்ணத்தினுற் செய்த மண்டபத்தில் பொருந்திய சிவனைத் தடுத்துத்திரும்பவும் பதுமாசனத்தையுடைய சாஸ்வதியானவள் மேற்செல்லாமல் தடுத்தாள்.

இ-உ-க-ம். விடூரதபூரணமுன்னுள்ள பாவனுஸ்தானமடைந்ததாம்.(84)

## ஆதிபௌதிக சரீர மறைந்த தியாதெனின்.

பண்டைலீலைதன் மேனிகண்டிலாள் பாமடந்தையைப் பணிந்து
கேட்டலு, மண்டுசிந்தைபோய் நிறைசமாதியான் மறிந்து வீழ்ந்த
மெய்ம் மாண்டதாமென, கொண்டமைச்சாவெங்கனல் கொளுத்தி
ஞர் குரம்பையோடுநீ குவலயத்தினில், அண்டர்வானினின்றுட
லொடேகினு ளந்தலீலையென்றதிசயிப்பரால்.

இ - ள். பண்டைலீலை - பழையலீலையானவள், தன்மேனிகண்டிலாள்-தன (தாதிபௌதிக) சரீரத்தைக்காணுமல், பாமடந்தையை - சாஸ்வதியை, பணிந்துகேட்டலும் - வணங்கிகேட்கவும், மண்டுசிந்தைபோய் - (கற்பனை) மிகுந்த மனோகாசமாய், நிறை சமாதியால் - பூரணநிஷ்டையினுல், மறிந்து வீழ்ந்தமெய்-மறிந்து (கீழே) விழுந்த சரீரத்தை, மாண்டதாமெனக்கொண்டு-இறந்ததாமென் (றெண்ணிக்) கொண்டு, அமைச்சர் - மந்திரிகள், வெங்கனல் கொளுத்தினுர் - கொடிய அக்கினியினுல் தகனம்பண்ணினுர்கள், குரம்பையோடு - (இவ்வாதிவாகிக) சரீரத்துடன், நீகுவலயத்தினில்-நீயிப்பூமியின்கண்ணிருந்தால், அண்டர்வானினின்று - தேவலோகத்திலிருந்து, அந்தலீலை - முன் (மரித்த) லீலையானவள், உடலொ) டேகினுளென்று - சரீரத்துடன்வந்தாளென்று, அதிசயிப்பர் - (யாவரும்) வியப்பார்கள்—எ-று.

எ - து. பழையலீலையானவள் தனதாதிபௌதிக சரீரத்தைக் காணுமல் சாஸ்வதியை வணங்கிக்கேட்கவும் கற்பனைமிகுந்த மனோநாசமாய் பூரணநிஷ்டையினுல் மறிந்து கீழேவிழுந்த சரீரத்தை இறந்ததாமென்று எண்ணிக்கொண்டு மந்திரிகள்கொடிய அக்கினியினுல்

தகனம்பண்ணினார்கள். இவ்வாதிவாகிக சரீரத்துடன் நீ யிப்பூமி யின்கண்ணிருந்தால தேவலோகத்திலிருந்து முன்மரித்தலீலையான வள்சரீரததுடன்வநதாளெனறுயாவருமவியப்பார்கள்—எ-ம். (85)

இதுவுமது.

சூக்கமெய்யினேடிருநதுவாதனைக் தோற்றமற்றலாற் றூலகாய நீ, போககலாயமென் றிவளுக்கோதியப் புதியலீலையிப் போதுகாண் கெனு, வாக்கின்செலவியுண் ணினைநதவெலலையின் மறைந்து நின்ற வர் நிறைநதுதோன்றலும, பாககியங்கள்போற் கண்டலீலையப் பா வைமார்பதம பணிநதிறைஞசினாள.

இ-ள். சூக்கமெய்யினேடிருநது-ஆதிவாகிக சரீரத்துடனிருந்து, வாத னைத் தோறறமற்றலால - வாசனையை நீககினபடியால, தூலகாயம் - ஆதி பௌதிக சரீரததை, நீ போககலாயமெனறு-நீ தள்ளததககதென்று, இவளுக் கோதி - இநத லீலைககுச்சொலலி, அப்புதியலீலை - அநநூதனலீலையானவள், இபபோது காணகெனு - இபபோது (நமமை) காணககடவளென்று, வாக கின் செலவி - சாஸவதியானவள், உண்ணினைநதவெலலையில - மனதிற் சங் கற்பிததமாததிரததில மறைநதுநின்றவர் - தெரியாதிருந்தவர்கள், நிறைந்து தோன்றலும் பிரத்தியட்சமானவளவில, பாககியஙகள்போல் - (தான்பெற்ற) செலவஙகளைபபோல, கணடலீலை - தெரிசிதத லீலையானவள், அப்பாவை மாரபதம - அததேவிகளின பாதஙகளை, பணிந்திறைஞ்சினள் - வணங்கித் தோததிரஞ்செயதாள்—எ-று

எ-து ஆதிவாகிக சரீரத்துடனிருநது வாசனையைநீக்கினபடி யால் ஆதிபௌதிக சரீரததை நீ தள்ளததககதென்று இந்த லீலைக் குசசொல்லி அநநூதன லீலையானவள் இபபோது நம்மைக்காணக் கடவளென்று சாஸ்வதியானவள் மனதில சங்கற்பித்தமாத்திரத்தில் தெரியாதிருநதவாகள் பிரததியட்சமானவளவில் தான்பெற்ற செல் வங்களைப்போல தெரிசிதத லீலையானவள் அததேவிகளின்பாதங் களை வணங்கித்தோததிரஞ்செயதாள—எ-ம.

(இ-உ-க-ந.) பிரமாப்பியாச முதிர்ச்சியால் ஆதிவாகிக சரீரம் பெற்றவர் களுககு ஆதிபௌதிக சரீரமறையுமென்பதாம. (86)

## முற்பயம அடைந்து முத்தனாதல்

போதவாணியும பழையலீலையும் புதியலீலையும் புணர்ந்திருந்துழி சாதிமென்மலர வாசம்விட்டெனச சலசமாதுயிரததைவிடுத்தலும்

வாதரூபமாய் நாசியூடுபோய் மறந்தமெய்யெலா நிறைந்துலாவிடச்
சீதமாகிநெய்த்துளிபரந்துகண் டிறந்தெழுந்தனன்செற்றமன்னவன்.

இ - ள். போதவாணியும் - ஞானசொரூபியாகிய சரஸ்வதியும், பழைய லீலையும் - புராதனலீலையும், புதியலீலையும்-நூதனலீலையும், புணர்ந்திருந்துழி - கூடியிருந்தவிடத்தில், சாதிமென்மலர் - (மிருதுவாகிய) சாதிபுட்பமானது, வாசம்விட்டெனவாசனை யைவிட்டதுபோல, சலசமாது - சரஸ்வதியானவள், உயிர்த்தடைவிடுத்தலும்-சீவன்தடையை விட்டுவிடவும், வாதரூபமாய் - பிராணரூபமாய், நாசியூடுபோய்-மூக்கினுட்சென்று, வறந்தமெய்யெலாம்-உலர்ந்த சரீரம்யாவும், நிறைந்துலாவிட - பரந்துவியாபிக்க, சீதமாகி - குளிர்ச்சியாகி, நெய்த்துளிபரந்து - இரத்தமுண்டாய், கண்டிறந்து - கண்விழித்து செற்ற மன்னவன் - மரித்த அரசன், எழுந்தனன் - எழுந்தான்—எ - று.

எ - து. ஞானசொரூபியாகிய சரஸ்வதியும் புராதனலீலையும் நூதனலீலையும் கூடியிருந்தவிடத்தில் மிருதுவாகிய சாதிபுட்பமானது வாசனையைவிட்டதுபோல சரஸ்வதியானவள் சீவன் தடையை விட்டுவிடவும் பிராணரூபமாய் மூக்கினுட்சென்று உலர்ந்த சரீரம் யாவும்பரந்து வியாபிக்கக் குளிர்ச்சியாகி இரத்தமுண்டாய் கண் விழித்து மரித்த அரசன் எழுந்தான்—எ - ம்.

இ-ம். சத்தாமாத்திரமாய் விளங்குஞ் சைதன்யத்தின் அபேத ஞானத்தி லுண்டான பேதஞானமானது நூதனம புராதனமென்னு மிரண்டிற் புராதனவடிவமானதாம். (87)

## வினாவிடை.

---

இங்குநின்றுளா ரெவர்கொலென்றுவா னிடிமுழக்கமொத் திவ னுரைத்தலும், அங்குநின்றுளாள் வணங்கியிப்பவத் தடுத்ததேவிநா னருகுதாழ்ந்தவிம், மங்கையாரென வென்னையொப்பநீ மனத்தி லெண்ணலால் மகிழவந்துளாள், துங்கவாணியிங் கிருந்துளாளெனத் தொல்லைலீலையே தோன்றவோதினள்.

இ - ள். இஙகுநின்றுளார் - இவ்விடத்திலிருக்கின்றவர்கள், எவர்கொலென்று - யாரென்று, வானிடிமுழககமொத்து - பேரிடியின் சப்தத்துக் கொப்பாக, இவனுரைத்தலும் - அப்பதும அரசன்கேட்கவும், அங்குநின்றுளாள் - அங்கிருந்த லீலையானவள், வணங்கி - (அரசனை) நமஸ்கரித்து, நான் - யான், இப்பவத்தடுத்ததேவி - இத்தேகத்துக்குத் தகுந்தமனைவி, அருகு தாழ்ந்த - (உன்) பககத்தில் வணங்கின, இம்மங்கை யாரென - இப்

பெண்ணாரென்றுகேட்க, என்னையொப்ப - என்வடிவத்தைப்போல, நீமனத்திலெண்ணலால்-நீர் மனதினினைத்ததினால், மகிழவந்துளாள் - நீ சுகிக்கவந்தவள், இங்கிருந்துளாள் - இவ்விடத்திருப்பவள், துங்கம் - பரிசுத்தமாகிய, வாணியென - சாஸ்வதியென்று, தொல்லைலீலை -பழையலீலையானவள், தோன்றவோதினள் - தெரியச்சொன்னாள்-எ-று.

எ - து. இவ்விடத்தி லிருக்கின்றவர்கள் யாரென்று பேரிடிசப்தத்துக் கொப்பாக இப்பதும அரசன் கேட்கவும் அங்கிருந்த லீலையானவள் அரசனை நமஸ்கரித்து யான் இத்தேகத்துக்குத் தகுந்த மனைவி, உன்பக்கத்தில் வணங்கின இப்பெண்ணாரென்றுகேட்களன் வடித்தைபோல நீர் மனதினினைத்ததினால் நீ சுகிக்கவந்தவள், இவ்விடத்திருப்பவள் பரிசுத்தமாகிய சாஸ்வதியென்று பழைய லீலையானவள் தெரியச்சொன்னாள்—எ—ம். (88)

## தேவி யனுக்கிரகித்து எழுந்தருளுதல்.

பகருமெல்லையிற் பதமிறைஞ்சுமிப் பதுமவேந்தனைப் பாமடந்தை தன்,நிகழுமங்கையாற் சென்னிதீண்டிநீ தேவிமாரொடுஞ் சிறந்துவாழ்வுறப்புகழுஞ்செல்வமும் பெருகவையகம் பொலிக தீதெலாம் போகவெங்கணு, நிகழுமேன்மையோர் நிறைகநீடெனா ,நிமலவாணிதன் னிலைமேவினாள் .

இ - ள். பகருமெல்லையில் - (இப்படியென்று லீலை) சொன்னமாத்திரத்தில், பதமிறைஞ்சும் - பாதத்தில்வணங்கிய, இப்பதுமவேந்தனை - இப்பதும அரசனை, பாமடந்தை - சாஸ்வதியானவள், தன்நிகழுமங்கையால் - தனது பிரகாசிக்கின்ற அழகிய அஸ்தத்தினால், சென்னிதீண்டி - சிரசைத்தொட்டு, நீ தேவிமாரொடும் - நீ பாரியர்களோடும், சிறந்துவாழ்வுற - சிறந்துவாழவும், புகழும் - (நல்ல) கீர்த்தியும், செல்வமும் - (மேலான) சம்பத்தும், பெருக - வளரவும், வையகம்பொலிக - சகத்தி (லுள்ள சனங்கள்) விளங்கவும், தீதெலாம்போக - தீமைகளனைத்து நீங்கவும், எங்கணும் - எவ்விடத்தும், நிகழுமேன்மையோர் - பிரகாசிக்கின்ற மகான்கள், நிறைய - நிறைந்திருக்கவும், நீடெனா - நீ சுகித்திருப்பாயென் றருள்செய்து, நிமலவாணி - நின்மலமான சாஸ்வதி, தன்னிலையமேவினாள் தனதிடத்திற்கு எழுந்தருளினாள்-எ-று.

எ — து. இப்படி யென்று லீலை சொன்னமாத்திரத்தில் பாதத்தில் வணங்கிய இப்பதும அரசனை சாஸ்வதியானவள் தனது பிரகாசிக்கின்ற அழகிய அஸ்தத்தினால் சிரசைத்தொட்டு நீபாரியர்களோடும் சிறந்துவாழவும் நல்லகீர்த்தியும் மேலான சம்பத்தும் வளரவும் சகத்திலுள்ள சனங்கள் விளங்கவும், தீமைகளனைத்து நீங்கவும் எவ்

விடத்தும் பிரகாசிக்கின்ற மகான்கள் நிறைந்திருக்கவும் நீசுகித்திருப் பாயென் றருள்செய்து நின்மலமான சரஸ்வதி தனதிடத்திற்கு எழுந் தருளினாள்—எ-ம். (89)

## விதேகமுத்தனாதல்.

வாழிவாணிநா மங்கைவாழிசொன் மாதுவாழ்கியென் றினிதுவாழ்த் தியே, ஆழிமன்னனுந் தேவிமார்களு மைபுதமெட்டியாண் டாசுசெ ய்தபின், ஏழிரும்பவந் துடைக்துவாணி முன் னிபம்புசீவன்முத் தி யிலிருந்தபின், ஊழிபெயரினுஞ் சிறிதுபெயர்விலா வுடலிறந்தவீ டொன்றிமேவினர்.

இ - ள். வாணிவாழி - சரஸ்வதிவாழ்க, நாமடந்தைவாழி - நாமகள்வாழ்க, சொன்மாது வாழ்கியென்று கலைமகள் வாழக்கடவதென்று, இனிது வாழ்த்தி - இனிமையாகத்தோத்திரஞ்செய்து, ஆழிமன்னனும்-சக்கரவர்த்தியான பதும அரசனும், தேவிமார்களும் - பாரியர்களும், ஐயுதமெட்டியாண்டு-எண் பதினாயிரம்வருஷம், அரசுசெய்தபின் - பூபாலனஞ்செய்தபின்பு, ஏழிரும்பவந் துடைத்து - எழுவகையாகிய பெரியசநநங்களை (இப்போதே) கெடுத்து, வாணி-சரஸ்வதியானவள், முன்னிபம்பு - முன்னனுக்கிரகஞ்செய்த, சீவன் முத்தியிலிருந்து சீவன் முக்திபதத்துடன் (பூமியி) லிருந்து, பின்னூழி பெயரினும் பின்பு மகாகற்ப மிறந்தாலும், சிறிது பெயர்விலா அற்பமாகி லுங்கெடாத, உடலிறந்த -விதேகமுத்தியான வீடொன்றிமேவினர்-மோட்ச த்தை யடைந்தார்கள்-எ-று.

எ — து. சரஸ்வதிவாழ்க, நாமகள்வாழ்க, கலைமகள்வாழக்கடவ தென்று இனிமையாகத் தோத்திரஞ்செய்து சக்கரவர்த்தியானபதும அரசனும, பாரியர்களும், எண்பதினாயிரம்வருஷம் பூபாலனஞ் செய் தபின்பு எழுவகையாகிய பெரியசநநங்களை யிப்போதேகெடுத்து சர ஸ்வதியானவள் முன்னனுக்கிரகஞ்செய்த சீவன் முத்தி பதத்துடன் பூமியிருந்து பின்பு மகாகற்பமிறந்தாலும அற்பமாகிலுங் கெடாத விதேகமுத்தியான மோட்சத்தை யடைந்தார்—எ-ம்.

இ-ம். சுத்த வாசனையோடுஞ் சீவன் முத்தர்களாயிருந்து பின் வாசனா ட்சயமான விதேகமுத்தியைப் பெற்றதாம். (90)

லீலை கதை முற்றிற்று.

ஆக கதை 5 க்கு கவிதை 323.

# கற்கடிகதை.



அவதாரிக்கை.

முன்பு சைதன்ய வல்லாசமாய்த் தோற்றின பிரபஞ்சஞ் சைதன்யதிருஷ்டியால் நசிக்கும்பொருட்டு அச்சகத்தை மாயாவிசித்திர மென்பதைப் பூரணமாயறிவித்து அதற்கதிஷ்டான மானசைதன்யதிருஷ்டி பிரசன்னமாம்பொருட்டு அதன்விலாசத்தைக் கற்கடிகதையி னிரூபிக்கிறார்.

## பிரமமே நித்தியமெனல்.

காட்சியென்னுங் குற்றமறக் கதித்தலீலை கதையாலே
ஆட்சியான சகமென்னு மதிபாரத்தை யறவிடுவாய்
சூட்சியான வுலகமெனுந் தோற்றமுடைத்தாய்ப் பேதமற
மாட்சிஞான சுகவடிவாய் வயங்குபிரம மேயுளதே.

இ - ள். காட்சியென்னும் - திரிசியமென்கின்ற, குற்றமற - களங்கநீங்க, கதித்த - சொல்லிய, லீலைகதையால் - லீலையின்கதையினால், சூட்சியான - அற்பமாகிய, உலகமெனும் - சகமென்கின்ற, தோற்றமுடைத்தாய் - பிரிதிபையையுடையதாய், பேதமற - அபேதமாக, மாட்சி - மகத்தானசத்தும், ஞானம் - சித்தும், சுகம் - ஆநந்தமுமே, வடிவாய் - சொரூபமாய், வழங்கும் - பிரகாசிக்கின்ற, பிரமமேயுளது - பிரமசொரூபமேயுள்ளதென் (றறிந்து) ஆட்சியான - கெடுதற்குரித்தாகிய, சகமென்னும் - உலகமென்கின்ற, அதிபாரத்தை - பெரும்பாரத்தை, அறவிடுவாய் - ஒருங்கே நீக்குவாய் எ - று.

எ - து. திரிசிய மென்கின்ற களங்கநீங்கச் சொல்லிய லீலையின் கதையினால் அற்பமாகிய சகமென்கின்ற பிரிதிபையையுடையதாய் அபேதமாக மகத்தான சத்தும் சித்தும் ஆனந்தமுமே சொரூபமாய் பிரகாசிக்கின்ற பிரமசொரூபமேயுள்ளதென் றறிந்துகெடுதற் குரித்தாகிய உலகமென்கின்ற பெரும்பாரத்தை ஒருங்கேநீக்குவாய் - எ - ம்.

இ-ம். சகத்து பிரமாணிகமல்ல அதுவாகவிளங்கும் ஞானாநந்தமே பிரமாணிகமென்பதாம். (1)

## பிரமமொன்றே நித்தியமேனிற் சீவன்யாதெனின்.



அதனுக்கிணையாய்ப் புகலரிதா யகன்றுநிறைந்தாழ்ந் தமலமதாய்ச்
சதமதறிந்தோர் களுமியல்பு சாற்றற்கரிதாய்ச் சாந்தமதாய்த்

திதமுற்றசையாக் கடலென்னத் தீபமென்னத் திகழ்கின்ற
முதன்மைபிரமத் தொளிதானே முடிவில்பரமா கியசீவன்.

இ - ள். அதனுக்கிணையாய் - அப்பிரமத்துக்கொப்பாகியும், புகலரிதாய்- வசனிப்பதற்கரிதாகியும், அகன்று - வியாபித்து, நிறைந்து - பரிபூரணமாய், ஆழ்ந்து - கெம்பீரமாயிருக்கின்ற, அமலமதாய் - நின்மலமாகியும், சதமறிந் தோர்களும் - சத்தையுணர்ந்தவர்களும், இயல்புசாற்றற்கரிதாய்ச் - (அதின்) குணத்தைச் சொல்லக்கூடாததாகியும், சாந்தமதாய் - உபசாந்தமாகியும், தித முற்று - திரம்பொருந்தி, அசையாக்கடலென்ன - அலைவற்ற சமுத்திரத்தைப் போலவும், தீபமென்ன - (காற்றில்லாத) தீபத்தைப்போலவும், திகழ்கின்ற - பிரகாசிக்கின்ற, முதன்மை - முதன்மையான, பிரமத்தொளிதானே - பிரமப் பிரகாசமே, முடிவில் - முடிவில்லாத, பரமாகிய சீவன் - மேலானசீவனும்.

எ - று. அப்பிரமத்துக்கொப்பாகியும், வசனிப்பதற்கரிதாகியும், வியாபித்துப் பரிபூரணமாய் கெம்பீரமா யிருக்கின்ற நின்மலமாகி யும், சத்தையும், யுணர்ந்தவர்களும், அதின்குணத்தைச் சொல்லக் கூடாததாகியும், உபசாந்தமாகியும், திரம்பொருந்தி அலைவற்ற சமுத் திரத்தைப் போலவும், காற்றில்லாத தீபத்தைப்போலவும், பிரகாசிக் கின்ற முதன்மையான பிரமப்பிரகாசமே முடிவில்லாதமேலான சீவ னும்—எ-ம்.

இ-ம் பிரமப்பிரகாசமான அபேதஞானமே சீவனென்பதாம். (2)

பிரமப்பிரகாசமேசீவனுயின் மனமென்பதுயாதெனின்.

---

தனையுண்டாக்கு நீள்விறகாற் சற்றுநெருப்பு தடிப்பதுபோல்
இனையசீவன் கனவறிவா லியானென்றுணர்ந்து சங்கற்ப
நினைவினாலே யகங்கரிக்கு நிறைந்தசீவன் காரணமாய்
வனையுஞ்சித்த மனம்பகுதி மாயையெனும்பேர் வகுத்துரைப்ப.

இ - ள். தனையுண்டாக்கும்-அக்கினியையுண்டாக்குகின்ற, நீள்விறகால்- மிகுந்தஇந்தனத்தினால், சற்றுநெருப்பு, அற்பமானஅக்கினி, தடிப்பதுபோல்- மிகுவதுபோல, இனையசீவன் - இப்படிப்பட்டசீவன், கனவறிவால் - (வெகு முகத்தில்) விரிந்தவுணர்வினால், இயானென்றுணர்ந்து - நானென்று (பேத மாக) அறிந்து, சங்கற்பநினைவினால் - சங்கற்பவுன்முகத்தினால், அகங்கரிக்கும்- அகங்காரத்தையடையும், நிறைந்தசீவன்-பூரணமான சீவனுக்கு, காரணமாய்- இவ்வகப்பாவங்காரணமாக, வனையுஞ்சித்தம் - சிந்தனைசெய்கின்ற சித்தமும், மனம் - மனமும், பகுதி - பிரகிருதியும், மாயை - மாயையும், எனும்பேர் - என்கின்றநாமங்களை, வகுத்துரைப்ப - (சத்துக்கள்) பகுத்துச்சொல்லுவார் கள்-எ-று.

எ - து. அக்கினியை உண்டாக்குகின்ற மிகுந்த இந்தனத்தி னால் அற்பமான அக்கினி மிகுவதுபோல இப்படிப்பட்ட சீவன் வெகுமுகத்தில் விரிந்தவுணர்விலான் நானென்று பேதமாக அறிந்து சங்கற்பவுன்முகத்தினால் அகங்காரத்தையடையும் பூரணமான சீவ னுக்கு இவ்வகம்பாவங் காரணமாகச் சிந்தனை செய்கின்ற சித்தமும், மனமும், பிரகிருதியும், மாயையையும் என்கின்ற சத்தங்கள் பகுத் துச் சொல்லுவார்கள்—எ - ம்.

இ-ம். பிரமப்பிரகாசத்தைப் பேதமாயறியுஞ் சங்கற்பமே மனமென்ப தாம். (3)

## பிரமப்பிரகாசபேதமே மனமாயில் சகத்தென் பது யாதெனின்,

இனத்தாற்படரு மனம்பரம னேதுவாயிப் படிதோன்று
மனத்தால்விரிந்த சகமெல்லா மனனவடிவே மற்றில்லை
கனத்தாற்கரைதீர் பலவறிவாங் கல்லோலச்சிற் கடல்பொங்குந்
தினத்தானீண்ட கனவொப்ப சித்தவசத்தாற் சகந்திரமாம்.

இ - ள். இனத்தாற்படருமனம் - சங்கற்பவிகற்பங்களினால் விரிகின்றமன மானது, பரமனேதுவாய் - பிரமங்காரணமாய், இப்படிதோன்றும் - இந்தப் பிரகாரமுண்டாகும், மனத்தால் - மனதினால், விரிந்தசகமெல்லாம் - (தோன் றிப்) பாவிய உலகங்களியாவும், மனனவடிவே - மனோரூபமே, மற்றில்லை - வேறில்லை, கனத்தாற்கரைதீர் - மிகுதியினால் அளவில்லாத, பலவறிவாம் - விருத்திஞானமாகிய, கல்லோலம் - பேரலையையுடைய, சிற்கடல்பொங்கும் - ஞானசாகரம் பிரகாசிக்கும், தினத்தால் காலங்களினால், நீண்டகனவொப்ப- நெடியசொற்பனத்துக்கொப்பாக, சித்தவசத்தால்-மனதின்வயத்தினால், சகந் திரமாம் - உலகமானது நிச்சயமாம்--எ-று.

எ - து. சங்கற்ப விகற்பங்களினால் விரிகின்ற மனமானது பிர மங்காரணமாய் இந்தப் பிரகாரமுண்டாகும், மனதினால் தோன்றிப் பாவிய உலகங்களியாவும் மனோரூபமேவேறில்லை, மிகுதியினால் அள வில்லாத விருத்தி ஞானமாகிய பேரலையையுடைய ஞானசாகரம் பிர காசிக்கும், காலங்களினால் நெடியசொப்பனத்துக்கு ஒப்பாக மன தின் வயத்தினால் உலகமானது நிச்சயமாம்—எ - ம்.

இ-ம். பிரமசங்கற்பாகாரமே சகம்போலத் தோற்றுமென்பதாம் (4)

## இப்படியாயில் பேதமாகாதோவெனின்.

தெரியாவறிவிற்கள்வனெனத் தெளியாமையினாலுலகுண்டாம்
மரியாப்பிரமத்தொடுசீவன் மறந்தும்பேதமிலாததுபோற்

பிரியாசசிவ சித்தங்கள் பேதமில்லை யிதுபோலத்
தரியாச்சித்தஞ் சகங்களுக்குச் சற்றும்பேத முளதாகா.

இ - ள். தெரியாவறிவில் - (கட்டையென்று) அறியாத அறிவினால், கள்வனென - கள்ளன் (தோன்றுவது) போல, தெளியாமையினால் - (சர்வம்பிரமமெனத்) தெளிவுண்டாமையின், உலகுண்டாம் - சகமுண்டாகும், மரியாப்பிரமத்தொடு - நாசமற்றபிரமத்துக்கும், சீவன் - சீவனுக்கும், மறந்தும்பேதமில்லாததுபோல் - மறந்தவிடத்தும் பேதமில்லாததுபோல, பிரியாச்சீவசித்தங்கள் நீங்காதசீவனுக்குஞ்சித்தத்துக்கும், பேதமில்லை பேதங்களில்லை, இதுபோல - இதைப்போல, தரியா - நிலையாத, சித்தஞ்சகங்களுக்கும் - மனதுக்கும் உலகங்களுக்கும், சற்றும்பேதமுளதாகா - அற்பமும்பேதமுண்டாகாது—எ-று.

எ - து, கட்டையென்று அறியாத அறிவினால் கள்ளன் தோற்றுவதுபோல சர்வம்பிரமமெனத தெளிவுண்டாகாமையின் சகமுண்டாகும், நாசமற்ற பிரமத்துக்கும், சீவனுக்கும், மறந்த விடத்தும் பேதமில்லாததுபோல நீங்காத சீவனுக்குஞ் சித்தத்துக்கும் பேதங்களில்லை. இதைப்போல நிலயாத மனதுக்கும் உலகங்களுக்கும் அற்பமும பேதமுண்டாகாது—எ - ம.

இ-ம். பிரமப்பிரகாசமே சீவன்முதலியயாவுமாய் விளங்குதலின் அபேதமேயாம் என்பதாம். (5)

## இதற்குத் திருஷ்டாந்தம் யாதெனின்.

இதுகாரணமா மொருகதைபண் டிகலாராக்கி யியம்பியது
முதுவாம்வினவா லறிபொருள்கண் முழுதுந்தெளியத் தெளிவிப்ப
ததுநீகேட்பா யிமவானுக் கயலுத்தரபா லமர்கிற்பாள்
விதுவாமெயிற்றுக் கற்கடிப்பேர் பேழ்வாயரக்கி மின்கண்ணாள்.

இ - ள். இதுகாரணமாம் - இது எதுவாகிய, ஒருகதை - ஓரிதியாசம், பண்டு - முன்னமே, இகலாராக்கி - பலம்பொருந்திய இராட்சதியானவள், இயம்பியது - சொல்லிய, முதுவாம்வினவால் - முதிர்ந்த வினவினால், அறிபொருள்கண்முழுதும் - அறியவேண்டிய அருத்தங்கள் யாவையும், தெளிய - தெளியும்படி, தெளிவிப்பது - தெளியச்செய்வதாம், அது நீ கேட்பாய் - அதை நீ கேட்கக்கடவாய், இமவானுக்கு - இமயகிரிக்கு, அயலுத்தரபால் - வடபக்கத்தில், அமர்கிற்பாள் - இருப்பவள், கற்கடிப்பேர் - கற்கடியென்னு நாமத்தையுடைய, அரக்கி - இராட்சதி, விதுவாமெயிறு - பிறைபோன்ற தந்தங்களும், பேழ்வாய் - பெரியவாயும், மின்கண்ணாள் - மின்போன்றவிழியுமுடையவள்—எ-று.

எ - து. இது ஏதுவாகிய தரிதீயாசம், முன்னமே பலம்பொருந்திய இராட்சதியானவள் சொல்லிய முதிர்ந்தவினையினால் அறியவேண்டிய அருத்தங்களியாவையும் தெளியும்படி தெளியச்செய்வதாம். அதை நீகேட்கக்கடவாய். இமயகிரிக்குவடபக்கத்தில் இருப்பவள். கற்கடியென்னு நாமத்தையுடைய இராட்சதி, பிறைபோன்ற தந்தங்களும், பெரியவாயும, மின்போன்ற விழியுமுடையவள்—எ-ம்.

இதுவுமது.

கருமேருவைப்பெண் வடிவாகக் கைகால் வகுத்ததெனத்திரிவாள்
உருமேறனைய சிறுநகையா ளோடாமீன்போ லுழல்கண்ணாள்
பெருமேனியைததாங் கிருதுறங்கும பேரீச்சென்னப் பெருதுடை.
யாள், வருமேகத்தைப் பிளக்குநகம்வயிடூரியத்தின் சுளகொப்பாள்.

இ-ள். கருமேருவை - கறுத்தபருப்பதத்தையே, பெண்வடிவாக - மகளிர் உருவமாக, கைகால வகுத்ததென - காசரணங்களாகச்செய்ததென்னும்படி, திரிவாள சஞ்சரிப்பவள், உருமேறனைய - இடியையொத்த, சிறுநகையாள் - புன்சிரிப்பையுடையவள், ஓடாமீன்போல் - ஓடாமற் (சுழலும்) மச்சத்தைப்போல, உழல்கண்ணாள் - சுழலப்பட்ட கண்களையுடையவள், பெருமேனியைத்தாங்கு - பெரிதான சரீரத்தைச்சுமக்கின்ற, இருகுறங்கும் - இரண்டுதுடையும், பேரீச்சென்னப்பெருதுடையாள - பேரீச்சமரமென்னும்படி பருமனுடையவள், வருமேகத்தைப்பிளக்கும்நகம் - வாராநின்ற முகிலைக்கிள்ளுகின்ற நகமானது, வயிடூரியத்தின் சுளகொப்பாள் - வயிடூரியமுறத்துக்கொப்பாகவுடையவள்—எ-று.

எ - து கறுத்தபருப்பதத்தையே மகளிர் உருவமாக காசரணங்களாகச் செயததென்னும்படி சஞ்சரிப்பவள். இடியையொத்தபுன்சிரிப்பையுடையவள். ஓடாமற் சுழலு மச்சத்தைப்போல சுழலப்பட்ட கண்களையுடையவள். பெரிதான சரீரத்தைச் சுமக்கின்ற இருதுடையும பேரீச்சு மரமென்னும்படி பருமனுடையவள். வாராநின்ற முகிலைக்கிள்ளுகின்றநகம் வயிடூரியமுறத்துக் கொப்பாக வுடையவள்—எ-ம்.

இ-உ-க-ம். கற்கடியின் வினையை யறிவிக்கும்பொருட்டு அவளுடைய அவயவங்களை வருணித்ததாம். (7)

கற்கடி சிந்தித்தல்.

பாழிப்புவிமேலுயிரையெலாம் பகலுமிரவுஞ்சொரிந்திடவும்
ஊழிக்கனல்போலவியாத் வுதரக்கனலாலுள்ளழிந்து

காழிக்கிளர்நாவலன்றீவிற் காணப்படுமன்னுயிரெல்லாம்
ஆழிக்கிடைவீழ்நதித்திரள்போ லருந்திற்சிறிதாருயிர்நிற்கும்.

இ - ள். பாழிப்புவிமேல் - விசாலமானபூமியின்கண்ணுள்ள, உயிரையெலாம் - பிராணிகளனைத்தையும், பகலுமிரவுஞ்சொரிந்திடவும் - அகோராத்திரமாகப்பெய்யவும், ஊழிக்கனல்போல் - வடவனலைப்போல, அவியாத-தணியாத, உதரக்கனலால் - உதராக்கினியினல், உள்ளழிந்து - மனநொந்து, காழிக்கிளர் - கடினமாகப் பிரகாசிக்கின்ற, நாவலன்றீவில் - சம்புத்தீவில், காணப்படு மன்னுயிரெல்லாம் - பார்க்கப்படுகின்ற பிராணிகளனைத்தையும், ஆழிக்கிடை - சமுத்திரத்தினிடத்தில், வீழ்நதித்திரள்போல் - விழுகின்ற ஆறுகளைப்போல, அருந்தில் - புசிக்கில், சிறிதாருயிர்நிற்கும் - (அற்பாகாரமாக) சீவன் மெலிவுற்றிருக்கும் எ-று.

எ - து. விசாலமான பூமியின் கண்ணுள்ள பிராணிகளனைத்தையும் அகோராத்திரமாகப் பெய்யவும், வடவனலைப்போல தணியாத உதராக்கினியினல் மனநொந்து கடினமாகப் பிரகாசிக்கின்ற சம்புத்தீவில் பார்க்கப்படுகின்ற பிராணிகளனைத்தையும் சமுத்திரத்தினிடத்தில் விழுகின்ற ஆறுகளைப்போல. புசிக்கில் அற்பாகாரமாக சீவன்மெலிவுற்றிருக்கும்—எ - ம்.

இ-ம். போகங்கைக்கு நிமித்தம் அதை மிகவும் அனுபவிக்கத் தோற்றினதாம். (8)

## மூர்த்தித் தியானம் செய்தல்.

மழையா லவியுங் கானலென வயிற்றி லெரியுஞ் சிறிதவியும்
பிழையா திதனைத் தவம்புரிந்து பிரம னருளாற் பெறுதுமென
முழையா ரிமய கிரிமேவி மூழ்கி யொருகா லுறநின்று
புழையார் விழியா னடுவானிற் பொலியுங் கதிரை யெதிர்நோக்கி.

இ - ள். மழையால் - வருஷத்தினல், அவியுங்கானலென - தணியுங்கானலைப்போல, வயிற்றிலெரியுஞ் சிறிதவியும் - உதராக்கினியுங் கொஞ்சந்தணியும், பிழையாது - குற்றம்வராமல், இதனை - இவ்வுதராக்கினியை, தவம்புரிந்து - (தணிப்பதற்குத்) தவஞ்செய்து, பிரமனருளால் - பிரமதேவர் அனுக்கிரகத்தினல், பெறுதுமென - பெற்றுக்கொள்ளுவோமென்று, முழையார் இமயகிரிமேவி குகைகள்நிறைந்த இமயமலைக்குப்போய், மூழ்கி-ஸ்நானஞ்செய்து, ஒருகால் - ஒருபாதம், உறநின்று - (பூமியிற்) பொருந்த நின்று, புழையார்விழியால் - துவாரம்பொருந்திய கண்ணினல், நடுவானில் - ஆகாயமத்தியில், பொலியுங்கதிரை - பிரகாசிக்கின்ற சூரியனை எதிர்நோக்கி - (பகலில்) நேரேபார்த்து-எ-று.

எ — து. வருஷத்தினால் தணியுங் கானலைப்போல உதராக்கினி யுங் கொஞ்சந்தணியும், குற்றம்வாராமல் இவ்வுதராக் கினியைத்தணி ப்பதற்குத் தவஞ்செய்து பிரமதேவர் அனுக்கிரகத்தினால் பெற்றுக் கொள்ளுவோமென்று குகைகள்நிறைந்த இமயமலைக்குப்போய்ஸ்நா ஞ்செய்து ஒருபாதம் பூமியிற்பொருந்த நின்று அவாரம் பொருந்திய கண்ணினால் ஆகாயமத்தியில் பிரகாசிக்கின்றசூரியனைப்பகலில்நேரே பார்த்து—எ—ம்.

ஒருகாலூற நின்று என்றதனான்-மற்றொருகால் உயர எடுத்தது எனவும் கதிரை யெதிர்நோக்கி யென்றதனாற் பகலிற் சூரியனையும் இரவில் சந்திரனை யும் பார்த்ததெனவுங்கொள்க. (9)

## உபாசனாமூர்த்தி பிரசன்னமாதல்.

வருந்தி நின்று வுயர்தவத்திற் வருட மோரா யிரஞ்செலுத்த
திருந்து கமலத் தயன்வந்தான் றீயோ ரெனினு மருந்தவத்தாற்
பொருந்து ருத பொருளுண்டோ புண்ட ரீகன் போதவுமுன்
இனிருந்த படியே யிருந்தரக்கி யிதயத் திறைஞ்சியிது நினைந்தாள்.

இ - ள். வருந்திநின்று - வருத்தமுற்றுநின்று, உயர்தவத்தில் - மேலான தவத்தினால், வருடமோராயிரஞ்செலுத்த - ஆயிரவருஷம் நடத்த, திருந்து - திருத்தமாகிய, கமலத்தயன் - தாமரையில்வசிக்கின்ற பிரமன், வந்தான் - பிர த்தியக்ஷமானார், தீயோரெனினும் - தீமையை யுடையவராயினும், அருந்தவத் தால் - அரியதவத்தினால், பொருந்துரூத பொருளுண்டோ-அடையக்கூடாத வஸ்துக்களுண்டோ, புண்டரீகன்போதவும் - தாமரையையுடையவன்வரவும், முன்னிருந்தபடியேயிருந்து - முன்னிருந்த அரசின்படியேயிருந்து, அரக்கி- இராட்சதியானவள், இதயத்திறைஞ்சி - மனதில்வணங்கி, இதுநினைந்தாள் இதைச்சிந்தித்தாள்-எ-று.

எ - து. வருத்தமுற்றுநின்று மேலானதவத்தினால் ஆயிர வரு ஷம் நடத்த திருத்தமாகிய தாமரையில் வசிக்கின்ற பிரமன் பிரத்தி யக்ஷமானார். தீமையை யுடையவராயினும் அரிய தவத்தினால் அடை யக்கூடாத வஸ்துக்களுண்டோ? தாமரையை யுடையவன் வரவும் முன்னிருந்த அரசின்படியேயிருந்து இராட்சதியானவள் மனதில் வணங்கி இதைச்சிந்தித்தாள்—எ—ம். (10)

## கேட்கவேண்டும் அபிப்பிராயத்தைச் சிந்தித்தல்.

தாவு முதரக் கனறணியச் சற்று மிருபாற் சமைந்தவொரு
சீவ வூசி வடிவானுற் செகத்தோ ருடலங் களிற்புகுந்து
மேவு மிரைகள் வேண்டியது விழுங்க லாமென் றுணர்வானை
யாவ தெண்ண முனக்கென்ன விசைத்த வயனுக் கிவளிசைப்பாள்.

இ - ள். தாவு - தாவுகின்ற, உதரககனல்தணிய-பசிதணியும்பொருட்டு சற்றுமிரும்பால்-அற்பமானகருந்தாதால், சமைந்த - உண்டான, ஒருசிவவூசி வடிவானால் - ஒருயிருள்ள ஊசிவடிவமானால், சகத்தோர் - உலகிலுள்ளவர்களுடைய, உடலங்களிற்புகுந்து - சரீரங்களில் நுழைந்து, மேவும் - பொருந்திய, இரைகள்வேண்டியது - உணவுகள்வேண்டுமானவைகளை, விழுங்கலாமென்று - புசிக்கலாமென்று, உணர்வானை - எண்ணுபவனை, ஆவதெண்ணம்-ஆகவேண்டிய நினைவுகள், நினக்கென்ன - உனக்கென்னவென்று, இசைத்த வயனுக்கு - கேட்ட பிரமனுக்கு, இவளிசைப்பாள்-இக்கற்கடிகூறுவாள்-எ-று.

எ - து, தாவுகின்ற பசிதணியும்பொருட்டு அற்பமான கருந்தாதால் உண்டான ஒருயிருள்ள ஊசிவடிவமானால் உலகத்தில் உள்ளவர்களுடையசரீரங்களில் நுழைந்துபொருந்திய உணவுகள் வேண்டுமானவகளைப் புசிக்கலாமென்று எண்ணுபவனை ஆகவேண்டிய நினைவுகள் உனக்கென்னவென்று கேட்ட பிரமனுக்கு இக்கற்கடி கூறுவாள்—எ-ம். (11)

## விரும்பினவரங்கொடுத்ததை அடையும் கிரமம் அருளுதல்.

துதிப்பார் துணையே நான்சீவ சூசி யாக வேண்டுமென, விதிப்
பான் விகார பூருவமாம் விடூசி யாக மெய்க்கொண்டு, குதிப்பாய்
துற்சேட் டையர்மூர்க்கர் கொடியோர்கொடிய தலத்துறைவோர்,
கதிப்பால்விரும்பா வுணவுண்போர் கருத்திற்சுவா தத் திட்ன்கலந்து.

இ - ள். துதிப்பார்துணையே - தோத்திரஞ்செய்கின்ற அடியார்களுக்குச் சகாயமான ஆண்டவரே, நான் - அடியேன், சீவசூசியாகவேண்டுமென - உயிர் ஊசியாகவேண்டுமென்று (கேட்க), விதிப்பான் - நியமிப்பான், விகார பூருவமாம் - வி என்னும் அட்சரத்தை முதற்கண்ணுள்ளதான, விடூசியாக மெய்க்கொண்டு - விடூசியாகச் சரீரமெடுத்துக்கொண்டு, குதிப்பாய் - பாய் வாய், துற்சேட்டையர் - துற்கிருத்தியமுள்ளவர்களும், மூர்க்கர் - மூடர்களும், கொடியோர் - துஷ்டர்களும், கொடிய தலத்துறைவோர் - கொடிதான இடத்திலிருப்பவர்களும், கதிப்பால் - மமதையினால், விரும்பா — விரும்

பக்கூடாத, உணவு உண்போர் - (துற்) புசிப்பைப்புசிப்பவர்களு (மாகியவிவர் களுடைய), கருத்தில் - மனதில், சவாதத்துடன் கலந்து - பிராணவாயு வோடுங்கலந்து—எ-று.

எ – து. தோத்திரஞ்செய்கின்ற அடியார்களுக்குச் சகாயமான ஆண்டவரே! அடியேன் உயிரூசியாகவேண்டுமென்று கேட்க நியமிப்பான், வீ என்னும் அட்சரத்தை முதற்கண்ணுள்ளதான விடூசியாகச் சரீர மெடுத்துக்கொண்டு பாய்வாய் துற்கிருத்தியமுள்ளவர்களும், மூடர்களும், துஷ்டர்களும், கொடிதான இடத்தில் இருப்பவர்களும் மமதையினுல் விரும்பக்கூடாத துற்புசிப்பைப் புசிப்பவர்களுமாகிய இவர்களுடையமனதில் பிராணவாயுவோடுங்கலந்து—எ-ம்.

## இச்சையினுல் அற்பவடிவமாதல்.



நல்லா ரிடத்தி னீயெய்தி னுமே விதித்த மந்திரத்தாற் [ன்
கொல்லா தொழிவாய்த் தீயோரைக் கொன்று தின்பா யெனமலரோ
சொல்லா முன்ன மலைபோல்வாள் சூசி யுருவாஞ் சீவனுமாய்ப்[தாள்.
பொல்லா தவரஞ் சினத்தடித்தோர் பொன்றும் படியுள் ளுறப்புகுந்

இ - ள். நல்லாரிடத்தினீயெய்தில் - அறிஞர்களிடத்தில் நீ சென்றால், நாமேவிதித்த மந்திரத்தால் - நாம் நியமித்த (உனது சிகிச்சையென்னு) மந்திர (செபத்)தினுல், கொல்லாதொழிவாய் - கொலைசெய்யாதிருப்பாய், தீயோரைக்கொன்றுதின்பாயென - அறிவில்லாதவர்களைக கொன்று உண்பாயென்று, மலரோன்சொல்லா - பிரமன்சொல்லி (மறையுமளவில்), முன்னமலைபோல்வாள் - முன்பு வரைக்கு ஒப்பானவள், சூசியுருவாஞ் சீவனுமாய் - சீவசூசியுருவம் எடுத்து, பொல்லாதவர் - மூர்க்கரும், அஞ்சினத்தடித்தோர் - (மனதில்) அச்சமிகுந்தவரும், பொன்றும்படி - நசிக்கும் வண்ணம், உள்ளுறப்புகுந்தாள் - அகத்திற் பிரவேசித்தாள்—எ-று.

எ - து. அறிஞர்களிடத்தில் நீ சென்றால் நாம் நியமித்தவுனது சிகிச்சையென்னு மந்திரசெபத்தினுல் கொலைசெய்யாதிருப்பாய். அறிவில்லாதவர்களைக் கொன்று தின்பாயென்று பிரமன் சொல்லி மறையுமளவில் முன்பு வரைக்கு ஒப்பானவள் சீவசூசியுருவமெடுத்து மூர்க்கரும் மனதில் அச்சமிகுந்தவரும் நசிக்கும் வண்ணம் அகத்திற் பிரவேசித்தாள்—எ-ம்.

ப-ம். விடூசிகாவியாதியைப் போக்கடிக்கிற இந்தமந்திரத்தை யுன்னுடைய சிகிச்சார்த்தம் என்னுலே சொல்லப்படுகின்றதென்பார், நாமே விதித்த மந்திரமென்றார். அவையாவன. ஓம்-ஹ்ராம் - இரீம்-ஹ்ரூம் - ராம் - விஷ்ணு

சத்தியோசமோ - பகவதி விஷ்ணுசத்தி-ஏ-ஹே-ஈ-ஏனும்-ஹா-ஹா-ஹந-ஹந-பச-பச-மத-மத-உச்சாதியோ-உச்சாதையாதூரே-குடு-குடு-சுவாஹா குருகுரு சுவாஹா-விடூசிகே-இமோந்தம் கெச்சா - சீவசீவ - சந்திரமண்டலம்-கதோசி-சுவாஹாஎன்பனவாம். இஃதை ஸ்நானமும் ஆசமனமுஞ்செய்து மாந்திரிகனானவன்வாமகரத்தில்விபூதியைவைத்து அதில் இந்த மந்திரத்தையெழுதிக்கொண்டுசெபித்துரோகியினுடைய சரீரமுழுதுந்தடவி இம்மந்திரமென்னுந் தண்டாயுதத்தினுற் கற்கடி யடிபட்டு இமோர்ப்பருபபதத்துக்கு ஓடிப்போனதாயும் ரோகியைச்சந்திராமிர்த மத்தியி லிருப்பவனும் வியாதிவிடுபட்டவனும் சராமரணமில்லாதவனும் பாவித்துத் ததேகமாய்ச் செபஞ்செய்து சிந்திதது கிரமமாக இவ்விடூசிகாவியாதியைப் போக்கடிப்பனெனக்கொள்க. (13)

## உணவின் இச்சை வெறுத்தல்.



வாயு வடிவா யுட்புகுந்து மண்ணில் விண்ணில்பல் லுயிர்கள்
ஆயு வெல்லா மிருவடிவா யநேக கால மருந்தியபின்
ஓயு மனத்தா ளாயவமே யுழன்று வருந்தி யூசியுமாய்த்
தேயும் படியே கெடுத்ததெமைச் சீசீ யாசை யெனததிகைத்தாள்.

இ - ள். வாயுவடிவாய் - வாதரூபமாகி, மண்ணில் - பூமியிலும், விண்ணில் - ஆகாயத்திலும் (உள்ள), பலவுயிர்கள் - பலசீவர்களின், உட்புகுநது - உள்ளேபிரவேசித்து, ஆயுவெல்லாம் - (அவர்கள்) வாணுளனைத்தையும், இருவடிவாய் - சீவசூசி வாதசூசியென்னு மிரண்டுவடிவமாய், அநேககாலம்-வெகுகாலம், அருந்தியபின் - புசித்தபின்பு, ஓபுமனத்தாளாய் - தளர்ந்தமனதையுடையவளாய், அவமே - வீணகவே, உழன்று - சுழன்று, வருந்தி - நைந்து, ஊசியுமாய்த தேயும்படி - சூசியுமாய்த் தேய்ந்துபோகும்படி, ஆசை - அவாவானது, எமை - நம்மை, கெடுத்தது-அழிததது, சீசியென - சைசையென்று, திகைத்தாள் - மயங்கினுள்—எ-று.

எ - து. வாதரூபமாகி பூமியிலும் ஆகாயத்திலுமுள்ள பலசீவர்களின் உள்ளேபிரவேசித்து அவர்கள் வாணுளனைத்தையும் சீவசூசி வாதசூசி யென்னும் இரண்டுவடிவமாய் வெகுகாலம் புசித்தபின்பு தளர்ந்த மனதை யுடையவளாய் வீணகவே சுழன்று நைந்து சூசியுமாய்த் தேய்ந்துபோகும்படி அவாவானது நம்மை அழித்தது சைசையென்று மயங்கினுள்—எ-ம்.

இ-ம். மிகுந்தது கெடுமென்னும் வாக்கியப்படி, மிகவும் அனுபவித்த புசிப்பிற் கைப்புண்டானதாம், (14)

## நிஷ்காமதவஞ்செய்தல்.

வேறு

தீயம னத்தொடு யாமவமேபல சீவ னருந்தினமால
எயது விட்டன மென்றிம வானிடை யெய்தரி தானதவ
மேயின ளொன்று நினைப்பிலள் சஞ்சலம் விட்டுண வற்றொருமித்
தாயிர மாவரு டங்கள் செலுத்தலு மற்றது வல்வினையே.

இ - ள். தீயமனத்தொடு - கொடியமனதுடன், யாம் - நாம், அவமேபல சீவனருந்தினம் - வீணுக அநேகவுயிர்களைப் புசித்தோம், எயதுவிட்டனமென்று - பொருந்திய அவ்வாசையை நீக்கினேமென்று, இமவானிடை - இமய பருப்பதத்தில், எய்தரிதான தவம் - பொருந்துதற் கரிதான தவத்தை, ஏயினள் - அடைந்து, ஒன்று நினைப்பிலள் - ஒரு சங்கற்பமுமில்லாமல், சஞ்சலம் விட்டு - சலனத்தைநீக்கி, உணவற்று - புசிப்பின்றி, ஒருமித்து - ஒன்றுபட்டு, ஆயிரமாவருடங்கள் - சகஸ்திரவருஷங்கள், செலுத்தலும் - நடத்தவும், வல்வினை - கொடிய (இரு) வினையும், அற்றது - நீங்கிற்று — எ-று.

எ - து. கொடியமனதுடன் நாம் வீணுக அநேக உயிர்களைப் புசித்தோம். பொருந்திய அவ்வாசையை நீக்கினேமென்று இமய பருப்பதத்தில் பொருந்துதற்கரிதானதவத்தை அடைந்து ஒரு சங்கற்பமு மில்லாமல் சலனத்தை நீக்கி புசிப்பின்றி ஒன்றுபட்டு சகஸ்திர வருஷங்கள் நடத்தவும் கொடிய இருவினையும் நீங்கிற்று. (15)

இம். நிற்விகற்பசமாதியினுல் சகலவினைகளும் நீங்கினவென்பதாம்.

## நிஷ்காமதபசினுல் ஞானமுண்டாகுதல்.

பாவ மகன்று மனந்தெளி யப்பர பாவனை தன்வயமே
மேவலு மிவ்வுல கத்தை யிகழ்ந்து விருப்பு வெறுப்பிலளாய்
மாவரு டங்களோ ராயிர நின்றபின் மன்னுணர் வுற்றதெனக்
கேவலம் வந்திவ ளுக்கொரு வாய்மை கிளத்தினன் மாமலரோன்.

இ - ள். பாவமகன்று - தீமைநீங்கி, மனந்தெளிய - மனது தெளிவடைய, பரபாவனை - பிரமத்தியானம், தன்வயமேவலும் - தனதிடமாகப்பொருந்தவும், இவ் வுலகத்தை - இச் சகத்தை, இகழ்ந்து - நிந்தித்து, விருப்பு வெறுப்பிலளாய் - ராகத்துவேஷ மில்லாதவளாய், மாவருடங்களோராயிரம் - சகஸ்திர வருஷம், நின்றபின் - (தவசில) இருந்தபின்பு, மன்னுணர் வுற்றதென - பூரணஞானமுதித்ததென்று, கேவலம்வந்து - தானேவந்து, இவளுக்கு இக் கற்கடிக்கு, ஒருவாய்மை - ஓர் உண்மையை, மாமலரோன் - பிரமதேவன், கிளத்தினன் - சொன்னுன் — எ-று.

எ – று. நிமைநீங்கி மனதுதெளிவடைய பிரமத்தியானம தனை இடமாகப்பொருந்தவும் இச்சகத்தை நிந்தித்து ராகத்துவேஷமில்லாதவளாய் சகல்திரவருடம் தவசிலிருந்தபின்பு பூரணஞானமுதித்தது என்று தானேவநது இக்கற்கடிக்கு ஓர் உண்மையைப் பிரமதேவன் சொன்னான்—எ-ம். (16)

## பிரமா அனுக்கிரகித்தல்.

சீவனின் முத்தி யடைந்தனை சிந்தை தெளிந்தனை தொல்வடிவாய்ப்
பூவல யத்தறி வில்லவர் தீயவர் பூரியர் மெய்யிரையாய்
ஆவி வளர்த்துறை கென்றய னேகனு மத்துவி தப்பரமே
பாவனை யுற்றொரு செய்தொழி லற்றப தத்தி லிருந்தனளால்.

இ-ள். சீவனின்முத்தியடைந்தனை - சீவன்முத்தியை யடைந்தாய், சிந்தைதெளிந்தனை - மனந்தெளிந்தாய், தொல்வடிவாய் - பழையவிராட்சதிவடிவமாய், பூவலயத்து - பூமியில், அறிவில்லவர் - ஞானமில்லாதவர்களும், தீயவர் - கொடியவர்களும், பூரியர் - கீழ்மககளும் (ஆகிய இவர்களுடைய),மெய்-சரீரங்களை, இரையாய் - (உனக்) குணவாக,ஆவிவளர்த்து - சீவனஞ்செய்து-உறைகென்று-சுகமாயிருப்பாயென்று (அனுக்கிரகஞ்செய்து), அயனேகலும்-பிரமன்மறையவும், அத்துவிதப்பரமே - அத்துவிதப்பிரமமே, பாவனையுற்று - (சர்வமென்னும்) பாவனையைப்பொருந்தி, ஒருசெய்தொழிலற்ற - நிஷ்கிரியையான, பதத்திலிருநதனள் - தற்பதத்திலிருந்தாள் எ-று.

எ - து. சீவன்முத்தியை யடைந்தாய், மனந்தெளிந்தாய், பழைய இராட்சதிவடிவமாய் பூமியில் ஞானமில்லாதவர்களும், கொடியவர்களும் கீழ்மக்களுமாகிய இவர்களுடைய சரீரங்களை உனக்குணவாக சீவனஞ்செய்து சுகமாயிருப்பாயென்று அனுக்கிரகஞ்செய்து பிரமன் மறையவும், அத்துவிதப்பிரமமே சர்வமென்னும் பாவனையைப்பொருந்தி நிஷ்கிரியையான தற்பதத்திலிருந்தாள்—எ - ம்

இ-ம். பிராரத்தசேட நீங்கும்பொருட்டு விதியானபுசிப்பை அனுபவிக்க அறிவித்ததாம். (17)

## சீவன்முத்திதன்மையினின்று விதியான உணவைச் சிந்தித்தல்.

விகற்ப மிறந்த சமாதி நெடும்பகன் மேவினன் மீளவிடா
உகப்பொடு நெஞ்சொடு கூடின னொல்பசி யுன்னின னானெனுமா
றிகத்துள மட்டு முடற்குள தான வியற்கை விடாததனாற்
சகத்தி லரக்கர் குலத்தொழி லான தசைப்பலி கொள்வனென.

இ - ள். விகற்பமிறந்தசமாதி - நிர்விகற்பசமாதியில், நெடும்பகன் மேவினன் - அநேககாலமிருந்தனன், மீள - (சமாதியினின்றுந்) திரும்ப, விடாவுகப்பொடு - நீங்காத ஆனந்தத்தோடும், நெஞ்சொடுகூடினன் - மனதுடன் சேர்ந்தான், தொல்பசியுன்னினன் - பழையபசியைநினைத்தான், நானெனுமாறு - நானென்னுந்தன்மை, இகத்துளமட்டும் - சகத்தின்கணுள்ளபரியந்தம், உடற்குளதானவியற்கை - சரீரதத்துக்குண்டாகியசுபாவம், விடாததனால் - நீங்காதபடியினால், சகத்தில் - உலகத்தில், அரக்கர் குலத்தொழிலான - இராக்ஷதவமிசத்துக்குத் தொழிலாயிருக்கின்ற, தசைப்பலி - மாமிசாகாரம், கொள்வனென - புசிப்பனென்று—எ று.

எ - து. நிர்விகற்பசமாதியில் அநேககாலமிருந்தனன், சமாதியினின்றுந் திரும்ப, நீங்காத ஆனந்தத்தோடும் மனதுடன்சேர்ந்தான். பழைய பசியை நினைத்தான். நானென்னுந்தன்மை சகத்தின்கண்ணுள்ள பரியந்தம் சரீரத்துக்குண்டாகிய சுபாவம் நீங்காதபடியினால் உலகத்தில் இராட்சத வமிசத்துக்குத் தொழிலாயிருக்கின்ற மாமிசாகாரம் புசிப்பனென்று—எ-ம். (18)

## உபதேசித்த புசிப்புத் திரிடல்.



அயனுரை செய்தது மப்படி யாதலி லந்த வுரைப்படியே
நயவரு டற்பலி கொள்ளுவ னென்று களித்திம வானயல்போய்
ஜயமிகு வேடுவர் மண்டல மேவி வனத்தி லுறைந்திடுநாள்
நயமுறு மந்திரி தன்னொடு மங்கொரு நரபதி நண்ணினனால்.

இ — ள். அயனுரைசெய்ததும் - பிரமன் அனுக்கிரகித்ததும், அப்படியாதலில் - அப்பிரகாரமாதலால், அந்தவுரைப்படியே - அவ்வசனப்படியே, நயவருடல் - மூடர்கள் சரீரத்தை, பலிகொள்ளுவனென்று - அமுதாகப் புசிப்பேனென்று, களித்து - மகிழ்ந்து, இமவானயல்போய் - இமயமலையின் சாரலிற் சென்று, ஜயமிகுவேடுவர் - வெற்றிமிகுந்த வேடர்களின், மண்டலமேவி - நாட்டையடைந்து, வனத்திலுறைந்திடுநாள் - (அதிலுள்ள) கானகத்தில்வசிக்குங்காலத்தில், நயமுறுமந்திரிதன்னொடும் - நீதியுள்ள வமைச்சனோடும், அங்கொருநரபதிநண்ணினன் - அவ்விடத்து ஓர் அரசன்வந்தனன்.

எ - து. பிரமன் அநுக்கிரகித்ததும் அப்பிரகாரமாதலால் அவ் வசனப்படியே மூடர்கள் சரீரத்தை அமுதாகப் புசிப்பேனென்று மகிழ்ந்து இமயமலையின் சாரலிற்சென்று வெற்றிமிகுந்த வேடர்களின் நாடடைந்து அதிலுள்ள கானகத்தில்வசிக்கும் காலத்தில் நீதியுள்ள அமைச்சனோடும் அவ்விடத்து ஓர் அரசன் வந்தனன்— எ-ம். (19)

## கிடைத்தஉணவின் தன்மையை விசாரித்தல்.



முச்சுடர் வந்துறி னுங்கரு கத்தகு முற்றிரண் மூடிராவூ
டச்சமு றாவர் சோதனை செய்தலு மங்கவள் கண்டளவே
பச்சிரை யாமிவர் மெய்யறி வில்லவர் பாமர ராகியுளார்
இச்சக மேலுயிர் வாழிலி கம்பர மெங்கு மிடும்பையெனு.

இ - ள். முச்சுடர்வந்துறினும் - சோமசூரியாக்கினிகள் (ஒன்றாக)வந்து அடைந்தாலும், கருகத்தகு - (அவைகளொளி) மழுங்கத்தகுந்த, முற்றிருள் - மிகுந்த இருட்டினால், மூடிராவூடு - மூடிக்கொண்டிருக்கின்ற இராத்திரியில், அச்சமுறாவர் - பயப்படாத அரசமந்திரிகள், சோதனைசெய்தலும் - (பிசாசங் கண்முதல் துஷ்டர்களைப்) பரிசோதித்துவரவும், அங்கவள்கண்டளவே - அவ் விடத்து அந்தக் கற்கடி பார்த்தமாத்திரத்தில், பச்சிரையாம் - பசுமையான புசிப்பாவர், இவர் - இவர்கள், மெய்யறிவில்லவர் - உண்மைஞான மில்லாத வர்கள், பாமரராகியுளார் - மூடராயிருக்கின்றவர்கள், இச்சகமேல் - இவ்வுல கத்தின்கண், உயிர்வாழில் - சீவித்திருக்கின், இகம்பரம் - இகத்திலும் பரத் திலும், எங்கும் - மற்றெவ்விடத்தும், இடும்பையெனு - துன்பமாமென்று எ-று.

சோமசூரியாக்கினிகள் ஒன்றாகவந்தடைந்தாலும், அவைகள் ஒளிமழுங்கத்தகுந்த மிகுந்த இருட்டினால் மூடிக்கொண்டிருக்கின்ற இராத்திரியில் பயப்படாத அரசமந்திரிகள் பிசாசங்கண்முதல் துஷ் டர்களைப் பரிசோதித்து வரவும், அவ்விடத்து அந்தக் கற்கடி பார் த்தமாத்திரத்தில் பசுமையான புசிப்பாவர். இவர்கள் உண்மைஞான மில்லாதவர்கள், மூடராயிருக்கின்றவர்கள், இவ்வுலகத்தின்கண் சீவி த்திருக்கின் இகத்திலும், பரத்திலும், மற்று எவ்விடத்தும் துன்பமா மென்று—எ-ம். (20)

## துற்சனரோஎன்று ஆலோசித்தல்.

மீளவு நின்றுணர் வாளயன் முன்னம் விதித்தது மிப்படியே
கோளற வந்த பயன்கவ ராதவர் கொச்சை மனத்தினரே
நீள நினைந்துணர் புந்தியு நற்குண நீர்மையு மெய்தியுளார்
மாள வதஞ்செய நெஞ்செழு மோவிவர் வனறுயர் மேவுவரோ.

இ - ள். மீளவுநின்றுணர்வாள் - திரும்பவு நினைப்பாள், அயன்-பிரமன், முன்னம் விதித்தது மிப்படியே - முன் நியமித்ததும் இவ்வண்ணமே, கோளறவந்த - தீங்கறகிடைத்த, பயன் கவராதவர் - பலனைகொள்ளாதவர்கள், கொச்சைமனத்தினர் - அற்பமனதுள்ளவர்கள் (என்று), நீளநினைந்து - மிகவும் ஆலோசித்து, உணர்புந்தியும் - தெளிந்த அறிவையும், நற்குணநீர்மையும் - நற்குண (முள்ள) சுவாபத்தையும், எய்தியுளார் - அடைந்திருக்கின்றவர்கள், மாளவதஞ்செய - கெடும்படிகொலைசெய்ய, நெஞ்செழுமோ - மனம்எழுமோ, (அன்றியும) இவர் வன்றுயர மேவுவரோ - இவர்கள் வலியதுன்ப மடைவரோ எ-று.

எ - து. திரும்பவுநினைப்பாள், பிரமன் முன் நியமித்ததும் இவ்வண்ணமே, தீங்கறக்கிடைத்த பலனைகொளளாதவர்கள் அற்பமனதுள்ளவர்களென்று மிகவும் ஆலோசித்து தெளிந்த அறிவையும், நற்குணமுள்ள சுபாவததையும் அடைந்திருக்கின்றவர்கள்கெடும்படி கொலைசெய்ய மனமெழுமோ! அனறியும இவர்கள் வலியதுன்ப மடைவரோ—எ-ம். (21)

### சற்சனர்இலக்கணம் உணர்த

வேறு.

வஞ்சமினீள் புகழ்வாணாள வகுப்பரிய சுகமமாநதோர் வணங்க லாவார், எஞசலில வாவியினு மினியவாா தலினவருக் கிடரேவந் தால், அஞ்சலெனா வுயிர்கொடுத்து வாளித்கிடவேண் டினாாவ ரன்பா னோர்கருத், தஞ்சமுறக் காலனையு முறவாக்குந தன்மையினர் தக்க சான்றோர்.

இ - ள். தக்கசான்றோர் - தெளிந்த அறிஞர்கள், வஞ்சமில் - மெய்யான, நீள்புகழ் - மிகுந்த கீர்த்தியையுடைய, வாணாள் - (நீண்ட) ஆயுளெல்லாம், வகுப்பரிய - பிரிசககூடாத, சுகமமர்ந்தோர் - சுகத்தைப் பொருந்தின வர்கள், வணஙகலாவார் - யாவரும் வணஙகத் தக்கவர்களாவர், எஞ்சலிலா - குறைவில்லாத, ஆவியினும் - (தனது)உயிரைககாட்டிலும், இனியவாாதலில் - இனிமையுள்ளவர்கள் ஆதலால், அவருக் கிடர்வந்தால் - அக்குணவான்களுக்குத் துன்பம்வருமாயின், அஞ்சலெனா-பயப்படாதே யென்று, உயிர்கொடுத்து - பிராணனையாவதுகொடுத்து, அளித்திடவேண்டினாாவர் - இரட்சிக்கத்தக்க

வராவர், அன்பானேர்க்கு - (தங்களிடத்தில்) அன்பை யுடையவர்களுக்கு, தஞ்சுறு - வணக்கமாக, காலனையுமுறவாக்கும் - யமனையும் உறவுபடுத்தும், தன்மையினர் - சுபாவமுள்ளவர்கள்—எ-று.

எ-து. தெளிந்த அறிஞர்கள் மெய்யான மிகுந்த கீர்த்தியை யுடைய நீண்ட ஆயுளெல்லாம் பிரிக்கக்கூடாத சுகத்தைப்பொருந்தினவர்கள், யாவரும் வணங்கத்தக்கவர்களாவர், குறைவில்லாத தனதுயிரைக்காட்டிலும் இனிமையுள்ளவர்கள் ஆதலால், அக்குணவான்களுக்குத் துன்பம்வருமாயின் பயப்படாதேயென்று பிராணனையாவது கொடுத்து இரட்சிக்கத்தக்கவராவர், தங்களிடத்தில் அன்பை யுடையவர்களுக்கு வணக்கமாக யமனையும் உறவுபடுத்தும் சுபாவமுள்ளவர்கள்—எ-ம். (22)

## சற்சனர்க்கு அன்புசெய்பவர் இலக்கணம் அறிதல்.



அரக்கியெனு மியாமுதலா யுயர்ந்தோரை யாதரிக்கு மன்புகண்டால், இரக்கமுறப் பொன்போல யாவரே விரும்பாதா ரிகலோகத்திற், புரக்கவரு நிறைமதிபோற் புணர்ந்தோரை குளிர்விப்பர் புணராதோரை, பரக்கழியா விறந்தோராம் புணர்ந்தோரே முத்திமுதற் பயன்பெற்றோரே.

இ-ள். அரக்கியெனும் - இராட்சதியென்கின்ற, இயாமுதலாய் - நாமுதலாக, உயர்ந்தோரை - சத்துக்களை, ஆதரிக்கும் அன்புகண்டால் - பூசிக்கின்ற பக்தியைப்பார்க்கின், இரக்கமுற - அன்பாக, பொன்போல - சுவாணத்தைப்போல, யாவரே விரும்பாதார் - யார்தான் அன்புவையாதவர்கள், இகலோகத்தில் - இப்பூமியில், புரக்கவரு நிறைமதிபோல் - இரட்சிக்கவருகின்ற பூர்ணசந்திரனைபபோல, புணர்ந்தோரை - அடுத்தவர்கள் (மனதை), குளிர்விப்பர் - சத்துக்கள் சுகிக்கச்செய்வார்கள், புணராதோரே - சாராதவர்களே, பரக்கழியா - மிகவும் இழிவுபட்டு, இறந்தோராம் - மரித்தவராம், புணர்ந்தோரே - சார்ந்தவர்களே, முத்திமுதற் பயன்பெற்றோர் - மோட்சமுதலிய பிரயோசனத்தைப் பெற்றவர்கள்—எ-று.

இராட்சதி என்கின்ற நாமுதலாக சத்துக்களைப் பூசிக்கின்ற பக்தியைப்பார்க்கின் அன்பாக சுவர்ணத்தைப்போல யார்தான் அன்புவையாதவர்கள் இப்பூமியில். இரட்சிக்கவருகின்ற பூர்ணசந்திரனைப்போல அடுத்தவர்கள் மனதை சத்துக்கள் சுகிக்கச்செய்வார்கள். சாராதவர்களே மிகவும் இழிவுபட்டு மரித்தவராம். சார்ந்தவர்களே மோட்சமுதலிய பிரயோசனத்தைப் பெற்றவர்கள்—எ-ம்.

இ-சு-க-ம். நேரிட்டவர்கள் சற்சனரோ துற்சனரோ எனப் பரிசோதிக்குநிமித்தம் ஆலோசித்ததாம். (23)

## பரிசோதிக்கு நிமித்தம் அதட்டிப் பேசுதல்.

ஆதலினு லிவர்தம்மை யறிஞரோ வறிவிலரோ யார்கொலென்னச், சோதனையாம் வினவுரைகள் சொல்வோமென் றுருமேறுந் துணுக்கென்றஞ்ச, மீதுறநின் ருற்பரித்து வெவ்விடிக்குப் பின்னுலி வீழ்க்குங்கார்போல், ஓதரிய கொடியவன விசும்புக்கு மதியிரவியொப்பீரென்னு.

இ - ள். ஆதலினுல் - ஆகையால், இவர்தம்மை - இவர்களை, அறிஞரோ- ஞானிகளோ, அறிவிலரோ - அஞ்ஞானிகளோ, ஆர்கொலென்ன - யாரோவென்று, சோதனையாம் - ஆராய்ந்தறிகின்ற, வினவுரைகள் - கேள்விகளை, சொல்வோமென்று - கேட்போமென்று (நினைத்து),உருமேறும் - இடிகளும், துணுக்கென்றஞ்ச - திடுக்கென்று பயப்படும்படியாக, மீதுறநின்ருர்ப்பரித்து- ஆகாயத்தினின்ருரவாரித்து, வெவ்விடிக்குப்பின் - கொடிய இடியிடித்த பின்பு, ஆலிவீழ்க்குங்கார்போல் - மழைபொழியு மேகத்தைப்போல, ஓதரிய- சொல்லுதற்கரிய, கொடியவனவிசும்புக்கு - கொடிதாகிய காடென்னு மாகாயத்துக்கு, மதியிரவியொப்பீரென்னு - சந்திரசூரியர்களுக் கொப்பாவீர்களென்று—எ-று.

எ - து. ஆகையால் இவர்களை ஞானிகளோ! அஞ்ஞானிகளோ. யாரோவென்று ஆராய்ந்தறிகின்ற கேள்விகளைக் கேட்போமென்று நினைத்து இடிகளும் திடுக்கென்று பயப்படும்படியாக ஆகாயத்தினின்றும் ஆரவாரித்து கொடிய இடியிடித்தபின்பு மழைபொழியு மேகத்தைப்போல சொல்லுதற்கரிய கொடிதாகிய காடென்னு மாகாயத்துக்கு சந்திரசூரியர்களுக் கொப்பாவீர்களென்று. (24)

## நீங்கள்யாரென்று வினவுதல்.

மீட்டுரைப்பான் மாயையெனும் வெவ்விருட்பா றையின்கீழே மிளிர்ந்துமாயும், ஈட்டமுறு புழுப்போல்வீ ரெனக்கிரையா யிக்கணத்தே யிறக்கவந்தீர், சேட்டமுளார் போலிருந்தீர் தீயவர்போன் றீரெவர்நீர் செப்புமென்னக், கேட்டளவே கொலையாக்கி கேளென்னத் திரல்வேந்தன் கிளத்தலுற்ருன்.

இ - ள். மீட்டுரைப்பான் - திரும்பவுஞ் சொல்லுவான், மாயையெனும்- மாயையென்கின்ற, வெவ்விருட்பாறையின்கீழ் - வெவ்விய இருண்ட கல்லின் கீழ், மிளிர்ந்துமாயும் - விளங்கியழிகின்ற, ஈட்டமுறுபுழுப்போல்வீர்-கூட்ட

மாகிய கிருமிக்கொப்பானவர்களே, எனக்கிரையாய் - எனக்குணவாக, இக்கணத்து - இந்தட்சணத்தில், இறக்கவந்தீர் - மரிக்கவந்தீர்கள், சேட்டமூரார்போலிருந்தீர் - மேலானவர்களைப்போலுமிருக்கின்றீர், தீயவர்போன்றீர் - தீமையையுடையவர்களைப்போலுமிருக்கின்றீர், நீரெவர் - நீங்களார், செப்புமென்ன - சொல்லுமென்று, கேட்டளவே - (கற்கடி) கேட்டமாத்திரத்தில், கொலையாக்கி - (சீவ) இமிசையையுடைய இராட்சதியே, கேளென்ன - கேட்பாயென்று, திறல்வேந்தன் - வலிமையுள்ள அரசன், கிளத்தலுற்றான் - சொல்லத்தொடங்கினான்--எ-று.

எ - து. திரும்பவுஞ் சொல்லுவாள், மாயையென்கின்ற வெவ்விய இருண்ட கல்லின்கீழ் விளங்கி யழிகின்ற கூட்டமாகிய கிருமிக்கொப்பானவர்களே! எனக்குணவாக இந்தட்சணத்தில் மரிக்க வந்தீர்கள், மேலானவர்களைப்போலும் இருக்கின்றீர், தீமையையுடையவர்களைப்போலும் இருக்கின்றீர், நீங்களார்? சொல்லுமென்று கற்கடி கேட்டமாத்திரத்தில் சீவ இமிசையையுடைய இராட்சதியே கேட்பாயென்று வலிமையுள்ள அரசன் சொல்லத்தொடங்கினான்.

## அரசன் அச்சமற்றுரைத்தல்.

எவ்வுழிநின் றனைநீயிங் கிசைத்தவெலா மிளவண்டி னிரைச்சல்
போலச், செவ்விதுகேட் டனமென்ன வரக்கியுநன் றென்றெதிரே
சிரித்தலோடும், வெவ்வியபல் லொளியாலே வெளியாகக் கண்டிறை
யும் வெருவலின்றி, மைவரைபோல் வாய்திறந்து வாளாநீ வருந்த
லெனு மன்னன்சொல்வான்.

இ - ள். எவ்வுழிநின்றனை - எவ்விடத்திலிருக்கின்றாய், நீயிங் கிசைத்தவெலாம் - நீயிவ்விடத்திற்சொல்லிய சகலமும், இளவண்டினிரைச்சல்போல் - குஞ்சு அளியின் சத்தத்தைப்போல, செவ்விது கேட்டனமென்ன - அழகாகக் கேட்டோமென்று (அரசன்சொல்ல), அரக்கியு நன்றென்று - இராட்சதியு நன்றாயிருக்கின்றதென்று, எதிரே சிரித்தலோடும் - எதிரே நகைத்தமாத்திரத்தில், வெவ்விய பல்லொளியால் - கொடிய தந்தப் பிரகாசத்தினால், வெளியாகக்கண்டு - (அவளது வடிவத்தை) பிரத்தியட்சமாகப்பார்த்து, இறையும் - எவ்வளவும், வெருவலின்றி - பயப்படாமல், மைவரைபோல் - மைநாகம்போல, வாய்திறந்து - வாயைத்திறந்து, வாளாநீவருந்தலெனு - வீணாகநீ வருத்தப்படாதேயென்று, மன்னன் சொல்வான் - அரசன் சொல்லுவான்--எ-று.

எ - து. எவ்விடத்திலிருக்கின்றாய் நீயிவ்விடத்திற் சொல்லிய சகலமும் குஞ்சு அளியின் சத்தத்தைப்போல அழகாகக் கேட்டோ

மென்று அரசன் சொல்ல, இராட்சதியு நன்றாயிருக்கின்றது என்று எதிரே நகைத்தமாத்திரத்தில் கொடிய தந்தப் பிரகாசத்தினால் அவளது வடிவத்தைப்பிரத்தியட்சமாகப் பார்த்து எவ்வளவும் பயப்படாமல் மைநாகம்போல வாயைத்திறந்து வீணாக நீவருத்தப்படாதே யென்று அரசன் சொல்லுவான்—எ-ம். (26)

## அரசன் தமது வீரமுரைத்தல்.

---

எய்தாநின் றளபயனுக் கியற்றாதா ரில்லையா மென்றபோது, நொய்தான கருமத்தி னொய்தானோர் விரைந்திடுவர் நொய்ம்மை தோன்ற, மைதான புந்தியினா லாறுதலா லறிவுடையோ ரனைத்துஞ் செய்வர், வெய்தாவுன் போல்வாரைக் கொதுகெனவீ சிடுமெங்கள் வீரக்காற்று.

இ-ள். எய்தாநின்றளபயனுக்கு - அடைகின்ற பிரயோசனத்துக்கு, இயற்றாதார் - முயற்சியாதவர்கள், இல்லையாமென்றபோதும் - இல்லையென்று சொல்லியபோதும், நொய்தான கருமத்தில் - அற்பக்காரியத்தில், நொய்தானோர் - அற்பமானவர்கள், விரைந்திடுவர் - துரிதப்படுவார்கள், நொய்மை தோன்ற - சொச்சமானது விளங்க, ஐதானபுந்தியினால் - நுட்ப அறிவினால், ஆறுதல் - விஸ்ராந்தி (யடைந்த), அறிவுடையோர் - ஞானவான்கள், அனைத்துஞ்செய்வர் - கனமான காரியத்தைச்செய்வார்கள், வெய்தாவுன்போல்வாரை - கொடிதா (யிருக்கின்ற) உன்னையொத்த (அநேகர்) களை, கொதுகென - மசகம்போல, எங்கள்வீரக்காற்று-எமதுவீரக்காற்றானது, வீசிவிடும்-தள்ளிவிடும்-எ-று.

எ-து. அடைகின்ற பிரயோசனத்துக்கு முயற்சியாதவர்கள் இல்லையென்று சொல்லியபோதும் அற்பக் காரியத்தில் அற்பமானவர்கள் துரிதப்படுவார்கள். சொச்சமானது விளங்க நுட்ப அறிவினால் விஸ்ராந்தியடைந்த ஞானவான்கள் கனமான காரியத்தைச் செய்வார்கள். கொடியதாயிருக்கின்ற உன்னையொத்த அநேகர்களை மசகம்போல எமது வீரக்காற்றானது தள்ளிவிடும்—எ-ம். (27)

## அரசன் கற்கடிகருத்தை வினவுதல்.

---

ஆதலால் விகாரவையொழி யுன்கருத்தை யுரையென்க ளாருங்குவந் தோர், காதலா லிரந்தபொருள் கனவிலுநல் குவமென்று கழறலோடும். போதமுங்கல் வியும்வலியும் பொறையுமளவிலரென்றே புந்தி செய்தாள், மேதகமா மவருரையை மிகவிபந்தா ளிழிவிலா மெய்ம்மை கண்டாள்.

இ - ள். ஆதலால் - ஆசையால், விரைவையொழி - (உனது தூராரம்ப) வேகத்தைவிடு, உன்கருத்தையுரை - உனது எண்ணத்தைச்சொல், எங்க ளருகுவந்தோர் - எங்கள் சமீபத்தில்வந்தவர்கள், காதலாலிரந்தபொருள்- ஆசையினலியாசித்த அருத்தங்களை, கனவிலு நல்குவமென்று - சொப்பனத் திலுங் கொடுப்போமென்று, கழறலோடும் - அரசன் சொன்னவுடன், போத மும் - ஞானமும், கல்வியும் - வித்தையும், வலியும் - வல்லமையும், பொறை யும் - சாந்தமு (மாகிய இவைகளில்), அளவிலரென்று - மட்டில்லாதவர்களெ ன்று, புந்திசெய்தான் - அறிந்தான், மேதகமாம் - மேன்மையாகிய, அவ ருரையை - அவ்வரசமந்திரிகள் வசனத்தை, மிகவியந்தான் - மிகவும் அதிசயி த்தான், இழிவிலாமெய்ம்மை கண்டாள் - குறைவற்ற உண்மையைப்பார்த் தான்—எ-று.

எ - து. ஆசையால் உனது தூராரம்ப வேகத்தைவிடு. உனது எண்ணத்தைசசொல். எங்கள் சமீபத்தில் வந்தவர்கள் ஆசையினலி யாசித்த அருத்தங்களைச் சொப்பனத்திலுங் கொடுப்போமென்று அரசன் சொன்னவுடன் ஞானமும், வித்தையும், வல்லமையும், சாந்த மூமாகிய இவைகளில் மட்டில்லாதவர்களென்று அறிந்தாள், மேன் மையாகிய அவ்வரச மந்திரிகள் வசனத்தை மிகவு மதிசயித்தாள், குறைவற்ற உண்மையைப்பார்த்தாள்—எ-ம். (28)

## கற்கடி ஐயம் நீங்க நீங்கள் யாரென வினவுதல்.



வாக்குமுகங் கண்களான் மாறுபடா துயர்ந்தோர்தம் மறுவில் சித்த, மேக்குயரு மிவற்றாலே யுண்ணினைவு மறியலா மேலோர் தாமே, பாக்கியம்போல் வந்தெய்திற் சந்தேகந் தெளியாதார் பதக ராகுந், தாக்குமுரை யாலிவரை யறிதுமெனு யாவர்நீர் சாற்றுமென் றாள்.

இ - ள்: வாக்கு - வசனத்தினாலும், முகம் - வதனத்தினாலும், கண்க ளால் - விழிகளினாலும், மாறுபடாது - வேறுபடாமல், உயர்ந்தோர்தம் மே லானவர்களுடைய, மறுவில்சித்தம் - களங்கமற்றமனமானது, மேக்குயரும் - மிகவுமுயர்ந்திருக்கும், இவற்றால் - இக்குணங்களால், உண்ணினைவுமறியலாம் அபிப்பிராயத்தையுந்தெரியலாம், மேலோர்தாமே - மகான்களே, பாக்கியம் போல் - செல்வம்போல, வந்தெய்தில் - வரில், சந்தேகந்தெளியாதார் - ஐயந் தீராதவர்கள், பதகராகும் - கீழ்மக்களாவர், தாக்குமுரையால் - கடாவும் உரையினால், இவரையறிதுமெனு - இவர்களை யறிவோமென்று (உன்னி), நீர் யாவர் - நீங்களார், சாற்றுமென்றான் - கூறுமெனக் கற்கடிகேட்டாள்—எ-று.

எ - று, வசனத்திலும், வதனத்திலும். விழிகளிலும்வேறுபடாமல் மேலானவர்களுடைய களங்கமற்றமனமானது மிகவுமுயர்ந்திருக்கும் இக்குணங்களால் அபிப்பிராயத்தையுந் தெரியலாம் மகான்களே செல்வம்போலவரில் ஐயந்தீராதவர்கள் கீழ்மக்களாவர். கடாவும் உரையினால் இவர்களை யறிவோம்மென்று உன்னிநீங்களார் கூறுமெனக் கற்கடிகேட்டாள்—எ-ம். (29)

## மந்திரி சொல்லுதல்.

வினையமுற வாக்கியிது விளம்பிடமந் திரிவிளம்பும் வேடர்க்கெல்லாம்
இனையவன்மன் னவனமைச்ச னாகு மிருட்போதி லெங்குநாடி
உனைநிகர்வா ரைச்சோதித் தொறுக்கவுயி ரொடுக்கவுயிர் நிறுத்தவந்
தோம், நினைவிதுவந் ததற்கென்று லிவன்கூற மீண்டந்த நிருதி
கூறும்.

இ - ள். வினையமுற - வினையம்பொருந்த, அரக்கி-கற்கடியானவள், இது விளம்பிட - இதைச்சொல்ல, மந்திரிவிளம்பும் - மந்திரிசொல்லுவான், வேடர்க்கெல்லாம் - வேடர்களுக்கெல்லாம், இனையவன் - இத்தகைமையுள்ளவன், மன்னவன் - அரசன், அமைச்சன் நானு நம் - மந்திரிநான் ஆகும், இருட்போதில் - இராக்காலத்தில் எங்குநாடி - எவ்விடத்தும்பார்த்து, உனைநிகர்வாரை- உனக்கொப்பான துஷ்டர்களை, சோதித்து - ஆராய்ந்து, ஒறுக்க-அலைக்கவும், உயிரொடுக்க - பிராணனை அடக்கவும், உயிர்நிறுத்த (சிஷ்டர்களுடைய) பிராணனை இரட்சிக்கவும், வந்தோம் - வந்திருக்கின்றோம், வந்ததற்கு - இவ்விடம் வந்ததற்கு, நினைவிதென்று - சங்கற்பமிதுவென்று, இவன்கூற - இந்தமந்திரி சொல்ல, மீண்டந்த நிருதி கூறும் - திரும்பவந்த இராட்சதி சொல்லுவாள்.

எ - று. வினையம் பொருந்த கற்கடியானவள் இதைச்சொல்ல மந்திரி சொல்லுவான். வேடர்களுக்கெல்லாம் இத்தகைமை யுள்ளவன். அரசன் மந்திரி நானுநம். இராக்காலத்தில் எவ்விடத்தும் பார்த்து-உனக்கொப்பானதுஷ்டர்களை ஆராய்ந்து அலைக்கவும், பிராணனை அடக்கவும், சிஷ்டர்களுடைய பிராணனை இரட்சிக்கவும்வந்திருக்கின்றோம். இவ்விடம வந்ததற்கு சங்கற்பமிது வென்று இந்தமந்திரிசொல்ல திரும்பவந்த இராட்சதி சொல்லுவாள்—எ - ம். (30)

## கற்கடி மறு நீதி சொல்லுதல்.

தீயவனு மந்திரியா னல்வேந்துந் தீவேந்தாந் தீமையில்லாத்
தூயவனு மந்திரியாற் றீவேந்தும் நல்வேந்தாந் தொடர்ச்சிபோல
ஆயநெறி மன்னவரா லமைச்சருமப் படியாகு மாதலாலே
நேயவிவே கத்தமைச்ச னுண்டாகி லெப்பயனு நிருபர்க் குண்டாம்.

இ - ள். தீயவனுமந்திரியால் - துஷ்டமந்திரியினால், நல்வேந்துந் தீவேந்தாம் - நல்ல அரசனுந்தீய அரசனும், தீமையில்லா - பொல்லாங்கில்லாத, தூயவனுமந்திரியால் - பரிசுத்தமான மந்திரியினால், தீவேந்தும்நல்வேந்தாம் - தீய அரசனும் நல்ல அரசனவன், தொடர்ச்சிபோல - இத்தொடர்பைப்போல, மன்னவரால் - நீதியுள்ள அரசரால், அமைச்சருமப்படியாகும் - மந்திரிகளும் அப்படியேயாவர், ஆதலால் - ஆதலினால், நேயவிவேகத்தமைச்சன் - நல்விவேகமுள்ள மந்திரி, உண்டாகில் - உண்டாயிருக்கின், எப்பயனும் - எந்தப் பிரயோசமும், நிருபர்க் குண்டாம் - அரசர்களுக்குண்டாகும்—எ-று.

எ - து. துஷ்டமந்திரியினால் நல்ல அரசனும் தீய அரசனும். பொல்லாங்கில்லாத பரிசுத்தமான மந்திரியினால் தீய அரசனும் நல்ல அரசனவன். இத்தொடர்பைப்போல நீதியுள்ள அரசரால்மந்திரிகளும் அப்படியேயாவர். ஆதலினால் நல்விவேகமுள்ளமந்திரி உண்டாயிருக்கின் எந்தப் பிரயோசனமும் அரசர்களுக்குண்டாகும்—எ-ம்.

## இராசன் மந்திரி என்றால் ஞானமிருக்க வேண்டும் எனல்.



மன்னவனெப் படியுலகின் மன்னுயிரு மப்படியா மகிமைதானு [கும்
நன்னடுவு நிலைமையுமெய்ஞ் ஞான நூ றெளிந்தவர்க்கே நண்ணு நிற்
அன்னதுகற் றிலரென்னி லரசரமைச் சர்களென்போ ரபத்தராகு,
மின்னகலை யிலதாகி லெனக்கிரையா யிளமைநல மிழந்தீரின்றே.

இ - ள். மன்னவனெப்படி - அரசனெப்படியோ, உலகின்மன்னுயிருமப்படியாம் - சகத்திலுள்ள பிராணிகளும் அப்படியேயாகும், மகிமைதானும் - (பிரபுத்துவ) பெருமையும், நன்னடுவுநிலைமையும் - நல்லசமதிருஷ்டியும், மெய்ஞ்ஞானநூல் - ஞானசாஸ்திரங்களை, தெளிந்தவர்க்கே - ஆராய்ந்தவர்களுக்கே, நண்ணுநிற்கும் - பொருந்தும், அன்னது - அந்த ஞானநூலை, கற்றிலரென்னில் - கல்லாதவர்களென்றால், அரசரமைச்சர்களென்போர் - இராசமந்திரிகள் என்பவர்கள், அபத்தராகும் - பொய்யர் ஆவார்கள், இன்னகலை - இத்தன்

மையான ஞானநூலின் (அப்பியாசம்), இலதாகில் - இல்லையாயின், எனக்கிரையாய் - எனக்கு உணவாக, இளமைநலம் - எவ்வனத்தின் நன்மைகளை, இன்றேயிழந்தீர் - இப்போதே இழந்தீர்கள்—எ-று.

எ - து. அரசன் எப்படியோ சகத்திலுள்ள பிராணிகளும் அப்படியேயாகும். பிரபுத்துவபெருமையும், நல்லசமதிருஷ்டியும், ஞானசாஸ்திரங்களை ஆராய்ந்தவர்களுக்கேபொருந்தும். அந்தஞானநூலைக் கல்லாதவர்களென்றால், இராசமந்திரிகள் என்பவர்கள்பொய்யாராவார்கள். இத்தன்மையான ஞானநூலின் அப்பியாசம் இன்றாயின் எனக்கு உணவாக எவ்வனத்தின் நன்மைகளை இப்போதே யிழந்தீர்கள்.

## விஞப்பஞ்சரத்தில் அடைக்கத்தொடங்கல்.

சிங்கமெனு முங்களையான் செப்புகின்ற விஞக்கூட்டிற் சிறைசெய்கின்றேன், உங்கண்மதி யாற்றிறந்தா லுயிர்வாழ்வீ ரெனவகுத்தென் னுரைசெய்கென்னுத், துங்கநா பதியுரைப்பத் தொல்லரக்கி நல்லமுதத் துளிகள்போல, அங்கவருக் குரைத்தவெலா மிராகவகே ளெனவசிட்ட னருள லுற்றான்.

இ - ள். சிங்கமெனுமுங்களை - கேசரியென்கின்ற உங்களை, யான்செப்புகின்ற விஞக்கூட்டில் - நான்சொல்லுகின்ற கேள்வியாகிய கூண்டில், சிறைசெய்கின்றேன் - காவல்செய்கிறேன், உங்கள் மதியால் - உஙகள் அறிவென்னுந் (திறவுகோலி) னால், திறந்தால்-(அக்கூண்டின்வாயிலை நீங்கள்) திறந்தால், உயிர் வாழ்வீரென-பிராணனோடுஞ் சீவிப்பீர்களென்று (இராட்சதி) சொல்ல, என் - அதென்ன, வகுத்துரை செய்கென்ன - பிரித்துச் சொல்வாயென்று, துங்கநரபதியுரைப்ப - பரிசுத்தமுள்ள அரசன்சொலல, தொல்லரக்கி-பழமையானஇராட்சதி, நல்லமுதத்துளிகள்போல-நல்ல அமுதவருஷங்களைப்போல அவருக்குரைத்தவெலாம் - அவ் விராசமந்திரிகளுககுக் கூறியவாக்கியங்கள் அனைத்தையும், இராகவகேளென - இராமாநீகேட்பாயென்று, வசிட்டனருள லுற்றான் - வசிட்டமுனி யனுக்கிரகிக்கத் தொடங்கினார்—எ-று.

எ - து. கேசரி யென்கின்ற உங்களை நான் சொல்லுகின்றகேள்வியாகிய கூண்டில் காவல்செய்கிறேன், உஙகள் அறிவென்னுந்திறவுகோலினால் அக்கூண்டின் வாயிலை நீங்கள் திறந்தால் பிராணனோடுஞ் சீவிப்பீர்ளென்று இராட்சதி சொல்ல அதென்ன பிரித்துச்சொல்வாயென்று பரிசுத்தமுள்ள அரசன் சொல்ல பழமையான இராட்சதி நல்ல அமுத வருஷங்களைப்போல அவ விராச மந்திரிகளுக்குக்கூறிய

வாக்கியங்கள் அனைத்தையும் இராமா நீகேட்பாயென்றுவசிட்டமுனி அனுக்கிரகிக்கத்தொடங்கினார் - எ-ம். (33)

## ஆத்மசொரூபத்தை வினவுதல்.

அண்டநிரை பலகோடி பலவாயு மொன்றுமெவ் வணுவினுள்ளே விண்டகடற் குமிழிகள்போல் விரிந்தொடுங்கும் விண்ணுயும் விண்ண ன்றேது, தண்டறவுண் டாயிருந்து மிலாதவெதேது சரித்தேயும் சரியா கண்டிடநில் லாதாயு நிற்பதெது சித்தாயுங் கல்லாமேது. [தேது

இ - ள். விண்டகடல் - பரவியசமுத்திரத்தில், குமிழிகள்போல்-புற்புத த்தைப்போல, ஒன்றுமெவ்வணுவினுள்ளே ஒன்றான எந்தஅணுவுக்குள், பல கோடி - அளவிறந்த, அண்டநிரை - அண்டபங்திகள், பலவாயும் - நாநாவாகி யும், விரிந்தொடுங்கும் - உற்பத்திஸ்திதிலயமாம், விண்ணுயும் - ஆகாயமாகி யும், விண்ணன்றேது-ஆகாயமல்லாததெது, தண்டறவுண்டாயிருந்தும், வரை யறவுள்ளதாயிருந்தும், இலாதவெதது - இல்லாதது எது, சரித்தேயும் சஞ்சரித் தும், சரியாதேது - சஞ்சரியாதெது, கண்டிட நில்லாதாயும் - காணநிற்காத தாயும், நிற்பதெது - நிற்கின்றதெது, சித்தாயும்-சித்தாகியும், கல்லாமேது-கல் லானதெது—எ-று.

எ - து. பரவிய சமுத்திரத்தில் புற்புதத்தைப்போல ஒன்றான எந்த அணுவுக்குள் அளவிறந்த அண்டபங்திகள் நாநாவாகியும், உற் பத்திஸ்திதிலயமாம். ஆகாயமாகியும் ஆகாயமல்லாததெது? வரையற வுள்ளதாயிருந்தும் இல்லாததுஎது? சஞ்சரித்தும் சஞ்சரியாததுஎது? காணநிற்காததாயும் நிற்கின்றது எது? சித்தாகியும் கல்லானதுஎது.

இதுவுமது.

வானிடையோ வியமெழுது கின்றதெது வித்திடையின் மரங்கள் போல, ஈனமிலா வெவ்வணுவிலுகமலா மிருக்கின்ற தியாதினின் றும், ஆனகடற் றிரைநுரைபோ லொருபொருளும் பிரிவாகா தமை ந்தநீரும், ஈனமறு நெழ்கிச்சியும்போ லேதோன்றி யிருமையுமெங் கொருமையாகும்.

இ - ள். வானிடை - ஆகாயத்தில், ஓவியமெழுதுகின்றதெது - சித் திரமெழுதுகின்றது எது, வித்திடையின் - விதையினிடத்தில், மரங்கள் போல - விருட்சங்களைப்போல, ஈனமிலா - குறைவில்லாத, எவ்வணுவில் -

எந்த அணுவில், உலகமெல்லாமிருக்கின்றது - சகங்களியாவுமிருக்கின்றது, இயாதினின்றும் - எதினிடத்திருந்தும், ஆன - விரிவான, கடல் - சமுத்திரத்தில் (உண்டான), திரைநுரைபோல் - அலைநுரைகளைப்போல, ஒருபொருளும் - ஒருவஸ்துவும், பிரிவாகாது - வேறுபடாமல், அமைந்தநீரும் - நிறைந்த சலத்தையும், ஈனமறு நெகிழ்ச்சியும்போல் - குறைவற்ற நெகிழ்ச்சியையும் போல, தோன்றி - உண்டாய், இருமையும் - இரண்டும், எங்கொருமையாகும் - எங்கு ஒன்றாயிருக்கும்-எ-று.

எ - து. ஆகாயத்தில் சித்திரமெழுதுகின்றதெது? விதையினிடத்தில் விருட்சங்களைப்போல குறைவில்லாத எந்த அணுவில் சகங்களியாவு மிருக்கின்றது? எதினிடத் திருந்தும் விரிவான சமுத்திரத்திலுண்டான அலை நுரைகளைப்போல ஒருவஸ்துவும் வேறுபடாமல் நிறைந்த சலத்தையும் குறைவற்ற நெகிழ்ச்சியையும்போல உண்டாய் இரண்டும் எங்கு ஒன்றாயிருக்கும—எ—ம்.

(இ-உ-க-ம்.) பிரமசொரூபத்தைச் சகசத்தில் நவநவமாய் அனுபவிக்கும் பொருட்டு அதைப் பதினைந்து சங்கையாகப்பகுத்து வினாவினதாம். (35)

## அனுபவ ஞப்தியுண்டாகும்படிக்கு அச்சமுரைத்தல்.

இநதவினா வின்பயனை நும்முணர்வா லேதோன்ற வியம்புவீரேற்
கந்தமுற வென்குழன்மே லெப்போது மிருக்கின்ற கமழ்போதாவீர்
மந்தமுறு புந்தியினால் வகுத்துரைக்க மாட்டாது மயங்குவீரேல்
வெந்தவயிற் றெரிகனற்கு விறகாவீ ரென்றரக்கி விளம்பலோடும்.

இ - ள். இநதவினாவின்பயனை - இக்கேள்வியின் பிரயோசனத்தை, நும்முணர்வால் - உங்கள் அறிவினால், தோன்றவியம்புவீரேல் தெரியச்சொல்வீர்களாயின். கந்தமுற - வாசனைபொருந்த, என்குழன்மேல் - எனது கூந்தலின் மேல், எப்போது மிருக்கின்ற - எக்காலத்திலும் இருக்கின்ற, கமழ்போதாவீர் - மணக்கின்ற புஷ்பமாவீர்கள், மந்தமுறு - அற்பமாகிய, புந்தியினால் - அறிவினால், வகுத்துரைக்கமாட்டாது - பிரித்துச்சொல்லக்கூடாமல், மயங்குவீரேல் - கலங்குவீர்களாயின், வெந்தவயிற்றெரிகனற்கு - எரிந்த உதராக்கினிக்கு, விறகாவீரென்று - இந்தனமாவீர்களென்று, அரக்கி - இராட்சசி, விளம்பலோடும் - சொல்லவும்-எ-று.

எ — து. இக்கேள்வியின் பிரயோசனத்தை உங்கள் அறிவினால் தெரியச் சொல்வீர்களாயின் வாசனைபொருந்த எனது கூந்தலின் மேல் எக்காலத்திலும் இருக்கின்ற மணக்கின்ற புஷ்பமாவீர்கள். அற்பமாகிய அறிவினால் பிரித்துச் சொல்லக்கூடாமல் கலங்குவீர்க

ளாயின் எரிந்த உதராக்கினிக்கு இந்தனமாவீர்களென்று இராட்சதி சொல்லவும்—எ-ம்.

இ-ம். இந்தப் பதினைந்து பிரிவையும் ஒருமைப்படுத்த வேண்டும் என்பதாம். (36)

## மந்திரி முதற்சங்கைக்கும் பதின்மூன்றாஞ் சங்கைக்கும் உத்தரங்கூறல்.

மந்திரிமுன் னுரைசெய்வான் மாசிலாப் பரம்பொருளை வகுத்துச்
சொன்னாய், சிந்தைமுத லாம்பொறிக ளாறாலு மெட்டரிதாந் திறத்
தினாலே, அந்தமில்சின் மாத்திரமாய் விண்ணிலுநொய் தாம்பரம
வணுவேயாகு, முந்துபிர மாண்டமெலா மவ்வணுவி லேதோன்றி
முதிர்ந்துமாயும்.

இ - ள். மந்திரி முன்னுரைசெய்வான்-அமைச்சன்முன்பு சொல்லுவான், மாசிலாப்பரம்பொருளை - களங்கமற்ற பிரமவஸ்துவை, வகுத்துச்சொன்னாய்-பகுத்துக்கூறினாய், (அஃதியாதெனின்) சிந்தைமுதலாம் - மனமுதலாகிய, பொறிகளாறாலும்-அறிந்து இந்திரியங்களினாலும், எட்டரிதாந் திறத்தினால் - எட்டுதற்கரிய தன்மையினால், அந்தமில் - முடிவில்லாத, சின்மாத்திரமால் - ஞானமாத்திரமாகியும், விண்ணிலுநொய்தாம் - ஆகாயத்திலும் நுட்பமாகியும், பரமவணுவேயாகும் - பரமாணுவுக்கு ஒப்பாகியுமிருக்கும், அவ்வணுவில் - அந்த அணுவுக்குள், முந்துபிரமாண்டமெலாம் - முந்தின பிரமாண்டங்களனைத்தும், தோன்றி - உண்டாகி, முதிர்ந்து - வளர்ந்து, மாயும் - நசிக்கும் எ-று.

எ - து. அமைச்சன் முன்புசொல்லுவான், களங்கமற்ற பிரமவஸ்துவை பகுத்துக்கூறினாய். அஃதியாதெனில் மனமுதலாகிய ஆறு இந்திரியங்களினாலும்எட்டுதற்கரியதன்மையினால்முடிவில்லாத ஞானமாத்திரமாகியும், ஆகாயத்திலும் நுட்பமாகியும், பரமாணுவுக்கு ஒப்பாகியுமிருக்கும், அந்த அணுவுக்குள் முந்தின பிரமாண்டங்களனைத்தும் உண்டாகி வளர்ந்து நசிக்கும்—எ-ம்.

இ-ம். அணுவுக்கணுவாய் ஏகமாயிருக்கின்ற பிரமமே அண்டகோடிகளாகத் தோற்றுமென்பதாம். (37)

## ஆறாசங்கைக்கு உத்தரங்கூறல்.

தடமான வதன்புறமில் லாமையினால் விண்ணாகுந் தனிபோதத்தால்
இடமான விண்ணன்றா மின்னதெனத் தெரிவரிய வியல்பினாலே

திடமாக விலதாகுஞ் சற்பாவத் தாலுளதாய்ச் செப்பலாகும்
புடமாக விளங்குதலாற் சித்தாகு மறிவிலாப் பொருட்டாற்கல்லாம்.

இ-ள். (2) தடமானவதன் - விலாசமுள்ள அப்பிரமத்துக்கு, புறமில்லாமையினால் - புறம்பில்லாதபடியால், விண்ணாகும் - ஆகாயமாம், (3) தனிபோதத்தால் - கேவல ஞானமாக இருத்தலின், இடமான விண்ணன்றும் - விரிந்த பூதாகாயமன்றும், (5) இன்னதெனத்தெரிவரிய இப்படியென்று (சுட்டி) அறிதற்கரிய, இயல்பினால் - தன்மையினால், திடமாகவிலதாகும்-திரமாக இல்லாததாம், (4) சற்பாவத்தால் - சத்தாயிருத்தலால், உளதாய்ச்செப்பலாகும் - உள்ளதாகச் சொல்லப்படும், (10) புடமாக விளங்குதலால் - சொச்சமாக பிரகாசித்தலினால், சித்தாகும் - ஞானமாகும், (11) அறிவிலாப்பொருட்டால் - அறியுந்தன்மையில்லாத நிமித்தத்தினால், கல்லாம் (சடமாகிய) கல்லைப் (போலு) மாம்-எ-று.

எ—து. விலாசமுள்ள அப்பிரமத்துக்கு புறம்பில்லாதபடியால் ஆகாயமாம். கேவல ஞானமாக இருத்தலின் விரிந்த பூதாகாயமன்றும் இப்படியென்று சுட்டியறிதற்கரிய தன்மையினால் திரமாக இல்லாததாம். சத்தாயிருத்தலால் உள்ளதாகச் சொல்லப்படும். சொச்சமாகப் ரகாசித்தலினால் ஞானமாகும். அறியுந்தன்மையில்லாத நிமித்தத்தினால் சடமாகிய கல்லைப்போலுமாம்—எ-ம்.

இ-ம். இவ்வாறு உத்தரத்தினாலும் பிரமசொரூபமெல்லாம் ஆயும் அல்லவுமாயுமிருக்கின்ற தன்மையை விளக்கினதாம். (38)

## பின் ஐந்து சங்கைக்கு உத்தரங்கூறல்.

வேறு.

தானாகு மிகநொய்தா மாகாயத்திற்
  சகத்திரளாஞ் சித்திரத்தைத் தானேகோட்டும்
ஆனாத வுலகமெல்லாந் தனதுசோதி
  யாதலினா லதற்குவே றயலொன்றில்லை
நீநானுஞ் சகபேத வடிவந்தானும்
  நிற்கின்ற வதன்வடிவாய் நீங்காதென்றும்
நாநாவாம் பொருட்புணர்வா னடந்ததாகும்
  நடக்கவிட மிலாமையினா னடவாதாகும்.

இ-ள். (12) மிகநொய்தாம்-மிகவுஞ்சொச்சமாகியும், தானாகும் - ஞானமாகியும் (இருக்கின்ற) ஆகாயத்தில் - (சிதா) காயத்தில், சகத்திரளாம் - உலகப்திரளாகிய, சித்திரத்தைத் தானேகோட்டும் - சித்திரத்தைத்தானேயெழுதும்,

(14) ஆனத - நீங்காத, உலகமெலாம் - சகங்களனைத்தும், தனதுசோதியாத லினல் - தனது பிரகாசமானபடியினால், அதற்கு - அவ்வஸ்துவுக்கு, வேறய லொன்றில்லை அன்னியமொன்றில்லை, (15) நீநானும் - நீநானென்கின்ற, சக பேதவடிவந்தானும் - உலகவேற்றுமையுருவங்களும், நிற்கின்ற - இருக்கின்ற, அதன்வடிவாய் - அச்சத்தினுருவமாய், என்றும் - எப்போதும், நீங்காது-பிரி யாதாம், (6) நாநாவாம் பொருட்புணர்வால் - நாநாவாகிய வஸ்துக்களின் சம் பந்தத்தினல், நடந்ததாகும்-சஞ்சரித்ததாம், (7) நடக்கவிடமிலாமையினல் - சஞ்சரிக்க வேறுஸ்தான மின்மையின், நடவாதாகும்-சஞ்சரியாததாம்-எ-று.

எ – து. மிகவுஞ் சொச்சமாகியும், தானுகியுமிருக்கின்ற சிதாகா யத்தில் உலகபங்திகளாகிய சித்திரத்தைத்தானே எழுதும் நீங்காத சகங்களனைத்தும் தனது பிரகாசமானபடியினல் அவ்வஸ்துவுக்கு அன்னியமொன்றில்லை. நீநானென்கின்ற உலகவேற்றுமையுருவங்க ளும் இருக்கின்ற அச் சத்தினுருவமாய் எப்போதும் பிரியாதாம், நாநாவாகிய வஸ்துக்களின் சம்பந்தத்தினல் சஞ்சரித்ததாம் சஞ்ச ரிக்க வேறுஸ்தான மின்மையின் சஞ்சரியாததாம்—எ - து.

இ-ம். இவ் வைந்து உத்தரவினனும் பிரமஞ்சகத்தைத் தானாக உண்டாக் கித் தானாகவிளக்கித் தான் அதுவென்னுமிருமையின்றித் தன்மயமாய் விளங் குகின்ற அத்துவிதத்தை விளக்கினதாம். (39)

## பின்பு இரண்டு சங்கைக்கு உத்தரங்கூற மேல் அரசன் உத்தரம்.

அடைவதற்கொன் றிலாமையினு லில்லையாகு
மநவரதஞ் சத்தையிலுண் டாகுமென்று
புடைபெயர்நன் மதியமைச்சன் புகலக்கேட்டுப்
போதவியந் ததற்பின்பு பூபனேயுன்
னுடையவுணர் வுரையென்ன வவனுஞ்சொல்வா
னுலகத்தி லுறுதியிலா வுறுதிதானே
தடையறுசிற் பரம்பொருளி னுறுதியாகுந்
தற்பரத்தி னியல்பின்னஞ் சாற்றக்கேளாய்.

இ - ள். (8) அடைவதற்கு - (தான்) பொருந்துவதற்கு, ஒன்றிலா மையினுல் - வேறோரிடமில்லாதபடியால், இல்லையாகும் - நிற்கவில்லையாம், (9) அநவரதம் - சதாகாலமும், சத்தையில் - (சகல பொருள்களிடத்துஞ்) சத்தாமாத்திரமா யிருக்கின்றதினல், உண்டாகுமென்று - நிற்கின்றதெ ன்று, புடைபெயர் - அரசனது அருகிலுறையும், நன்மதியமைச்சன் - நல்லறி

வுள்ள மந்திரி. புகல - சொல்ல, கேட்டு - (கற்கடியானவன்) கேட்டு, போத வியந்து - மிகவும் அதிசயித்து, அதன்பின்பு - அதற்குப்பின், பூபனே - இராசாவே, உன்னுடைய வுணர்வு - உனதறிவை, உரையென்ன - சொல்லென்று கேட்க, அவனுஞ்சொல்வான் - அவவரசனுங்கூறுவான், உலகு - சகமானது, இல் - இன் (றென்கின்ற), உறுதிதானே - உறுதியே, தடையறுசிற்பரம்பொருள் - அகண்டாகாரவஸ்து (உண்டென்னும்), உறுதியாகும் - உறுதியாம், தற்பரத்தினியல்பு - பிரமத்தின்றன்மையை, இன்னஞ்சாற்றக்கேளாய் - மேலுஞ் சொல்லக்கேட்பாய்—எ-று.

எ - து. தான் பொருந்துவதற்கு வேறு ஓரிட மில்லாதபடியால் நிற்கவில்லையாம். சதாகாலமும் சகலபொருள்களிடத்துஞ் சத்தாமாத்திரமா யிருக்கின்றதினால் நிற்கின்றதென்று அரசனது அருகிலுறையும் நல்லறிவுள்ள மந்திரி சொல்ல, கற்கடியானவள் கேட்டு மிகவுமதிசயித்து அதற்குப்பின் இராசாவே உனதறிவை சொல்லென்றுகேட்க, அவ்வரசனுங் கூறுவான் சகமானது இன்றென்கின்ற உறுதியே அகண்டாகார வஸ்துவுண்டென்னும் உறுதியாம் பிரமத்தின் நன்மையை மேலுஞ் சொல்லக்கேட்பாய்—எ-ம்.

இ-ம். இவ்விரண்டு சங்கையின் உத்தரத்தாற் பிரமஞ் சத்தாயும் அசத்தாயு மிருக்கின்ற பூரணசொரூபத்தை விளக்கிப் பதினைந்து சங்கைக்கும் ஒருமையாகப் பதினொன்று உத்தரத்திற் சொல்ல, அஃதன்றி அரசன் ஒருத்தரத்திற் பிரமநிச்சயத்தை விளக்கினதென்பதாம். (10)

## பின்பு ஆறு உத்தரங்கூறல்.

கருத்ததனிற் சங்கற்ப விகற்பமெல்லாங்
  கைவிடுதல் கைக்கொள்ளப் படுவதாகுந்
திருத்தமுறுந் தன்விரிவுங் குவிவுதானுஞ்
  சிருட்டியுங்கற் பமுமாகுந் திரள்வேதாந்தத்
தருத்தமுறு வாக்கியத்தி னிட்டையாகு
  மவ்வேத வாக்கியத்துக் கயனுமாகும்
உருத்திகழு முள்ளதில திரண்டினுக்கு
  முள்ளாகு மவையிரண்டி னுருவமாகும்.

இ - ள். கருத்ததினுல் - மனதினால், சங்கற்பவிகற்பமெல்லாம் சங்கற்ப விகற்பங்கள் அனைத்தையும், கைவிடுதல் - கைவிடுவதே, கைக்கொள்ளப்படுவதாகும் - (பிரமத்தை) கைவசப்படுத்துவதாம், திருத்தமுறும்-திருத்தமாகிய, தன்விரிவுங்குவிவுதானும் தனது சங்கற்பம் உதித்தொடுங்குதலே, சிருட்டியுங் கற்பமுமாகும் - சகமுற்பத்திலயமாம், திரள்வேதாந்தத்து - ஒன்றாகிய

வேதாந்தங்களினது, அருத்தமுறு - சர்வார்த்தங்கள் பொருந்திய, வாக்கியத்தினிட்டையாகும் - மகாவாக்கியத்தினிடமாம், அவ்வேதவாக்கியத்துக்கு அச்சுருதிவாக்கியத்துக்கு (அந்தரங்கமான அனுபூதியாகையால்), அயலுமாகும் - புறம்புமாம், உருதிகழும் - வடிவமாக விளங்குகின்ற, உள்ளதிலதிரண்டினுக்கும் - சத்து அசத்து இரண்டுக்கும், உள்வாகும் - மத்தியுமாம், அவையிரண்டினுருவுமாகும் - அந்த இரண்டினது சொரூபமுமாம்—எ று.

எ - து. மனதினால் சங்கற்பவிகற்பங்கள் அனைத்தையும் கைவிடுவதே பிரமத்தைக் கைவசப்படுத்துவதாம. திருத்தமாகிய தனது சங்கற்பமுதித்தொடுங்குதலே சகம் உற்பத்திலயமாம். ஒன்றாகியவேதாந்தங்களினது சர்வார்த்தங்கள் பொருந்திய மகாவாக்கியத்தினிடமாம். அச்சுருதிவாக்கியத்துக்கு அந்தரங்கமான அனுபூதியாகையால் புறம்புமாம. வடிவமாக விளங்குகின்ற சத்து அசத்து இரண்டுக்கும் மத்தியுமாம். அந்த இரண்டினது சொரூபமாம்—எ-ம. (41)

பின்பு இரண்டு உத்தரங்கூறல்.

---

சராசரமா முலகனைத்து மனரூபத்தாற்
 றான்செய்யும் விளையாட்டாஞ சகமாய்நின்றும்
புராதனமா மொருமையினிற் பிரியதாகும்
 பூரணசின் மாத்திரமாம பொருளே சொன்னாய்
நிராசையுளத் தவரறியும் பரமீதெனறு
 நிருபனுரைத் திட நிருதி நெஞ்சுட்கொண்டு
விராவமுத மழைசொரியக் குளிர்ந்தவர்போல்
 மிகக்குளிர்ந்தாள் சாந்தமுற விளம்பலுற்றாள்.

இ - ள். சராசரமாம் - தாபரசங்கமான, உலகனைத்தும் - சகங்களெல்லாம், மனரூபத்தால் - மனோசங்கற்பத்தினால், தான்செய்யும் - தானியற்றும், விளையாட்டாம் - லீலையாம், சகமாய்நின்றும் - உலகமாயிருந்தும், புராதனமாம் - பழமையான, ஒருமையினில் - ஏகதத்துவத்தில், பிரியாதாகும் - பிரிவற்றதாயிருக்கின்ற, பூரணசின்மாத்திரமாம் பொருளேசொன்னாய் - பரிபூரண ஞானமாத்திரமாய் விளங்குகின்ற பிரம வஸ்துவையே யுரைத்தாய், நிராசையுளத்தவர் - விராகமனமுடையவர்கள, அறியும்பரமீதென்று - உணர்கின்ற பிரம சொரூபமே யிதுவென்று, நிருபனுரைத்திட - அரசன் சொல்ல, நிருதி - அரக்கியானவள், நெஞ்சுட்கொண்டு - மனதிற்கிரகித்து, விராவமுதமழைசொரிய - கலந்த அமுதமழையைவருஷிக்க, குளிர்ந்தவர்போல (சகலமும்) குளிர்ச்சியடைந்த தன்மையைப்போல, மிகக்குளிர்ந்தாள் - மிகவுமகிழ்ந்தாள், சாந்தமுற - உபசாந்தமடைய, விளம்பலுற்றாள் - சொல்லத்தொடங்கினாள்—எ-று.

எ - து. தாபரசங்கமான சகங்களெல்லாம் மனோசங்கற்பத்தினால் தானியற்றும் லீலையாம். உலகமாயிருந்தும் பழமையான ஏகத்துவத்தில் பிரிவற்றதாயிருக்கின்ற பரிபூரணஞானமாத்திரமாய் விளங்குகின்ற பிரமவஸ்துவையே யுரைத்தாய். விராகமனதையுடையவர்கள் உணர்கின்ற பிரமசொரூபமே இதுவென்று அரசன் சொல்ல அரக்கியானவள் மனதிற் கிரகித்து கலந்த அமுதமழையை வருஷிக்க, சகலமும் குளிர்ச்சியடைந்த தன்மையைப்போல மிகவுமகிழ்ந்தாள். உபசாந்தமடைய சொல்லத்தொடங்கினாள்—எ-ம்

(இ-உ-க-ம்.) இவ்வெட்டு உத்தரத்தால் ஆத்மலீலாவுல்லாச விலாசங்களை விளக்கி அக் கற்கடி பதினைந்து சங்கைக்கு இவ்வொன்பது உத்தரத்தால் ஒருமைப்படுத்திச் சொல்லியதாம். (42)

## சத்துக்கள் தரிசனத்தைப் புகழ்ந்து கைம்மாறு வினவுதல்.

அற்புதமா யமுதமா யறிவேயாகி
யத்தமன முதயமிலா வருக்கன்போலாய்ப்
பொற்புமிகும் புந்தியுள வும்மைப்போல்வார்
பொன்னடியை முடியாகப் புனைந்தாரன்றோ
தற்பரமா முலகாளும் வேந்தராவோர்
தமையுணர்ந்தோ ரைச்சேர்ந்தாற் றளர்வுண்டாமோ
நற்பயன்போல் வருமுமக்கிங் கரிதின்றேனு
நான்செய்யுங் கைம்மாறு நவிலுமென்றாள்.

இ - ள்: அற்புதமாய் - அதிசயமாகியும், அமுதமாய் - கெடாததாகியும், அறிவேயாகி - சின்மாத்திரமேயாகியும், உதயம் - உதயமும், அத்தமனம் - அஸ்தமனமும், இலா - இல்லாத, அருக்கன்போலாய் - ஞானசூரியனுக்கொப்பாகிய (மிருக்கின்ற), பொற்புமிகும்-அழகுமிகுந்த, புந்தியுளவும்மைப்போல்வார் - அறிவையுடைய உங்களுக்கொப்பான சத்துக்களுடைய, பொன்னடியை-அழகியபாதங்களை, முடியாக-கிரீடமாக, புனைந்தாரன்றோ - (சகலரும்) தரித்தார்களல்லவா. தற்பரமாமுலகாளும் - முத்தியுலகத்தையாளாநின்ற, வேந்தராவோர் - அரசர்களாகிய, தமையுணர்ந்தோரை-ஆத்மஞானிகளை, சேர்ந்தால் - கூடினால், தளர்வுண்டாமோ - சோர்வுண்டாகுமோ, நற்பயன்போல் - ஆத்மலாபத்தைப்போல, வருமுமக்கு-வாராநின்ற உங்களுக்கு, இங்கரிதின்றேனும் - இவ்விடத்தில் எல்லாங் கிடைத்திருந்தாலும், நான்செய்யுங் கைமாறு - யானியற்றுமுபகாரத்தை, நவிலுமென்றாள் - (இன்னதென்று) சொல்லுமென்று கேட்டாள்-எ-று.

எ - து. அதிசயமாகியும், கெடாததாகியும், சின்மாத்திரமேயாகியும், உதயமும், அஸ்தமனமும், இல்லாத ஞானசூரியனுக்கு ஒப்பாகியு மிருக்கின்ற அழகுமிகுந்த அறிவையுடைய உங்களுக்கு ஒப்பான சத்துக்களுடைய அழகியபாதங்களைக் கிரீடமாகச் சகலருந்தரித்தார்களல்லவா? முத்தியுலகத்தை யாளாநின்ற அரசர்களாகிய ஆத்மஞானிகளைக்கூடினால் சோர்வுண்டாகுமோ? ஆத்மலாபத்தைப்போல வாராநின்ற உங்களுக்கு இவ்விடத்திலெல்லாங் கிடைத்திருந்தாலும் யானியற்றும் உபகாரத்தை இன்னதென்றுசொல்லுமென்றுகேட்டாள் எ-ம். (43)

சீவகாருண்யமே கைம்மாறு எனக்கூறல்.

சிலையாக்கர் குலமென்னு மெட்டிக்காட்டிற்
செறிகனித்தே மாவனையாய் சகத்திலொன்றுங்
கொலைபுரியா தொழியெனறு வேந்தன்கூறக்
கொலையொழிந்தே னென்றரக்கி கூறலோடுந்
தொலைவருமு னுணவாநீ செய்யுமாறென
சொல்லெனமன் னவன்கேட்பத் தொல்லைநாளில
அலைவில்சமா தியிலிருந்து பசியைவென்றே
னவ்வகையே யின்றுமிருந் தாற்றலுற்றேன்.

இ - ள். சிலையரக்கர் குலமென்னும - தனுசையுடைய இராட்சதவமிசமென்கிற, எட்டிககாட்டில் - எட்டிவனத்தில், செறி - நெருங்கிய, தேமாங்கனி - தீமாங்கனிக்கு, அனையாய் - ஒப்பானவளே, சகத்திலொன்றும் - உலகத்தின்கண் ஓர் (உயிரையும்), கொலைபுரியாது - கொல்லாமல், ஒழியென்று - இருப்பாயென்று வேந்தன்கூற - அரசன்சொல்ல, கொலை - (அப்படியே) கொலைசெய்வதை, ஒழிந்தேனென்று - விட்டேனென்று, அரக்கி - இராட்சதி, கூறலோடும் - சொல்லவும், தொலைவரும்-அளவற்ற, ஊனுணவாநீ-மாமிசாகாரமுள்ளவளாகிய நீ, செய்யுமாறென் - (பசிக்குச்) செய்யுந் தன்மையென்ன, சொல்லென - கூறென்று. மன்னவன் கேட்ப - அரசன்கேட்க, தொல்லைநாளில் - முன்னாளில், அலைவில்சமாதியிலிருந்து - நிர்விகற்பசமாதியிலிருந்து, பசியைவென்றேன் - எனது உதராக்கினியைக்கெடுத்தேன், அவ்வகையே - அவ்வண்ணமே, இன்றும் - இப்பொழுதும், இருந்தாற்றலுற்றேன் - (சமாதியிலிருந்து) தணிப்பேன்-எ-று.

எ - து. தனுசையுடைய இராட்சத வமிசமென்கிற எட்டிவனத்தில் நெருங்கிய தீமாங்கனிக்கு ஒப்பானவளே, உலகத்தின்கண் ஓர் உயிரையும் கொல்லாமல் இருப்பாயென்று அரசன் சொல்ல அப்படியே கொலைசெய்வதை விட்டேனென்று இராட்சதி

சொல்லவும், அளவற்ற மாமிசாகார முள்ளவளாகிய நீபசிக்குச்செய் யுந்தன்மை யென்ன கூறென்று அரசன்கேட்க முன்னாளில்நிர்விகற்ப சமாதியிலிருந்து எனது உதராக்கினியைக்கெடுத்தேன். அவ்வண்ணமே இப்பொழுதும் சமாதியிலிருந்து தணிப்பேன்—எ-ம். (44)

## அமுததாரணையே புசிப்பாமெனல்.



தெள்ளமுத தாரணையால் வேண்டுங்காலந்
தேகமுட னிருந்தப்பாற் றேகந்தீர்வேன்
உள்ளநிறை யுணர்வுடையே னொன்றுங்கொல்லே
னுண்மையென வுரைத்தேக வுன்னுவானைக்
கொள்ளரிய நட்பெளிதிற் கொண்டேம்நீயெங்
குலமகளா யெம்பதிக்குக் கூடவேகில்
கள்ளருட லிரைதருது முடல்போமட்டுங்
கருதுமுதல் வாதனைகள் கழலாக்கண்டாய்.

இ-ள். தெள் - தெளிவாகிய, அமுத தாரணையால் - அமுத தாரணையினால், வேண்டுங்காலம் - வேண்டியகாலமட்டும், தேகமுடனிருந்து - சீவன் முத்தியிலிருந்து, அப்பால் - அதற்குப்பின், தேகந்தீர்வேன் - விதேகமுத்தி யடைவேன், உள்ளம் - அகத்தில், நிறையுணர்வுடையேன் - பூரணஞானத்தை யுடையநான், ஒன்றுங்கொல்லேன்-ஓர் உயிரையும்வதையேன், உண்மையென உரைத்து - இது சத்தியமென்றுசொல்லி, ஏகவுன்னுவானை - போக நினைப்பவனை, கொள்ளரியநட்பு - பெறுதற்கரிய இஷ்டத்தை, எளிதிற்கொண்டேம்- எளிதாகப்பெற்றோம், நீ யெங்குலமகளாய் - நீ எங்கள் குலப்பெண்ணாக, எம்பதிக்கு - எமதரண்மனைக்கு, கூடவேகில் - கூடவந்தால், கள்ளருடலிரைதருதும் - கொலைசெய்யுங் கள்வருடைய சரீரத்தை (யுணவாகக்) கொடுப்போம், உடல்போமட்டும் - (இத்) தேக நீங்குமளவும், கருதுமுதல் வாதனைகள்-நினைப்பு முதலாகிய வாதனைகள், கழலாக்கண்டாய் - நீங்காது--எ-று.

எ-து. தெளிவாகிய அமுத தாரணையினால் வேண்டிய கால மட்டும் சீவன் முத்தியிலிருந்து அதற்குப்பின் விதேகமுத்தி யடைவேன் அகத்தில் பூரணஞானத்தை யுடைய நான் ஒருயிரையும்வதையேன். இது சத்தியமென்றுசொல்லிப் போகநினைப்பவனைப்பெறுதற்கரிய இஷ்டத்தை எளிதாகப்பெற்றோம். நீ எங்கள் குலப்பெண்ணாக எமதரண்மனைக்குக் கூடவந்தால் கொலைசெய்யுங் கள்வருடைய சரீரத்தை யுணவாகக் கொடுப்போம். இத்தேக நீங்குமளவும் நினைப்பு முதலாகிய வாதனைகள் நீங்காது—எ-ம். (45)

## மகான்களுக்கு அன்புசெய்தல்.

ஆதலினாற் பதகருட லிரையைக் கைக்கொண்
டரும்பசிபோய்ச் சமாதிதனை யடையிவ்வாறு
காதலுடன் பலகாலுஞ் செய்தியென்று
காவலன்கூ றவுமரக்கி களிகூர்ந்தேகப்
போதகமன் னார்தமது நகரமேவிப்
பொன்மனைபுக் காரிரவி பொலியவந்தான்
பாதகர்மூ வாயிரரை யாறுநாளிற்
பார்த்திபனீந் தானரக்கி பற்றிக்கொண்டாள்.

இ - ள். ஆதலினால் - ஆகையினால், பதகருடலிரையைக் கைக்கொண்டு- பாவிகளின் சரீரமென்னும் புசிப்பைக்கைக்கொண்டு, அரும்பசிபோய் - அரிய உதராக்கினிநீங்கி, சமாதிதனையடைய - நிஷ்டையிலிருப்பாய், இவ்வாறு - இவ்வண்ணம், காதலுடன் - அன்போடு, பலகாலுஞ்செய்தியென்று - எப்போது மியற்றுவாயென்று, காவலன்கூறவும் - அரசன்சொல்லவும், அரக்கி - இராட்சதி, களிகூர்ந்தேக - மகிழ்ந்துசெல்ல, போதகமன்னார் - சிங்ககுட்டி யையொத்த இராசமந்திரிகள், தமதுநகரமேவி - தமதுபட்டணம்போய், பொன்மனைபுகார் - சுவணமயமாகிய அரண்மனையை யடைந்தார்கள், இரவிபொலியவந்தான் - சூரியனுதயமானான், பாதகர்மூவாயிரரை-மூவாயிரம்பாவிகளை ஆறுநாளில்-ஆறுதினத்தில், பார்த்திபனீந்தான், அரசன்கொடுத்தான், அரக்கி - இராட்சதி, பற்றிக்கொண்டாள் - பெற்றுக்கொண்டாள்—எ-று.

எ - டு. ஆகையினால் பாவிகளின் சரீரமென்னும் புசிப்பைக்கைக்கொண்டு அரிய உதராக்கினிநீங்கி நிஷ்டையிலிருப்பாய். இவ்வண்ணம் அன்போடு எப்போதும் இயற்றுவாயென்று அரசன் சொல்லவும், இராட்சதி மகிழ்ந்துசொல்ல, சிங்கக்குட்டியையொத்த இராசமந்திரிகள் தமது பட்டணம்போய் சுவணமயமாகிய அரண்மனையை யடைந்தார்கள். சூரியனுதயமானான். மூவாயிரம் பாவிகளை ஆறுதினத்தில் அரசன் கொடுத்தான். இராட்சதி பெற்றுக்கொண்டாள்.

## அன்பின் பிரிவற்று இருத்தல்.



பூமகள்போ லங்கிருந்த வடிவைக்கங்குற்
போதிலொழித் தரக்கர்குலப் பூவையாகிப்
பாமராம பாதகரைத தோண்மேற்கொண்டு
பார்த்திபனோ டமைச்சனுக்கும் பண்புகூறி

ஏமமுறு மிமகிரியிற் சமாதிமேவ
வேகினு ளின்றளவு மிந்தவாறே
கோமகனு மரக்கியுநட் பானுரென்று
குரிசிலுக்கு வசிட்டமுனி கூறினுனல்.

இ - ள். பூமகள்போல் - இலட்சுமியைப்போல, அங்கிருந்த வடிவை-அவ்வாண்மனையிலிருந்தபடிவத்தை, கங்குற்போதில்-இராத்திரியில்,ஒழித்து-நீக்கி, அரக்கர் குலப்பூவையாகி - இராட்சதியாகி, பாமரராம் பாதகரை- மூடரான கொலைக்காரரை, தோண்மேற்கொண்டு - புயத்தின்மேல் வைத்துக்கொண்டு, பார்த்திபனேடு - அரசனுடன், அமைச்சனுக்கும் - மந்திரிக்கும், பண்புகூறி - உபசாரங்களைச்சொல்லி, ஏமமுறு - கனகமயமான, இமகிரியில் - இமோர்ப்பருப்பதத்தில், சமாதிமேவ - நிஷ்டையிலிருக்க, ஏகினுள் - போயினுள், இன்றளவும் - இன்றைவரைக்கும், இந்தவாறே - இவ்வண்ணமே, கோமகனும்-அரசனும், அரக்கியும் - கற்கடியும், நட்பானுரென்று - சிநேகமானுர்களென்று, குரிசிலுக்கு - இராமனுக்கு, வசிட்டமுனி - வசிட்டமுனியானவர், கூறினுன்-சொன்னுர்—எ-று.

எ - து. இலட்சுமியைப்போல அவ்வாண்மனையிலிருந்தபடிவத்தை இராத்திரியில் நீக்கி இராட்சதியாகி மூடரான கொலைக்காரரை புயத்தின்மேல் வைத்துக்கொண்டு அரசனுடன் மந்திரிக்கும் உபசாரங்களைச் சொல்லி கனகமயமான இமோர்ப்பருப்பதத்தில் நிஷ்டையிலிருக்கப்போயினுள். இன்றைவரைக்கும்இவ்வண்ணமே அரசனும் கற்கடியும் சிநேகமானுர்களென்று, இராமனுக்கு வசிட்டமுனியானவர் சொன்னுர்—எ-ம்.

இ-ரு-க-ம். ஆப்தர்கள் பிராரத்தகன்மசேடத்துக்குள்ள உபாதியைநீக்கி அன்பிற்கலந்திருந்தனராம். (47)

கற்கடி கதை முற்றிற்று.

ஆக கதை 6-க்கு கவிதை 370.

# அயிந்தவர் கதை.

அவதாரிகை.

முன் பிரமப்பிரகாசமே சீவன்முதலான சகலமுமென்பதைச்சொல்லி அதுதிட மாகும்பொருட்டு அத னுல்லாசமான மனதே சகமென்பதை யறிவிக்க வேண்டி அயிந்தவர் கதையைச்சொல்லுகிறார்.

## மனமே சகத்தென்பதற்குத் திருஷ்டாந்தம் உரைத்தல்.

உரைசெயூசி கதையாலே யுண்மையாகிப் பரமான
கரையில்பிரம மேயுளதாங் காணப்படுவ தொன்றில்லை (ர்
வரையில்சிருட்டி களின்முதலாய் மனமேவிளங்கு மிதுபொருட்டோ
புரையில்கதைகே ளெனவசிட்டன் புயன்மேனியற்குப் புகல்கின்றான்.

இ - ள். உரைசெயூசிகதையால் - சொல்லியகற்கடி கதையினால், உண் மையாகிப்பரமான - தத்துவமாயுயர்ந்த, கரையில் பிரமமே - வசனாதீதமான பிரமசொரூபமே, உளதாம் - உள்ளதாம், காணப்படுவதொன்றில்லை-திரிசிய வஸ்துவென்பது ஒன்றில்லை, வரையில்சிருஷ்டிகளில் - அளவற்றசிருஷ்டிகளி லும், முதலாய் - காரணமாக, மனமேவிளங்கும் - மனதே பிரகாசிக்கும், இது பொருட்டு - இது (தெரியு) நிமித்தம், புரையில்-குற்றமற்ற, ஓர்கதைகேளென- ஒருகதையைக்கேளென்று, வசிட்டன்-வசிட்டமுனி, புயன்மேனியற்கு-இராம னுக்கு, புகல்கின்றான் - சொல்லுகின்றார்-எ-று.

எ - து. சொல்லிய கற்கடிகதையினால் தத்துவமாயுயர்ந்தவசனா தீதமான பிரமசொரூபமே உள்ளதாம். திரிசிய வஸ்துவென்பதுஒன் றில்லை, அளவற்ற சிருஷ்டிகளிலும் காரணமாகமனதே பிரகாசிக்கும், இது தெரியுநிமித்தம் குற்றமற்ற ஒரு கதையைக் கேளென்று வசிட் டமுனி இராமனுக்குச் சொல்லுகின்றார்—எ-ம். (1)

## மனஞ்சகத்தென்ற அதனால் அதற்குக்காரணமான சிற்சத்தி வெளிப்படல்.

மேவுகதையாற் சிற்சத்தி விரிவேயுலகென் றறுதிவரும்
வாவுமனமாஞ் சிறுமகவு மடமையாலே வெறும்பொய்யே
தாவுசகப்பேய் வரக்காணுந் தனைப்போதிக்கி லறிந்திடர்போம்
பாவும்விகாரம் பலசேரிற் பவமாமவற்றை விடல்வீடாம்.

இ - ள். மேவுகதையால் - பொருந்திய இக்கதையினால், சிற்சத்திவி ரிவே - ஞானசத்தியினுடையவிசாலமே, உலகென்றறுதிவரும் - சகமெ ன்று (சொல்லப்பட்ட) நிச்சயமுண்டாம், வாவுமனமாஞ் சிறுமகவும்

அவாவியெழாநின்ற மனமென்னுஞ்சிறுகுழந்தையும், மடமையால் - அறியாமையினால், வெறும்பொய் - முழுமித்தையாக, தாவுசகப்பேய்வரக்காணும் உலகப்பிசாசம் வரப்பார்க்கும், தனைப்போதிக்கில் - அதனுருவத்தைத் தெரிவிக்கில், அறிந்து - பிரமசொரூபமா யறிந்து, இடர்போம் - துன்பநீங்கும், பரவும்விகாரம்பல - தாவாநின்ற ராகத்துவேஷாதிகள் என்னு நாநாவிகாரங்களை, சேரில் - (மனம்) அடையின், பவமாம் - சநநமாம், அவற்றைவிடல் வீடாம் - அவ்விகாரங்களை நீக்கிவிடுதலே மோட்சமாம்—எ-று.

எ – து. பொருந்திய இக்கதையினால் ஞானசத்தியினுடைய விசாலமே சகமென்று சொல்லப்பட்ட நிச்சயமுண்டாம. அவாவியெழாநின்ற மனமென்னுஞ் சிறுகுழந்தையும் அறியாமையினால் முழுமித்தையாக உலகப்பிசாசம் வரப்பார்க்கும். அதனுருவத்தைத் தெரிவிக்கில் பிரமசொரூபமாயறிந்து துன்பம நீங்கும. தாவாநின்ற ராகத்துவேஷாதிகளென்னு நாநாவிகாரங்களை மனமடையின் சநநமாம. அவ்விகாரங்களை நீக்கிவிடுதலே மோட்சமாம—எ—ம.

(இ-உ-கூ-ம்) சிறசத்தியின் விருத்தியான மனோப்பிராந்தியே திரிசியமும் அறணிவிாத்திமிய திருக்குவுமாம என்பதாம. (2)

## நூதன சிருஷ்டியைப் பார்த்து அதிசயித்தல்.

ஒருகால்விரிஞ்சன் சிருட்டியெலா மொடுக்கியிரவி னுறங்கியபின்
வருகாலையின்மீண டுலகளிப்பான் வானோக்குதலு மனத்தாலே
பெருகாநின்ற விண்ணிடையே பேதமான பலசிருட்டி
யருகாநின்ற படிகண்டா னார்செய்தனரென் றதிசயித்தான்.

இ - ள். ஒருகால - ஒருகாலத்தில், விரிஞ்சன் - பிரமதேவன், சிருட்டியெலாமொடுக்கி - சிருஷ்டிகளனைத்தையுமடக்கி, இரவினுறங்கியபின்-இராத்திரியில் நித்திரைசெய்தபின்பு, வருகாலையில - வருகின்ற (உதய) காலத்தில், மீண்டுலகளிப்பான் - திருமபச்சகத்தைச்சிருஷ்டிப்பதற்கு, வானோக்குதலும்- ஆகாயத்தைப்பார்க்கவும், மனத்தால-மனத்தினால, பெருகாநின்ற விண்ணிடை- விரியுமாகாயத்தில. பேதமானபலசிருட்டி - நாநாவிதமான சிருஷ்டிகள், அருகாநின்றபடி கண்டான - சமீபமாயிருத்தலைப் பார்த்தான, ஆர்செய்தனரென்று யார் சிருஷ்டித்தாரென்று, அதிசயித்தான - வியப்புற்றான—எ-று.

எ - து. ஒருகாலத்தில பிரமதேவன் சிருஷ்டிகளனைத்தையும் அடக்கி இராத்திரியில நித்திரைசெய்தபினபு வருகின்ற உதயகாலத்தில் திருமபச்சகத்தைச் சிருஷ்டிப்பதற்கு ஆகாயத்தைப்பார்க்கவும்,

மனதினால் விரியுமாகாயத்தில் நானாவித சிருஷ்டிகள் சமீபமானதைப் பார்த்தான். யார் சிருஷ்டித்தாரென்று வியப்புற்றான்—எ-ம். (3)

## சிருஷ்டியுண்டான காரணமுரைத்தல்.

அதிலோரிரவி வருகென்று யாரேயளித்தா ரெனக்கேட்பக்
கதிரோன்வணங்கி யுரைசெய்வான் கரைதீருலகின் காரணமாம்
விதியாநீயீ தறிந்திலையேல் விளம்பக்கேட்பாய் வெண்கயிலைப்
பதியாகியநா வலன்றீவிற் பரப்பாமிடத்தோர் பக்கத்தில்.

இ - ள். அதிலோரிரவி - அதிலொரு சூரியனை, வருகென்று-வாவென்று (அழைத்து), யாரளித்தார் - எவர் (உன்னையும் இந்தச் சகத்தையுஞ்) சிருஷ்டித்தவர், எனக்கேட்ப - என்றுகேட்க, கதிரோன்வணங்கி - சூரியன் நமஸ்கரித்து, உரைசெய்வான் - சொல்லுவான், கரைதீர் - முடிவில்லாத, உலகின் காரணமாம் - சகத்துக்குக்காரணமாகிய, விதியாநீ - பிரமாவாகிய நீர், ஈதறிந்திலையேல் - இதையறிய வில்லையாயின், விளம்பக்கேட்பாய் - சொல்லக்கேட்பாய், வெண்கயிலைப்பதியாகிய - வெள்ளியங்கிரியிடமாகிய, நாவலன்றீவில் - சம்புத்தீவில், பரப்பாமிடத்து - விரிந்த இடத்தில், ஓர்பக்கத்தில் - ஓர்பாலில்—எ-று.

எ - து, அதிலொரு சூரியனை வாவென்றழைத்து எவர் உன்னையும் இந்தச்சகத்தைஞ் சிருஷ்டித்தவர் என்று கேட்க, சூரியன் நமஸ்கரித்துச் சொல்லுவான். முடிவில்லாத சகத்துக்குக் காரணமாகிய பிரமாவாகிய நீ இதை அறியவில்லையாயின சொல்லக்கேட்பாய், வெள்ளியங்கிரி யிடமாகிய சம்புத்தீவில் விரிந்த இடத்தில் ஓர்பாலில்—எ-ம். (4)

## தவத்துக்குஏகல்.

சிறக்குஞ் சுவணசடமென்னுந் தேசமொன்றுன் மைந்தர்களால்
நிறக்குஞ் சிருட்டி படைத்ததகி னெடுங்காசிபன்றன்குலத்திடையே
பிறக்குமறையோ னிந்துவெனும் பெரியோன்மக்கட் பேறின்றிப்
பறக்குங்கருத்தாற் றேவியொடும் பரமன்கயிலைப் பதிமேவி.

இ - ள். சிறக்கும் - சிறப்புள்ள, சுவணசடமென்னும் - கனகசடமென்கின்ற, தேசமொன்று - ஒருநாடு, உன் மைந்தர்களால்-உனது புத்திரர்களால், சிறக்குஞ்சிருட்டி படைத்தது - சிறந்த சிருட்டியை பெற்றது, அதில் - அத்தேயத்தில், நெடுங்காசிபன் றன்குலத்திடை - பாரம்பரியமான காசிபனுடைய வமிசத்தில், பிறக்குமறையோன் - உண்டானபிராமணன். இந்துவெனும்பெரியோன்-இந்துவென்னும் (பெயரினற்) சிறந்தவன், மக்கட்பேறின்றி-

புத்திரசம்பத்தில்லாமல், பறக்குங்கருத்தால் - பரபரப்பானமனதினால், தேவியோடும் - நாயகியுடன், பரமன் - பரமேஸ்வரனுடைய, கயிலைப்பதிமேவி கயிலாயமலைக்குபபோய்-எ-று.

எ - து. சிறப்புள்ள கனகசட மென்கின்ற ஒருநாடு உனதுபுத்திரர்களால் சிறந்த சிருஷ்டியைப்பெற்றது. அத்தேயத்தில் பாரம்பரியமான காசிபனுடைய வமிசத்தில் உண்டானபிராமணன் இந்து வென்னும் பெயரினாற் சிறந்தவன், புத்திரசம்பத்தில்லாமல் பரபரப்பான மனதினால் நாயகியுடன் பரமேஸ்வரனுடைய கயிலாயமலைக்குப்போய்—எ-ம். (5)

## தவத்தால் மகப்பேறு உண்டாதல்.



தவமேற்கொண்டு பாதவப்போற் சலமேபருந்தி வருந்திடுநாட்
சிவனுண்மகிழ்நது வேண்டியதென் செப்புமென்னச் சிரம்பணிந்து
கவலைதீரவீரைவர் கலைதேர்புதல்வர் வேண்டுமென
அவனங்களிப்ப விவர்களிப்போ டகன்றூர்புதல்வ ரவதரித்தார்.

இ - ள். தவமேற்கொண்டு - தவசைக்கொண்டு, பாதவம்போல்-விருட்சத்தைப்போல, சலமேபருந்தி - நீரையேபானஞ்செய்து, வருந்திடுநாள் - வருந்துகின்றகாலத்தில், சிவனுண்மகிழ்ந்து-பரமசிவன்மனமகிழ்ந்து (வந்து), வேண்டியதென் - (உமக்கு) வேண்டியதென்ன, செப்புமென்ன - சொல்லுமென்றுகேட்க, சிரம்பணிந்து - சிரசினால்வணங்கி, கவலைதீர - எங்கள் துன்பந்தீரும்படி, ஈரைவர் - பதின்மர், கலைதேர் - கல்வியிற்றெளிந்த, புதல்வர் வேண்டுமென - புத்திரர்கள் வேண்டுமென்றுகேட்க, அவனகங்களிப்ப-அவர் அவ்விடத்தில் (அப்படியே) அருளிச்செய்ய, இவர்-இந்தஸ்திரீபுருடாள், களிப்போடகன்றூர் - மகிழ்ந்து வந்தாகள், புதல்வ ரவதரித்தார் - புத்திரர் உதித்தார-எ-று.

எ — து. தவசைக்கொண்டு விருட்சத்தைப்போல நீரையேபானஞ்செய்து வருந்துகின்றகாலத்தில், பரமசிவன் மனமகிழ்நது வந்து உமக்கு வேணடியதென்ன சொல்லுமென்றுகேட்க, சிரசினால் வணங்கி எங்கள் துன்பந்தீரும்படி பதின்யர் கல்வியிற்றெளிந்த புத்திரர்கள் வேண்டுமென்று கேட்க, அவர் அவ்விடத்தில் அப்படியே அருளிச்செய்ய, இந்த ஸ்திரீபுருடாள் மகிழ்ந்து வந்தார்கள், புத்ரர் உதித்தார்—எ—ம். (6)

## உயர்வு ஆராய்தல்.

மைந்தரொருப துளராகி மறைநூனிறைந்து வளர்ந்ததற்பின்
தந்தைதாய ரிறந்தேகத் தனையர்கைலைத் தலமெய்திச்
சிந்தைசெய்வார் நல்குரவு தீரவுயர்வன் னியராவோம்
அந்தநிலைசற் றுதலினு லதிகநிலைமன் னவராவோம்.

இ-ள். மைந்தரொருபதுளராகி - பத்து புத்திரர்கள் உதயமாய் மறைநூனிறைந்து - வேதசாஸ்திர அப்பியாசம் நிரம்பி, வளர்ந்ததற்பின் - வளர்ந்ததன்பின்பு, தந்தைதாய ரிறந்தேக - மாதாபிதாக்கள் மரிக்க, தனையர் - புத்திரர்கள், கைலைத்தலமெய்தி - கைலாசமலையினிற்சென்று, சிந்தைசெய்வார் - விசாரிப்பார்கள், நல்குரவுதீர - (நமது) தரித்திரநீங்கும்படி, உயர்வன்னியராவோம் - மேலானசாமந்தர்களாவோம், அந்தநிலை சற்றுதலினுல் - அச்செல்வங்கொஞ்சமானபடியால், அதிக நிலை மன்னவராவோம் - பெருமையையுடைய அரசராவோம்-எ-று.

எ-து. பத்துப்புத்திரர்களுதயமாய் வேதசாஸ்திர அப்பியாசம் நிரம்பி வளர்ந்ததன் பின்ப, மாதாபிதாக்கள் மரிக்க புத்திரர்கள் கைலாச மலையினிற்சென்று விசாரிப்பார்கள். நமது தரிதத்திரநீங்கும் படி மேலானசாமநதர்களாவோம். அச்செல்வங் கொஞ்சமானபடியி ளுல் பெருமையை உடைய அரசராவோம்—எ—ம். (7)

## உயர்வைப் பரோட்சமாகத் தெளிதல்.

அதுவுஞ்சிறிதாம் புவியனைத்துக் கரசராவோ மதுசற்று
நிதிதுன்னியவிந் திரராவோ நிகழ்த்துமதுவு நெடிதல்ல
பதுமஞ்செறியு மயனுதல் பழுதில்பதவி யெனத்துணிந்தார்
உதிதமனத்துப் பதின்மருமொத் துயரும்பதுமா தனத்திருந்து.

இ—ள். அதுவுஞ்சிறிதாம் - அதுவும் அற்பமாம், புவியனைத்துக்கும் - பூமிக்கெல்லாம், அரசராவோம் - சக்கரவர்த்தியாவோம், அதுசற்றும் - அதுவும் அற்பமாம், நிதிதுன்னிய - (நவ) நிதிகள் நிறைந்த, இந்திரராவோம் - தேவேந்திரராவோம், நிகழ்த்துமிதுவும்-சொல்லிய இச் செல்வமும், நெடிதல்ல - பெரிதல்ல, பதுமஞ்செறியும் - தாமரைமலரிலெழுந்தருளிய, அயனுதல் - பிரமாவாகுதல், பழுதில் பதவியென - குற்றமற்ற செல்வமென்று, துணிந்தார் - நிச்சயித்தார்கள், உதிதமனத்து - தோன்றின மனதில், பதின்மருமொத்து - பத்துப்பேர்களுமொருமித்து, உயரும் - மேலாகிய, பதுமாதனத்திலிருந்து - பத்மாசனத்திலிருந்து-எ—று.

எ - து. அதுவும்அற்பமாம். பூமிக்கெல்லாம் சக்கரவர்த்தியா வோம் அதுவும்அற்பமாம். நவநிதிகள்நிறைந்ததேவேந்திரராவோம். சொல்லிய இச்செல்வமும் பெரிதல்ல. தாமரைமலரில் எழுந்தருளிய பிரமா ஆகுதல். குற்றமற்றசெல்வமென்று நிச்சயித்தார்கள். தோன் றின மனதில் பத்துப்பேர்களும் ஒருமித்து மேலாகியபத்மாசனத்தி லிருந்து—எ-ம். (8)

## உயர்வு அபரோட்ச மாதல்.



பிரமனுமே சிருட்டியெலாம் பிறப்பதெம்பா லென்றுள்ளே
திரமதான மனத்தாலே சிந்தித்துடலிற் சிந்தையற
மரமதென்ன விருத்தலுமே வருநாட்பலபோய் மனோபாவம்
உரமதாகி யயனுரொருபதுலக முளதான.

இ - ள். ஈாமேபிரமன் - யாமேபிரமதேவன், சிருட்டியெலாம் - சிருட்டி கள் இயாவும், பிறப்பதெம்பாலென்று - உண்டாகுதல் நமதிடத்தென்று, உள் ளே திரமதான மனத்தால் - அகத்திற் சலனமற்ற மனதினால், சிந்தித்து-தியா னித்து, உடலிற் சிந்தையற - தேகஸ்மரணமின்றி, மரமதென்ன - விருட்சத் தைப்போல, இருத்தலும் - இருக்கவும், வருநாட்பலபோய் - வருகின்றகாலங் கள் அனேகமாச்சென்று, மனோபாவமுரமதாகி - மனோபாவனை முதிர்ந்து, அயனுர் - (அப்பதின்மரும்) பிரமா ஆனார்கள், ஒருபதுலகமுளதான-பத்து உலகங்கள் உண்டாயின—எ-று.

எ - து யாமே பிரமதேவன். சிருட்டிகள் இயாவும் உண்டாகு தல் நமதிடத்தென்று அகத்திற் சலனமற்ற மனதினால் தியானித்து தேகஸ்மரணமின்றி விருட்சத்தைப்போல இருக்கவும்வருகின்றகால ங்கள் அநேகமாகச்சென்றுமனோபாவனை முதிர்ந்து அப் பதின்மரும் பிரமா ஆனார்கள், பத்து உலகங்கள் உண்டாயின—எ-ம். (9)

## மன்தேசகத்தென்பது திருஷ்டாந்தம் ஆதல்.



மன்வானகத்தி லிவர்பத்து வகையிற்சிருட்டி தந்தனரால்
இனமாமவற்றி லோரிரவி யானுமென்னு வேகினனுற்
கனமாமனத்தின் விரிவாலே காணுஞ்சகங்க ளுளவாமென்
றனவாகனத்தோன் மனத்தாலே யளித்தானிராமற்கருள்செய்தான்.

இ - ள். மனவானகத்தில் - மனாகாயத்தில், இவர்பத்துவகையில் - இவர் கள் பத்துவிதமாக, சிருட்டிதந்தனர் - சிருட்டியைச் செய்தார்கள், 'இனமா

மவற்றில் - கூட்டமாகிய அப் பத்து சிருஷ்டிகளில், யானும் - நானும், ஓரிரவி யென்று - ஒரு சூரியனென்றுசொல்லி, ஏகினன் - போயினன், கனமாமனத் தின் - கனமாகிய மனதினது, விரிவால் - விசாலத்தினால், காணுஞ்சகங்கள் - பார்க்கப்பட்ட உலகங்கள், உளவாமென்று - உள்ளனவாமென்று, அனவாக னத்தோன் - அன்னவாகனத்தையுடைய பிரமதேவன், மனத்தாலளித்தான் - மனதினாற் சிருஷ்டித்தானென்று, இராமற் கருள்செய்தான் - இராகவருக்கு வசிட்டர் அனுக்கிரகித்தார்—எ-று.

எ - து. மனுகாயத்தில் இவர்கள் பத்துவிதமாக சிருட்டியைச் செய்தார்கள். கூட்டமாகிய அப் பத்து சிருஷ்டிகளில் நானும் ஒரு சூரியனென்று சொல்லிப்போயினன். கனமாகியமனதினது விசாலத் தினால் பார்க்கப்பட்ட உலகங்கள் உள்ளனவாமென்று அன்னவாகத் தையுடைய பிரமதேவன் மனதினால் சிருஷ்டித்தா னென்று, இராக வருக்கு வசிட்டர் அனுக்கிரகித்தார்—எ-ம்.

இ-அ-க-ம். மனோபாவமே சகத்தென்பதை அறிவித்ததாம். (10)

அயிந்தவர்கதை முற்றிற்று

ஆக கதை 7-க்கு-கவிதை-380.

# வஞ்சவிந்திரன் கதை.

அவதாரிகை.

முன்சிற்சத்தி உல்லாசமாய் உண்டான மனோபாவமே சகமென்பதைத் திருஷ் டாந்தமாக அறிவித்து அக்காரணமான மனதைத் தவிர காரியமான தே கம் வேறின்றென்பதை பாகியேந்திரிய விவகாரத்தில் அறிவிக்கு நிமித்தம் விடயாநந்தானுபவமுள்ள வஞ்சவிந்திரன் கதையை நிரூபிக்கின்றார்.

மனோவிலாச நிரூபணம்.

பொருவில்சகத்தை யளிப்போனும் புருடன்றானும் புகன்மனமே
கருதுமனத்தின் செயல்செயலாங் காயச்செயல்கள் செயலன்றாம்
பருதியுரைசெய் புதுமறையோர் பதுமாதனராய்ப் பார்படைத்தார்
பெருமாமனத்தி னுயர்சத்து பிறாலறிதற் கெளிதாமோ.

இ - ள். பொருவில் - ஒப்பில்லாத, சகத்தையளிப்போனும் - உலகங்களைச்சிருஷ்டிப்பவனும், புருடன்றானும் - ஆத்மாவும், புகன்மனமே-சொல்லப்பட்ட மனதேயாம், கருதுமனத்தின் - நினைக்கின்ற மனதினது, செயல்செயலாம் - தொழிலே தொழிலாகும், காயச்செயல்கள் - தேகத்தின்தொழில்கள், செயலன்றாம் - தொழில்கள் அல்லவாம், பருதியுரைசெய் - சூரியன்சொன்ன, புதுமறையோர் - நூதனமாகிய பிராமணர்கள், பதுமாதனராய் - பதுமாசனத்தையுடைய பிரமதேவர்களாய், பார்படைத்தார்-பூமியைச் சிருஷ்டித்தார்கள், பெருமாமனத்தின் - மகா மனதினுடைய, உயர்சத்தி-மேலானசத்தியை, பிறராலறிதற்கு -வேறொருவரால் அறிவதற்கு, எளிதாமோ-இலேசாகுமோஎ-று,

எ - து. ஒப்பில்லாத உலகங்களைச்சிருஷ்டிப்பவனும், ஆத்மாவும் சொல்லப்பட்டமனதேயாம். நினைக்கின்றமனதினதுதொழிலே தொழிலாகும். தேகத்தின்தொழில்கள் தொழில்கள்அல்லவாம். சூரியன் சொன்ன நூதனமாகிய பிராமணர்கள் பதுமாசனத்தையுடைய பிரமதேவர்களாய்ப் பூமியைச் சிருஷ்டித்தார்கள். மகாமனதினுடைய மேலானசத்தியை வேறொருவரால்அறிவதற்கு இலேசாகுமோ—எ-ம்.

## பிரமாநந்தானுபவிக்கு விடயாநந்தர் அனுபவம் இன்றெனல்.

---

உள்ளமுடலைப் பாவிக்க வுடலாயதனு லுள்ளயரும்
தவள்ளஞானத் தவருள்ளே மேவாநின்ற பாவனையாற்
பொள்ளவுடலி னலந்தீது புந்திசெய்யார் புராதனநாட்
கள்ளவினைசெய் யகலிகையுங் காவிந்திரனு மிதற்கொப்பாம்.

இ - ள். உள்ளம் - மனது, உடலைப்பாவிக்க - சரீரத்தைப்பாவனைசெய்ய, உடலாய் - சரீரமாய், அதனால் - அச் சரீரத்தினால், உள்ளயரும் - மனம் வருந்தும், வெள்ளஞானத்தவர் - பூரணஞானிகள், மேவாநின்ற (அகத்திற்) பொருந்துகின்ற,பாவனையால் - பிரமபாவனையினால், பொள்ளவுடலில் - நவத்துவாரமுள்ள சரீரத்தில், நலந்தீது புந்திசெய்யார் - நன்மை தீமைகளையறியார்கள், புராதனநாள் - முன்னாளில், கள்ளவினைசெய் - சோரத்தொழில்செய்த, அகலியும் - அகலிகையென்பவளும், காவிந்திரனும் - சோர இந்திரனும் இதற்கொப்பாம் - இவ்வருத்தத்துக்கு ஒப்பாவார்கள்—எ-று.

எ — து. மனது சரீரத்தைப் பாவனைசெய்ய சரீரமாய் அச்சரீரத்தினால் மனம் வருந்தும், பூரணஞானிகள் அகத்திற்பொருந்துகின்ற பிரமபாவனையினால் நவத்துவாரமுள்ள சரீரத்தில் ன்மை தீமைகளை

அறிவார்கள். முன்னாளில் சோரத் தொழில்செய்த அகலிகை யென்பவளும் சோரஇந்திரனும் இவ் அருத்தத்துக் கொப்பாவார்கள்-எ-ம்

இ-உ-க-ம். மனதைத்தவிர சரீரத்துக்கோர் சுகதுக்கமில்லை என்பதாம்.

## திருஷ்டாந்தம் அறிவித்தல்.

---

என்னவிவர்க ளாரென்னு விராமன்கேட்ப முனிசொல்வான்
முன்னர்மகத நாடுடையோன் மொழிவிந்திரத்து யம்மனென்றோர்
மன்னனவனு யிர்போல மகிழுந்தேவி யகலிகையாஞ்
சொன்னநகரி லொருவனுளன் றூர்த்தனவன்பே ரிந்திரனும்.

இ - ள். என்ன - (இப்படி) என்றுவசிட்டர்சொல்ல, இவர்களாரென்ன - இவர்கள் யாரென்று, இராமன்கேட்ப - இராகவன்கேட்க, முனிசொல்வான் - வசிட்டமுனிசொல்லுவார், முன்னர் - முன்னாளில், மகதநாடுடையோன் மகததேசத்தை உடையவன், மொழி-சொல்லப்பட்ட, இந்திரத்துயம்மனென்று - இந்திரத்து யம்மனென்றும் பெயரையுடைய, ஓர்மன்னன் - ஓர் அரசனும், அவனுக்குயிர்போல - அவனுக்குப் பிராணனைப்போல, மகிழுந்தேவி - (கூடிக்) களிக்குமனைவி, அகலிகையாம் - அகலிகை என்னும் பெயரையுடையவளாம், சொன்னநகரில் -முன்சொல்லியபட்டணத்தில், ஒருவனுளன் - ஒருவனுண்டு, தூர்த்தன் - விடன், அவன் பேரிந்திரனும் - அவனுமம் இந்திரனும்-எ-று.

எ - து இப்படியென்று வசிட்டர் சொல்ல இவர்கள்யாரென்று இராகவன்கேட்க, வசிட்டமுனி சொல்லுவார். முன்னாளில்மகததேசத்தை உடையவன், சொல்லப்பட்ட இந்திரத்துயம்மனென்றும பெயரையுடையஓர் அரசனும். அவனுக்குப்பிராணனைப்போல கூடிக்களிக்குமனைவி அகலிகையென்னும் பெயரை உடையவளாம். முன்சொல்லியபட்டணத்தில் ஒருவனுண்டு விடன், அவன் நாமம் இந்திரனும்—எ-ம். (3)

## இருதலைக்காமமும் ஒத்து ஏகமாதல்.

---

அன்னாளந்த வகலிகையு மவ்விந்திரனுஞ் செறிகதைகேட்
டின்னாளிந்த வகலிகையு மிவ்விந்திரனை யிணிதணைந்தாள்
தொன்னாட்பிரிந்தோர் கூட்டமெனத் தூர்த்தருடா மணியுடனே
சினைனாமகிழ்ந்தொன் றுமளவிற செங்கோலரசன்செவிப்படுத்தார்.

இ - ள். அன்னாள் - அக்காலத்தில், அந்தவகலிகையும் - அவ் அகலிகையும், அவ்விந்திரனும் - அப் புரந்தரனும், செறிகதைகேட்டு - புணர்ந்தகதையைக்கேட்டு, இன்னாள் - இந்த நாளில், இந்த அகலிகையும் - இவ் (வாசி

யென்னும்) அகலிகையும், இவ்விந்திரனை - இத் (தூர்த்த) இந்திரனை, இனி தணைந்தாள் - இனிமையாகக்கூடினாள், தொன்றாள் - நெடுங்காலம், பிரிந்தோர்கூட்டமென - நீங்கினவர் கூடுங் கூட்டத்தைப்போல, தூர்த்தருடா மணியுடன் - விடசிரேஷ்டனுடன், சின்னாண் மகிழ்ந்து - சிலநாட்களித்து, ஒன்றுமளவில் - ஏகமாயிருக்குங்காலத்தில், செங்கோலரசன்-நீதியையுடைய அரசனது, செவிப்படுத்தார் - அறிவித்தார்கள்—எ-று.

எ - து. அக்காலத்தில் அவ்வகலிகையும், அப்புரந்தரனும், புணர்ந்த கதையைக்கேட்டு இந்தநாளில் இவ்வரசியென்னும் அகலிகையும் இத் தூர்த்த இநதிரனை இனிமையாகக் கூடினாள். நெடுங்காலம் நீங்கினவர் கூடுங் கூட்டத்தைப்போல விடசிரேஷ்டனுடன் சிலநாட்களித்து ஏகமாயிருக்குங் காலத்தில் நீதியையுடைய அரசனுக்கு அறிவித்தார்கள்—எ-ம். (4)

## சிற்றின்பத்திற் பிரிவற்றிருத்தலின் துன்பந்தோன்றாமை.



கேட்டவேந்தன் மிகமுனிந்து கிளருநீரி லமிழ்வித்துங்
கோட்டுமதமா வெதிரிட்டுங் கொடுநதிக்கொழுந்திற் குளிர்ப்பித்தும்
வாட்டுங்கசையான் மோதிவித்தும் வருத்தஞ்செய்ய வருந்தாமல்
நாட்டமெதிர்பார்த் துளமொன்றி நகைசெய்திருந்தார் நலிவுணரார்.

இ - ள். கேட்டவேந்தன் - கேள்விப்பட்டஅரசன், மிகமுனிந்து - மிகவும்கோபித்து, கிளருநீரிலமிழ்வித்தும்-மிகுந்தசலத்தில் அமிழ்த்தியும், கோடு-தந்தங்களையுடைய, மதமாவெதிரிட்டும் - மதயானையை நேரேவிட்டு இடறவித்தும், கொடுந்தீகொழுந்திற் குளிர்ப்பித்தும் - கொடிய அக்கினிச்சுவாலையின் முழுகச்செய்வித்தும், வாட்டும் - வருத்தாநின்ற, கசையான்மோதிவித்தும் - குதிரைச்சம்மட்டிகளால் அடிக்கச்செய்தும், வருத்தஞ்செய்ய - (இப்படிபல) வருத்தங்களைச்செய்ய, வருந்தாமல் - வருத்தப்படாமல், நாட்டமெதிர்பார்த்து - (இருவர்) கண்ணும் ஒன்றுக்கொன்று எதிர்பார்த்து, உளமொன்றி - மனம் ஒன்றாய், நலிவுணரார் - வருத்தம் அறியாதவர்களாய், நகைசெய்திருந்தார்- நகைத்துக்கொண்டிருந்தார்கள்—எ-று.

எ - து. கேள்விப்பட்ட அரசன் மிகவுங் கோபித்து மிகுந்த சலத்திலமிழ்த்தியும் தந்தங்களையுடைய மதயானையை நேரேவிட்டு இடறவித்தும், கொடிய அக்கினிச்சுவாலையின் முழுகச்செய்வித்தும், வருத்தாநின்ற குதிரைச் சம்மட்டிகளால் அடிக்கசசெய்தும், இப்படி பல வருத்தங்களைச்செய்ய வருத்தப்படாமல் இருவர்கண்ணும் ஒன்றுக்கொன்று எதிர்பார்த்து மனமொன்றாய் வருத்தம் அறியாதவர்களாய் நகைத்துக்கொண்டிருநதார்கள்—எ-ம்.

## விடயானுபவம் உரைத்தல்.

அரசனேக்கி மிகவியப்புற் றறவும்வருத்த வருந்தாவா
றுரைசெய்திடுமி னென்றலுமே யுள்ளங்களிப்பா ருரைசெய்வார்
வரைசெய்புயத்தா யெங்கண்முக மதியினமுதம் விழியருந்தக்
கரைசெய்வரிய களிப்பான்மெய் காணேம்வருத்தங் காண்போமோ.

இ - ள். அரசனேக்கி - இராசன்பார்த்து, மிகவியப்புற்று - மிகவும் அதிசயித்து, அறவும்வருத்த - மிகவுந்துன்பப்படுத்த, வருந்தாவாறு - துன்பப்படாத விதத்தை, உரை செய்திடுமி னென்றலும் - சொல்லுங்களென்றுகேட்கவும், உள்ளங்களிப்பார் - மனமகிழ்ச்சியையுடையஇருவரும், உரைசெய்வார்- சொல்லுவார்கள், வரைசெய் புயத்தாய் - மலைபோன்ற தோள்களை யுடையோனே, எங்கண் முகமதியினமுதம் - எங்கள்வதனமாகிய சந்திராமுதத்தை, விழியருந்த - கண்கள்புசிக்க, கரைசெய்வரிய - தடைசெய்யக்கூடாத, களிப்பால் - மகிழ்ச்சியினல், மெய்காணேம் - உடலையே காணுதயாம், வருத்தங் காண்போமோ - வருத்தங்களைப் பார்பபோமோ—எ-று.

எ - து. இராசன்பார்த்து மிகவும் அதிசயித்து மிகவுந்துன்பப்படுத்த, துன்பப்படாத விதத்தை சொல்லுங்களென்று கேட்கவும், மனமகிழ்ச்சியையுடைய இருவரும் சொல்லுவார்கள். மலைபோன்ற தோள்களை யுடையோனே, எங்கள் வதனமாகிய சந்திராமுதத்தை கண்கள்புசிக்கத் தடைசெய்யக்கூடாத மகிழ்ச்சியினல் உடலையேகாணுதயாம் வருத்தங்களைப் பார்ப்போமோ—எ-ம்.

## மனவுறுதியின் பெருமையை அறிவித்தல்,

அரிந்தபொழுது முடற்றுன்ப மறியேமொன்றி லன்பாகிப்
புரிந்துபற்று மனத்தினுடல் பொன்றவரினுந் துயர்தோன்றுத்
தெரிந்தபொருளின் மனமழுந்துந் தேகத்தொழில்வே றெவர்காண்
விரிந்தமுனிவர் சாபமும்பல் வினையுமவை மீட்பரிதாம். [பார்

இ - ள். அரிந்த பொழுதும் - அறுத்த காலத்திலும், உடற்றுன்பமறியேம் - சரீர வருத்த மறிந்திலம், ஒன்றி லன்பாகிப் புரிந்து - ஒன்றிற் பிரியமாய், பற்றுமனத்தின் பிடிக்கின்ற மனத்தினுக்கு, உடல் பொன்றவரினும் - சரீரம் நசிககவந்தாலும், துயர் தோன்றுது - துன்பந்தோன்றுது, தெரிந்த பொருளில் - தெரிந்த வஸ்துவில், மனமழுந்தின் - மனமுழுகினல், தேகத்தொழில் - சரீரத்தினது செயலை, வேறெவர் காண்பார்

வேறேயாவர் பார்ப்பார்கள், விரிந்தமுனிவர் சாபமும்-வியாபித்தமுனிவர்கள் சாபமும், பல்வினையும் - பலகன்மங்களும், அதனை மீட்பரிதாம் - அதைத் திருப்பக்கூடாது-எ-று.

எ - து. அறுத்தகாலத்திலும் சரீரவருத்த மறிந்திலம். ஒன்றிற் பிரியமாய் பிடிக்கின்ற மனதினுக்குச் சரீரநசிக்க வந்தாலும் துன்பந் தோன்றாது. தெரிந்த வஸ்துவில் மனமுழுகினால் சரீரத்தினது செயலை வேறேயாவர் பார்ப்பார்கள்? வியாபித்த முனிவர்கள் சாபமும் பலகன்மங்களும் அதைத் திருப்பக்கூடாது--எ-ம். (7)

## மனதின்விசாலம் அறிவித்தல்.



மாண்டுவாளா போனவுடன் மட்டொன்றில்லை யவையெல்லாந்
தாண்டுமனததா லுண்டாகுஞ் சலத்தாலன்றிக் காடுண்டோ
தூண்டுமனமே முதல்வடிவாய்த் தூலவுடலம் போனாலும்
வேண்டுமுடல்கள் விரைந்தெடுக்கும் விரியுங்கனவிற் செயல்போல.

இ - ள். மாண்டு - இறந்து, வாளாபோனவுடல்-வீணாகக்கழிந்த சரீரம், மட்டொன்றில்லை - ஓர் அளவில்லை, அவையெல்லாம் - அச்சரீரங்களியாவும், தாண்டுமனத்தா லுண்டாகும்-தாவாநின்ற மனதினால் தோற்றும், சலத்தாலன்றிக் காடுண்டோ - நீரையன்றி வனமுண்டோ, தூண்டும் மனமே (சகலத்தையும்) நடத்தாநின்ற மனதே, முதல்வடிவாம் - முதன்மையான சரீரமாம், தூலவுடலம்போனாலும் - (இத்) தூலசரீரநீங்கினாலும், வேண்டுமுடல்கள் - இச்சிக்கின்ற சரீரங்களை, விரியுங்கனவிற்செயல்போல - விரிகின்ற சொற்பனத்தில் தோன்றுந் தொழிலைப்போல, விரைந்தெடுக்கும் - வேகமாயெடுக்கும்-எ-று.

எ - து. இறந்து வீணாகக்கழிந்த சரீரம் ஓர் அளவில்லை. அச்சரீரங்களியாவும் தாவாநின்றமனதினால் தோன்றும். நீரையன்றி வனமுண்டோ? சகலத்தையு நடத்தாநின்ற மனதே முதன்மையான சரீரமாம். இத்தூலசரீர நீங்கினாலும் இச்சிக்கின்ற சரீரங்களை விரிகின்ற சொற்பனத்தில் தோன்றுந் தொழிலைப்போல வேகமாயெடுக்கும் எ-ம். (8)

### இதுவுமது.

இந்தமனமே யொடுங்கிலுட லேதுமறியா தெனக்கேட்ட
வந்தநிருபன் பாதமெனு மருங்கின்முனியை முகநோக்கிச்
சிந்தைமயலுற் றிருந்துமிவர் சிற்பாவனைசெப் பினரென்று
புந்திமகிழ்ந்து புறநாட்டிற் போமென்றவரைப் போக்கினனால்.

இ - ள். இந்தமனமே யொடுங்கில் - இம்மனமாத்திரம் அடங்கினால், உடலேதுமறியாதென - சரீரமொன்றையும் அறியமாட்டாதென்று (தூர்த்தான்

சொல்ல), கேட்டவந்தநிருபன் - கேட்ட அவ்வரசன், பரதனெனும் - பரதனென்கின்ற, அருகின்முனியை - பக்கத்திலிருக்கின்ற முனிவரனை, முகநோக்கி - வதனத்தைப்பார்த்து, சிந்தைமயலுற்றிருந்தும் - சித்தத்திற் காமமயக்கம் அடைந்திருந்தும், இவர் சிற்பாவனை - இவர்கள்ஞானபாவனையை, செப்பினரென்று - சொன்னார்களென்று, புந்திமகிழ்ந்து - மனமகிழ்ந்து, புறநாட்டிற்போமென்று - பரதேயததிற்போங்களென்று, அவரைப்போக்கினன் - அவர்களைத் துரத்திவிட்டான்-எ-று.

எ-து. இம் மனமாத்திரம் அடங்கினால் சரீரமொன்றையும் அறியமாட்டாதென்று தூர்த்தாள் சொல்ல, கேட்ட அவ்வரசன் பரதனென்கின்ற பக்கத்திலிருக்கின்ற முனிவரனை வதனத்தைப் பார்த்து சித்தத்திற் காமமயக்கம் அடைந்திருந்தும் இவர்கள் ஞானபாவனையைச் சொன்னார்களென்று மனமகிழ்ந்து பரதேயதிற் போங்களென்று அவர்களைத் துரத்திவிட்டான்--ய-ம்.

(இ-எ-க-ம்.) பிரமாநந்தானுபவமுள்ள மனது விபகாரங்களிலும் அவ்வனுபவமாயிருப்பதேயன்றிப் பேதிக்கமாட்டா தென்பதாம். (9)

வஞ்சவிந்திரன்கதை முற்றிற்று.

ஆக கதை 8-க்கு கவிதை 389.

# மனத்தின் கதை.

அவதாரிகை.

முன் அகத்திற் சுகதுக்கவிருத்திரூபமான மனமே புறம்பிலிருப்பதெனக்காட்டி அம்மனம் அகமுகப்படிற் சித்தாகவும், வெகுமுகப்படிற் சத்தாகவுமிருப்பதை அறிவிக்கும்பொருட்டு அதனுருவத்தை நிரூபிக்கிறார்.

## உயிர்களின் தூலசூக்குமதேகத்தின் குணங்களை அறிவித்தல்.

வேறு.

இந்தக் கதையை விளையாட் டென்ன விசைத்தே மெவர்க்கும்
அந்தத் தமதா முடலொன் றபலா முடலொன் றவற்றிற்
சிந்தைச் சரீரம் விரைவிற் செயல்க ளெல்லாஞ் செய்து
தொக்கித் தலையு மற்ற தூல வுடலொன் றறியா.

இ - ள். இந்தக்கதையை-(பிரமாநந்தத்தைக் குறிப்பாலுணர்த்தும்) இவ்வஞ்ச இந்திரன் கதையை, விளையாட்டென்ன - (விட்யாநந்த மனுபவிக்கும்) லீலையாக, இசைத்தேம் - சொன்னேம், எவர்க்கும் - இயாவருக்கும், அந்தத் தமதாமுடலொன்று - அம்மனத்திற்குரிய சூட்சும சரீர மொன்றும், அயலாமுடலொன்று - வேறான தூல சரீர மொன்றும், அவற்றில் - அவ்விரண்டில், சிந்தைச்சரீரம் - மனோசரீரமானது, விரைவில - சீக்கிரத்தில், செயல்களெல்லாஞ்செய்து-தொழில்கள் அனைத்தையுஞ்செய்து, தொந்தித்தலையும்-(அதில்) தொந்தமாய்ச்சஞ்சலிக்கும், மற்றதூலவுடல் - மற்றதூல சரீரமானது, ஒன்றறியா - ஒன்றையும் அறியமாட்டாது—எ-று.

எ - து பிரமாநந்தத்தைக் குறிப்பா துணர்த்தும் இவ்வஞ்ச இநதிரன்கதையை விடையானந்தமனுபவிக்கும் லீலையாகச் சொன்னேம். இயாவருககும அமமனதிற்குரிய சூட்சும சரீரமொன்றும். வேறான தூலசரீரமொன்றும் அவவிரண்டில் மனோசரீரமானது சீக்கிரத்தில் தொழில்கள் அனைத்தையுஞசெய்து அதில் தொந்தமாய்ச் சஞசலிககும் மற்றதூல சரீரமானது ஒன்றையும் அறியமாட்டாது.

## அயற்றின் மனோசரீரத்தின் குணங்களை விசாரித்தல்.

---

என்றான் வசிட்ட னவனை யிநதச் சடமா மனத்துக்
கொன்றா வடிவ மிலதா முள்ள படிவை விரித்து
நன்றா யுரைப்பா யென்று ஞான குருசில் கேட்பப்
பொன்றா விதிசொற் படியே போத முனிவன் புகல்வான்.

இ - ள். என்றான் வசிட்டனவனை - இப்படியென்று சொன்ன வசிட்ட முனியை, சடமாம் - சடமாகவும், ஒன்றா-பொருந்தி (யிருக்கின்ற), வடிவமில தாம் - சொரூபமில்லாததாகவும் இருக்கின்ற, இந்த மனத்துக குள்ளபடிவை விரித்து-இந்த மனத்துககுரிய உருவத்தைவிரித்து, நன்றாயுரைப்பாயென்று-நன்றாகச்சொல்லுமென்று, ஞானகுருசில்கேட்ப-அறிவுள்ள இராமன்கேட்க, பொன்றாவிதிசொற்படியே அழியாத பிரமன் வாககியப்படியே, போதமுனிவன் புகல்வான் - ஞானசொரூபியான வசிட்டமுனி சொல்லுவார்-எ-று.

எ - து. இப்படியென்று சொன்ன வசிட்டமுனியைச் சடமாகவும் பொருந்திய சொரூபமில்லாததாகவும் இருக்கின்ற இந்தமனத்துககுரிய உருவத்தை விரித்து நன்றாகச்சொல்லுமென்று அறிவுள்ள இராமன்கேட்க, அழியாத பிரமன் வாககியப்படியே ஞானசொரூபியான வசிட்டமுனி சொல்லுவார்—எ-ம். (2)

---

## அம் மனத்தின் உருவத்தைப் பகுத்துக்கூறுதல்.

அகில சத்தி யுடைத்தா யநந்த மான பரமம்
புகல்சங் கற்பத் தோடே பொருந்தும் வடிவே மனமாம்
இகலுஞ் சத்தோ டசத்தா யிரண்டி னுள்ளுந் தோன்றிப்
பகருந தொழில்க ளோடே பயில்பா வனையு மஃதே.

இ-ள். அகிலசத்தியுடைத்தாய் - சகல சத்திகளும்உடையதாய், அநந்தமானபரமம் - முடிவற்றிருக்கின்ற ஆத்மாவானது, புகல் சங்கற்பத்தோடு-சொல்லப்பட்ட சங்கற்பத்துடன், பொருந்தும் - கூடுகின்ற, வடிவேமனமாம்-உருவமே மனமாகும், இகலும் - வலியுள்ள, சத்தோடசத்தாம் - சத்தும் அசத்துமாகிய, இரண்டினுள்ளுந்தோன்றி - இரண்டின் மத்தியிலும் உண்டாகி - பகருந்தொழில்களோடும் - சொல்லப்பட்ட செயல்களோடும், பயில்பாவனையும் அஃது - பழகும்பாவனையும் அந்தமனதின் உருவமே—எ-று.

எ - து. சகலசத்திகளும் உடையதாய் முடிவற்றிருக்கின்ற ஆத்மாவானது சொல்லப்பட்ட சங்கற்பத்துடன்கூடுகின்ற உருவமேமனமாகும் வலியுள்ள சத்தும் அசத்துமாகிய இரண்டின் மத்தியிலும் உண்டாகிச்சொல்லப்பட்டசெயல்களோடும்பழகும்பாவனையும்அந்தமனதின் உருவமே—எ-ம்.

இ-ந-க-ா. பிரமபூரணமேமனமாம். அஃது சடாசடங்களில் தோற்றியதையே பாவித்து அத்தன்மயமாயிருக்கின்றதாம். (3)

## அம் மனதைச் சித்திற்சேர்க்க திருஷ்டாந்தம் உரைத்தல்.

எங்கே யெனினுந் தோன்று மிந்த மனதை முத்திச்
சங்கே தத்தா லூகந தன்னிற் கூட்டி னன்றாம்
பங்கே ருகனே நியதோர் பழைய கதைநீ கேட்பாய்
வெங்கே தமமு மச்ச முமாய் வெறுமபொய் யாமோர் வன்மே,

இ-ள். எங்கேயெனினும் - எவ்விடத்து (உண்டா) யினும் (உண்டாகட்டும்), தோன்றுமெனினும் - (எந்த உருவமாகத்) தோற்றினலும் (தோற்றட்டும்), இந்தமனதை - இப்படிப்பட்டமனதை, முத்திச்சங்கேதம் - மோட்சம்டையுங்குறிப்பில், ஊகம் - உபாயங்களிலும், தன்னில் - ஆத்மாவிலும், கூட்டினன்றாம் - சேர்க்கின் நன்மையாம், பங்கேருகனேதியது - பிரமதேவன் சொன்னதாகிய, ஓர்பழைய கதை நீகேட்பாய் - ஒரு புராதனமானகதையை நீகேள், வெங்கேதமும் - கொடியதுன்பமும், அச்சமுமாய் - பயங்கரமுமாயிருக்கின்ற, வெறும்பொய்யாம் - முழுதுமித் தையாகிய, ஓர் வனம் - ஓர்காடுள்ளதாம்-எ-று.

எ - து. எவ்விடத்துண்டாயினும் உண்டாகட்டும். எந்த உருவமாகத் தோற்றினும் தோற்றட்டும். இப்படிப்பட்ட மனதை மோட்சமடையுங் குறிப்பில் உபாயங்களினும் ஆத்மாவிலும் சேர்க்கின் நன்மையாம். பிரமதேவன் சொன்னதாகிய ஓர் புராதனமான கதையை நீகேள். கொடியதுன்பமும் பயங்கரமுமாயிருக்கின்ற முழுதுமித்தையாகிய ஓர் காடுள்ளதாம்—எ-ம். (4)

இதுவுமது.

அதினோர் கோடி நீள மநந்த கோடி காதம்
இதிலோர் புருடன் கண்கை யெண்ணி லாத துடையோன்
சிதறு நின்ற நினைவோன் சேணு யகன்ற வடிவோன்
பதறு நின்ற கணையம் பலவுங் காத்தாற் பற்றி.

இ - ள். அதின் - அவ்வனத்தினது, ஓர் கோடிநீளம் - ஒருகடைப் புறத்தினளவு, அநந்தகோடிகாதம் - அளவற்ற காவதமாம், இதில் - இவ்வனத்தில், ஓர்புருடன்-ஒருபுமான், கண்கை-நேத்திரம் அத்தங்கள், எண்ணிலாததுடையோன் - அளவில்லாததையுடையவன், சிதறுநின்ற நினைவோன்-(பலவாகச்) சிதறுகின்ற கருத்துடையவன், சேணுயகன்ற வடிவோன் - ஆகாயம்போன்ற விரிந்த உருவமுள்ளவன், பதறுநின்ற கணையம்பலவும் - விரைவிற்செல்கின்ற வளைதடிகள் அநேகங்களையும், காத்தாற் பற்றி - கைகளில் தரித்துக்கொண்டு-எ-று.

எ — து. அவ் வனத்தினது ஒருகடைப்புறத்தினளவு அளவற்ற காவதமாம் இவ்வனத்தில் ஒரு பூமான் நேத்திரம் அத்தங்கள் அளவில்லாததையுடையவன். பலவாகச் சிதறுகின்ற கருத்துடையவன் ஆகாயம்போன்ற விரிந்த உருவமுள்ளவன். விரைவிற்செல்கின்றவளைதடிகள் அநேகங்களையும் கைகளில் தரித்துக்கொண்டு—எ-ம். (5)

இதுவுமது.

தனைத்தான் சிதற மோதித் தகர்ந்தே யுலறி யலறி
அனைத்தாந் திசையு மோடி யவச மாகி யடிபட்
டெனைத்தா முறுப்புந் தூளா யிருளாய் நடுக்க மிகுந்த
வினைத்தாழ் வுறுபாழ்ங் கிணற்றில் வீழ்ந்து நெடுநாண் மெலியும்.

இ - ள். தனைத்தான் சிதறமோதி - தன்னைத்தானேசிதறும்படியடித்து, தகர்ந்து- ஒடிந்து, உலறியலறி-வெகுண்டுகதறிக்கொண்டு, அனைத்தாந்திசையுமோடி - எல்லாத்திக்குகளிலும் ஓடி, அவசமாகி - வசந்தப்பி, அடிபட்டு (சகலத்திலும்) தாக்கி, எனைத்தா முறுப்புந்தூளாய் - சகல அவையவங்களுந்துகளாய், இருளாய் நடுக்கமிகுந்த - அந்தகாரமாகி பயம் அதிகரித்திருக்கின்ற, வினைத்தாழ்வுறு பாழ்ங்கிணற்றில் - தீவினையாகிய ஆழமுள்ள பாழுங்கிணற்றில், வீழ்ந்து நெடுநாண் மெலியும் - விழுந்து வெகுகாலம்மெலிவான்—எ-று

எ – து. தன்னைத்தானே சிதறும்படி அடித்து ஒடித்துவெகுண்டுகதறிக்கொண்டு எல்லாத்திக்குகளிலும் ஓடி வசந்தப்பிச் சகலத்திலுந்தாக்கிச் சகல அவயவங்களுந் துகளாய் அந்தகாரமாகிப் பயமதிகரித்திருக்கின்ற தீவினையாகிய ஆழமுள்ள பாழுங்கிணற்றில் விழுந்து வெகுகாலம் மெலிவான்—எ-ம். (6)

மீட்டு மெழுந்து வந்து மெய்யின் மோதிக் கதறி
ஓட்டந் தனிலே சுழலு முயர்முண் ணிறைந்த கருவேல்
காட்டின் முறிய விழுந்து கனலிற் புழுப்போற் பதைக்கும்
வாட்டந் தவிர்ந்து கதலி வனத்தின் மகிழ்வுற் றிருக்கும்.

இ – ள். மீட்டு மெழுந்துவந்து - திரும்பவும் எழுந்திருந்துவந்து, மெய்யின்மோதி-சரீரத்திலடித்து, கதறி-கதறிக்கொண்டு,ஓட்டந்தனிலேசுழலும்-ஓட்டத்திற்சுழலுவான், உயர்முண்ணிறைந்த-நீண்டமுட்கள் நிறைந்த, கருவேல் காட்டில் - கருவேலங்காட்டில், முறியவிழுந்து - முறியும்படிவிழுந்து, கனலிற்புழுப்போல்-அக்கினியில் (விழுந்த) விட்டிலைப்போல, பதைக்கும்-பதைபதைப்பான், வாட்டந்தவிர்ந்து - (இப்படி) வாடுதலைநீங்கி, கதலிவனத்தில் அரம்பை அடவியில், மகிழ்வுற்றிருக்கும் - களிப்புற்றிருப்பான்-எ-று.

எ - து. திரும்பவும் எழுந்திருந்து வந்து சரீரத்தில் அடித்துகதறிக்கொண்டு ஓட்டத்திற் சுழலுவான், நீண்டமுட்கள் நிறைந்த கருவேலங்காட்டில் முறியும்படி விழுந்து, அக்கினியில் விழுந்த விட்டிலைப்போல பதைபதைப்பான். இப்படி வாடுதலைநீங்கி அரம்பை அடவியில் களிப்புற்றிருப்பான்—எ-ம். (7)

இதுவுமது.

கதலி வனத்தைக் விட்டு கருவேல் வனத்திற் சுழலும்
பதறிக் கிணற்றில் வீழும் பலகா லுழலக் கண்டு
விதரு வகையாம் பற்றி வீணே வருந்து நீயார்
எதுசெய் கின்றாய் நினைவென் னென்ன வனிதி சைத்தான்.

இ - ள். கதலிவனத்தைவிட்டு - வாழைவனத்தை நீங்கி, கருவேல் வனத்திற்சுழலும் - கருவேலங்காட்டிற் சுழலுவன், பதறிக்கிணற்றில் வீழும்-விரைந்து கூபத்தில்விழுவன், பலகாலுழலக்கண்டு - (இப்படி) அநேகந்தரஞ் சுழலுதலைப்பார்த்து, விதருவகை - நடுங்காவண்ணம், யாம்பற்றி - நாம் பிடித்துக்கொண்டு, வீணேவருந்தும் - விருதாவாக வருந்துகின்ற, நீயார் - நீரெவர், எதுசெய்கின்றாய் - என்னசெய்கின்றாய், நினைவென்னென்ன - உனதுகருத்தியாதென்றுகேட்க, அவனிதிசைத்தான் - அவன் இதைக் கூறினான்-எ-று.

எ - து. வாழை வனத்தை நீங்கிக் கருவேலங் காட்டிற் சுழலுவன். விரைந்து கூபத்தில் விழுவன். இப்படி அநேகந் தரஞ்

சுழலுதலைப்பார்த்து நடுங்காவண்ணம் நாம் பிடித்துக்கொண்டு விருதாவாக வருந்துகின்ற நீரெவர். என்னசெய்கின்றாய். உனது கருத்தியாதென்று அவன் இதைக்கூறினான்-எ-ம். (8)

இதுவுமது.

யானென் றொருவ னில்லை யிங்கோர் செயலுங் காணேன்
நீநின் றுரைக்க நினைந்து நின்னாற் றளரா நின்றேன்
ஊனொன் றியவெம் பகைநீ யுன்னா லின்ப துன்பம்
நானென் றறிந்தே னென்று நல்குந் தன்னை நோக்கி.

இ-ள். யானென்றொருவனில்லை - நானென்று ஒருவனும் இல்லை, இங்கோர்செயலுங்காணேன் - இவ்விடத்து ஒரு தொழிலையுங் கண்டிலன், நீநின்றுரைக்க - நீயிருந்து (இப்பேதங்களைச்) சொல்ல, நினைந்து - கருதி, நின்னாற்றளராநின்றேன் - உன்னால் வாடுகின்றேன், ஊனொன்றியவெம்பகைநீ - ஊனம்பொருந்திய எமது சத்துரு நீ, உன்னாலின்பதுன்பம் - நின்னாற்சுகதுக்கங்களை, நானென்றறிந்தேனென்று - யானெனத்தெரிந்தேனென்று, நல்குந்தன்னைநோக்கி - அடிபட்ட தனது தேகத்தைப்பார்த்து--எ-று.

எ-து. நானென்று ஒருவனுமில்லை. இவ்விடத்து ஒருதொழிலையுங்கண்டிலன். நீயிருந்து இப்பேதங்களைச் சொல்லக்கருதி, உன்னால் வாடுகின்றேன். ஊனம்பொருந்திய எமது சத்துரு நீ நின்னாற் சுகதுக்கங்களை யானெனத் தெரிந்தேனென்று அடிபட்டத் தனது தேகத்தைப்பார்த்து—எ-ம். (9)

இதுவுமது.

இடிக்கு முகிலின் மழைபோ லிரங்கிக் கதறி யழுதான்
நொடிக்கு ளழுகை விட்டு நுணுக்கந் தன்னை நோக்கி
வெடிக்க நகைத்தா னெடிதா மீள வெமது முன்னே
தடிக்கு மங்க மனைத்துந் தானே யடவே தவிர்ந்தான்.

இ-ள். இடிக்கு முகிலின்மழைபோல் - சப்திக்கின்ற மேகத்தினது வருஷம்போல, இரங்கி - இரக்கமுற்று, கதறியழுதான் - (ஓவென்று) கூப்பிட்டழுதான், நொடிக்கு ளழுகை விட்டு - ஒருகணத்தில் அவ்வழுகையைவிட்டு, நுணுக்கந் தன்னைநோக்கி - நுண்மையான தனது சொரூபத்தைப் பார்த்து, நெடிதா - வெகுநேரமாக, வெடிக்க நகைத்தான - (வயிறு) பிளக்கும்படி சிரித்தான், மீள - திரும்பவும், எமதுமுன்னே - எமக்குமுன்பு, தடிக்குமங்கமனைத்தும் - பருத்திருக்கின்ற (தனது) வடிவங்களையெல்லாம், தானேயடவேதவிர்ந்தான் - தானே கிரமமாக நீங்கினான்--எ-று.

எ-து. சப்திக்கின்ற மேகத்தினது வருஷம்போல இரக்கமுற்று ஓவென்று கூப்பிட்டு அழுதான். ஒருகணத்தில் அவ்வழுகை

யைவிட்டு நுண்மையான தனது சொரூபத்தைப் பார்த்து வெகுநேரமாக வயிறு பிளக்கும்படி சிரித்தான். திரும்பவும் எமக்கு முன்பு பருத்திருக்கின்ற தனது வடிவங்களை யெல்லாம் தானே கிரமமாக நீங்கினுன்—எ-ம். (10)

இதுவுமது.

விதியின் வசத்தா லிவனே ரிடமே மேவ லுற்றான்
எதிர்வந் தொருவ னயலே யிவன்போ லடியுண் டேக
முதல்வந் தவனைப் போனு மொய்ம்பா யுணர்த்த வந்தப்
பதிகன் றானும் போனுன் பழைய வடிவ மொழிய.

இ-ள். விதியின் வசத்தால் - நியதியின்வயத்தினல், இவனேரிடமேவ லுற்றான் - இவன் ஓரிடத்திலடைந்தான், எதிர்வந்து - (எனக்) கெதிராக வந்து, ஒருவன்- ஒருபுருடன், அயல் - சமீபத்தில், இவன்போலடியுண்டேக- முன்சொன்னவனைப்போல் அடித்துக் கொண்டுபோக, முதல் வந்தவனைப் போல் - முன்வந்தவனைப்போல, நாமொய்ம்பாயுணர்த்த - நாமுறுதியாகப் போதிக்க, அந்தப்பதிகன்றானும் - அவ்வழிச் செல்வோனும், பழைய வடிவ மொழிய - முன்வடிவ நீங்க, போனுன் - சென்றான்.

எ-து. நியதியின்வயத்தினல் இவன் ஓரிடத்தில் அடைந்தான் எனக்கெதிராக வந்து ஒரு புருடன் சமீபத்தில் முன்சொன்னவனைப் போ லடித்துக்கொண்டுபோக, முன் வந்தவனைப்போல நாம் உறுதியாகப் போதிக்க அவ்வழிச் செல்வோனும் முன்வடிவ நீங்கச்சென்றான்—எ-ம். (11)

இதுவுமது.

பிறிது மொருவன் வந்தப் பெரிய கிணற்றில் வீழ்ந்தான்
சிறிதல் லாத காலந் திரும்பி யேறக் காணேம்
வெறிதுன் றியவவ் வனத்தில் வேறு மொருவன் வாலும்
அறிது மென்னத் தகைந்தே யான தெல்லா முரைத்தேன்.

இ-ள் பிறிது மொருவன்வந்து - வேறுமொருவன் வந்து, அப்பெரிய கிணற்றில் வீழ்ந்தான் - அப்பெரிதான (பாழ்ங்) கிணற்றில் விழுந்தான், சிறிதல்லாதகாலம் - வெகுநாள், திரும்பியேறக்காணேம் - திரும்ப ஏறிவரப்பார்த்திலம், வெறிதுன்றிய அவ்வனத்தில் - கலக்கமிகுந்த அக்காட்டில், வேறுமொருவன்வாலும் - மற்றொருவன் வரவும், அறிது மென்னத் தகைந்து - அறிவோமென்றுதடுத்து, ஆனதெல்லாமுரைத்தேன் - கூடியமட்டும் கூறினேன்.

எ—து. வேறுமொருவன் வந்து அப்பெரிதான பாழ்ங்கிணற்றில் விழுந்தான், வெகுநாள் திரும்பி ஏறிவரப் பார்த்திலம்,

கலக்கமிருந்த அக்காட்டில் மற்றொருவன்வரவும் அறிவோமென்று தடுத்துக் கூடியமட்டுங் கூறினேன்—எ-ம். (12)

இதுவுமது.

ஓதிற் றொன்றுங் கேளா துரப்பி யிகழ்ந்து மேன்மேன்
மோதிக் கொண்டு போனான் மூர்க்க ரவனைப் போல்வார்
வாதிப் புறுவார் நிறைந்து வயிர முள்ளாற் செறிந்து
பீதிக் கிடமா யிருள்சூழ் பெருங்கா டின்று முளதால்.

இ - ள். ஓதிற்றொன்றுங்கேளாது-சொன்னதில் ஒன்றுங்கேளாமல், உரப்பியிகழ்ந்து - அதட்டி நிந்தித்து, மேன்மேன்மோதிக் கொண்டுபோனான் - மேலுமேலும் அடித்துக்கொண்டு போயினான், மூர்க்கர் - மூர்க்கரும், அவனைப்போல்வார் - அவனை ஒத்தவர்களுமாகிய, வாதிப்புறுவார் - துன்பப்படுகின்றவர்கள், நிறைந்து - மிகுந்து, வயிரமுள்ளாற்செறிந்து - கூர்ந்த முட்களால் நெருங்கி, பீதிக்கிடமாய்-பயத்துக்கிடமா யிருக்கின்ற, இருள்சூழ்பெருங்காடு-அந்தகாரஞ்சூழ்ந்த மகாரணியமானது, இன்று முளது - இப்பொழுதும் இருக்கின்றது--எ-று.

எ — து. சொன்னதில் ஒன்றுங் கேளாமல் அதட்டி நிந்தித்து மேலுமேலும் அடித்துக்கொண்டு போயினான் மூர்க்கரும் அவனை ஒத்தவர்களுமாகிய துன்பப்படுகின்றவர்கள் மிகுந்துகூர்ந்தமுட்களால் நெருங்கிய பயத்துக்கிடமாயிருக்கின்ற அந்தகாரஞ் சூழ்ந்த பெரிய ஆரணியமானது இப்பொழுது மிருக்கின்றது—எ-ம். (13)

இதுவுமது.

அறவே கொடிதாய் வெந்த வடவி யெனினு மறிஞர்
நறவே கமழ்ந் துளிர்ந்த நந்த வனம்போன் மகிழ்வர்
மறவே லரசே யென்ற வசிட்ட முனியை நோக்கித்
துறவே புரிவா யிவற்றைத் தோன்றச் சொல்வா யென்றான்.

இ - ள். அறவேகொடிதாய் - மிகவுங்கொடியதாகி, வெந்த அடவியெனினும் - தத்தமானகாடானாலும், அறிஞர் - ஞானிகள், நறவேகமழ்ந்து குளிர்ந்த - வாசனைவீசிக்குளிர்ந்திருக்கின்ற, நந்தவனம்போன்மகிழ்வர் - புஷ்பவனத்தைப்போல சந்தோஷிப்பார்கள், மறவேலரசே-வலிமையுள்ளவேலையுடைய இராமா, என்ற - என்றுசொல்லிய, வசிட்டமுனியைநோக்கி - வசிட்டரிஷியைப்பார்த்து, துறவே புரிவாய் - சகலத்தியாகத்தையே அனுக்கிரகஞ்செய்பவரே, இவற்றை - இக்கதையை, தோன்றச்சொல்வாயென்றான் - விளங்கஅருள்வாயென்று இராமன்கேட்டார்-எ-று.

எ - து, மிகவுங் கொடியதாகி தத்தமான காடானாலும் ஞானிகள் வாசனைவீசிக் குளிர்ந்திருக்கின்ற புஷ்பவனத்தைப் போல

சந்தோஷிப்பார்கள், வலிமையுள்ள வேலையுடைய. இராமா என்று சொல்லிய வசிட்டரிஷியைப்பார்த்து சகலத்தியாகத்தை அனுக்கிரகஞ்செய்பவரே இக் கதையை விளங்க அருள்வாயென்று இராமன் கேட்டார்—எ-ம்.

(இ-கக-க-ம்) பாவித்த வடிவமாகிய மனது பிரவிர்த்தி நிவிர்த்திகளித் சடமாயுஞ் சித்தாயுமிருப்பதை அறிவித்தற்கு, அதுசெல்லும் விடயப் பிரபஞ்சத்தை வனமாகவும் அதிற்சஞ்சரிக்குமனதைப் புருடனாகவும் உருவகப்படுத்தி, அதின்கிரியையைப் பதினெண்விதமாகப் பகுத்துக் கூறினதாம். (14)

## உருவகத்தை வெளிப்படுத்தல்.

கேட்ட குரிசி லறியக் கிளர்மா முனிவ னுரைப்பான்
நாட்ட வடியு முடியு நடுவு மின்றிப் பொய்யாங்
கூட்ட மாகி யாழ்ந்து கொடிதாய் விகற்ப நெடிதாம்
ஈட்ட வுலகத் தியல்பே யாமுன் சொன்ன வனமே.

இ - ள். கேட்டகுரிசிலறிய - (இப்படிக்) கேட்ட அரசனறியும்படி, கிளர் மாமுனிவனுரைப்பான்-மகாமுனியான வசிட்டர்சொல்லுவார், (1)நாட்ட-ஸ்தாபிப்பதற்கு, அடியுமுடியுநடுவுமின்றி- ஆதிமத்தியாந்தமில்லாமல், பொய்யாங் கூட்டமாகி - மித்தியா சங்கமாகியும், ஆழ்ந்து-கெம்பீரமாகியும், கொடிதாய்-கொடியதாகியும், விகற்பநெடிதாம் - விகற்ப மிகுதியாகியு மிருக்கின்ற, ஈட்டவுலகத்தியல்பே - கூட்டமுள்ள சம்சார சுபாவமே, யாமுன் சொன்னவனம்-நாம்முன்சொல்லிய காடாம்—எ-று.

எ - து. இப்படிகேட்ட அரசன் அறியும்படிமகாமுனியானவசிட்டர் சொல்லுவார். ஸ்தாபிப்பதற்கு ஆதிமத்தியந்த மில்லாமல் மித்தியாசங்கமாகியும், கெம்பீரமாகியும், கொடியதாகியும், விகற்ப மிகுதியாகியுமிருக்கின்ற கூட்டமுள்ளசம்சார சுபாவமே நாமுன்சொல்லிய காடாம்—எ-ம். (15)

### இதுவுமது.

புகையார் வனத்திற் புருடன் புலம்பிச் சுழலு மனமே
தகையா நின்ற நாமுந் தனிவி வேகந் தானே
பகையா மிதனு ளுள்ளம் பரத்தை யறிந்தா னறிதான்
மிகையார் மனங்க ளிகழ்ந்து வேட்கை வசத்தோ டினவால்.

இ - ள். (2) புகையார் - (கோபாக்கினியின்) தூமநிறைந்த, வனத்தில் - (உலகமென்னும்) காட்டில், புருடன் - புருடனென்றவன், புலம்பிச்சுழலு மனமே - துன்புற்றுச்சுழலாநின்ற மனமேயாம், (8) தகையாநின்ற நாமும்-தடுக்கின்றயாமும், தனிவிவேகந் தானே - ஒப்பற்ற விவேகமேயாம், (15)

பகையாமிதனால் - பகையாகிய இவ் விவேகத்தினால், உள்ளம் - மனமானது, பரத்தை யறிந்து - பிரமத்தை யுணர்ந்து, ஆறினது - விஸ்ராந்தியை யடைந்ததாம் (18) மிகையார்மனங்கள் - குற்றம்பொருந்திய மனங்கள், இகழ்ந்து - (விவேகத்தை) நிந்தித்து, வேட்கைவசத்து - விடய வாசனுவயத்தில், ஓடின - சென்றன-எ-று.

எ - து. கோபாக்கினியின் தூமம்நிறைந்த உலகமென்னுங்காட்டில் புருடனென்றவன் துன்புற்றுச் சுழலாநின்ற மனமேயாம். தடுக்கின்ற யாழும் ஒப்பற்ற விவேகமேயாம். பகையாகிய இவ்விவேகத்தினால் மனமானது பிரமத்தை யுணர்ந்து விஸ்ராந்தியை யடைந்ததாம் குற்றம்பொருந்திய மனங்கள் விவேகத்தை நிந்தித்து விடய வாசனுவயத்தில் சென்றன—எ-ம். (16)

இதுவுமது.

விதறி யோடு மனங்கண் மேவு நரகங் கிணறு
கதலி வனம்விண் ணுலகங் கரிவேல் வனமண் ணுலகாஞ்
சிதறி விழுந்த கிணறறிற் றிரும்பி யெறு தொழிந்தோன்
பதறி நரகம் புகுந்து பாவந் தொலையா ததுவாம்.

இ - ள்: (5) விதறியோடு மனங்கள் - அடித்துக்கொண்டு செல்லாநின்ற மனங்களானவை, மேவுங்கிணறு - வீழுங்கிணறென்றது, நரகம் - நரகமாம், (7) கதலிவனம் - அரம்பாடவியென்றது, விண்ணுலகாம் - (போகநிறைந்த) சுவர்க்கலோகமாம், (6) கரிவேல்வனம் - (முட்கள்நிறைந்த) கரிவேற்காடென்றது, மண்ணுலகாம் - (மோகமுள்ளஸ்திரீபுருடர்கள் நிறைந்த) பூலோகமாம், (17) சிதறிவிழுந்த கிணற்றில் - சிதறிவீழ்ந்த கிணற்றினின்றும், திரும்பியேறு தொழிந்தோன் - திரும்ப ஏறுமற் கிடந்தவ னென்றது, பதறிநரகம்புகுந்து விரைவில் நரகத்திற் பிரவேசித்து, பாவந்தொலையாததுவாம் - பாவகன்ம நீங்காதமனமாம்-எ-று.

எ - து. அடித்துக்கொண்டு செல்லாநின்ற மனங்களானவை வீழுங்கிணறென்றது நரகமாம்; அரம்பாடவியென்றது போகநிறைந்த சுவர்க்கலோகமாம். முட்கள்நிறைந்த கரிவேற்காடென்றது மோகமுள்ள ஸ்திரீபுருடர்கள் நிறைந்த பூலோகமாம். சிதறிவீழ்ந்த கிணற்றினின்றும் திரும்ப ஏறுமற் கிடந்தவனென்றது விரைவில் நரகத்திற் பிரவேசித்துப் பாவகன்ம நீங்காத மனமாம. (17)

இதுவுமது.

முனையார் முள்ளென் றதுதான் மோக மனிதர் மடவார்
நினையா வின்ப துன்ப நின்னு லடைந்தே னீயே

வினையா மென்ற றுணர்வால் வீயு மனநொந் துரைத்த
தனையா ரழுத தென்ற தாசை யறுக்கு மலக்கண்.

இ - ள். (6) முனையார்முள்ளென்றதுதான் - கூர்மைபொருந்திய முள்ளென்றது, மோகமனிதர் மடவார் - காமாந்தகாரத்தையுடைய ஸ்திரீபுருடர்கள், (10) நினையாவின்பதுன்பம்-நினைக்கின்ற சுகதுக்கங்களை, நின்னாலடைந்தேன் - உன்னாற்பெற்றேன், (11) நீயேவினையாமென்றது - நீயேயெனக்குச் சத்துருவாமென்றது, உணர்வால் - அறிவினால், வீயுமனநொந்துரைத்தது நசிக்கின்ற மனது துன்புற்றுச்சொன்னது, (12) அனையாரழுததென்றது அவர்கள் அழுதார்களென்றுசொல்லியது, ஆசையறுக்குமலக்கண் இச்சையைக்கெடுக்கின்ற வருத்தமாம்—எ-று.

எ - து. கூர்மை பொருந்திய முள்ளென்றது காமாந்தகாரத்தையுடைய ஸ்திரீபுருடர்கள் நினைக்கின்ற சுகதுக்கங்களை உன்னாற்பெற்றேன், நீயே யெனக்குச்சத்துருவாமென்றது. அறிவினால்நசிக்கின்ற மனது துன்புற்றுச் சொன்னது, அவர்கள் அழுதார்களென்று சொல்லியது. இச்சையைக் கெடுக்கின்ற வருத்தமாம்—எ-ம். (18)

இதுவுமது

போதம் பாதி யாகிப் பூரண மாகா மனந்தான்
காதல் விடினொந் தயர்தல் கதறி யழுத ததுவாஞ்
சீத மாக மகிழ்ந்து சிரித்து நின்ற தென்ற
ஏதமில்லா ஞானத் தேக மான மகிழ்ச்சி.

இ - ள். (13) கதறியழுதது - கூப்பிட்டழுதசென்றது, போதம்பாதியாகி - ஞானமறைவரிசையுண்டாகி, பூரணமாகாமனந்தான் - (ஞான) நிறையாதமனமானது, காதல்விடில் - ஆசையைவிடும்போது, நொந்தயர்தல்-துன்பப்பட்டுவருந்துதல்,அதுவாம்-அவ்வருத்தமேயாம், (14)சீதமாகமகிழ்ந்து குளிர்ச்சியாகச்சந்தோஷித்து, சிரித்துநின்றதென்றது - நகைத்திருந்ததென்றது, ஏதமில்லாஞானத்து-குற்றமற்ற ஞானத்தில், ஏகமானமகிழ்ச்சி-ஒன்றான ஆநந்தமாம்—எ-று.

எ – து. கூப்பிட்டழுததென்றது ஞானமறைவரிசையுண்டாகி ஞானநிறையாத மனமானது ஆசையை விடும்போது துன்பப்பட்டு வருந்துதல் அவ் வருத்தமே யாம். குளிர்ச்சியாகச் சந்தோஷித்து நகைத்திருந்ததென்றது குற்றமற்ற ஞானத்தினால் ஒன்றான ஆநந்தமாம்—எ-ம். (19)

இதுவுமது.

முடிவின் ஞானத் தாலே மோகம் விட்ட மனந்தான்
வடிவை மாய்க்கும் பொழுது மகிழு மதுவே மகிழ்வாம

நெடிய மொய்ம்பி னாலே நிறுத்திக் கேட்டே மென்ற
நொடிவின் ஞான வலியா லுள்ள மொருப்பட் டதுவே.

இ-ள். (16) முடியின் ஞானத்தால் - அந்தமில்லாத ஞானத்தினால், மோகம்விட்டமனந்தான் - ஆசையைவிடுத்த மனமானது, வடிவைமாய்க்கும் பொழுது - தனது உருவத்தை நாசம்செய்யும்பொழுது, மகிழுமதுவே மகிழ்வாம் - சந்தோஷிப்பதே-சந்தோஷமாம், (9) நெடியமொய்ம்பினால் - மிகுந்த வலியினால், நிறுத்திக்கேட்டேமென்றது - தடுத்துக்கேட்டோமென்று சொல்லியது, ஓடிவின் ஞானவலியால் - அழிவற்றஞானோபதேசபலத்தினால், உள்ள மொருப்பட்டது - மனம் ஒருமைப்பட்டது-எ-று,

எ-து. அந்தமில்லாத ஞானத்தினால் ஆசையைவிடுத்த மனமானது தனது உருவத்தை நாசஞ்செய்யும்பொழுது சந்தோஷிப்பதே சந்தோஷமாம் மிகுந்த வலியினால் தடுத்துக்கேட்டோமென்றுசொல்லியது அழிவற்ற ஞானோபதேசபலத்தினால் மனம் ஒருமைப்பட்டது—எ-ம். (20)

இதுவுமது.

அங்கத் தறைந்து கொண்ட தடர்கற் பனைக ளாலே
பங்கப் படுவன் றுயராம் பரந்தோ டினதென் றதுதான்
மங்கத் தகுவா தனையான் மருண்டு சுழல்வ தாகுஞ்
சங்கற் பமுவா தனையுந் தனைத்தான் வலைபோற் றளிக்கும்.

இ-ள். (3) அங்கத்தறைந்துகொண்டது - சரீரத்தில் அடித்துக்கொண்டதென்றது, அடர்கற்பனைகளால் - மிகுந்த கற்பனைகளின், பங்கப்படுவன்று யாராம் - கெடுதிப்படுகின்ற வலியதுன்பங்களாம், (4) பரந்தோடினதென்றது தான் - நெடுந்தூரமோடினதென்றது, மங்கத்தகுவாதனையால் - கெடத் தகுந்தவாசனையால் (அடிபட்டு), மருண்டுசுழல்வதாகும் - மயங்கித்திரிவதாம், சங்கற்பமும் - சங்கற்பங்களும், வாதனையும் - வாசனைகளும், தனைத்தான் - தன்னைத்தானே, வலைபோல் - வலையைப்போல, தளைக்கும் - சிறைப்படுத்தும்.

எ-து. சரீரத்தில் அடித்துக்கொண்டதென்றது மிகுந்தகற்பனைகளின் கெடுதிப்படுகின்ற வலியதுன்பங்களாம். நெடுந்தூர மோடினதென்றது கெடத்தகுந்த வாசனையால் அடிபட்டுமயங்கித் திரிவதாம். சங்கற்பங்களும், வாசனைகளும், தன்னைத்தானே வலையைப் போல சிறைப்படுத்தும்—எ-ம்.

இ-எ க-ம். முன்றொகுத்துச்சொன்ன பதினெண் பகுப்பையு முறைப்படி யிலக்கம் வைத்து வகுத்துரைத்ததாம். (21)

## ஆனதால் மனதைக்கெடுக்கவெனல்.

கோசகாரப் புழுப்போற் கொடுங்கற் பனைவா' தனையாற்
பாச மடைவ ரியாரும் பகர்ந்த மனத்தின் கதையை
மாசி லாத மனத்தான் மதித்து மனத்தை மாய்ப்பாய்
தேச முடையா யென்று தெளிந்த வசிட்ட னுரைத்தான.

இ - ள். கோசகாரப்புழுப்போல் - கோசகாரக் கிருமியைப்போல, கொடுங்கற்பனை வாதனையால் - (தனது) கொடிய சங்கற்ப வாசனைகளால், இயாரும்பாசமடைவர் - யாவரும் பாசத்தையடைவார்கள், பகர்ந்த - சொல்லிய மனத்தின்கதையை-இம்மனத்தின்சரித்திரத்தை, மாசிலாதமனத்தால்-களங்கமற்றமனதினுல், மதித்து - வரையறுத்து அறிந்து, மனத்தை - (களங்க) மனதை, மாய்ப்பாய் - கெடுப்பாய், தேசமுடையாயென்று - தெளிவையுடைய, இராமாவென்று, தெளிந்த வசிட்டன் - தெளிவுள்ள வசிட்டமுனி, உரைத்தான் - சொன்னுர்—எ-று.

எ — து. கோசகாரக் கிருமியைப்போல தனது கொடியசங்கற்ப வாசனைகளால் யாவரும் பாசத்தை யடைவார்கள். சொல்லிய இம்மனத்தின்சரித்திரத்தை களங்கமற்றமனதினுல் வரையறுத்தறிந்துகளங்க மனதைக் கெடுப்பாய், தெளிவையுடைய இராமாவென்று தெளிவுள்ள வசிட்டமுனிசொன்னுர்—எ—ம்.

இ-ம். மனதை அகமுகத்திற்செலுத்தி வெகு முகத்திற் செல்லாமல் தடுக்கின் ஞானமயமாமென்பதாம். (22)

மனத்தின்கதை முற்றிற்று.

ஆக கதை 9-க்கு-கவிதை-411.

# பாலன் கதை.

அவதாரிகை.

முன்மனமானது சிற்பாவனையாற் சித்துஞ் செடபாவனையாற் சடமுமானதை அறிவித்து அதன் சங்கற்பரூபமானசகத்தை ஆத்மவிசாரமில்லாதவர்கள் எதார்த்தமாகப் பார்ப்பதைப் பாலன்கதையின் நிதரிசனமாகச் சொல்லுகிறார்.

## அறிஞர்கள்மனது பிரமமே யெனல்.

முழுதுசத் திபுமாய்ப் புராணமா யென்று முடிவறு பிரமமாவதுதா
பழுதின்ஞா னிகடம் மனமலா தில்லைப் பரமமா மிதிலிலாதில்லை [ன்
எழுதருஞ் சத்தி யாவுமா யிலங்கு மிவைகளோர் காலமொன் றுள
தாம், வழுவிலாப் பிரம முடையசிற் சத்தி மறிதரு முடல்களிற் றோ
ன்றும்.

இ - ள். பழுதின் ஞானிகடம் - குற்றமற்ற ஞானிகளுடைய, மனம்-மன்மானது, முழுது சத்தியுமாய் - சகலசத்திகளையுடையதாயும், புராணமாய்-பரிபூரணமாய மிருக்கின்ற, என்று முடிவறு - எப்பொழுதும் நாசமில்லாத, பிரமமாவதுதான் - பிரமசொரூபமாவதுதான், அலாதில்லை - அதையன்றி வேறின்று, பரமமாமிதில் - பிரமசொரூபமாகிய இதனிடத்தில், இலாதில்லை - இல்லாதவைகள் ஒன்றுமில்லை, எழுதருஞ்சத்தி - எழுதற்கரிய சிற்சத்தியானது, யாவுமாயிலங்கும் - சகலமுமாய்ப் பிரகாசிக்கும், இவைகள் - இச்சத்திகளில் ஓர்காலம் - ஒருகாலத்தில், ஒன்றுளதாம் - ஒருசத்தியுண்டாம், வழுவிலாப்பிரமமுடைய - குறைவில்லாதபிரமத்தினுடைய, சிற்சத்தி - ஞானசத்தியானது, மறிதரும் - அழிகின்ற, உடல்களிற் றோன்றும் - சரீரங்களில்தோற்றும்-எ-று.

எ - து. குற்றமற்ற ஞானிகளுடைய மனமானதுசகலசத்திகளையுடையதாயும் பரிபூரணமாயும் இருக்கின்ற எப்பொழுதும் நாசமில்லாத பிரமசொரூப மாவதுதான், அதையன்றி வேறின்று. பிரமசொரூபமாகிய இதனிடத்தில் இல்லாதவைக ளொன்றுமில்லை. எழுதற்கரிய சிற்சத்தியானது சகலமுமாய்ப் பிரகாசிக்கும். இச்சத்திகளில் ஒருகாலத்தில் ஒருசத்தியுண்டாம். குறைவில்லாத பிரமத்தினுடைய ஞானசத்தியானது அழிகின்ற சரீரங்களில் தோற்றும்—எ-ம். (1)

இதுவுமது.

காற்றிலே யசைவுங் கல்லிலே திடமுங் கனலிலே சூடும்வான் றனிலே தோற்றலா மையுநன் னீரிலேநெகிழ்வுந் தொலைவுறு மாய்விலே மாய்வும், ஊற்றமாம் விதையின் மரங்களும் போல வுள்ளுறை பிரமசத்திகடாம், ஆற்றல்சால் கால தேசசித் திரத்தா லவனியிற் சாலிபோற் றோன்றும்.

இ - ள். காற்றிலேயசைவும் - வாயுவிற்சலனசத்தியும், கல்லிலேதிடமும் - பாடாணத்திற் கடினசத்தியும், கனலிலேசூடும் - அக்கினியில் உஷ்ணசத்தியும், வான்றனிலே தோற்றலாமையும் - ஆகாயத்திற் சூனியசத்தியும், நன்னீரிலே நெகிழ்வும் - நல்லசலத்தில் இளகுசத்தியும், தொலைவுறு - தொலையாநின்ற, மாய்வும் - நாசத்திலே நாசசத்தியும், ஊற்றமாம் - வலியுள்ள, விதையின்மரங்களும் போல - வித்தில் அடங்கிய விருட்சங்களைப்போல, உள்ளுறை பிரமசத்திகடாம் - பிரமத்தினுள் அடங்கியிருக்கின்ற பிரமசத்திகளானவை, ஆற்றல்சால் - பலமிகுந்த, காலதேச சித்திரத்தால் - காலதேச விசித்திரத்தினால், அவனியில் - பூமியில், சாலிபோல் தோன்றும் - பயிர்களைப்போலத்தோற்றும் — எ-று.

எ - து. வாயுவிற் சலனசத்தியும், பாடாணத்திற்கடினசத்தியும், அக்கினில் உஷ்ண சத்தியும், ஆகாயத்திற்சூனியசத்தியும், நல்லசலத்தில் இளகுசத்தியும், தொலையாநின்ற நாசத்திலே நாசசத்தியும், வலியுள்ள வித்தில் அடங்கிய விருட்சங்களைப்போல பிரமத்தினுள் அடங்கியிருக்கின்ற பிரமசத்திகளானவை பலமிகுந்த காலதேச விசித்திரத்தினால் பூமியில் பயிர்களைப்போலத் தோற்றும் — எ-ம்.

இ-உ-க-ம். பிரமத்துக்கு அபின்னமான சிற்சத்தி யுல்லாசமே விசித்திரமான சகமாகத் தோற்றுகின்றதாம். (2)

அசத்தைச் சத்தாகக் காணுதல்.



பரமமே யெங்கு மென்று முண் டாகும் பயின்மன னத்தினன் மனமாந், தரமறு பந்த முத்திபே ருலகாஞ் சத்திக ளனைத்துமாய் நிற்குந், திரமறு தனையர்க் கன்னைசொற் கதைபோற் செப்பியவிவையெலாந் நிரமாங், காமலர் முகிலே யென்றனு மந்தக் கதையினை யிராகவன்வினவ.

இ — ள். பரமமே - பிரமசொரூபமே, எங்கும் - எவ்விடத்திலும், என்றும் - எப்போதும், உண்டாகும் - உண்டாயிருக்கும், (அப்பிரமமே) பயில் - சொல்

லப்பட்ட, மனனத்தினுன்மனமாம் - மனனத்தினுன் மனமாகவும், நாமறு - (இழிவிற்) சமானமில்லாத, பந்தம்-பந்தமுள்ள (சீவாத்மாவாகவும்), முத்தி - வீடுள்ள (பரமாத்மாவாகவும்), பேருலகாம்-பெரியவுலகமாகவும், சத்திகளனைத்துமாய்நிற்கும் - சத்திகளெல்லாமாகவும் இருக்கும், திரமறுதனையர்க்கு - ஸ்திரமில்லாதகுழந்தைகளுக்கு, அன்னைசொற்கதைபோல் - தாய்சொல்லப்பட்ட காதையைப்போல, செப்பியவிவையெலாம் - சொல்லிய இக்கற்பனைகளனைத்தும், நிரமாம்-நிலையாகும், கரமலர்முகிலே-கைகளென்னுந் தாமரைமலர்களையுடைய மேகமே, என்றலும் - என்று வசிட்டர்சொல்லவும், அந்தக்கதையினை - அச்சரித்திரத்தை, இராகவன் வினவ - இராமர்கேட்க—எ-று.

எ - து. பிரமசொரூபமே எவ்விடத்திலும் எப்போதும் உண்டாயிருக்கும் அப்பிரமமே சொல்லப்பட்ட மனனத்தினுன் மனமாகவும், இழிவிற் சமானமில்லாத பந்தமுள்ள சீவாத்மாவாகவும், வீடுள்ளபரமாத்மாவாகவும், பெரியவுலகமாகவும், சத்திகளெல்லாமாகவுமிருக்கும். ஸ்திரமில்லாத குழந்தைகளுக்குத் தாய்சொல்லப்பட்ட காதையைப்போல சொல்லிய இக்கற்பனைகளனைத்தும் நிலையாகும். கைகளென்னுந் தாமரை மலர்களையுடைய மேகமே என்று வசிட்டர் சொல்லவும் அச்சரித்திரத்தை இராமர்கேட்க—எ-ம்.

இ-ம். சத்தினுபாசமாகத் தோற்றுகின்ற மித்தையாரூபமான சகம், அறிவின்மையாற் சத்தாகப் பார்க்கப்படுகின்றதாம். (3)

## அசத்தைச் சத்தாக உரைத்தல்.

---

சித்தவஞ் சனையின் மூலமாங் கதையைச் செல்வனுக் கருந்தவ னுரைப்பான், மெய்த்தகை விலாதோர் சிறுவனீ யன்னை விரும்பியோர் கதைவிளம் பென்னச், சத்தியம் போல வெறும்பொய்யே யுரைப்பா டாணியன் குமரரோர் மூவர், சுத்தவீ ரமுநற் குணங்களுஞ் சிறந்தோர் சூனிய நகரிலே யுறைவோர்.

இ - ள். சித்தவஞ்சனையின் - மனவஞ்சனைக்கு, மூலமாங்கதையை-காரணமானகதையை, செல்வனுக்கு - இராமனுக்கு, அருந்தவனுரைப்பான்-அரிய தவமுள்ள வசிட்டர் சொல்லுவார், மெய்த்தகைவிலாதோர் சிறுவன் - மெய்யறிவில்லாத வொருபாலனானவன், விரும்பி - விருப்பமுற்று, அன்னைநீ - தாயேநீ, ஓர்கதைவிளம்பென்ன-ஒருகதையை யெனக்குச் சொல்வாயென்று கேட்க, சத்தியம்போல - உள்ளதுபோல, வெறும்பொய்யே யுரைப்பாள் முழுதுமித்தையான (வோர்கதையைச்) சொல்லுவாள், தாணியன் குமரரோர் மூவர் - இராசகுமாரர் மூன்றுபேர்கள், சுத்தவீரமும் - பரிசுத்தமாகிய வீரத்

திலும், நற்குணங்களும் - நல்லகுணங்களிலும், சிறந்தோர் - மிகுந்தவர்கள், ஒளியாகரிலேயுறைவோர் - இல்லாத பட்டணத்திலிருப்பவர்கள்—ஏ-று.

எ - து. மனவஞ்சனைக்குக் காரணமான கதையை இராமனுக்கு அரியதவமுள்ள வசிட்டர்சொல்லுவார். மெய்யறிவில்லாத ஒருபாலனவன் விருப்பமுறறு தாயே நீ ஒருகதையை யெனக்குச் சொல்வாயென்றுகேட்க உள்ளதுபோல முழுதுமித்தையான ஓர்கதையைச்சொல்லுவாள். இராசகுமாரா மூன்றுபேர்கள் பரிசுத்தமாகிய வீரத்திலும் நல்லகுணங்களிலும்மிகுந்தவர்கள் இல்லாத பட்டணத்தில் இருப்பவர்கள்—எ—ம். (4)

இதுவுமது.

மூவரி லிருவர் பிறந்தில ரொருவன் மூலமாங் கருவினுமில்லை
யாவதுங் கருதித் திரிபவர் விண்ணி லளவறு பழமரச்சோலை [ளூர்
மேவலு மதனிற் செழுங்கனி துய்த்து வெம்பசி தணிந்துமேற் சென்
காவருகாக மூன்றுநன் னதிகள் கரைபொரு திரையொடுங் கண்டார்.

இ - ள். மூவரில் - (இம்) மூன்றுபெயர்களில், இருவர்பிறந்திலர் இரண்டுபேர்கள் பிறந்ததேயில்லை, ஒருவன் - ஒருத்தன், மூலமாங்கருவினுமில்லை-காரணமாகிய கருப்பத்திலுமில்லை, யாவதுங்கருதித்திரிபவர் - சகலலாபமுமெண்ணிச் சஞ்சரிப்பவர்களாய், விண்ணில் - ஆகாயத்தில், அளவறுபழமரச்சோலை- மட்டற்ற கனிகளையுடைய வனத்தில், மேவலும் - பொருந்தவும், அதனிற் செழுங்கனி துய்த்து - அதிற்செழுமையான பழவகைகளைப்புசித்து, வெம்பசி தணிந்து - வெப்பமான பசிநீங்கி, மேற்சென்ளூர் - மேற்போயினூர்கள், காவருகாக-அக்கானகத்தின் பக்கத்தில், மூன்றுநன்னதிகள்-மூன்று ஆறுகளை, கரைபொரு - கரையின் மோதாநின்ற, திரையொடுங்கண்டார் - அலைகளுடன் பார்த்தார்கள்-எ-று.

எ - து. இம்மூன்றுபேர்களில் இரண்டுபேர்கள் பிறந்ததேயில்லை. ஒருத்தன் காரணமாகிய கருப்பத்திலுமில்லை. சகலலாபமும் எண்ணிச்சஞ்சரிப்பவர்களால் ஆகாயத்தில் மட்டற்றகனிகளையுடைய வனத்தில் பொருந்தவும், அதிற் செழுமையான பழவகைகளைப் புசித்து வெப்பமான பசிநீங்கி மேற்போயினூர்கள். அக்கானகத்தின் பக்கத்தில் மூன்று ஆறுகளைக் கரையின்மோதாநின்ற அலைகளுடன் பார்த்தார்கள்—எ-ம். (5)

இதுவுமது.

ஓடுநன் னதியி லிரண்டுநீ ரில்லை யொன்றுவெண் மணலதா மிதனில்
ஆடிநீர் துளைந்து பருகினூ ரந்தி யாகிமேல் வருநக ரடைந்தார்

வீடுமூன் றெதிர்ந்தா ரதிலிரண் டில்லை மேன்மாஞ் சுவரிலா தொன்று
கூடிய வவற்றிற் சுவரிலா வீட்டிற் குடிபுகுந் திருந்தனர் குமரர்.

இ - ள். ஓடுநன்னதியில் - வேகமாகச்செல்கின்ற நல்ல மூன்று ஆற்றி னுள், இரண்டுநீரில்லை - இரண்டிற் சலமில்லை, ஒன்று வெண் மணலதாம் - ஒன்று உலர்ந்த வெண்மணலையுடையதாம், இதனில் - இந்த நதியில், ஆடிநீர் துளைந்து - ஸ்நானஞ்செய்து, பருகினர் - (சலத்தை) பானம்பண்ணினர்கள், அந்தியாகி - சாயங்காலமாய், மேல்வரு நகரடைந்தார் - இனியுண்டாகும் பட்டணத்தைச்சேர்ந்து, வீடுமூன்றெதிர்ந்தார் - (அதில்) மூன்று வீடுகண்டார்கள், அதிலிரண்டில்லை - அம்மூன்றி லிரண்டில்லவேயில்லை, மேன்மாஞ் சுவரிலாதொன்று - மேலே மரங்களுஞ் சுற்றிச் சுவருமில்லாத வீடொன்று, கூடியவவற்றில் - சேர்ந்த அம்மனைகளில், சுவரிலாவீட்டில் - சுவரில்லாமனையில், குமரர் - (இராச) குமாரர்கள், குடிபுகுந்திருந்தனர் - குடியாகப் புகுந்திருந்தார்கள்—எ-று.

எ - து. வேகமாகச் செல்கின்ற நல்லமூன்று ஆற்றினுள் இரண்டிற் சலமில்லை. ஒன்றுஉலர்ந்த வெண்மணலையுடையதாம். இந்த நதியில் ஸ்நாநஞ்செய்து சலத்தை பானம் பண்ணினர்கள். சாயங்காலமாய் இனியுண்டாகும் பட்டணத்தைச் சேர்ந்து அதில் மூன்று வீடுகண்டார்கள். அம்மூன்றில் இரண்டில்லவேயில்லை. மேலே மரங்களுஞ் சுற்றிச் சுவருமில்லாத வீடொன்றுசேர்ந்த அம்மனைகளில் சுவரில்லாமனையில் இராசகுமாரர்கள் குடியாகப் புகுந்திருந்தார்கள் —எ-ம். (6)

இதுவுமது.

ஒருவருங் காணு நகரிலே வெளிவீட் டுறைபவர் கனகபாத் திர மூன், றருகுறக் கண்டா ரதிலிரண் டோடா மறவிலுந் தூளியா மொன்று, சொரூபமில் கடத்திற் றுரோணமூன் றதனிற் றுரோணமூன் றகன்றுமிக் கிருந்த, பருவரி சியைத்தாஞ் சமைத்துவா யில்லாப் பன வனொண் ணிலர்க்குமுன் படைத்தார்,

இ - ள். ஒருவருங்காணுநகரில் - ஒருவரும்பாராத பட்டணத்தில், வெளிவீட்டுறைபவர் - ஆகாயமனையிலிருப்பவர்கள், கனகபாத்திரமூன்று - மூன்று தமனியபாத்திரங்கள், அருகுறக்கண்டார் - தனதுபக்கத்திலிருக்கப்பார்த்தார்கள், அதிலிரண்டோடாம் - அதில் இரண்டு ஓடாகும், அறவிலுந்தூளியாமொன்று - மிகவுந் தூளாயிருப்பதொன்று, சொரூபமில் கடத்தில் - உருவமில்லாத (இப்) பாத்திரத்தில், துரோணமூன்றதனில் - ஆறுமரக்காலில், துரோணமூன்றகன்று - துணிபதக்கைத்தள்ளி, மிக்கிருந்த - மிகுந்திருந்த, பருவரிசியை - பருத்ததண்டுலத்தை, தாஞ்சமைத்து - தாங்கள் பாகஞ்செய்து,

வாயில்லாப்பனவர் - வாயில்லாதபிராமணன், எண்ணிலர்க்கு - அளவற்றவர்களுக்கு, முன்படைத்தார் - முன்புபறிமாறினர்கள்—எ-று.

எ – து. ஒருவரும் பாராத பட்டணத்தில் ஆகாயமனையிலிருப்பவர்கள் மூன்று தமனிய பாத்திரங்கள் தனது பக்கத்திலிருக்கப் பார்த்தார்கள். அதில் இரண்டு ஓடாகும். மிகவுந் தூளாயிருப்பதொன்று, உருவமில்லாத இபபாத்திரத்தில் ஆறுமரக்காலில் தூணிபதக்கைத்தள்ளி மிருந்திருந்த பருத்த தண்டுலத்தை தாங்கள் பாகஞ்செய்து வாயில்லாத பிராமணன் அளவற்றவர்களுக்கு முன்பு பரிமாறினர்கள்—எ-ம். (7)

இதுவுமது

அவரெலா நிரமப வுண்டபின் மிருந்த தருந்தினர் வேட்டைகளாடி, இவர்கண்மூ வருமங் கிருந்தன ரென்ன விளமையா னம்பினன் சிறுவன், புவனமு மிவ்வா றறிவிலோர் காண்பர் புகன்மன விரிவு சங் கற்பம், விவரமா மிதனு லுலகமா மிதனை விடுநிரு விகற்பநா யிடுநீ.

இ – ள். அவரெலாம் - அப்பிராமணர்களனைவரும், நிரம்பவுண்டபின் - பூரணமாகப் புசித்தபின்பு, மிருந்த தருநதினர் - சேடத்தை (பிரசாதமாகப்) புசித்து, வேட்டைகளாடி - வேட்டைகள்செய்துகொண்டு, இவர்கண் மூவரும் - இம்மூவர்களும், அஙகிருந்தனரென்ன - அத்தலத்தில் வசித்தார்கள் (என்று) அன்னைசொலல, இளமையால் - பாலப்பருவத்தினுல், சிறுவன் - குழந்தை, நம்பினன் - (எதார்த்தமாக) நம்பினன், புவனமும் - சகத்தையும், இவ்வாறு - இவ்வண்ணம், அறிவிலோர் காண்பர் - அஞ்ஞானிகள் பார்ப்பார்கள், புகன்மனவிரிவு - சொல்லப்பட்ட மனதின்விலாசமே, சங்கற்பம் - சங்கற்பமாம், விவரமாமிதனுலுலகமாம் - பகுத்துச்சொல்லுகின்ற இச்சங்கற்பத்தாற் சகமாம், இதனைவிடு - இச்சங்கற்பத்தை நீககு, நீ நிருவிகற்பமாயிடு - நீ நிருவிகற்பனுகககடவாய்-எ-று.

எ – து. அப்பிராமணர்களனைவரும் பூரணமாகப் புசித்தபின்பு சேடத்தைப் பிரசாதமாகப் புசித்து வேட்டைகள்செய்துக்கொண்டு இம்மூவர்களும் அத்தலத்தில் வசித்தார்களென்று அன்னைசொல்ல பாலப்பருவத்தினுல் குழநதை எதார்த்தமாக நம்பினன். சகத்தையும் இவ்வண்ணம அஞ்ஞானிகள் பார்ப்பார்கள். சொலலப்பட்டமனதின் விலாசமே சங்கற்பமாம. பகுத்துச் சொல்லுகின்ற இச்சங்கற்பத்தாற் சகமாம். இச்சங்கற்பத்தைநீக்கு நீ நிருவிகற்பனுகக்கடவாய் எ-ம்,

ப-ரி. அத்துவித ஆன்ம சொரூபத்தை தாணிபனென்றும், அதன்பிரதிபலனமான சிவேஸ்வர சகங்களை குமாரரொ மூவரென்றும் மித்தையா பிரதிர்தி

யில் வசிப்பவர்களைச் சூனியாகாரிலே உரைவோரென்றும், ஜீவேஸ்வரர் இரண்டும் உதித்திலரென்பதை மூவரிலிருவர் பிறந்திலரென்றும், உலகங்கருவினுமில்லை என்பதை ஒருவன்மூலமாங்கருவினு மில்லையென்றும், சிதாகாசத்தில் என்பதை விண்ணிலென்றும், மனோராச்சியத்தில் உண்டான அளவற்ற விடய சுகானுபவத்தை அளவறு பழமரச்சோலை மேவலும் அதனிற் செழுங்கனி துய்த்தென்றும், மூன்றவத்தைகளை மூன்று நன்னதிகளென்றும், நனவுகனவுகளிற் சாரமில்லையென்பதை ஓடுநன்னதியில் இவ்விரண்டுநீரில்லையென்றும், சூனியமான சுழுத்தியை ஒன்று வெண்மணலதாமென்றும், இவ்வவத்தையில் அழுந்திச்சுகிப்பதை இதனிலாடி நீர் துளைந்தென்றும், இனிவருஞ் சங்கற்ப வசமாவதை மேல்வரு நகரடைந்தாரென்றும், ஜீவேஸ்வர பிரமசாட்சியை அறிந்தார்களென்பதை வீடுமூன்றெதிர்ந்தாரென்றும், அதிற் ஜீவேஸ்வரரில்லையென்பதை அதில இரண்டில்லையென்றும், நிராதாரமான பிரமத்தைச் சுவரிலாவொன்றென்றும், அப்பிரம ஆதாரத்தில் இருப்பவர்களை வீட்டிற் குடிபுகுந் திருந்தனரென்றும், அகோசரமான சிதாகாசத்திலுறைபவரை ஒருவருங்காணு வெளிவீட்டுறைபவரென்றும், சச்சிதாநந்த தெரிசனத்தைக் கனக பாத்திரமூன்று அருகுறககண்டாரென்றும், அதிறசத்துச் சித்தின் தடிப்பை அதில இரண்டு ஓடாமென்றும, ஆநந்ததினுட்பத்தை அறிவினுந் தூளியாம் ஒன்றென்றும, உருவமற்ற ஆநந்தமயத்தை சொரூபமில் கடத்திலென்றும், காமாதிகளை துரோணமூன்றென்றும், இவையாறும நசித்தவிடத்திற் சேடித்ருந்த தத்துவமனதை அகன்றுமிகவிருந்த பருவரிசியையென்றும், அம்மனதை யனுபவத்திற் கரைத்தலைசமைத்தென்றும், அதை மகாமவுனத்தி னுல்லாசத்திற் சேர்க்கலை வாயில்லாப்பனவர் எண்ணிலாகரு முன்படைத்தாரென்றும், அவவருட் பிரசாதம்பெற்றதை மிகுந்தது அருந்தினரென்றும,சகநிஷ்டையில் எதிரறச்சஞ்சரித்திருக்கின்றார்களென்பதை வேட்டைகளாடி யிவர்நண் மூவரும் அஙகிருந்தனரென்றுங கூறினர்.

இ-நு-க-ம். பிரமத்தில ஆரோபிதமாகத் தோற்றின கற்பனைகளை நீக்கி அப்பிரமவடிவமான எதார்த்தமாய்ச் சஞ்சரிக்கவேண்டு மென்பதாம், (8)

பாலன்கதை முற்றிற்று.

ஆக கதை 10-க்கு கவிதை 419.

# சித்தன் கதை.

## அவதாரிகை.

முன்பு திருக்குதிருஷ்டியில்லாதவர்களுக்குத் திரிசியமுண்டுபோலத்தோற்று மென்பதை அறிவித்து அத்திரிசியஞ் சுகதுக்கானுபவமா யிருத்தலாற்கே வலமித்தையன்றிச் சிற்சத்திவிலாசமாயிருக்குமென்பதையும் அம்மனமே காலவளவா யிருத்தலையும் அறிவிக்கு நிமித்தம் சித்தன் கதையை நிரூபிக்கின்றார்,

## பிரமத்துக்குந் பந்தமின்றெனல்.



தங்கள்சங் கற்பத் தாலறி வில்லோர் சாலமோ கிப்பர்நல் லறிஞர்
பொங்குநல் விசார மதியினுன் மயங்கார் புந்தியாற் பொய்ம்மையை
யொழித்துத், துங்கமெய் யுணர்வாய்ப் பந்தமற் றிருந்துந் தொடர்
புறு பந்தமுண் டென்று, பங்கமுற் றயரே லமலமா யழியாப் பரம்
பொருள் பந்தமுற்றிடுமோ.

இ - ள். அறிவில்லோர் - அஞ்ஞானிகள், தங்கள்சங்கற்பத்தால் - தமது சங்கற்பத்தினுல், சாலமோகிப்பர் - மிகவுமயங்குவார்கள், நல்லறிஞர் - சுகஞானிகள், பொங்குநல்விசாரமதியினுன் மயங்கார் - பிரகாசிக்கின்ற ஆத்ம விசாரஞானத்தினுன் மயங்கார்கள், புந்தியால - அறிவினுல், பொய்ம்மையையொழித்து - மித்தையைநீக்கி, துங்கமெய்-பரிசுத்தமானவுண்மையை, உணர்வாய்-அறிந்துகொள்ளக்கடவாய், பந்தமற்றிருந்தும் - பந்தமில்லாதிருந்தும், தொடர்புறு பந்தமுண்டென்று - தொடர்கின்ற பந்தமுண்டா யிருக்கின்றதென்று, பங்கமுற்றயரேல் - வேறுபட்டுத்தளராதே, அமலமாய் - நின்மலமாயும், அழியாப்பரம்பொருள் - நாசமில்லாததாயுமிருக்கின்ற பிரமவஸ்து. பந்தமுற்றிடுமோ - கட்டுப்படுமோ—எ-று.

எ - து. அஞ்ஞானிகள் தமது சங்கற்பத்தினுல் மிகவுமயங்குவார்கள். சுகஞானிகள் பிரகாசிக்கின்ற ஆத்ம விசாரஞானத்தினுன் மயங்கார்கள். அறிவினுல் மித்தையைநீக்கி பரிசுத்தமான உண்மையை அறிந்துகொள்ளக்கடவாய். பந்தமில்லா திருந்தும் தொடர்கின்ற பந்தமுண்டா யிருக்கின்றதென்று வேறுபட்டுத் தளராதே. நின்மலமாயும் நாசமில்லாததாயு மிருக்கின்ற பிரமவஸ்து கட்டுப்படுமோ—எ-ம்.

இ-ம். சைதன்யம் ஒரு தன்மையதாகப் பிரகாசிக்க அதற்குப் பந்த மெய்ப்படி யுண்டாமென்பதாம். (1)

## மனதுக்கே பந்தமுத்தியுண்டெனல்.

அந்தமற் றொன்றாய் விகற்பமற் றறிவா யழிவிலாப் பரம்பொ ருளிருக்க, பந்தமுற் றவரார் முக்திபெற் றவரார் பாவனை விகற்ப மே யனைத்துஞ், சிந்தனை விரிவு பந்தமா மதனைத் தீர்ந்திடன் முத்தி யா மனத்தின், தொந்தலீ லையினாற் றூரமா மணித்துந் தூரமு மண் ணிதாய்த் தோன்றும்.

இ - ள். அந்தமற்று - (தேசகாலவஸ்துக்களான்) முடிவிறந்து, ஒன்றாய் - ஏகமாயும், விகற்பமற்று - (சுசாதீகவிசாதீசுகத) பேதமிறந்து, அறிவாய் - சின்மாத்திரமாயும் (இருக்கின்ற), அழிவிலாப் பரம்பொருளிருக்க - கெடாத பிரமவஸ்துவிருக்க, பந்தமுற்றவரார் - பந்தத்தையடைந்தவர் இயார், முத்தி பெற்றவரார் - வீடடைந்தவர் இயார், அனைத்தும் - சகலமும், பாவனைவிகற் பமே - பாவனுவிகற்ப விசாலமேயாம், சிந்தனைவிரிவுபந்தமாம் - நினைப்பின் விசாலமே பந்தமாகும், அதனைத்தீர்ந்திடன் முத்தியாம் - அதைவிடுவதே மோட்சமாகும், மனத்தின் றொந்தலீலையினால் - மனதினது தொந்தமான விளையாட்டினுல், அணித்துந்தூரமாம் - சமீபமுஞ்சேய்மையாம், தூரமும் - வெகுதூரமும், அண்ணிதாய்த்தோன்றும் - சமீபமாய்த்தோற்றும்-எ-று.

எ - து. தேசகால வஸ்துக்களான் முடிவிறந்து ஏகமாயும் சுசா தீக விசாதிக சுகபேதமிறந்து சின்மாத்திரமாயுமிருக்கின்ற கெடாத பிரமவஸ்துவிருக்க பந்தத்தை யடைந்தவர் இயார்? வீடடைந்தவர் இயார்? சகலமும் பாவனுவிகற்ப விசாலமேயாம். நினைப்பின் விசா லமே பந்தமாகும். அதை விடுவதே மோட்சமாகும். மனத்தினது தொந்தமான விளையாட்டினுல் சமீபமுஞ் சேய்மையாம் வெகுதூர மும் சமீபமாய்த்தோற்றும—எ-ம்.

இ-ம். மதிக்கின்ற மனதுக்கே சுகதுக்கமுண்டாம் என்பதாம். (2)

## மனமே தேசகாலமாயிருத்தலைத் திருஷ்டாந்தமாக அறிவித்தல்.

கருத்தின்வல் லமையாற் கற்பமோர் கணமாங் கணமொரு கற் பமா மிவற்றை க, திருஷ்டமா யுணர்ந்த மொருகதை யதனுற் செக மெனு மிந்திர சாலங், குருந்தரு வமான மனத்தினு ளிருக்குங் கொள் கைதோற் றிடுமென வுரைப்பான், ஒரு நகனிற் கரிச்சந் திரகுலத்து ள்ளா னுத்தர பாண்டவ நாட்டோன்

இ - ள். கருத்தின் வல்லமையால் - மனத்தின் வலியினுல், கற்பமோர் கணமாம் - கற்பகால மெ[illegible]ம், கணமொருகற்பமாம் - கணங்

கற்பகாலமாம், இவற்றை - இவைகளை, திருத்தமாயுணர்த்தும் - தெளிவாயறிவிக்கின்ற, ஒருகதை - ஓர்காதையாம், அதனுல் - அக்கதையால், செகமெனும் - உலகமென்கின்ற, இந்திரசாலம் - இந்திரசாலமானது, குருத்துவமான - பெருமைபொருந்திய, மனத்தினுளிருக்கும் கொள்கை - மனத்திலிருக்கின்ற தன்மையானது, தோற்றிடுமென - வெளியாகத் தோற்றுமென்று, உரைப்பான் - வசிட்டர்சொல்லுவார், இங்கொருத்தன் - இப்பூமியிலொருபுருடன், அரிச்சந்திரகுலத்துள்ளான் - அரிச்சந்திர வமிசத்திற் பிறந்தவன், உத்தரபாண்டவநாட்டோன் - உத்தரபாண்டவமென்னுந் தேயத்தையுடையவன—எ-று.

எ - து. மனத்தின் வலியினுல் கற்பகால மொருட்சணப்போதாம். க்ஷணங் கற்பகாலமாம். இவைகளைத் தெளிவாய் அறிவிக்கின்ற ஓர்காதையாம். அக்கதையால் உலகமென்கின்ற இந்திரஜாலமானது பெருமை பொருந்திய மனத்திலிருக்கின்ற தன்மையானது வெளியாகத் தோற்றுமென்று வசிட்டர் சொல்லுவார். இப்பூமியிலொருபுருடன் அரிச்சந்திரவமிசத்திற் பிறந்தவன். உத்தரபாண்டவமென்னுந் தேயத்தையுடையவன்—எ-ம்.

இ-ம். ஒன்றிற் பிரியம்வைத்து அதிற் சுகிக்கும்போது கற்பங்கணமாகவு மனதை அடைய முயற்சிக்கும்போது கணங்கற்பமாகவு மிருப்பது மனதேயன்றி வேறின்று என்பதாம். (3)

## சித்தன் மயக்குதல்.

செந்திரு வாணி புகழ்மகன் விந்தை செறிபுயன் லவணனும் பெயரோன், மந்திர நிறைந்த வமைச்சர்தற் சூழ மணிகொள்சிங் காதனத் திருப்ப, விந்திர ஜால வல்லவ னொருவ னெய்தின னிறைஞ்சி நின் றேத்திச், சந்திர னனைய பீலியின் சுழற்றுற் றாரபதி காண்கெனச்சுழற்ற.

இ - ள். செந்திரு - இலக்குமியும், வாணி - சரஸ்வதியும், புகழ்மகன் - துதிக்கின்ற இராசகுமாரன், விந்தை - விசையலட்சுமி, செறிபுயன் - வசிக்கின்ற புயங்களையுடையவன், லவணனும்பெயரோன் - லவணனென்னுநாமத்தையுடையவன், மந்திரநிறைந்த வமைச்சர் - ஆலோசனைகள் மிகுந்த மந்திரிகள், தாசூழ - தன்னைச் சூழும்படி, மணிகொள் - நவரத்தினங்களினுல்செய்த சிங்காதனத்திருப்ப - சிங்காதனத்தில் வீற்றிருக்க, இந்திரசாலம் - இந்திரசாலவித்தையில் வல்லவனொருவன் - வல்லமையுள்ள வொருபுருடன், எய்தினன் - வந்து, இறைஞ்சிநின்றேத்தி - வணங்கிப்புகழ்ந்து, சந்திரனனைய - மதிகொப்பான, பீலியின்சுழற்றுல் - (கண்கள்நிறைந்த) மயில்தோகையின் சுழலினுல், தாரபதிகாண்கெனச் சுழற்ற - அரசனே (இவ்வித்தையைப், பாருமென்று சுழற்ற—எ-று.

எ - து. இலக்குமியும், சரஸ்வதியும் துதிக்கின்ற இராஜகுமாரன், விசயலட்சுமி வசிக்கின்ற புயங்களை யுடையவன். லவணனென்னு நாமத்தை யுடையவன். ஆலோசனைகள் மிகுந்த மந்திரிகள் தன்னைச்சூழும்படி நவரத்தினங்களினாற் செய்த சிங்காதனத்தில்வீற்றிருக்க இந்திரஜால வித்தையில் வல்லமையுள்ள ஒரு புருடன் வந்து வணங்கிப்புகழ்ந்து மதிக்கொப்பான கண்கள் நிறைந்த மயில் தோகையின் சுழலினால் அரசனே இவ்வித்தையைப் பாருமென்று சுழற்ற—எ—ம். (4)

## குதிரைதோற்றல்.

சுத்தமாம் பரத்தாற் பலவித சிருட்டி தோற்றிடு மாயைதோற்றுதல்போற், சித்தனாற் காட்டிச சுழற்றுறு பீலித் திகிரியை மன்னவன் பார்த்தான், அத்தலந் தனிலே சயிந்தவ தேசத் ததிபதி விடுத்த வோர் தூதனை. தததுறு புரவி யொன்றுகொண் டெய்தி சதமகன் பரிகருநே ரென்று.

இ - ள். சுத்தமாம்பரத்தால் - பரிசுத்தமாகிய பிரமத்தினால், பலவித சிருட்டி நாநாவிதமானசிருட்டிகளை, தோற்றிடுமாயை-தோற்றுவிக்கு மாயையானது, தோற்றுதல்போல் - தோற்றுகின்றதுபோல, சித்தனாற்காட்டி - சித்தனென்பவன் (வித்தைமுதலானவற்றைக் காண்பித்து), சுழற்றுறு - சுழற்றுகின்ற, பீலித்திகிரியை - மயிலிறகின்வட்டத்தை, மன்னவன்பார்த்தான் - அரசன் பார்த்தான், அத்தலந்தனில் - அவ்விடத்தில், சயிந்தவதேசத்ததிபதிவிடுத்த - சயிந்தவதேசத்து அரசன் அனுப்பிய, ஓர் தூதன்-ஒருதூதனானவன், தத்துறு - தாவாநின்ற, புரவியொன்று - ஒருகுதிரையை, கொண்டெய்தி - கொண்டுவந்து, சதமகன்பரிகரு - தேவேந்திரன் குதிரைக்கு, நேரென்று - சமானமென்று—எ-று.

எ — து. பரிசுத்தமாகிய பிரமத்தினால் நாநாவிதமான சிருட்டிகளைத தோற்றுவிக்கு மாயையானது தோற்றுகின்றதுபோல சித்தனென்பவன் விததைமுதலானவற்றைக காண்பிதது சுழற்றுகின்ற மயிலிறகின வட்டத்தை அரசன் பார்த்தான். அவ்விடத்தில் சயிந்தவ தேசத்து அரசன் அனுப்பிய ஒருதூதனானவன் தாவாநின்ற ஒருகுதிரையைக் கொண்டுவநது தேவேநதிரன் குதிரைக்குச் சமானமென்று—எ-ம். (5)

## அறிவுபயயங்கல்.

மன்னவ வுனக்கென் றெங்கள்கோன் விடுத்த வயப்பரி யென்றனுஞ் சித்தன், இன்னதுபோல்வ திலலைநீ யிதனி லேறுவா யென்றனை

வினையோன், சொன்னவை கேட்டுச் சித்திரம் போலத் தூரகமே நாட்டமாய் வேந்தன், கன்னலீ ரிரண்டங் கிருந்தன னறிஞர் கவலை தீர் சமாதியுற்றென்ன.

இ - ள். மன்னவ - அரசனே, உனக்கென்று - உமக்கென்று, எங்கள் கோன்விடுத்த - எங்கள் அரசன் அனுப்பிய, வயப்பரியென்றலும் - வெற்றிக் குதிரை யென்றுசொல்லவும், சித்தன் - சாம்பிரியனுனவன், இன்னது போல்வதில்லை - இக்குதிரையை யொத்தது கிடையாது, நீ யிதனிலேறுவா யென்றனன் - நீர் இதனில் ஏறுமென்று சொல்லினன், இனையோன் - இத் தன்மையுள்ள சித்தன், சொன்னவைகேட்டு - கூறியவைகளைக்கேட்டு, சித்திரம்போல - ஓவியம்போல, தூரகமே - குதிரையே, நாட்டமாய் - நோக்காக, வேந்தன் - அரசன், கன்னலீரிரண்டு - முகூர்த்தநேரம், அறிஞர் கவலைதீர் சமாதியுற்றென்ன - ஞானிகள் துன்பமற்ற சமாதியிலிருந்ததுபோல, அங்கிருந்தனன் - அங்கிருந்தான்—எ-று.

எ - து. அரசனேஉமக்கென்று எங்கள்அரசன் அனுப்பியவெற்றிக்குதிரையென்று சொல்லவும சாம்பிரியனுனவன் இக்குதிரையை யொத்தது கிடையாது, நீர் இதனில் ஏறுமென்று சொல்லினன். இத் தன்மையுள்ள சித்தன் கூறியவைகளைகேட்டு ஓவியம்போல குதிரையே நோக்காக அரசன் முகூர்த்தநேரம் ஞானிகள் துன்பமற்ற சமாதியிலிருந்ததுபோல அங்கிருந்தான்—எ-ம். (6)

அறிவு தெளிதல்.

வேந்தவை யிருந்தோ ரையமும் வியப்பு மிகுந்தன ரரும்பியகமலப், பூத்திர ளோடை போற் குவிந் திருந்தார் போதமோ டுபாதியோ டலைந்து, மூர்த்தமோரிரண்டு சென்றபின் றவிசின முன்னுறவீழ்வுறு நின்ற, பார்த்திபன் றன்னை யயலுளோர் தாங்கப் பரந்துழன் மனந்தெளிந் துணர்ந்தான்.

இ - ள். வேந்தவையிருந்தோர் - இராசசபையிலிருந்தவர்கள், ஐயமும் - சந்தேகமும், வியப்பும் - அதிசயமும், மிகுந்தனர் - மிகுந்தார்கள், ஓடை - தடாகத்தில், அரும்பிய - குவிந்த, கமலப்பூத்திரள்போல் - தாமரைமலர் கூட்டத்தைப்போல, குவிந்தார் - (முகஞ்) சுருங்கியிருந்தார்கள், போதமோடு - அறிவுடனும், உபாதியோடு - உபாதியுடனும், அலைந்து - உழன்று, மூர்த்தமோரிரண்டுசென்றபின் - நான்குகடிகைநீங்கினபின்பு, தவிசின்-சிங்காதனத்தினது, முன்னுறவீழ் வுறுநின்ற - முன்பாக விழுநின்ற பார்த்திபன்றன்னை - இராசாவை, அயலுளோர்தாங்க - அருகிலிருப்பவர்கள் தாங்கிக்கொள்ள, பரந்துழன்மனம் - விரிந்துழல்கின்ற மனது, தெளிந்துணர்ந்தான் தெளிந்தறிந்தான்—எ-று.

எ - அ. இராசசபையிலிருந்தவர்கள் சந்தேகமும், அதிசயமும் மிருந்தார்கள். தடாகத்திற்குவிந்த தாமரைமலர்கூட்டத்தைப்போல முகஞ்சுருங்கி யிருந்தார்கள். அறிவுடனும் உபாதியுடனும் உமூன்று நான்குகடிகை நீங்கினபின்பு சிங்காதனத்தினது முன்பாக விழுகின்ற இராசாவை அருகிலிருப்பவர்கள் தாங்கிக்கொள்ள விரிந்துழல்கின்ற மனது தெளிந்தறிந்தான்—எ—ம்.

இ-சு க-ம். லவணன் அறிவு தெளியும்பொட்டு அவனுக்கு மனோமாயை யின் வல்லமையைத் தெரிவித்ததாம். (7)

## மனோராச்சியஞ்செய்த சரிதையை உரைத்தல்.

அனையவன் றன்னை யமலநெஞ் சினைநீ யயர்வுற வந்ததென் னென்ன வினைய மந் திரியர் வினவலும் வேந்தன் விழித்திது கேளுமென் றுரைப்பான், துனையுறப் பீலி சுழற்றியிச் சித்தன் சொல்லிட மயங்கியிப் பரிமேல், நினைவுற வேறி வேட்டையின் பொருட்டானீணெறி கடிதுறச் சென்றேன்.

இ - ள். அனையவன் றன்னை-அப்படிப்பட்ட அரசனை, அமலநெஞ்சினைநீ-நின்மலமான மனதையுடையநீர், அயர்வுறவந்ததென்னென்ன - தளரும்படி வந்ததென்னவென்று, வினையமந்திரியர் வினவலும - வணக்கமுள்ள அமைச்சர்கள்கேட்கவும், வேந்தன்விழித்து அரசன் விழித்துக்கொண்டு, இதுகேளுமென்றுரைப்பான் - இதைக்கேளுங்களென்றுசொல்லுவான், துனையுறப்பீலி சுழற்றி - சமீபமாக மயில்தோகையைச்சுழற்றி, இச்சித்தன் சொல்லிட - இச் சாம்பரிகன்சொல்ல, மயங்கி - (அறிவு) மயங்கி, இப்பரிமேல் - இக்குதிரையின் மேல், நினைவுறவேறி-நினைப்புடனேறி, வேட்டையின்பொருட்டு - வேட்டையாடுநிமித்தம், நீணெறி - வெகுதூரம், கடிதுறச்சென்றேன்-சீக்கிரத்திற்போயினன்-எ-று.

எ - து. அப்படிப்பட்ட அரசனை நின்மலமானமனதை யுடைய நீர் தளரும்படி வந்ததென்னவென்று வணக்கமுள்ள அமைச்சர் கேட்கவும் அரசன் விழித்துக்கொண்டு இதைக்கேளுங்களென்றுசொல்லுவான் சமீபமாக மயிற்றோகையைச் சுழற்றி இச் சாம்பரிகன் சொல்ல அறிவு மயங்கி இக்குதிரையின்மேல் நினைப்புடனேறி வேட்டையாடு நிமித்தம் வெகுதூரம் சீக்கிரத்திற் போயினன்—எ-ம். (8)

இதுவுமது.

அறிவறு மனத்தா லயர்வுறு போகத் தறிவிலார் மருண்டுபோவது போற், செறிநெடுந் தூரம் பரியினாற்சென்று தீயினா லியாவையும்வெந்து, பொறியெழும் பாலை வனத்திலே புகுந்து புரவியு மியானுமெய் வருந்தி, எறிசுடர் மேற்பா லெய்துறு மளவு மிடருற மயங்கிநெஞ் சிளைத்தேன்.

இ - ள். அறிவறுமனத்தால் - விவேகமில்லாதமனதினால், அயர்வுறுபோகத்து - வருத்தத்தையுடைய செல்வத்தில், அறிவிலார் - அஞ்ஞானிகள், மருண்டுபோவதுபோல் - மயங்கிச்செல்வதுபோல, செறிநெடுந்தூரம் - மிகவும்வெகுதூரம், பரியினாற்சென்று - குதிரையினாற்போய், தீயினால் - அக்கினியினால், இயாவையும்வெந்து - சகலமும்வெந்து, பொறியெழும் - பொறிகள் சிதறுகின்ற, பாலைவனத்திலேபுகுந்து - பாலைவனத்தில்நுழைந்து, புரவியுமியானும் - குதிரையும் நானும், மெய்வருந்தி - சரீரநொந்து, எறிசுடர் - வீசாநின்ற பிரகாசத்தையுடைய சூரியன், மேற்பால் - மேற்றிக்கில், எய்துறுமளவும் - அடையும் பரியந்தம், இடருறமயங்கி - துன்பத்துடன் மயக்கமுற்று, நெஞ்சிளைத்தேன் - மனந்தளர்ந்தேன் - எ-று.

எ - து. விவேக மில்லாத மனதினால் வருத்தத்தையுடையசெல்வத்தில் அஞ்ஞானிகள் மயங்கிச் செல்வதுபோல மிகவும்வெகுதூரம் குதிரையினாற்போய் அக்கினியினாற் சகலமும்வெந்து பொறிகள் சிதறுகின்ற பாலைவனத்தில் நுழைந்து குதிரையும் நானும் சரீரநொந்து வீசாநின்ற பிரகாசத்தையுடைய சூரியன் மேற்கு திக்கில் அடையும் பரியந்தம் துன்பத்துடன் மயக்கமுற்று மனந்தளர்ந்தேன் — எ-ம்.

இதுவுமது.

குடும்பபாரத்தை விவேகிகள் கடக்குங்கொள்கைபோற் பாலையைக் கடந்து, நெடும்பணை நாவற் கடம்பெலு மிச்ச நிறைந்துபுட்குரலினாலிரம்பி, இடும்பைதீர் சோலை யெய்தலு மாங்கோ ரிளங்கொடி பிணித்ததென் கழுத்திற், கடும்பரி யெனைவிட் டகன்றது கங்கை கலந்தவர் பாவமேயென்ன.

இ - ள். குடும்பபாரத்தை - சம்சாரசுமையை, விவேகிகள் ஞானிகள், கடக்குங்கொள்கைபோல் - துறந்து செல்கின்ற தன்மையைபோல, பாலையைக் கடந்து - பாலைவனத்தைத்தாண்டி, நெடும்பணை நாவல் - நீண்டகிளைகளையுடைய சம்புவிருட்சமும், கடம்பு - கடம்பவிருட்சமும் எலுமிச்சம் - எலுமிச்சவிருட்சமும், நிறைந்து-(எங்கும்) நெருங்கியும், புட்குரலினால்நிரம்பி-பட்சிசத்தங்களினால்நிரம்பியிருக்கின்ற, இடும்பைதீர்சோலை - துன்பமில்லாதவனத்தில்,

எய்தவும் - போகவும், ஆங்கு - அவ்விடத்தில், ஓரிளங்கொடி - ஓரழகிய வல்லியானது, என்கழுத்தில் - எனதுகண்டத்தில், பிணித்தது-சுற்றிக்கொண்டது, கங்கைகலந்தவர் - கஙகாநதியின் மூழ்கினவர்களுடைய, பாவமென்ன - பாவத்தைப்போல, கடும்பரி - வேகமுள்ளகுதிரையானது, என்னைவிட்டகன்றது- என்னைவிட்டு நீங்கிற்று-எ-று.

எ - து. சம்சாரசுமையை ஞானிகள் துறநது செல்கின்றதன்மையைப்போல பாலைவனததைததாண்டி நீண்டகிளைகளையுடைய சம்புவிருட்சமும, கடமபவிருட்சமும், மாதுளமிச்ச விருட்சமும், எங்குநெருங்கியும், பட்சியின் சத்தங்களினால்மி குநது மிருககின்றதுன்பமில்லாத வனத்திற்போகவும அவ்விடத்தில் ஓரழகியவலலியானது எனதுகண்டத்தில் சுற்றிக்கொண்டது. கங்காநதியின் மூழ்கினவாகளுடையபாவத்தைபபோல வேகமுளள குதிரையானது என்னைவிட்டு நீங்கிற்று—எ ம.. (10)

இதுவுமது.

கழுநதுறு கொடியா லூசல்போற றாங்கிக் காவுறா தெனறலாற் குளிர்நது, முழுக்திற மோகத் தழுநதிநெந சயர்நதேன முழுக்கு நற் பூசனை நியமம், விழுந்தகு நல்லூ ணின்றியே நிசியாம்வீண்பொழு தனையவப் பொழுதிற், பழுத்தவல விருளுந துன்பமுங் குளிரும் பல்லறைபோசையுந துணையாய்.

இ - ள். கழுத்துறு - கண்டத்திற்சுற்றிய, கொடியால - வல்லியினால், ஊசல்போல் -ஊசலைப்போல, தூஙகி-தொஙகிககொண்டு, காவுறை-கானகத்திற் பொருந்திய, தென்றலால தென்றற்காறறினால், குளிர்ந்து-குளிர்வுற்று, முழுத்திறம் - மிகுந்த திடத்தையுடைய, மோகந்தழுந்தி - மயக்கத்தின்முழுகி, நெஞ்சயர்ந்தேன் - மனந்தளர்ந்தேன். முழுககு - ஸ்நானமும், பூசனை - பூசையும், நியமம்-தியானமும், விழுத்தகுநல்லூண்-சிறந்தநலலபுசிபபுகளும், இன்றி- இல்லாமல், நிசியாம் வீண்பொழுதனைய - இராவென்கின்ற வீண்காலம்வர அப்பொழுதில் - அவ்விரவில பழுத்தவல்லிருளும் - முதிர்ந்த வலியவிருட்டும், துன்பமும் - துக்கமும், குளிரும் - குளிர்ச்சியும், பல்லறையோசையும் - பல்நடுககத்திேைசயும், துணையாய் - சகாயமாயிருகக —எ-று.

எ — து. கண்டத்திற் சுற்றிய வல்லியினால் ஊசலைப்போல தொங்கிக்கொண்டு கானகத்திற பொருநதிய தெனறறகாறறினால் குளிர்வுற்று மிகுந்த திடததையுடைய மயககததின் முழுகி மனநதளர்ந்தேன் ஸ்நானமும. பூசையும், தியானமும, சிறநத நல்ல புசிப்புகளுமில்லாமல் இரவென்கின்ற வீண்காலம வர அவ்விரவில் முதிர்ந்த

வலிய விருட்டும், துக்கமும், குளிர்ச்சியும், பல் நடுக்கத்திேனாசையும் சகாயமாயிருக்க—எ-ம். (11)

இதுவுமது.

மனத்திரு ளகற்று மறிவுபோ லந்த வல்லிரு ளிரவிவந் தகற்ற, புனைத்துறு கொடியை யறுத்தவ ணிறங்கி பொழில்புகுந் தொருவ ரைக் காணேன், கனத்ததோர் பகலி லெட்டிலொன் றூன கடிகையங் ககன்றதற் பின்னர், இனத்தலா ளொருத்தி தன்னைமுன் னெதிர்ந்தே னிரவினை மதியெதிர்ந் தன்ன.

இ-ள். மனத்திருளகற்றும் - மனோவிருளைநீக்குகின்ற, அறிவுபோல் - ஞானத்தைப்போல, அந்தவல்லிருள்-அவ்வலிய இருட்டை, இரவிவந்தகற்ற - சூரியனுதயமாகி நீக்க, புனைத்துறுகொடியை - கண்டத்திற் சுற்றியவல்லியை, அறுத்தவணிறங்கி - தறித்து அவ்விடத்திலிறங்கி, பொழில் புகுந்து - சோலையுள் நுழைந்து, ஒருவரைக்காணேன் - (அவ்விடத்து) ஒருவரையும் பார்த்திலன், கனத்ததோர்பகலில் - கனமான ஒரு மத்தியானத்தில், எட்டிலொன் றூனகடிகை - மூன்றேமுக்கால் நாழிகை, அகன்றதற்பின்னர்-கழிந்தபின்பு, இனத்தலாள் - (நமது) குலமல்லாத, ஒருத்திதன்னை - ஒருநீசப்பெண்ணை, இரவினை மதியெதிர்ந்தன்ன - இருளைச்சந்திரனெதிர்ந்ததுபோல, முன்னெதிர்ந்தேன் - (அவள்) முன்னெதிர்ப்பட்டேன்-எ-று.

எ-து மனோவிருளை நீக்குகின்ற ஞானத்தைப்போல அவ்வலிய இருட்டைச் சூரிய னுதயமாகி நீக்க கண்டத்திற் சுற்றியவல்லியைத்தறித்து அவ்விடத்திலிறங்கி சோலையுள்நுழைந்து அவ்விடத்து ஒருவரையும் பார்த்திலன். கனமான ஒரு மத்தியானத்தில் மூன்றேமுக்கால் நாழிகை கழிந்தபின்பு நமது குலமல்லாத ஒரு நீசப்பெண்ணை இருளைச சந்திரனெதிர்ந்ததுபோல அவள் முன் எதிர்ப்பட்டேன்—எ-ம.

புனைந்துறு வென்பது புனைத்துறுவென விகாரமாயிற்று, (12)

இதுவுமது.

கருகிய நிறமுங் கருநிறத் துகிலுங் கைத்தலத் தன்னமு மாகி, அருகுவந் துறலும் பசிப்பிணி யாற்று தவளைநா னன்னமே யன்னந், தருதியென் றிரந்தேன் பசியினு லெவர்க்குந் தாழ்வுவந் துறுமெனல் கண்டேன், மருதவஞ் செயாதோர் விரும்பிய பொருட்போன் மற்றவ ளளித்தில ளன்னம.

இ-ள். கருகிய நிறமும் - கறுத்த நிறமும், கருநிறத்துகிலும் - கறுநிற முள்ள வஸ்திரமும், கைத்தலத்து - அஸ்தத்தில், அன்னமுமாகி - அமுதுள்ளவளாய், அருகுவந்துறலும் - (என்) பக்கத்தில் வரவும், பசிப்பிணி யாற்றாது - பசிநோய் தாங்காமல், அவளை - அப்பெண்ணை, நான் - யான்,

அன்னமே - அன்னநடையாளே, அன்னந்தருதியென்று - அமுதைத்தருவா யென்று, இரந்தேன் - யாசித்தேன், பசியினால் - உதராக்கினியினால், எவர்க்கும் - யாவருக்கும், தாழ்வுவந்துறுமெனல் - இழிவுவருமென்பதை, கண்டேன் - தெரிந்தேன், வாந்தவந் தெபாகோர் - (சிந்தித்து) வரத்தக்க தவமியற்றாதவர்கள், விரும்பிய பொருட்போல் - இச்சித்த வஸ்துபோல, மற்றவள் - அப்பெண்ணானவள், அன்னம் - அமுதை, அளித்திலள் - கொடுக்க இல்லை-எ-று.

எ - து. கறுத்த நிறமும், கறுநிறமுள்ள வஸ்திரமும், அஸ்தத்தில் அமுதுள்ளவளாய் என்பக்கத்தில் வரவும், பசிநோய் தாங்காமல் அப்பெண்ணை யான் அன்னநடையாளே! அமுதைத் தருவாயென்று யாசித்தேன், உதராக்கினியினால் யாவருக்கும் இழிவுவருமென்பதைத் தெரிந்தேன். சிந்தித்தது வரத்தக்க தவமியற்றாதவர்கள் இச்சித்த வஸ்துபோல அப்பெண்ணானவள் அமுதைக் கொடுக்கவில்லை எ-ம். (13)

இதுவுமது.

சோலைதோ றுழலு மவள்பிற கேகி சோருமென் பசித்துயர் சொல்ல, நீலநின் றுரைப்பா ணீசர்கன் னிகையா னினக்கென தன்னமா மென்னின், மாலையிட் டெங்கட் சேரியிற் பிதாமுன் வந்தெனைப் புணர்தியே லிந்த, வேலையி லளிப்பே னென்றலு மியைந்தேன் விருப்பொடு மளித்தன ளன்னம்.

இ - ள். சோலைதோறுழலும் - தோப்புகள்தோறும் சுற்றுகின்ற, அவள் பிறகேகி - அவள்பின்னே தொடர்ந்து, சோரும் - வாடுகின்ற, என்பசித்துயர் சொல்ல - என்பசியின் வருத்தத்தைச்சொல்ல, நீலநின் றுரைப்பாள் - கரியவள்சொல்லுவாள், யான் - நான், நீசர் கன்னிகை - நீசப்பெண், நினக்கு - உமக்கு, எனதன்னமாமென்னில், எனது அமுதம் ஆகுமென்றால், எங்கள் சேரியில் - எங்களூரில், பிதாமுன்வந்து - (என்) தந்தையின்முன்வந்து, மாலையிட்டு - கலியாணஞ்செய்து, எனைப்புணர்தியேல் - என்னுடன் சேர்வையாயின், இந்தவேலையிலளிப்பேன் - இச்சமயத்திற் கொடுப்பேன், என்றலும் - என்றுசொல்லவும், இயைந்தேன் - (அதற்குச்) சம்மதித்தேன், விருப்பொடு - ஆசையோடும், அன்னம் - அமுதை, அளித்தனள் - கொடுத்தாள்-எ-று.

எ - து தோப்புகள்தோறுஞ் சுற்றுகின்ற அவள்பின்னே தொடர்ந்து வாடுகின்ற என்பசியின் வருத்தத்தைச்சொல்ல, கரியவள் சொல்லுவாள். நான் நீசப்பெண் உமக்கு எனது அமுதம் ஆகுமென்றால் எங்களூரில் என் தந்தையின் முன்வந்து கலியாணஞ்செய்து என்னுடன் சேர்வையாயின் அச்சமயத்திற் கொடுப்பேன் என்று சொல்லவும், அதற்குச் சம்மதித்தேன். ஆசையோடும் அமுதைக் கொடுத்தாள்—எ-ம்.

இதுவுமது.

நல்கிய பாதி யன்னமு மருந்தி நாவலின் கனிச்சுவை பருகி, யொல்கிய துயர்போ யிருத்தலும் புறத்தி துலாவுநல் லுயிரொன வென்னைப், புல்கிய கரத்தாற் பற்றினள் பிதாமுன் போயினள் யாதனு சரீர, மல்கிய பயஞ்செய் நரகிலே கொடுபோய் மறுக்கமே செய்யுமா றென்ன.

இ - ள். நல்கியபாதியன்னமும் - கொடுத்த பாதியமுதையும், அருந்தி- புசித்து, நாவலின்கனிச்சுவைபருகி - நாவற்பழ இரசமுங்குடித்து, ஒல்கிய துயர்போய் - தளர்ந்த பசித்துன்பநீங்கி, இருத்தலும் - இருக்கவும், புறத்தி லுலாவும் - புறத்திற்சஞ்சரிக்கின்ற, நல்லுயிரென - நற்பிராணியென்ன, என் னைப்புல்கிய - என்னைப்பொருந்திய, கரத்தாற்பற்றினள் - கைகளினுற்பிடித்து, யாதனுசரீரம் - சூட்சுமசரீரத்தை, மல்கியபயஞ்செய் - மிகவும் பயத்தைச்செய்கின்ற, நரகிலேகொடுபோய் - நரகத்திற்கொண்டுபோய், மறுக்கமே செய்யுமாறென்ன - வருத்துவதுபோல, பிதாமுன்போயினள் - (மனம் வருந்தத்தன்) தந்தைமுன் கொண்டுபோயினுள்—எ-று.

எ - து கொடுத்த பாதியமுதையும் புசித்து, நாவற்பழ இரசமுங் குடித்து, தளர்ந்த பசித்துன்ப நீங்கியிருக்கவும் புறத்திற்சஞ்சரிக்கின்ற நற்பிராணியென்ன என்னைப்பொருந்திய கைகளினுற் பிடித்து சூட்சும சரீரத்தை மிகவும் பயத்தைச்செய்கின்ற நரகத்திற் கொண்டுபோய் வருத்துவதுபோல மனம்வருந்தத் தன் தந்தைமுன் கொண்டுபோயினுள்—எ—ம். (15)

இதுவுமது.

நண்புறு மிவனென் னுயகனுக நல்கெனத் தாதையும் பொருந்திப், பண்புற விருவர் தமையும்வே தாள பந்தன வனத்தினின் றகன்று, கண்புகத் தோன்றுங் காலனு தரைப்போற் கருநிறத் தவன்கொடு போகி, உண்புலால் வீசுஞ் சேரியி லடைந்தா னொருப்படு மணஞ்செய்வா னுன்னி.

இ - ள். நண்புறுமிவன் - (எனக்) கிஷ்டமுள்ள இப்புருடனை, என்னுயகனுக - என் கொழுநனுக, நல்கென - கொடுப்பாயென்று (அப்பெண்) கேட்க, தாதையும்பொருந்தி - பிதாவுஞ்சம்மதித்து, பண்புற விருவர்தமையும்- குணப்பட இரண்டுபேர்களையும், வேதாளபந்தனம் - பசாசபந்தனமுள்ள, வனத்தினின்றகன்று - கானகத்தினின்றுநீங்கி, கண்புகத்தோன்றும் - விழிக்குத்தோற்றுகின்ற, காலனுதரைப்போல் - எமபடாளைப்போல, கருநிறத்தவன் கொடுபோகி - கரிய நீசனுனவன் அழைத்துக் கொண்டுபோய், உண்புலால் வீசும் - புசிக்கின்ற மாமிச வாசனைகள் பரிமளிக்கின்ற, சேரியிலடை

ந்தான் - தனதூரிலடைந்து, ஒருப்படுமணம் - ஒருமையான கலியாணம், செய்வானுன்னி - செய்யநினைத்து—எ-று.

எ — து. எனக்கிஷ்டமுள்ள இப்புருடனை என்கொழுனனுகக் கொடுப்பாயென்று அப்பெண்கேட்க, பிதாவுஞ்சம்மதித்துக் குணப் பட இரண்டுபேர்களையும் பசாசபந்தனமுள்ள கானகத்தினின்று நீங்கி விழிக்குத்தோற்றுகின்ற எமபடர்களைப்போல கரிய நீசனுனவன் அழைத்துக்கொண்டுபோய் புசிக்கின்ற மாமிசவாசனைகள் பரிமளிக் கின்ற தனது ஊரிலடைந்து ஒருமையான கலியாணம் செய்ய நினை த்து—எ—ம். (16)

இதுவுமது.

வானரம் புரவி குக்குடங் காகம் வராகமென் பனவரிந் தெடுப்ப
ஊனரம் புணங்க பறவைவீழ்ந் தலைப்ப வுலவிய சிறுவர்கைத்தசையில்
ஈனவீ யிரைப்ப வுதிரமு மென்பு மெல்லையிற் சேரியி லெய்தி [பால்.
கானரம் பைகளே நாட்டிய குடிலிற் கடிமணந் தொடங்கினர்களிப்

இ - ள். வானரம் - குரங்கும், புரவி - குதிரையும். குக்குடம் - கோழி யும், காகம் - காக்கையும், வராகம் - பன்றியும், என்பன - என்றுசொல்லப் பட்ட மாமிசவகைகளை, அரிந்தெடுப்ப - அரிந்தெடுக்கவும், ஊனரம்புணங்க- மாமிசங்கள் நரம்பில் (தோரணஙகளாக) காயவும், பறவைவீழ்ந்தலைப்ப பட்சி கள் உராய்ந்தலைக்கவும், உலவிய சிறுவர் - நடக்கின்ற குழந்தைகளுடைய- கைத்தசையில் - காத்திலிருக்கும் மாமிசங்களில், ஈனவீயிரைப்ப - இழிவுள்ள ஈக்கள் சத்திக்கவும், உதிரமும் - இரத்தமும், என்பும் - அஸ்தியும், எல்லையில், அவற்றிருக்கின்ற, சேரியிலெய்தி-பறைச்சேரியில்வந்து, அரம்பைகள்-வாழை களையே, கால் - காலாக, நாட்டியகுடிலில் - நட்டிருக்கின்றபந்தலில், களிப் பால் - சந்தோஷத்தினுல், கடிமணந்தொடங்கினர் - புதுமையான கல்யா ணஞ்செய்யத் தொடங்கினுர்கள்—எ-று.

எ - து. குரங்கும், குதிரையும், கோழியும், காக்கையும், பன்றி யும் என்று சொல்லப்பட்ட மாமிசவகைகளை அரிந்தெடுக்கவும், மாமி சங்கள் நரம்பில் தோரணங்களாகக்காயவும், பட்சிகள் உராய்ந்தலைக் வும், நடக்கின்ற குழந்தைகளுடைய காத்திலிருக்கும் மாமிசங்களில் இழிவுள்ள ஈக்கள் சத்திக்கவும், இரத்தமும், அஸ்தியும், அவற்றிருக் கின்ற பறைச்சேரியில்வந்து வாழைகளையே காலாக நட்டிருக்கின்ற பந்தலில் சந்தோஷத்தினுல் புதுமையான கல்யாணஞ் செய்யத்தொ டங்கினுர்கள்—எ-ம். (17

இதுவுமது.

மனிவூன் றன்னுஞ் சிறுகணு னோக்கி மருகனல் லவனென மகிழ்ந்
தாள், கலியினுங் கறுத்த கூன்கிழ மாமி கடையர்மற் றியாவருங்கூடி
ஒலிபடு பறைகண் முழக்கினர் மதுவு மூன்களுஞ் சமைத்தன ரவளை
நலிதரு பாவம் யாதனு சரீர நல்குமா றெனவவ னளித்தான்.

இ - ள். மனவிவூன்றன்னும் - இழிவுள்ள மாமிசநெருங்கிய, சிறுகணு னோக்கி -சிறியவிழிகளாற்பார்த்து, மருகன லலவனென - மருமகனல்லவனென்று, கலியினுங்கறுத்த கூன்கிழமாமி - யமனிலுங்கறுத்த கூனையுடையகிழமாமியானவள், மகிழ்ந்தாள் - களித்தாள், கடையர்மற்றியாவருங்கூடி - சண்டாளரனைவருஞ்சேர்ந்து, ஒலிபடுபறைகள் முழக்கினர் - சத்திக்கின்றவாத்தியங்கள் அடித்தார்கள், மதுவுமூன்களுஞ்சமைத்தனர் - கள்ளையும்மாமிசங்களையும் பாகஞ்செய்தார்கள், அவளை - அப்பெண்ணை, நலிதருபாவம் - அழிவுசெய்கின்ற பாவமானது, யாதனுசரீர நல்குமாறென - (நரகத்தில் வருந்துகின்ற) யாதனுசரீரத்தைக் கொடுப்பதுபோல, அவனளித்தான் - அந்த நீசன் கன்னிகாதானஞ்செய்தான்--எ-று.

எ - து. இழிவுள்ள மாமிசநெருங்கிய சிறியவிழிகளாற்பார்த்து மருமகனல்லவனென்று யமனிலுங் கறுத்தகூனையுடைய கிழமாமியானவள் களித்தாள் சண்டாளரனைவருஞ் சேர்ந்து சத்திக்கின்ற வாத்தியங்கள் அடித்தார்கள். கள்ளையும் மாமிசங்களையும பாகஞ்செய்தார்கள். அப்பெண்ணை அழிவுசெய்கின்றபாவமானது நரகத்தில் வருந்துகின்ற யாதனுசரீரத்தை கொடுப்பதுபோல அந்தநீசன் கன்னிகாதானஞ்செய்தான்---ம். (18)

இதுவுமது.

கடியபா தகங்க ளுருவுகொண் டனையகடையர்கல் யாணநா ளேழின்
முடிதலு மவளோ டெண்மதி கழித்தேன முகிண் முலை பூத்தவள்வா
ளுள், கொடியதோர் விபத்து தருநதுயர் போலோா குழநதையை
யளிக்கவக் குழநதை, வழ வற வெந்த கட்டைபோ னிறத்து வளர்ந்
தது மூர்க்கர்தம் மனம்போல்.

இ - ள். கடியபாதகங்கள் - கொடியபாவங்களானவை, உருவுகொண்டனைய - வடிவுகொண்டதுபோல, கடையர்கல்யாணம் - சண்டாளர்களுடைய விவாகமானது, நாளேழில் - ஏழுதினத்தில், முடிதலும் - நிறைவேறவும், அவளோடெண் மதிகழித்தேன் - அந்த நீசப்பெண்ணுடனிருந்து எட்டுமாதங் கழிததேன், முகிண்முலைபூத்தவள் - மூகைபோன்ற தனங்களு

டன்புஷ்பவதியானவள், வர்ஞன் - (என்னுடன் புணர்ந்து) சுகிக்குங்காலத்தில், கொடியதோர்பவித்து - கொடுமையான ஓர் ஆபத்து, தருந்துயர்போல்- கொடுக்கின்ற துன்பத்தைப்போல, ஓர்குழந்தையையளிக்க -ஒருகுழந்தையைப்பெற, அக்குழந்தை - அக்குழவியும், வடிவற வெந்த கட்டைபோல் - (தன்) னுருவுகெடவெந்த விறகைப்போலிருக்கின்ற, நிறத்து - கரிநிறத்தோடும், மூர்க்கர் தம்மனம்போல - மூடர்களுடைய மனதைப் போல, வளர்ந்தது - வளர்ந்தது—எ-று.

எ – து. கொடிய பாவங்களானவை வடிவுகொண்டதுபோல சண்டாளர்களுடைய விவாகமானது ஏழுதினத்தில் நிறைவேறவும் அந்த நீசப்பெண்ணுடனிருந்து எட்டுமாதங்கழித்தேன் முகைபோன்ற தனங்களுடன் புஷ்பவதியானவள் என்னுடன் புணர்ந்து சுகிக்குங்காலத்தில் கொடுமையான ஓர் ஆபத்து கொடுக்கின்ற துன்பத்தைப்போல ஒரு குழந்தையைப்பெற அக்குழவியும் தன்னுருவுகெட வெந்தவிறகைப்போலிருக்கின்ற கரி நிறத்தோடும் மூடர்களுடைய மனதைப்போல வளர்ந்தது—எ—ம். (19)

இதுவுமது.

பின்னர்மூ வாண்டிற் பேதைமை யளிக்குப் பிறப்பென வொருமகப் பெற்றுள், அன்னவண் மீட்டு மாசையிற்றோன்று மனர்த்தமேயென் னவோர் குழவி, தன்னையு மளித்தா ளிவரொடு நெடுநா டங்கினன் குடும்பபா ரத்தில் இன்னலா லவர்தா பத்தினுல் வருந்து மிடும்பை யாற் சரைத்ததென் யாக்கை.

இ - ள. பின்னர்மூவாண்டில் - பின்பு மூன்றுவருஷத்தில், பேதைமையளிக்கும்பிறப்பென-அறியாமையைக்கொடுக்கின்ற சநநத்தைப்போல, ஒருமகப்பெற்றுள் - ஒருபுத்திரனையீன்றுள், அன்னவண்மீட்டும் - அவள்திரும்பவும், ஆசையிற்றோன்றுமனர்த்தமே யென்ன - துராசையிலுண்டாகிய அனர்த்தத்தைப்போல, ஓர் குழவி தன்னையும் - ஒருகுழந்தையையும், அளித்தாள்-பெற்றுள், இவரோடும் - இம்மனைவிபுத்திரர்களோடும், நெடுநா டங்கினன்-அநேககாலங்கூடியிருந்தேன், குடும்பபாரத்தின்-சம்சாரத்தினது, இன்னலால்-துன்பங்களாலும், அவர்தாபத்தினுல் - அவர்கள் படும் வருத்தத்தினுலும், வருந்துமிடும்பையால்-நான் வருத்தப்படுகின்ற துன்பத்தினுலும், என்யாக்கை-எனது சரீரம்-சரைத்தது -.மூப்படைந்தது-எறு.

எ - து. பின்பு மூன்று வருஷத்தில் அறியாமையைக்கொடுக்கின்ற சநநத்தைப்போல ஒருபுத்திரனையீன்றுள். அவள் திரும்பவும் துராசையிலுண்டாகிய அனர்த்தத்தைப்போல ஒருகுழந்தையையும் பெற்றுள், இம்மனைவி புத்திரர்களோடும் அநேககாலங் கூடியிருந்தேன். சம்சாரத்தினது துன்பங்களாலும், அவர்கள்படும் வருத்தத்தி

னும்நான் வருத்தப்படுகின்ற துன்பத்தினாலும் எனதுசாரம் ரூபப டைந்தது —எ-ம். (20)

இதுவுமது.

வெம்புறு மூப்பான் மெலியுநா ளந்த விந்தவெற் பருகுறு சாரல் பைம்புயன் மறுத்து மண்ணினீர் சுண்டி பசியினு லுயிரெலாம் பதைப்ப, கொம்பொடு கொடியும் புல்லும்வெந் தெங்கும் கோடையாற் பொடிபா வரலும், எம்புதுக் கிளைஞ ரிறந்தவ ரநேக ரெங்கணு மேகினா ரநேகர்.

இ - ள். வெம்புறு - வருந்துகின்ற, மூப்பான்மெலியுநாள் - வயோகத்தி ஞ லிளைக்கின்ற காலத்தில், அந்தவிந்த வெற்பருகுறுசாரல் - அவ் விந்தமலை யின் பக்கத்திலிருக்கின்ற அடிவாரத்தில், பைம்புயன்மறுத்து - பசியமேகம் வருஷியாமல், மண்ணினீர்சுண்டி - பூமியிற் சலமில்லாமற்காய்ந்து, பசியினாலு யிரெலாம் பதைப்ப - உதராக்கினியினால் உயிர்கள் அனைத்துந்துடிக்க, கொம் பொடும் - கிளைகளையுடைய (விருட்சங்க) ளுடன், கொடியும் - (படர்கின்ற) கொடிகளும், புல்லும் - புல்லுகளும், வெந்து - எரிந்து, எங்கும் - எவ்விடத் தும், கோடையால் - வெய்யலினால், பொடிபடவாலும் - புழுதியாகும்படி வா வும், எம்புதுக்கிளைஞர் - எமது புதிய உறவினர்கள், அநேகரிறந்தனர்-வெகு பெயர் மரித்தார்கள், அநேகர் - பலர், எங்கணுமேகினர் - பலதேயங்களிலுஞ் (சிதறிப்) போனார்கள்-எ-று

எ - து. வருந்துகின்ற வயோதிகத்தினாலிளைக்கின்ற காலத்தில் அவ்விந்தமலையின் பக்கத்தி லிருக்கின்ற அடிவாரத்தில் பசியமேகம் வருஷியாமல் பூமியிற்சலமில்லாமற் காய்ந்து உதராக்கினியினால் உயி ர்கள் அனைத்துந்துடிக்க, கிளைகளையுடைவிருட்சங்களுடன்படர்கின்ற கொடிகளும், புல்லுகளும எரிந்து எவ்விடத்தும் வெய்யலினால்புழுதி யாகும்படிபாவும்எமது புதியஉறவினர்கள் வெகுபெயர்மரித்தார்கள், பலர் பலதேயங்களிலுஞ் சிதறிப்போனார்கள்—எ-ம். (21)

இதுவுமது.

தனையரி லிருவர் தோள்களி லிருப்ப தலையின்மீ தொருவனைத்தாங்கி மனைவியோ டேகி மெய்யெரி கொளுத்த மாய்வுறு தந்தநாடகன் றோர், பனையடி நிழலின் மைந்தரை யிறக்கி பதைப்பொரு சிறிதோ ழிந் திருந்தேன். வினைநா கேறி பழவினையோடே மேவியவின்பம தென்ன.

இ - ள். தனையரிலிருவர் - புத்திரர்களில் இரண்டுபேர், தோள்களில் - புசங்களிலும், ஒருவனை - மற்றொருவனை, தலையின்மீது - சிரசின்மேலும்

இருப்ப - இருக்கும்படி, தாங்கி - சுமந்துக்கொண்டு, மனைவியோடேகி - (எ னது) பாரியாளுடன்போய், மெய்யெரிகொளுத்த - சரீரத்தை உஷ்ணகிரண மெரிக்க, மாய்வுறாது - இறவாமல், அந்தாடகன்று - அத்தேயத்தைக்கடந்து, ஓர்பனையடிநிழலில் - ஒருபனைமரத்தடியினிழலில், மைந்தரையிறக்கி - புத்தி ரர்களையிழித்து, வினைநரகேறி - தீவினை (வடிவமான) நரகத்தினின்றுங் (கரை) யேறி, பழவினையோடு - பழைய (நல்) வினையுடன், மேவியவின்பம தென்ன - பொருந்திய சுகத்தைப்போல, ஒருசிறிது - சற்றுநேரம், பதைப் பொழிந்திருந்தேன் - சிரமந்தீர்ந்திருந்தேன்-எ-று.

எ - து. புத்திரர்களில் இரண்டுபேர் புசங்களிலும், மற்றொருவ னைச் சிரசின்மேலு மிருக்கும்படி சுமந்துகொண்டு எனது பாரியாளு டன்போய் சரீரத்தை உஷ்ணகிரணமெரிக்க இறவாமல் அத்தேயத் தைக்கடந்து ஒரு பனைமரததடியின் நிழலில் புத்திரர்களை யிறக்கித் தீவினை வடிவமான நரகத்தி னின்றுங் கரையேறி பழைய நல்வினையு டன் பொருந்திய சுகத்தைப்போல சற்றுநேரம் சிரமந் தீர்ந்திருந் தேன்—எ-ம். (22)

இதுவுமது

வளைதரு மூப்பால் வழிவருந் துயரான் மைந்தர்க ளிருவரைய ணைக்க, களைகொலோ துயிலோ சாய்ந்தனண் மனைவி கண்டுளங் க ரைந்துநா னிருந்தேன், இளையவன் றுயிலா தென்மடி யேறி யிருந் துநீர் சொரிதர வழுது, விளைபசி யாற்றே னுதிரமு மூனும் வேண்டு மிப் போதுதா வென்ன.

இ - ள். வளைதருமூப்பால் - சூழ்கின்ற சரையினாலும், வழிவருந் துய ரால் - வழிநடந்துவந்த துன்பத்தினாலும், மைந்தர்களிருவரையணைக்க - இர ண்டு பிள்ளைகளையுங் கட்டிக்கொள்ள, களைகொலோ - களைதானோ, துயி லோ - நித்திரைதானோ (என்னும்படி), மனைவி சாய்ந்தனள்-(எனது) தலைவி யிறந்தாள், கண்டுளங்கரைந்து - (அதைப்) பார்த்து மனமுருகி, நானிருந் தேன் - யானிருந்தேன், இளையவன்றுயிலாது இளையபிள்ளை யுறங்காமல், என் மடியேறியிருந்து - என்மடியிலேறி யிருந்துக்கொண்டு, நீர் சொரிதர வழுது - (இரண்டு.கண்களினுஞ்) சலம் பெருக வழுது, விளைபசியாற்றேன்- (மிகவும்) உண்டாகின்ற பசிக்குச்சகிக்கேன், உதிரமும் - இரத்தமும், ஊனும்- மாமிசமும், வேண்டும் - (யான்) புசிக்கவேண்டும், இப்போதுதாவென்ன- இப்போது கொடென்று கேட்க-எ-று.

எ - து. சூழ்கின்ற சரையினாலும், வழி நடந்துவந்த துன்பத்தி னாலும், இரண்டுபிள்ளைகளையுங் கட்டிக்கொள்ள களைதானோ? நித் திரைதானோ? வென்னும்படி எனது தலைவி யிறந்தாள். அதைப்பார்

த்து மனமுருகி யானிருக்கேன். இளையபிள்ளை யுறங்காமல் என்மடி யிலேறி யிருந்துக்கொண்டு இரண்டு கண்களிலுஞ் சலம்பெருக அழுது மிகவும் உண்டாகின்ற பசிக்குச் சகிக்கேன். இரத்தமும் மாமிசமும், யான் புசிக்கவேண்டும். இப்போது கொடென்றுகேட்க எ-ம். (23)

இதுவுமது

இட்டமா மிளவ லென்னெதிர் பதைப்ப வென்செய லேதுமற் றுயிர்போய், கட்டைபோ லிருந்தேன் விடாதவ னழுத கண்ணினீர் கண்டறக் கரைந்து, மட்டிவன் வாரா னென்றுயிர் விடுவான் வனக் கனல் வளர்த்ததில் வீழக், கிட்டிநின் றுழைந்தே னிந்தவா சனத்தின் கீழ்வுற வீழ்வுறு மளவில்.

இ-ள். இட்டமா மிளவல் - பிரியமுள்ள இளைய குழந்தையானவன், என்னெதிர்பதைப்ப - என் (கண்) முன்னே துடிக்க, என்செயலேதுமற்று- நான்செய்வ தொன்றுமின்றி, உயிர்போய் - பிராணன்பிரிந் (திருக்கின்ற) கட்டைபோலிருந்தேன் - சவத்தைப்போலிருந்தேன், விடாதவ னழுத கண்ணினீர்கண்டு - அவன் ஓயாமல் அழுத கண்ணீரைப்பார்த்து, அறக்கரைந்து - மிகவுங் கரைந்து, மட்டிவன் வாரானென்று - மிகத்திவிவன்பிழையானென்று (எண்ணி), உயிர்விடுவான் - (யானும்) பிராணனை விடும்பொருட்டு, வனக்கனல்வளர்த்து - காட்டாக்கினியை வளர்த்து, அதில்வீழக்கிட்டிநின்று- அவ்வக்கினியில் வீழும்படி சமீபித்திருந்து, உழைந்தேன் - எழும்பினேன், இந்தவாசனத்தின் - இச்சிங்காதனத்தி (லிருந்து), கீழ்வுற வீழ்வுறுமளவில்- கீழேவிழுகின்ற சமயத்தில்—எ-று.

எ-து. பிரியமுள்ள இளைய குழந்தையானவன் என் கண் முன்னே துடிக்க நான் செய்வ தொன்றுமின்றி, பிராணன் பிரிந்திருக்கின்ற சவத்தைப்போ லிருந்தேன். அவன் ஓயாமல் அழுதகண்ணீரைப் பார்த்து மிகவுங் கரைந்து மிகத்தி லிவன் பிழையானென்றெண்ணி யானும் பிராணனை விடும்பொருட்டு காட்டாக்கினியை வளர்த்து அவ்வக்கினியில் விழும்படி சமீபித்திருந்து எழும்பினேன். இச்சிங்காதனத்திலிருந்து கீழேவிழுகின்ற சமயத்தில்.

(இ-ர-க-ம்.) மனோராச்சியத்திலுண்டான கற்பனைகளை வியப்புற்று ஆசாரியர் முதலியோர்க்கு அறிவித்ததாம். (24)

## சீவ அவத்தைகளை அறிந்தேனெனல்.

தாங்கினீர் பலருஞ் சயசய வென்னத் தாக்குறு பல்லிய முழக்க, ஈங்குணர் வுற்றே னீசனன் றாகி லவணனு மன்னவ னானேன், தீங்குறு சித்தன் செயலின்மோ கித்தேன் சீவனுக் கவத்தைகளனேகம், பாங்குற வுளவென் றறிந்தன னென்று பகர்வுழி யொழித்தனன்சித்தன்.

இ - ள். தாங்கினீர்பலரும் - (என்னைத்) தாங்கினவர்களாகிய நீங்கள் அனைவரும், சயசயவென்ன - சயசயவென்றுசொல்ல, தாககுறு பல்லிய முழக்க - அடிக்கப்பட்ட சகலவாத்தியஙகளுஞ் சத்திக்க, ஈங்குணர்வுற்றேன்-இவ்விடமறிந்தேன், நீசனன்றாகி - சண்டாளன் அல்லாதவனும், லவணனுமன்னவனானேன் - லவணனென்னும் அரசனானேன், தீங்குறுசித்தன்செயலின்மோகித்தேன் - குற்றம்பொருந்திய சித்தனது வித்தையினால் மயங்கினேன், சீவனுக்கு - சீவாத்மாவுககு, அவத்தைகள் - அவத்தைகளானவை, அநேகம் பாங்குறவுளவென்று - பலவுரிமையாக உண்டாயிருக்கின்றனவென்று, அறிந்தனனென்று - தெரிந்தேனென்று, பகர்வுழி - சொல்லுஞ் சமயத்தில், சித்தன் சாம்பரிகன், ஒளித்தனன் - மறைந்தனன்-எ-று.

எ - று. என்னைத்தாங்கினவர்களாகிய நீங்கள் அனைவரும் சயசயவென்றுசொல்ல, அடிக்கப்பட்ட சகலவாத்தியங்களுஞ் சத்திக்க, இவ்விடமறிந்தேன், சண்டாள னல்லாதவனும் லவணனென்னும் அரசனானேன். குற்றம்பொருந்திய சித்தனது வித்தையினால் மயங்கினேன். சீவாத்மாவுக்கு அவத்தைகளானவை பல உரிமையாக உண்டாயிருக்கின்றனவென்று தெரிந்தேனென்று சொல்லுஞ் சமயத்தில் சாம்பரிகன் மறைந்தனன்—எ—ம். (25)

## சித்தன் நீங்குதல்.

இருந்தமந் திரிகள் சித்தனென் றிவனா ரென்றனு மிமைப்பினுண் மறைந்தான், பொருந்திய வுலக மனமென வேறே புலப்படக் காட்டுவரன் விடுத்த, திருந்திய தெய்வ மாயையி தாகுஞ் செப்புமிச் செயலினாற் றீரப், பெருந்தகை பரத்தின் விகாரமே மனமாம் பேருலகென்றன னென்றான்.

இ — ள். இருந்தமந்திரிகள் - (சபையில்) இருந்த அமைச்சர்கள், சித்தனென்றிவனாரென்றனும் - சித்தனென்ற இவன் ஆர் என்று விசாரிக்கவும், இமைப்பினுண் மறைந்தான் - (கண்) இமைக்கு முன்னொளித்தான், பொருந்தியவுலகம் - அடைந்த சகமானது, மனமென - மனமே யென்று, வேறே

புலப்படக்காட்டுவான் - பிரிவாகத் தெரியக் காட்டும்பொருட்டு, விடுத்த - அனுப்பிய, 'திருந்திய - திருத்தமான, தெய்வமாயையீதாகும் - தேவமாயை யானது இதுவாகும், செப்புமிச்செயலினல் - சொல்லப்பட்ட இச்செய்கைக ளினல், தீரப்பெருந்தகை - தீரமுள்ள அரசனே, பரத்தின் - பிரமத்தின், விகாரமே - தறபிரகாசமே, மனமாம் - மனமாகிய, பேருலகு - பெரியசக மாம், என்றனர் - என்று (சத்துக்கள்) சொன்னர்கள், என்றான் - என்று வசி ட்டமுனி சொன்னர்—எ-று.

எ - து. சபையிலிருந்த அமைச்சர்கள் சித்தனென்ற இவனுரெ ன்று விசாரிக்கவும், கண இமைக்கு முன் ஒளித்தான். அடைந்தசக மானது மனமேயென்று பிரிவாகத்தெரியக காட்டும்பொருட்டு அனு ப்பிய திருத்தமான தேவமாயையானது இதுவாகும். சொல்லப் பட்ட இச்செய்கைகளினல் தீரமுள்ள அரசனே பிரமத்தின் தற் பிரகாசமே மனமாகிய பெரியசகமாம் என்று சததுக்கள் சொன்னர் கள் என்று வசிட்டமுனி சொன்னர்—எ-ம். (26)

சித்தன்கதை முற்றிற்று.

ஆக கதை 11-க்கு கவிதை 445.

# உற்பத்திப் பிரகரணம்.

அவதாரிகை.

மூன்பு சிற்பிரதிபலமான மனதுக்கே அற்பநேரம் அநேககாலமான சம்சாரம் வந்ததன்றிச் சித்துக்கு இன்று என்று அறிவித்து இம்மனதைச் சித்திற் கரைத்துச் சின்மயமாய் பிரகாசிப்பிக்குநிமித்தம் ஞானவிண்மகன்முத லிய எண்கதையின் சாரமுள்ள உற்பத்திப் பிரகரணத்தைச் சொல்லு கிறார்.

மனேவல்லமை யாதெனின்.

ஆய மனத்தின் செயல் செயலா மதனு லொழிந்த தொழிந் துளதாம்
மேய மனத்தி னலேவொழிததோர் மிகவு நலல தியானததோர்
தூய மனமா யிடிலவெறபாற சுழலாக் கடல்போற பிறப்பிறப்பா
மாயை மயககங் கெடுமென்னு வசிட்டன மீண்டு முரைசெய்வான்.

இ - ள். ஆயமனத்தின் செயல்செயலாம் - (இப்படி) ஆனமனத்தினது தொழிலே தொழிலாம், அதனல் - அம்மனதினல், ஒழிந்தொழிந்துளதாம் - விடுபட்டதே விடுபட்டதாம், மேயமனத்தினலேவு - உண்டானமனே சாஞ் சல்யத்தை, ஒழித்தோா - விடுத்தவர்கள், மிகவுநல்லதியானத்தோர் - மிகவு

முத்தமமான நிஷ்டையுள்ளவர்கள், தூயமனமாடியில் - பரிசுத்த மகாமனங் கெட்டால், வெற்பால் - (மந்தர) கிரியினால், சுழலாக்கடல்போல் - அலைவு படாத (பால்) சமுத்திரம்போல (அறிவுநிச்சலமாய்) , பிறப்பிறப்பாம் - சநந மரணமென்கின்ற, மாயைமயக்கங்கெடுமென்று - சம்சாரமயக்கம் நாசமாமெ ன்றுசொல்லி, வசிட்டன் - வசிட்டமுனி, மீண்டு முறைசெய்வான் - திரும்ப வுஞ் சொல்லுவார்-எ று.

எ - து. இப்படியான மனத்தினது தொழிலே தொழிலாம், அம்மனதினால் விடுபட்டதே விடுபட்டதாம், உண்டான மனோசாஞ் சல்யத்தை விடுத்தவர்கள், மிகவுமுத்தமமான நிஷ்டையுள்ளவர்கள், பரிசுத்த மகாமனங்கெட்டால் மந்தரகிரியினால் அலைவுபடாத பால் சமுத்திரம்போல அறிவுநிச்சலமாய் சநநமரணமென்கின்ற சம்சார மயக்க நாசமாமென்றுசொல்லி வசிட்டமுனி திரும்பவுஞ் சொல்லு வார்— எ-ம். (1)

இதுவுமது.

தளையா நிற்கும் பலபோகச சங்கற் பஞ்சேர் மனவிருத்தி
முளையால் வளரு மாமாயை மோக மென்னு நச்சுமரம்
விளையா நின்ற மனநோய்க்கு மேலோர் விதித்த பரிகாரம்
இளையா தெளிதா யதனாலே யியற்ற லாகு மிதுகேட்பாய்.

இ - ள். தளையாநிற்கும் - பந்தித்திருக்கும், பலபோக சங்கற்பஞ்சேர் - நாநாவிதபோகங்களினது சங்கற்பம் அடைந்திருக்கின்ற, மனவிருத்தி - மன விருத்தியென்னும், முளையால் - அங்குரத்தினால், மாமாயை மோகமென்னும்- மகாமாயாமயக்கமென்கின்ற, நச்சுமரம் - விடவிருட்சமானது, வளரும்-விருத் தியடையும், விளையாநின்ற மனநோய்க்கு - வளராநின்ற மனோவியாதிக்கு, மேலோர் விதித்த - சத்துக்கள் நியமித்த, பரிகாரம் - அவுஷதமானது, இளை யாதெளிதாய் - வருத்தமில்லாமற் சுளுவாக, அதனால் - அம்மனதினால், இயற் றலாகும் - செய்யப்படும், இதுகேட்பாய் - இதைக்கேட்பாயாக —எ-று.

எ - து பந்தித்திருக்கும் நாநாவித போகங்களினது சங்கற்பம் அடைந்திருக்கின்ற மனவிருத்தியென்னும் அங்குரத்தினால் மகாமா யாமயக்கமென்கிற விடவிருட்சமானது விருத்தியடையும், வளரா நின்ற மனோவியாதிக்கு சத்துக்கள் நியமித்த அவுஷதமானது வருத் தமில்லாமற் சுளுவாக அம்மனதினால் செய்யப்படும். இதைக்கேட் பாயாக—எ-ம்.

இ-உ-க-ம். மனோ சங்கற்பமே மாயை முதலியவைகளாகத் தோற்று மென்பதாம். (2)

## அம்மனோநாச உபாயம் இயாதெனின்.

மிகமா லுறுபல்பொருள்களையுமேவாதொழித்தோர்மனம்வென்றோர்
சுகமா யெளிதாய்த் தனக்குரித்தாந் துயர்தீர் நிராசையறிவரியோர்
சகமா மனித புழுவொப்பார சான்றோ ருரைத்த நூற்பழகி
அகமா நினைவு தீர்மனத்தா லயரு மனதைத் திருப்பிடலாம்.

இ - ள். மிகமாலுறு - மிகவும் இச்சிக்கப்பட்ட, பல்பொருள்களையும் - சகல வஸ்துக்களையும், மேவாதொழித்தோர் - விரும்பாமல் நீக்கினவர்கள், மனம்வென்றோர் - மனதைச்செயித்தவர்கள், சுகமாய் சுகமாகவும், எளிதாய்- இலகுவாகவும், தனக்குரித்தாம் - தனக்குரியதாகவுமிருக்கின்ற, துயர்தீர் - துக்கமற்ற, நிராசையறிவரியோர் - வயிராக்கியஞானம் பெறாதவர்கள், சகமா மனித புழுவொப்பார்-உலகத்தின்கண்உள்ள மானிடக்கிருமிக்குஇணையாவார்கள், சான்றோர் - அறிஞர்கள் (உபதேசத்தாலும்), உரைத்த - (ஈஸ்வரன்) கூறிய, நூல் - சுருதி (முடிவாகிய மகாவாக்கியார்த்தத்தாலும்), பழகி - (ஆத்மா) னுசந்தானஞ்செய்து, அகமா நினைவு தீர்மனத்தால் - நானென்னுஞ் சங்கற்பமிறந்தமனதினால். அயருமனதை-(வெளிமுகமாய்) வருந்துமனதை, திருப்பிடலாம் - (அந்தர்முகத்திற்சுகிக்கத்) திருப்பலாம்—எ று.

எ - து மிகவும் இச்சிக்கப்பட்ட சகல வஸ்துக்களையும் விரும்பாமல் நீக்கினவர்கள் மனதைச் செயித்தவர்கள் சுகமாகவும், இலகுவாகவும், தனக்குரியதாகவு மிருக்கின்ற துக்கமற்ற வயிராக்கிய ஞானம்பெறாதவர்கள் உலகத்தின்கண் உள்ள மானிடக்கிருமிக்கு இணையாவார்கள். அறிஞர்கள் உபதேசத்தாலும் ஈஸ்வரன் கூறிய சுருதிமுடிவாகிய மகாவாக்கியார்த்தத்தாலும ஆத்மானு சந்தானஞ்செய்து நானென்னுஞ் சங்கற்ப மிறந்தமனதினால் வெளிமுகமாய் வருந்துமனதை அந்தர்முகத்திற் சுகிக்கத்திருப்பலாம்- எ - ம்.

இ-ம். சுருதி யுத்தி யனுபவம் உள்ள மனதினால் அவையின்றிய மனதைக் கெடுக்க வேண்டுமென்பதாம் (3)

## அம்மனது இறக்கில் பலன் இயாதெனின்.

இரும்பா லிரும்பு திருத்துவபோ லியற்று மனத்தான் மனந்திருந்தாந்
திரும்பா நிராசை வடிவாகிச் செறியுந் தன்னா லியற்றுவதாய்
விரும்பா நின்றோர்க் கெளிதான வெய்ய மனத்தி னுபசாந்தி
பெரும்பா ரந்தீர் நற்கதியாம் பிறிதோர் கதியு நன்றாகா.

இ - ள். இரும்பால் - அரத்தினால், இரும்புதிருந்துவதுபோல் - அயந்திருத்தப்படுவதுபோல், இயற்றும் - (சன்மார்க்கத்தின்) முயற்சிக்கின்ற, மனத்தால்-(சுத்த) மனதினால், மனந்திருந்தும் - (அசுத்த) மனந்திருத்தப்படும், திரும்பாமீளாத, நிராசைவடிவாகி - இச்சாத்தியாகமே புருவாகியும், செறியுந்தன்னால்-பொருந்தியதனது (முயற்சியி) னால், இயற்றுவதாய் - சாதிக்கத்தக்கதாகியும், விரும்பாநின்றோர்க்கு-(மோட்ச) இச்சையுடையவர்களுக்கு, எளிதான-லேசாகியு மிருக்கின்ற, வெய்யமனத்தி னுபசாந்தி-வெவ்வியமனத்தின் ஒழிவே, பெரும்பாரந்தீர் - பெரும்பார நீங்கிய, நற்கதியாம் - பரகதியாம், பிறிது-வேறோர்கதியும்நன்றாகா - ஒருகதியு நன்மையாகாது—எ-று.

எ - து. அரத்தினால் அயந்திருத்தப்படுவதுபோல சன்மார்க்கத்தின் முயற்சிக்கின்ற சுத்தமனதினால் அசுத்தமனந் திருத்தப்படும், மீளாத இச்சாத்தியாகமே யுருவாகியும், பொருந்திய தனது முயற்சியினால் சாதிக்கத்தக்கதாகியும், மோட்ச இச்சையுடையவர்களுக்குலேசாகியு மிருக்கின்ற வெவ்வியமனத்தின் ஒழிவே பெரும்பார நீங்கிய பரகதியாம் வேறே ஒரு கதியுநன்மையாகாது—எ-ம்.

இ-ம். மனோநாசமான இடமே பரசுகமென்பதாம். (4)

## அப் பரமசுகம் எப்படியுண்டாம் எனின்.



வாவு மனத்தை யசங்கற்ப வாளா லறுக்கி னிறைந்தெங்கு
மியாவு மதுவாம் பொருடோன்று மிந்த வழிநின் றறிவாலே
மேவு மனதை விழுங்கியதின் மேலாய் மாயா விகற்பமிலா ]ய்.
ஒவு மதியா லறிவையடைந் துளத்தை விழுங்கும் பொருளுணர்வா

இ - ள். வாவுமனத்தை - (ஒன்றைவிட்டொன்றில்) தாவிக்கொண்டிருக்கின்றமனதை, அசங்கற்பவாளால் - சங்கற்பரகிதமென்னுங் கத்தியினால், அறுக்கில் - கெடுத்தால், எங்கும் - எவ்விடத்தும், நிறைந்து - பரிபூரணமாய், யாவுமதுவாம் பொருடோன்றும் - சகலமுந் தன்மயமாய் விளங்குகின்ற வஸ்துபிரசன்னமாம், இந்தவழிநின்று - இம்மார்க்கத்திலிருந்து, அறிவால் - ஞானத்தினால், மேவும் - விரும்பத்தக்க, மனதைவிழுங்கி - மனதைப்புசித்து, அதின்மேலாய் - அதற்கு மேலானதாய், மாயாவிகற்பமிலா - சம்சார விகற்பமில்லாத, ஓவுமதியால் - சகலத்தியாகமான அறிவினால், அறிவையடைந்து - (ஆத்ம)ஞானத்தையடைந்து, உளத்தை - மனதை, விழுங்கும் பொருளுணர்வாய்-ஐக்கியஞ்செய்கின்ற சொரூபஞானத்தை யறிந்துகொள்வாய்--எ-று.

எ - து. ஒன்றைவிட்டொன்றில் தாவிக்கொண் டிருக்கின்றமனதை சங்கற்பரகிதமென்னுங் கத்தியினால் கெடுத்தால் எவ்விடத்தும்

பரிபூரணமாய் சகலமுந் தன்மயமாய் விளங்குகின்ற வஸ்துபிரசன்னமாம். இம்மார்க்கத்திலிருந்து ஞானத்தினால் விரும்பத்தக்க மனதைப் புசித்து அதற்கு மேலானதாய் சம்சாரவிகற்ப மில்லாதசகலத்திபர்க மான அறிவினால் ஆத்மஞானத்தை யடைந்து மனதை ஐக்கஞ்செய்கின்ற சொரூபஞானத்தை யறிந்துகொள்வாய்—எ-ம்.

இ-ம். மனோசங்கற்பம இறந்தவிடத்து அப்பரமசுகம உண்டாம் என்பதாம். (5)

## எம்முயற்சியினால் அம்மனதைக் கெடுக்கலாம் எனின்.

வருந்தி முயன்று மனந்தன்னை மாற்றி யில்லை யுண்டென்று
திருந்த பதத்தி லிருந்திடுவா யிடர்தீர் செல்வ மிடரின்றிப்
பொருந்த வேண்டு மனமவென்றாற் புவனமூன்றுந் துரும்பாகுந்
திருந்த வினிதென் றன வெல்லாந் தீதாய்த் தோன்றின் மனமாளும்.

இ-ள். வருந்திமுயன்று-(சிரவணாதியில்) வருத்தப்பட்டு அப்பியாசித்து, மனந்தன்னைமாற்றி - மனதைக்கெடுத்து, இல்லையுண்டென்றது - சத்து அசத்தென்றுரைக்கக்கூடாமல், இருந்த - சுயமாயிருந்த, பதத்திலிருந்திடுவாய் பிரமபதத்திலிருப்பாய், இடர்தீர்செல்வம் - துன்பமற்ற மோட்ச சம்பத்தை, இடரின்றி - துன்பமின்றி, பொருந்தவேண்டும் - (தைரியத்தினால்) அடைய வேண்டும், மனம்வென்றால் - இப்படி மனோநாசமானால், புவனமூன்றுந்துரும் பாகும் - மூன்றுலகமுந்திரணமாம, திருந்த திருத்தமாக, இனிதென்றன வெல்லாம-இனிமையென்றுசொல்ல பட்ட விடயங்களியாவும், தீதாய்த்தோன்றில் - தீமையாகத்தோற்றினால், மனமாளும் - மனதுநாசமாம்—எ-று.

எ-து. சிரவணாதியில வருத்தப்பட்டு அப்பியாசித்து மனதைக் கெடுத்து சத்து அசத்தென் றுரைக்கக் கூடாமல் சுயமாயிருந்தபிரம பதத்திலிருப்பாய் துன்பமற்ற மோட்சசம்பத்தை துன்பமின்றிதைரியத்தினால் அடையவேண்டும. இப்படி மனோநாசமானால் மூன்றுலகமுந்திரணமாம, திருத்தமாக இனிமை யென்றுசொல்லப்பட்டவிஷயங்கள் யாவும் தீமையாகத் தோற்றினால மனதுநாசமாம்—எ-ம்.

இ-ப். விடயதோஷ திருஷ்டியினால் அம்மனதைக் கெடுக்கவேண்டுமென்பதாம. (6)

## அவ்விடயதிருஷ்டி யாதினாற்கெடுமெனின்.

சித்த விண்ணிற் றிகழறிவாந் தியானத் தாலே யரிவெண்ணும்
ஒத்த படையா லைாமற வுளத்தை யறுப்பா யறுத்ததற்பின்

மெத்து துயர்போ மவனிவனுன் மேவு மனைத்து மதுவிதுவாய்
வைத்த விவையே மனமிதனை மறப்பாம் வாளா லறுத்திடுவாய்.

இ-ள். சித்தவிண்ணில் - இருதயாகாயத்தில், திகழ் - பிரகாசிக்கப்பட்ட, அறிவாந்தியானத்தால் - ஞானநிஷ்டையால் (உண்டாகும்), அறிவென்னும் - பரஞானமென்கின்ற, ஒத்தபடையால்-உரித்தாகிய சககராயுதத்தினுல், ஐயமற - சந்தேகங்கெட, உளத்தை யறுப்பாய் - மனதைக்கெடுப்பாய், அறுத்தற்பின் - கெடுத்தபின்பு, மெத்துதுயர்போம் - மிகுந்த துன்பநீங்கும், அவனுன் - அவன் நான் என்றும், இவனுன் - இவன் நான் என்றும், மேவுமனைத்தும் பொருந்தப்பட்ட சகலமும், அது - அது (எனதாகவும்), இதுவாய் - இது (என) தாகவும், வைத்த - வைத்திருக்கின்ற, இவையே - இவைகளே, மனம் மனமாகும், இதனை - இம்மனதை, மறப்பாம் - அபாவனமென்னும், வாளால் - கத்தியினுல், அறுத்திடுவாய் - கெடுப்பாய்—எ-று.

எ-து. இருதயாகாயத்தில் பிரகாசிக்கப்பட்ட ஞான நிஷ்டையாலுண்டாகும் பரஞானமென்கின்ற உரித்தாகிய சக்கராயுதத்தினுல் சந்தேகங்கெட மனதைக்கெடுப்பாய், கெடுத்தபின்பு மிகுந்த துன்ப நீங்கும் அவன் நான் என்றும் இவன் நான் என்றும் பொருந்தப்பட்ட சகலமும் அது எனதாகவும் இது எனதாகவும் வைத்திருக்கின்ற இவைகளே மனமாகும். இம்மனதை அபாவனமென்னும் கத்தியினுல கெடுப்பாய்—எ-ம.

இ-ம். ஞானதிருஷ்டியினுல் அவ்விடயங் கெடுமென்பதாம். (7)

## மனமிறந்ததற்கு அடையாளம் யாதெனின்.

பெருகத திரண்ட முகிலெல்லாம் பெருங் காற றாலே யொருவுதல்
வருகற் பனை நா சத்தாலே மனம்போ யிறக்கு மனமிறநதாற் [போல்
பொருகற் பாந்த மாருதமும் பொங்கு கடலும் புவியனைத்தும்
உருகச் சுடுபன் னிருகதிரு மொருகால் வரினு மிடருண்டோ.

இ-ள். பெருகத்திரண்ட - மிகவுங் கூட்டமான, முகிலெல்லாம் மேகங்களனைத்தும், பெருங்காற்றால் - சண்டமாருதத்தால், ஒருவுதல்போல்-நீங்குவதைப்போல, வருகற்பனை நாசத்தால் - வாராநின்ற கற்பனுட்சயத்தினுல், மனம்போயிறக்கும் - மனமானது (சித்திற்) சென்று நசிக்கும், மனமிறந்தால்- மனது நசித்தால், பொருகற்பாந்தமாருதமும் - மோதாநின்ற ஊழிக்காற்றும், பொங்குகடலும் - பிரளயசமுத்திரமும், புவியனைத்தும் - பூமிமுழுதும், உருகச்சுடும் - உருகும்படி யெரிக்கின்ற, பன்னிருகதிரும் - பன்னிரண்டு சூரியர்களும், ஒருகால்வரினும் - ஏககாலத்தில் வந்தாலும், இடருண்டோ துன்புமுண்டோ—எ-று.

எ - து. மிகவுங் கூட்டமான மேகங்களனைத்தும் சண்டமாருதந்தால் நீங்குவதைப்போல வாசின்ற கற்பனுட்சயத்தினுல் மனமானது சித்திற்சென்று நசிக்கும், மனது நசித்தால் மோதாநின்ற ஊழிக்காற்றுப், பிரளயசமுத்திரமும், பூமிமுழுதும் உருகும்படி, யெரிக்கின்ற பன்னிரண்டு சூரியர்களும், ஏககாலத்தில் வந்தாலும் துன்பமுண்டோ—எ-ம்.

இ-ம்- அநந்த இடர்களுண்டாயினும் அவ்விடர் இல்லாதிருப்பதே, மனமிறந்த குறியென்பதாம். (8)

## பரமசுகத்திற்கு விக்கினம் யாதெனின்.



தன்னைக் கொண்டே தனையறுக்கிற் றானுய்ச் சகல பூமிக்கு
முன்னைத் தலைமை போலின்ப முதிர நிறைந்து வகற்பனைக்கே
துன்னித் திகழ்தற் பதம்பற்றிச் சுகத்தை யடைவாய் பலவாக
உன்னிப் படர்கற்பனைசெல்வ முடைய மனமே யுயிர்ப்பகையாம்.

இ - ள். தன்னைகொண்டே - மனதைகொண்டே, தனையறுக்கில் - மனதைகெடுக்கில், தானுய் - தானுகி, சகலபூமிக்கும் - உலகங்களனைத்திற்கும், முன்னைத்தலைமைபோல் - முதன்மையான சார்வபூமனைப்போல, இன்பம் - ஆநந்தமானது, முதிரநிறைந்து - பூரணமாகப்பெருகி, அகற்பனைக்கே - கற்பனையற்ற மோட்சசாம்பிராச்சியத்துககே, துன்னி - நெருங்கி, திகழ் -பிரகாசிக்கின்ற, தற்பதம்பற்றி - பிரமபதத்தைச்சேர்ந்து, சுகத்தையடைவாய்-நிரதிசயாநந்தத்தைப்பெறுவாய், பலவாக - நாநாவிதமாக. உன்னி - நினைத்து, படர்கற்பனை - மிருந்தமித்தையென்னும், செல்வமுடைய - சம்பத்துள்ள, மனமே - மனதே, உயிர்ப்பகையாம் - ஆத்மாவுககு விரோதமாம்-எ-று.

எ - து. மனதைக்கொண்டே மனதைக்கெடுக்கில் தானுகி உலகங்களனைத்திற்கும் முதன்மையான சார்வபூமனைப்போல ஆநந்தமானது பூரணமாகப்பெருகி கற்பனையற்ற மோட்சசாம்பிராச்சியத்துக்கே நெருங்கி பிரகாசிக்கின்ற பிரமபதத்தைச்சேர்ந்து நிரதிசயாநந்தத்தைப்பெறுவாய். நாநாவிதமாக நினைத்து மிருந்தமித்தையென்னும் சம்பத்துள்ளமனதே ஆத்மாவுக்கு விரோதமாம்—எ-ம்.

இ-ம். சங்கற்பவிகற்பாத்மகமான மனதே ஆத்மசுகத்திற்கு விக்கினமென்பதாம். (9)

## அச்சங்கற்ப மியாதினாற் கெடுமெனின்.

உள்ளப் பகைவன் பலவிதமா யுறுகாட் சிகளால் வெல்லாமற்
றெள்ளத் தகுசந் தோடமெனுஞ் செல்வ முடைய நிராசையினாற்
கள்ளத் தனிநெஞ் சினைவெல்வாய்க் கற்றோர்க் கன்பாய் நிர்மலமாய்
குள்ளக் குளிர்ந்தாங் காரத்தாற் கூறு காது சமபாவம்.

இ - ள். உள்ளப்பகைவன் - மனமென்னுஞ் சத்துருவானவன், பலவிதமாய் - நாநாவிதமாக, உறுகாட்சிகளால் - பொருந்திய விடயானுபவங்களால், வெல்லாமல் - (உன்னைக்) கெடுக்காமல், தெள்ளத்தகு - தெளிவாதற்குரிய, சந்தோடமெனும் - சந்தோடமென்கின்ற, செல்வமுடைய - வாழ்வையுடைய, நிராசையினால் - விராகத்தினால், கள்ளத்தனிநெஞ்சினை - குற்றமுள்ள தனிமையானமனதை, வெல்வாய் - கெடுப்பாய், கற்றோர்க்கன்பாய் - அறிஞர்களுக்குப் பிரியமாகியும், நிர்மலமாய் - நின்மலமாகியும், குள்ளக்குளிர்ந்து - மிகவுங்குளிர்ச்சியாகியும் (இருக்கின்ற), சமபாவம் - பூரணபாவமானது, ஆங்காரத்தால் - அகம்பாவத்தினால், கூறுகாது - பின்னப்படாது—எ-று.

எ — து. மனமென்னுஞ் சத்துருவானவன் நாநாவிதமாகப்பொருந்திய விடயானுபவங்களால் உன்னைக்கெடுக்காமல் தெளிவாதற்குரிய சந்தோட மென்கின்ற வாழ்வையுடைய விராகத்தினால் குற்றமுள்ள தனிமையான மனதைக் கெடுப்பாய். அறிஞர்களுக்குப் பிரியமாகியும், நின்மலமாகியும், மிகவுங் குளிர்ச்சியாகியு ம இருக்கின்ற பூரணபாவமானது அகம்பாவத்தினால் பின்னப்படாது—எ—ம்.

இ-ம். நிராசையால் அவவிகற்பங்களைக் கெடுக்கவேண்டுமென்பதாம். ()

## நிராசையான சமதிருஷ்டி எதைக் கொடுக்குமெனின்.

தாழ்வு முயர்வு மில்லாத சமபா வனையாற் பிறப்பில்லா
வாழ்வு நல்கும் பரமபத மாறுப் பதமா மலைவாலே
வீழ்வு றாத மனமரிதாம வெம்மைக் கனலை விடாததுபோல்
ஆழ்வு செய்யு மலைவு றண மகலா வறிவி னலைவுமனம்.

இ - ள். தாழ்வுமுயர்வுமில்லாத - குறைவும் நிறைவுமில்லாத, சமபாவனையால் - பூரணபாவத்தினால், பிறப்பில்லா - சநநமில்லாத, வாழ்வுநல்கும் - பரமாநந்தத்தைக்கொடுக்கின்ற, பரமபதம் - பிரமபதமானது, மாறுப்பதமாம் அழிவற்றபதமாகும், அலைவால் - சஞ்சலத்தினால், வீழ்வுறாதமனமரிதாம் - கெடாதமனமரியதாம, வெம்மை - உஷ்ணமானது, கனலைவிடாததுபோல் - அக்

இனியை நீங்காததுபோல, ஆழ்வுசெய்யுமலைவு - தாழ்வைச்செய்கின்ற சஞ்சலமானது, மனமகலா - மனதைவிட்டு நீங்காது, அறிவினலைவு - ஞானத்தினுடையசலனசத்தியே, மனம் - மனமாம்-எ-று.

எ - து. குறைவும் நிறைவுமில்லாத பூரணபாவத்தினால் சகநமில்லாத பரமாநந்தத்தைக்கொடுக்கின்ற பிரமபதமானது அழிவற்ற பதமாகும். சஞ்சலத்தினால்கெடாத மனமரியதாம். உஷ்ணமானது அக்கினியை நீங்காததுபோல தாழ்வைச்செய்கின்ற சஞ்சலமானதுமனதைவிட்டு நீங்காதுஞானத்தினுடைய சலனசத்தியே மனமாம்-எ-ம்.

இ-ம். பரமபதத்தைக் கொடுப்பதற்கு நிராசையேகாரணமாம். (11)

## சஞ்சலமான மனதைக் கெடுக்கும் உபாயம் இயாதெனின்.

அலையு மந்த மனமுலகா மலைவு போகின் மனங்கெடுமிந்
நிலையே தவமு நூற்கருத்தும் நிமல வீடுந் துணிபொருளுந்
தலைவி லலைவே மனமாயை தொடர்வா தனையு மதன்பெயரா
மலையு மனமு மதுவதனை மாறு விசாரத் தான்மாய்ப்பாய்.

இ - ள். அலையும் - சலிக்கின்ற, அந்தமனம் - அம்மனமே, உலகாம்-சகமாகும், அலைவுபோகில் - சலனமற்றால், மனம்கெடும் - மனதுநசிக்கும், இந்நிலையே - இந்நிச்சயமே தவமும் - (நிட்காம) தபசும், நூற்கருத்தும் - (ஆத்மஞான) சாத்திரத்தி னந்தரங்கமும், நிமலவீடும் - நிருமலமான மோட்சமும், துணிபொருளும் - தெளிந்தவஸ்துவுமாம், மனம் - மனத்தினது, தலைவிலலைவே - நீங்காதசலனமே, மாயை - மாயையென்றும், தொடர்வாதனையும்-தொடராநின்ற (அசுத்த) வாசனையென்றும், அதன்பெயராம் - அச்சலனசத்தியின் நாமங்களாம், அலையும் - சலிக்கின்ற, மனமுமது - மனதும் அச்சஞ்சலசத்தியேயாம், அதனை - அம்மனோசலனசத்தியை, மாறுவிசாரத்தால்-நீங்காத (ஆத்மஞான) விசாரணையால், மாய்ப்பாய் - கெடுப்பாய்-எ-று.

எ - து. சலிக்கின்ற அம்மனமே சகமாகும். சலனமற்றால்மனது நசிக்கும். இந்நிச்சயமே நிட்காமதவசும், ஆத்மஞான சாத்திரத்தின் அந்தரங்கமும், நிருமலமான மோட்சமும், தெளிந்தவஸ்துவுமாம். மனதினது நீங்காதசலனமே மாயையென்றும், தொடராநின்ற அசுத்தவாசனையென்றும், அச்சலன சத்தியின் நாமங்களாம் சலிக்கின்ற மனதும அச்சஞ்சல சத்தியேயாம். அம்மனோசலன சத்தியை நீங்காத ஆத்மஞான விசாரணையால் கெடுப்பாய்—எ-ம்.

இ-ம். ஆத்மவிசாரத்தால் மனோசஞ்சலத்தைக் கெடுக்கவேண்டுமென்பதாம். (12)

## மனோவுருவம் இயாதெனின்.

மெத்து கின்ற வாதனையை விட்டான் மேலா நலமுளதாஞ்
சத்தி னசத்தி னிடைநின்று சைதன் னியத்திற் சாட்டியத்தில்
ஒத்து நடுநின் றலைவதுவே யுள்ள மாகு மிவ்வுள்ளஞ்
சித்தின் முயல்வாற் சித்தாகுஞ் செடத்தின் முயல்வாற் செடமாகும்

இ - ள். மெத்துகின்ற-அற்பமாகின்ற, வாதனையை விட்டால் - இஷ்டவஸ்துதியாகத்தினால், மேலாநலமுளதாம் - பரமவின்பமுண்டாகும், சத்தின்- உள்ளதாகிய பிரமத்துக்கும், அசத்தின் - இல்லாததாகிய சகத்துக்கும், இடைநின்று - நடுவிலிருந்து, சைதன்னியத்திற் - சித்திலும், சாட்டியத்தில்-செடத்திலும், ஒத்து - பொருந்தி, நடுநின்றலைவதுவே - மத்தியிற்சலித்துக்கொண்டிருப்பதே, உள்ளமாகும் - மனமாகும், இவ்வுள்ளம் - இம்மனமானது, சித்தின் முயல்வால் - அறிவின் முயற்சியால், சித்தாகும் - ஞானசொரூபமாம், செடத்தின் முயல்வால் - அறியாமையின் முயற்சியினால், செடமாகும்- செகத்தாகும்.

எ - து. அற்பமாகின்ற இஷ்டவஸ்து தியாகதநினால் பரமஇன்பமுண்டாகும், உள்ளதாகிய பிரமத்துக்கும், இல்லாததாகிய சகத்துக்கும், நடுவிலிருந்து சித்திலும் செடத்திலும் பொருந்தி மத்தியிற் சலித்துக்கொண்டிருப்பதே மனமாகும், இம்மனமானது அறிவின் முயற்சியால் ஞானசொரூபமாம். அறியாமையின் முயற்சியினால் செகத்தாகும்— எ-ம்.

இ-ம். மனது செடசித்து வடிவமாமென்பதாம் (13)

## அம்மனதை யாதினால் அடக்கலாமெனின்.

ஊக்க முளதாய் மனமொன்றி லுறைக்கி லதுவா மாதலினால்
தாக்கு மனதை மனத்தாலே தள்ளி யேறித் தளர்வின்றி
ஆக்க மழிவில் பதம்விரைவி லடைவாய் மனதை மனத்தாலே
நீக்க வலதாந் தமைமைத்தா நிருப நிறுத்து நெறிபோல.

இ - ள். ஊக்கமுளதாய் - முயற்சியுள்ளதாய், மனம் - மனமாது, ஒன்றிலுறைக்கில், ஒன்றிலழுந்தில், அதுவாம் - அப்பொருளேயாம், ஆதலினால்- ஆதலால், தாக்குமனதை - (விடயத்திற் பாய்கின்றமனதை, மனத்தால் - (ஆத்மஞான) மனதினால், தள்ளி-நீக்கி. ஏறி-மேற்சென்று, தளர்வின்றி-சோர்வில்லாமல், ஆக்கமழிவில்பதம்-செல்வமென்னும் அழிவற்றபரமபதத்தை. விரைவிலடைவாய் - சீக்கிரத்திற்பெறுவாய், மனத்தை - (சலனமுள்ள) மனதை, மனத்தால் - (நிச்சலமான) மனதினால், நிருபன் - சார்வபூமனானவன், நிறுத்

தும் - (அரசர்களைத்தமதாக்கினையில்) நிறுத்துகின்ற, நெறிபோல - நீதியைப்போல, நீக்கவலதாம் - நீக்கித்தன்னிலையில் நிறுத்தற்கு வல்லமையான - தகைமைத்தாம் - தன்மையுடையதாம்—எ-று.

எ - து. முயற்சியுள்ளதாய் மனமானது ஒன்றிலழுந்தில் அப்பொருளேயாம். ஆதலால் விடயந்திறபாய்கின்ற மனதை ஆத்மஞானமனதினால் நீக்கி மேற்சென்று சோர்வில்லாமல் செல்வமென்னும் அழிவற்ற பரமபதத்தை சீக்கிரத்திற் பெறுவாய் சலனமுள்ளமனதை நிச்சலமானமனதினால் சார்வபூமனாவன் அரசர்களைத் தமதாக்கினையில் நிறுத்துகின்ற நீதியைப்போல நீக்கித தன்னிலையில்நிறுத்தற்கு வல்லமையான தன்மையுடையதாம்—எ-ம்.

இ-ம். சித்துருவமான மனதினாற் செடவுருவமான மனதைக் கெடுக்க வேண்டுமென்பதாம். (14)

## மனதினால் ஆத்மாவுக்குச் சகாயமுண்டோ எனின்.



பிறவிக் கடலிற் காதலெனும பெருவாய் முதலைபிடித்தீர்கக
இறவுச்சுழியாற் சுழலுமவர்க் கிதய நாவா யெட்டாவா
மறமுற் றுளததை யுளததாலே மாய்த்துப் பிறப்பில் வருந்தாமல்
உறவுற் றுனைநீ யுய்விப்பா யுயிர்க்குப பிறரா லுய்வுண்டோ.

இ - ள். பிறவிக்கடலில் - சநசமெனுஞ்சமுத்திரத்தில், காதலெனும் ஆசையென்கின்ற, பெருவாய்முதலை - பேழ்வாயையுடைய கராவானது, பிடித்தீர்க்க-பிடித்திழுக்க, இறவுச்சுழியில்-மரணமென்னுஞ்சுழலில், சுழலுமவர்க்கு - (அகப்பட்டுச் சுழல்கின்றோமென்று (அறி) பவர்களுக்கு, இதய நாவாய-மனமென்னுங்கப்பலானது, எட்டா - எட்டும், மறமுற்று - வீரமுற்று, உளத்தை (மலின) மனதை, உளத்தால் - (நிர்மல மனதினால், மாய்த்து - கெடுத்து பிறப்பில் - சநநத்தில், வருந்தாமல் - நையாமல், உறவுற்று - (பரிசுத்தமனதை) உறவுசெய்து, உனை-ஆத்மாவை, நீ -இராமா நீ, உய்விபபாய்-ஆநந்தவாழ்வில்அடைவிப்பாய், உயிர்க்கு - ஆத்மாவுக்கு, பிறரால் - வேறொருவரால், உய்வண்டோ - வாழ்வுண்டாமோ—எ-று.

எ - து. சநநமெனுஞ் சமுத்திரத்தில் ஆசையென்கின்ற பேழ்வாயை யுடைய கராவானது பிடித்திழுக்க மரணமென்னுஞ் சுழலில் அகப்பட்டுச் சுழல்கின்றோமென்று அறிபவர்களுக்கு மனமென்னுங் கப்பலானது எட்டும், வீரமுற்று மலினமனதை நிர்மலமனதினால் கெடுத்து சநநத்தில் நையாமல் பரிசுத்தமனதை உறவுசெய்து ஆத்

மும், மனமும் - மனதும், மாண்டதுவாம் - நசித்ததாம், பொறிபயில் - விடயத்திற் பழகுகின்ற, ஆசை - இச்சையே, துன்பமாம் - துன்பமாகும், நிராசை - விராகமே, புகலரும் - சொல்லுதற்கரிய, முத்தியாமின்பம் - நிருவாணசுகமாம், பிறிவறு - விரிவற்ற, தனதுமுயற்சியால் - தனதுஎத்தனத்தால், உண்டாம் - அது உண்டாகும், பேதையர் - அறிவில்லாதவர்கள், உண்டெனும் - உண்டென்பதாயும், செறிதருபொய்யாய் - நிறைந்தமித்தையாயும், நாமமாத்திரமாய் - பெயர்மாத்திரமாயும் (இருக்கின்ற), அவித்தை - அறியாமையானது, சித்தெனத் தேர்ந்திடில் - (சகலமுஞ்) சைதன்யமென்றுணரில், இலதாம் - மித்தையாம்—எ-று.

எ-து. திரிசியத்திலுள்ள இச்சைநீங்கினால் அவ்விச்சாத்தியாகமே அஞ்ஞானமும் மனதும் நசித்ததாம். விடயத்திற்பழகுகின்ற இச்சையே துன்பமாகும். இராகமே சொல்லுதற்கரிய நிருவாண சுகமாம். பிரிவற்ற தனது எத்தனத்தால் அதுண்டாகும் அறிவில்லாதவர்கள் உண்டென்பதாயும், நிறைந்தமித்தையாயும், பெயர்மாத்திரமாயிருக்கின்ற அறியாமையானது சகலமுஞ்சைதன்யமென்றுணரில் மித்தையாம்—எ-ம்.

இ-ம். நிராசைவடிவமான ஞானதிருஷ்டியால அச்சங்கற்ப நீங்குமென்பதாம். (17)

## அஞ்ஞானதிருஷ்டி நீங்கும் உபாயம் இயாதெனின்.

என்றலு மிராமன் வித்தையின் செல்வத் தெழுந்தற நெருங்குமிவ் விருடான், ஒன்றுமிங் கின்றி யெவ்வகை நீங்கு முரைத்தருளின்னநீ யென்ன, வன்றவ னுரைப்பான் வன்றுயர் முட்சேர் வனபவக் குழியின்மன் னுயிரை, ஒன்றவீழ்த் ததனே டொக்க வீழ்மாயை யுண்டெனி லுண்மைநோக் கில்லை.

இ-ள். என்றலும் - (இப்படி) யென்று வசிட்டர்சொல்லவும், இராமன் - இராமரானவர், அவித்தையின் - அறியாமையினது, செல்வத்தெழுந்து செல்வத்திலுண்டாகி, அறநெருங்கும் - மிகவு நெருங்கியிருக்கின்ற, இவ்விருடான் - இவவறியாமையானது, இங்கு - இவ்விடத்தில், ஒன்றுமின்றி - அற்பமுமில்லாமல், எவ்வகைநீங்கும் - எப்படிபோய்விடும், இன்னம் - மேலும், நீயுரைத்தருளென்ன - நீர் அனுக்கிரகிக்க வேண்டுமென்றுகேட்க, வன்றவன் - வலிமையான தவத்தையுடைய வசிட்டர், உரைப்பான் - சொல்லுவார், வன்றுயர் - வலியதுன்பமென்னும், முட்சேர் - முட்கணிறைந்த, வன்பவம் - கொடியதாகிய சநநமென்கின்ற, குழியில் - மலைச்சார்பில், மன்னுயிரை - நிலைபெற்ற ஆத்மாவை, ஒன்ற - பொருந்த, வீழ்த்தி - தள்ளி, அதனோடு - அவ்வாத்மாவுடன், ஒக்கவீழ்மாயை - கூடத்தானும்விழுகின்ற மாயையானது, உண்டெனில் - உள்ளதென்றுபார்க்கின், உண்மைநோக்கில்லை - தத்துவதிருஷ்டியில்லையாம்—று.

எ - து. இப்படியென்று வசிட்டர்சொல்லவும், இராமரானவர் அறியாமையினது செல்வத்திலுண்டாகி மிகவு நெருங்கியிருக்கின்ற இவ்வறியாமையானது இவ்விடத்தில் அற்பமுமில்லாமல் எப்படிப் போய்விடும். மேலும் நீர் அனுக்கிரகிக்க வேண்டுமென்று கேட்க, வலிமையான தவத்தையுடைய வசிட்டர் சொல்லுவார். வலியதுன்ப மென்னும் முட்கள் நிறைந்த கொடியதாகிய சநநமென்கின்ற மலைச் சார்பில் நிலைபெற்ற ஆத்மாவைப் பொருந்தத்தள்ளி அவ்வாத்மாவுடன் கூடத் தானும்விழுகின்ற மாயையானது உள்ளதென்றுபார்க்கின் தத்துவதிருஷ்டியில்லையாம்—எ ம். (18)

இதுவுமது.

பிறப்பெனு மாயைக் கரையதா யெங்கும் பிறிவறு பெரும் பொரு டோன்றில், இறப்புறு மாயைக் கிச்சையே வடிவா மிதனுடை நாச மே வீடு, சிறப்பில்சங் கற்பஞ் சிதைந்திடி லிதுதான் றேய்ந்திடுஞ் சித் தெனுங்கதிரோன், புறப்படி லிதய விசும்பில்வா தனையாம் பொங்கி ருள் போமெனப் புகல்வாம்.

இ - ள். பிறப்பெனும் - சநநமென்கின்ற, மாயைக்கரையதாய் - அவித்தையின்முடிவாம், எங்கும் - எவ்விடத்தும், பிறிவறு - நிறைந்திருக்கின்ற, பெரும்பொருள் - பாவஸ்துவானது, தோன்றில்-உதயமாயின், இறப்புறு மாயைக்கு - நசிக்கின்றமாயைககு, இச்சையே - ஆசையே, வடிவாம்-சொரூபமாம், இதனுடைநாமே - இம்மாயாநாசமே, வீடு - மோட்சமாம், சிறப்பில்-சிறப்பில்லாத, சஙகற்பம் - சங்கற்பமானது, சிதைந்திடில் - நசிக்கில், இதுதான் - இவ் அவித்தையானது, தேய்ந்திடும் - நாசமாம், சித்தெனும் - ஞானமென்கின்ற, கதிரோன் - சூரியன், புறப்படில் உதயமானால், இதயவிசும்பில் - இதயாகாய த்தில், வாதனையாம் - வாசனையாகிய, பொங்கிருள் - மிகுந்தஅஞ்ஞான அந்த காரமானது, போமென - நீங்குமென்று, புகல்வாம் - சொல்லுவாம்—எ-று.

எ - து. சநநமென்கின்ற அவித்தையின்முடிவாய்எவ்விடத்தும் நிறைந்திருக்கின்றபரமவஸ்துவானது உதயமாயின் நசிக்கின்றமாயைக்கு ஆசையே சொரூபமாம். இம்மாயநாசமே மோட்சமாம். சிறப்பில்லாத சங்கற்பமானது நசிக்கில் இவ் அவித்தையானது நாசமாம். ஞானமென்கின்றசூரியன்உதயமானால்இதயாகாசத்தில்வாசனையாகிய மிகுந்த அஞ்ஞான அந்தகாரமானது நீங்குமென்று சொல்லுவாம்.

இ-உ-க-ம். ஞானப்பிரகாசவுதயத்தில் அஞ்ஞான அந்தகார நீங்குமென்பதாம். (19)

பிரமமே - பிரமமேயாம், என்றும் - எப்பொழுதும், கறையுறுமனமாம் குற்றமுள்ள மனமாகிய, கற்பனையில்லை - கற்பனையின்றும், நாசமும் - மரணமும், பிறவியுமென்னும் - சநநமுமென்று சொல்லப்பட்ட, அவையெலாம் - அவைகளனைத்தும், புவனமூன்றிலுமில்லை - மூன்று லோகங்களிலுமில்லை, அறுவகை விகாரமுமில்லை - சட்பாவவிவகாரங்களுமில்லை, சுவையறுசமயமாம் - இரண்டில்லாதபூரணமாகிய, குறிபெறு - அடையாளம்பெற்றிருக்கின்ற, அறிவுமாத்திரம் - சின்மாத்திரமே, காணநின்றனது - ப்ரத்யக்ஷமாயிருக்கும்—எ-று.

(இ-ரை.) இவையென்று சுட்டப்பட்ட சகலமும் ஞானகாரமாகியும் நித்தியமாகியு மிருக்கின்றது பிரமமேயாம் எப்பொழுதும் குற்றமுள்ள மனமாகிய கற்பனையுன்றும். மரணமும் சநநமுமென்று சொல்லப்பட்ட அவைகளனைத்தும் மூன்றுலோகங்களிலுமில்லை. சட்பாவவிகாரங்களுமில்லை. இவ்விரண்டில்லாத பூரணமாகிய அடையாளம் பெற்றிருக்கின்ற சின்மாத்ரமே பிரத்யக்ஷமாயிருக்கும்—என்பதாம்.

(இ-ம்.) சுசாதிக விசாதிக சுகதம்பேத ரஹிதமான பரிபூரணமே ஞானமென்பதாம். 21

---

ஆயின் ஞானத்திற்கு வேறாக வொன்றுமின்றோவெனின்.

கேவலமாகிக் கேவலவெளியாய்க் கேடறுசுத்தமாய்விரிவா
யோவலிலறிவு மாத்திரமாகி யுறுதுய ரொன்றுமற்றாறி
மேவருமிதமனைத்தினுக்கொத்து விகாரமற்றுளபொருளிடத்தே
தாவருந்தனது நினைவையேவிரும்பித் தன்வயத்தெழுந்ததோரறிவு.

(இ-ள்.) கேவலமாகி - தனிமையாகியும், கேவலவொளியாய் - தனிப்பிரகாசமாகியும், கேடறு - அழிவற்றதாயும், சுத்தமாய் - பரிசுத்தமாகியும், விரிவாய் - வியாபகமாகியும், ஓவலில் - பிரிவில்லாத, அறிவுமாத்திரமாகி - ஞானமாத்திரமாகியும், உறுதுயரொன்றுமற்று - பொருந்துகின்ற துன்பஞ் சற்றுமில்லாததாகியும், ஆறி - உபசாந்தமாகியும், மேவருமிதமனைத்தினுக்கு - பொருந்துதற்கரிய இனிமையான வஸ்துக்களனைத்துக்கும், ஒத்து - கலந்து, விகாரமற்றுள - விகாரமற்றதாகியு மிருக்கின்ற, பொருளிடத்து - ஞானாத்மாவில், தாவரும் - தாவுதற்கரிய, தனது நினைவையே விரும்பி - தனது சங்கற்பத்தையே யிச்சித்து, தன் வயத்து - தனதுவசத்தில், ஓரறிவெழுந்தது - ஓரறிவுண்டாயிற்று—எ-று.

(இ-ரை.) தனிமையாகியும் தனிப்பிரகாசமாகியும், அழிவற்றதாகியும், பரிசுத்தமாகியும். வியாபகமாகியும், பிரிவில்லாத ஞான

மாத்திரமாகியும் பொருந்துகின்ற துன்பஞ் சற்றுமில்லாததாகியும் உபசாந்தமாகியும், பொருந்துதற்கரிய இனிமையான வஸ்துக்களனைத்துக்கும் கலந்து விகாரமற்றதாகியு மிருக்கின்ற ஞானாத்மாவில் தாவுதற்கரிய தனது சங்கற்பத்தையே இச்சித்து தன்வசத்தில் ஓரறிவுண்டாயிற்று—என்பதாம்

(இ-ம்) சின்மாத்திரமான பிரமத்தினின்றுந் தனது ஸ்மரணமான வோர்போத முதித்ததுண்டென்பதாம். (22)

## ஆயினப்போதம் வெளிப்படவில்லையோவெனின்.

செப்பியவறிமுடிவில்சங்கற்பஞ் செய்ததிற்சென்றிடுமிதுதா
னிப்பிரமத்தின்மனமதாமிதனுக் கெண்ணில் சத்திகளுளவாகுங்
கப்பிலாதெங்கு நிரந்தரஞ்செய்யுங் கடுமையாமிம்மனந்தனிலே
யப்பிலேதோன்றுந்திரைகள்போற்பேதமாகியவல்லபந்தோன்றும்.

(இ-ள.) செப்பியவறிவு-சொல்லிய ஞானமானது, முடிவில் சங்கற்பஞ்செய்து - அளவற்ற சங்கற்பத்தைச் செய்து, அதிற்சென்றிடும் - அதிற் செல்லும், அதுதான் - அவ்வறிவானது, இப்பிரமத்தின்மனமதாம் - இந்தப்பிரமத்தின் மனமேயாம், இதனுக்கு - இப்பிரமத்துக்கு, எண்ணில் சத்திகளுளவாகும் - அளவற்ற சத்திகளுண்டாயிருக்கும், கப்பிலாது - இரண்டிலலாமல், எங்கு நிரந்தரஞ்செய்யும் - எவ்விடத்திலுஞ் சமமாகச்செய்கின்ற, கடுமையாமிம்மனந்தனில் - வேகமான இம்மனத்தில அப்பிலே தோன்றுந் திரைகள்போல - சலத்திலுண்டான அலைகளைப்போல, பேதமாகிய வல்லபந்தோன்றும - நானாவிதமாகிய வல்லபசத்தியுண்டாகும்-எ-று.

(இ-ரை) சொல்லிய ஞானமானது அளவற்ற சங்கற்பத்தைச் செய்து அதிற்செல்லும் அவ்வறிவானது இந்தப்பிரமத்தின் மனமேயாம். இப்பிரமத்துக்கு அளவற்ற சத்திகளுண்டாயிருக்கும், இரண்டில்லாமல் எவ்விடத்திலுஞ் சமமாகச் செய்கின்ற வேகமான விம்மனத்தில் சலத்திலுண்டான வலைகளைப்போல நானாவிதமாகிய வல்லபசத்தியுண்டாகும்—என்பதாம்.

(இ-ம்.) போதமானது மனோரூபமாய்ச் சகல சத்திகளோடுங் கூடிச் சகலத்தையும் பேதம்போலத் தோற்றுவித்ததாம். (23)



## ஆயின் அப்போதம் பந்தமாகாதோவெனின்.

உள்ளுறு சங்கற்பத்தினூற்றேன்று முள்ள மற்றதனினுமொ டுன்றுங், தன்னுறுகாற்றுமெழுந்த தீக்கொழுந்து சமிப்பதும் காற்

றினாற்போல, நன்றுபிரமமன்றுநானென்று நாடுதன்மனத்துறு பந்த, மெள்ளறுமிடமும் பிரிவிலாப்பொருளே யாமெனுமழுத்த மேவீடாம்.

(இ-ள்.) உள்ளுறு சங்கற்பத்தினாற்றோன்றும் - உள்ளேபொருந்தப் பட்ட சங்கற்பத்தினாலுண்டாகிய, உள்ளம் - (பேதசத்தியான) மனோரூப மானது, அதனினால் - அச்சங்கற்பத்தினால், தன்னுறுகாற்றால - மோதா நின்ற வாயுவினால், எழுந்ததீக்கொழுந்து - உண்டாகிய அக்கினிச்சுவாலை யானது, காற்றினாற சமிப்பதுபோல - வாயுவினாலணைவதுபோல், ஒடுங் கும் - நசிக்கும், நான் - யான், நன்றுபிரமம் - மத்தியமாயிருக்கின்ற பிரமஸ்வரூபம், அன்று - அல்லவென்று, நாடுதல - பார்ப்பதே, மனத்து றுபந்தம் - மனத்திலுள்ள பந்தமாம், எள்ளறுமிடமும - எள்ளளவாகி லும், பிரிவிலாப்பொருளே - பிரிவில்லாத பிரமஸ்வரூபமே, யாமெனுமழு த்தமே வீடாம் - நாமென்கின்ற திடபாவனையே முத்தியாம்—எ-று.

(இ-ரை) உள்ளேபொருந்தப்பட்ட சங்கற்பத்தினாலுண்டா கிய பேதசத்தியான மனோரூபமானது அச்சங்கற்பத்தினால் மோ தாநின்ற வாயுவினால் உண்டாகிய அக்கினிச்சுவாலையானது வாயு வினாலணைவதுபோல நசிக்கும், யான்மத்தியமாயிருக்கின்ற பிரமஸ் வரூபம் அல்லவென்று பார்ப்பதே மனத்திலுள்ள பந்தமாம். எள் ளளவாகிலும பிரிவில்லாத பிரமஸ்வரூபமே நாமென்கின்ற திட பாவனையே முத்தியாம—என்பதாம.

(இ-ம்.) போதமானது உதித்தவிட தன்னொடுங்கிச சகலமுந் தன்மயமா ய்ச் சித்திக்கிற பந்தமாகாதெனபதாம். (34)

---

## ஆயின்மாயாகாரியம் இன்றேவெனின்.

மடமையுந்துயரு மவயவநிறைந்த வடிவமுமுடையனா னெ ன்றே, படர்தருமவற்றிற் கேற்றபன்னடையாற் பாசமுமபந்தமு மூளதாகு, சடமுறுமிவற்றி லேனுமொன்றலமேன் றமைசாம பெண்புகீரலலே, னுடலின்மேலான பரமனாமென்னு முறுதியோர் மாயைசெற் றுணர்ந்தோர்.

(இ-ள்.) நான் - யான், மடமையும் - அஞ்ஞானமும, துயரும் - துன பமும், அவயவநிறைந்த - உறுப்புகணிறைந்த, வடிவமும் - உருவங்களு மாகிய (இவைகளை), உடையனென்று - உள்ளவனென்று, படர்தரும் - பரவியிருக்கின்ற, அவற்றிற்கேற்ற - அவைகளுக்கிசைந்த, பன்னடை யால் - நானாவிதமாகிய நடைகளினால், பாசமும் - ஆசையும், பந்தமும் - கட் டுப்படுதலும், உளதாம் - உண்டாகும், சடமுறுமிவற்றில் - சடமாகிய

---

இவைகளில், எதுமொன்றல்லேன் - யாதொன்றுநானல்லேன், தசை-ஊன்களும், நரம்பு - நரம்புகளும், என்பு - அஸ்திகளும், நீர்-புண்ணீரும், அல்லேன் - நானல்லேன், உடலின்மேலான - தேகத்தினதீதமாகிய, பரமனா னென்னும் - பிரமஸ்வரூபமே யானென்கின்ற, உறுதியோர் - நிச்சயமுடையவர்கள், மாயைசெற்று - மாயையறுத்து, உணர்ந்தோர் - (தன்னை) யறிந்தவர்கள்—எ-று.

(இ-ரை.) யான் அஞ்ஞானமும், துன்பமும், உருப்புகளிறைந்த உருவங்களுமாகிய இவைகளை உள்ளவனென்று பாவியிருக்கின்ற அவைகளுக்கிசைந்த நானாவிதமாகிய நடைகளினால் ஆசையும் கட்டுப்படுதலும் உண்டாகும். சடமாகியஇவைகளில் யாதொன்று நானல்லேன் ஊன்களும், நரம்புகளும், அஸ்திகளும், புண்ணீரும் நானல்லேன், தேகத்தின்தீதமாகிய பிரமஸ்ரூபமேயானென்கின்ற நிச்சயமுடையவர்கள் மாயையறுத்து தன்னையறிந்தவர்கள்.

(இ-ம்.) தானே பிரமமென்று அனுபவத்தினால் பாருசாரூபமே சிகமென்னைத்தும் வேறின்றெனபதாம். (25)

---

## அவ்வனுபவம் யாதினு லுண்டாமெனின்.

தானலாதான வுடன் முதற்பொருளிற் றானெனும்பாவனையாய, வூனமாமாயை புணர்விலோர்விதிக்க வுள்ளதாமுணர்வுளோர்க் கிலதா, மானதனினைத்த வைதயபொறியியற்று மன்னவர்க்கமைச்சர் போல்விரைவி, லானநனமதியான் முயற்சியாற்போகத் தாசைவா தனையைவேரறுப்பாய்.

(இ-ன்.) தானலாதான - தானல்லாததாகிய, உடன்முதற்பொருளில் - சரீர முதலிய வஸ்துக்களில், தானெனும் - நானென்கின்ற, பாவனையாய - பாவனையாகிய, ஊனமாமாயை - ஈனமாகிய மாயையை, உணர்விலோர் - அறிவில்லாதவர்கள், விதிக்க - உண்டென்று நியமிக்க, உள்ளதாம - உண்மையாம, உணர்வுளோர்க்கு - அறிவையுடையவர்களுக்கு, இலதாம்-(அம்மாயை) யில்லாதாம், மானதனினைத்தது - மனதெண்ணினதை, மன்னவர்க்கமைச்சர்போல் - அரசர்களுக்கு மந்திரியைப்போல, விரைவில் - சீக்கிரத்தில், ஐமபொறி - அஞ்சேந்திரியங்கள், இயற்றும் - செய்யும், ஆன - ஆகின்ற, நனமதியால் - நல்லறிவினாலும், முயற்சியால - நன்முயற்சியினாலும், போகத்தாசை - போகத்தினாசையென்னும், வாதனையை - வாசனையை, வேரறுப்பாய் - வேருடனகெடுப்பாய—எ-று.

(இ-ரை.) தானல்லாததாகிய சரீரமுதலிய வஸ்துக்களில் நானென்கின்ற பாவனையாகிய ஈனமாகிய மாயையை அறிவில்

## காலனைத் துதித்தல்.

முழுதுணர் தரும நீதி முதல்வனீ கால மூன்றும்
பழுதறத் தெரிதி நீயே பாலராய்ப் பரம ஞான
மெழுதலி லிளைஞ ராகு மெம்மனோ ரென்ற லோடுங்
கெழுதகை யுலகை நக்குங் கேடறு நிலைமைக் காலன்.

இ - ள். முழுதுணர்தரும - சர்வக்ஞனாகிய காலனே, நீ - நீர், நீதிமுதல்வன் - நியதிக்கு முதன்மையானவன், நீயே - நீயொருவரே, காலமூன்றும் - திரிகாலங்களையும், பழுதறத்தெரிதி - தெளிவுடனறிவாய், எம்மனோர் - எம்போன்றவர்கள், பாலராய் - குழந்தைகளாய், பரமஞானம் - பிரமஞானமானது, எழுதலில் - ஓங்காத, இளைஞராகும் - இளையோர்களாவர், என்றலோடும் - என்று முனிசொன்னவளவில், கெழுதகை - உரிமையாகிய, உலகை நக்கும் - சகங்களைப்புசிக்கின்ற, கேடறு - நாசமில்லாத, நிலைமைக்காலன் - நிலைமையுள்ள யமனானவர் — எ - று.

எ - து. சர்வக்ஞனாகிய காலனே! நீர் நியதிக்கு முதன்மையானவன் நீயொருவரே. திரிகாலங்களையும் தெளிவுடனறிவாய். எம்போன்றவர்கள் குழந்தைகளாய் பிரமஞானமானது ஓங்காத இளையோர்களாவர் என்று முனிசொன்னவளவில் உரிமையாகிய சகங்களைப் புசிக்கின்ற நாசமில்லாத நிலைமையுள்ள யமனானவர் — எ - ம்.

இ - ம். காலன் எதார்த்த வடிவத்தை முனிவனுணர்ந்தனன் என்பதாம். (33)

## காலன் சுக்கிரனிருக்குமிடத்திற்சென்று முனிவருக்கு அறிவித்தல்.

மாதவன் கையைப் பற்றி மந்தரக் கந்த ரத்தின்
மீதகன் றமர ராற்றை மேவின னிவரி லாங்கே
பேதமாம் வாசு தேவப் பெயரொடு மிருந்த சேயைக்
காதலான் முனிவன் கண்டான் காலனு மிதனைச் செய்தான்.

இ - ள். மாதவன்கையைப்பற்றி - மகாதவமுள்ள பிருகுமுனி கரத்தைப் பிடித்துக்கொண்டு, மந்தரக்கந்தரத்தின் - மந்தரமலையின் குகையினின்றும், மீதகன்று - வெளியில்வந்து, அமரராற்றை மேவினன் - தேவநதியைப்பொருந்தி, இவரில் - இவர்களில், ஆங்கு - அவ்விடத்தில், பேதமாம் - வேறான, வாசுதேவப்பெயரொடும் - வாசுதேவ நாமத்துடன், இருந்த சேயை - இருந்த புத்திரனை, காதலான்முனிவன் கண்டான் - ஆசையினன் பிருகுரிஷி பார்த்தான், காலனுமிதனைச்செய்தான் - யமனுமிச்சங்கற்பத்தைச் செய்தார் - எ - று

எ - து. மகாதவமுள்ள பிருகுமுனிகாத்தைப்பிடித்துக்கொண்டு மந்தா மலையின் குகையி னின்றும் வெளியில்வந்து தேவநதியைப் பொருந்தி இவர்களில் அவ்விடத்தில் வேறான வாசுதேவ நாமத்து டன் இருந்தபுத்திரனை ஆசையினுன் பிருகுரிஷிபார்த்தான். யமனும் இச்சங்கற்பத்தைச்செய்தார்—எ-ம். (34)

## காலனவர் தங்களைக்காணச் சங்கற்பித்தல்.

இங்குற்ற சமாதி நீங்கி யிவனெமைக் காண்க வென்று
சங்கற்பஞ் செய்த லோடுஞ் சமாதிவிட் டிவரை நோக்கி
வெங்குற்ற மில்லா மைந்தன் பணிதலும் விரும்பி யாருந்
துங்கத்தோ ரொருகன் மீது மூவருஞ் சூழ்ந்தி ருந்தார்.

இ - ள். இங்குற்றசமாதிநீங்கி - இவ்விடத்திற் பொருந்திய சமாதியை விட்டு, இவன் - இந்தவாசுதேவன், எமைக்காண்கவென்று - எங்களைப்பா ர்க்கக்கடவனென்று, சங்கற்பஞ்செய்தலோடும் - (காலன்) சங்கற்பித்தமாத் திரத்தில், வெங்குற்றமில்லாமைந்தன் - கொடியகுற்றமில்லாத புத்திரனுன வாசுதேவன், சமாதிவிட்டு இவரைநோக்கி - சமாதியைவிட்டு இவர்களைப் பார்த்து, பணிதலும் - வணங்கவும், ஆருந்துங்கத்தோர் - மிகுந்தவுயர்வை யுடையவர்களாகிய, மூவரும் - மூன்றுபேர்களும், விரும்பி - (ஒருவருக்கொ ருவர்) விருப்பமுற்று, ஒருகன்மீது - ஒருகல்லின்மேல், சூழ்ந்திருந்தார் - கூடியிருந்தார்கள்-எ-று.

எ - து. இவ்விடத்திற் பொருந்திய சமாதியைவிட்டு இந்த வாசுதேவன் எங்களைப் பார்க்கக்கடவனென்று காலன்சங்கற்பித்த மாத்திரத்தில் கொடிய குற்றமில்லாத புத்திரனுனவாசுதேவன் சமா தியைவிட்டு இவர்களைப்பார்த்து வணங்கவும் மிகுந்த உயர்வையுடை யவர்களாகிய மூன்றுபேர்களும் ஒருவருக்கொருவர் விருப்பமுற்று ஒருகல்லின்மேல் கூடியிருந்தார்கள்.—எ-ம். (35)

## வாசுதேவன் துதித்தல்.

வாசுதே வப்பேர் மைந்தன் மற்றிவர் தம்மை நோக்கித்
தேசுடை யுமது நல்ல தெரிசனப் பேற்றி னாலே
மாசறு தவத்தா னாலான் மகங்களாற் றனத்தாற் போகா
வேசுறு மோகந் தீர்ந்தே னிதிலமு தின்பஞ் செய்யா.

இ - ள். வாசுதேவப்பேர் - வாசுதேவனென்னு நாமத்தையுடைய, மைந்தன் - புத்திரனுனவன், மற்றிவர் தம்மைநோக்கி - மற்று இவ்விருவர் களையும் பார்த்து, தேசுடையுமது - பிரகாசம்பொருந்திய உங்களுடைய

நல்ல தரிசனப்பேற்றினல் - நற்றரிசனுபலத்தினல், மாசறுதவத்தால் -களங்க மற்ற தவத்தினுலும், நூலால் - சாஸ்திரத்தினுலும், மகங்களால்-யாகங்களினு லும், தனத்தால் - திரவியங்களினுலும், போகா - நீங்காத, ஏசறு - குற்றம் பொருந்திய, மோகந்தீர்ந்தேன் - மயக்கநீங்கினேன், இதில் - இதைப்பார்க் கிலும், அமுதின்பஞ்செய்யா - அமுதவருஷ மின்பத்தைக்கொடுக்காது-எ-று.

எ - து. வாசுதேவனென்னு நாமத்தையுடைய புத்திரனவன் மற்று இவ்விருவர்களையும் பார்த்துப் பிரகாசம்பொருந்திய உங்களு டைய நல் தரிசனுபலத்தினல் களங்கமற்ற தவத்தினுலும், சாஸ்திரத் தினுலும், யாகங்களினுலும், திரவியங்களினுலும், நீங்காத குற்றம் பொருந்திய மயக்க நீங்கினேன், இதைப்பார்க்கிலும் அமுதவருஷ மின்பத்தைக் கொடுக்காது—எ—ம். (36)

## புத்திரனுக்கு ஞானம் வெளிப்படுத்துநிமித்தம் முனிவர் ஞானதிருஷ்டிவைத்தல்.



என்றுரை செய்தோன் றன்னை யியன்முனி யினிது நோக்கி
நன்றுயர் ஞானஞ் சேர்க நவைதரு மடமை தீர்க
உன்றனக் கென்ற லோடு மூனக்கண் ணிரண்டுமூடிப்
பொன்றலின் ஞானக் கண்ணாற் புராதன மெல்லாங் கண்டான்.

இ - ள். என்று - (இப்படி) யென்று, உரைசெய்தோன்றன்னை - சொல் லிய வாசுதேவனை, இயன்முனி - இயல்பாகியபிருகுமுனி, இனிதுநோக்கி - இனிமையாகப்பார்த்து, உன்றனக்கு - உனக்கு, நன்றுயர் - இன்பம்பெருகும், ஞானஞ்சேர்க - ஞானமடையக்கடவது, நவைதருமடமைதீர்க - குற்றமுள்ள அஞ்ஞானந் தீரக்கடவது, என்றலோடும் - என்றனுக்கிரகிக்கவும், ஊனக்கண் ணிரண்டுமூடி - ஊனக்கண்ணிரண்டையு மூடிக்கொண்டு, பொன்றலின் ஞா னக்கண்ணால் - நாசமற்றஞானதிருஷ்டியினல், புராதனமெல்லாங்கண்டான் - முன் நடந்தவைகளையெல்லாம் பார்த்தான்—எ-று.

எ - து. இப்படியென்று சொல்லிய வாசுதேவனை இயல்பாகிய பிருகுமுனி இனிமையாகப் பார்த்து உனக்கு இன்பம்பெருகும், ஞா னமடையக்கடவது. குற்றமுள்ள அஞ்ஞானந்தீரக்கடவது. என்றனுக் கிரகிக்கவும் ஊனக்கண்ணிரணடையு மூடிக்கொண்டு நாசமற்றஞான திருஷ்டியினல் முன் நடந்தவைகளையெல்லாம் பார்த்தான்—எ-ம்.

## சுக்கிரனுக்கு ஞானம் உதித்தல்.

நீத்தனன் பிறவி யெல்லா நிமிடத்தின் ஞானக் கண்ணாற்
பார்த்தபின் வியந்து சொல்வான் பகுதியா மிகுதி மோகங்
கோத்தஞா லங்க ளாகிக் கோரவென் மனத்தி னூடே
ஆத்தமாய் வளரா நின்ற தகோவகோ வீதொன் றென்னே.

இ - ள். நிமிடத்தில் - ஒருநிமிஷத்தில், பிறவியெல்லா நீத்தனன் - சநநங்கள் அனைத்தையு நீக்கினன், ஞானக் கண்ணால் - ஞான திருஷ்டியினால், பார்த்தபின் - பார்த்தபின்பு, வியந்து சொல்வான் - அதிசயித்துரைப்பான், பகுதியாம் - பிரகிருதியான, மிகுதி மோகம் - மிகுந்தமோகமானது, கோத்த ஞாலங்களாகி - மூடிய சகங்களாகி, கோரவென் மனத்தினூடு - கோரமாகிய என்மனதினிடத்தில், ஆத்தமாய் வளராநின்றது - இஷ்டமாக வளருகின்றது, ஈதொன்று - இதுவொன்று, என்னவகோவகோ - என் னவதிசயம் என்னவதிசயம்?-எ-று.

எ - து. ஒருநிமிஷத்தில் சநநங்களனைத்தையு நீக்கினன். ஞான திருஷ்டியினால் பார்த்தபின்பு அதிசயித்துரைப்பான். பிரகிருதியான மிகுந்த மோகமானது மூடிய சகங்களாகிக் கோரமாகிய என்மனதினிடத்தில் இஷ்டமாக வளருகின்றது. இதுவொன்று என்ன அதிசயம்? என்ன அதிசயம்?—எ ம். (38)

## ஆத்மாவிலுண்டான மனோசங்கற்பத்தால் எடுத்த வடிவங்களை ஞானதிருஷ்டியாற் காண்டல்.

கற்பன வனைத்துங் கற்றேன் காண்பன வனைத்துங் கண்டேன்
உற்பவத் தநேககால முழன்றவெந் துயருந் தீர்ந்தேன்
நற்பய னறிவைப் பெற்றே னாமினி யைய வேகி
எற்படர் மந்த ரத்தி லிருக்கின்ற வுடலைக் காண்பேம்.

இ - ள். கற்பனவனைத்தும் - அறியவேண்டுவனவெல்லாம், கற்றேன் - அறிந்தேன், காண்பன வனைத்துங்கண்டேன் - காணவேண்டுவன வெல்லாங் கண்டேன், உற்பவத்து - சநநத்தில், அநேககால முழன்ற - வெகுகாலஞ் சுழன்ற, வெந்துயருந் தீர்ந்தேன் - வெவ்விய துன்பமும் நீங்கினேன், நற்பய னறிவைப்பெற்றேன் - நற்பிரயோசனமாகிய ஆத்மஞானத்தை யடைந்தேன், ஐய - ஐயனே, நாமினியேகி - நாமினிமேற்போய், மந்தரத்திலிருக்கின்ற - மந்தரமலையிலிருக்கின்ற, எற்படர் - என்புநெருங்கிய, உடலைக்காண்பேம் - சரீரத்தைப்பார்ப்போம்—எ-று.

எ — து. அறியவேண்டுவனவெல்லாம் அறிந்தேன். காணவேண்டுவனவெல்லாங் கண்டேன். சநநத்தில் வெகுகாலஞ் சுழன்ற

வெவ்விய துன்பமும் நீங்கினேன். நற்பிரயோசனமாகிய ஆத்மஞான த்தையடைந்தேன் ஐயனே! நாமினிமேற்போய் மந்தரமலையிலிருக் கின்ற என்பு நெருங்கிய சரீரத்தைப் பார்ப்போம்—எ-ம். (39)

இதுவுமது.

கருமமே யேது வாகுங் காயகங் காளந் தன்னை
இருகணு னோக்கி யின்ப மெய்துவா னினைந்தே னியாதும்
ஒருசெயல் வேட்கை யில்லை யொழிப்புறு செயலு மில்லை
வருகிரா லென்ன வன்னோர் மந்தரங் கணத்திற் சேர்ந்தார்.

இ-ள். கருமமே யேதுவாகும் - கருமமே காரணமாகின்ற, காயகங்கா ளந்தன்னை - சரீரமாகிய என்புவடிவத்தை, இருகணுனோக்கி - இரண்டு கண் களினாலும்பார்த்து, இன்பமெய்துவான் - சுகத்தையடையும்பொருட்டு, நினை ந்தேன் - சிந்தித்தவெனக்கு, யாது மொருசெயல் வேட்கையில்லை - யாதொ ரு தொழிலிலும் விருப்புமின்று, ஒழிப்புறு செயலுமில்லை - வெறுப்புமின்று, வருகிராலென்ன - வாருங்களென்று (வாசுதேவன்) சொல்ல, அன்னோர் - அம் மூவரும், மந்தரங் கணத்திற்சேர்ந்தார் - மந்தரகிரியில் க்ஷணத்தில்வந்து சேர் ந்தார்கள்-எ-று.

எ-து. கருமமே காரணமாகின்ற சரீரமாகிய என்புவடிவத்தை இரண்டு கண்களினாலும் பார்த்து சுகத்தை யடையும்பொருட்டு சிந் தித்த எனக்கு யாதொரு தொழிலிலும் விருப்பமின்று வெறுப்புமி ன்று, வாருங்களென்று வாசுதேவன் சொல்ல அம்மூவரும் மந்தர கிரியில் க்ஷணத்தில் வந்துசேர்ந்தார்கள்—எ—ம்.

இ-எ-க-ம். சுக்கிரன் தனது சங்கற்பத்தை நசிப்பித்து ஞானவடிவமாய் முன்னுள்ள சுக்கிரவடிவமெடுக்கப் பற்றின்றிச் சங்கற்பித்தனனென்பதாம். ()

## சரீரத்தின் சடத்தன்மையைப்பார்த்து அதிசயித்து ஓதல்.

முந்துறு சகத்தி னெல்லை தெளிதரு மூவர் தாமும்
வந்துழி முன்னை சென்ம மருவிய வுடலை மைந்தன்
அந்தமின் மகிழ்வா னோக்கி யருந்தவப் பிதாவை நோக்கி
இந்தவன் கங்கா ளங்கொ லீன்றுநீ வளர்த்த தென்றான்.

இ-ள். முந்துறு - முதன்மையாகிய, சகத்தினெல்லை - சகத்தினு டைய பிரமாணத்தை, தெளிதரு மூவர் தாமும் - தெளிந்த மூவர்களும், வந் துழி வந்தவிடத்தில், முன்னை சென்மம் - முன்பார்க்கவ சநநத்தில், மரு விய வுடலை - பொருந்திய சரீரத்தை, மைந்தன் - புத்திரனாகிய வாசு

வன், அந்தமின் மகிழ்வால் - அளவில்லாத சந்தோஷத்தினால், நோக்கி - பார்த்து, அருந்தவப்பிதாவைநோக்கி - அரியதவமுள்ள தந்தையைப்பார்த்து, இந்தவன்கங்காளங்கொல் - இந்த வலிமையான முழுவெள்பையா, நீ யீன்று-நீபெற்று, வளர்த்ததென்றான் - வளர்த்ததென்று கேட்டான்.

எ — து. முதன்மையாகிய சகத்தினுடைய பிரமாணத்தை தெளிந்த மூவர்களும் அந்தவிடத்தில் முன்பார்க்கவ சநநத்தில் பொருந்திய சரீரத்தை புத்திரனாகிய வாசுதேவன் அளவில்லாத சந்தோஷத்தினால் பார்த்து அரிய தவமுள்ள தந்தையைப்பார்த்து இந்த வலிமையான முழுவெள்பையா நீபெற்று வளர்த்தது என்று கேட்டான்—எ-ம். (41)

## அமனஸ்கபாவத்தைச் சடத்தின்மேல் வைத்துத் துதித்தல்.

பின்னரு முரைப்பா னைய பெறலருஞ் சுகங்க ளாலே
முன்னநீ வளர்த்த காய மொய்துய ரனைத்து மாறி
இன்னல்கூர் காத லைய மிதாகித மெல்லா மின்றி
மன்னிய சுகம தாகி மனமிறந் திருந்த தன்றே.

இ - ள். பின்னருமுரைப்பான் - பின்பும் வாசுதேவன் சொல்லுவான், ஐய - (எனது) பிதாவே, பெறலருஞ் சுகங்களால் - பெறுதற்கரிய சுகங்களினால், முன்னநீ வளர்த்தகாயம் - முன்புநீ வளர்த்த சரீரமானது, மொய்துயரனைத்துமாறி - நெருங்கின துன்ப மியாவு நீங்கி, இன்னல் கூர் - துன்பமிகுந்து, காதல் - ஆசையும், ஐயம் - சந்தேகமும், இதம் - இதமும், அகிதம் - அகிதமுமாகிய, எல்லாமின்றி - அனைத்துமில்லாமல், மன்னிய சுகமதாகி - நிலைபெற்றஆநந்தமாய், மனமிறந்திருந்தது - மனநசித்திருந்தது-எ-று.

எ - து. பின்பும் வாசுதேவன் சொல்லுவான் எனது பிதாவே பெறுதற்கரிய சுகங்களினால் முன்பு நீர்வளர்த்த சரீரமானது நெருங்கின துன்ப மியாவு நீங்கி துன்பமிகுந்து ஆசையும், சந்தேகமும், இதமும், அகிதமுமாகிய அனைத்துமில்லாமல் நிலைபெற்ற ஆநந்தமாய் மன நசித்திருந்தது—எ-ம். (42)

## சுகாதீதத்தைச் சடத்தின்மேல்வைத்து உரைத்தல்.

மனமிலா நிலையி னன்றி மன்னுயிர்க் கின்ப முண்டே
கனமுறு சுகசம் போகக் கடலிலே திளைக்க லாகும்
அனகபே ரறிவு சாந்த மறிவுளோர் தாப நீங்கித்
தனதுயர் நிலையா மிந்தத் தனியுடல் வாழ்ந்த தன்றே.

இ - ள். மனமிலா நிலையினன்றி - மனமிறந்த நிலையை அல்லாமல், மன்னுயிர்க் கின்பமுண்டோ - மிருந்த சீவர்களுக்குச் சுகமுண்டாமோ, கனமுறு சுக சம்போகக்கடலில் - பேரானந்தானுபவமாகிய சமுத்திரத்தில், திளைக்கலாகும் - மூழ்கப்பட்ட, அனகபேரறிவு - களங்கமற்ற வியாப ஞானத்துக்கும், சாந்தம் - உபசாந்தத்துக்கும், அறிவுளோர் - ஞானவான்கள், தாபநீங்கி - துன்பநீங்கியிருக்கின்ற, தனதுயர்நிலை - தனது மேலான ஆத்மநிச்சயத்துக்கும், ஆம் - ஒப்பாக, இந்தத்தனியுடல் - இத்தனிமையான சரீரமானது, வாழ்ந்தது - சுகத்தையடைந்திருந்தது—எ-று.

எ - து. மனமிறந்த நிலையை யல்லாமல் மிருந்த சீவர்களுக்குச் சுகமுண்டாமோ பேரானந்தானுபவமாகிய சமுத்திரத்தில் முழுகப்பட்ட களங்கமற்ற வியாபகஞானத்துக்கும், உபசாந்தத்துக்கும், ஞானவான்கள் துன்ப நீங்கியிருக்கின்ற தனது மேலான ஆத்மநிச்சயத்துக்கும், ஒப்பாக இத்தனிமையான சரீரமானது சுகத்தையடைந் திருந்தது—எ-ம்.

இ-ரு-க-ம். சங்கற்ப நாசத்திலுண்டான பிரமசுகத்தை அறிவித்ததாம்.

## காலன் அசுர ஆசாரியராகக்கடவதென்று அனுக்கிரகித்தல்.

அருந்தவப் பயனு லிந்த வற்புதங் கண்டே னென்ன
இருந்தவக் கால ஞேக்கி யிவ்வுரை யிகந்து மாற்றிப்
பொருந்திய வுடலின் மன்னர் புரிபுகு மதுபோற் புக்கு
திருந்திய வசுரர்க் கெல்லாந் தேசிகச் செய்கை செய்வாய்.

இ - ள். அருந்தவப்பயனுல் - அரிய தபோபலத்தினுல், இந்தவற்புதம்- இந்தவாச்சரியத்தை, கண்டேனென்ன - பார்த்தேனென்று வாசுதேவன் சொல்ல, இருந்த - (சமீபத்தி) லிருந்த, அககாலனேக்கி - அந்தக்காலனுனவர் பார்த்து, இவ்வுரை - இந்த வார்த்தையை, இகந்து மாற்றி - தடுத்து, பொருந்திய வுடலில் - அடுத்திருக்கின்ற இச்சரீரத்தில், மன்னர்புரி புகுமதுபோல்- அரசர்கள் (தனது) பட்டணத்திற் பிரவேசிப்பதுபோல, புக்கு - புகுந்து, அசுரர்க்கெல்லாம் - அவுணர்களனைவர்க்கும், திருந்திய - திருத்தத்தையுடைய, தேசிகச்செய்கை செய்வாய் - ஆசிரியக்கிரிகையைச் செய்வாய்-எறு.

எ - து, அரிய தபோபலத்தினுல் இந்த ஆச்சரியத்தைப் பார்த்தேனென்று வாசுதேவன் சொல்ல சமீபத்திலிருந்த அந்தக் காலனுனவர் பார்த்து இந்த வார்த்தையைத் தடுத்து அடுத்திருக்கின்ற இச்சரீரத்தில் அரசர்கள் தனது பட்டணத்திற் பிரவேசிப்பதுபோலப்புகுந்து அவுணர்களனைவர்க்கும் திருத்தத்தையுடைய ஆசிரியக் கிரிகையைச் செய்வாய்—எ-ம்.

## சுக்கிரனது வடிவத்திற் புகுதல்.

என்றுசுக் கிரனை யேவி யிவரிரு வரையும் வாழ்த்தி
நின்றுழி மறைந்தான் கால னீத்தவர் மறுகி நின்றார்
பின்றைய வாசு தேவப் பேருறு கருத்தை நீக்கி
வன்றகை வெள்ளி முன்ன மருவிய வுடலிற் புக்கான்.

இ - ள். என்று - (இப்படி) யென்று, சுக்கிரனையேவி - சுக்கிராசாரிய ருக்கு ஆக்கியாபனஞ்செய்து, இவரிருவரையும் - இந்தப் பிருகுமுனியையுஞ் சுக்கிராசாரியரையும், வாழ்த்தி - ஆசீர்வாதஞ்செய்து, காலன் - காலனானவர், நின்றுழி-நின்றவிடத்தில், மறைந்தான்-மறைந்துபோனார், நீத்தவர் - (காலனை விட்டுப்) பிரிந்தவர்கள், மறுகிநின்றார் - விசனமடைந்திருந்தார்கள், பின்றை- பின்பு, அவ்வாசுதேவப்பேருறு- அந்த வாசுதேவனென்னு நாமத்தையுடைய, கருத்தைநீக்கி - நினைவைத்தள்ளி, வன்றகைவெள்ளி - வலியபெருமையை யுடைய, சுக்கிராசாரியரானவர், முன்னமருவிய - முன்பொருந்தி யிருந்த, உடலிற்புக்கான் - சரீரத்திற் புகுந்தார்—எ-று.

எ - து. இப்படியென்று சுக்கிராசாரியருக்கு ஆக்கியாபனஞ் செய்து இந்தப் பிருகுமுனியையுஞ் சுக்கிராசாரியரையும் ஆசீர்வா தஞ்செய்து காலனானவர் நின்றவிடத்தில் மறைந்துபோனார். காலனை விட்டுப் பிரிந்தவர்கள் விசனமடைந்திருந்தார்கள். பின்பு அந்த வாசு தேவனென்னு நாமத்தையுடைய நினைவைத்தள்ளி வலியபெருமை யையுடைய சுக்கிராசாரியரானவர். முன்பொருந்தியிருந்த சரீரத்திற் புகுந்தார்—எ—ம். (45)

## சுக்கிராசாரியராக எழுதல்.

வினையது வயத்தி னாலே வெள்ளிசே ருடலந் தன்னைத்
தனைநிகர் பிருகுவேத மந்திர சலத்தா லாட்ட
நனைதலு நாடி யெல்லா நயம்பெறப் பிராணன் றாங்கி
அனையவ னெழுந்து தாதை யடிபணிந் தருகு நின்றான்.

இ - ள். வினையது வயத்தினால் - விதியின் வசத்தினால், வெள்ளிசேருட லந்தன்னை - சுக்கிரனடைந்த சரீரத்தை, தனைநிகர் - தனக்குத்தானே சமா னமாகிய, பிருகு - பிருகுமுனிவர், வேதமந்திர சலத்தாலாட்ட - கமண்டலத் திலுள்ள வேதமந்திர தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்விக்க, நயம்பெற - நயத்தை யடைய, பிராணன்றாங்கி - பிராணனைத்தரித்து, அனையவனெழுந்து - அச் சுக்கிராசாரிய ரெழுந்து, தாதையடிபணிந்து - பிதாவின் பாதத்தை வணங்கி, அருகு நின்றான் - பக்கத்தினின்றான்—எ-று.

எ - து. விதியின் வசத்தினால் சுக்கிரனடைந்த சரீரத்தை தனக்குத்தானே சமானமாகிய பிருகுமுனிவர் கமண்டலத்திலுள்ள வேத மந்திரதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்விக்க நரம்புகளனைத்தும் நயத்தையடைய பிராணனைத்தரித்து அச்சுக்கிராசாரிய ரெழுந்து பிதாவின் பாதத்தை வணங்கி பக்கத்தினின்றான்—எ-ம். (46)

## சீவன்முத்தனாகச் சஞ்சரித்தல்.

பிருகுவு மைந்தன் றானும் பிறங்குமந் தரத்திற் கானில்
திருகிய சித்த மென்னுந் தீப்பகை தீரமாற்றி
வருதிரை யிலாத நீர்போன் மாசறு நிலையில் வாழ்ந்தார்
கருணைமா முகிலே யென்று கற்றுணர் வசிட்டர் சொன்னார்.

இ - ள். பிருகுவும் - பிதாவாகிய பிருகுமுனியும், மைந்தன்றானும் - புத்திரனாகிய பார்க்கவமுனியும, பிறங்குமந்தரத்தின்கானில் - உயர்ந்த மந்தரமலையிலுள்ள வனத்தில், திருகிய சித்தமென்னும - குற்றமாகிய மனமென்கின்ற, தீப்பகை - தீமையான சத்துருவை, தீரமாற்றி - தீர்ப்பாகக்கெடுத்து, வருதிரையிலாதநீர்போல் - வருகின்ற அலையற்ற சமுத்திரத்தைப்போல, மாசறுநிலையில்வாழ்ந்தார் - குற்றமற்ற சீவன்முத்தனிலையில் வாழ்ந்தார்கள், கருணைமாமுகிலேயென்று - கிருபைவடிவமான மகாமேகம்போன்றவரே யென்று, கற்றுணர் - கல்விஞானத்தையுடைய, வசிட்டன் சொன்னான் - வசிட்டமுனியானவர் சொன்னார்—எ-று.

எ - து. பிதாவாகிய பிருகுமுனியும், புத்திரனாகிய பார்க்கவமுனியும், உயர்ந்த மந்தரமலையிலுள்ளவனத்தில் குற்றமாகிய மனமென்கின்ற தீமையான சத்துருவைத்தீர்ப்பாகக் கெடுத்து வருகின்ற அலையற்ற சமுத்திரத்தைப்போல குற்றமற்ற சீவன்முத்தனிலையில் வாழ்ந்தார்கள். கிருபைவடிவமான மகாமேகம்போன்றவரேயென்று கல்வி ஞானத்தையுடைய வசிட்டமுனியானவர் சொன்னார்—எ-ம்.

இ-சு-க-ம். சுக்கிரன் அசுத்த சங்கற்பத்தை நீக்கிச் சுத்த சங்கற்பத்திலாசிரியத தன்மையைச் செய்தன னென்பதாம். (47)

சுக்கிரன்கதை முற்றிற்று.

ஆக கதை 13 - க்கு கவிதை - 563.

# தாமவியாளகடர் கதை.



அவதாரிகை.

முன்பு சகமாத்ம சங்கற்பமாய் விளங்குமென்பதை அறிவித்து அச்சகம் ஆத்மாநுசந்தான விவேகமின்றி அநாத்மாநுசந்தானமாக விளங்கின் விருத்தியடையு மென்பதை அறிவிக்குநிமித்தந் தாமாதிகதையைச் சொல்லுகிறார்.

## சத்துக்கள் அநுபவ இலக்கணம் அறிவித்தல்.

மீண்டுரை செய்வான் முற்றும் விசாரத்தோர் தொழிநீர நெஞ்சோர்
நீண்டதோர் மனனம் விட்டோர் நிகழ்சுக வறிவையுள்ளோர்
பூண்டுள காட்சி தன்னிற் போவபோய்க கொள்ள கொண்டோர்
காண்டகு தன்னைக்கண்டோர் காணாதோர் தனைக்காணாதோர்.

இ - ள். மீண்டுரைசெய்வான் - வசிட்டமுனி பின்னுஞ்சொல்லுவார், முற்றும்விசாரத்தோர்-முழுதும்விசாரணையையுடையவர்களும், தொழிநீர-மலினவிருத்திநீங்கின, நெஞ்சோர் - மனமுடையவர்களும், நீண்டதோர்மனனம் விட்டோர் - மிகுந்த ஒப்பற்ற சங்கற்பத்தை விடுத்தவர்களும், நிகழ் - பிரகாசிக்கின்ற, சுகவறிவையுள்ளோர் - ஆநந்தபோதத்தை யுடையவர்களும், பூண்டுள - சங்கற்பத்தினாற் றரித்திருக்கின்ற, காட்சிதன்னில் - திரிசியவஸ்துவில், போவபோய் - போகவேண்டிய (அநர்த்தசடதுக்கத்தைப்) போககி, கொள்ள கொண்டோர் - கொள்ளவேண்டிய (சச்சிதாநந்தசொரூபத்தைக்) கொண்டவர்களும், காண்டகுதன்னைக்கண்டோர் - திருஷ்டாவான ஆத்மசொரூபத்தைக்கண்டவர்களும், காணாதோர் தனைக் காணாதோர் - அதிருஷ்டாவான அநாத்மசொரூபத்தைக் காணாதவர்களும்—எ-று.

எ - து. வசிட்டமுனி பின்னுஞ் சொல்லுவார். முழுதும் விசாரணையையுடையவர்களும், மலினவிருத்திநீங்கினமனமுடையவர்களும், மிகுந்த ஒப்பற்றசங்கற்பத்தை விடுத்தவர்களும், பிரகாசிக்கின்ற ஆநந்தபோதத்தை யுடையவர்களும், சங்கற்பத்தினால் தரித்திருக்கின்ற திரிசியவஸ்துவில்போகவேண்டிய அநர்த்தசடதுக்கத்தைப்போக்கி கொள்ளவேண்டிய சச்சிதாநந்தசொரூபத்தைக் கொண்டவர்களும், திருஷ்டாவான ஆத்மசொரூபத்தைக்கண்டவர்களும், அதிருஷ்டாவான அநாத்மசொரூபத்தைக் காணாதவர்களும்—எ-ம். (1)

இதுவுமது.

சீவனா யிருந்து காணுஞ் சிற்பர தத்து வத்தே
மேவிய நனவை யுற்றோர் வெம்பவ மோக மார்க்கத்
தோவலில் சுழுத்தி யுற்றோ ரோர்முதிர் நிராசை யாலே
பாவனை நலனிற் றீங்கிற் பயிலும்வா தனையை மாய்த்தோர்.

இ - ள். சீவனாயிருந்துகாணும் - சீவிக்கின்றவனாக இருந்துபாராநின்ற, சிற்பர தத்துவத்து - ஞானமாகிய பரதத்துவத்தில், மேவிய - பொருந்திய, நனவையுற்றோர் -சாக்கிரத்தையடைந்தவர்களும், வெம்பவமோகமார்க்கத்து- கொடிய சநநமயக்கமென்னும்வழியில், ஓவலில் சுழுத்தியுற்றோர் - நீங்காதநித்திரையையடைந்தவர்களும், ஓர் முதிர்நிராசையால் - ஒப்பற்றமுதிர்ந்தபக்குவமான நிராசையினால், பாவனைநலனில் - பாவிக்கப்பட்ட நன்மையிலும், தீங்கில் - தீமையிலும், பயிலும் வாதனையைமாய்த்தோர் - பழகினவாசனையைக் கெடுத்தவர்களும்—எ-று.

எ — து. சீவிக்கின்றவனாகவிருந்து பாராநின்ற ஞானமாகிய பரதத்துவத்தில் பொருநதிய சாக்கிரதை யடைந்தவர்களும், கொடிய சநநமயக்கமெனனும் வழியில் நீங்காத நித்திரையையடைந்தவர்களும், ஒப்பற்றமுதிர்ந்த பக்குவமான நிராசையினால் பாவிக்கப்பட்ட நன்மையிலும், தீமையிலும் பழகினவாசனையைக கெடுத்தவர்களும்.

இதுவுமது.

வாதனை வலையைச் செற்று மனப்பந்த மாற்றி விட்டாற்
காதல்செய் தேற்றின் வித்தின் கலங்குநீர் தெளிவ தென்ன
மேதகு விஞ்ஞா னத்தான் மெய்ம்மையாஞ் சுபாவந் தானே
ஏதமற் றொளிரு முன்ன மியம்பிய வியல்பி னோர்க்கே.

இ - ள். வாதனைவலையைச்செற்று - வாசனையென்னும் வலையைககெடுத்து, மனப்பந்த - மனத்தினதுகட்டை, மாற்றிவிட்டால் - அறுத்துவிட்டால், காதல்செய் - ஆசைசெய்கின்ற, தேற்றின்வித்தின்-தேற்றாங்கொட்டையினால், கலங்குநீர் - கலங்கியசலமானது, தெளிவதென்ன - தெளிவதுபோல, மேதகுவிஞ்ஞானத்தால் மேன்மையாகத்தெளிந்த மெய்ஞ்ஞானத்தினால், மெய்ம்மையாஞ்சுபாவந்தானே - உண்மையாகிய தற்சுபாவமே, முன்னமியம்பிய - முன்சொல்லிய, இயல்பினோர்க்கு - குணங்களை யுடையவர்களுக்கு, ஏதமற்றொளிரும் - துன்பமற்று (நிரதிசயாநந்தமாகப்) பிரகாசிக்கும்—எ-று.

எ - து. வாசனையென்னும் வலையைக்கெடுத்து மனத்தினதுகட்டை அறுத்துவிட்டால் ஆசைசெய்கின்ற தேற்றாங்கொட்டையினால் கலங்கியசலமானது தெளிவதுபோல மேன்மையாகத்தெளிந்த மெ

ஞ்ஞானத்தினுல் உண்மையாகிய தற்சுபாவமோ முன்சொல்லிய கு ணங்களை யுடையவர்களுக்குத் துன்பமற்று நிரதிசயாநந்தமாகப் பிர காசிக்கும்—எ-ம்.

(இ-ங்-க-ம்.) மனோநாசமும் வாசனுட்சயமும் வந்த இவ்வனுபவத்தி னுல் தத்துவஞானம் விளங்குமென்பதாம். (3)

## வாசனுடசய உபாயம் இயாதெனின்.

சங்கஞ்செய் மயல்போய்த் தொந்தந் தவிர்ந்தொன்றைச் சார்
வ தின்றிச், சிங்கிசெய் கூட்டி னின்றுஞ் சேணுறச் செல்லும் புட்
போல், துங்கமோ கத்தி னின்றுந் தூய்மனம் வெளியிற் போந்து,
பங்கமா மையந் தீரப் பற்றெனு மனைத்துந் தீரும்.

இ-ள். சங்கஞ்செய்மயல்போய் - விடயத்திற் சேருகின்ற இச்சை நீங்கி, தொந்தந்தவிர்ந்து - சுகதுக்கமான இரண்டுநீங்கி, ஒன்றைச்சார்வ தின்றி - ஒன்றையும்பற்றுமல், சிங்கிசெய் - சிக்கஞ்செய்யும், கூட்டினின்றும், கூண்டிலிருந்தும், சேணுறச்செல்லும்புட்போல் - ஆகாயத்திற்செல்லுகின்ற பறவையைப்போல, துங்கமோகத்தினின்றும் - மகாமோகத்திலிருந்தும், தூய்மனம் - பரிசுத்தமாகிய மனமானது, வெளியிற்போந்து - வெளிப்பட்டு, பங்கமாம் - வேறுபாடாகிய, ஐயந்தீர - சந்தேகநீங்க, பற்றெனு மனைத்துந் தீரும் - ஆசையென்கின்ற யாவுநீங்கும்—எ-று.

எ-து. விடயத்திற்சேருகின்ற இச்சை நீங்கி சுகதுக்கமான இரண்டுநீங்கி ஒன்றையும்பற்றுமல் சிக்கஞ்செய்யும் கூண்டிலிருந் தும் ஆகாயத்திற்செல்லுகின்ற பறவையைப்போல மகாமோகத்தி லிருந்தும் பரிசுத்தமாகிய மனமானது வெளிப்பட்டு வேறுபாடா கிய சந்தேகநீங்க ஆசையென்கின்ற யாவுநீங்கும்—எ-ம்.

இ-ம். மனம் விடய சம்பந்த நீங்கித் தன்மயமாய்த் தனித்திருத்தலே வாசனுட்சய மென்பதாம். (4)

## அச்சகலத்தியாகமனதுக்கு எப்படி உண்டாகுமெனின்.

ஆன்றவம் மனம்பூர் ணத்தை யடைந்துபூ ரணவெண் டிங்கள்
போன்றுற விளங்கு மிந்த நிலையிலே பொலிவுற் றோர்கண்
மூன்றுமூர்த் திகளாந் தேவ முதல்வர்க்குங் கருணை செய்வர்
ஊன்றிய விசாரத் தாலே யுயர்பொரு ளெய்த வேண்டும்.

இ — ள். ஆன்றவம்மனம் - மாட்சிமையான அம்மனமானது, பூரணத்தையடைந்து - பரிபூரணத்தைப்பெற்று, பூரணவெண்டிங்கள் — களங்க மற்ற பூரணசந்திரனை, போன்றுற - ஒப்பாக, விளங்கும் - பிரகாசிக்கும், இந்த நிலையிலேபொலிவுற்றோர்கள் - இந்நிலையிற் பிரகாசித்தவர்கள், மூன்று மூர்த்திகளாம் - மும்மூர்த்திகளாகிய, தேவமுதல்வர்க்கும் - தெய்வத்தன்மையின் முதன்மையானவர்களுக்கும், கருணைசெய்வர் - கிருபைசெய்வார்கள், ஊன்றிய - உறுதியாகிய, விசாரத்தால் - விசாரணையினால், உயர்பொருள் - மேன்மையாகிய பரமவஸ்துவை, எய்தவேண்டும் - அடையவேண்டும் —எ-று.

எ — து. மாட்சிமையான அம்மனமானது பரிபூரணத்தைப் பெற்றுக் களங்கமற்ற பூரணசந்திரனை ஒப்பாகப் பிரகாசிக்கும் இந்நிலையிற் பிரகாசித்தவர்கள் மும்மூர்த்திகளாகிய தெய்வத்தன்மையின் முதன்மையானவர்களுக்கும் கிருபை செய்வார்கள். உறுதியாகிய விசாரணையினால் மேன்மையாகிய பரமவஸ்துவை அடையவேண்டும்—எ-ம்.

இ-ம். விசாரணையால் விடயபற்று நீக்கம் வருமென்பதாம். (5)

## அவ்விசாரம் இயாதெனின்.

உலகெது நாமா ரென்ன வுற்றுநின் றுணரு மட்டுங்
கலகமார் பிறவி மோகங் கங்குல்போல் மூடி நிற்கும்
அலகுறு முலகுந் தாமு மழிவிலசிற் சோதி யென்றே
சலனமில் கண்ணாற் கண்டோர் தத்துவ நிலைமை கண்டோர்.

இ - ள். உலகெது - இந்தச்சகமெப்படிப்பட்டது, நாமாரென்ன - நான் எப்படிப்பட்டவனென்று, உற்றுநின்றுணருமட்டும் - உறுதியாய் விசாரித்தறிகின்றபரியம், கலகமார் பிறவிமோகம் - கலகநிறைந்த சாகமயககமானது, கங்குல்போல் - அந்தகாரத்தைப்போல, மூடிநிற்கும் - மூடிக்கொண்டிருககும், அலகுறுமுலகும் - கணககிலாத உலகங்களும், தாமும் - ஆத்மாவும், அழிவில் - அழிவில்லாத, சிற்சோதியென்று - ஞானப்பிரகாசமென்று, சலனமில் கண்ணாற்கண்டோர் சலனமற்ற ஞானக்) கண்ணினாற் பார்த்தவர்கள், தத்துவநிலைமை கண்டோர் - தத்துவநிச்சயத்தைத் தரிசித்தவர்கள்—எ-று.

எ - து இந்தச் சக மெப்படிப்பட்டது? நான் எப்படிப்பட்டவனென்று உறுதியாய் விசாரித்தறிகின்ற பரியநதம் கலகநிறைந்த சநந மயக்கமானது அந்தகாரத்தைப்போல மூடிக்கொண்டிருக்கும். கணக்கில்லாத உலகங்களும் ஆத்மாவும் அழிவில்லாத ஞானப்பிரகாசமென்று சலனமற்ற ஞானக்கண்ணினாற் பார்த்தவர்கள் தத்துவ நிச்சயத்தைத் தரிசித்தவர்கள்—எ-ம். (6)

இதுவுமது.

அகிலசத் தியுமா யொன்று யநந்தமா யறிவு தானே
சகலபா வனைக்கு முள்ளா மெனக்கண்டோர் தம்மைக் கண்டோர
பகர்வுறு நானு மில்லை பிறிதில்லை பரமே யுண்டென்
றிகமுற வுள்ள தில்ல திடையுறக் கண்டோர் கண்டோர்.

இ - ள். அகிலசத்தியுமாய் - சகலசத்திகளாயும், ஒன்றாய் - ஏகமாகியும் அநந்தமாய் - அளவில்லாததாகியு மிருக்கின்ற, அறிவுதானே - ஆத்மஞானமே, சகல பாவனைக்கும் - சமஸ்தபாவனைகளுக்கும், உள்ளாமெனா - ஆந்தரியமாமென்று, கண்டோர் - பார்த்தவர்கள், தம்மைக்கண்டோர் - ஆத்மசொரூபத்தைத் தெரிசித்தவர்கள், பகர்வுறு-சொல்லப்பட்ட, நானுமில்லை - நானென்கின்ற ஞாதாவுமில்லை, பிறிதில்லை - அதற்கு வேறாகிய சகமென்னு ஞேயமுமில்லை, பரமேயுண்டென்று - பிரமமேயுண்டாயிருக்கிறதென்று, இகமுற - இவ்விடத்திற்பொருந்த, உள்ளது - சத்துக்கும், இல்லது - அசத்துக்கும் இடையுற - மத்தியிற்பொருந்த, கண்டோர் - பார்த்தவர்களே, கண்டோர் ஆத்மாவைத்தரிசித்தவர்கள் - எ-று.

எ - து. சகலசத்திகளாயும் ஏகமாகியும் அளவில்லாததாகியுமிருக்கின்ற ஆத்மஞானமே சஸ்மத பாவனைகளுக்கும் ஆந்தரியமாமென்று பார்த்தவர்கள் ஆத்மசொரூபத்தைத் தெரிசித்தவர்கள் சொல்லப்பட்ட நானென்கின்ற ஞாதாவுமில்லை, அதற்கு வேறாகிய சகமென்னு ஞேயமுமில்லை, பிரமமேஉண்டாயிருக்கின்றதென்று இவ்விடத்திற பொருந்த சத்துக்கும் அசத்துக்கும மத்தியிற் பொருந்தப் பார்த்தவர்களே ஆத்மாவைத தரிசிததவர்கள் —எ-ம்.

இ-ம். சித்தையுஞ்சடத்தையும் விசாரித்துச் சேடத்தை நீக்கிச் சித்தாயிருப்பதே ஆத்மவிசாரமென்பதாம். (7)

## விடயசுகம் அனுபவிக்கலாமோ எனின்.

முயல்வறத் தாமே தோன்று மொய்திசைப் பொருள்க டம்மின்
மயலறச் செல்லுங் கண்போல மாசறு தீரர் புந்தி
செயல்களிற் செல்லுமன்றி தெரிந்து செல் போகந் துய்த்தால்
துயர்செயா தறிந்து சேர்ந்தாற் சோருந் தோழ ராவார்.

இ - ள். முயல்வற - முயற்சியில்லாமல், தாமேதோன்றும் - தானே தோற்றுகின்ற, மொய்திசைப்பொருள்கடமமில் நெருங்கிய திக்குகளிலுள்ள விடய வஸ்துக்களில், மயலற - இச்சையில்லாமல், செல்லுங்கண்போல் - செல்கின்ற

திருஷ்டியைப்போல, மாசறு சீரார் - களங்கமற்ற பிரமவித்துக்களுடைய, புந்தி - புத்தியானது, செயல்களிற்செல்லும் - (நிகழ்காலத்திலுள்ள) தொழில் களிற் செல்லுமென்று, தெளிந்து - தெளிவுற்று, பல்போகந் துய்த்தால் - பல போகங்களைப் புசித்தால், துயர்செயாது - அஃது துன்பஞ்செய்யாது, அறிந் துசேர்ந்தால் - தெரிந்து சேரின், சோரருந் தோழராவார் - திருடரு நட்பா வர் எ-று.

எ – து. முயற்சியில்லாமல் தானே தோற்றுகின்ற நெருங்கிய திக்குகளிலுள்ள விடய வஸ்துக்களில் இச்சையில்லாமல் செல்கின்ற திருஷ்டியைப்போல களங்கமற்ற பிரமவித்துக்களுடைய புத்தியா னது நிகழ்காலத்திலுள்ள தொழில்களிற செல்லுமென்று தெளிவு ற்று பலபோகங்களைப் புசித்தால் அஃது துன்பஞ்செய்யாது தெரி ந்துசேரின் திருடரும் நட்பாவர்—எ-ம்.

இ-ம். பிரமாநந்தவிலாசமே விடயாநந்தமென்றுணர்ந்து அனுபவிக்கில் அதுவே சகாயமென்பதாம். (8)

### அங்ஙனம் பாராவிடில் என்ன வரும் எனின்.



நெறியிடை வந்தோர் கூட்ட நெறிசெல்வோர் காணு நேர்போற்
செறிதரு போக மெல்லாஞ் சேதனர் காண்ப ரன்றே
அறிவினுன் மனதை வென்றோ ரற்பமே பெரிதாய்க் காண்பர்
பிறகது துயராமென் றே பெரியன போகம் வேண்டார்.

இ - ள். நெறியிடைவந்தோர்கூட்டம் - மார்க்கமத்தியில்வந்த (கலியா ணக்) கூட்டங்களை, நெறிசெல்வோர்-வழியினடப்பவர்கள், காணுநேர்போல்- காண்கின்ற தன்மையைப்போல, செறிதருபோகமெல்லாம் - மிகுந்த போக வஸ்துக்க ளனைத்தையும், சேதனர் காண்பர் - அறிவுள்ளோர் பார்ப்பார்கள், அறிவினால் - (ஆத்ம) ஞானத்தினால், மனதை வென்றோர் - மனதைச் செயித் தவர்கள், அற்பம் பெரிதாய்க்காண்பர்-அற்ப (போகத்தைப்) பெரிதாகப் பார்ப் பார்கள், பிறகது துயராமென்று - பின்பது துன்பமாமென்று நினைத்து, பெ ரியனபோகம் வேண்டார் - மிகுந்த (விடய) போகத்தை விரும்பார்கள்-எ-று

எ – து மார்க்கமத்தியில் வந்த கலியாணக்கூட்டங்களை வழியில் நடப்பவர்கள் காண்கின்ற தன்மையைப்போல மிகுந்த போகவஸ் துக்க ளனைதனையும் அறிவுள்ளோர் பார்ப்பார்கள். ஆத்மஞானத்தி னல் மனதைச் செயித்தவர்கள் அற்ப போகத்தைப் பெரிதாகப் பார் ப்பார்கள். பின்பது துன்பமாமென்று நினைத்து மிகுந்த விடயபோ கத்தை விரும்பார்கள்—எ-ம்.

இ - ம். ஆத்மதிருஷ்டியினின்று அநாத்மாவைப்பற்றறப் பாராவிடில்து ன்பம் வருமென்பதாம், (9)

துன்பம் நீங்குநெறி யாதெனின்.

நலங்கிய சிறைதீர் மன்ன னகர்மட்டு மகிழ்வு கூரும்
அலங்கல்வேல் வெற்றி வேந்த னவனியுஞ் சிறிதென் றெண்ணுங்
கலங்குறு மனதை வெல்வோர் கைகையாற் கால்கள் காலால்
விலங்குபற் பல்லா லங்க மியாவுமிப் படிமுன் சேர்க்க

இ - ள். நலங்கிய - வருத்தமுற்ற, சிறைதீர்மன்னன் - சிறைச்சாலையினி ன்று நீங்கின அரசன், நகரமட்டும் - (தனது) பட்டண அளவிலும், மகிழ்வு கூரும் - மகிழ்ச்சியடைடவன், அலங்கல் -(வெற்றி) மாலையையும், வேல் வேலா யுதத்தையும் (தரித்த), வெற்றிவேந்தன் - செயம்பொருந்திய அரசனானவன், அவனியும் - பூமி (முழு மை)யும், சிறிதென்றெண்ணும் - அற்பமென்று நினைப் பன் ,கலங்குறு - கலக்கம்பொருந்திய, மனதைவெல்வோர் - மனதைச்செயிப் பவர்கள், கைகையால் - கரத்தைக கரத்தினாலும், கால்கள்காலால் - கால்களை ககால்களினாலும், இலஙகுபற்பல்லால் - விளஙகிய பல்லைப் பல்லினாலும், அங்க மியாவும் - சரீரமுழுமையும், இப்படி முன்சேர்கக - இப்படியே முன்சேர்க்கக் கடவது-எ-று.

எ - று. வருத்தமுற்ற சிறைச்சாலையினின்று நீங்கின அரசன் தனது பட்டண அளவிலும் மகிழ்ச்சியடைடவன். வெற்றிமாலையையும் வேலாயுதத்தையுந்தரித்த செயம்பொருந்திய அரசனானவன் பூமிமு ழுமையும் அற்பமென்று நினைப்பன் கலக்கம்பொருந்திய மனதைச் செயிப்பவர்கள் கரத்தைக் கரத்தினாலும், கால்களைககால்களினாலும்வி ளங்கிய பல்லைப்பல்லினாலும்சரீரமுழுமையும் இப்படியேமுன்சேர்க்க க்கடவது—எ-ம். (10)

இதுவுமது

பகைமனம் வெற்றி யல்லாற் பவக்கடல் வங்க மில்லை
வகைபடு முலகிற் செல்வர் வரிசையோர் மறுவி லாதோர்
மிகையுயர் புருட கீர்த்தி மிக்கவ ரென்போ ருள்ளக்
குகையிடைத் தொழில்க ணஞ்சார் கொடுமனப்பாம்பைக்கொன்றோர்.

இ - ள். பகை-சத்துருவாகிய, மனவெற்றியல்லாமல்-மனோசயமேயன்றி, பவக்கடல் - சாகசமுத்திரத்தைக் (கடந்துபோவதற்கு), வங்கமில்லை - கப்ப லின்று, உள்ளக்குகையிடை - இருதயத்தினிடத்தில், தொழில்கணஞ்சார் - தொழில்களானவிஷநிறைந்த, கொடுமனப்பாம்பை - பொல்லாங்காகிய மனச்

சற்பத்தை, கொன்றோரென்போர் - செயித்தோரென்பவர்கள், வகைபடுமுல கிற்செல்வர் - வகையுள்ள (மோட்ச) உலகத்திற்போவார்கள், வரிசையோர் நல்லொழுங்குள்ளவர்கள், மறுவிலாதோர் - குற்றமற்றவர்கள், மிகையுயர்புருடர் - மிகவு மேன்மையான புமான்கள், கீர்த்திமிக்கவர் - புகழ்மிகுந்தவர்கள்

எ - து. சத்துருவாகிய மனோசமேயன்றி சநநசமுத்திரத்தைக் கடந்துபோதற்கு கப்பலில்லை இருதயப்புத்தினிடத்தில் தொழில்களான விடநிறைந்த பொல்லாங்காகிய மனச்சற்பத்தை செயித்தோரென்பவர்கள் வகையுள்ள மோட்சவுலகத்திற்போவார்கள். நல்லொழுங்குள்ளவர்கள். குற்றமற்றவர்கள் மிகவு மேன்மையான பூமான்கள். புகழ்மிகுந்தவர்கள்—எ-ம்.

(இ-உ-க-ம்.) மனோநிக்கிரகமே துன்பத்தை நீக்குதற்கு உபாயமென்பதாம். (11)

## அம்மனோநாசம் யாதினால் வருமெனின்.

மனமெனும் வினையை வென்றோர் மலரடி முடிமேற் கொள்வாம்
இனநகரங்க ளென்னு மிராச்சியத் திருந்து வாழ்ந்த
முனமுறு பாவமென்னு மும்மதக் களிற்றி னாலுங்
கனமயற் படைகளாலுங் காணமாம் பகையை வெல்வாய்.

இ - ள். மனமெனும் வினையைவென்றோர் - மனமென்கின்றபகையைசெயித்தவர்களது, மலரடிமுடிமேற்கொள்வாம் - தாமரைமலர்போன்றபாதங்களைச் சிரசின்மேற் சூட்டுவாம், இனநகரங்களென்னும்-கூட்டமாகிய நகரங்களென்கின்ற, இராச்சியத்திருந்து - உலகத்திலிருந்து, வாழ்ந்த-சுகித்த, முனமுறுபாவமென்னும் - முன்னுள்ள பாவமென்கின்ற, மும்மதக்களிற்றினாலும்-(காமவெகுளிமயக்கமென்னு) மூன்று மதங்களை யுடையயானையினாலும், கனமயற்படைகளாலும்-போராசையென்னும் ஆயுதங்களினாலும்(கெம்பீரமுடைய), காணமாம்பகையை - இந்திரியமென்னுஞ் சத்துருக்களை, வெல்வாய் - செயஞ்செய்வாய்—எ-று.

எ - து. மனமென்கின்ற பகையைச் செயித்தவர்களது தாமரைமலர்போன்ற பாதங்களைச் சிரசின்மேற் சூட்டுவாம். கூட்டமாகிய நகரங்களென்கின்ற உலகத்திலிருந்துசுகித்தமுன்னுள்ள பாவமென்கின்ற காமவெகுளி மயக்கமென்னுமூன்று மதங்களையுடைய யானையினாலும் போராசையென்னும் ஆயுதங்களினாலுங் கெம்பீரமுடைய இந்திரியமென்னுஞ் சத்துருக்களை செயஞ்செய்வாய்—எ-ம்.

இ-ம். இந்திரியநிக்கிரகத்தான் மனோநாசம் வருமென்பதாம். (12)

## அவ்விந்திரிய நிக்கிரகம் யாதினால்வரு மெனின்.



**துனிமனச் செருக்கு மாய்த்துத் தொடர்பொறிப் பகையைவெல்லிற்**
**பனிபடு பதுமக் கான்போற் படர்ந்தவா சனைகண் மாளுந்**
**தனியறி வொன்றே யென்று சாதித்திம் மனம்வென் மட்டுங்**
**கனியிருள் செறியும் பேய்போற் கருத்தில்வா சனைவந் தெய்தா.**

இ-ள். **துனிமனச் செருக்குமாய்த்து** துன்பமுள்ள மன அகங்காரத்தைக் கெடுத்து, **தொடர்பொறிப் பகையை வெல்லில்** - தொடராநின்ற இந்திரியங்களென்னுஞ் சத்துருக்களை வென்றால், **பனிப்படு பதுமக் கான்போல்** - பனிதோய்ந்த தாமரைக் காட்டைப்போல, **படர்ந்த வாசனைகண் மாளும்** - விஸ்தாரமான வாசனைகள் நாமடையும், **தனியறி வொன்றேயென்று** - ஒப்பற்ற ஞானம் ஏகமேயென்று, **சாதித்து** - சாதனைசெய்து, **இம்மனம் வென் மட்டும்** - இந்த மனதைச் செயிக்கின்ற அளவும், **கனியிருள் செறியும் பேய்போல்** - பழுத்த இருட்டினிடத்தில் நெருங்கியிருக்கின்ற பசாசைப்போல, **கருத்தில்** - மனதின்கண், **வாசனைவந்தெய்தா** - வாசனையானது வரமாட்டாது. எ-று.

எ-து. துன்பமுள்ள மன அகங்காரத்தைக் கெடுத்துத் தொடராநின்ற இந்திரியங்களென்னுஞ் சத்துருக்களை வென்றால் பனிதோய்ந்த தாமரைக் காட்டைப்போல விஸ்தாரமான வாசனைகள் நாசமடையும் ஒப்பற்ற ஞானம் ஏகமேயென்று சாதனை செய்து இந்தமனதைச் செயிக்கின்ற அளவும் பழுத்த இருட்டினிடத்தில் நெருங்கியிருக்கின்ற பசாசைப்போல மனதின்கண் வாசனையானது வரமாட்டாது—எ-ம்.

இ-ரி. இத்திருஷ்டாந்தம் விதிரேகமெனக் கொள்க. விவேகத்தாற்பெறும் வாசனாத்தியாகத்தால் அவ்விந்திரியத்தியாகம் வருமென்பதாம். (13)

## விவேகிகளுக்கு வாசனாத்தியாகம் வந்தமனதின் சகாயம் இயாதெனின்.



மந்திரி யெனலா முண்மை மருவுறும் விசாரத் தாலே
இந்திரி யங்க ளென்னு மிடர்பகை யறுத்த லாலே
தந்திரி யெனலா மிட்டஞ் சமைத்தலா லேவ லாளா
நொந்திரி விலாத வுள்ள நோக்கிய விவேகத் தோர்க்கே.

இ-ள். **நொந்திரிவிலாத** - துன்பத்துடன் சுழலாத, **உள்ளம்** - மனமானது, **நோக்கிய** - (சகலத்தையுந் தனது சொரூபமாகப்) பார்த்த, **விவேகத்தோர்க்கு** - ஞானிகளுக்கு, **உண்மை மருவுறும்** - தத்துவத்தை யடைகின்ற, **விசாரத்தால்** - விசாரணையினால், **மந்திரியெனலாம்** - அமைச்சனென்று சொ

ல்லப்படும், இந்திரியங்களென்னும் - இந்திரியங்களென்கின்ற, இடர்பகை யறுத்தலால் - துன்பமென்னுஞ் சத்துருவைக் கெடுத்ததினுல், தந்திரியென லாம் - உபாயமுள்ள சாமந்தனென்று சொல்லப்படும், இட்டஞ்சமைத்தலால்- (தனக்) கிஷ்டமுள்ளவைகளைச் செய்கின்றதினுல், ஏவலாளாம் - பரிசாரகனு கச் சொல்லப்படும்-எ-று.

எ - து. துன்பத்துடன் சுழலாத மனமானது சகலத்தையுந் தனது சொரூபமாகப்பார்த்த ஞானிகளுக்குத் தத்துவத்தையடை கின்ற விசாரணையினுல் அமைச்சனென்று சொல்லப்படும். இந்திரிய ங்களென்கின்ற துன்பமென்னுஞ சத்துருவைக் கெடுத்ததினுல் உபா யமுள்ள சாமந்தனென்று சொல்லப்படும். தனக்கிஷ்டமுள்ளவை களைச் செய்கின்றதினுல் பரிசாரகனுகச் சொல்லப்படும்-எ-ம்.

இ-ம். மனமானது ஆதம அரசனுக்கெதிரற்ற பிரமானந்த முண்டாக்கு நிமித்தம் விசாரஞ்செய்தலின் மந்திரியும் அகமுகப்பட்டு இந்திரியங்களைக்கெ டுததலில் தந்திரியும் சின்னுபின்னமான விடயரசங்களை கிரகித்த பின்ன மான பிரமரசமாக்கி யூட்டிவித்தலின் ஏவலாளுமாகு மென்பதாம். (14)

இதுவுமது

ஆலிக்கு மின்பத் தாலே யன்புறு மனைவி யாகும்
பாலிக்கு மியல்பி னுலே பாவன தந்தை யாகுஞ்
சீலிக்கு முறுதி யாலே தேடரு நட்பு மாகுந
தூலிக்கும் வினைக ளில்லாத் தூய்மன விவேகத் தோர்க்கே.

இ - ள் விவேகத்தோர்கரு - விவேகிகளுக்கு, தூலிக்கும்வினைகளில்லா- பருத்த தொழில்களிலலாத, தூய்மனம் - பரிசுத்தமனமானது, ஆலிக்குமின் பததால் - களிககின்ற சுகத்தைக கொடுப்பதினுல், அன்புறு மனைவியாகும்- ஆசையுள்ள பாரியாளாகும், பாலிகருமியல்பினுல் - இரட்சிக்குந்தன்மையி னுல், பாவன தந்தையாகும் - பரிசுத்தமுள்ள பிதாவாகும், சீலிக்குமுறுதி யால் - குணமுள்ளவிருப்பினுல், தேடரு நட்புமாகும் - நாடற்கரிய நேயனு மாகும்-எ-று.

எ - து. விவேகிகளுக்கு பருத்த தொழில்களில்லாத பரிசுத்த மனமானது களிக்கின்ற சுகத்தைக் கொடுப்பதினுல் ஆசையுள்ளபாரி யாளாகும். இரட்சிக்குந் தன்மையினுல் பரிசுத்தமுள்ள பிதாவாகும். குணமுள்ள விருப்பினுல் நாடற்கரிய நேயனுமாகும்.

இ-ம். மனமானது ஆத்மாவை நீங்காதிருந்து நிருவாணசுகத்தைத் தரு தலின் மனைவியும் விடயத்திற் செல்லுவதைத் தடுத்து பிரமத்திற் செல்லுத லின் பிதாவும் உண்மையிற் நிரப்படுத்தலிற் சிநேகிதனுமாகுமென்பதாம். ()

### இதுவுமது.

நல்லன நூல்க ளாலே நல்லன நெறியை நோக்கி
நல்லன தியானஞ் செய்து நல்லனு பவத்தை நண்ணி
நல்லன சித்தி நல்கு நல்லதாய்த் தன்னை மாய்க்கு
நல்லதோர் தாதை யாகி நல்லவர்க் குள்ளந் தானே.

இ - ள். நல்லவர்க்கு - சத்துக்களுக்கு, உள்ளந்தான் - மனமானது, நல்லனநூல்களால் - நல்ல (ஆத்மஞான) சாஸ்திரங்களினால், நல்லனநெறியை நோக்கி - நன்மையான மார்க்கத்தைப்பார்த்து, நல்லனதியானஞ்செய்து - நன்மையான ஆத்மத்தியானஞ்செய்து, நல்லனுபவத்தைநண்ணி - நன்மையான அனுபவத்தையடைந்து, நல்லதாய் - நன்மையாக, தன்னைமாய்க்கும் - தனது உருவத்தைக்கெடுக்கும், நல்லதோர்தாதையாகி - நல்லவொப்பற்ற பிதாவாகி, நல்லன சித்திநல்கும் - நல்ல (ஞான) சித்தியைத்தரும்.

எ - து. சத்துக்களுக்கு மனமானது நல்ல ஆத்மஞானசாஸ்திரங்களினால் நன்மையான மார்க்கத்தைப்பார்த்து நன்மையான ஆத்மத்தியானஞ்செய்து நன்மையான அனுபவத்தை யடைந்து நன்மையாக தனது உருவத்தைக்கெடுக்கும். நல்லவொப்பற்றபிதாவாகி நல்ல ஞானசித்தியைத்தரும்—எ-ம்.

இ ம். மனமானது புத்திரனுக்கு இராசபோகத்தைக் கொடுத்திறக்கின்றபிதாவைபபோல, ஆத்மாவுக் காநந்தநாட்டரசாங்கத்தைக் கொடுத்திறத்தலிற் பிதாவுமாமென்பதாம். (16)

### இதுவுமது

துணிவுறு திடமாய்ச் சாலத் துகளற நோக்கி யாதும்
பிணியறக் கண்டு ஞானப் பேருணர் வுணர்த்தப் பட்டாற்
பணிவுறு மிதயந் தன்னிற் பழுதிறன் குணத்தி னாலே
மணியெண விளங்கா நிற்கு மாசறு முள்ளந் தானே.

இ ள். துணிவுறுதிடமாய் - தெளிவுள்ள ஸ்திரமாக, சாலத்துகளற நோக்கி - மிகவுங் குற்றமின்றிப்பார்த்து, யாதும் - எவ்வளவேனும், பிணியறக்கண்டு - தடையில்லாமற் பார்த்து, ஞானப்பேருணர்வு - பூரணஞானத்தை, உணர்த்தப்பட்டால் - போதிக்கப்பட்டால, பணிவுறு மிதயந்தன்னில் - சொல்லப்பட்ட இதயாம்பரத்தில, பழுதிறன்குணத்தினால் குற்றமற்ற தனது சுபாவத்தினால், மாசறு முள்ளந்தான் - களங்கமற்ற மனது, மணியென விளங்காநிற்கும் - இரத்தனம்போலப் பிரகாசிக்கும் எ று.

எ - து. தெளிவுள்ள ஸ்திரமாக மிகவுங் குற்றமின்றிப்பார்த்து எவ்வளவேனும் தடையில்லாமற் பார்த்து பூரணஞானத்தைப்

போதிக்கப்பட்டால் சொல்லப்பட்ட இதயாம்பரத்தில் குற்றமற்ற தனது சுபாவத்தினால் களங்கமற்ற மனது இரத்தினம்போலப் பிரகாசிக்கும்—எ-ம்.

இ-ம். மனமானது ஆத்மாவுக்கு அதன் ஞானமாக விளங்குமென்பதாம்,

ஆயின் மனோகளங்கம்நீங்கும் உபாயம் இயாதெனின்.



மனமணி பேதச் சேற்றின் மறைந்தொரு வருக்குந் தோன்றாக்
கனமுறு விவேக நீராற் கழுவினாற் சித்தி காட்டும்
வினவுறு விவேக வன்பான் மெய்ம்மையை மதியாற் கண்டு
சினமுறு பொறியை வென்று தீர்வரும் பிறவிதீர்வாய்.

இ-ள். மனமணி - மனமென்னும் இரத்தினமானது, பேதச்சேற்றில் - வேறுபாடென்னு (மலின) வாசனையாகியகும்பியில், மறைந்து - மறைபட்டு, ஒருவருக்குந்தோன்றா - ஒருவருக்குந் தோற்றாது, கனமுறு, விவேகநீரால் - கனமானஞானசலத்தினால், கழுவினால் - சுத்திபண்ணினால், சித்திகாட்டும் - (தனது பிரகாசமாகிய) மோட்சத்தைக்காட்டும், வினவுறுவிவேகன்பால்-சொல்கின்ற விவேகவலிமையால், மெய்ம்மையை-எதார்த்த ஞானத்தை. மதியாற்கண்டு - அறிவினால் தரிசித்து, சினமுறு பொறியைவென்று - அகங்காரமுள்ள இந்திரியத்தைச் செயித்து, தீர்வரும்பிறவி தீர்வாய் - நீங்குதற்கரியசநநத்தை நீங்குவாய்-எ-று.

எ-து. மனமென்னும் இரத்தினமானது வேறுபாடென்னு மலின வாசனையாகிய கும்பியில் மறைபட்டு ஒருவருக்குந்தோற்றாது கனமானது ஞானசலத்தினால் சுத்திபண்ணினால் தனதுபிரகாசமாகிய மோட்சத்தைக்காட்டும். சொல்கின்ற விவேகவலிமையால் எதார்த்த ஞானத்தை அறிவினால் தரிசித்து அகங்காரமுள்ள இந்திரியத்தைச் செயித்து நீங்குதற்கரிய சநநத்தைநீங்குவாய்—எ-ம்.

இ-ம். மனது விவேகஞானத்தான் மறைப்பு நீங்கிற் சுயமாய் விளங்குமென்பதாம். (18)

அம் மனதோடுங்கூடிற் பந்தமாகாவோ எனின்.



இத்திறத் திவனு னென்றே யிறுகிய வறுதி வீனும்
அத்திறம் புந்தி யாலே யழுத்தமா யகற்றி மற்ற
மெய்த்திறம் பற்றி நீயா மதினின்று விழைந்த செய்வாய்
பொய்த்திற மனத்தினோடே புசித்தவை பந்த மாகா.

இ - ள். இத்திறத்திவனுனென்று - இக்காரணத்தினுல் இவன் என்றும் நான் என்றும், இறுகியவுறுதி - திடமுள்ளநிச்சயம், வீணும் - விருதாவாம், அத்திறம் - அத்தன்மையை, புந்தியாலழுத்தமாயகற்றி - அறிவினுல் திடமாகத்தள்ளி, மற்ற (அதற்கு வேறுகிய, மெய்த்திறம்பற்றி - உள்ள காரணத்தைப்பிடித்து, நீயாமதினின்று - உனது ஆத்மாவாகிய தற்பதத்திலிருந்து, விழைந்தசெய்வாய் - இச்சித்தபடி நடப்பாய், பொய்த்திறமனத்திஞேடு - அமனஸ்க்கபாவத்தோடும், புசித்தவைபந்தமாகா - புசித்த அந்த வஸ்துக்கள் பந்தமாகா—எ-று.

எ - து. இக்காரணத்தினுல் இவன் என்றும், நான் என்னென்றும், திடமுள்ள நிச்சயம் விருதாவாம். அத்தன்மையை அறிவினுல் திடமாகத்தள்ளி அதற்கு வேறுகிய உள்ளகாரணத்தைப்பிடித்து உனதாத்மாவாகிய தற்பதத்திலிருந்து இச்சித்தபடி நடப்பாய். அமனஸ்க்க பாவத்தோடும் புசித்த அந்த வஸ்துக்கள் பந்தமாகா-எ-ம்.

இ-ம். மனமானது ஆத்மா பிரகாசமாதலால் அஃது ஆத்மாநந்தமே அன்றி வேறுகாது என்பதாம். (19)

## இவ் வனுபவம்வரும்பொருட்டு திருஷ்டாந்தங்கூறல்.



வே று.

தாமஞேடுவி யாளக டாசுரர் சாருநீதியை நீயனு காதொழி
வீமபாசதி டாசுரர் நீதியை மேவிவேதனை தீர்கென வோதலும்
நாமமேபகர் தானவ ராரென ஞானவீரன்வி னுவிட மாமுனி
யாமதோதிட வாதா மாகிய தேதுநீயதின் மேவென வோதுவான்.

இ - ள். தாமஞேடு - தாமனுடன், வியாளகடாசுரர் - வியாளன் கடனென்று சொல்லப்பட்ட அசுரர்கள, சாருநீதியை - சார்ந்திருக்கின்ற ஞாயத்தை, நீயனுகாதொழி - (இராமா) நீ யடையாமல் விட்டுவிடு, வீமபாசதிடாசுரர் - வீமன்பாசன்றிடனென்னு மசுரர்களுடைய, நீதியைமேவி - ஞாயத்தைபொருந்தி, வேதனைதீர்கெனவோதலும் - துன்பந்தீரக் கடவாயென்று சொல்லவும், நாமமேபகர் - (இப்) பெயர்களாற் சொல்லப்பட்ட, தானவாரரென - அசுரர்கள் யாவரென்று, ஞானவீரன் வினுவிட-ஞானவீரனுகிய இராமன்கேட்க, மாமுனி - மகாரிஷியானவர், யாமதோதிட - நாமத்தைச்சொல்ல, ஆதாமாகியதேது - ஆசையாயிருக்கின்றதெது ?வா, நீயதின்மேவென - நீ யதிற் பொருந்துவாயென்று, ஓதுவான் - சொல்லுவான்-எ-று.

எ - து. தாமனுடன் வியாளன் கடனென்று சொல்லப்பட்ட அசுரர்கள் சார்ந்திருக்கின்ற ஞாயத்தை இராமா நீ யடையாமல் விட்டுவிடு. வீமன், பாசன், திடனென்னும் அசுரர்களுடைய ஞாயத்

தைப்பொருந்தி துன்பந்தீரக் கடவாயென்று சொல்லவும், இப்பெயர்களாற் சொல்லப்பட்ட அசுரர்கள் யாவர்களென்று ஞானவீரனுகிய இராமன் கேட்க, மகாரிஷியானவர் நாமதைச்சொல்ல ஆசையாயிருக்கின்ற தெதுவோ யதிற்பொருந்துவாயென்று சொல்லுவான்—எ-ம். (20)

## சுராசுரரின் யுத்தச் சிறப்புரைத்தல்.

சஞ்சரித்துயர் பாதல மேவிய சம்பரப்பெய ராளொருதானவன்
வஞ்சமுற்றிய மாயையில் வாழ்பவன் வன்படைக்கட லாலமரேசனை
எஞ்சலித்திட வானவர் தாமுமே யிவன்சுழுத்தியி லாகியபோதினும்
விஞ்சயம்பர மேவியபோதினும் வெம்பிமயற்றினர்தானவர்மாளவே.

இ - ள். சஞ்சரித்து - சஞ்சாரஞ்செய்து, உயர்பாதலமேவிய - உயர்வாகிய பாதாளத்திற் பொருந்தியிருக்கின்ற, சம்பரப்பெயரான் - சம்பரனென்னு நாமத்தையுடையவனுகிய, ஒருதானவன் - ஓரசுரன், வஞ்சமுற்றிய - வஞ்சனைமுதிர்ந்த, மாயையில் வாழ்பவன் - மாயையிலே வாழப்பட்டவன், வன்படைக்கடலால் - வலியசேனசமுத்திரத்தினல், அமரேசனை - தேவேந்திரனை, எஞ்சலித்திட - குறைவுசெய்ய, வானவர்தாமும் - தேவர்களும், இவன் சுழுத்தியிலாகியபோதினும் - இவனித்திரை யடைந்தபோதினும், விஞ்சயம்பரமேவியபோதினும் - மிகவுந் திசைகளில் அடைந்தபோதினும், வெம்பி - (மிகவுங்) கோபித்து, தானவர் மாள வெற்றினர் அசுரர்கள் கெடும்படி யடித்தார்கள்.

எ - து. சஞ்சாரஞ்செய்து உயர்வாகிய பாதாளத்திற் பொருந்தியிருக்கின்ற சம்பரனென்னு நாமத்தை யுடையவனுகிய ஓரசுரன்வஞ்சனைமுதிர்ந்த மாயையிலே வாழப்பட்டவன் வலியசேனசமுத்திரத்தினல் தேவேந்திரனை குறைவுசெய்யத் தேவர்களும் இவனித்திரையடைந்தபோதினும், மிகவுந் திசைகளில் அடைந்தபோதினும், மிகங்கோபித்து அசுரர்கள் கெடும்படி யடித்தார்கள்—எ-ம். (21)

### இதுவுமது.

ஆயவன்பை யறிந்துயர் சம்ப ருருவன்றுரு மன்றிறன்முண்டிகன்
ஏயவிங்கிவர் தம்படை முன்செல வேவினன்பெரி தங்கெவ ரும்பட
மேயவண்ட ரடர்ந்தன ரென்றலும் வேகவிஞ்சியு சம்பரன் வந்திட
மாயைவிஞைசி றைந்தவ னென்றெதிர் மாகர்நின்றிட வஞ்சியொதுங்கினர்.

இ - ள். ஆயவன்மை - இப்படியான தேவர்கள் வல்லமையை, உயர்சம்ப ரன் - சிறந்த சம்பராசுரன், அறிந்து - தெரிந்து, ஆகுவன்றாரு மன்றிற மூண் டிகன் - ஆகுவனும் தாருமனும் பலத்தையுடைய மூண்டிகனும், ஏயவிங்கிவர் தம் - பொருந்திய இவர்களுடைய, படைமுன்செல - சேனைகள் முன்னே போக, ஏவினன் - அனுப்பினன், பெரிது - மிகவும், அங்கெவரும்பட - அவ் விடத்திலுள்ள யாவருமடிய, மேயவண்ட ரடர்ந்தனரென்றலும் - பொருந்திய தேவர்கள் (சமயம்பார்த்துப்) போர்செய்தார்களென்று சொல்லவும், வேக மிஞ்சிய - கோபமிகுந்த, சம்பரன்வந்திட - சம்பராசுரன் (தெய்வலோகம்) வர, மாயைவிஞ்சை - மாயாவித்தையில், நிறைந்தவனென்று - மிகுந்தவனெ ன்று, எதிர் - அவன் முன்பு. மாகர் நின்றிடவஞ்சி - தேவர்கள் நிற்கப்பயந்து, ஒதுங்கினர் - ஒளித்தனர் —எ - று.

எ - து இப்படியான தேவர்கள் வல்லமையைச் சிறந்த சம்ப ராசுரன்தெரிந்து ஆகுவனுந் தாருமனும், பலத்தையுடைய மூண்டிக னும், பொருந்திய இவர்களுடைய சேனைகள் முன்னேபோக அனுப் பினன். மிகவும் அவ்விடத்திலுள்ள யாவருமடிய பொருந்திய தே வர்கள் சமயம்பார்த்துப் போர்செய்தார்களென்று சொல்லவும், கோ பமிகுந்த சம்பராசுரன் தெய்வலோகம்வர மாயாவித்தையில் மிகுந்த வனென்று அவன்முன்பு தேவர்கள் நிற்கப்பயந்து ஒளித்தனர்-எ-ம்.

இதுவுமது.

மேருகந்தர மும்பர டைந்தனர் வீதியெங்கு மரம்பையர் நின்றழ
யாருமின்றிய விந்திரன் றன்பதி யீசனென்றபு ரங்களெ னும்படி
நேருமங்கிசொ ரிந்துதி ரும்பின னீடகன்றுள வந்தணர் பின்றையும்
ஊருள்வந்தன ரென்றுபெ ரும்படை யோய்விலன்பெரி துந்தினன்
விஞ்சையால்.

இ - ள். மேருகந்தரம் - மகாமேருவினுடைய குகையில், உம்பரடைந்த னர் - தேவர்கள் அடைந்தார்கள், வீதியெங்கும் - வீதிதோறும், அரம்பை யர் நின்றழ - தெய்வப்பெண்கள் நின்றழும்படியாக, யாருமின்றிய - சூனியமா யிருக்கின்ற, இந்திரன் றன்பதி - தெய்வலோகத்தை, ஈசனென்ற - பரமேஸ் வரன்செயித்த, புரங்களெனும்படி-திரிபுரங்களென்று சொல்லும்படி, நேரும் - எரிக்கின்ற, அங்கிசொரிந்து திரும்பினன் - அக்கினியை வருஷித்துச் சம்பரா சுரன் திரும்பினான், நீடகன்றுள - வெகுதூரம் நீங்கியிருந்த, அந்தணர் - தேவர் கள், பின்றையும் - மறுபடியும், ஊருள் வந்தனரென்று - வானகரில் வந்தனர் களென்று, பெரும்படை - மிகுந்த சேனைகளை, ஓய்விலன் - ஒழிவின்றி, விஞ் சையாற் பெரிதுந்தினன் - (மாயா) வித்தையான் மிகவுஞ் சம்பராசுரன் அனுப் பிக்கொண்டிருந்தான்-எ-று

எ - து. மகாமேருவினுடைய குகையில் தேவர்கள் அடைந்தார் கள். வீதிகடோறும் தெய்வப்பெண்கள் நின்றழும்படியாக சூனிய மாயிருக்கின்ற தெய்வலோகததைப் பரமேஸ்வரன் செயித்த திரிபு ரங்களென்று சொல்லும்படி எரிக்கின்ற அக்கினியை வருஷித்துச் சம்பராசுரன் திரும்பினன் வெகுதூர நீங்கியிருந்த தேவர்கள் மறுப டியும் வானகரில் வந்தனர்களென்று மிகுந்த சேனைகளை ஒழிவின்றி மாயாவித்தையான் மிகவுஞ் சம்பராசுரன் அனுப்பிக்கொண்டிருந் தான்—எ-ம். (23)

## தாமாதி யசுரரை யுண்டாக்கினது அறிவித்தல்.

ஆவதாகிய தானவர் பற்றற வாதிதேவர்கண் மோதினர் மற்றது
தாபமாயசு ரேசன் விதித்துள காமனேடுவி யாளக டப்பெயர்
மூவர்மாயையி னுல்வர லுற்றவர் மூரிமேருவு லாவுவ தொப்பவர்
பாவனுவச வாதனை யற்றவர் பாசமாமபி மானநி னைப்பிலர்.

இ - ள். ஆவதாகிய - இப்படியாவதாகிய, தானவர்பற்றற - அசுரர்கள் பற்றறும்படியாக, ஆதிதேவர்கண் மோதினர் - ஆதியான தேவர்கள் அடித் தார்கள், மற்றதுதாபமாய் - திரும்பவதுவே மிகுந்த கோபமாய், அசுரேசன் விதித்துள - சம்பராசுரன் சிருஷ்டித்துள்ள, தாமனேடு வியாளகடப்பெயர் - தாமன் வியாளன் கடன் என்று சொல்லப்பட்ட நாமங்களையுடைய, மூவர் - இம்மூவர்கள், மாயையினுல் வரலுற்றவர் - மாயையினுல் வந்தவர்கள், மூரி மேரு - பலம்பொருந்திய மேருமலையானது, உலாவுவதொப்பவர் - சஞ்சரிப் பதற்குச் சமானமானவர்கள், பாவனுவச வாதனையற்றவர் - பாவிக்கப்பட்ட வாசனுவசமாகாதவர்கள், பாசமா மபிமான நினைப்பிலர் - இச் சர்வபிமான நினைவில்லாதவர்கள்-எ-று.

எ - து இப்படி யாவதாகிய அசுரர்கள் பற்றறும்படியாக ஆதி யான தேவர்கள் அடித்தார்கள். திரும்ப அதுவே மிகுந்த கோப மாய்ச் சம்பராசுரன் சிருஷ்டித்துள்ள தாமன், வியாளன், கடன் என்று சொல்லப்பட்ட நாமங்களையுடைய இம்மூவர்கள் மாயையினுல் வந்தவர்கள், பலம்பொருந்திய மேருமலையானது சஞ்சரிப்பதற்குச் சமானமானவர்கள். பாவிக்கப்பட்ட வாசனுவசமாகாதவர்கள். இச் சர்வ அபிமான நினைவில்லாதவர்கள்—எ—ம். (24)

## இதுவுமது.

சாதல்வாழ்தல் களிப்புறல் சோர்வுறற் ருமவாகைகொள் வெற்
றிக டோல்விகள், போதன்மீடல னைத்தையு நாடலர் போர்செய்
வோரை முருக்குவர் கேவலம், ஆதலாலிவர் பற்றலர் சேனையை யா
சுகங்கொட ழிப்பர ழிப்புறூர், பாதலாசுரன் வெற்பினர் வேலையர்
பாருளாரிவர் பிற்செல வேவினன்.

இ - ள். சாதல் - இறத்தலும், வாழ்தல் - சீவித்தலும், களிப்புறல் - இன்பமடைதலும், சோர்வுறல் - வாட்டமடைதலும், தாமவாகைகொள் — வெற்றிமாலையைதரித்த, வெற்றிகள் - சயங்களும், தோல்விகள் - அபசயங்களும், போதல் - (சண்டைக்குப்) போகுதலும், மீடல் - (அவர்களுக்கு அஞ்சித்) திரும்புதலுமாகிய, அனைத்தையும் - யாவையும், நாடலர் - அறியாதவர்கள், போர்செய்வோரை - யுத்தஞ்செய்பவர்களை, கேவலம்-முழுமையும், முருக்குவராதலால் - அழிப்பவர்களாதலினால், இவர் - இம்மூவர்களும், பற்றலர்சேனையை - சத்துருக்களுடைய சேனைகளை, ஆசுகங்கொடழிப்பர் - பாணப்பிரயோகங்களாற் கெடுப்பார்கள், அழிப்பருர் - (இவர்கள்) நாசமடையார்கள் (என்றுலோசித்து,) பாதலாசுரன் - பாதாளத்தில் (வசிக்கின்ற) சம்பராசுரனவன், வெற்பினர் - மலையிலுள்ள அசுரர்களையும், வேலையர் - சமுத்திரத்திலுள்ள அசுரர்களையும், பாருளார் - பூமியுள்ள அசுரர்களையும், இவர் பிற்செல வேவினன் - இவர்களுக்குப் பலமாக அனுப்பினன்—எ-று.

எ - து. இறத்தலும், சீவித்தலும், இன்பமடைதலும், வாட்டமடைதலும், வெற்றிமாலையைத்தரித்த சயங்களும் அபசயங்களும், சண்டைக்குப் போகுதலும், அவர்களுக்கு அஞ்சித் திரும்புதலுமாகிய யாவையும் அறியாதவர்கள் யுத்தஞ்செயபவர்களை முழுமையும் அழிப்பவர்கள் ஆதலினால் இம்மூவர்களும் சத்துருக்களுடைய சேனைகளைப் பாணப் பிரயோகங்களாற் கெடுப்பார்கள். இவர்கள் நாசமடையாரகளென்று ஆலோசித்துப்பாதாளத்தில் வசிக்கின்ற சம்பராசுரனவன் மலையிலுள்ள அசுரர்களையும், சமுத்திரத்திலுள்ள அசுரர்களையும், பூமியிலுள்ள அசுரர்களையும் இவர்களுக்குப் பலமாக அனுப்பினன்—எ-ம். (25)

## தொந்தயுத்தம் உரைத்தல்.

---

தானவாதிபன் விட்டநெடும்படை தாள்களோடுகி ரித்திரள் வநதென, மீனவேலைப ரப்பில்வி ரிநதென மேவினர்கள்சி ருட்டிமுடிநதென, வானநாடரு மப்படி வந்தனர் வாயுவோடுசெ ருப்பு மலைநதென, ஆனசேனைகண் முட்டி யுடன்றன வாதலான்மறு கற்பம் விளைந்ததே.

இ - ள். தானவாதிபன் - சம்பராசுரன், விட்டநெடும்படை - அனுப்பிய மிகுந்த சேனைகளானவை, தாள்களோடு கிரித்திரள்வந்தென - கால்களுடன் மலைக்கூட்டங்கள் வந்ததுபோலவும், மீனவேலை - மச்சங்களையுடைய சமுத்திரமானது, பரப்பில்விரிந்தென - பூமியில் விரிந்தது போலவும், சிருட்டிமுடிந்தென - கற்பமுடிந்ததுபோலவும், மேவினர்கள் - வந்துபொருந்தினோர்கள, வானநாடரும் - விண்ணுலகத்தாரும், அப்படி

வந்தனர் - அவ்வாசுரர்களைப் போலவே வந்தார்கள், வாயுவோடு - வாயுவுடன், நெருப்புமலைந்தென - அக்கினிபொருதல்போல, ஆனசேனைகள் - (இவ்வித) மான இரண்டுசேனைகளும், முட்டியுடன்றன - (ஒன்றுக்கொன்று) எதிர்த்து யுத்தஞ்செய்தன, ஆதலால் - ஆகையால், மறுகற்பம் விளைந்தது - மறுகற்பம் உண்டாயிற்று — எ-று.

எ — து. சம்பாசுரன் அனுப்பிய மிகுந்த சேனைகளானவைகால் களுடன் மலைக்கூட்டங்கள் வந்ததுபோலவும், மச்சங்களையுடையசமுத்திரமானது பூமியில்விரிந்தது போலவும், கற்பமுடிந்ததுபோலவும் வந்து பொருந்தினார்கள். விண்ணுலகத்தாரும் அவ்வசுரர்களைப் போலவே வந்தார்கள். வாயுவுடன் அக்கினி பொருதுதல்போல இவ்விதமான இரண்டு சேனைகளும் ஒன்றுக்கொன்று எதிர்த்து யுத்தஞ்செய்தன ஆகையால் மறுகற்பம் உணடாயிற்று—எ-ம்,

மறுகற்பம் விளைந்ததென்றதனால் இக்கற்பமுடிவுக்கும் மறுகற்பமுதலுக்கும் இடையிலுண்டான அழிவை யொத்தெனக் கொள்க. (26)

இதுவுமது.

ஆயுதங்களெ ரிந்து நெருங்கிட வாகமெங்கும்வி ழுந்தன வெற்பென
மாயுமங்கமு மிழ்குரு திக்கடன் மாதிரங்கட தும்பிய லைந்தன
காயும்வஞ்சர டர்ந்துமு டுக்கினர் காதுமும்பர்த ளர்ந்தோடவுற்றனர்
சாயுமண்டர்கள் பின்றொடர் வுற்றனர் தாமனும் பிறருந்திசை முற்றுமே.

இ - ள். ஆயுதங்கள் - ஆயுதங்களானவை, எரிந்து நெருங்கிட அக்கினியைக்கக்கிக்கொண்டு சமீபத்தில்வர, ஆகம்-சரீரங்களானவை, எங்கும் - எவ்விடத்தும், வெற்பெனவிழுந்தது - மலைகளைப்போல (மடிந்து) விழுந்தன, மாயுமங்கம் - மாய்கின்ற சரீரங்கள், உமிழ்குருதிக்கடல் - சொரியாநின்ற இரத்த சமுத்திரத்தில், மாதிரங்கள் - மலைகள், ததும்பியலைந்தன—தத்தளித்து அலைந்தன, காயும்வஞ்சர் - கோபிக்கின்ற வஞ்சராகிய அசுரர்கள், அடர்ந்து முடுக்கினர் - நெருங்கித் துரத்தினார்கள், காதுமும்பர்-கொல்லப்படுகின்றதேவர்கள், தளர்ந்தோடவுற்றனர் - தளர்ந்து ஓடினார்கள், சாயுமண்டர்கள்பின் - ஓடாநின்ற தேவர்கள்பின், தாமனும்பிறரும் - தாமனும் மற்றுமுள்ள அசுரர்களும், திசைமுற்றும் - திக்குகள் முழுதும், தொடர்வுற்றனர் - தேடினார்கள்—எ-று.

எ — து. ஆயுதங்களானவை அக்கினியைக் கக்கிக்கொண்டு சமீபத்தில்வரச் சரீரங்களானவை எவ்விடத்தும் மலைகளைப்போல மடிந்து விழுந்தன. மாய்கின்ற சரீரங்கள் சொரியாநின்ற இரத்த சமுத்திரத்தில் மலைகள் தத்தளித்து அலைந்தன. கோபிக்கின்ற வஞ்சகராகிய அசுரர்கள் நெருங்கித் துரத்தினார்கள். கொல்லப்படுகின்ற

தேவர்கள் தளர்ந்து ஓடினார்கள். ஓடாநின்றதேவர்கள் பின்தாமனும் மற்றுமுள்ள அசுரர்களும் திக்குகள் முழுதும் தேடினார்கள்—எ-ம்.

## தேவர்கள் பிரமனிடத்திற் சென்று முறையிடுதல்.

உம்பரோடி மறைந்தமை கண்டில ருந்துமூவரு நின்று திரும்பினர்
சம்பராசுரன் முன்புற வந்தனர் சங்கவானவ ரென்செய லென்றுகோ
டம்புயாசனன் முன்புந டந்தன ரன்பினோடு பணிந்து புகன்றனர்
வெம்புதீநிகர் சம்பரன் வஞ்சமும் வெங்கண்மூ வர்தொ டர்ந்துதொ
டர்ந்ததும்.

இ - ள். உம்பரோடிமறைந்தமை - தேவர்கள் ஓடி மறைந்ததை, கண்டிலர் - காணாதவர்களாய், உந்துமூவரும் - உயர்வானமூவர்களும், நின்று திரும்பினர் - (தெய்வலோகத்தில்) நின்றுதிரும்பி, சம்பராசுரன்-சம்பராசுரனுக்கு, முன்புறவந்தனர் - முன்பாகவந்தார்கள், சங்கவானவர் - கூட்டமாகியதேவர்கள், என்செயலென்றுகோடி - என்னசெய்வது என்றெண்ணிக்கொண்டு, அம்புயாசனன் முன்பு - பதுமாசனனான பிரமன்முன், நடந்தனர் - போய், அன்பினோடுபணிந்து - அன்புடன் வணங்கி, வெம்புதீ நிகர் - சுடுகின்ற அக்கினிக் கொப்பான, சம்பரன்வஞ்சமும் - சம்பராசுரனதுகொடுமையையும், வெங்கண்மூவர் - கொடிய கண்களையுடையதாமலியாளகடர், தொடர்ந்துதொடர்ந்ததும் - தொடர்ந்து துரத்தினதையும், புகன்றனர் - சொன்னார்கள்-எ-று.

எ - நு. தேவர்கள் ஓடி மறைந்ததைக் காணாதவர்களாய் உயர்வான மூவர்களும் தெய்வலோகத்திலிருந்து திரும்பிச் சம்பராசுரனுக்கு முன்பாக வந்தார்கள். கூட்டமாகிய தேவர்கள் என்ன செய்வதென்று எண்ணிக்கொண்டு பதுமாசனனான பிரமன்முன்போய் அன்புடன்வணங்கி சுடுகின்ற அக்கினிக்கொப்பான சம்பராசுரனது கொடுமையையும், கொடிய கண்களையுடையதாமலியாளகடர் தொடர்ந்து துரத்தினதையும் சொன்னார்கள்—எ-ம். ()

## பிரமதேவன் தானவரைச் செயிக்கும் உபாயம் உரைத்தல்.

வேறு.

கேட்ட நான்முக னஞ்சலென் றிவ்வுரை கிளத்தான்
ஈட்ட மாகிய வருடமோ ராயிர மிறந்தால்
வாட்டு சம்பரன் போரிலே யசுரரை மகவான்
வீட்டு மவ்வள வுஞ்செயத் தக்கது விதிப்பாம்.

இ - ள். கேட்டான்முகன் - (இவைகளைக்) கேட்டபிரமா (சிந்தித்து), அஞ்சலென்று - பயப்படவேண்டாமென்று, இவ்வுரைகளைத்தான் -இந்தவாக்கியத்தைச் சொன்னார், ஈட்டமாகிய - கூட்டமாயிருக்கின்ற, வருடமோராயிரமிறந்தால் - ஆயிரம்வருடஞ்சென்றால், வாட்டுசம்பரன்போரில் - மெலியச்செய்கின்ற சம்பராசுரன் யுத்தத்தில், அசுரரை-அசுரர்களை, மகவான் வீட்டும் தேவேந்திரன் கொல்லுவான், அவ்வளவும் - அந்தமட்டும், செய்யத்தக்கதுவிதிப்பாம் - (நீங்கள்) செய்யத்தககதைச் சொல்லுவோம்—எ-று.

எ - து. இவைகளைக் கேட்ட பிரமாசிந்தித்துப் பயப்படவேண்டாமென்று இந்த வாக்கியத்தைச் சொன்னார். கூட்டமாயிருக்கின்ற ஆயிரம்வருடஞ் சென்றால் மெலியச் செய்கின்ற சம்பராசுரன் யுத்தத்தில் அசுரர்களைத்தேவேந்திரன் கொல்லுவான். அநதமட்டு நீஙகள் செய்யத்தக்கதைச் சொல்லுவோம—எ-ம. (29)

## வாசனையேறும் உபாயத்தை அறிவித்தல்.

என்ற தாமனும வியாளனுங் கடனுமென் பவரைச்
சென்றழைத்தமர் செய்வது திரும்புவ தாகத்
தொன்று தொட்டுநீர் தொரநதிக்கின் வாதனை தொடர்நது
நின்ற கண்ணடி நிழலென மனததிலே நிற்கும.

இ - ள். என்ற - (இப்படி) யென்றுசொல்லிய, தாமனும்வியாளனுஙகடனுமென்பவரை - தாமன் வியாளன் கடன்என்றுசொலலப்பட்டவர்களை, சென்றழைதது - போய்ககூப்பிட்டு, அமர்செய்வது-யுத்தஞ்செய்வதாகவும, திரும்புவதாக - மீள்வதாகவும, தொன்றுதொட்டு - துவககின முதல, நீர்தொந்திக்கில் நீங்கள் தொந்தமாக நடந்தால், வாதனைதொடர்ந்து - அகங்கார வாசனைதொடர்ந்து, நின்றகண்ணடி நிழலென - இருந்த கண்ணடியின சாயைபோல, மனத்திலேநிற்கும் - (அவர்கள்) மனதிலுண்டாயிருக்கும்-எ-று.

எ — து. இப்படியென்று சொல்லிய தாமன், வியாளன், கடனென்று சொல்லப்பட்டவர்களைப் போய்க்கூப்பிட்டு யுத்தஞ்செய்வதாகவும், மீள்வதாகவும். துவககினமுதல் நீங்கள் தொந்தமாக நடந்தால், அகங்காரவாசனை தொடர்நது இருந்த கண்ணடியின் சாயைபோல அவர்கள் மனதிலுண்டாயிருககும்—எ-ம். (30)

## உயிருக்கு இச்சையே கூற்று எனல்.

நிலைபெ றும்படி நானெனும் வாதனை நின்றால்
வலைபு குந்தபுள் ளாமென மூவரு மடிவர்
கொலைசெ யற்கெளி தாசையே யுயிர்க்கெலாங் கூற்றாய்
தொலைவி றுன்பமா நிராசையே துன்பமி லின்பம்.

இ – ள். நிலைபெறும்படி - நிலையையடையும்படியாக, நானென்னும் வாதனைநின்றால் - நானென்கின்ற வாதனையிருந்தால், வலைபுகுந்த புள்ளாமென – வலைக்குள் அகப்பட்ட பட்சியைப்போல, மூவருமடிவர் - மூன்றுபேர்களும் மாள்வார்கள், கொலைசெயற்கெளிது - கொல்லுதற்கு எளிதாகும், ஆசையே - இச்சையே, உயிர்க்கெலாங் கூற்றாய் - ஆத்மாக்கள் அனைவர்க்குங் காலனாய், தொலைவிறுன்பமாம் - நீங்காத துக்கமாகும், நிராசையே - இராகமே, துன்பமிலின்பம் - துக்கமில்லாத ஆநந்தமாம்—எ-று.

எ - து. நிலையை யடையும்படியாக நானென்கின்ற வாதனையிருந்தால் வலைக்குள் அகப்பட்ட பட்சியைப்போல மூன்றுபேர்களும் மாள்வார்கள். கொல்லுதற்கு எளிதாகும் இச்சையே ஆத்மாக்கள் அனைவர்க்குங் காலனாய் நீங்காத துக்கமாகும். இராகமே துக்கமில்லாத ஆநந்தமாம்—எ-ம். (31)

## இச்சையானது யாவர்க்கும் பந்தமாம் எனல்.

வேறு.

வாதனைப் பாசத் தாலே மன்னுயி ரெல்லாங் கட்டுண்
டேதமா மந்தப் பாச மிறுகுமே லிடரைச் செய்யும்
வேதனை யிலதாந் தீர நழுவுமேல் வேட்கை யாலே
தீதிலோ ரனேகங் கற்றோர் தீரரென் னினுங்கட் டுண்பார்.

இ - ள். வாதனைப்பாசத்தால் - வாதனையென்னுங் கயிற்றினால், மன்னுயிரெலாங் கட்டுண்டு - மிகுந்த பிராணன்கள் இயாவுங் கட்டுப்பட்டு, ஏதமாம் - துன்பமடையும், அந்தப்பாச மிறுகுமேல் - அக்கயிறானது அழுந்துமானால், இடரைச்செய்யும் - துயரைக்கொடுக்கும், தீர நழுவுமேல் - பற்றற விடுமானால், வேதனையிலதாம் - துன்பமில்லையாம், வேட்கையால் - ஆசையினால், தீதிலோர் - குற்றமற்றவர்களாயினும், அநேகங் கற்றோர் - சர்வஞ்ஞர்களாயினும், தீரரென்னினும் - தீரர்களாயினும், கட்டுண்பார் - பந்தப்படுவார்கள்-எ-று.

எ – து. வாதனை யென்னுங் கயிற்றினால் மிகுந்த பிராணன்கள் இயாவுங் கட்டுப்பட்டு துன்பமடையும். அக்கயிறானது அழுந்துமா

னால் துயரைக் கொடுக்கும். பற்றறவிடுமானால் துன்பமில்லையாம். ஆசையினால் குற்றமற்றவர்களாயினும் சர்வஞ்ஞர்களாயினும் தீரர்களாயினும் பந்தப்படுவார்கள்—எ-ம். (32)

## வானவர் யுத்தத்திற்கு ஆரம்பித்தல்.

விலங்குறு சிங்கம் போல வேட்கையா லுயர்ந்தோர் தாழ்வர்
கலங்கன்மி னென்று வேதா கண்டுழி மறைந்த பின்னர்
புலன்கொள வனைத்துங் கேட்ட புங்கவர் பொன்னாட் டெய்தி
நிலங்கிழிந் தண்டம் பீற நெடியதுந் துமியோ டார்த்தார்.

இ-ள் விலங்குறு சிங்கம்போல - தளைபூண்ட கேசரியைப்போல, வேட்கையால் - ஆசையினால், உயர்ந்தோர் தாழ்வர் - மேன்மையி லுள்ளவர்கள் தாழ்வை யடைவார்கள், கலங்கன்மினென்று - நீங்கள் கலங்காதிருங்களென்று, வேதா - பிரமாவானவர், கண்டுழி மறைந்தபின்னர் - பார்த்தவிடத்தில் மறைந்துபோனபின்பு, புலன்கொள - ஐம்புலனும் நிறையும்படியாக, அனைத்துங்கேட்ட புங்கவர் - சகலத்தையுங் கேட்ட தேவர்கள், பொன்னாட்டெய்தி - தெய்வலோகமடைந்து, நிலங்கிழிந்து - பூமிபிளந்து, அண்டம்பீற - அண்டங்கிழியும்படி, நெடிய துந்துமியோ டார்த்தார் - பெரிய பேரிகையுடன் சத்தித்தார்கள்-எ-று.

எ-து. தளைபூண்ட கேசரியைப்போல ஆசையினால் மேன்மையிலுள்ளவர்கள் தாழ்வையடைவார்கள். நீங்கள் கலங்காதிருங்களென்று பிரமாவானவர் பார்த்தவிடத்தில் மறைந்துபோனபின்பு ஐம்புலனும் நிறையும்படியாக சகலத்தையுங் கேட்ட தேவர்கள் தெய்வலோகமடைந்து பூமிபிளந்து அண்டங்கிழியும்படி பெரிய பேரிகையுடன் சத்தித்தார்கள்—எ-ம். (33)

## அசுரருக்கு வாசனை ஏற்றல்.

ஆர்த்தன கேட்ட வந்த வசுரர்பா தலத்தி னின்றும்
வோத்தனர் பொங்கி வந்து வெம்படை யமரர் மீது
தூர்த்தனர் காலம் போக்குஞ் சுரர்பொரு துடைந்து போகிப்
பேர்த்தும்வந் தமர்செய் தோடிப் பின்னும்வந் ததனைச் செய்தார்.

இ-ள். ஆர்த்தன கேட்ட - சத்தித்ததைக் கேட்டு, அந்த வசுரர் - அவ்வவுணர்கள், பாதலத்தினின்றும் - பாதாளத்திலிருந்தும், வேர்த்தனர் பொங்கிவந்து - மிகுந்த வேகத்துடன் கோபித்துவந்து, வெம்படை - கொடிதாகிய ஆயுதங்களை, அமரர்மீது தூர்த்தனர் - தேவர்களின்மேற் பொழிந்தார்கள், காலம்போக்கும் சுரர் - காலத்தைக் கழிக்கின்ற தேவர்கள், பொருதுடைந்துபோகி - யுத்தம் உடைந் தோடிப்போய், பேர்த்தும் வந்து - மீள

வும் வந்து, அமர்செய்து - யுத்தஞ்செய்து, ஓடி-ஓடிப்போய், பின்னும்வந்து-திரும்பவும் வந்து, அதனைச்செய்தார் - அந்த யுத்தத்தைச் செய்தார்கள்-எ-று.

எ - து. சத்தித்ததைக்கேட்ட அவ்அவுணர்கள்பாதாளத்திலிருந்தும் மிகுந்தவேகத்துடன் கோபித்துவந்து கொடிதாகிய ஆயுதங்களைத்தேவர்களின்மேற்பொழிந்தார்கள். காலத்தைக்கழிக்கின்ற தேவர்கள் யுத்தம் உடைந்தோடிப்போய் மீளவும்வந்துயுத்தஞ்செய்துஓடிப்போய் திரும்பவும்வந்து அந்த யுத்தத்தைச் செய்தார்கள்—எ—ம்.

## மனது வாசனையிற் கட்டுப்படல்.

இவ்வகை பலவு பாய மிறந்தநீள் காலஞ் செய்ய
நைவரு திடம தான நானெனும் பழக்கத்தாலே
மெய்வர நானென் றன்னும் வேட்கையை விருப்ப முற்றார்
அவ்வகை யாலே யுள்ள மகப்பட்டு நின்ற தன்றே.

இ - ள். இவ்வகை - இந்தப் பிரகாரம், பலவுபாயம் - நாநாவித உபாயங்களால், இறந்தநீள் காலஞ்செய்ய-கழிந்த வெகுகாலமாக யுத்தஞ்செய்ய, நைவருதிடமதான - கெடாநின்ற திரமாகிய, நானெனும் பழகக்தால் - நானென்கின்ற பழக்கத்தினால், மெய்வர நானென்றன்னும் - உண்மையாக நானென்று நினைக்கின்ற, வேட்கையை - ஆசையை, விருப்பமுற்றார் - இச்சித்தார்கள், அவ்வகையாலே யுள்ளம் - அவ்விதத்தினால் மனமானது, அகப்பட்டுநின்றது - பந்தபபட்டிருந்தது —எ-று.

எ — து. இந்தப்பிரகாரம் நாநாவித உபாயங்களால் கழிந்தவெகுகாலமாக யுத்தஞ்செய்யக் கெடாநின்ற திரமாகிய நானென் கின்ற பழக்கத்தினால் உண்மையாக நானென்று நினைக்கின்ற ஆசையைஇச்சித்தாாகள். அவ்விதத்தினால் மனமானது பந்தப்பட்டிருந்தது—எ-ம்

## தேகாபிமானம் உண்டாதல்.

பயம்வந்து பிடித்துக் கொள்ள படர்தரு மோகங் கட்ட
அயர்வுறு மாயா பாசத் தழுந்தியெஃ செய்து மென்று
துயருற விளைத்துக்காயந் துஞ்சுறு திருக்கு மாறு
மயலுறு தனத்தா லின்பம் வருவது மெவ்வா றென்றார்.

இ - ள். பயம்வந்துபிடித்துக்கொள்ள - அச்சம்வந்துபற்றிக்கொள்ளவும், படர்தருமோகங்கட்ட - மிகுந்த மயக்கந் தளைந்துகொள்ளவும், அயர்வுறு

மாயாபாசத்தழுந்தி-வருந்துகின்றமாயாபாசத்தின்மூழ்கி,என்செய்துமென்று-என்னசெய்வோமென்று, துயருறவிளைந்து - துன்பம்வரமெலிந்து, காயந்துஞ்சுறுதிருக்குமாறு - தேகம் நாசமாகாமலிருக்கும் வண்ணமும், மயலுறுதனத்தால் - மயககம்பொருந்தியதிரவியங்களினால், இன்பம்வருவதும் - சுகம்வருவதும், எவ்வாறென்றார் - எவ்வண்ணமென்று ஆலோசித்தார்கள்—எ று,

எ - து. அச்சம்வந்து பற்றிக்கொள்ளவும், மிகுந்த மயக்கந்தளைந்து கொள்ளவும், வருந்துகின்ற மாயாபாசத்தின்மூழ்கி என்னசெய்வோமென்று துன்பம்வர மெலிநது, தேகம் நாசமாகாம லிருக்கும் வண்ணமும் மயக்கம் பொருந்திய திரவியங்களினால் சுகம்வருவதும் எவ்வண்ணமென்று ஆலோசித்தார்கள்—எ—ம். (36)

## மனோமயக்கம் ஆதல்.



சந்தத மிவ்வா றெண்ணத் தளைப்புண்ட மனத்த ராகி
அந்தமி றீர மின்றி யமரொன்று லறவு மஞ்சிப்
புந்திநொந் திறப்போ மென்று புகலிட மெமக்கே தென்றுஞ்
சிந்தனை யாலே கெட்ட சித்தத்தாற் றியங்கிச் சோர்ந்தார்.

இ - ள். சந்ததமிவ்வாறெண்ண - எப்போதும் இந்தப்பிரகாரம்நினைக்க, தளைப்புண்ட மனத்தராகி - பந்தப்பட்ட மனதையுடையவராய், அந்தமிறீரமின்றி - முடிவற்ற திடமில்லாமல், அமரொன்றாலறவுமஞ்சி - போரொன்றால் மிகவும்பயந்து, புந்திநொந்து - மனதுநொந்து,இறப்போமென்று-நசிப்போமென்றும், புகலிடம் - ஆதாரவான இடம், எமக்கேதென்றும் - நமக்கெது வென்றும், சிந்தனையால் - நினைவினாலாகிய, கெட்டசித்தத்தால் - தீயமனதினால், தியங்கிச்சோர்ந்தார் - கலக்குற்று வாடினார்கள்—எ-று.

எ - து.. எப்போதும் இந்தப் பிரகாரம் நினைககப்பட்டமனதையுடையவராய் முடிவற்றதிடமில்லாமல் போரொன்றால் மிகவும்பயந்து மனநொந்து நசிப்போமென்றும், ஆதாரவான இடம் நமக்கெது வென்றும், நினைவினாலாகிய தீயமனதினால் கலக்குற்று வாடினார்கள்-எ-ம்.

## தானவர் இறத்தல்.



வலியெலா மிழந்து முன்னே வந்தொரு பெயர்நின் றாலும்
நலிவுற மாட்டா ராகி நடுங்கினர் விறகு மாண்டாற்
பலிதரு மவியை யங்கி பருகிட வல்ல துண்டோ
ஒலிதா வுரைத்தெ னஞ்சி யோடினர் பொன்றிப் போனார்.

இ - ள். வலியெலாமிழந்து - (தங்கள்) வல்லமைகளையெல்லாம்போக்கி, முன்னேவந்தொருபெயர் நின்றாலும் - (தங்கள்) முன்னொருவன் வந்துநின்றாலும், நலிவுறமாட்டாராகி - அழிவுசெய்யமாட்டாதவர்களாய், நடுங்கினர் - நடுக்கமடைந்தார்கள், விறகுமாண்டால் - சமித்தில்லாமற்போனால், பலிதருமவியை - ஆகுதிகொடுக்கின்ற தேவர் உணவை, அங்கி - அக்கினியானது, பருகிடவல்லதுண்டோ - புசிக்கும்படி வல்லமையுண்டாமோ, ஒலிதாவுரைத்தென் - சத்தமாகச் சொல்லியென்ன, அஞ்சியோடினார் - பயந்தோடி, பொன்றிப்போனார் - இறந்தனர்—எ-று.

எ - து. தங்கள் வல்லமைகளை யெல்லாம்போக்கித் தங்கள் முன்னொருவன்வந்து நின்றாலும், அழிவுசெய்ய மாட்டாதவர்களாய் நடுக்கமடைந்தார்கள், சமித்தில்லாமற்போனால் ஆகுதிகொடுக்கின்ற தேவர்உணவை அக்கினியானது புசிக்கும்படி வல்லமையுண்டாமோ? சத்தமாகச் சொல்லியென்ன? பயந்தோடி இறந்தனர்—எ-ம். (38)

## அவிவேகத்தன்மை உரைத்தல்.



தாமனும் வியாளன் றானுங் கடனுமுன் சரித்த மார்க்கந்
தோமறு முணர்வுண் டாகச் சொல்லினம் விநோதத் தாலே
மாமன மவிவே கத்தை வரம்பறப் பழகி விட்டாற்
பாமரப் பிறவித் துன்பம் பற்றறா திந்த வண்ணம்.

இ - ள். தாமனும் - தாமனென்பவனும், வியாளன்றானும் - வியாளனென்பவனும், கடனும் - கடனென்பவனும், முன்சரித்தமார்க்கம் - முன் நடந்தவழியை, தோமறு முணர்வுண்டாக - குற்றமற்ற ஞானமுண்டாகும்படி, சொல்லினம் - உமக்குச்சொன்னோம், விநோதத்தால் - விளையாட்டினால், மாமனம் - மகாமனமானது, அவிவேகத்தை - அஞ்ஞானத்தில், வரம்பறப் பழகிவிட்டால் - தடையில்லாமற்பழகினால், பாமரப் பிறவித்துன்பம் - அறிவின்மையாகிய பவத்துன்பமானது, இந்தவண்ணம் - இப்படி, பற்றறாது - நீங்காது-எ-று.

எ - து. தாமனென்பவனும், வியாளனென்பவனும், கடனென்பவனும், முன்நடந்தவழியைக் குற்றமற்ற ஞானமுண்டாகும்படி உமக்குச்சொனனோம். விளையாட்டினால் மகா மனமானது அஞ்ஞானத்தில் தடையில்லாமற் பழகினால் அறிவின்மையாகிய பவத்துன்பமானது இப்படி நீங்காது—எ-ம்.

இ-உ௦-௧-ம் பிரமநிஷ்டையுள்ள சம்பராசுரனால் உண்டாக்கின தாமாதி மூவருந் தீரமுள்ளவரயிருந்தும் யானெனதென்னும் வாசனையால் தேகாபிமான மடைதலில் அறிவிழந்தார்களென்பதாம். (39)

## தாமாதிகள் பிரமத்தில் உதித்தது எங்ஙனமெனின்.

இனையவர் நியாய நீயிங் கெய்தலை யென்ற லோடும்
அனையவர் பரத்தி னின்று முதித்தவா றறிய வேண்டும்
முனைவகூ றென்றி ராமன் மொழிதலு முனிவன் சொல்வான்
துனையுறு தாமன் முன்னோர் தோற்றமாத் திரமெய் யானோர்.

இ - ள். இனையவர் நியாயம் - இந்தத் தாமாதி அசுரர்களுடைய நீதிகளை, நீயிங்கெய்தலை - ஸ்ரீராமா நீயிவ்விடத்திற் பொருந்தாதே, என்றலோடும் - என்று வசிட்டமுனிசொல்லவும், அனையவர் பரத்தினின்றும் - அவர்கள் பிரமத்திலிருந்தும், உதித்தவாறு - உண்டானதன்மையை, அறியவேண்டும் - தெரியவேண்டும், முனைவகூறென்று - முதன்மையான முனியே சொல்லுமென்று, இராமன் மொழிதலும்-இராமன்கேட்கவும், முனிவன்சொல்வான்-வசிட்டமுனி சொல்லுவார், துனையுறு - அச்சமுள்ள, தாமன் முன்னோர் - தாமன் முதலானவர்கள், தோற்றமாத்திரம் - பரத்தினது (பிரதி) பா மாத்திரமே, மெய்யானோர் - சரீரமானவர்கள்-எ-று.

எ - து. இந்தத் தாமாதி அசுரர்களுடைய நீதிகளை ஸ்ரீராமா நீயிவ்விடத்திற் பொருந்தாதேயென்று வசிட்டமுனி சொல்லவும், அவர்கள் பிரமத்திலிருந்தும் உண்டான தன்மையைத் தெரியவேண்டும். முதன்மையான முனியே சொல்லுமென்று இராமன் கேட்கவும், வசிட்டமுனி சொல்லுவார். அச்சமுள்ள தாமன் முதலானவர் பரத்தினது பிரதிபாமாத்திரமே சரீரமானவர்கள்—எ-ம்.

இ-ம். பிரமப்பிரதிபாமாத்திரமாய் தாமாதிகள் தோற்றினர் என்பதாம்.

## ஆயின்யாம் எப்படி விளங்குவம் எனின்.

எதிருறு தோற்ற மெய்யா யிவர்கள்போ லிங்கு யாமும்
விதியதாய்ப் புறத்தி லொன்று மேவலம் வீர னேநின்,
மதியினு னெனலும் பொய்யே மதியினீ யெனலும் பொய்யே
அதிர்குரற் றுமன் முன்னு மவர்களுண் டெனலும் பொய்யே.

இ - ள். எதிருறு - எதிரேகாணப்பட்ட, தோற்றமெய்யாம் - பிரதிபையே சரீரமாயிருக்கின்ற, இவர்கள்போல் - இத் தாமாதிகளைப்போல, இங்கியாமும் - இவ்விடத்திலுள்ள நாமும், விதியதாய் - உண்மையாக, புறத்திலொன்றும் - (சிதாகாசத்திற்குப்) புறம்பாக வொன்றிலும், மேவலம் - பொருந்திலம், வீரனே - (சுத்த) வீரனே, நின்மதியில் - உனதறிவில், நானெனலும் பொய்யே - நானென்பதும் அசத்தியமே, நீயெனலும் பொய்யே - நீயென்பதும் அசத்தியமே, அதிர்குரற்றுமன்முன்னும் - தொனி

க்கின்ற கண்டத்தையுடைய தாமன்முதலிய, அவர்களுண்டென்னலும் பொய்யே - அவர்கள் உண்டென்பதும் அசத்தியமே—எ-று.

எ - து. எதிரே காணப்பட்ட பிரதிபையே சரீரமாயிருக்கின்ற இத்தாமாதிகளைப்போல இவ்விடத்திலுள்ள நாமும் உண்மையாகச் சிதாகாசத்திற்குப் புறம்பாக ஒன்றிலும்பொருந்திலம். சுத்தவீரனே உனதறிவில் நானென்பதும் அசத்தியமே. நீயென்பதும் அசத்தியமே. தொனிக்கின்ற கண்டத்தையுடைய தாமன்முதலிய அவர்கள் உண்டென்பதும் அசத்தியமே—எ-ம்.

இ-ம். யாமும் அப்பிரமப்பிரகாசமாய் விளங்குவமேயன்றி வேறன்று என்பதாம். (41)

## சம்பரனால் தாமாதிகள் உண்டாயின் கிரமம் இயாதெனின்.



பரத்தின தொளியே மெய்யாய்ப் பாரித்தோர் சீவ சத்தி
கிரத்துறு சம்ப ரன்றன் றியானத்தா லசைந்து மூன்றாய்
உரத்தவுல் லாச மேவிற் றுரைத்தவித் திறத்தி னாலே
வரத்துறு மவரு நாமும் வாய்மையே யெங்கு மில்லை.

இ - ள். பரத்தினதொளியே - பிரமத்தினதுவிளக்கமே, மெய்யாய் பாரித்து - உருவமாய் வியாபித்திருக்கின்ற, ஓர் சீவசத்தி - ஓர் ஆத்ம சத்தியானது, கிரத்துறுசம்பரன்றன் - கிரமுள்ள சம்பராசுரனுடைய, தியானத்தாலசைந்து - நினைவினாற் சலனமடைந்து, மூன்றாய் - தாமாதி மூன்றுவடிவங்களாய், உரத்த வுல்லாசமேவிற்று - கிரமான உல்லாசத்தை யடைந்தது, உரைத்தவித்திரத்தினால் - சொல்லிய இக்குணத்தினால், வரத்துறுமவரும் - வராநின்ற அவர்களும், நாமும் - யாமும், வாய்மையே யெங்குமில்லை-உண்மையாகவே எவ்விடத்துமில்லை—எ-று.

எ - து. பிரமத்தினது விளக்கமே உருவமாய் வியாபித்திருக்கின்ற ஓர் ஆத்மசத்தியானது கிரமுள்ள சம்பராசுரனுடைய நினைவினாற் சலனமடைந்து, தாமாதி மூன்று வடிவங்களாய்க் கிரமான உல்லாசத்தையடைந்தது, சொல்லிய இக்குணத்தினால் வராநின்ற அவர்களும் யாமும் உண்மையாகவே எவ்விடத்துமில்லை—எ-ம்.

இ-ம். சம்பரனது ஆத்மவுல்லாசமே அப்படித் தோற்றினது என்பதாம்,

## ஆயின் சகம் நித்தியந்தானே எனின்.

அறிவதா யறிவே மெய்யா யமலமா யனைத்தா யாறிப்
பிறிவுறு வரவு போக்கில் பிரமமே யுளதா மந்தச்

செறிபொருட் சத்தி தோற்ற மாத்திரஞ் சகமாய் நிற்கும் [வாய்.
பொறிகள்பல் காட்சி பொய்யே பொருண்மெய்யே யென்று வாழ்

இ - ள். அறிவதாய் - (யாவையுஞ் சாட்சியாய்) அறிவதாகியும், அறிவே மெய்யாய் - போதாகாரமாகியும், அமலமாய் - நின்மலமாகியும், அனைத்தாம் - சமஸ்தமாகியும், ஆறி - உபசாந்தமாகியும், பிறிவுறு - வேற்றுமையான, வரவு போக்கு - உதயாஸ்தமனமும், இல் - இல்லாததாயுமிருக்கின்ற, பிரமமேயுள தாம் - பிரமசொரூபமே யுள்ளதாகும், அந்தச்செறிபொருள் - அப்பூரணவஸ்துவினுடைய, சத்தி - (சிற்) சத்தியினது, தோற்றமாத்திரஞ் சகமாநிற்கும் - உண்டாதலே உலகாயிருக்கும், பொறிகள் - இந்திரியங்களால் அறியப்பட்ட, பல்காட்சிபொய்யே - நாநாவிதமாகிய கிரிசியங்கள் அசத்தியமே, பொருண் மெய்யேயென்று - பிரமவஸ்துவேசத்தியமென்று, வாழ்வாய் - சுகித்திருப பாய்—எ-று.

எ - து. யாவையுஞ் சாட்சியாய் அறிவதாகியும், போதாகாரமாகியும், நின்மலமாகியும், சமஸ்தமாகியும், உபசாந்தமாகியும், வேற்றுமையான உதயாஸ்தமனமும் இல்லாததாகியுமிருக்கின்ற பிரமசொரூபமே உள்ளதாகும். அப்பூரணவஸ்துவினுடைய சிற்சத்தியினது உண்டாதலே உலகாயிருக்கும். இந்திரியங்களால் அறியப்பட்ட நாநாவிதமாகிய கிரிசியங்கள் அசத்தியமே பிரமவஸ்துவே சத்தியமென்று சுகித்திருப்பாய்—எ-ம.

இ-ம். சகலமும் பிரமப்பிரகாசமாய் விளங்குதலிற் சகமித்தையேயென்பதாம். (43)

தாமவியாளகடர்கதை முற்றிற்று.

ஆக கதை 14 - க்கு கவிதை - 606.

---

# வீமபாசதிடர் கதை.

## அவதாரிகை.

முன் சம்பராசுரன் பிரமத்தியானத்து உதித்தும் விவேகமிருந்தும் இந்த யுத்தத்தைத் தங்கள் அனுபவ உல்லாசமாய்ப்பாராமல் வேறுபட்டு யான் எனது என்னும் பழக்கமேறத்தன்னை இழந்ததைக்கூறி, எப்படிப்பட்ட இடறு வந்தவிடத்தும் வேறுபட்டுத் தேகத்தில அகம்பாவம் வாராமல் தனது உல்லாசமாய்ப் பார்க்குநிமித்தம் பீமாதியர் கதையை நிரூபிக்கிறார்.

### விடயவிருப்பத்தில் பயனின்று எனல்.

இதுநமக் கிதுந மக்கென் றிரங்குறு பொல்லா வாழ்வால்
அறியோர் சாம்ப ரேனு முறப்பெறு துதாா மிக்குச்

சுதமுறு முலக மெல்லாந் துரும்புபோற் காண்போர் தம்பால்
விதனங்க ளனைத்தும் வாரா மிருகங்க ளுலர்புற் றீண்டா.

இ - ள். இதுநமக்கு - இப் (புத்திராதிகள்) நமக்கென்றும், இதுநமக்கென்று - இப்பூமி (முதலானவைகள்) நமக்கென்றும். இரங்குறுமெல்லா வாழ்வால் - வாடுகின்ற நிர்ப்பாக்கியத்தினால், உதவி - சகாயமானது, ஓர் சாம்பரேனுமுறப்பெறாது - ஒரு சாம்பல் அளவாவது கிடைக்காது, உதாரமிக்கு-உதாரமிகுந்திருக்கின்ற (புருடர்கள்), சுகமுறு முலகமெல்லாம் - நாசமடைகின்றசகங்களனைத்தும், துரும்புபோல் - திரணம்போல, காண்போர்தம்பால் - காண்கவர்களிடத்தில், மிருகங்கள் - மான்கள், உலர்புற்றீண்டா - வைக்கோலைத் தொடாததுபோல, விதனங்களனைத்தும்வாரா - துன்பங்களியாவும் தொடராவாம்-எ-று.

எ - து. இப்புத்திராதிகள் நமக்கென்றும், இப்பூமி முதலானவைகள் நமக்கென்றும், வாடுகின்ற நிர்ப்பாக்கியத்தினால் சகாயமானது ஒரு சாம்பல் அளவாவது கிடைக்காது. உதார மிகுந்திருக்கின்ற புருடர்கள் நாசமடைகின்றசகங்களனைத்தும்திரணம்போலக்காண்பவர்களிடத்தில் மான்கள் வைக்கோலைத் தொடாததுபோல துன்பங்களியாவுந் தொடராவாம்—எ-ம்.

இ-ம். பயனின்றிய சகத்தை அற்பமாகப்பார்க்கிற் சுகமுண்டாமென்பதாம். (1)

## உலகத்தை அணுவாகப்பார்க்குந் திருஷ்டி இயாதெனின்.



உளத்துற சமத்கா ரஞ்சே ருண்மையை யுணர்வோர் தம்மை
அளக்கரும் பிரமாண் டம்போ லட்ட திக் காளர் காப்பர்
கிளப்பருங் குணத்தி லன்பாய் கேள்வியில் விருப்பா யுண்மை
விளக்குறு வருத்த மிக்கோர் நரர்நின் றோர் மிருகந்தானே.

இ - ள். உளத்துற - உள்ளத்திற்பொருந்த, சமத்காரஞ்சேர் - சமத்காரசத்திசேர்ந்த, உண்மையை - பிரமத்தை, உணர்வோர்தம்மை - அறிபவர்களை, அளக்கரும் - அளவிடுதற்கரிய, பிரமாண்டம்போல்-பிரமாண்டத்தைப்போல, அட்டதிக்காளர்காப்பர் - எண்டிசைப்பாலர் காப்பார்கள், கிளப்பருங்குணத்தில் - சொல்லற்கரியகுணங்களில், அன்பாய் அன்பாகியும், கேள்வியில்விருப்பாய் - விசாரணையில் விருப்பமாகியும், உண்மை விளக்குறு - தத்துவத்தை விளக்காநின்ற வஸ்துவில், வருத்தமிக்கோர் - பிரயாச மிகுந்தவர்களாகியும் இருக்கின்றவர்களே, நரர் - புருடர்களாவர், நின்றோர் - மற்றவர்கள், மிருகந்தான் - விலங்குகளாவர்எ-று.

எ-து. உள்ளத்திற் பொருந்த சமத்கார சத்திசேர்ந்த பிரமத்தை அறிபவர்களை அளவிடுதற்கரிய பிரமாண்டத்தைப்போல எண்டிசைப்பாலர் காப்பார்கள். சொல்லற்கரிய குணங்களில் அன்பாகி விசாரணையில் விருப்பமாகியும், தத்துவத்தை விளக்காநின்ற வஸ்துவில் பிரயாச மிகுந்தவர்களாகியும் இருக்கின்றவர்களே புருடர்களாவர். மற்றவர்கள் விலங்குகளாவர்—எ-ம.

இ-ம். தத்துவத்தை அறிகின்ற முயற்சியாற்சகம் அற்பமாகத் தோற்றும் என்பதாம். (2)

## உண்மையை உணரும் உணர்ச்சி இயாதினால் உண்டாகுமெனின்.

செயலருந துயருற் றாலுஞ் செயததகாச செயல்க ளாகா
இயல்பலா வழியா லுண்ண விராகுவை யமுதங் கொன்ற
தயலெலலாம் வசமா யாபத் தனைத்தும்போ யென்று நன்று
முயனற்குணங்க ளாலே மொய்புக ழெய்தி னோர்க்கே.

இ-ள். செயலருந் துயருற்றாலும்-செய்தற்கரிய துன்பமடைந்தாலும், செயத்தகா செய்யக்கூடாத, செயல்களாகா - தொழில்களைச் செயக் கூடாது, இயல்பலாவழியால் - ஒழுங்கல்லாதமார்க்கத்தினால், உண்ண-புசிக்க, இராகுவை - இராகு என்பவனை, அமுதங்கொன்றது - அமுதமானதுகொலைசெய்தது, முயலு நற்குணங்களால் - முயற்சிக்கின்ற சற்குணங்களினால், மொய்புகழ் - மிகுந்தகீர்த்தியை, எய்தினோர்க்கு - அடைந்த சத்துக்களுக்கு, அயலெலாம் - வசமல்லாத அனைத்தும், வசமாய் - வசமாகி, ஆபத்தனைத்தும்போய் - ஆபத்துக்களென்றுசொல்லப்பட்ட சகலமுநீங்கி, என்று நன்றும் - எப்பொழுதும் (அளவற்ற) சம்பத்துண்டாம்—எ-று.

எ-து. செய்தற்கரிய துன்பமடைந்தாலும் செய்யக்கூடாத தொழில்களைச செய்யக்கூடாது. ஒழுங்கல்லாத மார்க்கத்தினால் புசிக்க இராகுவென்பவனை அமுதமானது கொலைசெய்தது. முயற்சிக்கின்ற சற்குணங்களினால் மிகுந்த கீர்த்தியை அடைந்த சத்துக்களுக்கு வசமல்லாத அனைத்தும் வசமாகிய ஆபத்துக்களென்று சொல்லப்பட்ட சகலமுநீங்கி எப்பொழுதும் அளவற்ற சம்பத்துண்டாம்—எ-ம்.

இ-ம். மயித்திரியாதி குணக்கள் உண்டாகுவதால் துன்பம்வரினும் விசாரமுயற்சி யுண்டாகுமென்பதாம்.

## அவ்விசாரம் எதைக் கொடுக்கும் எனின்.

ஒழிவறு முயற்சி தன்னு லூகத்தா லுயர்ந்த நூலால்
இழிவற வியற்று வோர்கட் கெப்பய னெளிதி னெய்தா
வழிபடு நன்னூ லாளர் வருபயன் கருதாச் செய்யில்
அழிவற முற்று முற்றி யளவறு பயனை நல்கும்.

இ - ள். ஒழிவறுமுயற்சிதன்னால் - நீங்காத முயற்சியினாலும், ஊகத்தால் - யுத்தியினாலும், உயர்ந்தநூலால் - மேலான ஞான சாஸ்திரங்களினாலும், இழிவற வியற்றுவோர்கட்கு - குற்றமற நடப்பவர்களுக்கு, எப்பயனெளிதினெய்தா - எந்தப்பிரயோசனம் எளிதிற்கிடையாது, வழிபடு - வழுபாடாகிய நன்னூலாளர் - ஆத்ம ஞானசாஸ்திரத்தை அனுபவிப்பவர்கள், வருபயன் - வரப்பட்ட பிரயோசனத்தை, கருதா - (விரைவிலடையச்) சிந்தியாமல், செய்யில் - (கிரமமாக) அனுசந்தித்தால், அழிவற முற்றுமுற்றி - கெடாமன முழுதுமுதிர்ந்து, அளவறு பயனைநல்கும் - முடிவற்ற ஆத்மலாபத்தைக்கொடுக்கும் - எ - று

எ - து. நீங்காத முயறசியினாலும், யுத்தியினாலும், மேலானஞானசாஸ்திரங்களினாலும், குற்றமற நடப்பவர்களுககு எநதப் பிரயோசனம எளிதிற் கிடையாது. வழிபாடாகிய ஆத்மஞான சாஸ்திரத்தை அனுபவிப்பவர்கள் வரப்பட்ட பிரயோசனத்தை விரைவிலடையச் சிந்தியாமல் கிரமமாக அனுசந்திததால் கெடாமனமுழுது முதிர்நது முடிவற்ற ஆத்மலாபதததைக் கொடுக்கும - எ - ம.

இ - ம். சுருதி யுத்தி அனுபவத்துடன் விசாரிககும் விசாரணை ஆத்மலாபத்தைக் கொடுக்குமென்பதாம். (4)

## ஆத்மாவின் சொரூபம் இயாதெனின்.

வருததமற் றச்சஞ் சோக மதமின்றி நன்னூற் பின்போய்
ஒருத்தரா லேவ லின்றி யுலாவுக நசிக்க வேண்டா
அருத்தங்க ளநர்த்த மாகு மளவில்போ கங்க ளையாம்
பெருத்தவா பத்தாஞ் செல்வம் பேரின்ப நிராசை தானே.

இ - ள். வருத்தமற்று - துன்பமில்லாமல், அச்சம் - பயமும, சோகம் - சோம்பலும், மதமின்றி - செருக்குமில்லாமல், நன்னூற்பின்போய் - ஆத்மஞான சாஸ்திரார்த்தங்களின் பின்சென்று, ஒருத்தரா லேவலின்றி - ஒருவரால் ஏவுதலில்லாமல், உலாவுக - சஞ்சரிக்கக் கடவாய், நசிக்கவேண்டா - கெடும்படிவிரும்பாதே, அருத்தங்களநர்த்தமாகும் - திரவியங்கள் பயனில்லவாம், அளவில் போகங்களையாம் - மிகுந்தபோகங்கள் துன்பமாம், செல்

வம் - செல்வமானது, பெருந்தவாபத்தாம் - பெரிய ஆபத்தையுடையதாம். நிராசைதானே பேரின்பம் - நிராசையே பேராநந்தமாம்—எ-று.

எ - து. துன்பமில்லாமல் பயமும், சோம்பலும், செருக்கும் இல்லாமல், ஆத்மஞானசாஸ்திரார்த்தங்களின் பின்சென்றுஒருவரால் ஏவுதலில்லாமல் சஞ்சரிக்கக்கடவாய் கெடும்படிவிரும்பாதே. திரவிய ங்கள் பயனில்லனவாம். மிகுந்த போகங்கள் துன்பமாம். செல்வமா னது பெரிய ஆபத்தையுடையதாம். நிராசையே பேராநந்தமாம்.

இ-ம். நிரதிசயமாகிய பேராநந்தமே ஆத்ம சொரூபமாம். (5)

## அப் பேராநந்தத்தால் இயாதுவருமெனின்.

இடும்பைகூர் சங்க மின்றி யியற்கையா சார மெய்தி
குடும்பமாந் துயர்சிற் றின்பங் குறித்திடாப் பெருமை யோர்க்கு
நெடும்புகழ் வாணாள் செல்வ நிறைகுண மனைத்து முண்டாய்ப்
படும்பலன் வசந்த காலக் கொடிகள்போற் பலிக்கு மன்றே.

இ - ள். இடும்பைகூர் - துன்பமிகுந்த, சங்கமின்றி - கூட்டமில்லாமல், இயற்கையாசாரமெய்தி - இயல்பான ஒழுக்கமடைந்து, குடும்ப மாந்துயர் - சம்சாரமானதுன்பத்தையுடைய, சிற்றின்பம் - விடயசுகங்களை, குறித்திடாப் பெருமையோர்க்கு-கருதாத பெருமையுடைய சத்துக்களுக்கும், நெடும்புகழ்-மிகுந்தகீர்த்தியும், வாணாள் - (நீண்ட) ஆயுளும், செல்வம் - (மிகுந்த) செல்வமும், நிறைகுணம் - மிகுந்த சற்குணங்களுமாகிய, அனைத்துமுண்டாய் - சகலமுமுண்டாகி, படும்பலன் - கிடைக்காநின்ற பிரமப் பிரயோசனமானது, வசந்தகாலக்கொடிகள்போல்-வசந்தகாலப்பூங்கொடிகளைப்போல, பலிக்கும்-கிடைக்கும்-எ-று.

எ - து. துன்பமிகுந்த கூட்டமில்லாமல் இயல்பான ஒழுக்கமடைந்து சம்சாரமான துன்பத்தையுடைய விடயசுகங்களைக் கருதாத பெருமையையுடைய சத்துக்களுக்கு மிகுந்த கீர்த்தியும், நீண்ட ஆயுளும், மிகுந்தசெல்வமும், மிகுந்த சற்குணங்களுமாகிய சகலமுமுண்டாகி கிடைக்காநின்ற பிரமப் பிரயோசனமானது வசந்தகாலப் பூங்கொடிகளைப்போல கிடைக்கும்—எ—ம்.

இ-ம். பவத்துன்பநீங்கி பரகதி யுண்டாமென்பதாம். (6)

## பவத்துன்பம் நீங்கும் உபாயம் இயாதெனின்.

தவங்களாற் றெய்வ நீராற் சாத்திரங் களினுற் போகாப்
பவங்களை யுயர்ந்தோர் பாதம் பணிந்துபற் றறுக்கவேண்டும்

அவங்களாங் காரஞ் கோப மறவுந்தேய்ந் தியற்கை யான
சுவங்களி னடந்து நன்னூற் றுறைநின்றோ ருயர்ந்த மேலோர்.

இ - ள். தவங்களால் - தபசுகளினாலும், தெய்வநீரால் - புண்ணிய தீர்த்தங்களினாலும், சாத்திரங்களினால் - நூல்களினாலும், போகாப்பவங்களை, நீங்காத சநநங்களை, உயர்ந்தோர் பாதம் - மகான்களது திருவடியை, பணிந்து பற்றறுக்கவேண்டும் - வணங்கிப் பாசங்களைக் கெடுக்கவேண்டும், அவங்கள் - பயனின்மையான, அகங்காரம் - நானென்னு மோகமும், கோபம் - சினமும், அறவுந்தேய்ந்து - மிகவுங்குறைந்து, இயற்கையான - இயல்பாகிய, சுவங்களினடந்து - சன்மார்க்கங்களிற்சென்று, நன்னூற்றுறைநின்றோர் - ஆத்மஞான சாஸ்திர மார்க்கத்தி னின்றவர்கள், உயர்ந்த மேலோர் - மேன்மையான சத்துக்கள்-எ-று.

எ - து. தபசுகளினாலும், புண்ணிய தீர்த்தங்களினாலும், நூல்களினாலும், நீங்காத சநநங்களை மகான்களது திருவடியை வணங்கிப் பாசங்களைக் கெடுக்கவேண்டும். பயனின்மையான நானென்னு மோகமும் சினமும் மிகவுங் குறைந்து இயல்பாகிய சன்மார்க்கங்களிற் சென்று ஆத்மஞான சாஸ்திர மார்க்கத்தினின்றவர்கள் மேன்மையான சத்துக்கள்—எ-ம்.

இ-ம். மகான்களைப்பணிவதே பவத்துன்பம் நீங்கும் உபாயமென்பதாம்.

மகான்கள் இயார் எனின்,

---

நானெனும் பொருள்கா ணாதோர் ஞானவா க யங் காணார்
நானெனும் பொருளைக் கண்டோர் ஞானவா காய மாவார்
நானெனு மகங்கா ரக்கார் ஞானவிண் மதியை மூடி
நானெனுப் பரம வாம்ப னன்மலர் விரியா தன்றே.

இ - ள். நானெனும் பொருள் காணாதோர் - நானென்பதற்கு அருத்தமாகிய (பிரமத்தைக்) காணாதவர்கள், ஞான வாகாயங் காணார் - சிதாகாயத்தைப் பாரார்கள், நானெனும் பொருளைக் கண்டோர் - நானென்பதின் அருத்தமாகிய (பிரமத்தைக்) கண்டவர்கள், ஞானவாகாயமாவார் - சிதாகாயமாவார்கள், நானெனும்-நானென்கின்ற, அகங்காரக்கார்-அகங்காரமேகமானது, ஞானவிண் மதியை மூடில் - ஞானாகாயத் திங்களை மறைக்கில், நானெனுப் பரமவாம்பல் - யானென்று சொல்லப்படாத (பிரமமென்னும்) அல்லியான, நன்மலர் விரியாது - நல்ல புட்பமானது மலராது-எ-று.

எ - து. நானென்பதற்கு அருத்தமாகிய பிரமத்தைக் காணாதவர்கள் சிதாகாயத்தைப் பாரார்கள். நானென்பதின் அருத்தமாகிய

பிரமத்தைக் கண்டவர்கள் சிதாகாயமாவார்கள். நானென்கின்ற அகங்கார மேகமானது ஞானகாயத்திங்களை மறைக்கில் யானென்று சொல்லப்படாத பிரமமென்னும் அல்லியான நல்ல புட்பமானது மலராது—எ-ம்.

இ-ம். நானென்பதை நீக்கித் தானாக விளங்குபவர்களே மகான்கள் என்பதாம். (8)

## நானென்பது இயாதினாற் கெடும் எனின்

மடிவறு பிறவி யென்னு மாத்திர ளெனக்கீ தென்னும்
நெடியபல் பணைக ணீட்டி நிரையமாங் காய்கள் காய்க்கும்
முடிவறு துயராங் கார முளையாக விளையா நிற்கும்
மிடியிலா ஞானத் தீயால் வேரொடும் வெந்து போமே.

இ-ள். முடிவறு துயராங்காரம்-அளவற்ற துன்பமுள்ள அகங்கார மானது, முளையாக விளையா நிற்கும் - அங்குரமாக முளைத்து வளராநின்ற, மடிவறு பிறவியென்னும் - நீங்காத சநநமென்னும், மாத்திரள் - தருக்கூட்டங்களானவை, எனகீதென்னும் - யானென தென்கின்ற, நெடியபல் பணைகணீட்டி - நீண்ட கிளைகளாக விரித்து, நிரைய மாங்காய்கள் காய்க்கும் - நரகமென்னுங் காய்களைக் காய்க்கும், (அத்தருக்களானவை) மிடியிலா ஞானத் தீயால் - குறைவற்ற ஞானக்கினியினால், வேரொடும் வெந்துபோம் - மூலத்துட னெரிந்துபோகும்—எ-று.

எ-து. அளவற்ற துன்பமுள்ள அகங்காரமானது அங்குரமாக முளைத்து வளராநின்ற நீங்காத சநநமென்னும் தருக்கூட்டங்களானவை யானெனதென்கின்ற நீண்ட கிளைகளாக விரித்து நரகமென்னுங் காய்களைக் காய்க்கும். அத்தருக்களானவை குறைவற்ற ஞானக்கினியினால் மூலத்துடனெரிந்துபோகும்—எ-ம்.

இ-ம். ஞானத்தினால் அகம்பாவம் கெடுமென்பதாம். (9)

## அகங்காரத்தின்சொரூபமும், அதை ஞானத்தாற் கெடுக்கும் உபாயமும், அஃது நீங்கின இடத்துண்டாகும் பயனும் இயாதெனின்.

என்றலு மிவவாங் கார மெவ்வுரு வுடைத்தெவ வாறு
வென்றிட லாகுந் தேக மேவியு மேவா தாயு
நின்றொரு காலம் வென்று னேருறு பயனே தென்ன
நன்றுணர் வள்ளல் கேட்ப ஞானமார் வசிட்டன் சொல்வான்.

இ-ள். என்றலும் - (இப்படி) யென்று வசிட்டர் சொல்லவும், இவ்வாங்காரம் - இந்த அகங்காரமானது, எவ்வுருவுடைத்து - என்னவடிவம்

உடையது, எவ்வாறு வென்றிடலாகும்-எப்படிச் செயஞ்செய்யலாம், தேகமேவியும் - தேக (வாசனையைப்) பொருந்தினவனானாலும், மேவாதாயுநின்று - பொருந்தாதவனானாலுமிருந்து, ஒருகாலம்வென்றால் - ஒருபொழுது செயஞ்செய்தால், நேருறு பயனேதென்னு-வருகின்ற பிரயோசன மென்னவென்று, நன்றுணர் வள்ளல்கேட்ப - நன்மையுணராநின்ற இராமர்கேட்க, ஞானமார் வசிட்டன்சொல்வான் - பூரணஞானியான வசிட்டமுனி சொல்லுவார்.-எ-று.

எ-து. ரிப்படியென்று வசிட்டர் சொல்லவும், இந்த அகங்காரமானது என்ன வடிவமுடையது? எப்படிச் செயஞ்செய்யலாம்? தேகவாசனையைப் பொருந்தினவனானாலும் பொருந்தாதவனானாலும் இருந்து ஒருபொழுது செயஞ்செய்தால் வருகின்ற பிரயோசனமென்னவென்று நன்மையை யுணராநின்ற இராமர்கேட்க, பூரணஞானியான வசிட்டமுனி சொல்லுவார்—எ-ம். (10)

## அவ்வகங்கார மூன்றின் முந்தின அகங்கார இலக்கணங்கூறல்

மூவகை வுலகி லிந்த வகங்கா மும்மை யென்றும்
மேவரு மிரண்டு நன்றா மிகவுமொன் றீன மாகும்
யாவது பரமு நாமே மீறில மெமைய லாதோர்
பாவனை யிலதென் றோரும் போதமே பரமாங் காரம்.

இ-ள். மூவகையுலகில் - மூன்றுவிதமாகிய உலகங்களில், இந்தவகங்கா மும்மை-இவ் அகங்காரமானது மூன்று (விதமாய்), என்றும் - எப்பொழுதும், மேவரு மிரண்டுநன்றும் - பொருந்தற்கரிய இரண்டு அகங்காரம் நன்மையையுடையதாம், மிகவுமொன் றீனமாகும் - மிகவும் அகங்காரம் இழிவையுடையதாம், யாவதும் - சகல சகங்களும், பரமும் - பரமாத்மாவும், நாமே - நாமேயாம், ஈறிலும் - (நா) முடிவிலம், எமையலாது - நம்மையன்றி, ஓர் பாவனையில தென்று - ஒருபாவனையும் இல்லையென்று, ஓரும்போதமே - ஆராய்ந்தறிகின்ற ஞானமே, பரமாங்காரம் - மேன்மையாகிய அகங்காரமாம்-எ-று.

எ-து. மூன்றுவிதமாகிய உலகங்களில் இவ்வகங்காரமானது மூன்றுவிதமாம் அவற்றுள் எப்பொழுதும் பொருந்தற்கரிய இரண்டகங்காரம் நன்மையை யுடையதாம், மிகவும் ஓரகங்காரம் இழிவையுடையதாம் சகல,சகங்களும் பரமாத்மாவும் நாமேயாம். நாம் முடிவிலம் நம்மையன்றி ஒரு பாவனையுமில்லையென்று ஆராய்ந்தறிகின்ற ஞானமே மேன்மையாகிய அகங்காரமாம்—எ-ம். (11)

## இரண்டாம் அகங்கார இலக்கணங்கூறல்.

செண்ணெல்வா லினுஞ்சற் றாகிச் செகங்களுக் கயலா யென்றும்
மன்னுது மெனக்கொள் போத மற்றையாங் கார மாகும்
இந்நிலை யிரண்டுஞ் சீவன் முத்தர்பா லிருந்தீ டேற்றித்
துன்னரு முத்தி நல்குஞ் சுழல்வுறு பந்த நல்கா.

இ - ள். சென்னெல்வாலினுஞ்சற்றாகி - நெல்வால் நுனியிலுஞ் சூட்சும மாகியும், செகங்களுக்கயலாய் - (சகல) உலகங்களுக்குப் புறம்பாகியும், என்று மன்னுதுமென - (நாம்) எப்பொழுதும் நிலையாயிருக்கின்றோமென்று, கொள் போதம் - கொள்ளப்பட்ட ஞானமே, மற்றையாங்காரமாகும் - இரண்டாவதாகிய அகங்காரமாகும், இந்நிலையிரண்டும் - இந்த நிச்சயத்தையுடைய இரண்டகங்காரமும், சீவன்முத்தர்பாலிருந்து - சீவர்முத்தர்களிடத்திலிருந்து, ஈடேற்றி - கரையேற்றி, துன்னருமுத்திநல்கும் - அடைதற்கரிய மோட்சத்தைக் கொடுக்கும், சுழல்வுறுபந்தநல்கா - சுழலுகின்றபந்தத்தை கொடுக்கமாட்டாது.

எ - து. நெல்வால் நுனியினுஞ் சூட்சுமமாகியும் சகலவுலகங்களுக்குப் புறம்பாகியும், எப்பொழுதும் நிலையாயிருக்கின்றோ மென்று கொள்ளப்பட்ட ஞானமே இரண்டாவதாகிய அகங்காரமாகும். இந்த நிச்சயத்தையுடைய இரண்டகங்காரமும் சீவன் முத்தர்களிடத்திலிருந்து கறையேற்றி அடைதற்கரிய மோட்சத்தைக் கொடுக்கும். சுழலுகின்ற பந்தத்தைக் கொடுக்கமாட்டாது—எ-ம்.

இ-ம். இவ்விரண்டு அகங்காரமும் மோட்சமடைவதற்குச் சகாயமாமென்பதாம். (12)

## மூன்றும் அகங்கார இலக்கணம் அறிவித்தல்.

காசா ணாதி மட்டா னானிவ னென்று காணுந்
திறமது தானே மூன்று மகங்காரஞ் செகத்தோர்க் கெல்லாம்
உரியதா மிகவும் பொல்லா துற்பவ மென்னு நச்சு
மரமெழு மூல மாகும் வருந்தியு மொருக்கவேண்டும்.

இ - ள். இவனான் - இப்படிப்பட்ட யான், காசாணாதிமட்டாம் - பாணி பாதாதிகளாகிய சரீரமாத்திரமாம், என்றுகாணும் - என்றறிகின்ற, திறமதுதானே - உறுதியே, மூன்றுமகங்காரம் - மூன்றாவது அகங்காரமாம், செகத்தோர்க்கெல்லாம் - உலகத்திலுள்ள அனைவர்க்கும், உரியதாம் - உரித்தாகும், மிகவும்பொல்லாது - மிகவுங்கொடியது, உற்பவமென்னும் - சனனமென்கின்ற, நச்சுமரமேழுமூலமாகும் - விடவிருட்சம் வளர்தலுக்குக் காரணமாம், வருந்தியும், வருத்தமுற்றாவது, ஒருக்கவேண்டும் - (இதனைக்) கெடுக்கவேண்டும்-எ-று.

ஏ - து. இப்படிப்பட்ட யான் பாணிபாதாதிகளாகிய சரீரமாத்திரமாம். என்றறிகின்ற உறுதியே மூன்றாவது அகங்காரமாம். உலகத்திலுள்ள அனைவர்களுக்கும் உரித்தாகும் மிகவுங் கொடியது. சநந மென்கின்ற விடவிருட்சம் வளர்தலுக்குக்காரணமாம். வருத்தமுற்று வதுஇதனைக் கெடுக்கவேண்டும்—எ-ம். (13)

## இவ் வகங்காரத்தைக் கெடுக்கும் உபாயம் அறிவித்தல்.

கொடிதிது கொடிது சாலக் கொடிதிதன் கொடுமை யாலே
முடிவறு முயிர்க ளெல்லா மோகமுற் றறிவு கெட்டார்
கடிதிலவ் விரண்டி னாலுங் கடிந்திதெவ் வளவு விட்டாய்
படிவுறவ் வளவே யெய்தும் பரமமாந் தற்ப தார்த்தம்.

இ - ள். இதுகொடிதுகொடிது - கொடியதுகொடியது, சாலக்கொடிதிது - மிகவுங்கொடியது, இதன்கொடுமையால் - இவ்வகங்காரத்தின் கொடுமையினால், முடிவறுமுயிர்களெல்லாம் - அளவற்ற ஆத்மாக்களனைத்தும், மோகமுற்று - மயக்கத்தையடைந்து, அறிவுகெட்டார்-அறிவிழந்தார்கள், கடிதில்-சீக்கிரத்தில், அவ்விரண்டினாலும்-(முன்சொன்ன) அவ்விரண்டகங்காரங்களாலும், கடிந்து - (இந்தமூன்றாவதான அகங்காரத்தைக்)கெடுத்து, இதெவ்வளவு விட்டாய்-இதை எவ்வளவு நீங்கினையோ, படிவுறவ்வளவே-பொருந்த அவ்வளவே, பரமமாந்தற்பதார்த்தம் - மேலான பிரமவஸ்துவானது, எய்தும்-வரும்.

எ - து. கொடியது கொடியது மிகவுங்கொடியது. இவ்வகங்காரத்தின் கொடுமையினால் அளவற்ற ஆக்மாக்கள் அனைத்தும் மயக்கத்தை யடைந்து அறிவிழந்தார்கள். சீக்கிரத்தில் முன்சொன்ன அவ்விரண்டகங்காரங்களாலும் இந்தமூன்றாவதான அகங்காரத்தைக்கெடுத்து இதை யெவ்வளவு நீக்கினையோ பொருந்த அவ்வளவே மேலான பிரமவஸ்து வானதுவரும்—எ-ம்.

இ-உ-க-ம். இவ்வகங்காரஞ் சநந மரணத்தைக் கொடுக்குமென்று அறிந்திதை அவ்விரண்டகங்கார ஞானத்தாற் கெடுப்பதே யுத்தியென்பதாம். (14)

## அகங்காரங்கள் நீங்கின இடத்து உதிக்கும் பயன் உரைத்தல்.

ஏற்றமா மகங்கா ரங்க ளிரண்டினாற் பரம மெய்தி
ஊற்றமா மகற்றை நீங்கி யோரகங் காமு மின்றி
ஆற்றலா னிற்றி யென்னி லறவுயர் பதம தாகுந
தோற்றுட னொனை னுமைக் சுருதிகள் சொல்லு முத்தி.

இ - ள். ஏற்றமாம் - மேலாகிய, அகங்காரங்களிரண்டினுல்- இரண்டு அகங்காரங்களினல், பரமமெய்தி - பிரமத்தையடைந்து, ஊற்றமாம் - மேலாகிய, அவற்றைநீங்கி - அவ்விரண்டு அகங்காரங்களேயுந்தள்ளி, ஓரகங்காரமு மின்றி - மூன்ருவதான ஓரகங்காரமுமில்லாமல், ஆறலாணிற்றியென்னில்-உறுதியாக நிற்பாயாகில், அது - அந்நிலேயே, அறவுயர் பதமதாகும் - முதிர்ந்த பிரமபதமாம், தோற்றுடல் - தோற்றுகின்ற சரீரத்தை, நானெனுமை - நானென்று சொல்லாமையே, சுருதிகள் சொல்லுமுத்தி-வேதங்கள் முறையிடுகின்ற நிருவாணமாம்-எ-று.

எ – து. மேலாகியஇரண்டகங்காரங்களினுல் பிரமத்தைஅடைந்து மேலாகிய அவ்விரண்டகங்காரங்களேயுந் தள்ளி மூன்ருவதான ஓரகங்காரமுமில்லாமல் உறுதியாக நிற்பாயாகில் அந்நிலேயே முதிர்ந்த பிரமபதமாம். தோற்றுகின்ற சரீரத்தை நானென்று சொல்லாமையே வேதங்கள் முறையிடுகின்ற நிருவாணமாம்—எ-ம்.

இ-ம். தேகத்தை நானென்பது ஒன்றும் பிரமத்தை நானென்பது இரண்டும் ஆகிய மூன்றுங் கரைந்தாற் ருன்மாத்திரமான மோட்சலாபம் உண்டாமென்பதாம். (15)

## இவ்வனுபவம் அறிவிக்க திருஷ்டாந்தம் அறிவிக்கத் தொடங்கல்.

---

இதனியல் புரைக்கக் கேண்முன் னிசைத்துள தாமன் முன்னோர்
அதமுற மடிந்தபின்ன ரஜேயசம் பரன்வே கித்து
மதமுறு மிமையோர் சேஜே வதஞ்செய்வா னுபாயந் தன்ஜே
விதமுற விஜேய வாறு நிஜேந்தனன் விஞ்சை வல்லான்.

இ - ள். இதனியல்பு-இவ்வகங்காரங்களின் குணத்தை, உரைக்கக்கேள்- சொல்லக்கேட்பாய், முன்னிசைத்துள - முன்சொல்லியிருக்கின்ற, தாமன்முன்னோர் - தாமன் முதலிய அசுரர்கள், அதமுறமடிந்தபின்னர் - அதமாகநசித்தபின்பு, விஞ்சைவல்லான் - மாயாவித்தையில்வல்லமையுள்ளவனை, அஜேயசம்பரன்வேகித்து - அச் சம்பராசுரனவன் கோபித்து, மதமுறுமிமையோர்சேஜே - செருவித்திருக்கின்ற தேவர்கள்சேனேயை, அதஞ்செய்வான் -கொல்லும்பொருட்டு, உபாயந்தன்ஜே-தந்திரத்தை, விதமுற-நாநாவிதமாக, இஜேயவாறு - இந்தப் பிரகாரம், நிஜேந்தனன் - சிந்தித்தான்-எ-று.

எ - து. இவ்வகங்காரங்களின் குணத்தை சொல்லக்கேட்பாய். முன்சொல்லியிருக்கின்ற தாமன் முதலிய அசுரர்கள் அதமாக நசித்தபின்பு மாயாவித்தையில் வல்லமையுள்ளவனை அச் சம்பராசுரனவன் கோபித்து செருவித்திருக்கின்ற தேவர்கள்

சேனையைக் கொல்லும்பொருட்டுத் தந்திரத்தை நாநாவிதமாக இந்தப்பிரகாரம் சிந்தித்தான்—எ-ம். (16)

## விவேகிகளைச் சிருஷ்டிக்க நினைத்தல்.

தானவ ரெனமுன் னாஞ்செய் தாமனை முதலா மூவர்
ஞானமில் லாமை யாலே நானென தென்று பொய்யாய்
வானவர் போரின் மாண்டார் மற்றினி ஞான நன்னூற்
போனவர் விவேகத் தோராய் புணர்ந்தமா யத்தாற் செய்வேன்.

இ-ள். தானவரென - அசுரர்களென்று சொல்லும்படி, முன்னாஞ் செய் - முன்பியாஞ் சிருஷ்டித்த, தாமனைமுதலா மூவர் - தாமன்முதலிய மூவர்களும், ஞானமில்லாமையால் - ஆத்மஞான மின்மையால், நானெனதென்று - யானெனதென்று, பொய்யாய் - அசத்தியத்தை யுடையவர்களாய், வானவர் போரின் மாண்டார் - தேவர்கள் யுத்தத்தி லிறந்தார்கள், மற்றினி - ஆகையாலினிமேல், ஞான நன்னூற்போனவர் - ஆத்மஞான சாஸ்திரத்தில் தெளிந்தவர்களாகவும், விவேகத்தோராய் - ஞானத்தை யுடையவர்களாகவும், புணர்ந்த மாயத்தால் - பொருந்திய (எனது) மாயையினால், செய்வேன் - சிருஷ்டிப்பேன்-எ-று.

எ—து. அசுரர்களென்று சொல்லும்படி முன்பியாஞ் சிருஷ்டித்த தாமன் முதலிய மூவர்களும் ஆத்மஞானமின்மையால் யானெனதென்று அசத்தியத்தை உடையவர்களாய் தேவர்கள் யுத்தத்தி லிறந்தார்கள். ஆகையால் இனிமேல் ஆத்மஞான சாஸ்திரத்தில் தெளிந்தவர்களாகவும், ஞானத்தையுடையவர்களாகவும், பொருந்திய எனது மாயையினால் சிருஷ்டிப்பேன்—எ-ம். (17)

## விவேகிகள் உதித்தல்.



மெய்யுணர் வுறுத லாலே வெறும் பொய்யா மகங்கா ரத்தில்
நையுறா விண்ணோர் சேனை நலிவுற வெல்வ ரென்று
மையுறா மனத்தி னெண்ணி மாயையா லவரைச் செய்தான்
மொய்யுறு வேலை தந்த மொக்குள்போன் மூவர் வந்தார்.

இ-ள். மெய்யுணர்வு - சத்திய ஞானம், உறுதலால் - பொருந்துகின்றதினால், வெறும்பொய்யா மகங்காரத்தில - முழுது மித்தையாகிய அகம்பாவத்தினால், நையுறார் - கெடமாட்டார்கள், விண்ணோர்சேனை - தேவர்களுடைய சேனையை, நலிவுற வெல்வரென்று - கெடும்படி செயிப்பார்கள் என்று, மையுறா மனத்தினெண்ணி - களங்கமற்ற மனதிற் சிந்தித்து, மாயையாலவரைச்

செய்தான் - மாயையினால் அவர்களையுண்டாக்கினான், மொய்யுறுவேலைதந்த - (பூமியைச்) சூழ்ந்திருக்கின்ற சமுத்திரத்தி லுண்டாகப்பெற்ற, மொக்குள் போல் - குமிழியைப்போல, மூவர்வந்தார் - மூன்றுபேருண்டானார்கள்-எ-று.

எ – து. சத்திய ஞானம் பொருந்துகின்றதினால் முழுது மித்தையாகிய அகம்பாவத்தினால் கெடமாட்டார்கள். தேவர்களுடைய சேனையைக் கெடும்படி செயிப்பாராகளென்று களங்கமற்ற மனதிற் சிந்தித்து மாயையினால் அவர்களை யுண்டாக்கினான். பூமியைச் சூழ்ந்திருக்கின்ற சமுத்திரத்தில் உண்டாகப்பெறற குமிழியைப்போல மூன்றுபேர் உண்டானார்கள்—எ-ம். (18)

## அந்த விவேகிகள் இயல்பைக் கூறல்.

அனைத்தையு மறிந்தோர் தம்மை யறிவென வறிவாற் கண்டோர்
வினைத்தொட ரிலாதோ ரொன்றின் விருப்பமும் வெறுப்புமில்லோர்
நினைதருள நிகழ்கா லத்தி லெய்திய நிலையி னிற்போர்
தினைத்துணை யெனினு மைய மிலாதவர் தெளிவு சான்றோர்.

இ - ள். அனைத்தைய மறிந்தோர் - சகலத்தையும் அறிந்தவர்களும், தம்மையறிவென - தங்களை ஞானவடிவமென்று, அறிவாற் கண்டோர் - ஞானத்தினாற் கண்டவர்களும், வினைத்தொட ரிலாதோர் - (சஞ்சித) வினைத்தொடர் பில்லாதவர்களும், ஒன்றின் விருப்பமும் வெறுப்பு மில்லோர் - ஒருவஸ்துவில் ராகத்துவேஷ மில்லாதவர்களும், நினைத்துள நிகழ்காலத்தில் - நினைக்கப்பட்ட வர்த்தமான காலத்தில், எய்திய நிலையினிற்போர் - அடைந்த ஸ்திதியி லிருப்பவர்களும், தினைத்துணையெனினும் - தினையளவாயினும், ஐயமில்லாதவர் - சந்தேகமில்லாதவர்களும், தெளிவு சான்றோர் - தெளிவுள்ளவர்களும்—எ-று.

எ - து. சகலத்தையும் அறிநதவர்களும், தங்களை ஞானவடிவமென்று ஞானத்தினாற் கண்டவர்களும, சஞ்சித வினைத்தொடர்பில்லாதவர்களும், ஒரு வஸ்துவில ராகத்துவேஷ மில்லாதவர்களும், நினைக்கப்பட்ட வர்த்தமானகாலத்தில் அடைந்த ஸ்திதியிலிருப்பவர்களும், தினையளவாயினும் சந்தேகமில்லாதவர்களும தெளிவுள்ளவர்களும்—எ-ம். (19)

## தேவர்களிடத்து அசுரர்சென்று யுத்தஞ்செய்தல்.

பேரினால் வீமன் பாசன் றிடனெனப் பிரிக்கப் பட்டோர்
சீரினு லுலகை யெல்லாந் திரணமாய்த் தேருஞ் சுத்தர்
போரிலே போமி னென்று சம்பரன் புகலப் போகி
நேரிலா வமர ரோடு நெடுஞ் சமர் புரிய லுற்றார்.

இ - ள். பேரினால் - நாமத்தினால், வீமன் - வீமனென்றும், பாசன் - பாசனென்றும், திடனென - திடனென்றும், பிரிக்கப்பட்டோர் - பிரிவாகச் சொல்லப்பட்டவர்களும், சீரினுலகையெல்லாம் - (தங்கள்) செல்வத்தினாற் சகங்களனைத்தையும், திரணமாய்த்தேருஞ் சுத்தர் - துரும்பாயறிகின்ற பரிசுத்தர்களுமாகிய (இவர்களை), போரிலே போமினென்று - (தேவ) யுத்தத்திற் போங்களென்று, சம்பரன் புகலப்போகி - சம்பராசுரன் சொல்லப்போய், நேரிலாஅமரரோடும் - ஒப்பற்ற தேவர்களுடன், நெடுஞ்சமர் புரியலுற்றார் - பெரிதாகிய யுத்தத்தைச் செய்யத்தொடங்கினார்கள் — எ-று.

எ - து. நாமத்தினால் வீமனென்றும், பாசனென்றும், திடனென்றும், பிரிவாகச் சொல்லப்பட்டவர்களும் தங்கள் செல்வத்தினாற் சகங்களனைத்தையும் துரும்பாயறிகின்ற பரிசுத்தர்களுமாகிய இவர்களை தேவயுத்தத்திற் போங்களென்று சம்பராசுரன் சொல்லப்போய், ஒப்பற்ற தேவர்களுடன் பெரிதாகிய யுத்தத்தைச்செய்யத் தொடங்கினார்கள்—எ-ம். (20)

## அநாத்மதிருஷ்டிவரினும் அதைநீக்கிநிற்றல்.

எண்ணிலா வருடம் வெம்போ ரியற்றின ரிவர்க ணெஞ்சிற்
றுண்ணென வெனதி யானுந் தோற்றா வுதித்த போது
நுண்ணறி வாலே யாமா றென்றுற நோக்க லோடும்
புண்ணிய மிலாதோர் வாழ்வு போலது பொய்யாய்ப் போகும்.

இ - ள். எண்ணிலாவருடம் - அளவில்லாத வருஷம், வெம்போரியற்றினர் - கொடிதாகிய யுத்தத்தைச்செய்தார்கள், இவர்கணெஞ்சில் - இவர்களுடைய மனதில், துண்ணென - துணுகென்று, எனதியானும் - யானெனதென்னும், தோற்றாவுதித்தபோது - தோற்றமுண்டானபொழுது, நுண்ணறிவால் - சூட்சும (விசார) ஞானத்தினால், யாமாறென்று - நாமெப்படிப்பட்டவனென்று, உறநோக்கலோடும் - நன்றாகப்பார்க்கவும், புண்ணியமிலாதோர் - தருமமில்லாதவர்களது, வாழ்வுபோல - செல்வம்போல, அது பொய்யாய்ப்போகும் - அந்த யானெனது என்னுந் தோற்றமானது அசத்தியமாய்ப் போம் — எ-று.

எ — து. அளவில்லாத வருஷம் கொடிதாகிய யுத்தத்தைச்செய்தார்கள். இவர்களுடைய மனதில் துணுக்கென்று யானெனது என்னும் தோற்றமுண்டானபொழுது சூட்சும விசாரஞானத்தினால் நாமெப்படிப்பட்டவனென்று நன்றாகப்பார்க்கவும் தருமமில்லாதவர்களது செல்வம்போல அந்த யானெனது என்னுந் தோற்றமானது அசத்தியமாய்ப்போம்—எ—ம். (21)

## அவர்கள் அனுபவதிருஷ்டியைக் கூறல்.

பன்மையாம் விசாரத் தாலே படாகங் கார மற்றோர்
சன்மமே மரண மேயென் றஞ்சுறு சலிப்பி லாதோர்
நின்மல ரெளிதின் வந்த பொருள்கொள்வோர் நிகழ்ந்த வெல்லாந்
தொன்மையா நவமாங் கண்ணாற் றுகளறச் சமமாய்க் காண்போர்.

இ-ள். பன்மையாம் - பலவிதமாகிய, விசாரத்தால் (ஆத்ம) விசாரணையினால், படாகங்காரமற்றோர் - விரிந்த அகங்காரம் இறந்தவர்கள், சென்மமே மரணமேயென்று - பிறப்பிறப்புகள் வருமேயென்று, அஞ்சுறு சலிப்பிலாதோர் - பயப்படுஞ் சலனமில்லாதவர்கள், நின்மலர் களங்கமற்றவர்கள், எளிதின் வந்தபொருள்கொள்வோர் - எளிதாய்க் கிடைத்தபொருளைக் கிரகிப்பவர்கள், நிகழ்ந்தவெல்லாம் (இப்பொழுது) நடந்தவனைத்தும், தொன்மையாம் - பழமையாகிய, நவமாங்கண்ணால் - புதுமையாகிய (ஞான) திருஷ்டியினால், துகளறச் சமமாய்க்காண்போர் - குற்றமறச் சமமாகப் பார்ப்பவர்கள்.

எ-து. பலவிதமாகிய ஆத்மவிசாரணையினால் விரிந்த அகங்காரம் இறந்தவர்கள் பிறப்பிறப்புகள் வருமேயென்று பயப்படுஞ் சலனமில்லாதவர்கள், களங்கமற்றவர்கள் எளிதாய்க் கிடைத்த பொருளைக் கிரகிப்பவர்கள் இப்பொழுது நடந்தவனைத்தும் பழமையாகிய புதுமையாகிய ஞானதிருஷ்டியினால் குற்றமறச் சமமாகப்பார்ப்பவர்கள்—எ-ம். (22)

## தேவர்கள்பயம் அடைதல்.

ஆதலால் வீர ரான வவர்களா லமரர் சேனை
காதலாற் புசித்து மாய்க்குங் காமுகர் செல்வம் போலப்
போதலே புரிந்து திக்கிற் போயொளித் துலக முண்ட
மாதவா சரண மென்றே மாயனைச் சேர்ந்த தன்றே.

இ-ள். ஆதலால் - ஆகையினால், வீரரான-சூரர்களாயிருக்கின்ற, அவர்களால் - அந்தப்பீமாதிகளால், அமரர்சேனை - தேவர்சேனையானது, காதலால் - ஆசையினால், புசித்துமாய்க்கும் - புசித்துத்துலைக்கின்ற, காமுகர் செல்வம்போல - காமிகளது செல்வத்தைப்போல, போதலேபுரிந்து - ஓடிப்போதலையே விரும்பி, திக்கிற்போயொளித்து - திசைகளிற்போய் மறைந்து, உலகமுண்டமாதவா - பூமியைப்புசித்த திருமாலே, சரணமென்று - அபயமென்று, மாயனைச்சேர்ந்தது - விஷ்ணுவிடத்திற்போ யடைந்தது எ-று.

எ-து. ஆகையினால் சூரர்களாயிருக்கின்ற அந்தப் பீமாதிகளால் தேவர் சேனையானது ஆசையினால் புசித்துத் துலைக்கின்ற

காமிகளது செல்வத்தைப்போல ஓடிப்போதலேயே விரும்பித்திசை களிற்போய் மறைந்து பூமியைப்புசித்த திருமாலே அபயமென்று விஷ்ணுவிடத்திற்போய் அடைந்தது—எ-ம். (23)

## அவர்கள் ஆத்மசித்தி அடைதல்.

அடைக்கலம் புகுந்த வானோர்க் கஞ்சலென் றபயநல்கி
விடைத்துவந் தமரின் மோதும் விண்டுவோ டரும்போர் செய்து
படைக்கல நேமியேவ பாய்கன றீய்க்கத் தீய்ந்து
தொடைத்துழாய் மார்பன் வாழுந் தூயவை குந்தம் புக்கார்.

இ - ள். அடைக்கலம்புகுந்த - சரணுநெகதியென்றடைந்த, வானோர்க்கு - தேவர்களுக்கு, அஞ்சலென்று - பயப்படா (திருங்கள்) என்று, அபயநல்கி - அபயங்கொடுத்து, விடைத்துவந்து - கோபித்துவந்து, அமரின் மோதும் - யுத்தகளத்திலடிக்கின்ற, விண்டுவோடு - விஷ்ணுவோடும், அரும்போர் செய்து - அரிதாகிய யுத்தத்தைச்செய்து, படைக்கல நேமியேவ - சக்கராயு தத்தை அனுப்ப, பாய்கனறீய்க்கத்தீய்ந்து - (அதினின்றும்) பாயப்பட்ட அக்கினிச்சுவாலை யெரிக்க எரிந்து, தொடைத்துழாய் மார்பன் - துளபமாலை யையணிந்த மார்பையுடையவிஷ்ணு, வாழும் - வாழுகின்ற, தூய வைகுந்தம் புக்கார் - மேலானவை குந்தத்தை யடைந்தார்கள்—எ-று.

எ—து சரணுகெதியென்று அடைந்த தேவர்களுக்குப் பயப் படாதிருங்களென்று அபயங்கொடுத்துக் கோபித்துவந்து யுத்தகள த்தில் அடிக்கின்ற விஷ்ணுவோடும் அரிதாகிய யுத்தத்தைச்செய்து சக்கராயுதத்தை அனுப்ப அதினின்றும் பாயப்பட்ட அக்கினிச் சுவாலையெரிக்க எரிந்து துளபமாலையையணிந்த மார்பையுடைய விஷ்ணுவாழுகின்ற மேலான வைகுந்தத்தை யடைந்தார்கள்—எ-ம்.

(இ-கூ-க-ம்.) சம்பராசுரனது பிரமத்தியானத்திலுதித்த வீமாதிகள் என்னும் விவேகிகள் யுத்தத்திலுந் திரிசியத்தில் அகம்பாவமின்றித் திருக்கு வாதவேயிருந்து முடிவில் வியாபக சாட்சாத்காரமென்னு ஞானப் பிரகாசத் திற் கலந்தனரென்று அறிவித்ததாம். (24)

## மனோசஞ்சலம் நீக்கத்தை அறிவித்தல்.

மற்றினி யிந்த வாற்றால் வாதனை யாலே பந்தம்
பற்றுறு மதனை நீங்கிற் பந்தம்போம் விவேகத் தாலே

உற்றறி யுண்மை யாலே யுபாதிவா தனைபோம் போனல்
அற்றமில் சித்த நெய்தீர் தீபம்போ லாகு மன்றே

இ - ள். மற்றினியிந்தவாற்றல் - மேலிந்தப் பிரகாரத்தினல், வாதனையால் - வாசனையினல், பந்தம்பற்றறும் - பாசமானது பிடித்துக்கொள்ளும், அதனைநீங்கில் - அவ்வாதனையை நீங்கினல், பந்தம்போம் - பாசமானது நீங்கும், விவேகத்தால் - விவேகஞானத்தால், உற்றறி - இராமா நீ நன்ருயறிவாய், உண்மையால் - (அப்படியறிகின்ற) தத்துவத்தினல், உபாதிவாதனை போம் - உபாதியாகிய வாசனுட்சயம்வரும், போனல் - வாசனுட்சயம்வந்தால், அற்றமில் சித்தம் - அச்சமற்ற மனமானது, நெய்தீர் தீபம்போல் - நெய்யில்லாத தீபத்தைப்போல, ஆகும் - (உபசாந்த) மாகும் —எ-று.

எ - து. மேலிந்தப் பிரகாரத்தினல் வாசனையினல் பாசமானது பிடித்துக்கொள்ளும் அவ்வாதனையை நீங்கினல் பாசமானது நீங்கும். விவேகஞானத்தால் இராமா நீ நன்ருயறிவாய். அப்படி அறிகின்ற தத்துவத்தினல் உபாதியாகிய வாசனுட்சயம்வரும் வாசனுட்சயம்வந்தால் அச்சமற்றமனமானது நெய்யில்லாத தீபத்தைப்போல உபசாந்தமாகும்—எ-ம்.

இ-ம். வாசனையுதித்தலே பந்தமும், அதினிவிர்த்தியே முத்தியுமாதலின் அவ்வகங்கார வாசனையைநீக்கில் ஞானசுகமாய் மனேசஞ்சலநீங்கும் என்பதாம். (25)

வீமபாசநிடர்சுதை முற்றிற்று.

ஆக கதை 15-க்கு கவிதை 631.

---

# தாசூரன் கதை.



அவதாரிகை.

முன்பு அகங்காரத் தியாகம் ஆத்மார்த்தத்தின் பொருட்டாம் என்பதை அறிவித்து, அவ்வாத்ம சங்கற்பத்தால் விளங்கிய சுஸ்திதியை விபரமா யறிவிக்கு நிமித்தந் தாசூரன்கதையை நிரூபிக்கின்ருர்.

## மாயையைக்கெடுக்கும் உபாயம் இயாதெனின்.



ஒழியாத துயர்மாயை யெனுமா பத்தை யொழிக்கமன நாசமோ ருபாய மாகும், இழியாத மெய்ஞ்ஞானப் பொருளை யெல்லாமியம்பக்கேட் டயராம விதபங் கொள்வாய், பழிபான போகத்தினிச்சை தானே பந்தமா மதுவிடலே பரம மாகும், வழியான

பன்னூலாற் பயன்கொ லென்ன வருந்தாம லிவ்வழியே வருதல் வேண்டும்.

இ - ள். ஒழியாத துயர் - நீங்காததுன்பத்தைக் (கொடுக்கின்ற), மாயையெனும் - மாயையென்கின்ற, ஆபத்தையொழிக்க - ஆபத்தைக்கெடுக்க, மனநாசம் - மனோநாசமே, ஒருபாயமாகும் - ஒப்பற்ற தந்திரமாம், இழியாத- குறைவில்லாத, மெய்ஞ்ஞானப் பொருளெல்லாம் - தத்துவ ஞானார்த்தங்களனைத்தையும், இயம்பக்கேட்டு - (நாஞ்) சொல்ல (இராமாநீ) கேட்டு, அயராமல் - மறதியில்லாமல், இதயங்கொள்வாய் - உளத்தில் தரித்துக்கொள்வாய், பழியான போகத்தின் - குற்றமாகிய போகத்தினது, இச்சைதானே பந்தமாம் - ஆசையே பந்தமாகும், அதுவிடலே பரமமாகும் - அவ்விச்சையை விடுவதே பிரமசொரூபமான (மோட்சம்) ஆம், வழியான பன்னூலால்-(இதா) மார்க்கமான பல சாத்திரங்களாலும், பயன்கொலென்ன - பிரயோசனமென்ன, வருந்தாமல் - வருத்தப்படாமல், இவ்வழியே வருதல்வேண்டும் - (இச்சாத் தியாகமுள்ள) இந்த மார்க்கத்திலே வரவேண்டும்--எ-று.

எ - து. நீங்காத துன்பத்தைக் கொடுக்கின்ற மாயையென்கின்ற ஆபத்தைக் கெடுக்க மனோநாசமே ஒப்பற்ற தந்திரமாம். குறைவில்லாத தத்துவ ஞானார்த்தங்கள் அனைத்தையும் நாம் சொல்ல இராமா நீ கேட்டு மறதியில்லாமல் உளத்தில் தரித்துக்கொள்வாய். குற்றமாகிய போகத்தினது ஆசையே பந்தமாகும். அவ்விச்சையை விடுவதே பிரமசொரூபமான மோட்சமாம். இதாமார்க்கமான பல சாத்திரங்களாலும் பிரயோசனமென்ன வருத்தப்படாமல் இச்சாத்தியாகமுள்ள இந்தமார்க்கத்திலே வரவேண்டுமென்பதாம்.

இ-ம். விடய வாசனையுள்ள மனதைக் கெடுத்தலே மாயாநாச வுபாயம் என்பதாம். (1)

## அம் மனது இறக்கும் உபாயம் இயாதெனின்.

---

இன்பமிதா மின்பமிதா மென்ற வெல்லா மெரியெனநெஞ் செனநினைக வேற்றத் தாழ்வாய், துன்புறுபோ கம்பலகாற் றேர்ந்துநெஞ்சிற் றேயாம லெளிதருந்திற் சுகமே யாகும், வன்புபயின் மனத்தோற்ற நாச மாகும் மனத்தினது நாசமே மகத்தாந் தோற்றம், கன்பாம ஞானிகணெஞ் சிறந்து போகு நடைவிலங்கா மறிவிலர்க்கு நவைகூர் நெஞ்சம்.

இ - ள். இன்பமிதா மின்பமிதா வென்றவெல்லாம் - ஈது இன்பமாம் ஈது துன்பமாமென்று சொல்லப்பட்ட அனைத்தையும், எரியென - அக்கினி

யைப்போலவும், நஞ்செனை - விடத்தைப் போலவும், நினைக - (ஸ்ரீராமா) நீ நினைக்கக்கடவாய், ஏற்றத்தாழ்வாய் - உயர்வு தாழ்வாய் (இருக்கின்ற), துன்புறுபோகம் - துன்பமுள்ள போகங்களை, பலகாற்றேர்ந்து - பலகாலும் விசாரித்து, நெஞ்சிற்றோயாமல் - மனதிற் கலவாமல், எளிதருந்தில் - இலேசாக புசித்தால், சுகமேயாகும் - இன்பமாகவேயிருக்கும், வன்புபயில் - வன்மையாகச் சொல்லப்பட்ட, மனத்தோற்றம் - மனதுண்டாகுதலே, நாசமாகும் - (ஆத்ம) நாசமாம், மனத்தினது நாசமே - மனோநாசமே, மகத்தாந்தோற்றம் - மகத்தான (ஆத்ம) உதயமாம், நன்பரமஞானிகள் நெஞ்சிறந்து போகும் - நல்ல பிரமஞானிகளது மனது நாசத்தையடையும், அறிவிலர்க்கு - அஞ்ஞானிகளுக்கு, நவைகூர் நெஞ்சம் - குற்றமிகுந்த மனமானது, நடைவிலங்காம் - கால் விலங்காகும் எ-று.

எ - து. ஈது இன்பமாம் ஈது இன்பமாம் என்று சொல்லப்பட்ட அனைத்தையும் அக்கினியைப்போலவும், விடத்தைப்போலவும், ஸ்ரீராமா நீ நினைக்கக்கடவாய். உயர்வு தாழ்வா யிருக்கின்ற துன்பமுள்ள போகங்களைப் பலகாலும் விசாரித்து மனதிற் கலவாமல் இலேசாகப் புசித்தால் இன்பமாகவேயிருக்கும் வன்மையாகச் சொல்லப்பட்ட மனதுண்டாகுதலே ஆத்ம நாசமாம். மனோநாசமே மகத்தான ஆத்ம உதயமாம் நல்ல பிரம ஞானிகளது மனது நாசத்தையடையும். அஞ்ஞானிகளுக்குக் குற்றமிகுந்த மனமானது கால்விலங்காகும்—எ-ம்.

இ-ம். விடயசுகந் துன்பமென்று அறிவதே மனமிறக்கும் உபாயமென்பதாம். (2)

## ஞானிகள் மனதும் ஆத்மாவிற் சகத்தும் இருக்குந் தன்மை எப்படியெனின்.

---

ஆனந்த நிராநந்த மிரண்டு மில்லை யசைவுமசை வின்மையுமா மவையு மில்லை, ஈனநதீர் சத்தசத்தன் றிவற்றுக் கெல்லா மிடையல்ல ஞானிமன மென்ற லோடுந், தானந்த மிலாவறிவா யுலகின் மேலாந் தத்துவத்தி லுலகிருக்குந் தன்மை தன்னை, ஞானந்தான் வளர்பொருட்டா யுரைப்பா யென்று நாதனியம்பிடவசிட்ட னவில்வ தானன்

இ - ள். ஆனந்தம் - ஆனந்தமும், நிராநந்தம் - ஆனந்தமில்லாததும், இரண்டுமில்லை - இவ்விரண்டு மில்லாதது, அசைவும் - அசைதலும், அசைவின்மையுமாம் - அசைவில்லாததுமான, அவையுமில்லை - அவ்விரண்டும் இல்லாதது, ஈனந்தீர் - குறைவில்லாத, சத்து - சத்தும், அசத்தன்று - அசத்துமல்லாதது, இவற்றுக்கெல்லா மிடையல்ல - இவைகளனைத்திற்கு நடுவுமல்ல, ஞானிமன மென்றலோடும் - ஞானிகள் மனமென்று சொன்ன

மாத்திரத்தில், தானந்தமிலாவறிவாய் - முடிவில்லாத ஆத்மஞானமாகியும் உலகின்மேலாம் - சகதத்துக்கு மேலாகியுமிருக்கின்ற, தத்துவத்தில் - தத்துவ சொரூபத்தில், உலகிருக்குந்தன்மைதன்னை - சகமிருக்கின்றதன்மையை, ஞானந்தான்வளர் பொருட்டான் - அறிவானது வளரும்படியாக, உரைப்பாயென்று - சொல்லுவாயென்று, நாதனியம்பிட - ஸ்ரீராமன்கேட்க, வசிட்டனவில்வதானுன் - வசிட்டமுனி சொல்லத்தொடங்கினுர் -எ-று.

எ - கு. ஆநந்தமும், ஆநந்தமில்லாததும், இவ்விரண்டுமில்லாததும், அசைதலும அசைவில்லாததுமான அவ்விரண்டு மில்லாதது. குறைவில்லாதசத்தும் அசத்துமில்லாதது. இவைகளானெத்திற்குநடுவுமல்ல ஞானிகள் மனமென்று சொன்னமாத்திரத்தில் முடிவில்லாத ஆத்மஞானமாகியும், சகத்துக்கு மேலாகியுமிருக்கின்ற தத்துவசொரூபத்தில் சகமிருக்கின்ற தன்மையை அறிவானது வளரும்படியாகச் சொல்லுவாயென்று ஸ்ரீராமன் கேட்க, வசிட்ட முனி சொல்லத்தொடங்கினுர்—எ—ம்.

ப-ரை. வேறுபட்டாநந்தீயாததென்பார். ஆநந்தமல்லவென்றும், நிரதிசயாநந்த மானதென்பார். நிராநந்தமல்லவென்றும், ஸ்திரமாயிருக்கின்றதென்பார். அசையல்லவென்றும், சித்துல்லாசமாய் விளங்குகின்றதென்பார். அசையாமையல்லவென்றும், உள்ளிலும் புறமிலும்பூரணமாய் விளங்குமென்பார். சத்தசத்துக்கிடையல்ல ஞானி மனமென்றுங்கூறினர்.

இ-ம். ஞானிகள மனது ஒன்றிலும பற்றற்றுத் தன்மயமாய் விளங்குமென்பதாம். (3)

## தத்துவ இலக்கணம அறிவித்தல்.

வேறிலா தெவ்விடத்து மேவிநின்று மேவாம னுண்மையினுல்
வேறும் விண்போற், கூறிலா சிற்பாவ மெங்கு நின்றும கூறபடு மவ
ற்றொன்றுங் கூடிப்பற்றுப், பேறிலாச சங்கற்ப னைத்து மின்றிப்
பேரின்றி யறிவின்றிப் பேதமின்றி, ஊறிலா வாகாயங் கோடி கூறு
வுரிததவற்றி லொருகூற்றை யொப்ப தொய்தாம்.

இ - ள். வேறிலாவது - வேருகாமல், எவ்விடத்து மேவிநின்றும் - எந்த இடங்களிலும் பொருந்தியிருந்தும், மேவாமல் - பொருந்தாமல், நுண்மையினுல் - சூட்சுமத்தினுல், வேறும் விண்போல - வேறுபடுகின்ற ஆகாயத்தைப் போல, கூறிலாச்சிற்பாவம் - வேறுபடாத ஞானசொரூபமானது, எங்கு நின்றும் - எவ்விடத்திலும் பூரணமாக இருந்தும், அவற்றொன்றும் - அவ்வஸ்துக்களில் ஒன்றிலும், கூடிப்பற்று - பொருந்தமாட்டாது, பேறிலாச்சங்கற்பனைத்துமின்றி - பயனின்றிய சங்கற்பங்களியாவுமில்லாத தாகியும், பேரின்றி

நாமமில்லாததாகியும், அழிவின்றி - நாசமில்லாத தாகியும், பேதமின்றி - வேற்றுமையில்லாததாகியும் இருக்கின்ற (ஆத்மஞானமானது), ஊறிலாவாகாயம்- இடையூறில்லாத அம்பரத்தை, கோடிகூறுவுரித்து - நூறு இலக்கம் பங்குசெய்து, அவற்றிலொருகூற்றை - அவைகளில் ஒருபங்குக்கு, ஒப்ப தொய்தாம் - சமானமாகச் சூட்சுமமாம்-எ-று.

எ – து. வேறாகாமல் எந்தவிடங்களினும் பொருந்தி யிருந்தும் பொருந்தாமல் சூட்சுமத்தினால் வேறுபடுகின்ற ஆகாயத்தைப்போல வேறுபடாத ஞானசொரூபமானது எவ்விடத்திலும் பூரணமாகவிருந்தும் அவ்வஸ்துக்களிலொன்றிலும் பொருந்தமாட்டாது. பயனின்றியசங்கற்பங்களியாவு மில்லாததாகியும், நாமமில்லாததாகியும், நாசமில்லாததாகியும், வேற்றுமை யில்லாததாகியு மிருக்கின்ற ஆத்மஞானமானது இடையூறில்லாத அம்பரத்தை நூறு இலக்கம் பங்குசெய்து அவைகளில் ஒருபங்குக்குச் சமானமாகச் சூட்சுமமாம்—எ-ம். (4)

## சத்தே சகத்தாகத் தோற்றுதல்.

---

நன்றிதரு முண்மைமுதற் பெயர்கள் பெற்று ஞானிகள் பானிமலமா ஞானமாகி, ஒன்றுமல வுருவான குடும்பரூப மொன்றாகித் தனைத்தெரிவித் துணர்வே மெய்யாய்த், தன்றனைச்சின் மாத்திரத்துக் கயலற்றிந்தச் சத்தா மாத் திரமயமாஞ் சகங்களெல்லாந், துன்றுதிரை முதலாகப் பிறந்த வெல்லாஞ் சூழ்கடலில் வேறாகாத் தொடர்ச்சி போலாம்.

இ - ள். நன்றிதரும் நன்மையைக்கொடுக்கின்ற, உண்மைமுதல்- ஆத்மா முதலாகிய, பெயர்கள்பெற்றும் - நாமங்களிடப்பெற்றும், ஞானிகள்பால் - ஞானவான்களிடத்தில், நிமலஞானமாகி - நிருமலமாகிய ஞானமாகி, ஒன்றுமலவுருவான - பொருந்தும் அஞ்ஞான சொரூபமாகிய, குடும்பரூபம்-சம்சாரரூபத்தோடும், ஒன்றாகி - ஏகமாயிருந்து, தனைத்தெரிவித்து - தனது ஆத்மசொரூபத்தைத் தெரிவித்துக்கொண்டிருக்கின்ற, உணர்வே மெய்யாய் - ஞானமே சத்தியமாய், தன்றனை - தனக்குத்தானேயொப்பா யிருக்கின்ற, சின்மாத்திரத்துக்கயலற்று - ஞானமாத்திரத்துக்கு வேறில்லாமல், இந்தச்சத்தா மாத்திர மயமாம் - இச்சத்தாமாத்திரமே ஆகாரமாயிருக்கின்ற, சகங்களெல்லாம் - உலகங்களனைத்தும், துன்றுதிரை முதலாக - நெருங்கிய அலைகள்முதலாக, பிறந்தவெல்லாம் - உண்டாகியசகலமும், சூழ்கடலில் -சூழ்ந்திருக்கின்ற சமுத்திரத்தில், வேறாகாத் தொடர்ச்சிபோலாம் - வேறுபடாமல் தொடர்ந்து நின்றதுபோலவாம்—எ-று,

எ - து. நன்மையைக் கொடுக்கின்ற ஆத்மாமுதலாகிய நாமங்களிடப்பெற்றும், ஞானவான்களிடத்தில் நிருமலமாகிய ஞானமாகிப் பொருந்தும் அஞ்ஞான சொரூபமாகிய சம்சாரரூபத்தோடும் ஏகமாயிருந்து தனது ஆத்ம சொரூபத்தைத் தெரிவித்துக்கொண் டிருக்கின்ற ஞானமே சத்தியமாய் தனக்குத்தானே யொப்பாயிருக்கின்ற ஞானமாத்திரத்துக்கு வேறில்லாமல் இச் சத்தாமாத்திரமே ஆகாரமாயிருக்கின்ற உலகங்களனைத்தும் நெருங்கிய அலைகள் முதலாக உண்டாகிய சகலமும் சூழ்ந்திருக்கின்ற சமுத்திரத்தில் வேறுபடாமல் தொடர்ந்து நின்றதுபோலவாம்—எ-ம். (5)

## சித்து எவர் எவர்க்கு எப்படியோ அப்படியே இருக்குமெனல்.

துனைதருபல் பிறப்பாகிக் கொடியதாய்ப் பொல்லாச் சுபாவமாந் தனையறியாச் சுமடர்க் கென்றுந், தனையறிந்தோர்க் கொளியுருவா யெல்லா மொன்றாய்த் தானாகு மனுபவிக்குந் தன்மை யாலே, நினைவொடுசெய் வோன்செய்கை செயலிம் மூன்று நிகழ்விக்கும் பாவித்த நினைவுக் கெல்லாம் அனையசுவை யாய்நிற்கும் பிறவிப்போக மருந்துவோர்க் கப்போக மாகிநிற்கும்.

இ - ள். தனையறியாச்சுமடர்க்கு - ஆத்மாவையறியாத மூடர்களுக்கு, துனைதருபல்பிறப்பாகி - துன்பத்தைக் கொடுக்கின்ற நானாவிதமாகிய சநநமாகியும், கொடிதாய் - கொடிதாகியும், பொல்லாச்சுபாவமாம் - ஈனத்தன்மையாகியு மிருக்கும், என்னுந்தனை யறிந்தோர்கரு - எப்பொழுதுந் தனதுசொரூபத்தைத் தெரிந்தவர்களுக்கு, ஒளியுருவாய் - ஞானப்பிரகாசமாகியும், எல்லா மொன்றாய் - சகலமும் ஏகமாகியும், தானாகவனுபவிக்குந் தன்மையால்-தானாகவே அனுபவியாநின்ற சுபாவத்தினால், நினைவொடு - கருத்துடன், செய்வோன் - கருத்தாவும், செய்கை - கருவியும், செயலிம்மூன்றும் - தொழிலுமாகிய இம்மூன்றையும், நிகழ்விக்கும்-பிரகாசிக்கும், பாவித்த நினைவுக்கெல்லாம்-பாவனைசெய்த நினைவுகளனைத்திற்கும், அனையசுவையாய் நிற்கும் - அந்த ரசமாகவேயிருக்கும், பிறவிப்போக மருந்துவோர்க்கு - பவச்செல்வத்தை அனுபவிப்பவர்களுக்கு, அப்போகமாகிநிற்கும் - அந்தப்போகமாகவே யிருக்கும்.

எ - து. ஆத்மாவை யறியாத மூடர்களுக்குத் துன்பத்தைக் கொடுக்கின்ற நானாவிதமாகிய சநநமாகியும், கொடிதாகியும், ஈனத்தன்மையாகியுமிருக்கும். எப்பொழுதுந் தனது சொரூபத்தைத் தெரிந்தவர்களுக்கு ஞானப்பிரகாசமாகியும், சகலமும் ஏகமாகியும், தானாகவே அனுபவியாநின்ற சுபாவத்தினால் கருத்துடன் கருத்தாவும், கருவியும், தொழிலுமாகிய இம்மூன்றையும் பிரகாசிக்கும் பாவனைசெய்த நினைவுகள் அனைத்திற்கும் அந்தரசமாகவே யிருக்கும்.

பவச்செல்வத்தை அநுபவிப்பவர்களுக்கு அந்தப்போகமாகவேயிரு க்கும்—எ-ம். (6)

## சகலமும் சிற்பிரகாசமாகவே விளங்குதல்.

அத்தமன முதயமில்லை யெழுத னிற்ற லயல்போதல் வருதலெ னு மனைத்து மில்லை, இத்தலத்தி லில்லையா திருக்க வில்லை யித்திறமா ஞ் சித்துமல மில்லா மெய்யாய்ச், சுத்தமுறு தானேதன் னிடத்தி னிற்குஞ் சொன்னநெறி யேசகமாய்ச் சொல்பே ராலே, மெத்தவெ கு ரூபமாந் தற்சு பாவம் விரிந்தெங்குஞ் சிற்பெயரால் விளங்கி நிற் கும்.

இ-ள். அத்தமனமுதயமில்லை - உதயாத்தமானம் இல்லாததாகியும்-எழு தனிற்றல் - எழுகின்றதும் நிற்கின்றதும், அயல்போதல்வருதலெனும் - பக்க த்திற் போதலும்வருதலுமென்கின்ற, அனைத்துமில்லை - சகலமுமில்லாததாகி யும், இத்தலத்தில் - இவ்விடத்தில், இல்லையிலாதிருக்கவில்லை - இல்லாததா கியு மிருப்பதாகியுமிருக்கின்ற, இத்திறமாஞ்சித்து-இக்குணங்களையுடையஞா னமானது, மலமில்லாமெய்யாய் - களங்கமில்லாத வடிவமாய், சுத்தமுறுதா னே - பரிசுத்தமாகிய ஆத்மாவே, தன்னிடத்தினிற்கும் - ஞானாத்மாவினிட த்திலிருக்கும், சொன்னநெறியே — இப்பொழுதுசொல்லிய மார்க்கமே, சக மாயச்சொல்பேரால் - உலகமென்று சொல்லப்பட்ட நாமத்தினால், மெத்தவெ குரூபமாம் - மிகவுநாநாவித வடிவமாகும், தற்சுபாவம்விரிந்து - தனதுசத்தி வியாபித்து, எங்குஞ் சிற்பெயரால் விளங்கி நிற்கும் - எவ்விடத்தும் ஞானமெ ன்னு நாமத்தால் ஒளிரும்—எ-று

எ - து. உதயாத்தமானம் இல்லாததாகியும், எழுகின்றதும், நிற் கின்றதும், பக்கத்திற்போதலும் வருதலுமென்கின்ற சகலமு மில் லாததாகியும், இவ்விடத்தில் இல்லாததாகியு மிருப்பதாகியு மிருக்கி ன்ற இக்குணங்களையுடைய ஞானமானதுகளங்கமில்லாத வடிவமாய் பரிசுத்தமாகிய ஆத்மாவேஞானாத்மாவி னிடத்திலிருக்கும். இப்பொ ழுது சொல்லியமார்க்கமே உலகமென்று சொல்லப்பட்ட நாமத்தி னால் மிகவு நாநாவிதவடிவமாகும். தனது சத்தி வியாபித்து எவ்விட த்தும் ஞானமென்னுநாமத்தால் ஒளிரும்—எ-ப.

(இ-௬-க-ம்.) தத்துவ விலாசத்தைக் கிரமமாய் அறிவித்ததாம். (7)

## சித்தில் சகத்திருப்பதை அறிவிக்கத்தொடங்கல்

இன்னசுபா வந்தானே யொளியா நிற்கு மிருளாகு மொன்றாகு மீறில் கூறாந், தன்னுடைய தொழிலாலே தானே பூர்ண தத்துவம்

விட் டிவனவனு னென்னுந் தன்மை, உன்னியபா வனையாலே மெள் ளச் சீவ னுருவாகிக் குடும்பியெனு மூகத்தாலே, பன்னியநா நாத்து வத்தி லழுந்திப் பாவா பாவம்பற் றுதல்விடலாம் பதத்தி னிற்கும்.

இ - ள் இன்னசுபாவந்தான் - இத்தன்மையானது, ஒளியாய் - பிரகாச மாகியும், நிற்குமிருளாகும் - நிற்கின்ற அந்தகாரமாகியும், ஒன்றாகும் - ஏகமாகி யும், ஈறில்கூறாம் - அநேகமாகியு மிருக்கின்ற, தன்னுடைய தொழிலால் தன துசெய்கையினால், தானேபூர்ணதத்துவம்விட்டு - தானே பூரணஞான தத் துவசொரூபத்தைவிட்டு, இவன் - இவனென்றும், அவன் - அவனென்றும், நான் - நானென்றுஞ்சொல்லுகின்ற, தன்மை - குணத்தை, உன்னியபாவனை யால் - சிந்தித்தபாவனையினால், மெள்ளச்சீவவுருவாகி - மெல்லச்சீவரூபியாய், குடும்பியெனுமூகத்தால் - சம்சாரியென்கின்ற நினைவினால், பன்னிய நாநாத் துவத்திலழுந்தி - சொல்லிய நாநாவிதமாகியசங்கற்பவிகற்பங்களிலழுந்தி, பா வம் - பாவமும், அபாவம் - அபாவமும், பற்றுதல் - பற்றுதலும், விடலாம் - விடுவதுமா யிருக்கின்ற, பதத்தினிற்கும் - (பேதரூபமாகிய) பதத்திலிரு க்கும்—எ-று.

எ - து. இத்தன்மையானது பிரகாசமாகியும், நிற்கின்ற அந்த காரமாகியும், ஏகமாகியும், அநேகமாகியுமிருக்கின்ற தனது செய்கை யினால்தானே பூரணஞான தத்துவ சொரூபத்தைவிட்டு இவனென் றும் அவனென்றும், நானென்றுஞ் சொல்லுகின்ற குணத்தை சிந்தி த்த பாவனையினால் மெல்லச் சீவரூபியாய் சம்சாரியென்கின்ற நினைவி னால் சொல்லிய நாநாவிதமாகிய சங்கற்பவிகற்பங்களில் அழுந்திபாவ மும், அபாவமும், பற்றுதலும், விடுவதுமா யிருக்கின்ற பேதரூபமா கிய பதத்திலிருக்கும்—எ-ம்.

ப-ம். சுயம்பிரகாசமென்பார், ஒளியாமென்னும், விருத்திஞானமிறந்து தன்மையாக விளங்குமென்பார். இருளாமென்றும், தானேதானுயிருக்குமென் பார். ஒன்றென்றும், நவநவமாய்ப் பிரகாசிக்கு மென்பார். ஈறில் கூறென்றுங் கூறினர்.

இ-ம். சுயஞ் சித்திருந்தபடியிருக்க அதன் சங்கற்பமே சீவனுகிப்பேதபா வத்தில் அழுந்தினதென்பதாம். (8)

## சீவனேமமமாய் அதுசகத்தாக விரிதல்

அப்பதத்தி னின்றுபுரி யட்ட கத்தை யளவிலசை வாலமைக்கு மமைத் திடாதாம், இப்பரிசி னின்றலேவே வடிவ மான வெழு பிறவி வகைமாலை யியற்று மெங்கும், ஒப்பரிய தற்பிரம சுபாவத்தாலே யுரைத்ததெலா மெழுமீண்டு மொடுங்கிப் போகு, மெய்ப் படிவ மில்

லாத விண்ணிற் கானல் விரிவதுபோன் மனநினைவில் விரிந்து தோன்றும்.

இ - ள். அப்பதத்தினின்று - அந்தப்பேதமான இடத்திலிருந்து, புரியட்டகத்தை - புரியட்டக (உடலை), அளவிலாசைவால் - அளவற்ற விகற்பங்களினால், அமைக்கும் - செய்யும், அமைத்திடாதாம் - செய்யாதாம், இப்பரிசினின்று - இக்குணத்திலிருந்து, அலைவேவடிவமான - சலிப்பதேசொரூபமாகிய, எழுபிறவிவகைமாலை - (சராசரமான) எழுபவவரிசையை, எங்கும் - எவ்விடத்தும், இயற்றும் - செய்யும், ஒப்பரிய - சமானமற்ற, தற்பிரமசுபாவத்தால் - தானாகிய பிரமசத்தியினால், உரைத்ததெலாமெழும் - சொல்லியயாவும் உற்பத்தியாம், மீண்டு மொடுங்கிப்போகும் - மீளவு நாசத்தையடையும், மெய்ப்படிவமில்லாத விண்ணில் - நிசவடிவமில்லாத (பூ) தாகாயத்தில், கானல்விரிவதுபோல் - கானற்சலம் பரவுவதைப்போல, மனநினைவால் - மனோசங்கற்பத்தினால், விரிந்துதோன்றும் - (உலகம்) பரவித்தோற்றும் — எ - று.

எ - து. அந்தப் பேதமான இடத்திலிருந்து புரியட்டகவுடலை அளவற்ற விகற்பங்களினாற்செய்யும் செய்யாதாம் இக்குணத்திலிருந்து சலிப்பதே சொரூபமாகிய சராசரமான எழுபவவரிசையை எவ்விடத்தும் செய்யும் சமானமற்ற தானாகிய பிரமசத்தியினால் சொல்லிய யாவுமுற்பத்தியாம். மீளவு நாசத்தை யடையும். நிசவடிவமில்லாத பூதாகாயத்திற்கானற்சலம் பரவுவதைப்போல மனோசங்கற்பத்தினால் உலகம்பரவித்தோற்றும் — எ - ம்.

இ-ம். ஆத்மா தனது சங்கற்பமாகிய மனதினால் ஆதிவாகிக மாதிபௌதிக சரீரங்களை யுண்டாக்கிக் கெடுக்குமென்பதாம். (9)

## ஆத்மாவே அநாத்மாவாகத் தோற்றி விளங்குதல்.



படர்மதத்தாற் றனைப்பிறர்போற் றோன்றுமா போற் பகுத்தலிலா வந்தச்சிற் பாவந் தானே, அடர்பொய்போற் றோன்றியதாற் சத்த மாதி யைம்புலனு மேதொன்று லறியாய்நின்றாய், தொடர்கின்ற வதுவிந்த வான்மா வாகுந் தோற்றமெலாந் தானாகித் துன்னிநின்ற, விடமுடைய பரப்பிரம மிதுவே யீதுக்கிப்பிரமப் பெயரியல்பா மிதில்வே றில்லை.

இ - ள். படர்மதத்தால் - மிகுந்தமதத்தினால், தனைப்பிறர்போல் - தன்னை அயலாரைப்போல், தோற்றுமாபோல் - தோற்றுகின்றதுபோல, பகுத்தலிலா - பிரிவில்லாத, அந்தச்சிற்பாவந்தான் - அந்த ஞானசொரூபமே, அடர்பொய்போல் - நெருங்குகின்ற அசத்தைப்போல, தோன்றியது - தோற்றிற்று. சத்தா

மாதி யைம்புலனும் - சத்தமுதலிய பஞ்சவிடயங்களையும், ஏதொன்றாயறியா நின்றாய் - யாதொன்றினால் அறிகின்றாயோ, தொடர்கின்றவது - தொடரா நின்ற அதுவே, இந்தவான்மாவாகும் - (ஸ்ரீராமா) முன்சொல்லிய இந்த ஞானாத்மசொரூபமாம், தோற்றமெலாம் - தோற்றப்பட்ட சகலமும், தானாகித் துன்னிநின்ற - தானாகவே நிறைந்திருக்கின்ற, இடமுடைய பரப்பிரமமிது - வியாபகமான பரப்பிரம சொரூபமான திப்படி சொல்லப்பட்டதேயாகும், ஈதுக்கு - இதற்கு, இப்பிரமப்பெயர் - இந்தப் பிரமமென்னு நாமமானது, இயல்பாம் - சுபாவமாம், இதில் வேறில்லை - இதற்கு வேறான தொன்றுமில்லை-எ-று.

எ - று மிருந்த மதத்தினால் தன்னை அயலாரைப்போலத்தோற்றுகின்றதுபோலப் பிரிவில்லாத அந்த ஞானசொரூபமே நெருங்குகின்ற அசத்தைப்போலத் தோற்றிற்று. சத்தமுதலிய பஞ்சவிடயங்களையும் யாதொன்றினால் அறிகின்றாயோ தொடரா நின்றதுவே ஸ்ரீராமா! முன் சொல்லிய இந்த ஞானாத்மசொரூபமாம். தோற்றப்பட்ட சகலமும் தானாகவே நிறைந்திருக்கின்ற வியாபகமான பரப்பிரமசொரூபமானது இப்படி சொல்லப்பட்டதேயாகும். இதற்கு இந்தப் பிரமமென்னு நாமமானது சுபாவமாம். இதற்கு வேறான தொன்றுமில்லை—எ—ம்.

இ-ம், ஆத்மா, தனது சங்கற்பத்தினால் அதிஷ்டானமா யுண்டாகிய தன்னைமறந்து, ஆரோபிதமான சகத்தாகத் தோற்றப்பட்டாலும், தானாகவே விளங்கிக்கொண் டிருக்குமென்பதாம். (10)

## கிரிசிய இலக்கணம் அறிவித்தல்.

பொருகடலிற் றிரைமுதலாய் பிறந்த வெல்லாம் புனலாகி விளங்காமற் புழுதி யாமோ, ஒருபொருளாம் பிரமமாத் திரமே யல்லா லுபயமெனுங் கற்பனைப் பே ரொன்று மில்லை, எரியிடத்திற் சூடுமாத் திரமே யல்லா விரண்டுண்டோ வவ்வகைபோ லென்று மொன்றாஞ், சரியைகிரி யாயோகப் பதத்தின் முற்றிச் சாதனங்க ணிறைந்தவர்க்கே சாற்றல் வேண்டும்.

இ - ள். பொருகடலில் - மோதாநின்றசமுத்திரத்தில், திரைமுதலாய்ப் பிறந்தவெல்லாம் - அலைமுதலாகவுண்டான சகலமும், புனலாகி விளங்காமல்- சலமாகிவிளங்காமல், புழுதியாமோ - புழுதியாமா, (அதுபோல) ஒருபொருளாம் - ஒப்பற்ற வஸ்துவாகிய, பிரமமாத்திரமேயல்லாமல் - பிரமசொரூபமாத்திரமேயல்லாமல், உபயமெனும் - இரண்டென்கின்ற, கற்பனைப்பேர் - ஆகாசாதி கற்பனா நாமங்கள், ஒன்றுமில்லை - ஒன்றாகிலுமில்லை, எரியிடத்தில்- அக்கினியினிடத்தில், சூடுமாத்திரமே அல்லாமல் - உஷ்ணமாத்திரமேயன்றி,

இரண்டுண்டோ - இரண்டுண்டாயிருக்குமோ, அவ்வகைபோல் - அத்தன்மையைப்போல, என்றுமொன்றும் - எப்போதும் பிரமசுபாவமான சகம் (பிரமத்தில்) அபின்னமேயாம், சரியை கிரியா யோகம் - சரியை கிரியை யோகமென்கின்ற, பதத்தின்முற்றி - மார்க்கங்களின் முதிர்ந்து, சாதனங்கணிறைந்தவர்க்கு - நான்கு சாதனங்களும் நிறைந்தவர்களுக்கு, சாற்றவேண்டும் - சொல்லவேண்டும்-எ-று.

எ - து. மோதாநின்ற சமுத்திரத்தில் அலைமுதலாக வுண்டான சகலமும் சலமாகி விளங்காமல் புறுதியாமா? அதுபோல ஒப்பற்ற வஸ்துவாகிய பிரம சொரூபமாத்திரமே அல்லாமல் இரண்டென்கின்ற ஆகாசாதி கற்பனு நாமங்கள் ஒன்றுகிலுமில்லை. அக்கினியினிடத்தில் உஷ்ணமாத்திரமேயன்றி இரண்டுண்டாயிருக்குமோ? அத்தன்மையைப்போல எப்போதும் பிரமசுபாவமான சகம் பிரமத்தில் அபின்னமேயாம். சரியை கிரியை யோகமென்கின்ற மார்க்கங்களின் முதிர்ந்து நான்கு சாதனங்களு நிறைந்தவர்களுக்குச் சொல்லவேண்டும்—எ-ம்.

இ-ம். பிரமத்திலுண்டான சகம் அப்பிரமப் பிரகாசமாய் விளங்குமென்பதாம். (11)

## பிரமோபதேச இலக்கணங்கூறல்.

இயற்கைகுணஞ் சோதித்து முன்னே பின்னே யாவையுமாம் பிரமநீ யென்னல் வேண்டும், வியம்புறவா சையிலுழல்வார்க் கிவ்வாறேதின் மீளாத் நிரகில் வீழ்த்த தாகுந், நியக்குறுபோ கத்தாசை தீர்ந்து புந்தி தெளிந்தவுனைப் போல்வார்க்கே திகழத் தோன்று, மயக்கமற வுணர்த்தவல்ல குருவைக் கிட்டா வருந்தியுந்தன் பிறப்பறுக்கு மகனு மாங்கே.

இ-ள். முன்னே - முன்னமே, இயற்கைகுணஞ் சோதித்து-(சீடனது) இயல்பான பக்குவங்களைப் பரிசோதித்து, பின்னே - பின்பு, யாவையுமாம்- சர்வமுமாய் விளங்கிய, பிரமநீ யென்னல்வேண்டும் - பிரம சொரூபமே நீ யென்று உபதேசிக்கவேண்டும், வியப்புற - அதிசயிக்கும்படி, ஆசையிலுழல்வார்க்கு - விருப்பத்திற் சுழலுபவர்களுக்கு, இவ்வாறேதில் - இந்தப் பிரகாரஞ் சொன்னால், மீளாத நிரகில் - திரும்பாத நரகாக்கினியில், வீழ்த்ததாகும் - தள்ளிவிட்டதாம், நியக்குறு - கலக்கம்பொருந்திய, போகத்தாசை தீர்ந்து - செல்வத்தினது பிரியத்தைவிட்டு, புந்திதெளிந்த - அறிவுதெளிந்திருக்கின்ற, உனைப்போல்வார்க்கே - உனக்குச் சமானமானவர்களுக்கே, திகழத்தோன்றும் - பிரகாசமாய்த் தோற்றும், மயக்கமற - மயக்கமில்லாமல் உணர்த்தவல்ல குருவை - அறிவிக்க வல்லமையுடைய ஆசாரியரை, கிட்டா- கிட்டி, வருந்தியுந்தன் பிறப்பறுக்கும் - வருத்தமுற்றுவது தனதுபவத்தை நீக்கிக்கொள்ளும், மகனுமாங்கே - சீடனும் முன்சொன்ன பிரகாரமேயிருக்க வேண்டும்-எ-று.

எ - து. முன்னமேசீடனது இயல்பானபக்குவங்களைப் பரிசோதித்துப்பின்பு சர்வமுமாய் விளங்கிய பிரமசொரூபமேநீயென்றுஉபதேசிக்கவேண்டும். அதிசயிக்கும்படி விருப்பத்திற் சுழலுபவர்களுக்குஇந்தப் பிரகாரஞ் சொன்னால் திரும்பாத நரகாக்கினியில் தள்ளிவிட்டதாம் கலக்கம்பொருந்திய செல்வத்தினது பிரியத்தைவிட்டுஅறிவுதெளிந்திருக்கின்ற உனக்குச் சமானமானவர்களுக்கேபிரகாசமாய்த்தோற்றும் மயக்கமில்லாமல் அறிவிக்க வல்லமையுடைய ஆசாரியரைக்கிட்டி வருத்தமுற்றுவது தனதுபவத்தை நீக்கிக்கொள்ளும்சீடனும் முன்சொன்ன பிரகாரமே யிருக்கவேண்டும்—எ-ம்.

இ-ம். சர்வம் பிரமமய மென்கின்ற உண்மையைச் சாதன சதுஷ்டயமுள்ள ஞானதிகாரிக்கே உபதேசிக்கவேண்டுமென்பதாம். (12)

சிற்சுபாவமே சகத்தெனல்.

விளக்குரவி புமலரு முண்டாயுண்டாம் வீசொளியும் பகற்பொழுதும் விரையும்போலத், துளக்கமில்சித் துண்டாகி லுண்டாஞாலந் தோற்றவு மாத்திரமே சொரூப மாகுங், கிளத்தபார மார்த்தத்தா லில்லை யென்னக் கேட்டலுமே பாற்கடல்போற் கெம்பீரத்தால், அளக்கரிதாய்ச் சீதளமா யமலமாகி யற்புதமா நின்மொழியென் றண்ணல் சொல்வான்.

இ - ள். விளக்கும் - தீபமும், இரவியும் - சூரியனும், மலரும்-புஷ்பமும், உண்டாய் - உண்டாயிருக்கும்போதே, வீசொளியும்-வீசப்பட்ட பிரகாசமும், பகற்பொழுதும் - பகற்காலமும், விரையும் - வாசனையும், உண்டாம்போல - உண்டானதுபோல, துளக்கமில் - அச்சமில்லாத, சித்துண்டாகில் சித்துண்டானால், ஞாலமுண்டாம் - சகமுண்டாயிருக்கும், தோற்றவுமாத்திரமே -பிரதிபாமாத்திரமே, சொரூபமாகும் - (அதற்கு) வடிவமாயிருக்கும், கிளத்தபரமார்த்தத்தால் - சொல்லிய யதார்த்தத்தால், இல்லையென - இல்லையென்று (வசிட்டமுனிசொல்ல), கேட்டலும் - ஸ்ரீராமன்கேட்கவும், பாற்கடல்போல்-பால்சமுத்திரத்தைப்போல, கெம்பீரத்தால் - ஆழ்ந்த கருத்தினால், அளக்கரிதாய்-அளக்கக்கூடாததாயும், சீதளமாய் - குளிர்ச்சியாயும், அமலமாகி - நிருமலமாயுமிருக்கின்ற, நின்மொழி-தேவரீர் வாக்கியம், அற்புதமாமென் றண்ணல்சொல்வான் - அதிசயமாகுமென்று ஸ்ரீராமன் சொல்லுவார்-எ-று.

எ — து. தீபமும், சூரியனும், புஷ்பமும், உண்டாயிருக்கும்போதே வீசப்பட்ட பிரகாசமும், பகற்காலமும், வாசனையும், உண்டானதுபோல அச்சமில்லாத சித்துண்டானால் சகமுண்டாயிருக்கும். பிரதிபாமாத்திரமே அதற்குவடிவமாயிருக்கும், சொல்லிய எதார்த்தத்

தால இல்லையென்று வசிட்டமுனிசொல்ல, ஸ்ரீராமன் கேட்கவும் பாற்சமுத்திரத்தைப்போல ஆழ்ந்த கருத்தினால் அளக்கக்கூடாததாகியும், குளிர்ச்சியாயும், நிருமலதாயுமிருக்கின்ற தேவரீர் வாக்கியம் அதிசயமாகுமென்று ஸ்ரீராமன் சொல்லுவார்—எ-ம.

இ-ம். சகமானது, சிற்சங்கற்பத்தால் தோற்றி அச்சிற் பிரகாசமாகவே விளங்குமென்பதாம். (13)

சர்வமுமாய் விளங்குகின்ற ஆத்மாவுக்குச் சங்கற்பம் வந்தகாரணம் இயாதெனின்.

இம்மொழிக ளாலிமைப்போ திருளா மீள விமைப்போது வெளியாகு மிவ்வா றாகி, மைம்முகிலா லற்பமாய் வெய்யிற் சீதம் வந்து வந்து போகின்ற மழைநா ளொத்தேன், மெய்ம்முனிவே யநந்தமாய்ப் பலவா யொன்றாய் வீயாதா யளக்கரிதாய் விளக்கமெய்தி, செம்முறையா மாத்துமதத் துவத்துக் கிந்தச் செய்தொழில்கள் வந்தவா செப்புகென்றான்.

இ-ள். இம்மொழிகளால் - இந்த வசனங்களினால், இமைப்போ திருளாம் - இமைநேரத்தின் மறைப்பாகியும், மீள - திரும்ப, இமைப்போது - இமை நேரத்தில், வெளியாகும் - வெளியாகியுமிருக்கின்ற, இவ்வாறாகி - இந்தப்பிரகாரமாய், மைம்முகிலால் - கறுத்தமேகத்தினால், அற்பமாய் - அற்பமாக, வெய்யில் - வெய்யிலும், சீதம் - குளிர்ச்சியும், வந்துவந்துபோகின்ற - (அடிக்கடி) வருவதும் போவதுமாயிருக்கின்ற, மழைநாளொத்தேன் - கார்காலத்துக்கு ஒப்பானேன், மெய்ம்முனிவே - உண்மையான வசிட்டமுனியே, அநந்தமாய் - முடிவில்லாததாகியும், பலவாய் - அநேகமாகியும், ஒன்றாய் - ஏகமாயும், வீயாதாய் - கெடாத (சத்தியை) யுடையதாகியும், அளக்கரிதாய் - அளக்கக்கூடாததாகியும், விளக்கமெய்தி - பிரகாசத்தையடைந்து, செம்முறையாம் - பெருமையுள்ள குணத்தை யுடையதாகியும் இருக்கின்ற. ஆத்தும தத்துவத்துக்கு - ஆத்மஞானத்துக்கு, இந்தச்செய்தொழில்கள் - இக்கிரியைகளானவை, வந்தவா - உண்டான பிரகாரம், செப்புகென்றான் - சொல்லுமென்று இராமன்கேட்டார்—எ-று.

எ—து. இந்த வசனங்களினால் இமைநேரத்தின் மறைப்பாகியும், திரும்ப இமைநேரத்தில் வெளியாகியுமிருக்கின்ற இந்தப்பிரகாரமாய் கறுத்த மேகத்தினால் அற்பமாக வெய்யிலும் குளிர்ச்சியும் அடிக்கடிவருவதும் போவதுமாயிருக்கின்ற கார்காலத்துக்கு ஒப்பானேன். உண்மையான வசிட்டமுனியே முடிவில்லாததாகியும், அநேகமாகியும், ஏகமாகியும், கெடாதசத்தியை யுடையதாகியும்,

அளக்கக்கூடாததாகியும், பிரகாசத்தையடைந்து பெருமையுள்ள குணத்தையுடையதாகியு மிருக்கின்ற ஆத்மஞானத்துக்கு இக்கிரிகைகளானவை உண்டான பிரகாரம் சொல்லுமென்று இராமன் கேட்டார்—எ-ம். (14)

## அக்காரணம் அனுபவத்தில் தோன்றுமெனல்.

மெய்யான பொருளுடைய வாக்கி யத்தின் மெய்ப்பொருளாய் முன்னொடுபின் விரோத மின்றிக், கைபாரு நெல்லியெனக் காட்ட வல்ல கட்டுரையே யாமிங்கு கழறிற்றெல்லா, மெய்யான ஞானவிழி வெளியாய்ப் போதம் விரியவுதித் தாலென்சொ லென்னும் வித்து, கையார வலிதெளிதென் றுள்ள வாறு கலக்கமற நிலைநின்று காண்டியன்றே.

இ - ள். மெய்யான பொருளுடைய - இதார்த்தமாகிய அருத்தத்தையுடைய, வாக்கியத்தின் - மஹாவாகியத்தினது, மெய்ப்பொருளாய் - தத்துவார்த்தமாய், முன்னொடுபின் விரோதமின்றி - முன்னுக்குப்பின் விரோதமில்லாமல், கையாருநெல்லியென - கரதலாமலகத்தைப்போல, காட்டவல்ல - (பிரத்தியட்சமாக)காட்டவல்லமையுடைய, யாமிங்குகழறிற்றெல்லாம்-நாமிவ்விடத்திற் சொல்லிய அனைத்தும், கட்டுரையே - உறுதிவசனமேயாம், மெய்யான ஞானவிழி - உண்மையான ஞானதிருஷ்டியானது, வெளியாய் - பிரசன்னமாய், போதம்விரியவுதித்தால் - அறிவுவியாபகமாக உதயமானால், என்சொல்லெனும்வித்து - எனதுவாக்கியமென்கின்ற ஞானத்தை, கையார-கையிற் பொருந்தும்படியாக, வலிது - வலிதென்றும், எளிது - எளிதென்றும், உள்ளவாறு - உள்ளபிரகாரமாய், கலக்கமற-கலக்கமின்றி, நிலைநின்றுகாண்டி-நிலையாகவிருந்து பார்ப்பாய் —எ-று.

எ - து. எதார்த்தமாகிய அருத்தத்தையுடைய மறைவாக்கியத்தினது தத்துவார்த்தமாய், முன்னுக்குப் பின் விரோதமில்லாமல் கரதலாமலகத்தைப்போல பிரத்தியட்சமாகக்காட்ட வல்லமையுடைய நாமிவ்விடத்திற் சொல்லிய அனைத்தும் உறுதி வசனமேயாம். உண்மையான ஞானதிருஷ்டியானது பிரசன்னமாய் அறிவு வியாபகமாக உதயமானால் எனது வாக்கியமென்கின்ற ஞானத்தை கையிற் பொருந்தும்படியாக வலிதென்றும் எளிதென்றும் உள்ள பிரகாரமாய் கலக்கமின்றி நிலையாகவிருந்து பார்ப்பாய் —எ-ம்.

இ-உ-க-ம். சங்கற்பமுதித்தகாரணம் அச்சங்கற்ப மொடுங்கினவிடத்து ஒளிருமென்பதாம். (15)

## மாயாநாசநிரூபணம்.

தன்னுருவ மாய்வதற்கே முயல்வ தாகித் தமமொழித்த வவிச் சையினாற் சகல மான, இன்னலுறு குற்றமிலாவிச்சை யெய்து மெய் கணைகள் கணையாலே நஞ்சை நஞ்சால், துன்னுபகை பகையாலே தீது தீதாற் றுடைப்பதுபோ லவித்தைதனைத் துடைத்தல் வேண் டும், உன்னியுறப் பார்த்தலுமே யிதன்சு பாவ மொழிந்துபோய்த் தன்மாய்வா லுதவு மின்பம்.

இ - ள். தன்னுருவம் - தனது உருவமானது, மாய்வதற்கே - கெடுவ தற்கே, முயல்வதாகி - எத்தனஞ்செய்வதாய், தமமொழித்த - அந்தகாரத்தை நீக்கிய, அவிச்சையினால் - (உத்தமமாகிய) அவித்தையினால், சகலமான இன்ன லுறு - சகலதுன்பமும் பொருந்திய, குற்றமிலாவிச்சையெய்தும் - குற்றமற்ற ஞானம்வரும், எய்கணைகள் கணையால் - எய்யாநின்ற அம்புகளை அம்புகளா லும், நஞ்சை நஞ்சால் - விடத்தை விடாவிடதங்களினாலும், துன்னுபகை பகையால் - நெருங்கிய சத்துருவைச் சத்துருவினாலும், தீதுதீதால் - தீய (அழுக்கைத்) தீய (அழுக்கி)னாலும், துடைப்பதுபோல் - கெடுப்பதுபோல, அவித்தைதனை - அஞ்ஞானத்தை, துடைத்தல் வேண்டும் - கெடுக்கவேண் டும், உன்னியுறப்பார்த்தலும் - கருதி விசாரித்துப் பார்த்த அளவில், இதன் சுபாவமொழிந்துபோய் - இவ் அவத்தையினது சுபாவநீங்கி, தன்மாய்வால் - தனது அவித்தா நாசத்தினால், இன்பமுதவும் - பிரமாநந்தத்தைக் கொடுக் கும்—எ-று.

எ - து. தனது உருவமானது கெடுவதற்கே எத்தனஞ் செய்வ தாய் அந்தகாரத்தை நீக்கிய உத்தமமாகிய அவித்தையினால் சகல துன்பமும்பொருந்திய குற்றமற்ற ஞானம்வரும். எய்யாநின்ற அம்பு களை அம்புகளாலும், விடத்தை விட அவிடதங்களினாலும், நெருங் கிய சத்துருவைச் சத்துருவினாலும், தீய அழுக்கை தீய அழுக்கினா லும், கெடுப்பதுபோல அஞ்ஞானத்தைக் கெடுக்கவேண்டும். கருதி விசாரித்துப் பார்த்த அளவில் இவ் அவித்தையினது சுபாவநீங்கி தனது அவித்தாநாசத்தினால் பிரமாநந்தத்தைக் கொடுக்கும்—எ-ம்.

இ-ம். அசுத்தமாயையைச் சுத்தமாயையாற் கெடுக்கவேண்டு மென்ப தாம். (16)

## மாயையானது எதார்த்தமாகவே இன்றெனல்.



நனிமெய்யாய் மாயையில தென்றிவ் வாறு நாடுவாய் ஞானி யாய் ஞானம் பெற்றால், துனிசெயுமீ துளமாயை யறுதி யன்றே துக னிலா நற்போதந் தோன்று மட்டும், பனிமாயை யில்லையென லென் சொல் லாலே பழுதில்லா வறுதியுறப் பற்றி நிற்பாய், புனிதமுறு

பிரமமே யெல்லா மென்று புந்தியிற்கண் டோர்முத்தி பொருந்தி ஞேரே.

இ - ள். தனிமெய்யாய் - மிகவுமுண்மையாய், மாயையிலதென்று - மாயையில்லையென்று, இவ்வாறுநாடுவாய் - இந்தப்பிரகாரஞ் சிந்திப்பாய், ஞானியாய் - ஞானத்தை யுடையவனுய், ஞானம்பெற்றால் - (சிவேஸ்வரா வைக்கியமான சொரூப) ஞானத்தைப்பெற்றால், துனிசெயும் - துன்பத்தைச்செய்கின்ற, ஈதினமாயையறுதி - இந்த அவித்தையின் சுபாவத்தை யறிவாய், துகளிலாநற்போதம் -குற்றமற்ற சுகஞானமானது, தோன்றுமட்டும் - உதயமாகுமளவும், பனிமாயையில்லையெனல் - நடுக்கஞ்செய்யுமாயையானதில்லையென்பதை, என்சொல்லால் - எனதுவாக்கியத்தினுல், பழுதிலாவறுதியுற - தவறில்லாத நிச்சயமாக, பற்றிநிற்பாய் - பிடித்திருப்பாய், எல்லாம் - சகலமும், புனிதமுறு - பரிசுத்தமுள்ள, பிரமமேயென்று - பிரமசொரூபமேயென்று, புந்தியிற்கண்டோர் - அறிவினுல் தரிசித்தவர்கள், முத்திபொருந்தினேர் - மோட்சமடைந்தவர்கள் - எ - று.

எ - து. மிகவும் உண்மையாய் மாயையில்லையென்று இந்தப் பிரகாரஞ்சிந்திப்பாய். ஞானத்தையுடையவனுய் சிவேஸ்வரவைக்கியமான சொரூப ஞானத்தைப்பெற்றால் துன்பத்தைச்செய்கின்ற இந்த அவித்தையின் சுபாவத்தை யறிவாய். குற்றமற்ற சுகஞானமானது உதயமாகுமளவும் நடுக்கஞ்செய்யு மாயையானது இல்லையென்பதை எனது வாக்கியத்தினுல் தவறில்லாத நிச்சயமாகப்பிடித்திருப்பாய் சகலமும் பரிசுத்தமுள்ள பிரமசொரூபமேயென்று அறிவினுல் தரிசித்தவர்கள் மோட்சமடைந்தவர்கள்—எ-ம். (17)

## மாயையைக்கெடுக்கும் உபாயத்தை அறிவித்தல்.

பேதமுறு புந்தியே மாயை யாகும் பெரிதுவருந் தியுமிதனைப் போக்கல் வேண்டும், போதமுறு பேற்றினு லன்றி மாயைப் பொருந தியின் கலாதோன்றுப் பொருந்தத் தோன்றில், ஏதமறு மப்பதமே யிறவா வீடா மிம்மாயை பிறப்பிடமே தென்ன வேண்டாஞ், சேதமுறக் கொல்வழியே தென்று தேர்வாய் சிதைவுற்று விதனியல்பு தெரியு மன்றே.

இ - ள். பேதமுறுபுந்தியே - பேதமுள்ளஞானமே, மாயையாகும் மாயையாம், பெரிதுவருந்தியும் - மிகவும் வருத்தமுற்றுவது, இதனைப்போக்கல்வேண்டும் - இம்மாயைக் கெடுக்கவேண்டும், போதமுறுபேற்றினுலன்றி - ஞானமுள்ள ஆத்மலாபத்தால் அல்லாமல், மாயை - மாயையென்னும்,

பொருநதியின்கரைதோன்ரு - அலேகளடிக்கின்ற ஆற்றின்கரை தோற்ரு வாம், பொருந்தத்தோன்றில்-நன்ருகத்தோற்றினல், ஏதமறுமப்பதே - குற்ற மற்ற அப்பதமே, இறவாவீடாம் - நசியாதநிருவாணமாம், இம்மாயை - இந்த மாயையானது, பிறப்பிடமே தென்னவேண்டாம் - உண்டாகியது எந்தவிட மென்று விசாரிககவேண்டாம், சேதமுறகொல்வழி யேதென்று - கெடும் படி கெடுக்கின்றமார்ககமே எதுவென்று, தேர்வாய - (ஸ்ரீராமா) விசாரித் தறிவாய், சிதைவுற்ருல் - கெ மாஞல், இதனியல்பு தெரியும் இம்மாயை யுண்டான குணந்தெரியும்—எ-று.

எ - து. பேதமுள்ள ஞானமே மாயையாம் மிகவும் வருத்த முற்ருவது இம்மாயையைக் கெடுககவேண்டும ஞானமுள்ள ஆத்ம லாபத்தால் அல்லாமல் மாயையென்னும் அலேகளடிக்கின்ற ஆற்றின் கரை தோற்ருவாம் நன்ருகத தோற்றினல் குற்றமற்ற அப்பதமே நசியாத நிருவாணபாம இந்த மாயையானது உண்டாகியது எந்த விடமென்று விசாரிகக வேண்டாம கெடும்படி கெடுக்கின்ற மார்க் கம எதுவென்று ஸ்ரீராமா விசாரித்தறிவாய் கெடுமாஞல் இம்மா யை யுண்டான குணந்தெரியும—எ-ம்.

(இ-உ-க-ம்.) மாயையிலிருப்பவன் அம்மாயையைக்கெடுககாவிடில் அம் மாயாதீதம் வெளிப்படாதென்பதாம. (18)

## பிரபத்தில் அபின்னமான
## ஆத்மசத்தியுண் ானது அறிவித்தல்.



யாதினிற்ருேன் றியதென்று மியாதீ தென்று மிறந்தநெறி யா தென்று மிறந்தாற் ருேன் றும், ஆதலினல் வன்றுயரின் சாலே யான வவித்தையெனு நோய்ககுமருந்த தருந்தச் செய்தால, நீதுபயில் பிறப் பென்னுங் கடலின் மூழ்காய்! செறிகாற்று தன்னுருவாரு சேணி றன்ருற், சாதமுறத் திரிவதுபோற றனபாற் ருேன் றுஞ் சததியினு லாத்துமதத் துவகின் ருலகும.

இ - ள். யாதினிற்ருேன்றியதென்றும - (இந்தமாயையானது) எதிலு ண்டானதென்றும், ஈதயாதென்றும் - இதெப்படிப்பட்டதென்றும், இற ந்த நெறியாதென்றும் - ஈதிறந்தமார்க்கம் எதுவென்றும், இறந்தாற்ருே ன்றும் - நசித்தால் தோற்றும, ஆதலினல் - ஆகையால, வன்றுயரின்சாலே யான - வலியதுன்பத்தினிருப்பிடமான அவித்தையெனுநோயககு - அஞ் ஞானமென்னும் வியாதிககு, மருந்த நுதச்செய்தால் - ஞானஅவுடதத்தைப் புசிக்கக்கொடுத்தால், நீதுபயில்பிறப்பென்னும - தீமையுள்ள சநநமென் கின்ற, கடலின்மூழ்காய - சமுத்திரத்தில் (ஸ்ரீராமா) - நீமூழ்தமாட்டாய், செறிகாற்று - நெருங்கியவாயுவானது, தன்னுருவாஞ்சேணிறன் - தனக் (காதார) ரூபமான விண்ணில், சாதமுறத்திரிவதுபோல் - உண்டாக்கிச் சஞ்

சரிப்பதுபோல, தன்பாற்றோன்றுஞ்சத்தியினால் - பிரமத்தில் உதித்தசிற் சத்தியால், ஆத்துமதத்துவமின்றோல்கும் - ஆத்மசத்தைவிளங்கும்-எ-று.

எ-து. இந்தமாயையானது எதெதிலுண்டானதென்றும் இதெப்படிப்பட்டதென்றும், ஈது இறந்தமார்க்கம் எதுவென்றும், நசித்தாற்றோற்றும். ஆகையால் வலியதுன்பத்தின் இருப்பிடமான அஞ்ஞானமென்னும் வியாதிக்கு ஞான அமிடகத்தைப் புசிக்கக்கொடுத்தால் தீமையுள்ள சநநமென்கின்ற சமுத்திரத்தில் ஸ்ரீராமா நீ அழுந்தமாட்டாய். நெருங்கிய வாயுவானது தனக்கு அதாரரூபமான விண்ணில் உண்டாகிச் சஞ்சரிப்பதுபோல பிரமத்திலுதித்த சிற்சத்தியால் ஆத்மசத்தை விளங்கும்—எ-ம் (19)

## ஆத்மசத்தியிற் பின்னமான காலதேச கிரியாசத்தி உண்டாதல்.

நொய்யநெடுஞ் சிற்கடறன் னிடத்தே யற்ப நடக்கத்தாற் கணம்விளங்கு நுண்மை நோக்கால், ஐயமறத் தற்பதமொன் றகண்ட மென்றே யழுந்துவா யக்கடலி லசைந்து சற்றே, மெய்யறிவாஞ் சிற்சத்திக் கணக்கா லத்தின் முழுதுறுசத் தியினாலு முழங்கத் தோன்றித், துய்யவிடங் காலமொடு தொழில்கண் மூன்றுந் தூயன சத் திகட மமைத் துணையாய்ச் சேர்க்கும்.

இ-ள். நொய்யநெடும் - சொச்சமாய் வியாபித்திருக்கின்ற, சிற்கடறன்னிடத்து - ஞானசாகரத்தில், அற்பநடக்கத்தால் அற்ப அசைவினால், கணம்விளங்கும் - (சீவேஸ்வரசகமென்னுங்) குழாங்கள் பிரகாசிக்கும், நுண்மைநோக்கால் - சூட்சும (ஞான) திருஷ்டியினால், ஐயமறத்தற்பதமொன்று-சந்தேகமின்றி பிரமசொருபமொன்றையுமே, அகண்டமென்று - அகண்டாகாரமென் (றெண்ணி), அக்கடலிலழுந்துவாய் - அந்த ஞானசமுத்திரத்தின் முழுகுவாய், சற்றசைந்து - சற்றே அசைவுற்று, மெய்யறிவாஞ்சிற்சத்தி - வியாபகஞானமாகிய ஞானசத்தியானது, கணக்காலத்தில் - க்ஷணநேரத்தில், முழுதுறுசத்தியினாலும் - சர்வசத்தியினாலும், முழங்கத்தோன்றி - ஒலிக்கவுண்டாகி, துய்ய-அறிவின் திரிபாகிய, இடம் - இடமும், காலம் - காலமும், தொழில்கள், தொழில்களுமாகிய, மூன்று தூயனசத்திகடம்மை - மூன்று பரிசுத்தமுள்ள சத்திகளை, துணையாய்ச் சேர்க்கும் - சகாயமாகச் சேர்ந்துக்கொள்ளும்-எ-று.

எ-து. சொச்சமாய் வியாபித்திருக்கின்ற ஞானசாகரத்தில் அற்ப அசைவினால். சீவேஸ்வரசகமெனனுங் குழாங்கள் பிரகாசிக்கும். சூட்சுமஞானதிருஷ்டியினால் சந்தேகமின்றிப் பிரமசொரூபமொன்றையுமே அகண்டாகாரமென்றெண்ணி அந்த ஞானசமுத்திரத்

தின் முழுதுவாய் சற்றே அசைவுற்று வியாபகஞானமாகிய ஞானசத்தியானது க்ஷணநேரத்தில் சர்வசத்தியினாலும் ஒலிக்கவுண்டாகி அறிவின் திரிபாகிய இடமும், காலமும், தொழில்களுமாகிய மூன்றுபரிச்சேத்தமுள்ள சத்திகளைச் சகாயமாகச் சேர்ந்துக்கொள்ளும்—எ—ம்.

இதுவுமது.

தனதுசுபா வத்தையறிந் தநந்த மான தற்பதத்தி விருந்துஞ் சிற் சத்தி தானே, எனதுருவிவ் வளவென்றே யளவுற் றுப்போ லெண்ணுறும்இப் படியுருவை யிதுபா விக்கில், அனுகதமா யப்பொழுதே பெயர்க ளெல்லை யாதியாம் பார்வைகள்வந் தடையா நிற்கும், கனவிகற்பந் தருவடிவாய்ச் சித்து ரூபங் கவரிடங்கா லந்தொழிற்குக் கலந்த பற்றும்.

இ - ள். தனது சுபாவத்தை யறிந்து - தனது சொரூபத்தையறிந்து, அநந்தமான - முடிவில்லாத, தற்பதத்திலிருந்தும் - பிரமபதத்திலிருந்தும், சிற்சத்திதான் - ஞானசத்தியானது, எனதுருவிவ்வளவென்று - எனது வடிவம் இவ்வளவு (பிரமாண) முள்ளதென்று, அறிவுற்றுப்போல் - அறிந்தது போல, எண்ணுறும் - பாவிக்கும். இப்படி - இந்தப்பிரகாரம், உருவையிது பாவிக்கில் - இந்தச் சிற்சத்தி தனது சொரூபத்தைப் பாவனைசெய்யில், அனுகதமாய் - தொடர்பாக, அப்பொழுது - அக்காலத்தில், பெயர்கள் - நாமங்களின், எல்லையாதியாம் அளவுமுதலிய, பார்வைகள் - நோக்கானவை, வந்தடையாநிற்கும் - வந்தடையும், கனவிகற்பம் - மிகுந்தவிகற்பங்களை, தருவடிவாய் - கொடுக்குமாகாரமாய், சித்துரூபம் - சித்சொரூபமானது, கவரிடம் - கிரகிக்குமிடத்துக்கும், காலந்தொழிற்கும் - காலத்துக்குஞ் செயலுக்கும், கலந்தபற்றும் - சேர்ந்தபந்தமாம்—எ-று.

எ - து. தனது சொரூபத்தை யறிந்து முடிவில்லாத பிரமபதத்திலிருந்தும் ஞானசத்தியானது எனதுவடிவம் இவ்வளவு பிரமாணமுள்ளதென்று அறிந்ததுபோலப் பாவிக்கும் இந்தப்பிரகாரம் இந்தச்சிற்சத்தி தனது சொரூபத்தைப் பாவனைசெய்யில் தொடர்பாக அக்காலத்தில் நாமங்களின் அளவு முதலிய நோக்கானவை வந்தடையும் மிகுந்த விகற்பங்களைக் கொடுக்குமாகாரமாய் சித்சொரூபமானது கிரகிக்குமிடத்துக்கும் காலத்துக்குஞ் செயலுக்கும சேர்ந்த பந்தமாம்—எ-ம்.. (21)

## ஆத்மாவில் அகங்காரமுதலிய பேதமுண்டானதை அறிவித்தல்.

---

ஈங்குரைசெய் சித்தினுடைய யுருவந் தன்னை யாவருஞ்சேத் திரக்கியனென் றியம்பா நிற்பர், ஆங்கதுவும் வாதனையைச் செய்யா நின்

றே யகங்கார பாவனையை யடையா நிற்கும், வாங்கருமாங் காரமுநி ச்சயிப்ப தாகி மலினமுறு புந்தியா மலஞ்சேர் புந்தி, வீங்கியகற் பனைவடிவாய் மனன நெஞ்சாம் விகற்பமிகு மனம்பொறியா மெல்ல வந்தே.

இ - ள். ஈங்குரைசெய் - இவ்விடத்திற் சொல்லாநின்ற, சித்தினுடை யுருவந்தன்னை - ஞானத்தினது சொரூபத்தை, யாவரும் - சகலரும், சேத் திரக்கியனென் றியம்பாநிற்பர் - சீவனென்று சொல்லுவார்கள், அதுவும் - அச் சீவனும், வாதனையைச் செய்யாநின்று - வாதனையைச் செய்துகொண்டு, அகங்காரபாவனையை - அகம்பாவனையை, அடையாநிற்கும் - அடைந்திருக் கும், வாங்கருமாங்காரமும் - வணக்கக்கூடாத அகங்காரமும், நிச்சயிப்பதாகி- நிச்சயிக்குந் (தொழிலை) யுடையதாய், மலினமுறுபுந்தியாம் - களங்கமுள்ள புத்தியாம், மலஞ்சேர்புந்தி - களங்கநிறைந்த புத்தியானது, வீங்கிய கற்பனை வடிவாய் - மிகுந்த கற்பனாகாரமாய், மனன நெஞ்சாம் - மனனமுள்ள மன தாம், விகற்பமிகு மனம் - விகற்பமிகுந்த மனது, மெல்லவந்து - மெதுவாக வந்து, பொறியாம் - இந்திரியங்களாம்—எ-று.

எ - து. இவ்விடத்திற் சொல்லாநின்ற ஞானத்தினது சொரூ பத்தைச் சகலரும் சீவனென்று சொல்லுவார்கள். அச்சீவனும் வா தனையைச் செய்துகொண்டு அகம்பாவனையை அடைந்திருக்கும். வ ணக்கக்கூடாத அகங்காரமும நிச்சயிக்குந் தொழிலையுடையதாய் களங்கமுள்ள புத்தியாம், களங்கநிறைந்த புத்தியானது மிகுந்த கற் பனாகாரமாய் மனனமுள்ள மனதாம விகற்பமிகுந்த மனது மெது வாகவந்து இந்திரியங்களாம—எ-ம். (22)

## ஆத்மசத்தி பந்தம் அடைவதை அறிவித்தல்.



காசரண மயவுடலைம் பொறிக ளென்பர் கவலவுறவிப் படியன் றோ கலந்து சீவன், விரவியசங் கற்பமெனும பாசத் தாலே வீக்கு ண்டு துன்பவலை வீசப்பட்டுத், தாமறவி னதையடையவே யடையா நிற்குஞ சத்திமய மாமனமித் தன்மை யாகிப், பொாவகங்கா ரதை மேவிக் கோசகாரப் புழுப்போற்றன் னிச்சையினாற் பூணும் பந்தம்.

இ ள். ஐம்பொறிகள் - பஞ்ச இந்திரியங்களே, காசரண மயவுடலென் பர் - பாணிபாதாகாரமான சரீரமென்று சொல்லுவார்கள், கவல்வுறவிப்படி யன்றோ - வருந்த இப்படியல்லவா, கலந்துசீவன் - கலந்திருக்கின்ற சீவனானவன், விரவிய சங்கற்பமெனும் - கலந்த சங்கற்பமென்கின்ற, பாசத்தால் வீக் குண்டு - கயிற்றினாற் கட்டுப்பட்டு, துன்பவலை வீசப்பட்டு - துக்கமென்னும் வலையினால் எறியப்பட்டு, தாமாவினதை - தாமின்றி இழிவை, அடையவே

யடையாநிற்கும் - கிரமமாகவடையும், சத்திமயமாமனம் - சத்தி மயமாகிய மனமானது, இத்தன்மையாகி - இவ்வண்ணமாய், பொரா வகங்காரதைமேவி- பொருதற்கு அகம்பாவத்தைப்பொருந்தி, கோசகாரப் புழுப்போல் - கோச காரக் கிருமியைப்போல, தன்னிச்சையினால் - தனதாசையினால், பந்தம் பூணும் - பந்தத்தைத் தரிக்கும்—எ-று.

எ - து. பஞ்ச இந்திரியங்களே பாணிபாதாகாரமான சரீர மென்று சொல்லுவார்கள். வருந்த இப்படியல்லவா? கலந்திருக் கின்ற சீவனானவன் கலந்த சங்கற்பமென்கின்ற கயிற்றினாற் கட்டுப் பட்டு துக்கமென்னும் வலையினால் எறியப்பட்டு தாமின்றி யிழிவைக் கிரமமாகவடையும். சத்திமயமாகிய மனமானது இவ்வண்ணமாய் பொருதற்கு அகம்பாவத்தைப் பொருநதி கோசகாரக் கிருமியை ப்போல தனது ஆசையினால் பந்தத்தைத்தரிக்கும்—ஸ-ம். (23)

இதுவுமது

தானேசங் கற்பித்துத் தன்மாத்தி ரத்தாற் றனிவலையா முட் டொழில்க டன்னைக கட்டக், கானேறு சிங்கம்விலங் குற்ற தென்ன க் கவலையினான் மிகவுமனங் கரைந்து சோரும், ஆறாத மனம்புந்தி ஞானஞ் செய்கை யகங்கரவா தனையுடலம் பகுதி மாயை, ஊனான மலங்கருமம் பந்தஞ் சித்த மோதவித்தை யிச்சையென வுரைப்ப ரன்றே.

இ - ள். தானே சங்கற்பித்து - தானேயுண்டாக்கி யிருக்கின்ற, தன்மா த்திரத்தால் - (பஞ்ச) தன்மாத்திரையினால், தனிவலையாம் - தனித்தவலையா கிய, உட்டொழில்கள் - உள்விருத்திகளானவை, தன்னைக்கட்ட - தன்னைப் பந்தனஞ்செய்ய, கானேறு சிங்கம் - காட்டிலிருக்கும் ஆண்சிங்கமானது, வி லங்குற்றதென்ன - காலில் தளைபூண்டதுபோல, கவலையினால் - துன்பத்தி னால், மிகவு மனங்கரைந்துசோரும் - மிகவும் மனங் கரைந்துவாடும், ஆறாத- நீங்காத, மனம் - மனமென்றும், புந்தி - புத்தியென்றும், ஞானம் - ஞான மென்றும், செய்கை - தொழிலென்றும், அகங்காரம் - அகங்காரமென்றும், வாதனையுடலம் - வாதனுசரீரமென்றும், பகுதி - பிருகிருதியென்றும், மாயை மாயையென்றும், ஊனமலம் - இழிவாகிய மலமென்றும், கருமம் - கன்ம மென்றும், பந்தம் - பந்தமென்றும், சித்தம் - சித்தமென்றும், ஓதவித்தை- சொல்லப்பட்ட வித்தையென்றும், இச்சையென - ஆசையென்றும், உரைப் பர் - (பெரியோர்கள்) சொல்லுவார்கள்-எ-று.

எ - து. தானே யுண்டாக்கி யிருக்கின்ற பஞ்ச தன்மாத்திரை யினால் தனித்த வலையாகிய உள்விருத்திகளானவை தன்னைப் பந்தன ஞ்செய்ய காட்டிலிருக்கும் ஆண்சிங்கமானது காலில் தளைபூண்டது

போல துன்பத்தினுல் மிகவும் மனங்கரைந்து வாடும். நீங்காத மன மென்றும், புத்தியென்றும், ஞானமென்றும், தொழிலென்றும், அக ங்காரமென்றும், வாதனுசரீரமென்றும், பிரகிருதியென்றும், மாயை யென்றும், இழிவாகிய மலமென்றும், கன்மமென்றும், பந்தமென் றும், சித்தமென்றும், சொல்லப்பட்ட அவித்தையென்றும், ஆசை யென்றும் பெரியோர்கள் சொல்லுவார்கள்—எ-ம்.

இ-சூ-க-ம். ஆத்மா தனது சங்கற்பசத்தியிஞற் பஞ்சபூதபௌதிகமாய் அதனுற்றுன் மறைபட்டதுபோலத் தோற்றுமென்பதாம், (24)

## மனத்தினது துன்பம் அறிவித்தல்.

அப்பரிசோ ரோரிடத்தி லோரொன்றுக வாசாபா சத்தினு லமைத்துச் சொன்ன, ஒப்பரிய சகவிரிவா மிவற்றை யெல்லா முட் கொள்ளும் பலமிதனி லொன்று மில்லை, கப்புடைய நெடுவடத்தை வடத்தின் வித்து காந்திருப்ப தொக்குமி..ர் கவலைத்தீயின், வெப்ப மிக்க கோபப்பாம பெடுத்து நங்க வேட்டையெனுங் கடற்றிரையா ன் மெலி யுமுள்ளம்.

இ - ள். அப்பரிசு - அர்தப்பிரகாரம், ஓரோரிடத்தில்-ஒவ்வோரிடத்தில், ஓரொன்றுக - ஒவ்வொன்றுக, ஆசாபாசத்தினல்-ஆசாபாசங்களினுல், அமை த்துச்சொன்ன - உண்டாக்கிச்சொல்லிய, ஒப்பரிய - சமானமில்லாத சகவிரி வாம் - உலகத்தினதுமிகுதியான, இவற்றையெல்லாம் இவைகளியாவையும், உட்கொள்ளும் - அகத்திற்றரித்திருக்கின்ற (மனதுக்கு), பலம் - பிரயோசன மானது, இதனிலொன்றுமில்லை - இதனிடத்தில் ஒன்று மின்று, கப்புடைய- கிளைகளையுடைய, நெடுவடத்தை-நீண்ட ஆலவிருட்சத்தை, வடத்தின்வித்து- ஆலம்விதையானது, காந்திருப்பதொக்கும் - ஒளித்துவைத்திருக்கின்றதுக்கு ச்சமானமாம், இடர்க்கவலைத்தீயின்வெப்ப - துன்பாக்கினியினுல் வெதுப்ப, மிகக்கோபப்பாம்பு மிகுந்த சினமென்னு மலைப்பாம்பினுல், எடுத்துநங்க - எடுத்துவிழுங்க, வேட்கையெனுங் கடற்றிரையால் - ஆசையென்கின்ற சமுத் திரத்து அலைகளால் உள்ளமெலியும் - மனந்தளர்வடையும்—எ-று.

எ - து. அந்தப்பிரகாரம் ஒவ்வோரிடத்தில் ஒவ்வொன்றுகஆசா பாசங்களினுல் உண்டாகிச் சொல்லிய சமானமில்லாத உலகத்தினது மிகுதியான இவைகளியாவும் அகத்தில் தரித்திருக்கின்றமனதுக்குப் பிரயோசனமானது. இதனிடத்தில்ஒன்றுமின்று. கிளையுடையநீண்ட ஆலவிருட்சத்தை ஆலம்விதையானது ஒளித்துவைத்திருக்கின்றதுக் குச்சமானமாம், துன்பாக்கினியினுல் வெதுப்பமிகுந்த சினமென்னு

மலைப்பாம்பினால் எடுத்துவிழுங்கஆசையென்கின்ற சமுத்திரத்து அலைகளால் மனந்தளர்வடையும்—எ—ம்.

இ-ம். தனது சங்கற்பரூபமான விடயங்களில் அகம்பாவஞ்செய்வதனால் மனம்வருந்துமென்பதாம். (25)

## மனதை இரட்சிக்கவேண்டும் எனல்.

பெருகியவித் துயாகளா லவச மாய்தன் பிதாமகனை மறந்துமிக ப்பீடை யுற்று, கருகியவிம் மனந்தன்னை யளற்றி லானைக் கரையேற் றி விடுவதுபோற் கரையி லேற்றாய், வெருவுசரா மரணமெனும் விடத்தால் வெந்து மிகுநலந்தீங் கெனும்பகையான் மெலியு நெஞ்சுக், கருள்புரியார் நரர்மனித வடிவமான வரக்கரேயருள்வடிவ மானவள்ளால்.

இ - ள். பெருகியவித்துயர்களால் - மிகுந்த இத்துன்பங்களினால், அவசமாய் (தனது) வசந்தப்பி, தன்பிதாமகனைமறந்து - தன்பிரமசொரூபத்தைமறந்து, மிகபபீடையுறறு - மிகுந்த துன்பத்தை யடைந்து, கருகிய விம்மனந்தன்னை - தீதுற்ற இந்தமனதை, அளற்றிலானை - சேற்றில் அழுந்தியயானையை, கரையேற்றிவிடுவதுபோல் - கரையிலெடுத்து விடுவதைப்போல, கரையிலேறறாய் (மாயையினின்றும்) கரையேற்றுவாய், வெருவுசராமரணமென்னும் - பயங்கரமுள்ள மூப்புமரணமென்கின்ற, விடத்தால்வெந்து விடாக்கினியினால் தகிககப்பட்டு, மிகுநலந்தீங்கெனும் - மிகுந்தநன்மைதீமைகளென்னும், பகையால் - சத்துருவினால், மெலியு நெஞ்சக்கு - தளருகின்ற மனதுக்கு, அருள்புரியாநரர் - கிருபைசெய்யாத மனிதர்கள், அருள்வடிவமான - கிருபையே வடிவமாயிருக்கின்ற, வள்ளால் ஸ்ரீராமா, மனிதவடிவமான - நரவடிவமாயிருக்கின்ற, அரக்கர் - இராக்ஷதர்கள்-எ-று.

எ - து. மிகுந்த இத்துன்பங்களினால் தனது வசந்தப்பித்தன் பிரமசொரூபத்தை மறந்துமிகுந்த துன்பத்தையடைந்து தீதுற்ற இந்தமனதைச், சேற்றிலழுந்திய யானையைக் கரையிலெடுத்து விடுவதைப்போல மாயையினின்றுங்கரையேற்றுவாய். பயங்கரமுள்ளமூப்புமரணமென்கின்ற விடாக்கினியினால் தகிக்கப்பட்டு மிகுந்த நன்மைதீமைகளென்னும் சத்துருவினால் தளருகின்ற மனதுக்கு கிருபைசெய்யாத மனிதர்கள் கிருபையே வடிவமாயிருக்கின்ற ஸ்ரீராமா! நரவடிவமாயிருக்கின்ற இராட்சதர்கள்—எ-ம்.

இ-ம். மனதை விடயத்தினின்று திருப்பிப் பிரமத்திற் சேர்க்கவேண்டுமென்பதாம். (26)

## மனம்வெளிமுகப்படுதலில் உண்டானசிருஷ்டிக்கிரமம் அறிவித்தல்.

இவ்வகையே சிற்பாவ சீவன்பேத மியல்வடிவ மாம்பிரமத் திடையே நின்று, வவ்வியபா வனையாலே வந்த கோடி வாராநின் றன கோடி வருவகோடி, தெய்வவரை யருவிநீர்த் துளிபோல் வந்தோர் சிலர்பிறவி யொன்றிரண்டு மூன்று சேர்ந்தோர், நைவருசென் மங்கள்சிலர் நூற்றின்மிக்கோர் நாடரியபவஞ்சிலர்க ணண்ணிநின்றோர்

இ - ள். இவ்வகையே - இந்தப் பிரகாரமே, சிற்பாவசீவன் - சித்துவிலாசமாயிருக்கின்ற சீவனானவன், பேதமியல்வடிவாம் - வேற்றுமையான ஆகாரமாய், பிரமத்திடையேநின்று - பிரமத்தினிடத்திலிருந்து, தெய்வவரை-மேருமலையினின்று, அருவிநீர்த்துளிபோல் - (வருகின்ற) அருவி நீர்த்துளிகள்போல, வவ்வியபாவனையால் - (தாங்) கொண்டபாவனையால் வந்தகோடி-வந்திருக்கின்றவைகள்அளவில்லனவாம், வாராநின்றனகோடி - வருகின்றவைகள் அளவில்லனவாம், வருவகோடி - (இனி) வரப்பட்டவைகள் அளவில்லனவாம், வந்தோர்சிலர் - வந்தவர்களிற்சிலர், பிறவி - சநநத்தை, ஒன்று-ஒன்றை, இரண்டு - இரண்டை, மூன்று - மூன்றை, சேர்ந்தோர்-அடைந்தார்கள், நைவருசென்மங்கள்-துன்பத்தைக்கொடுக்கின்ற சநநங்கள், சிலர்நூற்றின்மிக்கோர் - சிலர்நூற்றிலு மதிகப்படடார்கள், நாடரியபவம்-அளவிடுதற்கரியபிறவிகளை, சிலர்க ணண்ணிநின்றோர் - சிலர் அடைந்திருந்தார்கள் —எ-று.

எ - து. இந்தப் பிரகாரமே சித்துவிலாசமாயிருக்கின்ற சீவனானவன் வேற்றுமையான ஆகாரமாய் பிரமத்தினிடத்திலிருந்துமேருமலையினின்று வருகின்ற அருவிநீர்த்துளிகள்போலத் தாங்கொண்ட பாவனையால் வந்திருக்கின்றவைகள் அளவில்லனவாம். வருகின்றவைகள்அளவில்லனவாம், இனிவரப்பட்டவைகள் அளவில்லனவாம். வந்தவர்களிற்சிலர் சநநத்தை ஒன்றை இரண்டை மூன்றை அடைந்தார்கள். துன்பத்தைக்கொடுக்கின்ற சநநங்கள் சிலர் நூற்றிலும் அதிகப்பட்டார்கள் அளவிடுதற்கரிய பிறவிகளைச் சில ரடைந்திருந்தார்கள்.

இதுவுமது.

சிலர்சிலர்கள் கின்னரர்கந் திருவ ராஞேர் சிலர்விச்சா தாருகர் திரளாய்நின்றோர், சிலருக்க ரிமகிரணன வருண ஞேர் சிலர் பிரமன் றிருநெடுமால் சிவனாய்நின்றோர், சிலர்மறையோர் சிலராசராகி நின்றோர் சிலர்வணிகா வேளாண்மைச் செயலி னின்றோர், சிலர் விலங்கு பறவைகளூர் வனவாய் வந்தோர் சிலரிலைகாய் பழமூலந் திரண மாஞேர்.

இ - ள். சிலர்கள் கின்னரர் - சிலர் கின்னரராகவும், சிலர் கந்திருவரா ஞேர் - சிலர் கந்திருவராகவுமானூர்கள், சிலர்விச்சாதரர் - சிலர் வித்தியாதரர் களாகவும், உரகர் திரளாய் நின்றோர் - சில உரகர்கள் கூட்டமாகவு நின்றார் கள், சிலரருக்கர் - சிலர் சூரியராகவும், இமகிரணன் - (சிலர்) பனிக்கிரணத் தையுடைய சந்திரராகவும், வருணஞேர் - (சிலர்) வருணஞகவுமானூர்கள், சிலர் பிரமன் - சிலர் பிரமாவாகவும், திருநெடுமால் - (சிலர்) விஷ்ணுவாகவும், சிவனுய் - (சிலர்) சிவஞகவும், நின்றோர் - நின்றார்கள், சிலர் மறையோர்-சிலர் பிராமணர்களாகவும், சிலரரசராகி நின்றோர்-சிலர்கள் அரசராகவு நின்றார்கள் சிலர் வணிகர் - சிலர் வைசியராகவும், வேளாண்மைச் செயலினின்றோர்- (சிலர்) உபகாரத்தொழிலையுடைய சூத்திரராகவும் நின்றார்கள், சிலர்விலங்கு- சிலர் மிருகங்களாகவும், பறவை - (சிலர்) பட்சிகளாகவும், ஊர்வனவாய்ந் தோர் - (சிலர்) ஊர்வனவாகவும் வந்தார்கள், சிலரிலை - சிலர் பத்திரமாகவும், காய் - (சிலர்) காயாகவும், பழம் - (சிலர்) கனியாகவும், மூலம் - (சிலர்) வோரா கவும், திரணமாஞேர் - (சிலர்) துரும்பாகவு மானூர்கள்-எ-று.

எ — து. சிலர் கின்னரராகவும், சிலர் கந்திருவராகவுமானூர்கள். சிலர் வித்தியாதரர்களாகவும், சிலர் உரகர்கள் கூட்டமாகவு நின்றார் கள். சிலர் சூரியராகவும், சிலர் பனிக்கிரணத்தையுடைய சந்திரராக வும், சிலர் வருணஞகவுமானூர்கள் சிலர் பிரமாவாகவும், சிலர் விஷ் ணுவாகவும், சிலர் சிவஞகவும் நின்றார்கள். சிலர் பிராமணர்களாக வும், சிலர்கள் அரசராகவு நின்றார்கள். சிலர் வைசியராகவும், சிலர் உபகாரத்தொழிலையுடைய சூத்திரராகவு நின்றார்கள், சிலர் மிருகங் களாகவும், சிலர் பட்சிகளாகவும், சிலர் ஊர்வனமாகவும் வந்தார்கள். சிலர் பத்திரமாகவும், சிலர் காயாகவும், சிலர் கனியாகவும், சிலர் வே ருகவும், சிலர் துரும்பாகவுமானூர்கள்—எ—ம். (28)

இதுவுமது.

சிலர்மயேந் திரசைலஞ் சையமேரு தென்மலைய மந்தரமாய்ச் சிறந்து நின்றோர், சிலர்கடம்பஞ் செம்பீரந் தாலஞ் சாலஞ் சிறந்த தமாலங்களாய்ச் செறிந்து நின்றோர், சிலருவரி தயிர்நெய்பாற் கருப்பஞ் சாறு தேஞெடுநீர் பெருங்கடலாய்ச் சேர்ந்து நின்றோர், சிலர் திசைகள் சிலர் நதிக ளாகி நின்றோர் சிலர் மேலோர் சிலர் கீழோர் சிவாராஞேர்.

இ - ள். சிவராஞேர் - சிவாரானவர்கள், சிலர் - சிலர்கள், மயேந்திர சைலம் - மயேந்திரபருப்பதமாகவும், சையம்-சையப்பருப்பதமாகவும், மேரு- மகாமேருவாகவும், தென்மலையம் - பொதியமலையாகவும், மந்தரமாய் - மந்தர மலையாகவும், சிறந்துநின்றோர் - சிறப்பாக நின்றார்கள், சிலர்-சிலர்கள், கடம்

பம் - கடம்பவிருட்சமாகவும், செம்பீரம் - எலுமிச்சமரமாகவும், தாலம் - பனை ய விருட்சமாகவும், சாலம் - ஆச்சாமரமாகவும், சிறந்த தமாலங்களாய் - சிறப் புள்ள பச்சிலை மரமாகவும், செறிந்து நின்றோர் - நெருங்கி நின்றார்கள், சிலர்-சிலர்கள், உவரி - உவராகவும், தயிர் - தயிராகவும், நெய்-நெய்யாகவும், பால்-பாலாகவும், கருப்பஞ்சாறு - கருப்பஞ்சாறாகவும், தேனொடு - தேனாகவும், நீர்-சுத்த சலமாகவுமிருக்கின்ற, பெருங்கடலாய் - மகோததியாக, சேர்ந்துநின் றோர் - அடைந்திருந்தார்கள், சிலர் திசைகள் - சிலர் திக்குகளாகவும், சிலர் நதிகளாகி நின்றோர் - சிலர் ஆறுகளாகவு மிருந்தார்கள், சிலர் மேலோர்-சிலர் உயர்ந்தவர்களாகவும், சிலர் கீழோர் - சிலர் தாழ்ந்தவர்களாகவு மிருந் தார்கள்—எ-று.

எ - து. சிவானவர்கள் (சிலர்கள்) மயேந்திர பருப்பதமாக வும், சையபருப்பதமாகவும், மகாமேருவாகவும், பொதியமலையாக வும், மந்தரமலையாகவும், சிறப்பாக நின்றார்கள். (சிலர்கள்) கடம்ப விருட்சமாகவும், எலுமிச்சமரமாகவும், பனையவிருட்சமாகவும், ஆச் சாமரமாகவும் சிறப்புள்ள பச்சிலைமரமாகவும், நெருங்கிநின்றார்கள். (சிலர்கள்) உவராகவும், தயிராகவும், நெய்யாகவும், பாலாகவும், கரு ப்பஞ்சாறாகவும், தேனாகவும், சுத்தசலமாகவுமிருக்கின்ற மகோதததி யாக அடைந்திருந்தார்கள். (சிலர்) திக்குகளாகவும், சிலர் ஆறுகளா கவு மிருந்தார்கள் சிலர் உயர்ந்தவர்களாகவும், சிலர் தாழ்ந்தவர்களா கவு மிருந்தார்கள்——எ—ம். (29)

இதுவுமது

கையிறை லறையுண்ணும் பந்து போலக் காலனு லறையுண்டு கணக் கிலாத, மெய்யிலே புகுந்தலுத்து விவேகம் பெற்றும் விரகி லார் சிலர்பிறப்பின் மீண்டும் வீழ்ந்தார், மையினுன் மூன்றுலகாம் ப ணதி செய்து வருநிற்கும் போமாகி வளர்ந்து வாளாப், பொய்யி னுன் மிகவிரியும் வேலையூடே பொருதிரைபோற் பரபதத்தே புரிந்த மாயை.

இ - ள். 'கையினலறையுண்ணும் - கையினலடிக்கப்பட்ட, பந்துபோல-பந்தைப்போல். காலனலறையுண்டு - காலனால் அடிக்கப்பட்டு, கணக்கில்லாத மெய்யில் - அளவற்றசரீரத்தில், புகுந்து - பிரவேசித்து, அலுத்து - சலித்து, விவேகம்பெற்றும் - விவேகமடைந்தும், விரகிலார் சிலர் - அறிவில்லாத சில பேர்கள், பிறப்பின் மீண்டும் வீழ்ந்தார் - சநநத்தில் திரும்பவும் விழுந்தார் கள், மையினல் - அஞ்ஞானத்தினல், மூன்றுலகாம் பணதிசெய்து - திரிலோ கமான சிருட்டியைச்செய்து, வருநிற்கும் போமாகி - உற்பத்தி ஸ்திதி லயமா கும்படி, வளர்ந்து - விரிந்து, வேலையூடு - சமுத்திரத்தில், பொருந்திரை போல் - மோதுகின்ற அலைகளைப்போல், பரபதத்து - பிரமபதத்தில், புரிந்த

மாயை - சொல்லிய மாயையானது, வர்ணாப்பொய்யினால் - வீணுகமித்தையி ஞல், மிகவிரியும் - மிகவும் விஸ்தாரமாம்-எ-று.

எ - து. கையினாலடிக்கப்பட்ட பந்தைப்போல் காலனாலடிக்கப் பட்டு அளவற்ற சரீரத்தில் பிரவேசித்து சலித்து விவேகமடைந்தும், அறிவில்லாத சிலபேர்கள் சநநத்தில் திரும்பவும் விழுந்தார்கள். அஞ்ஞானத்தினால் திரிலோகமான சிருஷ்டியைச்செய்து உற்பத்தி ஸ்திதிலயமாகும்படி விரிந்து சமுத்திரத்தில் மோதுகின்ற அலைகளைப் போல் பிரமபதத்தில் சொல்லிய மாயையானது வீணுக மித்தையி ஞல் மிகவும் விஸ்தாரமாம்—எ—ம்.

இ-ச-க-ம். சைதன்யத்தில் பின்னமாகவுண்டாகிய சிற்சத்தியே பின் னமான பிரகிருதி முதற் சீவேஸ்வர சகங்களாகத் தோற்றினதை அறிவித்த தாம். (30)

## ஆத்மசங்கற்பமான மனது பிரமாவானது எங்ஙனமெனின்.

தெரிந்துணர்ந்தோ னிவ்வாறு செப்ப லோடுஞ் சீவன்றான் மனப்பதத்தைச் சேர்ந்து நின்றும், விரிஞ்சனெனும் பெயர்பெற்ற தெவ்வா றென்று வித்தாரத்தா லுள்ளபடி விளம்பு கென்று, அரிந்த மன்கேட் டலும்வசிட்ட னுரைப்பான் வள்ளா லந்தநெறி கேட்ட லுமே பகிலஞானம், புரிந்தநெறி யறிதியிதன் றன்மை யெல்லாம் புந்தியுறக் கேட்டுணர்வு பொருந்து வாயே.

இ - ள். தெரிந்துணர்ந்தோன் - (சகலமுந்) தெளிந்தறிந்த வசிட்ட முனியானவர். இவ்வாறு செப்பலோடும் - இவ்வண்ணஞ் சொன்னமாத்திரத் தில், சீவன்றான் - சீவனானவன், மனப்பதத்தைச் சேர்ந்து நின்றும் - மனதி னிடத்திற் சேர்ந்திருந்தும், விரிஞ்சனெனும் பெயர் பெற்றது - பிரமா என் னு நாமமடைந்தது, எவ்வாறென்று - எவ்வண்ணமென்று, வித்தாரத்தால்- விரிவாக, உள்ளபடி விளம்புகென்று - உண்மையாகச் சொல்லுமென்று, அரி ந்தமன் கேட்டலும் - ஸ்ரீராமன் கேட்கவும், வசிட்டனுரைப்பான் - வசிட்ட முனிசொல்லுவார், வள்ளால் - ஸ்ரீராமா, அந்தநெறிகேட்டலும் - அந்தமார்க் கத்தை அறிவாய், இதன் றன்மையெல்லாம் இதன் குணங்கள் அனைத்தை யும், புந்தியுறக்கேட்டு - அறிவிற் பொருந்தக்கேட்டு, உணர்வுபொருந்துவாய்- அறிவையடைவாய்—எ-று.

எ - து. சகலமுந் தெளிந்து அறிந்த வசிட்ட முனியானவர் இவ் வண்ணஞ் சொன்னமாத்திரத்தில் சீவனானவன் மனதினிடத்திற் சேர்ந்திருந்தும் பிரமாவென்னு நாமமடைந்தது எவ்வண்ணமெ

ன்று விரிவாக உண்மையாகச் சொல்லுமென்று ஸ்ரீராமன் கேட்கவும், வசிட்டமுனி சொல்லுவார். ஸ்ரீராமா! அந்தமார்க்கத்தை நீ கேட்ட அளவில் சகல சகங்களும் உண்டான மார்க்கத்தை யறிவாய் இதன் குணங்கள் அனைத்தையும் அறிவிற் பொருந்தக்கேட்டு அறிவையடைவாய்—எ-ம். (31)

## ஆத்மாவில் மனமுண்டானதை அறிவித்தல்!

## வேறு.

திசைகால மாதிகளாற் றன்னுடைய சத்தியிற் றிரியாச்சீவன்
பசையான லீலையினாற் றிசைகால மாதிகளாற் பயின்ற மேனி
இசையாநின் றளபோதே சீவனுக்குப் பரியாய மென்னப்பட்ட
வசையான வாதனையின் வசத்தாலே யுலையுமனம் வந்து தோன்றும்.

இ-ள். திசை - திக்குகள், காலம் - காலங்கள், ஆதிகளால் - முதலானவைகளால், திரியாச்சீவன் - கெடாத ஆத்மாவானது, தன்னுடைய சத்தியினால் - தனது (சிற்) சத்தியினால், பசையான லீலையின் - இச்சாவிளையாட்டாகவும், திசைகாலமாதிகளால் - திக்குகாலங்கள் முதலிய இவைகளோடு, பயின்றமேனி - கூடியசரீரத்தை, இசையாநின்றளபோதே - இசைந்திருக்கின்ற பொழுதே, சீவனுக்கு - சீவாத்மாவுக்கு, பரியாயமென்னப்பட்ட - பரியாய நாமமென்று சொல்லப்பட்ட, வசையானவாதனையின் - குற்றமுள்ள வாசனையின், வசத்தால் - வசத்தினால், உலையுமனம் வந்துதோன்றும் - சஞ்சலமுள்ள மனமுண்டாகித்தோற்றும் எ-று.

எ-து திக்குகள் காலங்கள் முதலானவைகளால் கெடாத ஆத்மாவானது தனது சிற்சத்தியினால் இச்சாவிளையாட்டாகவும், திக்குகாலங்கள் முதலிய இவைகளோடு கூடிய சரீரத்தை இசைந்திருக்கின்றபொழுதே சீவாத்மாவுக்கு பரியாய நாமமென்று சொல்லப்பட்ட குற்றமுள்ள வாசனையின் வசத்தினால் சஞ்சலமுள்ள மனமுண்டாகித்தோற்றும்—எ-ம். (32)

## மனம சத்தன்மாத்திரையாகத் தடித்தல்.

செயல்செயலின் மைகளிரண்டுஞ் சேர்ந்தெழுந்த மனச்சத்திசெயலை
மேவி, இயல்பின்முத னொப்தாகிச் சத்தவிதை யிரதத்திலெழுவ
தான, உயர்தருவின் பாவனையைப் பாவிக்குங் கணததிலே யுடனே
யந்த, வியனலைவின் றன்னெறியா லந்தமனங் கனதையினை மேவு
மன்றே.

இ-ள். செயல் - தொழில்களும், செயலின்மைகள் - தொழில் இல்லாமைகளுமாகிய, இரண்டுஞ்சேர்ந்தெழுந்த - இவ்விரண்டும் ஒருமித்து எழுந்த,

மனச்சத்திசெயலைமேவி-மனோசத்தியானது தொழிலை அடைந்து, இயல்பின் சுபாவமாக, முதலெய்தாகி - ஆதியிற் சூட்சுமமாய், சத்தவிதையிரதத்தில் சுத்ததன்மாத்திரைக்கு (விடயமானபாவனையினால்), எழுவதான-உண்டாகிய உயர்தருவிண்பாவனையை - மேலான ஆகாயபாவனையை, பாவிக்குங் கணத்தில் - பாவிக்கின்ற க்ஷணத்தில், உடனே-அப்பொழுதே, அந்தவியனலையின் றன்னெறியால் - அச்சலனமார்க்கத்தினால், அந்தமனம் - அந்தமனமானது கனதையின்மேவும் – (ஆகாச) மென்னுங் கனத்தைப்பொருந்தும் —எ-று.

எ – து. தொழில்களும் தொழில் இல்லாமைகளுமாகிய இவ்விரண்டும் ஒருமித்து எழுந்த மனோசத்தியானது தொழிலையடைந்து சுபாவமாக ஆதியிற் சூட்சுமமாய் சத்ததன்மாத்திரைக்கு விடயமான பாவனையினால் உண்டாகிய மேலான ஆகாயபாவனையை பாவிக்கின்றட்சணத்தில் அப்பொழுதே அச்சலனமார்க்கத்தினால் அந்தமனமானது ஆகாசமென்னுங் கனத்தைப்பொருந்தும்—எ-ம். (33)

## மனமானது பரிசதன்மாத்திரையாகவும் உருபதன் மாத்திரையாகவும் தடித்தல்.

பரிசவிதை யிரதத்தி லெழுவதாங் காற்றசைவைப் பாவித் துன்னும், விரிதருவிண் காற்றிரண்டின் மெய்ந்நெருக்கி லேநின்றும் வெந்தீத் தோன்றி, இருதிறச்சத் தப்பரிசந் திடமாகப் பழக்கமுறுமியல்பினாலே, உருவதன்மாத் திரைமேவு மிம்மூன்றி னுடன்மேவு முள்ளந் தானே.

இ - ள். உள்ளந்தான் - மனமானது, பரிசைவிதையிரதத்தில் - பரிசதன்மாத்திரை என்னும் பாவனையினால், எழுவதாங்காற்றசைவை-உண்டாகாநின்ற வாயுவினது சலனத்தை, பாவித்து - பாவனைசெய்து, துன்னும் - (காற்றாக) நிறையும், விரிதருவிண் - விரிந்திருக்கின்ற ஆகாசமும், காற்று - வாயுவுமாகிய, இரண்டினமெய்ந்நெருக்கினின்றும்-இந்த இரண்டின்வடிவு நெருக்கத்திலிருந்தும், வெந்தீத்தோன்றி - வெப்பம்பொருந்திய அக்கினியாகவுண்டாகி, இருதிறச்சத்தப்பரிசம் - இரண்டாகிய சத்தமும்பரிசமும், திடமாகப்பழக்கமுறும் - திடமாகப் பழக்கஞ்செய்கின்ற, இயல்பினால்-குணத்தினால், உருவதன் மாத்திரைமேவும் - உருவதன்மாத்திரையாகி, இம்மூன்றினுடன்மேவும்-இம்மூன்று தன்மாத்திரைகளோடும் பொருந்தும்— எ-று.

எ - து. மனமானது பரிசதன்மாத்திரையென்னும் பாவனையினால் உண்டாகாநின்ற வாயுவினது சலனத்தை பாவனைசெய்து காற்றாக நிறையும் விரிந்திருக்கின்ற ஆகாசமும் வாயுவு மாகிய

இந்த இரண்டின்வடிவு நெருக்கத்திலிருந்தும் வெப்பம்பொருந்திய அக்கினியாகவுண்டாகி இரண்டாகிய சத்தமும் பரிசமும் இடமாகப் பழக்கஞ்செய்கின்ற குணத்தினால்உருவதன்மாத்திரையாகி இம்மூன் றுதன்மாத்திரைகளோடும் பொருந்தும்—எ-ம். (34)

## மனமானது ரசதன்மாத்திரையாகவும் கந்ததன் மாத்திரையாகவுங் கடித்தல்.



கணத்திலிர தத்தியல்பைப் பாவிக்க நீரறிவுக் கருத்திலுண்டாம், குணத்தினையத் திறங்களொடுங் கூடுமனங் கணத்திலே குறித்து நாடி, மணத்தினைப் பாவித்தலுந்தன் மாத்திரத்தாற் பாரறிவு வருமிவ்வாறே, தணத்தபூ தத்தன்மாத் திரம்வளைதது வளைத்துருவாய்ச் சகமாய்த் தோன்றும்.

இ - ள். கணத்தில்-ஒருக்ஷணத்தில், இரதத்தியல்பைப்பாவிக்க இரசதன் மாத்திரை பாவனைசெய்ய, நீரறிவு - அப்புவென்னும் ஞானம், அக்கருத்திலுண்டாம் - அம்மனதிலுண்டாகும், குணத்தினை - (இந்நான்கு) குணங்களையும், அத்திறங்களோடும் - அக்குணங்களோடும், கூடுமனம்-கூடுகின்ற மனமானது, கணத்தில் - ஒருக்ஷணத்தில், குறித்துநாடி - கருதித்தேடி, மணத்தினைப்பாவித்தாலும் - கந்தத்தைபாவிக்கவும், தன்மாத்திரத்தால் - (பாவிக்கின்ற கந்த) தன்மாத்திரையினால், பாரறிவுவரும் - பிருதிவுஎன்னு ஞானமுண்டாம், இவ்வாறே - இவ்வண்ணமே, தணத்தபூதம் - பிரிவாகிய (பஞ்ச) பூதங்களும், தன்மாத்திரம் - (பஞ்ச) தன்மாத்திரைகளும், வளைத்துவளைத்து - (தன்னைச்) சுற்றிச்சுற்றி, உருவாய் - (பருத்த) ஆகாரமாய், சகமாய்த்தோன்றும் - பிரபஞ்சமாகத்தோற்றும்—எ-று.

எ - து, ஒருக்ஷணத்தில் இரசதன்மாத்திரைபாவனைசெய்ய அப்புவென்னும் ஞானம் அம்மனதிலுண்டாகும், இந்நான்கு குணங்களையும் அக்குணங்களோடும் கூடுகின்ற மனமானது, ஒரு க்ஷணத்தில் கருதித்தேடிக் கந்தத்தைப் பாவிக்கவும், பாவிக்கின்ற கந்ததன்மாத்திரையினால் பிருதிவு என்னுஞானமுண்டாம். இவ்வண்ணமே பிரிவாகிய பஞ்சபூதங்களும் பஞ்சதன்மாத்திரைகளும் தன்னைச் சுற்றிச்சுற்றிப் பருத்த ஆகாரமாய் பிரபஞ்சமாகத்தோற்றும்—எ-ம். (35)

## மனமானது புரியட்டகமாக விளங்கல்.

திகழ்ந்தவனற் பொறியென்னத் திகழ்வடிவை விண்ணிலே தெரியக் காணும், அகங்காரமாந் தொழின்மேவிப்புந்தியுடன் விதையோடு மணுகி யந்தப், புகன்றதெலாஞ் சேர்ந்துபுரி யட்டகமா யுயிர்களுளப் பூவில் வண்டா, மிகுந்தகடுங் கூட்டாவாற் பாவிக்கு மிகவிளங்கு மேனி தன்னை.

இ - ள். திகழ்ந்தவனற்பொறியென்ன - பிரகாசித்திருக்கின்ற அக்கினிபொறியைப்போல, திகழ்வடிவை - விளங்காநின்றசரீரத்தை, விண்ணிலேதெரியக்காணும் - ஆகாயத்தில்தெரியப்பாவிக்கும், அகங்காரமாந்தொழின்மேவி- அகம்பாவனையான கிரியைப்பொருந்தி, புந்தியுடன் - புத்தியுடனும், விதையோடும் - (பஞ்ச) தன்மாத்திரைகளோடும், அணுகி - பொருந்தி, அந்தப்புகன்றதெலாஞ்சேர்ந்து-அப்படிசொல்லப்பட்ட சகலமுங்கூடி, புரியட்டகமாய்- புரியட்டக சரீரமாய், உயிர்களுளப்பூவில் - ஆத்மாக்கள் இதயகமலங்களில், வண்டாம் — மதுகரமாகும், மிகுந்தகடுங்கூட்டாவால் - மிகுந்த வாசனைகளினால், மிகவிளங்கு மேனிதன்னை - மிகவுந் திகழாநின்றசரீரத்தை, பாவிக்கும்- பாவனைசெய்யும்—எ-று.

எ — று. பிரகாசித்திருக்கின்ற அக்கினிப் பொறியைப்போல விளங்காநின்ற சரீரத்தை ஆகாயத்தில் தெரியப்பாவிக்கும். அகம்பாவனையான கிரியைபொருந்தி புத்தியுடனும் பஞ்சதன் மாத்திரைகளோடும் பொருந்தி அப்படிச் சொல்லப்பட்ட சகலமுங்கூடி புரியட்டக சரீரமாய் ஆத்மாக்கள் இதயகமலங்களில் மதுகரமாகும் மிகுந்த வாசனைகளினால் மிகவுந்திகழாநின்ற சரீரத்தை பாவனை செய்யும்.

(இ-கூ-க-ம்.) மனமானது பஞ்சதன்மாத்திரை அகங்காரம் புத்தி என்பவைகளோடுங்கூடிப் புரியட்டக சரீரமாக விளங்குமென்பதாம். (36)

## மனமானது சமஷ்டி பௌதிக சரீரமாயினதை அறிவித்தல்.

பாவனைமுற் றிடத்தூல மேனியாய் வில்வத்தின் பழம்போற் சித்த, மேவுகரு விற்பாய்ந்த பொன்னிறம்போன் மிகவிளங்கி விமல விண்ணில், தாவரமுண் டாய்நிற்கு மந்தவொளி தன்னுடைய சுபாவந் தன்னாற், கேவலமேற் றலைகீழ்காற் பக்கங்கை நடுவயிருய்க் கிளர்ந்தோ ருகும்,

இ - ள். சித்தம் - சித்தமானது. பாவனைமுற்றிட - பாவனைமுதிர, வில்வத்தின்பழம்போல் - வில்வக்கனியைப்போல, . தூலமேனியாய் - தூல

சரீரமாய், மேவுகருவிற்பாய்ந்த பொன்னிறம்போல் - மேவுகின்ற கருவிற் பாய்ந்த தங்கநிறத்தைப்போல, மிகவிளங்கி - மிகவும் பிரகாசித்து, விமல விண்ணில் - நிமலாகாயத்தில், தாவரமுண்டாநிற்கும் - வடிவுண்டாயிருக்கின்ற, அந்தவொளி - அந்தப்பிரகாசமானது, தன்னுடைய சுபாவந்தன்னால் - தனது சத்தியினால், கேவலம் - தனிமையாக, மேற்றலை - மேலே சிரசும், கீழ்கால் - கீழேபாதமும், பக்கங்கை - பக்கங்களிற் கரங்களும், நடுவயிறாய் - மத்தியில்வயிறுமாக, கிளர்ந்தோனும் - பிரகாசித்தோனும்—எ-று.

எ - து. சித்தமானது பாவனைமுதிர வில்வக்கனியைப்போல தூலசரீரமாய் மேவுகின்ற கருவிற்பாய்ந்த தங்கநிறத்தைப்போல மிகவும் பிரகாசித்து நிமலாகாயத்தில் வடிவுண்டாயிருக்கின்ற அந்தப் பிரகாசமானது தனது சத்தியினால் தனிமையாக மேலே சிரசும், கீழேபாதமும், பக்கங்களிற் கரங்களும், மத்தியில் வயிறுமாகப் பிரகாசித்தோனும்—எ-ம். (37)

## மனமானது பிரமன் ஆயினது அறிவித்தல்.

முந்தியகாலத்தினால் வெளியாகி நின்மலமாமூர்த்தியாகிப், புந்தியொடு சத்துவமொய்ம்பு உச்சாகம் விஞ்ஞானம் பொறியு மேவும், அந்தவவயவனையகில பிதாமகனாய் முழுதுணர்ந்த வயனு மன்னான், சுந்தரமா யுத்தமமாய்த் திகழ்கின்ற தன்வடிவைத் தோன்ற நோக்கி.

இ - ள். முந்தியகாலத்தினால் - முதன்மையான கால (சத்தி) யினால், வெளியாகி - வெளிப்படையாய், நின்மலமாமூர்த்தியாகி - நின்மலமான வடிவை யுடையதாய், புந்தியொடு - புந்தியுடன், சத்துவம் - சாமர்த்தியமும், மொய்ம்பு - வலிமையும், உச்சாகம் - உயர்ச்சியும், விஞ்ஞானம் - மெய்ஞ்ஞானமும், பொறியும் - செல்வமும், மேவும் - பொருந்திய, அந்தவவயவன் - அவ் அவயவங்களை யுடையவனே, அகிலபிதாமகனாய் - விஸ்வத்தையுடையவனாய், முழுதுணர்ந்தவயனும் - யாவையுந்தெளிந்தபிரமாவாம், அன்னான் - அப்பிரமாவே, சுந்தரமாய் - அழகாகியும், உத்தமமாய் - உத்தமமாகியும், திகழ்கின்ற தன்வடிவை - விளங்காநின்ற தனது சொரூபத்தை, தோன்ற நோக்கி - நன்றாகப்பார்த்து—எ-று.

எ - து. முதன்மையான காலசத்தியினால் வெளிப்படையாய் நின்மலமானவடிவையுடையதாய்ப் புத்தியுடன் சாமர்த்தியமும் வலிமையும், உயர்ச்சியும், மெய்ஞ்ஞானமும், செல்வமும்பொருந்திய அவ் அவயவங்களையுடையவனே விஸ்வத்தையுடையவனாய் யாவை

யுந் தெளிந்த பிரமாவாம். அப்பிரமாவே அழகாகியும் உத்தமமாகி யும் விளங்காநின்ற தனது சொரூபத்தை நன்றாகப்பார்த்து—எ-ம்.

இ-உ-க-ம். மனமானது விராட்புருட ரூபமாகத் தடித்துத் தனக்கா தாரமா யிருக்கின்ற சிதாகாயத்தைப் பார்த்ததென்பதாம். (38)

## பிரமசந்நிதியில உண்டாகியவிசேடத்தை அறிவித்தல்.

குன்றாத வறுகுணத்தோன் மூன்றுகா லமும்வெளியாய்க் குறி க்கும் வேதா, ஒன்றாகிச் சின்மயமே யுருவமாய்க் கரைகாணு வுயர் வா னத்தின், மூன்றானுண் டாகியதென் னெனநினைத்தா னழுக்கி லா முழுஞா னக்கண், நன்றாவப் போதுதித்தோன் பலகோடி சிரு ட்டிமுத னடத்தக் கண்டான்.

இ - ள். குன்றாத வறுகுணத்தோன் - கெடாத சட்குணங்களையுடைய பகவானாகியும், மூன்று காலமும் - திரி காலங்களையும், வெளியாய்க் குறிக் கும் வேதா - வெளியாகப் பார்க்கின்றவனாகியு மிருக்கின்ற பிரமாவானவர், ஒன்றாகி - ஏகமாகியும், சின்மயமே யுருவமாய் - ஞானாகாரமே வடிவமாகியும், கரைகாணு - எல்லையற்றதுமாகியு மிருக்கின்ற, உயர்வானத்தின் - பரமாகாய த்தில், மூன்றானுண்டாகியது - முன்னுண்டானது, என்னெனநினைத்தான்- என்னவென்று சிந்தித்தான், அழுக்கிலா முழுஞானக்கண் - களங்கமற்ற பூர ணஞான திருஷ்டியையுடையவனாய், நன்றாவப்போ துதித்தோன் - நன்மை யாக அப்போதுதயமான பிரமன், பலகோடி சிருட்டி - அநேககோடி சிருஷ் டிகளை, முதனடத்தக்கண்டான் - முன்புசெய்யப்பார்த்தான்—எ-று.

எ - து. கெடாத சட்குணங்களையுடைய பகவானாகியும், திரி காலங்களையும வெளியாகப் பார்க்கின்றவனாகியு மிருக்கின்ற பிரமா வானவர் ஏகமாகியும், ஞானாகாரமே வடிவமாகியும், எல்லையற்றது மாகியுமிருக்கின்ற பரமாகாயத்தில் முன்னுண்டானது என்னவென் று சிந்தித்தான். களங்கமற்ற பூரண ஞான திருஷ்டியையுடைவனாய் நன்மையாக அப்போது உதயமான பிரமன் அநேககோடி சிருஷ்டி களை முன்பு செய்யப்பார்த்தான்—எ-ம். (39)

## புருடார்த்த சாதனங்கூறல்.

சாதிகுலந் தருமமெலா முணர்ந்தவற்றை லீலையினூற் றூன்கற் பித்தான், ஓதரிய லீலையினூற் சங்கற்பத் தாற்பிறக்கு முயிரை

யெல்லா, மேதமுறு கந்தற்ப நகரம்போ லறம்பொருள்வீ டின்ப மெ
ய்த, மேதகைய பலகோடி சாத்திரங்க ளவர்க்காக விதித்தான்வேதா

இ - ள் சாதி - வருணங்களும், குலம் - குலங்களும், தருமம் - தருமங்களுமாகிய, எலாமுணர்ந்து - யாவையுமறிந்து, அவற்றை - அவைகளை, லீலையினாற்றன் கற்பித்தான் - விளையாட்டினா லுண்டாக்கினான், ஓதரிய லீலையினால் - சொல்லுதற்கரிய விளையாட்டினால், ஏதமுறு கந்தற்ப நகரம்போல் - அழிகின்ற கந்தர்வ நகரத்தைப்போல, சங்கற்பத்தால் - சங்கற்பத்தினால், பிறக்கு முயிரையெல்லாம் - உண்டாகப்பட்ட ஆத்மாக்க ளனைத்தையும், அறம் பொருள் வீடின்பமெய்த - தருமார்த்த காம மோட்சத்தில் அடைவிக்க, மேதகைய - மேலான, பலகோடி சாத்திரங்கள் - அளவில்லாத (வேத) சாத்திரங்களை, அவர்க்காக - அவ்வாத்மாக்களுக்காக, வேதாவிதித்தான்-பிரமாவானவருண்டாக்கினார்-எ-று.

எ - து. வருணங்களும், குலங்களும், தருமங்களுமாகிய யாவையு மறிந்து அவைகளை விளையாட்டினா லுண்டாக்கினான். சொல்லுதற்கரிய விளையாட்டினால் அழிகின்ற கந்தர்வ நகரத்தைப்போல சங்கற்பத்தினால் உண்டாகப்பட்ட ஆத்மாக்களனைத்தையும் தருமார்த்த காம மோட்சத்தில் அடைவிக்க மேலான அளவில்லாத வேத சாத்திரங்களைஅவ்வாத்மாக்களுக்காகபிரமாவானவர் உண்டாக்கினார்.

இ-ம். சங்கற்ப வடிவமாயுள்ள சீவகோடிகள் தங்கள் சங்கற்பங்களை நீக்கி யாத்மசொரூபமடையும்பொருட்டு வேதாகமங்களை விதித்ததென்பதாம். (40)

## சங்கற்பமே சநநமாமெனல்.

விரிஞ்சனுரு வாமனத்தா லிச்சிருட்டி யிற்சிருட்டி மேவி நின்றும்
புரிந்தலரு மலரெல்லாம் வசந்தகா லத்தினாற் பூப்ப தொக்கும்
பிரிந்தசுரா நார்முதலோர் தத்தஞ்சங் கற்பத்தாற் பிறவி யுற்றார்
தெரிந்தனைய சங்கற்ப மறிற்பிறவார் செய்மாண்ட தீபம் போல.

இ - ள். விரிஞ்சனுருவா மனத்தால் - அயனுருவமான மனதினால், இச்சிருட்டியினின்றும் - இப்பஞ்சபூத சிருஷ்டியிலிருந்தும், சிருட்டிமேவி - பெனதிக சிருஷ்டி யுண்டாகிறதால், புரிந்தலரு மலரெல்லாம் - கட்டவிழ்ந்து மலராநின்ற புட்பங்களனைத்தும, வசந்தகாலத்தினால் - வசந்தகாலத்தில், பூப்பதொக்கும் - மலர்கின்றதை யொத்திருக்கும், பிரிந்தசுரார் - வேறுபாடாகிய தேவர்கள், நார்முதலோர் - மானிடர் முதலாகிய யாவரும், தத்தஞ்சங்கற்பத்தால் - தங்கடங்கள் சங்கற்பத்தினால், பிறவியுற்றார் - சநநத்தை யடைந்தார்

கள் தெரிந்து (இப்படி) யுணர்ந்து, அநேயசங்கற்பமறில் - அச்சங்கற்பநாசிக்கில், நெய்மாண்டதீபம்போல - நெய்யில்லாத விளக்கைப்போல, பிறவார்-சநநமடையார்கள்—எ-று.

எ - து. அபனுருவமான மனதினால் இப்பஞ்சபூத சிருஷ்டியிலிருந்தும் பௌதிகசிருஷ்டியுண்டாகிறதல். கட்டவிழ்ந்து மலராநின்ற புட்பங்களனைத்தும் வசந்தகாலத்தில் மலர்கின்றதையொத்திருக்கும். வேறுபாடாகியதேவர்கள் மானிடர் முதலாகிய யாவரும் தங்கள்தங்கள் சங்கற்பத்தினால் சநநத்தையடைந்தார்கள். இப்படி யுணர்ந்து அச்சங்கற்ப நசிக்கில் நெய்யில்லாத விளக்கைப்போல சநநமடையார்கள்—எ—ம்.

இ-ம். சங்கற்பநாசமே சநநமரண நாசமென்பதாம். (41)

## சகமும் மித்தையென்று உரைத்தல்.



வானநிக ராமனைத்துங் கற்பனைமாத் திரம்வாளா வளராநிற்கும்
ஆனசக நனவுதனிற் கனவுபோ லிராகவனே யறிதி யன்றே [றும்
ஈனமுறப் பிறப்பில்லை யிறப்பில்லை யெவ்விடத்து மொன்று மென்
ஞானபர மார்த்தத்தா லிவையெல்லாம பொய்யாக நண்ணு மன்றே.

இ - ள். வானநிகராமனைத்தும் - ஆகாயத்தையொத்தசகலமும், கற்பனைமாத்திரம் - சங்கற்பமாத்திரத்தில், வாளாவளராநிற்கும் - விருதாவாகவளரும், அனசகம் - (இப்படி) யுண்டாகிய உலகமானது, நனவுதனிற்கனவுபோல்-சாக்கிரத்தி (லுண்டாகுஞ்) சொற்பனத்தைப்போல, இராகவனே யறிதி - ஸ்ரீராமா நீ யறிந்துகொள்வாய், எவ்விடத்தும் - எந்தவிடங்களிலேயும், என்றும் - எப்பொழுதும், ஈனமுறப்பிறப்பில்லை - ஈனமாகச் செனித்ததுமில்லை, இறப்பில்லை-மரித்ததுமில்லை, ஒன்றுஞானபரமார்த்தத்தால் - ஏகமான பரமார்த்த ஞானத்தினால், இவையெல்லாம் பொய்யாக நண்ணும் - இவையாவுமித்தையாகச்சாரும்—எ-று.

எ - து. ஆகாயத்தையொத்த சகலமும் சங்கற்பமாத்திரத்தில் விருதாவாகவளரும். இப்படியுண்டாகிய உலகமானது சாக்கிரத்திலுண்டாகுஞ் சொற்பனத்தைப்போல ஸ்ரீராமா! நீயறிந்துகொள்வாய். எந்தவிடங்களிலேயும் எப்பொழுதும் ஈனமாகச் செனித்ததுமில்லை. மரித்ததுமில்லை. ஏகமானபரமார்த்த ஞானத்தினால் இவையாவு மித்தையாகச் சாரும்—எ-ம்.

இ-ம். பிரமசங்கற்பத்தில் உண்டாயிருக்கின்ற சகலமும் அப்பிரமதிருஷ்டியி லில்லையென்பதாம். (42)

## சம்சாரம் மித்தையெனல்.



வெங்காதற் பெரும்பாம்பு நெளிபுற்றாங் குடும்பபாரம் வெறும் பொய் யென்றே, இங்காசை யறநீக்கி யெல்லையிலாப் பரமபதத் திருந்து வாழ்வாய், சிங்காரக் கந்தற்ப நகரிருந்தென் சிதைவுற்றென் றீதோ நன்றோ, பங்கான மனைமக்கள் வாழ்ந்தாலென் கெட்டா லென் பாசமாயை

இ - ள். வெங்காதற்பெரும்பாம்பு - ஆசையென்னு மகாசற்பமானது, நெளிபுற்றும் - நெளிகின்றபுற்றாகிய, குடும்பபாரம் - சம்சாரபாரமானது, வெறும்பொய்யென்று - முழுதும் அசத்தியமென்று, ஆசையறநீக்கி - (சம்சார) பாசத்தை முழுதுங்கெடுத்து, எல்லையிலாப் பரமபதத்து - அளவற்ற பிரம பதத்தில், இருந்து வாழ்வாய் ஸ்ரீராமா நீ நிலைபெற்று வாழக்கடவாய், சிங்காரக்கந்தற்பநகர் - அழகாகத்தோற்றுநின்ற கந்தருவ நகரமானது, இருந்தென் - இருந்தென்ன, சிதைவுற்றென் - நாசமடைந்தென்ன, நீதோ நன்றோ-அதனால் நன்மையோதீமையோ, பங்கான - வேறுபாடாகிய, பாசமாயை பாசமாயையான, மனைமக்கள் - மனைவிபுத்திரர்கள், வாழ்ந்தாலென் — வாழ்ந்ததினாலென்ன, கெட்டாலென் -கெட்டதினாலென்ன-எ-று.

எ-து. ஆசையென்னு மகாசற்பமானது நெளிகின்றபுற்றாகிய சம்சாரபாரமானது முழுதும் அசத்தியமென்று சம்சார பாசத்தை முழுதுங்கெடுத்து அளவற்ற பிரமபதத்தில் ஸ்ரீராமா! நீ நிலைபெற்று வாழக்கடவாய். அழகாகத் தோற்றுநின்ற கந்தருவ நகரமானது இருந்தென்ன, நாசமடைந்தென்ன, அதனால் நன்மையோ தீமையோ வேறுபாடாகிய பாசமாயையான மனைவிபுத்திரர்கள் வாழ்ந்ததினாலென்ன கெட்டதினாலென்ன--எ-ம். (43)

## தனது சங்கற்பமே துன்பமாமெனல்.

தாரதன மிகுமென்னிற் றளையாகு மப்பாசந் தளைத்துக் கொண் டால், ஆரதனை யறுத்தகலும் விரகுடையா ரறிவில்லா ராசை விஞ் சிக், கூரிதையா மப்போகத் துழன்றுழக்குங் கொடுந்துயரைக் குறி த்தபோதே, தீரதையா மறிஞர்க்கு விரத்தியுள தாய்ச் சித்தந் தெளி யுமன்றே.

இ - ள். தாரதனம் மனைவியிடத்தும் பொருளினிடத்தும், மிகுமெ ன்னில் - (பாச) மிகுமாகில், தளையாகும் - விலங்காகும், அப்பாசந் தளைத் துக்கொண்டால் அவ்வாசையை கட்டிக்கொண்டால், ஆரதனையறுத்த

களும் - ஆரதைக்கெடுத்து நீக்குகின்ற, விரகுடையார் - உபாயமுடையவர்கள், அறிவில்லார் - அஞ்ஞானிகள், ஆசைவிஞ்சி - இச்சைமிகுந்து. கூரிதையா மப்போகத்து - மிகுதியான அந்தப்போகத்தில், உழன்றுழக்கும் - சுழன்று கலக்குகின்ற, கொடுந்துயரை - கொடிய துன்பத்தை, குறித்தபோது - நினைத்தபோது, தீரதையாமறிஞர்க்கு - தீரமுள்ள ஞானிகளுக்கு, விரத்தியுளதாய் - நிராசையுள்ளதாய், சிததந்தெளியும் - மனமானது தெளிவை யடையும்-எ-று.

எ — து. மனைவியிடத்தும் பொருளினிடத்தும் பாசமிகுமாகில் விலங்காகும். அவ்வாசையைக் கட்டிக்கொண்டால் ஆரதைக்கெடுத்து நீக்குகின்ற உபாயமுடையவர்கள் அஞ்ஞானிகள் இச்சைமிகுந்து மிகுதியான அநதப்போகததில் சுழன்று கலக்குகின்ற கொடியதுன்பத்தை நினைத்தபோது தீரமுள்ள ஞானிகளுக்கு நிராசையுள்ளதாய் மனமானது தெளிவையடையும்—எ-ம்.

(இ-உ-க-ம்.) மித்தையாகிய சம்சாரத்தைச் சத்தாகப்பார்த்து வருந்து மூடர்களைப் பார்த்தாவது தான்தெளியவேண்டுமென்பதாம். (44)

## தத்துவத்திற் சகத்திருக்கின்ற தன்மையைக்கூறி அத் தத்துவமுணர்ந்த மகான்கள் இலக்கணங்கூறல்.

ஆனதிறத் தாற்குடும்ப பாரவியா பாரததி லணுகும போது, போனபொருட் கிரங்காபற் பொருந்துபொருண் மாத்திரமே புசித்து வாழ்வாய், தீனமுற வருபொருளைச் சிந்தியார் வநதபொருட் டீதென் றெண்ணார், ஞானபர ராஞேர்க்குச் சுபாவமாங் குணமிதுவே நளினக் கண்ணாய்.

இ - ள். ஆனதிறத்தால் - (இப்படி) யான நன்மையினால், குடும்பபாரம் - சம்சாரபாரமாகிய, வியாபாரத்தி லணுகும்போதில் - தொழிலில் நெருங்குங காலத்தில், போனபொருட்கு - நீங்கினபொருளுக்கு, இரங்காமல் - துன்பப்படாமல், பொருந்துபொருண்மாத்திரம் - வந்தடைந்த பொருளை மாத்திரம், புசிததுவாழ்வாய் - அனுபவித்து (சீவன்முத்தனாக) வாழக்கடவாய், தீனமுற - இப்போது) இல்லாமையாக, வருபொருளைச்சிந்தியார் - (இனி) வருகின்ற பொருள்களை நினையார்கள், வந்தபொருட்டீதென்றெண்ணார் - வந்தபொருளைக் குற்றமாகநினையார், ஞானபரராஞேர்க்கு - பூரணஞானத்தை யுடையவர்களுக்கு, நளினக்கண்ணாய - தாமரைக்கண்ணனே, இதுவே சுபாவமாங் குணம் - இதுவே யியல்பானகுணம்-எ-று.

எ — து. இப்படியான நன்மையினால் சம்சார பாரமாகிய தொழிலில் நெருங்கும் காலத்தில் நீங்கினபொருளுக்கு துன்பப்

படாமல் வந்தடைந்த பொருளைமாத்திரம் அனுபவித்து சீவன்முத்த ளுகவாழக்கடவாய். இப்போது இல்லாமையாக இனிவருகின்றபொ ருள்களை நினையார்கள். வந்தபொருளைக் குற்றமாக நினையார். பூரண ஞானத்தை யுடையவர்களுக்கு தாமரைக்கண்ணனே இதுவேயியல் பானகுணம்—எ-ம். (45)

## சத்துக்கள் இலக்கணங்கூறி அனுபவமுண்டாகுஞ் சாதனங்கூறல்

கண்டனவெல் லாம்பொய்யென் றுள்ளத்தி லனைத்திலும்வெங் காத னீத்த, பண்டிதரா முழுதுணர்ந்த பெரியோரை யீராது பாச மாயை, உண்டிலையென் பவற்றிடையின் சுத்தமாம் பதம்புந்தி யூன் றப் பற்றி, விண்டவுடற் குட்புறம்பா முலகைநீ பற்றுதலும் விடலு ம் வேண்டா.

இ - ள். கண்டனவெல்லாம் - காணபபட்டஅனைத்தும், பொய்யென்று- மித்தையேயென்று, உள்ளத்தில் - மனதில், அனைத்திலும் - சகலவிடயங்களி லும், வெங்காதனீத்த - வெம்மையான ஆசையைநீககின, பண்டிதராம் -பண் டிதரான, முழுதுணர்ந்த - சர்வமுந்தெரிந்த, பெரியோரை - சத்துக்களை, பாசமாயை - பாசமாயையானது, ஈராது - வாதிக்கமாட்டாது, உண்டிலையெ ன்பவற்றிடையின் - சத்து அசத்தென்று சொல்லப்பட்ட அவ்விரண்டின் மத் தியில், சுத்தமாம்பதம் - பரிசுத்தமான பரமபதத்தில், புந்தியூன்றப்பற்றி-அறி வைத்திடமாக அழுத்தி, விண்டவுடற்கு - வேறான சரீரத்துக்கு, உட்புறம்பா முலகை - உள்ளும்புறம்புமான சகத்தை, நீ - ஸ்ரீராமாநீ, பற்றுதலும் - பிடித் தலும், விடலும் வேண்டா - விடுத்தலும் வேண்டாம்—எ-று.

எ - து. காணப்பட்ட அனைத்தும் மித்தையே என்று மனதில் சகல விடயங்களிலும் வெம்மையான ஆசையை நீக்கின பண்டிதரா ன சர்வமுந்தெரிந்த சத்துக்களைப பாசமாயையானது வாதிக்கமாட் டாது. சத்து அசத்தென்று சொல்லப்பட்ட அவ்விரண்டின் மத்தி யில் பரிசுத்தமான பரமபதத்தில் அறிவைத்திடமாக அழுத்திவேறா ன சரீரத்துக்கு உள்ளும்புறமபுமானசகத்தை ஸ்ரீராமா! நீ பிடித்த லும் விடுத்தலும் வேண்டாம்—எ-ம். (46)

## இராகத்துவேஷ நீக்கத்தின் பலன்கூறல்.

எக்கருமத் தினுமிச்சை யநிச்சையற நின்றுணர்வை யெய்தி னோர்க்கே, அக்கருமங் களிலறிவு பற்றாதா மரையிலேசே ரம்பு போ லத், தொக்கபொறி விடயநலஞ் சுவையறநின் மனமாரத் தோன்றில்

வீரா, தக்கவுணர் வுணர்ந் தோனாய்ப் பவக்கடல்கள் கடந்தன்றே சகநந்தீர்ந்தாய்.

இ - ள். எக்கருமத்திலும் - எந்ததொழில்களிலும், இச்சை யநிச்சையற நின்று - இராகத்துவேஷமில்லாமலிருந்து, உணர்வையெய்தினோர்க்கு-ஆத்ம ஞானத்தை அடைந்தவர்களுக்கு, அககருமங்களில்-அத்தொழில்களில், தாம ரையிலைசேரம்புபோல - தாமரையிலையிற்சேர்ந்திருக்கின்ற சலத்தைப்போல, அறிவுபற்று - அறிவானது பற்றமாட்டாது, தொக்கபொறிவிடயம் - தேகஇந் திரிய விடயங்களின், நலஞ்சுவையற - நன்மையான இரசத்தைவிடும்படி, வீ ரா - இராமா, நின்மனம்-உனது மனம், ஆரத்தோன்றில் - பொருந்தவுண்டா னால், தக்கவுணர்வுணர்ந்தோனாய் அறியத்தக்க ஆத்மஞானத்தையறிந்தவனாய், பவக்கடல்கள்கடந்து - சம்சாரசாகரங்களைக்கடந்து, அன்றேசகநந்தீர்ந்தாய்- அப்போதே பவத்தை நீங்கினாய்—எ-று.

எ — து. எந்தத்தொழில்களிலும் இராகத்துவேஷ மில்லாம லிருந்து ஆத்மஞானத்தை யடைந்தவர்களுக்கு அத்தொழில்களில் தாமரையிலையிற் சேர்ந்திருக்கின்ற சலத்தைப்போல அறிவானது பற்றமாட்டாது. தேக இந்திரிய விடயங்களின் நன்மையான இர சத்தைவிடும்படி இராமா! உனதுமனம் பொருந்தவுண்டானால் அறி யத்தக்க ஆத்மஞானத்தை அறிந்தவனாய் சம்சாரசாகரங்களைக்கட ந்து அப்போதே பவத்தை நீங்கினாய்--எ—ம். (47)

## வாசனையுள்ள மனத்தைக் கெடுக்கவேண்டும் எனல்.



உச்சமுறு பதம்வேண்டி லனைத்துவா தனையினுநின் றுள்ளந் தன்னை, நிச்சயமா முணர்வாலே நீக்குவாய் மலரின்மண நீங்கு மா போல், துச்சமுறு வாதனையாந் தரங்கநீர் பவக்கடலிற் றுளைவார்க் கெல்லாம், அச்சமற நல்லறிவு மரக்கலமாய்க் கரையேற்று மயலொ ன்றுண்டோ.

இ - ள். உச்சமுறுபதம்வேண்டில் - மேலான பரமபதத்தை விரும்பி னால், அனைத்துவாதனையினின்ற-சகலவாசனைகளிலுமிருந்த, உள்ளந்தன்னை- மனதை, நிச்சயமாமுணர்வால் - மெய்யாகிய ஆத்மஞானத்தினால், மலரின் மணம் - புட்பத்தினின்றும் வாசனை, நீங்குமாபோல் - நீங்குவதுபோல, நீக்கு வாய் - போக்குவாய், துச்சமுறுவாதனையாம் - ஈனமுள்ள வாசனையாகிய, தர ங்கநீர் - அலைகளையுடைய சல (நிறைந்த), பவக்கடலில் - சநநசாகரத்தில், துளைவார்க்கெல்லாம் - அமிழுபவர்க் கெல்லாம், அச்சமற - பயமின்றி, நல்லறிவு மரக்கலமாய்க் கரையேற்றும் - சுகபோதங் கப்பலாகிக்கரையே ற்றுமே (யன்றி), அயலொன்றுண்டோ - வேறொன்றுண்டாமோ.எ-று.

எ - து. மேலான பரமபதத்தை விரும்பினுல் சகலவாசனைகளி லுமிருந்த மனதை மெய்யாகிய ஆத்ம ஞானத்தினுல் புட்பத்தினின் றும் வாசனை நீங்குவதுபோலப் போக்குவாய். ஈனமுள்ள வாசனையா கிய அலைகளையுடைய சலநிறைந்த சநநசாகரத்தில் அமிழுபவர்க்கெல் லாம் பயமின்றிச் சுகபோதங் கப்பலாகிக் கரையேற்றுமேயன்றி வேறுண்டாமோ—எ-ம். (48)

## சகநிஷ்டை அறிவித்தல்.

பராபரங்கண் டோரனைத்தும் பின்செல்வ ருலகியல்பு பற்றார்நீங்கார்
சுராலயநந் தனவனத்தும் பற்றார்கள் சூனியத்துந் துயரமெய்தார்
விராவுநிய தியுந்தள்ளார் வெய்யவன்போ லனுசரிப்பர் மேன்மை
சான்றோர், இராகவனே யிவ்வாறு நடத்தியென வசிட்டமுனி யிய
ம்ப லோடும்.

இ - ள். பராபரங்கண்டோர் ஆத்மஞானம் பிரத்தியட்சமானவர்கள், அனைத்தும் - சகலத்தையும், பின்செல்வர் - அனுசரிப்பார்கள், உலகியல்பு பற்றார் நீங்கார் - சகத்தின்குணங்களைப் பொருந்தார்கள் நீங்கார்கள், சுராலயம்- சுவர்க்கத்திலுள்ள, நந்தனவனத்தும் - புட்பவனத்தையும், பற்றார்கள்-இச்சிக் கார்கள், சூனியத்தும் - சூனியமான இடத்திலும், துயரமெய்தார் - துன்ப மடையார்கள், வெய்யவன்போல் சூரியனைப்போல, விராவுநியதியுந்தள்ளார்- சொல்லாநின்ற நியதியையுந் தள்ளமாட்டார்கள், மேன்மைசான்றோர்-மேன் மையான சத்துக்கள், அனுசரிப்பர் -(சகலத்தையும்) அனுசரிப்பார்கள், இரா கவனே - ஸ்ரீராமா, இவ்வாறு - இந்தப்பிரகாரம், நடத்தியென - நடப்பா யென்று, வசிட்டமுனி இயம்பலோடும் - வசிட்டமுனி சொன்னவளவில்.

எ - து. ஆத்மஞானம் பிரத்தியட்சமானவர்கள் சகலத்தையும் அனுசரிப்பார்கள். சகத்தின் குணங்களைப் பொருந்தாமல் நீங்கார் கள், சுவர்க்கத்திலுள்ள புட்பவனத்தையும் இச்சிக்கார்கள். சூனிய மானவிடத்திலும துன்பமடையார்கள். சூரியனைப்போல சொல்லா நின்ற நியதியையுந் தள்ளமாட்டார்கள். மேன்மையான சத்துக்கள் சகலத்தையும் அனுசரிப்பார்கள். ஸ்ரீராமா! இந்தப்பிரகாரம் நடப் பாயென்று வசிட்டமுனி சொன்னவளவில்—எ-ம்.

இ-ரு-க-ம். திருக்கு திருஷ்டியினுல் திரிசிய திருஷ்டியைக் கெடுக்கிற சிற்சுபாவமாய் விளங்குவர் என்பதாம. (49)

## அநுபவத்தில் மகிழ்தல்.

பாத்துவகே ளிவ்வாறு பரமமுனி பரமபதம் பகரக் கேட்டுத்
திரத்துவமா நிறைந்தான்போற் சீராம னமலமாய்த் தீர்ந்து சித்தந்
தரத்துவமை யில்லாத மெய்ஞ்ஞான நல்லமுதாற் றதும்பித் தண்
ணென், றுரத்துவளர் சந்திரன்போ னிறைவுற்றான் வசிட்டனு மீண்
டுரைப்ப தானான்.

இ-ள். பரத்துவகேள் பரத்துவாசரே கேளென்று (வான்மீகர்) சொல்லுவார், இவ்வாறு - இந்தப்பிரகாரம், பரமமுனி - மேலான வசிட்டமுனியானவர், பரமபதம் பகரக்கேட்டு - பிரமபதத்தைச் சொல்லக்கேட்டு, திரத்துவமா நிறைந்தான்போல் - திரமாகப் பூரணமானவனைப்போல, சீராம னமலமாய் - ஸ்ரீராமர் களங்கமற்றவராய், சித்தந்தீர்ந்து - மனதுநீங்கி, தரத்துவமையில்லாத - வலிமையிற்சமானமில்லாத, மெய்ஞ்ஞான நல்லமுதாற்றதும்பி - தத்துவஞானமென்னும் நல்ல அமிர்தத்தினால் நிறைந்து, தண்ணென்று - குளிர்ச்சியாய், உரத்துவளர் சந்திரன்போல் - திரமுற்று வளராநின்ற பூரணச்சந்திரனைப்போல, நிறைவுற்றான் - பூரணத்தையடைந்தான், வசிட்டனுமீண்டுரைப்பதானான் வசிட்டமுனி திரும்பவும் சொல்லத்தொடங்கினார்.

எ-து. பரத்துவாசரே கேளென்று வான்மீகர் சொல்லுவார். இந்தப்பிரகாரம் மேலான வசிட்டமுனியானவர் பிரமபதத்தைச்சொல்லக்கேட்டு திரமாகப் பூரணமானவனைப்போல ஸ்ரீராமர் களங்கமற்றவராய் மனதுநீங்கி வலிமையிற் சமானமில்லாத தத்துவஞானமென்னும் நல்ல அமிர்தத்தினால் நிறைந்து குளிர்ச்சியாய்த் திரமுற்று வளராநின்ற பூரணச்சந்திரனைப்போல பூரணத்தையடைந்தான். வசிட்டமுனி திரும்பவுஞ் சொல்லத்தொடங்கினார்—ஏ-ம். (50)

## சகஞ் சங்கற்பவடிவமாம என்பதை வற்புறுத்து நிமித்தம் சிருஷ்டிகளில் ஒவ்வொன்றுக்கும் நியமம் இன்றெனல்.

ஒருகால மரன்படைப்ப னொருகால மயன்படைப்ப னுலகமெல்லாம
ஒருகால மரிபடைப்ப னொருகால முனிவர்படைப் புள்ளதாகும்
ஒருகாலம் புயத்துதிப்ப னொருகால்வா ரியினுதிப்ப னுயர்ந்த·வேதா
ஒருகாலண் டத்துதிப்ப னொருகால்வின் ணகத்திலே யுதிப்பனன்றே

இ-ள். உலகமெல்லாம் - சகங்களனைத்தையும், ஒருகாலமரன்படைப்பன் - ஒருகாலத்திற் சிவன் சிருஷ்டிப்பார், ஒருகலம் அயன் படைப்பன்-ஒரு

காலத்திற்பிரமன் சிருஷ்டிப்பார், ஒருகாலமரிபடைப்பன் - ஒருகாலத்தில் விஷ்ணுசிருஷ்டிப்பார், ஒருகாலமுனிவர் படைப்புள்ளதாகும்-ஒருகாலத்தின் முனிவர்சிருஷ்டிப்பார்கள், உயர்ந்தவேதா - மேலான பிரமாவானவர், ஒருகாலம்புயத்துதிப்பன் - ஒருகாலத்தில் தாமரையிற் பிறப்பார், ஒருகால்வாரியிலுதிப்பன் - ஒருகாலத்தில் சலத்திற் பிறப்பார், ஒருகாலண்டத்துதிப்பன்-ஒருகாலத்தில் அண்டத்திற் பிறப்பார், ஒருகால் விண்ணகத்திலேயுதிப்பன் - ஒருகாலத்தில் ஆகாயத்திற் பிறப்பார்—எ-று.

எ - து. சகங்களனைத்தையும் ஒருகாலத்திற் சிவன் சிருஷ்டிப்பார், ஒருகாலத்திற் பிரமன் சிருஷ்டிப்பார், ஒருகாலத்தில் விஷ்ணு சிருஷ்டிப்பார், ஒருகாலத்தில் முனிவர் சிருஷ்டிப்பார்கள், மேலான பிரமாவானவர் ஒருகாலத்தில் தாமரையில் பிறப்பார், ஒருகாலத்தில் சலத்திற் பிறப்பார், ஒருகாலத்தில் அண்டத்திற் பிறப்பார், ஒருகாலத்தில் ஆகாயத்திற் பிறப்பார்—எ-ம். (51)

இதுவுமது

வன்மரங்க ளேநெருங்கு மொருபடைப்பி லொருபடைப்பின் மனிதர் துன்னும், பன்மலைக ளேநெருங்கு மொருபடைப்பி லொரு படைப்பிற் படர்மண் ணாகுங், கன்மயமா மொருபடைப்பி லொரு படைப்பிற் றசைமயமாய்க் காண லாகும், பொன்மயமா மொருப டைப்பி லிப்படியே பலவிதமாம் பூமி தானே.

இ - ள். ஒருபடைப்பில் - ஒருசிருஷ்டியில், வன்மரங்களேநெருங்கும் வலிமையான தருக்களே நிறைந்திருக்கும், ஒருபடைப்பில் - ஒருசிருஷ்டியில், மனிதர்துன்னும் - மானிடரே நிறைந்திருப்பர், ஒருபடைப்பில், ஒருசிருஷ்டியில், பன்மலைகளேநெருங்கும்-பலவரைகளே நிறைந்திருக்கும், ஒருபடைப்பில் - ஒருசிருஷ்டியில், படர்மண்ணாகும் - மண்ணாகவே (நிறைந்) திருக்கும், ஒருபடைப்பில் - ஒருசிருஷ்டியில், தசைமயமாய்க் காணலாகும்-மாமிசமாய்ப் பார்க்கப்படும், ஒருபடைப்பில் - ஒருசிருஷ்டியில், பொன்மயமாம் - தங்கமயமாயிருக்கும், பூமிதான் - பூமியானது, இப்படியே பலவிதமாம் - இவ்வண்ண நாநாவிதமாயிருக்கும் எ-று.

எ - து. ஒருசிருஷ்டியில் வலிமையான தருக்களே நிறைந்திருக்கும். ஒருசிருஷ்டியில் மானிடரே நிறைந்திருப்பர். ஒருசிருஷ்டியில் பலவரைகளே நிறைந்திருக்கும். ஒருசிருஷ்டியில் மிகுந்த மண்ணாகவே நிறைந்திருக்கும். ஒருசிருஷ்டியில் கல்லுமயமாய் நிறைந்திருக்கும், ஒருசிருஷ்டியில் மாமிசமாய்ப் பார்க்கப்படும், ஒரு சிருஷ்டியில் தங்கமயமாயிருக்கும். பூமியானது இவ்வண்ண நாநாவிதமாயிருக்கும்—எ - ம். (52)

இதுவுமது.

வான்முதலா மண்முதலா நீர்முதலாந் தீமுதலா மற்றை வாயு தான்முதலா மிப்படியே சிருட்டிதொறு மோரொன்று தலைமை யாகும், யான்முதலோ ரயன்சிருஷ்டி சிலேடையா யுனக்குரைத்தே னிந்த வாற்றான், மேன்முதலா நியமமிதற் கொன்றாக விலதுபல விதமாய்த் தோன்றும்.

இ - ள். வான்முதலாம் - ஆகாயமுதலாகும், மண்முதலாம் - பிருதிவு முதலாகும், நீர்முதலாம் - அப்புமுதலாகும், தீமுதலாம் - அக்கினிமுதலாகும், வாயுதான்முதலாம் - காற்றுமுதலாகும், இப்படியே - இவ்வண்ணமே, சிருட்டிதொறும் - சிருட்டிகடோறும், ஒரொன்று தலைமையாகும் - ஓவ்வொன்று முதன்மையாகும், யான்முதல் - நான்முதற்கண், ஓரயன் சிருட்டி- ஒருபிரம சிருஷ்டியை, சிலேடையாய் - சுருக்கமாக, உனக்குரைத்தேன்- உனக்குச்சொன்னேன், இந்தவாற்றால் - இத்தன்மையால், மேன்முதலா நியமம் - முன்புநிகு நியமமானது, இதற்கொன்றாகவிலது - இச்சிருஷ்டிக்கு ஒருவிதமாகவில்லை, பலவிதமாய்த்தோன்றும்-நாநாவிதமாகத்தோற்றும்-எ-று.

எ - து. ஆகாயமுதலாகும், பிருதிவுமுதலாகும், அப்புமுதலாகும், அக்கினிமுதலாகும், காற்றுமுதலாகும், இவ்வண்ணமே சிருஷ்டிகடோறும் ஓவ்வொன்று முதன்மையாகும். நான்முதற் கண் ஒரு பிரமசிருஷ்டியைச் சுருக்கமாக உனக்குச்சொன்னேன். இத்தன்மையால் முன்புநிக்கு நியமமானது இச்சிருஷ்டிக்கு ஒருவிதமாகவில்லை நானாவிதமாகத்தோற்றும்—எ-ம்.. (53)

இதுவுமது.

கிருதமுத லுகநாளு மீண்டுமீண் டுற்பவிக்குங் கிளத்து ஞாலத் தொருபொருளும் வளைத்துவளைத் தநந்தமடங் குற்பவமாயுழலா தில்லை, இருள்பெருகு மாமாயை வன்னனைக்கு முன்னிலையா மியாமிங் கோத, அருமறைதேர் தாசூரன் கதைகேட்டி யிராமவென வறைவ தானுன்.

இ - ள். கிருதமுதலுகநாளும் - கிருதமுதலிய நான்குயுகங்களும், மீண்டு மீண்டுற்பவிக்கும் - திரும்பித்திரும்பிப் பிறந்துவரும், கிளத்து ஞாலத்து - சொல்லப்பட்ட சகத்தின்கண், ஒருபொருளும் - ஒருவஸ்துவாவது, வளைத்து வளைத்து - வளைந்து வளைந்து, அநந்தமடங்கு - அநேகந்தரம், உற்பவமா யுழலாதில்லை - பிறந்து சுழலாது இல்லை, இருள்பெருகு மாமாயை - அந்தகாரமிகுந்த மஹாமாயையினது, வன்னனைக்கு - வர்ணிப்புக்கு, முன்னிலையாம் - முன்னிலையான, அருமறைதேர் - அரியவேதங்களை யாராய்ந்தறிந்த, தாசூரன் கதை - தாசூரமுனிவன் கதையை, யாமிங்கோத - நாமிவ்விடத்திற்சொல்ல, இராம கேட்டியென - ஸ்ரீராமா நீகேட்கக்கடவாயென்று, அறைவதானுன் - வசிட்டமுனி சொல்லத்தொடங்கினு

எ - து. கிருதமுதலியநான்கு யுகங்களும்திரும்பித்திரும்பிப்பிற ந்துவரும், சொல்லப்பட்ட சகத்தின்கண் ஒரு வஸ்துவாவது வளர்ந் துவளர்ந்து அநேகந்தரம்பிறந்து சுழலாது இல்லை. அந்தகார மிகுந்த மகாமாயையினது வர்ணிப்புக்கு முன்னிலையான அரியவேதங்களையா ராய்ந்தறிந்த தாசூரமுனிவன் கதையை-நாமிவ்விடத்திற் சொல்ல, ஸ்ரீராமா ! நீ கேட்கக்கடவாயென்று வசிட்டமுனி சொல்லத்தொட ங்கினர்—எ-ம்.

இ-சு-க-ம். சிருஷ்டிக்குஞ் சிருஷ்டிப்பவருக்குஞ் சிருஷ்டிக்கப்பட்ட வைகளுக்கும் பிரமசத்தியின் நியமப்படியேயன்றி ஓர்வரன்முறையான நியம மின்றென்பதாம். (54)

## இவ்வனுபவத்துக்குத் திருஷ்டாந்தங் கூறவேண்டி மலையின் சிறப்புக் கூறுகை.

வேறு.

இநதப் புவனத தூடே யெழிலார் மலரின் பொழில்வாய்
மநதக் குளிர்கால் கமழு மகத தேசந தன்னிற்
கநதக் கதலி கடம்பு கன்னி காரஞ் செறிந்து
சிநதைக் கினிதா கியவோர் சிறப்பா மலையி னிடத்தே.

இ - ள். இந்தபுவனத்தூடு - இந்தப்பூமிககுள், எழிலார்மலரின் பொழில் வாய் - அழகுநிறைந்த புட்பவனத்தில், மந்தக்குளிர்கால்கமழும் - குளிர்ந்ததெ ன்றற்காற்று பரிமளிக்கின்ற, மகததேசந்தன்னில - மகத தேசத்தில், கந்தக்க தலி - (கருப்பூர) வாசனைபொருந்தியவாழைகளும், கடம்பு - கடம்புவிருட்சங் களும், கன்னிகாரம் - கோங்குவிருட்சங்களும், செறிந்து - நெருங்கி (யிருக்கி ன்ற), சிந்தைக்கினிதாகியவோர் - கருத்துக்கினிமையானவொரு, சிறப்பாமலை யினிடத்து - சிறந்தவரையினிடத்தில்—எ-று.

எ - து. இந்தப்பூமிக்குள் அழகு நிறைந்த புட்பவனத்தில்குளி ர்ந்ததென்றற்காற்று பரிமளிக்கின்ற மகததேசத்தில் கருப்பூரவாசனை பொருந்தியவாழைகளும், கடம்பவிருட்சங்களும், கோங்குவிருட்சங் களும் நெருங்கியிருக்கின்ற கருததுக்கினிமையான ஒரு சிறந்தவரை யினிடத்தில்—எ-ம். (55)

## தாசூரமுனிவன் பெருமையைக் கூறல்.

பரலோ கஞ்சேர் தவமே பண்ணி யயன்போ லுயர்ந்த
சரலோ மாவின் மைந்தன் றாசூ ரப்பெயர் முனிவன்
சுரலோ கத்தின் குருவின் றேன்றற் கசனை யொப்பான்
நரலோ கத்தின் மேலா னவைதீர் தவத்தாற் பெரியோன்.

இ-ள். பரலோகஞ்சேர் - மோட்சவுலகத்தையடைவதற்கான, தவம் பண்ணி - தவத்தைச்செய்து, அயன்போலுயர்ந்த - பிரமாவைப்போலுயர்வாகிய, சரலோமாவின்மைந்தன் - சரலோமாவென்னும் பெயரையுடைய முனிவனது புதல்வனாகிய, தாசூரபபெயர் முனிவன் - தாசூரனென்னு நாமத்தையுடைய முனிவன், சுரலோகத்தின் - தேவலோகத்திலுள்ள, குருவின் றோன்றல் - பிரகஸ்பதி பகவானுடைய குழந்தையாகிய, கசனையொப்பான் - கசனுக்குச் சமானமானவன், நரலோகத்தின் மேலாம் - மானிடலோகத்தின் மேலானவன், நவைதீர்தவத்தாற்பெரியன் - குற்றமற்ற தவத்தினாற் பெரியவன்-எ-று.

எ-து. மோட்சவுலகத்தை யடைவதற்கான தவத்தைச்செய்து பிரமாவைப்போ லுயர்வாகிய சரலோமா வென்னும் பெயரையுடைய முனிவனது புதல்வனாகிய தாசூரனென்னுநாமத்தையுடைய முனிவன் தேவலோகத்திலுள்ள பிரகஸ்பதி பகவானுடைய குழந்தையாகிய கசனுக்குச் சமானமானவன். மானிடலோகத்தின் மேலானவன். குற்றமற்ற தவத்தினாற்பெரியவன்—எ-ம். (56)

## பிதா பூரணமாதல்

தனைய னொருவ னோடுஞ் சரலோ மாவா முனிவன்
அனைய கிரியின் வனத்தி லநேக யுகஞ்சென் றதற்பின்
புனையுங் கூடு கழிந்து புட்போ வதுபோற் போகி
வினைசெய் யுடலை விட்டு விண்ணோர் வடிவை யெடுத்தான்.

இ-ள். தனையனொருவனோடும் - ஒருபுத்திரனுடன், சரலோமாவாமுனிவன் - சரலோமாவென்னு முனியானவன், அனையகிரியின் வனத்தில் - அந்த மலையின்கண்ணுள்ள கானகத்தில், அநேக யுகஞ் சென்றதற்பின் - பலயுகங் கழிந்தபின்பு, புனையுங் கூடுகழிந்து - செய்த கூண்டைவிட்டு, புட்போவது போல் - பறவை செல்வதுபோல, வினைசெய்யுடலை விட்டுப்போகி - வினையியற்றுஞ் சரீரநீங்கிப்போய், விண்ணோர்வடிவை யெடுத்தான் - தேவரூபங் கொண்டான்-எ-று.

எ-து. ஒரு புத்திரனுடன் சரலோமாவென்னு முனியானவன் அந்த மலையின்கண்ணுள்ள கானகத்தில் பலயுகங் கழிந்த பின்பு செ

ய்த கூண்டைவிட்டு பறவை செல்வதுபோல வினையியற்றுஞ் சரீர நீங்கிப் போய் தேவரூபங்கொண்டான்—எ-ம். (57)

## தாரூரன் விசனமடைதல்.

தனியே யகத வனத்தே தாரூ ரபபேர் முனிவன்
இனிய தாதை யிறவுக் கிரங்கி யுதகத்தி யற்றும்
புனித மான பிரம பூசை முழுதும் புரியான்
கனியு நெஞ்ச னன்றில் கதறு மாபோற் கதறி.

இ - ள். தனியேயந்தவனத்து - தனியனாக அக்கானகத்தில், தாரூரப்பேர்முனிவன் - தாரூரனென்னு நாமத்தையுடைய முனிவனானவன், இனிய தாதையிறவுக்கிரங்கி - இனிமையான பிதாவின் மரணத்துக்கழுது, உதகத்தியற்றும் - நீராற்செய்கின்ற, புனிதமானபிரம - பரிசுத்தமாகிய பிராமணன், பூசைமுழுதும்புரியான் பூசைமுழுவதும் செயயாமல், கனியுநெஞ்சன் - இரங்கிய மனதுடையவனாய், அன்றில - (புருடனைப்பிரிந்த) அன்றிற்பட்சியானது, கதறுமாபோற்கதறி - கதறுகின்றதுபோலக் கதறிக்கொண்டு-எ-று.

எ — து. தனியனாக அககானகத்தில் தாரூரனென்னு நாமத்தையுடைய முனிவனானவன இனிமையான பிதாவின் மரணததுக்கு அழுது நீராற்செய்கின்ற பரிசுத்தமாகிய பிராமணன் பூசைமுழுவதுஞ்செய்யாமல் இரங்கிய மனதுடையவனாய்ப புருடனைபபிரிந்த அன்றிற பட்சியானது கதறுகின்றது போலக் கத்திககொண்டு-எ-ம்.

## வனதேவதை தெளிவித்தல்.

தன்னை யன்னை பிரிவாற் சால வெம்பித் தளர்நத
மைநதன் றன்னை யருளால் வனதே வதைகண் டருளி
முநது ரூழ னின்று முனிமா மகவா முனிவா
சிந்தை தெளிந்தோய் தெளியாச் சிறியோ ரெனநொந தயரேல்.

இ - ள். தந்தையன்னைபிரிவால் - மாதாபிதாககளின் பிரிவினால், சால வெம்பித்தளர்ந்த-மிகவும் வெப்பத்தோடுந் தளர்வுற்ற, மைந்தன்றன்னை - புத்திரனாகிய தாரூரனை, அருளால - கிருபையினால், வனதேவதைகண்டருளிய- வனதேவதைபார்த்து கிருபைசெய்து, முந்துரூமனின்று - பிரத்தியட்சமாகா மனின்று, முனிமாமகவா - மகாமுனியின் குமாரனே, முனிவா - முனியானவரே, சிந்தைதெளிந்தோய் - மனந்தெளிந்தவரே, தெளியாச் சிறியோரென- தெளிவில்லாத மூடர்களைப்போல, நொந்தயரேல் - துன்பமுற்றுத் தளர்ச்சியடையாதே-எ-று.

எ - து. மாதாபிதாக்களின் பிரிவினால் மிகவும் வெப்பத்தோடுந் தளர்வுற்ற புத்திரனாகிய தாசூரனைக் கிருபையினால் வனதேவதை பார்த்துக்கிருபைசெய்துபிரத்தியட்சமாகாமல் நின்று மகாமுனியின் குமாரனே! முனியானவரே! மனந்தெளிந்தவரே! தெளிவில்லாத மூடர்களைப்போல துன்பமுற்றுத் தளர்ச்சியடையாதே—எ-ம். (59)

இதுவுமது.

அனித்த மான குடும்பத் தபத்த முணர்கின் றிலையென்
சனித்தபொழுதே மரித்தல் சற்றுந் தப்பா கண்டாய்
பனித்த விழியோ டயர்வாய் பகலோ னுதயஞ் செய்தால்.
இனித்தன் னிலையத்த மனத் தெய்தா னென்பா ருளரோ.

இ - ள். அனித்தமான குடும்பத்து-அநித்தியமாகிய சம்சாரத்தினுடைய, அபத்தமுணர்கின்றிலையென் - பொய்யை நீ யறியாததென்ன காரணம், சனித்தபொழுதே - பிறந்தபொழுதே, மரித்தல் சற்றுந்தப்பாகண்டாய் மரணம் எவ்வளவுந் தப்பமாட்டாது, பனித்தவிழியோடயர்வாய் - கண்ணீர்சொரிய அழுகின்றவனே, பகலோ னுதயஞ்செய்தால் - சூரியன் உதயமானால், இனித் தன்னிலையத்தமனத்து - மேற்றனது நிலையான அஸ்தமானத்தை, எய்தானென்பாருளரோ - அடையமாட்டானென்று சொல்வாருமுண்டோ-எ-று.

எ - து. அநித்தியமாகிய சம்சாரத்தினுடைய பொய்யை யறியாத தென்னகாரணம்? பிறந்தபொழுதே மரணம் எவ்வளவுந் தப்பமாட்டாது. கண்ணீர் சொரிய அழுகின்றவனே சூரியனுதயமானால் மேல் தனது நிலையான அஸ்தமானத்தை அடைய மாட்டானென்று சொல்வாரு முண்டோ—எ-ம்.

இ-சு-க-ம். மாதாபிதாக்கள் பிரிவுக்காற்றாமல் விசனப்பட்டு தெளிவுற்ற தென்பதாம். (60)

சாதன சதுஷ்டயம் உதித்தல்.

வாளா வயரே லென்று மறைந்து தெய்வ முரைப்பக்
கேளா வுணர்ந்து தளருங் கேத மொழித்து நிலையாய்
நீளா ரணத்தின் படியே நீரின் கடன்கண் முடித்து
மீளா நெறிசேர் தவத்தின் மிகவும் விருப்ப மானான்.

இ - ள். வாளாவயரேலென்று - வீணாகத் துன்பமடையாதே யென்று, மறைந்து தெய்வமுரைப்ப - மறைந்திருந்து வன தேவதை சொல்ல, கேளா வுணர்ந்து - கேட்டறிந்து, தளருங்கேத மொழித்து - சோருகின்ற

துன்பத்தைக்கெடுத்து, நிலையாய் - ஸ்திரமாய், நீளாரணத்தின்படியே-நீண்ட வேதவசனத்தின்படியே, நீரின்கடன்கள்முடித்து - உதக பூருவமாய்ச் செய்ய வேண்டிய கிரியைகளைச்செய்து, மீளாநெறிசேர் - திரும்பாத மோட்சத்திற் சேர்க்கின்ற, தவத்தின்மிகவும் விருப்பமானன் - (தாரூரமுனி) தவசின் மிகவும் விருப்பமடைந்தரர்—எ-று.

எ - து. வீணாகத்துன்பமடையாதே என்றுமறைந்திருந்தவன தேவதைசொல்ல, கேட்டறிந்து சோருகின்ற துன்பத்தைக் கெடுத்துத்திரமாய் நீண்ட வேதவசனத்தின் படியே உதகபூருவமாய்ச்செய்யவேண்டிய கிரியைகளைச்செய்து திரும்பாத மோட்சத்திற் சேர்க்கின்ற தாரூரமுனி தவசின் மிகவும் விருப்பமடைந்தார்—எ-ம். (61)

## ஏகாந்தஸ்தானம் விசாரித்தல்.

தக்க பிரம கருமந் தன்னாற் றவமே செய்வான்
தொக்க சங்கற் பத்தாற் சுத்தா சார மிகுந்தான்
மிக்க ஞான மில்லான் விசுத்த மான புவியிற்
புக்க விடங்க ளெல்லாம் புனித மன்றன் றென்னு.

இ - ள். தக்கபிரமகருமந்தன்னால் - (தனக்) குரியவேதசம்பந்தமானகருமத்தினல், தவஞ்செய்வான் - (தாரூரனவன்) தவத்தைச்செய்யும் பொருட்டு, தொக்கசங்கற்பத்தால் - மிகுந்த சங்கற்பத்தினல், சுத்தாசாரமிகுந்தான் - பரிசுத்தமான ஆசாரத்தின்மிகுந்தான், மிக்கஞானமில்லான் - பூரணஞானமில்லாதவன், விசுத்தமானபுவியில் - பரிசுத்தமுள்ளபூமியில், புக்கவிடங்களெல்லாம் புனிதமன்றன்றென்னு - போனவிடங்களியாவுஞ் சீலமல்ல அல்லவென்று-எ-று.

எ - து. தனக்குரிய வேதசம்பந்தமான கருமத்தினால் தாரூரனவன் தவத்தைச்செய்யும்பொருட்டு மிகுந்த சங்கற்பத்தினல்பரிசுத்தமான ஆசாரத்தின் மிகுந்தான். பூரணஞானமில்லாதவன்பரிசுத்தமுள்ள பூமியில் போன இடங்களியாவுஞ் சீலம் அல்ல அல்ல என்று—எ-ம். (62)

## தேவர்களைக் குறித்து யாகஞ்செய்தல்.

வையஞ் சுத்த மல்ல மரத்தி னுனியே புனிதம்
ஐய புட்போ லாங்கே யமர்தற் கான தவமே

செய்ய இற்போ மென்னுச் சிந்தை யார நினைந்து
வெய்ய கனலை மூட்டி விண்ணோர் குழுவை நினைந்து.

இ - ள். வையஞ்சுத்தமல்ல - பூமிபரிசுத்தமல்ல, மாத்திரனுனியே புனிதம் - விருட்சத்தினது முனையேசுத்தமென்று, ஐயபுட்போல் - அழகிய பட்சியைப்போல, ஆங்கமர்தற்கானதவம் - அவ்விடத்திற் பொருந்து தற்காகியதவத்தை, செய்யகிற்போமென்னு - செய்யத்தொடங்குவோமென்று, சிந்தையார நினைந்து - மனதிற்பொருந்தச்சிந்தித்து, வெய்யகனலைமூட்டி - வெவ்வியஅக்கினியைவளர்த்து, விண்ணோர்குழுவை நினைந்து - தேவகணங்களைக்கருதி.

எ — து. பூமி பரிசுத்தமல்ல விருட்சத்தினது முனையேசுத்தமென்று அழகிய பட்சியைப்போல அவ்விடத்திற் பொருந்துதற்காகிய தவத்தைச்செய்யத் தொடங்குவோமென்று மனதிற் பொருந்தச்சிந்தித்து வெவ்விய அக்கினியை வளர்த்துதேவகணங்களைக்கருதி-எ-ம்.

## அக்கினிதேவன் வெளிப்படுதல்.

உடலை யரிந்து வாங்கி யோமஞ் செய்யலோடுங்
கடவு ளவர்க்கென் முகத்தாற் கலைவே தியன்மெய்த் தசைகண்
மிடறும் புயமு முதல வேவ தென்னே யென்னுச்
சுடருங் கனலோ னினைந்து சுருதி புனிமுன் றோன்றி.

இ - ள். உடலையரிந்துவாங்கி - தேகத்தை யரிந்தெடுத்து, ஓமஞ்செய்யலோடும் - யாகஞ்செய்த மாத்திரத்தில், கடவுளர்க்கு - தேவர்களுக்கு, என்முகத்தால்-எனதிடமாக, கலைவேதியன் மெய்த்தசைகள்-கலைஞானத்தையுடைய பிராமணன் சரீரத்திலுள்ள மாமிசங்களால், மிடறும் - கண்டமும், புயமுமுதல - தோள்களுமுதலானவைகள், வேவதென்னே (யென்னு-வேகவேண்டியதென்னவென்று, சுடரின்கனலோனினைந்து - பிரகாசமுள்ள அக்கினிதேவனினைத்து, சுருதிமுனி முன்றோன்றி - மறையவர்முன்பு உதயமாய்—எ-று.

எ - து. தேகத்தை யரிந்தெடுத்து யாகஞ்செய்தமாத்திரத்தில் தேவர்களுக்கு எனதிடமாகக்கலைஞானத்தையுடைய பிராமணன்சரீரத்திலுள்ள மாமிசங்களால் கண்டமும் தோள்களு முதலானதைகள் வேகவேண்டியதென்னவென்று பிரகாசமுள்ள அக்கினிதேவ னினைத்து மறையவர்முன் உதயமாய்—எ-ம் (64)

## அக்கினிதேவன் வரங்கொடுத்தல்.

கருதிற் றென்ன வென்னக் கைகண் முகிழ்த்துத் துதித்துப்
பரிசுத் தமதா மிடமிப் பாரிற் காணே னதனால்
தருவிற் றலையிற் றளிர்மேற் றலந்தந் தருள்வா யென்ன
வரமுற் றுதவிக் கனலோன் வாரித் திரைபோன் மறைந்தான்.

இ - ள். கருதிற்றென்னவென்ன - நீரெண்ணிய காரியமென்ன என்று கேட்க, கைகண்முகிழ்த்து - கரங்களைக் கூப்பிக்கொண்டு, துதித்து - தோத்திரஞ்செய்து, பரிசுத்தமதாமிடம் - பரிசுத்தமான இடத்தை, இப்பாரிற் காணேனதனால் - இப்பூமியிற் கண்டிலனாதலால், தருவின்றலைமேல் - விருட்சத்தினது நுனியில் (இருக்கின்ற), தளிர்மேல் - துளிரின்மேல், தலந்தந்தருள்வாயென்ன - இடங்கொடுத் தனுக்கிரகஞ் செய்வாயென்று தாரூரமுனி கேட்க, வரமுற்றுதவி - வரத்தை முழுதுங்கொடுத்து, கனலோன் - அக்கினிதேவன், வாரித்திரைபோல் - சமுத்திரத்தின் அலையைப்போல, மறைந்தான் - மறைந்தனர்—எ-று.

எ - து. நீர் எண்ணியகாரியம் என்னவென்றுகேட்க, கரங்களைக் கூப்பிக்கொண்டு தோத்திரஞ்செய்து பரிசுத்தமான இடத்தை இப்பூமியிற் கண்டிலனாதலால் விருட்சத்தினது நுனியிலிருக்கின்ற துளிரின்மேல் இடங்கொடுத்து அநுக்கிரகஞ்செய்வாயென்று தாரூர முனிகேட்க வரத்தை முழுதுங்கொடுத்து அக்கினிதேவன் சமுத்திரத்தின் அலையைப்போல மறைந்தனர்—எ-ம். (65)

## பரிசுத்தமுள்ள ஸ்தானத்து இருத்தல்.

கானத் திடையோர் கடப்பங் காரின் பதத்தைக் கடந்து
வானத் துயர்ந்த ததன்மேல் வருபல் லவமென் றளிரின்
தானத் தைய மின்றித் தாரூ ரன்மு னிருந்து
மேனற் றவமே செய்வான் மிகவும் விரும்பு மனத்தான்.

இ - ள். கானத்திடை - காட்டினிடத்துள்ள, ஓர்கடப்பம் - ஒருகடம்ப விருட்சமானது, காரின்பதத்தைக் கடந்து - மேகமண்டலத்தைத் தாண்டி, வானத்துயர்ந்தது - ஆகாசத்தை யளாவியிருக்கின்றது, அதன்மேல் - அந்த விருட்சத்தின்மேல், வருபல்லவமென் றளிரின் - வளருகின்ற தளிரென்கிற ஆசனத்தினது, தானத்து - இடத்தில், ஐயமின்றி - சந்தேகமின்றி, தாரூரன் முனிருந்து - தாரூரமுனிவரிருந்து, மேனற்றவஞ்செய்வான், மிகவும் விரும்பும் - மேனிட்காமதவஞ்செய்ய மிகவும் விரும்புகின்ற, மனத்தான் - மனதுடையவன்-எ-று.

எ - து. காட்டினிடத்துள்ள ஒரு கடம்ப விருட்சமானது மேக மண்டலத்தைத்தாண்டி ஆகாசத்தை யளாவியிருக்கின்றது. அந்த விருட்சத்தின்மேல் வளருகின்ற தளிரென்கிற ஆசனத்தினது இடத்தில் சந்தேகமின்றி தாசூரமுனிவரிருந்து மேல் நிட்காம தவஞ்செய்ய மிகவும் விரும்புகின்ற மனதுடையவன்—எ-ம். (66)

## யாகம் மானசிகமாகச்செய்தல்.

### வேறு.

ஒருகணந் திசைக ளனைத்தையு நோக்கி யுரைத்தபத் மாதனத் திருந்தான், பெருகிய திசைகண் முழுதினுந் திரும்பி பிரமபா வனையறி வரிதாய்க், கருமமாத் திரத்தி னிற்பதாய்ப் பலமாங் கற்கசம் விரும்புறா மனத்தால், வருடமா றிரண்டு மகங்களை நடத்தி வானவர்க் கவியுண வளித்தான்.

இ - ள். ஒருகணம் - ஒரு க்ஷணநேரத்தில், திசைகளனைத்தையுநோக்கி - திக்குகளையெல்லாம்பார்த்து, உரைத்த பத்மாதனத்திருந்து - சொல்லப்பட்ட பத்மாசனத்திலிருந்து, பெருகிய திசைகண் முழுதினும் - விரிந்த திக்குகள் அனைத்திலு நின்று, திரும்பி - நீங்கி, பிரமபாவனையறிவரிதாய - பிரமஞானத்தை அறிதற்கரிதானவனாய், கரும மாத்திரத்தினிற்பதாய் - கருமமட்டிலிருப்பதாய், பலமாங்கற்கசம் - பிரயோசனமாகிய காற்பண்ணியத்தை, விரும்புறா மனத்தால் - விரும்பாத மனதினால், ஆறிரண்டுவருடம் - பன்னிரண்டுவருடம், மகங்களை நடத்தி - யாகங்களைச்செய்து, வானவர்க்கு - தேவர்களுக்கு, அவியுணவளித்தான் - அவிர்ப்பாகங்கொடுத்தான்.

எ - து. ஒருக்ஷணநேரத்தில் திக்குகளையெல்லாம் பார்த்துச் சொல்லப்பட்ட பத்மாசனத்திலிருந்து விரிந்த திக்குகள் அனைத்திலுநின்று நீங்கி பிரமஞானத்தை அறிதற்கரிதானவனாய் கருமமட்டிலிருப்பதாய்ப் பிரயோசனமாகிய காற்பண்ணியத்தை விரும்பாத மனதினால் பன்னிரண்டுவருடம் யாகங்களைச்செய்து தேவர்களுக்கு அவிர்ப்பாகங் கொடுத்தான்—எ-ம். (67)

## ஞானம் உதித்தல்.

கோத்திரள் புரவி மணிதரா வியற்றுங் கோதறு வேள்விகண் முற்று சாத்திர விதியா லியற்றினீள் காலந் தவறற நடந்தமை யாலே [ஞ் மாத்திர மான மனமிகத் தெளிந்து வரம்பில தாதலு மாங்கே சேத்திர மான ஞானம்வந் தெய்தி நிறைந்தன வசிதினன் னெஞ்சம்.

இ - ள். கோத்திரன் - கோமேதகங்களாலும், புரவி - அசுவமேதங்களாலும், மனிதர் - நரமேதங்களாலும், இயற்றும் - செய்யாநின்ற, கோதறுவேள்விகண்முற்றும் - குற்றமற்ற யாகங்களை யெல்லாம், சாத்திரவிதியாவியற்றி-வேதவிதிப்படிசெய்து, நீள்காலம் - வெகுகாலம், தவறறநடந்தமையால் - விக்கினமின்றி நடந்ததினால், மாத்திரமானமனம்-மிகவும் ஸ்திரமாகிய மனமானது, மிகத்தெளிந்து-மிகவுந்தெளிவுற்று, வரம்பிலதாதலும் - பூரணமானதினாலும், ஆங்கே - அவ்விடத்தே, நேத்திரமான ஞானம் - கண்ணாகிய ஞானமானது, நன்னெஞ்சம் - நல்லமனதில், வலிதின் வந்தெய்தி - தானேவந்தடைந்து, நிறைந்தன - பூரணமாயிற்று —எ-று.

எ - து கோமேதகங்களாலும், அசுவமேதகங்களாலும், நரமேதகங்களாலும் செய்யாநின்ற குற்றமற்றயாகங்களை யெல்லாம் வேதவிதிப்படிசெய்து வெகுகாலம் விக்கினமின்றி நடந்ததினால் மிகவும் ஸ்திரமாகிய மனமானது மிகவுந் தெளிவுற்று பூரணமானதினாலும் அவ்விடத்தே கண்ணாகிய ஞானமானது நல்லமனதில் தானே வந்தடைந்து பூரணமாயிற்று—எ-ம்.

இ-அ க ம், நிட்காமமாகச்செய்த கிரியாபலத்தினாற் பூரணஞானம் உதித்தது என்பதாம். (68)

## வனதேவதை தெரிசித்தல்.

---

பிறவியா பரணங் கழிந்துவா தனைகள் பேரற மாண்டுள பெரியோன்
இறவிய தளிர்மே லிருத்தலு மொருநா ணிமலமாம் விழிகளுக்கெதி
உறவிரி மலரின் மேகலை யுடுத்த வுயர்வன தேவதை தோன்ற [ரே
அறிவனு நோக்கி யார்கொனீ யென்ன அழகிய வணங்குரை செய்
வாள்.

இ - ள். பிறவியாபரணங்கழிந்து - சநநமறைவானது நீங்கி, வாதனைகள் பேர் - வாசனைகளினுமழும், அறமாண்டுளபெரியோன் - மிகவுங்கெடுத்துள்ள மகானாகிய தாருகமுனி, இறவிய தளிர்மேல் - தேன்கூடுகளுள்ள (கிளைகளின்) துளிரின்மேல், இருத்தலும் - இருந்தகாலத்தில், ஒருநாள் - ஒருதினத்தில், நிமலமாம் விழிகளுக்கெதிரேயுற - நிருமலமாகிய கண்களுக்கு முன்னேவர, விரிமலரின் மேகலையுடுத்த - விரிந்த புஷ்ப வஸதிரங்களைத்தரித்த, உயர்வன தேவதைதோன்ற - உயர்ந்தவன தேவதையானவள் தோற்ற, அறிவனு நோக்கி - ஞானவானான முனிவனும்பார்த்து, ஆர்கொனீயென்ன - நீயாரென்று கேட்க, அழகிய வணங்குரைசெய்வாள் - அழகுள்ள தெய்வப்பெண் சொல்லுவாள் —எ-று.

எ - து. சநகமறைவானது நீங்கி வாசனைகளினுமமும் மிகவுங் கெடுத்துள்ள மகானுகிய தாரூரமுனி தேன்கூடுகளுள்ள கிளைகளின் துளிரின்மேல் இருந்தகாலத்தில் ஒருதினத்தில் நிருமலமாகிய கண்க ளுக்கு முன்னேவர விரிந்த புஷ்ப வஸ்திரங்களைத்தரித்த உயர்ந்த வனதேவதையானவள் தோற்ற ஞானவானுன முனிவனும்பார்த்து நீ யாரென்று கேட்க அழகுள்ள தெய்வப்பெண் சொல்லு வாள்—எ-ம். (69)

## வனதேவதை உரைத்தல்.

பெரியவர் தம்பாற் பெறலரு நேயம் பெற்றவர் விரும்பிய வெல் லாம், அரியனவெனினு மிமைப்பினி லெளிதிலணுகுமென் றய்யமற் றறிந்தேன், தெரியருண் முனிவ நீயுறை வனத்திற் செறிவன தேவ தை யிங்ஙன், விரியலர் கொடியாம் விநோதவீட் டிடையே விருப் பொடு மிருப்பவ ளானே.

இ - ள். பெரியவர் தம்பால் - மகான்களிடத்தில், பெறலருநேயம் பெற் றவர் - பெறுதற்கரிய அன்படைந்தவர்கள், விரும்பியவெல்லாம் - ஆசித்தவ னைத்தும், அரியனவெனினும் - அருமையானாலும், இமைப்பினில் - கணத் தில், எளிதிலணுகுமென்று - இலகுவாய்க்கிடைக்குமென்று, ஐயமற்றறிந் தேன் - சந்தேகமற்றுணர்ந்தேன், தெரியருண்முனிவ - ஞானுனுக்கிரகஞ் செய்கின்றமுனியே, நீயுறைவனத்தில் - நீரெழுந்தருளியிருக்கின்ற (இவ்) வா ரணியத்தில், செறிவனதேவதை - நெருங்கியிருக்கின்ற வனதேவதையாம், இங்ஙன் - இவ்விடத்தில், விரியலர்கொடியாம் - மலர்ந்த புட்பக்கொடியாகிய, விநோத வீட்டிடை - விநோதமுள்ள வீட்டினிடத்தில், நான் விருப்பொடு மிருப்பவன் - யான் பிரியத்துட னிருக்கின்றவள்-எ-று.

எ - து. மகான்களிடத்தில் பெறுதற்கரிய அன்படைந்தவர்கள் ஆசித்த அனைத்தும் அருமையானாலும் கணத்தில் இலகுவாய்க் கிடைக்குமென்று சந்தேகமற்றுணர்ந்தேன். ஞானுனுக்கிரகஞ் செய் கின்ற முனியே நீரெழுந்தருளி யிருக்கின்ற இவ்வாரணியத்தில் நெ ருங்கியிருக்கின்ற வனதேவதையாம். இவ்விடத்தில் மலர்ந்த புட்பக் கொடியாகிய விநோதமுள்ள வீட்டினிடத்தில் யான் பிரியத்துட னிருக்கின்றவள்—எ—ம். (70)

## வனதேவதை தனது சிறுமையை உரைத்தல்.



மேடமா தத்திற் பிறைபதின் மூன்றுகலையுற மேவியநாளில், நா டரு மதன னுயர்திரு நாளி னந்தன வனத்திலேவந்து, கூடியவனதே

வதைக்கணந் தன்னைக் குறுகினேன் பாங்கியர் முழுதுந், தேடரு
மைந்த ருடன்மகிழ்ந் திருந்தார் சிறுவனில் லாதயான் றளர்ந்தேன்.

இ - ள். மேடமாதத்தில் - சித்திரைமாதத்தில், பிறை - சந்திரனானவன் பதின்மூன்றுகலையுற மேவியநாளில் - பதின்மூன்று கலையைப்பொருந்திய திரையோதசியில், நாடருமதனன் - பார்த்தற்கரிய மன்மதனுடைய, உயர் திருநாளில் - மகோச்சவகாலத்தில், நந்தனவனத்தில்-புஷ்பவனத்தில், வந்து கூடின - வந்து சேர்ந்த, வனதேவதைக்கணந்தன்னை - வனதேவதைகளினது கூட்டத்தை, குறுகினேன் - நெருங்கினேன், பாங்கியர்முழுதும் - தோழிகளனைவரும், தேடரும் - தேடுதற்கரிய, மைந்தருடன் - புத்திரர்களுடன், மகிழ்ந்திருந்தார் - களித்திருந்தார்கள், சிறுவனில்லாத யான் - குழந்தையில்லாத நான், தளர்ந்தேன் - தளர்வானேன்—எ-று.

எ - து. சித்திரைமாதத்தில் சந்திரனானவன் பதின்மூன்று கலையைப்பொருந்திய திரையோதசியில் பார்த்தற்கரியமன்மதனுடைய மகோச்சவகாலத்தில் புஷ்பவனத்தில்வந்துசேர்ந்த வனதேவதைகளினது கூட்டத்தை நெருங்கினேன். தோழிகளனைவரும் தேடுதற்கரிய புத்திரர்களுடன் களித்திருந்தார்கள். குழந்தையில்லாத நான் தளர்வானேன்—எ-ம். (71)

## வனதேவதை புத்திரனை வேண்டல்.

---

காதலித் தவர்க்குக் கருதிய தளிக்குங் கற்பக மனையநீ யிருப்ப
நாதனே நாத ரில்லவர் போல நானமகற் கிரங்குத லலனே
நிதரல் வேண்டும் புதல்வனையன்றி நின்னருளென்பொருட் டிலதேல்
தீதறுமதலை யிலதென்னுந் துன்பஞ் செந்தழன் மூழ்கியேதீர்ப்பேன்

இ - ள். காதலித்தவர்க்கு - இச்சித்தவர்களுக்கு, கருதிய தளிக்கும் - எண்ணியதைக்கொடுக்கின்ற, கற்பகமனையநீயிருப்ப - கற்பகவிருட்சத்தையொத்த நீயிருக்க, நாதனே - இரட்சகனே, நாதரில்லவர்போல - இரட்சகரில்லாதவர்களைப்போல, நான்மகற்கிரங்குதலலனே - யான் புத்திரனுக்கு விசனப்படுவது நன்மையோ, புதல்வனை - புத்திரனை, நீ தரல்வேண்டும் - நீர்கொடுக்கவேண்டும், அன்றி - (அப்படி) யல்லாமல், நின்னருள் - உமது கிருபை, என்பொருட்டிலதேல் - என்னிடத்தில்லாமற்போனால், தீதறுமதலையிலதெனுந்துன்பம் - குற்றமற்ற புத்திரனில்லையென்னுந் துக்கத்தை, செந்தழல் - சிவந்த அக்கினியில், மூழ்கியேதீர்ப்பேன் - பிரவேசித்து நீக்குவேன்—எ-று.

எ - து. இச்சித்தவர்களுக்கு எண்ணியதைக் கொடுக்கின்ற கற்பகவிருட்சத்தையொத்த நீயிருக்க இரட்சகனே! இரட்சகரில்லாதவர்களைப்போல யான் புத்திரனுக்கு விசனப்படுவது நன்மையோ? புத்திரனை நீர்கொடுக்கவேண்டும். அப்படியல்லாமல் உமதுகிருபை என்னிடத்தில்லாமற் போனால் குற்றமற்ற புத்திரனில்லையென்னுந் துக்கத்தைச் சிவந்த அக்கினியில் பிரவேசித்து நீக்குவேன்—எ-ம். (72)

## வனதேவதைக்குப் புத்திரனை அளித்தல்.



என்னவு முனிவ னகைத்தொரு மலரை யீந்தொரு மதியிலே யெளிதா, அன்னமே மகவைப் பெறுதியா னீமுன் னருங்கனன்மூழ்குவே னென்று, இன்னலால் வலித்து மகவுவேண் டுதலா லினிதுநீ யீன்றிடு மகவும், பின்னுறு வருத்த நெறியினான் ஞானம் பெறுமெனப் பேசினன் பெரியோன்.

இ - ள். என்னவும் - என்று வனதேவதை சொல்லவும், முனிவனகைத்து - தாசூரமுனி சிரித்து, ஒருமலரையீந்து - ஒருபூவைக்கொடுத்து, ஒருமதியில் - ஒருமாதத்தில், எளிதாய் - இலேசாக, அன்னமே - அன்னம்போன்றவளே, மகவைப்பெறுதி-புத்திரனைப்பெறுவாய், நீமுன் - நீமுன்பு, அருங்கனன்மூழ்குவேனென்று-அரிய அக்கினியிற் பிரவேசிப்பேனென்று சொல்லிய, இன்னலால்வலித்து - துன்பத்தினால் வலிமையாக, மகவுவேண்டுதலால்-புத்திரனை வேண்டியபடியால், இனிது நீ யீன்றிடுமகவும் - இனிமையாக நீபெற்றிடும்புத்திரனும், பின்னுறு - பின்வரப்பட்ட, வருத்தநெறியினால் - வருத்தமான மார்க்கத்தினால், ஞானம்பெறுமென ஞானத்தை யடைவானென்று, பெரியோன் - மகானாகிய தாசூரமுனி, பேசினன் - சொன்னான் எ-று.

எ - து. என்று வனதேவதை சொல்லவும் தாசூரமுனி சிரித்து ஒரு பூவைக்கொடுத்து ஒருமாதத்தில் இலேசாக அன்னம்போன்றவளே! புத்திரனைப்பெறுவாய், நீ முன்பு அரிய அக்கினியிற் பிரவேசிப்பேனென்று சொல்லிய துன்பத்தினால் வலிமையாக புத்திரனை வேண்டியபடியால இனிமையாக நீ பெற்றிடும் புத்திரனும் பின்வரப்பட்ட வருத்தமான மார்க்கத்தினால் ஞானத்தை அடைவானென்று மகானாகிய தாசூரமுனி சொன்னான்—எ - ம். (73)

## புத்திரனை வளர்த்தல்.

கேட்டவண் மகவு கிடைத்ததே யென்று கிளர்முக மதிநிலாக் குலாவ, மீட்டுமம் முனியை நோக்கிநின் னேவல் விரும்பியீண் டுறை குவ னென்ன, வாட்டமின் முனிவ னியைந்திலன் விடுப்ப வந்தன ளணங்குதன் னிடத்திற், சேட்டமா மகவை யளித்தனள் கலையாற் செறிதரு மதியென வளர்த்தாள்.

இ - ள். கேட்டவள் - கேட்ட அந்த வனதேவதையானவள், மகவுகிடைத்ததேயென்று - புத்திரன் லபித்ததென்று, கிளர்முகமதி-பிரகாசிக்கின்றமுகமென்னுஞ்சந்திரன், நிலாக்குலாவ - ஒளிவிளங்க, மீட்டுமம்முனியை - திரும்பவும் அந்தமுனியை, நோக்கி பார்த்து, நின்னேவல் விரும்பி - உமது பணியை இச்சித்து, ஈண்டுறைகுவனென்ன - இவ்விடத்தில் வசிப்பேனென்றுசொல்ல, வாட்டமின் முனிவன் - வாட்டமில்லாத தாருகமுனியானவர், இயைந்திவிடும்ப - சம்மதிக்காமலனுப்ப, அணங்குதன்னிடத்தில் - தெய்வப்பெண்தனிடத்தில், வந்தனள் - வந்தாள், சேட்டமாமகவை - உயர்வுள்ள புத்திரனை, அளித்தனள் - பெற்றாள், கலையாற்செறிதருமதியென - கிரணங்களினால்நிறையப்பெற்ற சந்திரனைப்போல, வளர்த்தாள் - வளர்த்தனள்-எ-று.

எ - து. கேட்ட அந்த வனதேவதையானவள் புத்திரன் லபித்ததென்று பிரகாசிக்கின்ற முகமென்னுஞ்சந்திரன் ஒளிவிளங்கதிரும்பவும் அந்த முனியைப்பார்த்து உமது பணியையிச்சித்து இவ்விடத்தில் வசிப்பேனென்று சொல்ல வாட்டமில்லாத தாருகமுனியானவர் சம்மதிக்காமல் அனுப்ப தெய்வப்பெண் தனதிடத்தில்வந்தாள், உயர்வுள்ள புத்திரனைப்பெற்றாள் கிரணங்களினால் நிறையப்பெற்றசந்திரனைப்போல வளர்த்தனள்—எ-ம். (74)

## புத்திரனோடு முனியைத் தரிசித்தல்.

இருதுவே யாண்டே யெனுங்குறி களினு லிறந்தன வாறிரண் டாண்டு, திருமுனி பாத மகவொடு மடைந்து சென்னிதாழ்ந் தெதிருற நின்று, பெருமைகண் டருள்வாய் நீதா யானே பெற்றவிப் பெருங்குணக் குமரன், அருமறை நூல்க ளனைத்தையு நானே யளித்திட வறிவினு லறிந்தான்.

இ - ள். இருது -, இருதுவும், ஆண்டெனும் - வருடமுமென்கின்ற, குறிகளினால் - குறிப்புகளினால், ஆறிரண்டாண்டு - பன்னிரண்டுவருடம், இறந்தன - கழிந்தன, (பின்பு) திருமுனிபாதம் - அழகியமுனிவருடைய பாதத்தை, மகவொடுமடைந்து - புத்திரனுடன்சேர்ந்து, சென்னிதாழ்ந்து-

சிரசினால் வணங்கி, எதிருறநின்று - முன்னமே நின்று, பெருமைகண்டருள் வாய் - உயர்வையுணர்ந்து அனுக்கிரஞ்செய்கின்ற சுவாமியே, நீதர - நீர் அனுக்கிரகஞ்செய்ய, யான்பெற்ற - நானீன்ற, இப்பெருங்குணக்குமரன் - இப்பெரிதான குணத்தையுடைய புத்திரன், அருமறை நூல்களனைத்தையும் - அரிய வேதசாஸ்திரங்களியாவையும், நானேயளித்திட - யானேயறிவிக்க, அறிவினலறிந்தான் - தனதறிவினால் தெரிந்துகொண்டான்—எ-று.

எ - து. இருதுவும்வருடமு மென்கின்ற குறிப்புகளினால் பன்னிரண்டுவருடம் கழிந்தன. பின்பு அழகியமுனிவருடையபாதத்தை புத்திரனுடன்சேர்ந்து சிரசினால் வணங்கி முன்னமே நின்று உயர்வையுணர்ந்து அனுக்கிரகஞ் செய்கின்ற சுவாமியே! நீர்அனுக்கிரகஞ் செய்ய நானீன்ற இப்பெரிதான குணத்தையுடைய புத்திரன் அரிய வேதசாஸ்திரங்கள் இயாவையும் யானே அறிவிக்கத் தனது அறிவினால் தெரிந்து கொண்டான்—எ-ம்.

## புத்திரன் குருபணியில் நிற்றல்.

கலையெலா நிறைந்தும் பிறப்பிலா ஞானங் கண்டிலன் கடற்பவத்துயரால், அலைவுறு நின்றான் றனையுணர்ஞான மளித்தியென் றணங்குரை செய்ய, நிலைகொண்மா ணுக்க னமக்கிவ னுக்கி நீயகல் கெனவவ ளகன்றாள், தலைமைசேர் முனிவன் றாளிணை விடாதுசற்குணமதலையு நின்றான். (75)

இ - ள். கலையெலாநிறைந்தும் - கலைக்கியானங்களியாவும் பூரணமாயறிந்தும், பிறப்பிலாஞானங்கண்டிலன் - சனியாத ஆத்மஞானத்தைத் தரிசித்திலன், கடற்பவத்துயரால் - சமுத்திரத்தையொத்த சநநதுன்பத்தினால், அலைவுறு நின்றான் - சலனமடைகின்றான், தனையுணர்ஞானம் - தன்னையறிகின்ற ஞானத்தை, அளித்தியென்று - அனுக்கிரகஞ்செய்வாயென்று, அணங்குரை செய்ய - வனதேவதைசொல்ல, இவன் - இவனை, நமக்கு-எமக்கு, நிலைகொண் மாணுக்கனுக்கி - நிலைத்த சீடனாக்கி, நீயகல்கென - நீ நீங்குவாயென்று முனி சொல்ல, அவளகன்றாள் - அந்தவனதேவதையானவள் (புத்திரனைவிட்டு) நீங்கினாள், தலைமைசேர்முனிவன் - பெருமைபொருந்திய முனிவருடைய, தாளிணைவிடாது - உபயபாதங்களைவிடாமல், சற்குணமதலையுநின்றான் - சற்குணச்சீடனு மிருந்தான்—எ-று,

எ - து. கலைக்கியானங்க ளியாவும் பூரணமா யறிந்தும் சனியாத ஆத்மஞானத்தைத் தரிசித்திலன். சமுத்திரத்தை யொத்த சநந துன்பத்தினால் சலனமடைகின்றான். தன்னையறிகின்ற ஞானத்தை அனுக்கிரகஞ் செய்வாயென்று வனதேவதை சொல்ல இவனை

எமக்கு நிலைத்த சீடனாக்கி நீ நீங்குவாயென்று முனிசொல்ல, அந்த வனதேவதையானவள் புத்திரனைவிட்டு நீங்கினாள். பெருமைபொருந்திய முனிவருடைய உபய பாதங்களை விடாமல் சற்குணச்சீடனுமிருந்தான்—எ-ம்.

இ-அ-க-ள். தமது கிருபையினால் வனதேவதைக்குப் புத்திரனைத்தந்து சீடனாக்கிக்கொண்டதென்பதாம். (76)

## ஞானத்தை உபதேசித்ததெனல்.

வருந்திமெய்ஞ் ஞானம் பெறத்தகு மகவை மாதவ னருளினான் மெல்லத், திருந்திய கதைக ளளவைக ளிதிகா சததிலே செப்பிய திறங்கள், பெருந்துணை மறையின் முடிவிலே துணிந்து பேசிய பழம் பொருண் மற்றும், பொருந்திய நெறிக ளநேகமாய் விரித்து பூரண போதமே புகன்றான்.

இ-ள். வருந்தி - வருத்தப்பட்டு, மெய்ஞ்ஞானம் - தத்துவஞானத்தை, பெறத்தகுமகவை - பெறுதற்குரிய சீடனை, மாதவனருளினால் - தாரூரமுனிவனது கிருபையினால், மெல்ல - மெதுவாக, திருந்திய கதைகள் - திருத்தமான கதைகளும், அளவைகள் - பிரமாணங்களும், இதிகாசத்தில் - இதிகாசங்களில், செப்பியதிறங்கள் - சொல்லிய காரணங்களும், பெருந்துணை - மிகவுஞ் சகாயமான, மறையின் முடிவில் வேதாந்தத்தில், துணிந்துபேசிய-தெளிந்து சொல்லிய, பழம்பொருள் - மகாவாக்கியார்த்தங்களும், மற்றும்பொருந்திய நெறிகள் - இன்னுஞ் சேர்ந்திருக்கின்ற மார்க்கங்களு (மாகிய இவைகளை), அநேகமாய்விரித்து - பலவாகவிரித்து, பூரணபோதமே புகன்றான் பூரண ஞானத்தையே சொன்னார்—எ-று.

எ-து. வருத்தப்பட்டுத் தத்துவஞானத்தைப் பெறுதற்குரிய சீடனைத் தாரூரமுனிவனது கிருபையினால் மெதுவாகத் திருத்தமான கதைகளும், பிரமாணங்களும், இதிகாசங்களில் சொல்லிய காரணங்களும், மிகவுஞ் சகாயமான வேதாந்தத்தில் தெளிந்துசொல்லிய மகாவாக்கியார்த்தங்களும், இன்னுஞ் சேர்ந்திருக்கின்ற மார்க்கங்களுமாகிய இவைகளைப் பலவாகவிரித்துப் பூரணஞானத்தையேசொன்னார். (77)

## அந்த ஞானோபதேசத்தைப் போதித்தல்.

திமூழ்க ஃதுநெறி யாக வானிலே மறைந்துபோ யொரு
வேழ் முனிவர் பதவிநின் றணுகி யனையதா ரூரன்வாழ்
ன, தானமே மேவி யிருட்பொழு திருந்து தாபதன் றனைய

னுக் குரைத்த, ஞானநற் பொருள்கள் கேட்டன மதனை நாமுனக் குள்ளவா றுரைப்பாம்.

இ - ள். வானதிழுழ்க - கங்காஸ்நானஞ்செய்ய, அதுநெறியாக - அந்த மார்க்கமாக, வானிலே மறைந்துபோய் - ஆகாயத்தில் திரிசியமாகச்சென்று, ஒருநாள் - ஒருதினம், ஆனவேழ்முனிவர் - ஆகிய சத்தரிஷிகளுடைய, பதவி நின்றணுகி - இடத்திலின்றுநெருங்கி, அனைய தாசூரன் வாழ் கடம்பின் - அக் குணங்களையுடைய தாசூரன் வாழ்கின்ற கடம்ப விருடசத்தின், தானமேவி - இடத்திற்சேர்ந்து, இருட்பொழுதிருந்து - இராக்காலத்திலிருந்து, தாபதன் றனையனுக்குரைத்த - முனிவர் சீடனுக் கனுக்கிரகித்த, ஞான நற்பொருள் கள் கேட்டனம் - ஞானார்த்தங்களைக் கேட்டோம், அதனை - அந்த அருத் தத்தை, நாமுனக் குள்ளவாறுரைப்பாம் - யாமுனக்குள்ள பிரகாரஞ்சொல்லு வோம் — எ-று.

எ - து. கங்காஸ்நானஞ்செய்ய அந்தமார்க்கமாக ஆகாயத்தில் திரிசியமாகச்சென்று ஒருதினம் ஆகிய சத்தரிஷிகளுடைய இடத்தி னின்று நெருங்கி அக்குணங்களையுடைய தாசூரன்வாழுகின்றகடம்ப விருட்சத்தின் இடத்திற்சேர்ந்து இராக்காலத்திலிருந்து முனிவர் சீடனுக்கு அனுக்கிரகித்த ஞானார்த்தங்களைக் கேட்டோம். அந்த அருத்தத்தை யாமுனக்குள்ள பிரகாரஞ் சொல்லுவோம் — எ-று

இ-உ-க-ம். தாசூரமுனி சீடனுக்குப் போதித்த நெறியை இராமருக்குப் போதிக்கத்தொடங்கின ரென்பதாம். (78)

## பிரமசங்கற்பத்தை அரசனாக உருவகப் படுத்தல்.

பிறப்பிலா பிரம மிதுவென வறுதி பிறப்பதோர் கதையிது கே ளாய், சிறப்பதோ ரரசன் வீரமும் புகழுஞ் சிறந்தவன் றெளிஞனும் பெயரோன், இறப்புறு முலக பாலரா யுள்ளா ரவனுடை யேவலை முடிமேல், நிறப்புறு மணிபோற் றாங்குவ ரெவர்க்கு நிலைபெற நிறுத் தொணு நெடியோன்.

இ - ள். பிறப்பிலாப் பிரமம் - சநநமில்லாத பிரமசொரூபமானது, இது வென வறுதி பிறப்பது - ஈதென்று நிச்சயமுண்டாவதாகிய, இதுவோர்கதை - இந்த ஒருகதையை, கேளாய் - நீ கேட்பாய், சிறப்பதோரரசன் - சிறந்தவனாகிய வொரு மஹாராஜன், வீரமும் புகழும் - வீரத்திலும் கீர்த்தியி லும், சிறந்தவன் - சிரேஷ்டமானவன், தெளிஞனும்பெயரோன் - தெளிஞ னென்னு நாமத்தையுடையவன், இறப்புறு முலகபாலராயுள்ளார் - நாச மடைகின்ற சக ரட்சகராயுள்ளவர்கள், அவனுடை யேவலை - அந்தத்தெளி ஞருடைய பணியை, முடிமேல் - சிரசின்மேல், நிறப்புறு மணிபோல் பிரகா சிக்கின்ற இரத்தினத்தைப்போல, தாங்குவர் - தரிப்பார்கள், எவர்க்கும் -

யாவர்க்கும், நிலைபெற நிறுத்தொணுகொடியோன் - திரமாக நிறுத்தற்கரியவி யாபகன் எ-று.

எ - து. சநநமில்லாத பிரமசொரூபமானது ஈதென்று நிச்சய முண்டாவதாகிய இந்த ஒரு கதையை நீகேட்பாய். சிறந்தவனுகிய ஒரு மகாராஜன் வீரத்திலுங் கீர்த்தியிலும்சிரேஷ்டமானவன். தெளி ஞனென்னு நாமத்தையுடையவன். நாசமடைகின்றசகரட்சகராயுள் ளவர்கள் அந்தத்தெளிஞருடைய பணியைச் சிரசின்மேல் பிரகாசிக் கின்ற இரத்தினத்தைப்போலத் தரிப்பார்கள். யாவர்க்கும் திரமாக நிறுத்தற்கு அரியவியாபகன்--எ-ம். (79)

## அரசனது வலியைக் கூறல்.

சாகச மொன்றும் விரும்புவோன் பலவாய்ச் சாலவும்வியப்புறு தொழிலோன், சோகமு மகிழ்வுந் தருவதாய் முயலுந் தொழில்களி ன்றொகுதியை யெண்ணின், மாகட லலைக ளெண்ணினுந் தொலையா வாட்படை வாயுவன் னிகளில், ஏகமு மிவனை யடர்வுறா தாகு மிரு கையால் விண்ணையென் செயலாம்.

இ - ள். சாகசமொன்றும் விரும்புவோன் - மெய்மாத்திரம்விரும்புகின்ற வன், பலவாய் - நாநாவிதமாகி, சாலவும்வியப்புறுதொழிலோன் - மிகவும்அதி சயத்தைவிளைக்குஞ்செயலையுடையவன், சோகமுமகிழ்வுந்தருவதாய் - துன்ப இன்பமுங் கொடுக்கப்பட்டதாய், முயலும் - முயற்சிசெய்கின்ற, தொழில்களி ன்றொகுதியை - தொழில்களின் கூட்டத்தை, எண்ணின் - அளவுசெய்யில் மாகடலலைகள் - பெரிய சமுத்திரத்தின் அலைகளை, எண்ணினுந்தொலையா - எண்ணிலும் எண்ணக்கூடாது, வாட்படை - விளக்கமுள்ள ஆயுதங்களும், வாயு - காற்றுகளும், வன்னிகளில் - அக்கினிகளும் (ஆகிய இவைகளில்), ஏக முமிவனை யடர்வுறாதாகும் - ஒன்றும் இத்தெளிஞனை நெருங்கக்கூடாததாம், இருகையால் விண்ணையென்செயலாம் - இருகரங்களால் ஆகாயத்தை என் செயலாம்—எ-று.

எ - து. மெய்மாத்திரம் விரும்புகின்றவன். நாநாவிதமாகி மிக வும் அதிசயத்தை விளைக்குஞ் செயலையுடையவன். துன்பவின்பமுங் கொடுக்கப்பட்டதாய் முயற்சி செய்கின்றதொழில்களின் கூட்டத்தை அளவுசெய்யில்பெரியசமுத்திரத்தின் அலைகளைஎண்ணிலும்எண்ணக் கூடாது. விளக்கமுள்ளஆயுதங்களும், காற்றுகளும், அக்கினிகளுமா கிய இவைகளில்ஒன்றும் இத்தெளிஞனைநெருக்கக்கூடாததாம். இரு கரங்களால் ஆகாயத்தை என்செயலாம்---எ-ம். (80)

## அரசன் முயற்சியின் பெருமையை அறிவித்தல்.

வரம்பற விரிந்து லீலோற் புரியு மட்டறு முயற்சிக ளனைத்துந்
திரம்பெறு தேவர் மூவரா லெனினுஞ் சிறிதுபிற் செல்லவு மரிதாம்
பரம்பிய விவனுக் குடலமா யெல்லாம் பரிப்பவர் மூவருண் டனையர்
உரம்பயி லுலகை யடர்ந்துநிற் பவர்க ளுத்தமன் மத்திம னதமன்.

இ - ள். வரம்பறவிரிந்து - அளவின்றிப்பரவி, லீலையாற்புரியும்-விளையாட்டினுற்செய்கின்ற, மட்டறுமுயற்சிகளனைத்தும் - அளவற்ற எத்தனங்களியாவும், திரம்பெறுதேவர் - நிலைபெற்றிருக்கின்ற தேவர்களாகிய, மூவராலெனினும் - மும்மூர்த்திகளாலேயும், சிறிதுபிற்செல்லவுமரிதாம் - எவ்வளவும் பின்தொடர்வதற்குக்கூடாதாம், பரம்பியவிவனுக்குடலமாய் - மகத்தாயிருக்கின்ற இவனுக்குத் தேகங்களாய், எல்லாம்பரிப்பவர் - யாவையுஞ் சுமக்கத்தக்கவர்கள், மூவருண்டு - மூன்றுபேர்களுண்டு, அனையர் - அவர்கள், உரம்பயிலுலகை - வலிமையுள்ள சகத்தை, அடர்ந்துநிற்பவர்கள் - அதிக்கிரமித்து இருக்கின்றவர்கள், உத்தமன் மத்திமன் அதமன் - உத்தமன் மத்திமன் அதமன்என்றுஞ் சொல்லப்பட்ட பெயரைபுடையவர்களாம் எறு.

எ — து. அளவின்றிப்பரவி விளையாட்டினுற் செய்கின்ற அளவற்ற எத்தனங்களியாவும் நிலைபெற்றிருக்கின்ற தேவர்களாகிய மும்மூர்த்திகளாலேயும் எவ்வளவும் பின்தொடாவதற்குக்கூடாதாம். மகத்தாயிருக்கின்ற இவனுக்குத் தேகங்களாய் யாவையுஞ் சுமக்கத்தககவர்கள் மூன்றுபேர்களுண்டு. அவர்கள் வலிமையுள்ள சகத்தை அதிக்கிரமித்து இருக்கின்றவர்கள் உத்தமன், மத்திமன், அதமன் என்றுஞ்சொல்லப்பட்ட பெயரையுடையவர்களாம்—எ—ம். (81)

## அரசன் சநநபூமியையும அவனுல் அமைக்கப்பட்ட நகரச்சிறப்பையுங் கூறல்.

முடிவிலா விசும்பிற் றோன்றியாங் குறைவோன் மூவகை யுடனுடை முதல்வன், நெடியவவ் விசும்பி லவன்றரு நகர நீண்டவீ திகள் பதினுலாம், முடிவறு பகுதி மூன்றினு லெழிலா ருபவனம் வனங்கள செய் குன்றம், கொடிநிகர் முத்த மாலையேழ் தாவி குளிர்கொதிப் புளவிரு தீபம்.

இ - ள். முடிவிலாவிசும்பில் - ஞானுகாயத்தில்,'தோன்றியாங் குறைவோன் - உதித்த அவ்விடத்தில் வசிப்பவன், மூவகையுடனுடை முதல்வன்

இ - ள். தேகத்தை நோக்கியன்றோ - சரீரத்தைப் பார்த்தல்லவா, செக மெலாம் - சகத்திலுள்ளயாவரும், திரிவதல்லால் - சஞ்சரிப்பதே யன்றி, ஏக த்தை நோக்கியன்று - ஒன்றான ஆத்மாவைப் பார்த்தல்ல, எங்கணும் பஞ்ச பூதம் - எவ்விடத்தும் பஞ்சபூதமே (அல்லாமல்), நாகத்தை - தேவலோகத் திலும், மண்ணை - பூலோகத்திலும், கீழை - பாதாளலோகத்திலும், நாடி னும் - தேடியும், ஆறுகாணோம் - ஆறாவது (பூதங்) கண்டதில்லை, மோகத் தை விடுதுமென்று - மோகத்தைவிடுவோமென்று, திடமுற்றார் - திரமடைந் தவர்கள், முழுதும்பற்றார் - யாவையும் பற்றமாட்டார்கள்-எ-று.

எ - து. சரீரத்தைப் பார்த்தல்லவா சகத்திலுள்ள யாவரும் சஞ்சரிப்பதேயன்றி ஒன்றான ஆத்மாவைப்பார்த்தல்ல. எவ்விடத் தும் பஞ்சபூதமேயல்லாமல் தேவலோகத்திலும், பூலோகத்திலும், பாதாளலோகத்திலும் தேடியும் ஆறாவது பூதங்கண்டதில்லை. மோக த்தை விடுவோமென்று திரமடைந்தவர்கள் யாவையும் பற்றமாட் டார்கள்—எ-ம். (16)

## பவங்கடக்குஞ் சுளுவையும் பளுவையுங்கூறல்.

ஊகமின் மூகர்க் கெல்லா மூழிவெங் கடலாஞ் சென்மம்
மோகமி லூகத் தோர்க்கு முன்னுறு கோவின் றுளாஞ்
சோகமின் ஞானி நெஞ்சிற் றொடர்ந்தசிற் றின்பம் பற்றாப்
போகமில் சிற்றூர் புன்பெண் பொலிநகர் விடலைக் கென்னும்.

இ - ள். ஊகமில் - அனுபவயுத்தியில்லாத, மூகர்க்கெல்லாம் - மூடர்க ளனைவர்க்கும், சென்மம் - செசநமானது, ஊழிவெங்கடலாம் - பிரளய காலத் தில் வெப்பமான சமுத்திரமாம், மோகமிலூகத்தோர்க்கு - மயக்கமில்லாத (அனுபவ) யுத்தியை யுடையவர்களுக்கு, முன்னுறு கோவின்றுளாம் - முன் னிருக்கின்ற பசுவின் குளம்படியாம், சோகமில் - துக்கமில்லாத, ஞானிநெஞ் சில் - ஞானவானுடையமனதில், தொடர்ந்த சிற்றின்பம்பற்றா - தொடர் புற்ற விடயசுகம்பற்றாது; போகமில் - போகமில்லாத, சிற்றூர்புன்பெண் - குறிஞ்சிநிலத்திலிருக்கு மிழிவானபெண்கள், பொலிநகர் - பிரகாசிக்கின்ற பட்டணத்திலுள்ள, விடலைக்கென்னும் - புருடர்களுக்கென்ன பிரயோச னமாம்-எ-று.

எ - து. அனுபவ யுத்தியில்லாத மூடர்களனைவர்க்கும் செச நமானது பிரளயகாலத்தில் வெப்பமான சமுத்திரமாம். மயக்க மில்லாத அனுபவ யுத்தியையுடையவர்களுக்கு முன்னிருக்கின்ற பசுவின் குளம்படியாம். துக்கமில்லாத ஞானவானுடைய மனதில் தொடர்புற்ற விடயசுகம்பற்றாது. போகமில்லாத குறிஞ்சிநிலத்தி

விருக்கும் இழிவானபெண்கள் பிரகாசிக்கின்ற பட்டணத்திலுள்ள புருடர்களுக்கென்ன பிரயோசனமாம்—எ-ம். (17)

## சர்வம் பிரமமயமாய் விளங்குதலால் சகலமும் இன்றெனல்.



பிரமமாஞ் சுத்த வேலை நுரைகளாம் பிறங்க லெல்லாம்
பிரமவா தித்தன் முன்னர் கானலாம் பரவை ஞாலத்
திரமதா மிதனை முன்னே செப்பினன் வியாழன் றந்த
வரமகன் கசனும் பேரோன் மற்றது வள்ளால் கேட்பாய்.

இ-ள். பிரமமாஞ்சுத்தவேலை - பிரமமாகிய பரிசுத்தசமுத்திரத்தில், பிறங்கலெல்லாம் - மலைகளியாவும், நுரைகளாம் - பேனங்களாகும், பிரமவாதித்தன் முன்னர் - பிரமசூரியன்முன்பு, பரவைஞாலம் - சமுத்திரஞ்சூழ்ந்த பூமியானது, கானலாம் - பேய்த்தேராம், திரமதாமிதனை - திரமுள்ள இவ்வருத்தத்தை, வியாழன்றந்த - பிரகஸ்பதிபெற்ற, வரமகன் கசனும்பேரோன்-வரபுத்திரனை கசனென்னும் நாமத்தையுடையவன், முன்னேசெப்பினன்-முன்னே சொல்லினன், வள்ளல்கேட்பாய் - (அதை) ஸ்ரீராமா நீ கேட்பாய்.

எ-து. பிரமமாகிய பரிசுத்த சமுத்திரத்தில் மலைகளியாவும் பேனங்களாகும். பிரமசூரியன் முன்பு சமுத்திரஞ்சூழ்ந்த பூமியானது பேய்த்தேராம் திரமுள்ள இவ்வருத்தத்தை பிரகஸ்பதி பெற்ற வரபுத்திரனை கசனென்னும் நாமத்தையுடையவன் முன்னேசொல்லினன். அதை ஸ்ரீராமா நீ கேட்பாய் —எ-ம்

இ-சு-க-ம். சீவன்முத்தர்கள் அப்பியாசத்தையும் ஆரூடத்தையும் அறிவித்ததாம். (18)

## சமாதி அனுபவம் உரைத்தல்.



கசனுயர் சமாதி நீங்கி யொருபகற் களிக்கு நெஞ்சன்
வசமறத் தழுத ழுத்த வசனத்தன் யாது செய்கேன்
திசையுற வெங்கு செல்கேன் றீரப்பதென் கொள்வ தென்னு
மிசையுயர் கற்ப நீர்போன் மேதினி யெங்கு நானே.

இ-ள். கசன் - கசமுனியானவர், உயர்சமாதிநீங்கி - மேலாகிய சமாதியினின்றும் பிரிந்து, ஒருபகல் - ஒருபொழுது, களிக்குநெஞ்சன்-களிக்கின்ற மனதையுடையவன், வசமற - பரவசனாக, தழுதழுத்த வசனத்தன் - தழுதழுத்த வசனத்தையுடையவன், யாதுசெயகேன் - எதைச்செய்வேன், திசையுற - திக்குகளிற்பொருந்த, எங்குசெல்கேன் - எங்கேபோவேன், தீரப்பதென் - விடப்படுவதெது, கொள்வதென்னு - கிரகிப்பதெது, மிசையுயர்-மேலாக வளர்கின்ற, கற்பநீர் போல் - பிரளய சமுத்திரத்தைப் போல,

மேதினி யெங்குநானே - உலகம் எவ்விடத்து (நிறைந்திருக்கின்ற) தெனது சொரூபமே—எ-று.

எ - து. கசமுனியானவர் மேலாகிய சமாதியினின்றும் பிரிந்து ஒருபொழுது களிக்கின்ற மனதையுடையவன், பரவசனாக தழுதழுத்த வசனத்தையுடையவன். எதைச்செய்வேன்? திக்குகளிற் பொருந்த எங்கே போவேன்? விடப்படுவதெது? கிரகிப்பதெது? மேலாக வளர்கின்ற பிரளய சமுக்திரத்தைப்போல உலகம் எவ்விடத்து நிறைந்திருக்கின்றது எனதுசொரூபமே—எ-ம். (19)

இதுவுமது

மேனியிற் புறத்தி னுள்ளின் மேலொடு கீழிற் றிக்கில்
வானில்வை யகத்தி லெங்கு நானன்றி மற்றொன் றில்லை
யானிலா விடமு மில்லை யெனதிடத் திலாது மில்லை
தானிகழ் பொருள்வே றில்லை சச்சிதா னந்த மென்றான்.

இ - ள். மேனியின் - சரீரத்தினது, புறத்தில் - புறம்பிலும், உள்ளில்-உள்ளிலும், மேலொடுகீழிற்றிக்கில் - பத்துதிக்குகளிலும், வானில் - ஆகாயத்திலும், வையகத்தில்-பூமியிலும், எங்கும் - எவ்விடத்திலும், நானன்றி-எனது சொரூபமல்லாமல், மற்றொன்றில்லை - வேறொன்றுமில்லை, யானிலாவிடமுமில்லை-எனது சொரூபமில்லாத இடங்களுமில்லை, எனதிடத்திலாதுமில்லை-எனது சொரூபத்தில் இல்லாதவைகளுமில்லை, தானிகழ் பொருள்வேறில்லை-தானே விளங்குகின்ற வஸ்துக்கள் வேறேயில்லை, சச்சிதானந்தமென்றான்-சச்சிதானந்த (சொரூபமே பிரகாசிக்கின்ற) தென்று (கசமுனி) சொன்னார்-எ-று.

எ — து. சரீரத்தினது புறம்பிலும், உள்ளிலும், பத்துத்திக்குகளிலும், ஆகாயத்திலும், பூமியிலும், எவ்விடத்திலும் எனதுசொரூபமல்லாமல் வேறொன்றுமில்லை. எனது சொரூபமில்லாத இடங்களுமில்லை. எனது சொரூபத்தில் இல்லாதவைகளுமில்லை தானேவிளங்குகின்ற வஸ்துக்கள் வேறேயில்லை. சச்சிதாநந்த சொரூபமே பிரகாசிக்கின்றதெனறு கசமுனி சொன்னார்—எ-ம்.

இ-உ-க-ம். சமாதியிலிருந்து சாட்சாத்காரமான மனதினால் பார்க்குமிடத்திற் சர்வம் பிரமமயமாய் விளங்குகின்றதென்பதாம். (20)

கசன்கதை முற்றிற்று.

ஆக கதை 17-க்கு கவிதை 759.

# திதிப் பிரகரணம்.

அவதாரிகை.

முன்கதையிற் சர்வம் பிரமமயமாய் விளங்குமென்பதை அறிவித்து, அவ்வனுபவம் வரும்பொருட்டு அவ்வைந்து கதைகளின் சாரங்களைச் சுருக்கியுபதேசப்பிரகாரந் திதிப்பிரகரணஞ் சொல்லுகின்றார்.

## அனுபவிகள் இலக்கணம் யாதெனின்.

### வேறு.

பெறற்கொ ணாதசத் துவகுணப் பிறப்பினர் புவிமேல்
நிறதது வாழ்வது வான்றிகழ் நிறைமதி நிகராம்
வறக்குந் துன்பத்தில் வாடல ரிரவு தான் வரினுஞ்
சிறக்கும் பொற்கம லத்தலர் குவியுமோ சிறிதும்.

இ - ள். பெறற்கொணாத - பெறுதற்கரிய, சத்துவகுணப்பினர் - சாத்துவிதகுணமான பிறப்பையுடையவர்கள், புவிமேல்-பூமியினிடத்து, நிறத்துவாழ்வது - (பிரம) பிரகாசமாக வாழ்கின்றது, வான்றிகழ் - ஆகாயத்திற் பிரகாசிக்கின்ற, நிறைமதிநிகராம் - பூர்ணச்சந்திரனை யொப்பாகும், வறக்கும் துன்பத்தில் - வருத்துகின்ற துயரத்தில், வாடலர் - அவர்கள் வாடார்கள், இரவுதான் வரினும் - இராத்திரிவந்தாலும், சிறக்கும்பொற் கமலத்தலர் - சிறப்பான சுவர்ணதாமரைமலர், சிறிதுங்குவியுமோ - சற்றுங்குவியுமோ-எ-று.

எ - து. பெரிதற்கரிய சாத்துவித குணமான பிறப்பையுடையவர்கள் பூமியினிடத்து பிரமபிரகாசமாக வாழ்கின்றது, ஆகாயத்திற் பிரகாசிக்கின்ற பூரணச்சந்திரனை யொப்பாகும். வருத்துகின்ற துயரத்தில் அவர்கள் வாடார்கள். இராத்திரிவந்தாலும சிறப்பான சுவர்ணதாமரைமலர் சற்றுங்குவியுமோ—எ—ம். (1)

பகுத மன்றியே மற்றுள தொழில்களிற் பற்றார்
தகுதி யாகிய மேலவர் நெறியிலே சரிப்பர்
மிகுதி யாணிறைந் தசைவறு முளத்தினுன் மிகுவர்
தொகுதி யானநட் பருண்முதற் குணங்களாற் சுடர்வார்.

இ - ள். பகுதமன்றி - பிரகிருதமாகிய (தொழில்களை) யல்லாமல், மற்றுளதொழில்களிற்பற்றார் - வேறானசெய்கைகளிற் பற்றார்கள், தகுதியாகிய- அறிவாகிய, மேலவர்நெறியில் - சத்துக்களுடைய மார்க்கத்தில், சரிப்பர்-நடப்பார்கள், மிகுதியாய் நிறைந்து பூரணமாக நிறைந்து, அசைவறு முளத்தினுன் மிகுவர் - சலனமற்ற மனதினுன் மேன்மையாவார்கள், தொகுதியான-

கூட்டமாகிய, நட்பருண்முதல் - மயித்திரி கருணைமுதலாகிய, குணங்களாற் சுடர்வார் - (சற்) குணங்களினாற் பிரகாசிப்பார்கள்-எ-று.

எ — து. பிரகிருதமாகிய தொழில்களையல்லாமல் வேறான செய்கைகளிற் பற்றார்கள். அறிவாகிய சத்துக்களுடைய மார்க்கத்தில்நடப்பார்கள். பூரணமாகநிறைந்து சலனமற்ற மனதினால் மேன்மையாவார்கள். கூட்டமாகிய மயித்திரி கருணைமுதலாகிய சற்குணங்களினாற் பிரகாசிப்பார்கள்—எ—ம். (2)

இயற்கை யாகிய குணத்தின ரிழிவுயர் விரண்டு
நயக்க லாதவர் சமமுளோர் நன்னெறி நடப்போர்
வியக்கு மாறுதன் கரைகடா வேலையை யொப்போர்
மயக்கி லாதவ ரிரவிபோ னியதியை வழாதோர்.

இ - ள். இயற்கையாகிய - இயல்பாகிய, குணத்தினர் - குணத்தையுடையவர்கள், இழிவுயர்விரண்டும் - தாழ்வு உயர்வுஎன்னுமிரண்டையும், நயக்கலாதவர் - இச்சியாதவர்கள், சமமுளோர் - சமத்துவமுடையவர்கள், நன்னெறி நடப்போர் — சன்மார்க்கத்திற் செல்பவர்கள், வியக்குமாறு - அதிசயக்கும்படி தன்கரைகடா - தனது எல்லையைத் தாண்டாத, வேலையை யொப்போர்-சமுத்திரத்தையொத்தவர்கள், மயக்கிலாதவர் - மோக மில்லாதவர்கள், இரவிபோல் - சூரியனைப்போல, நியதியை வழாதோர் - நியதியை வழுவாதவர்கள் எ-று.

எ - து. இயல்பாகிய குணத்தையுடையவர்கள் தாழ்வு உயர்வு என்னும் இரண்டையும் இச்சியாதவர்கள், சமத்துவமுடையவர்கள், சன்மார்க்கத்திற் செல்பவர்கள், அதிசயிக்கும்படி தனது எல்லையைத் தாண்டாத சமுத்திரத்தை ஒத்தவர்கள், மோகமில்லாதவர்கள், சூரியனைப்போல நியதியைவழுவாதவர்கள்—எ-ம்.

இ-ங-க-ம். சுவானுபவமாய்ச் சஞ்சரிக்கும் விளக்கத்தைக் கூறினதென்பதாம். (3)

## அனுபவமுதிர்ப்பதற்கு அப்பியாசங்கூறல்.

கொள்ளற் பாலது துயரிலா தவர்நிலை குறுகத்
தள்ளற் பாலது தீயவர் நெறியெனுஞ் சழக்கே
எள்ளற் பாலது வுலகமே தியாமெவ னென்றே
தெள்ளற் பாலது குரவரா லறிவினாற் றீர

இ - ள். கொள்ளற்பாலது - கொள்ளத்தக்கது, துயரிலாதவர்நிலை-துன்பமற்றவர் குணத்தை, குறுக - சுருங்கும்படியாக, தள்ளற்பாலது - தள்ளத்

க்கது, தீயவர் -கொடியவர்களுடைய, நெறியெனுஞ்சழக்கு-மார்க்கமென்னுங் குற்றத்தை, உலகமேது - உலகமெப்படிப்பட்டதென்று (விசாரித்து), எள்ளற் பாலது - நிந்திக்கத்தக்கது, யாமெவனென்று-யாம்எப்படிப்பட்டவனென்று, குரவரால் - ஆசாரியராலும், அறிவினால் - (தனது) அறிவினாலும், தேர்ந்தெள் ளற்பாலது - தேரவிசாரித்துத்தெளியத்தக்கது-எ-று.

எ - து. கொள்ளத்தக்கது, துன்பமற்றவர் குணத்தை சுருங்கு ம்படியாக. தள்ளத்தக்கது, கொடியவர்களுடைய மார்க்கமென்னுங் குற்றத்தை. உலக மெப்படிப்பட்டதென்று விசாரித்து நிந்திக்கத்தக் கது, யாமெப்படிப்பட்டவனென்று ஆசாரியராலுமதனதறிவினாலும் தேரவிசாரித்துத் தெளியத்தக்கது—எ—ம். (4)

வருந்து கிற்பது தனையறி நெறியிலே மனத்தால்
திருந்து கிற்பது கருமத்தி லழுந்திலாச் செய்கை
பொருந்து கிற்பது தீயவ ரல்லவர் புணர்ச்சி
அருந்து கிற்பது நானென்ப தாக்குகிற் பதுவே.

இ - ள். வருந்துகிற்பது - வருத்தப்படுவது, தனையறிநெறியில் - ஆத்மா வை அறிகின்றமார்க்கத்தில், மனத்தாற் றிருந்துகிற்பது - மனதினால் திருத் தஞ்செய்து, கருமத்தில் - விவகாரத்தில், அழுந்திலாச்செய்கை - அழுத்தமற்ற தொழிலை, பொருந்துகிற்பது-அடையத்தக்கது, தீயவரல்லவர்புணர்ச்சி-தீமை யற்ற (நல்லோர்களிடத்திற்) கலத்தல், அருந்துகிற்பது - புசிக்கத்தக்கது, நா னென்ப தாக்குகிற்பது - நானென்பது உண்டாக்கின்ற அகத்தை—எ-று.

எ — து. வருத்தப்படுவது, ஆத்மாவையறிகின்ற மார்க்கத்தில். மனதினால்திருத்தஞ்செய்வது, விவகாரத்தில் அழுத்தமற்றதொழிலை அடையத்தக்கது, தீமையற்ற நல்லோர்களிடத்திற் கலத்தல். புசிக்க த்தக்கது, நானென்பது உண்டாக்கின்ற அகத்தை—எ-ம். (5)

தீர்க்கத் தக்கது நரம்பெனும் பெனுமுடற் றியக்கம்
பார்க்கத் தக்கது முழுதுயிர்க் குள்ளுறை பரமம்
ஈர்க்கத் தக்கதே ரிரவியி னிடத்தினும் பாரில்
நீக்கத் தககிலாப் புழுவினுஞ் சித்தொன்றே நிற்கும்.

இ - ள். தீர்க்கத்தக்கது - நீக்கத்தக்கது, நரம்பெனும்பெனும்-நரம்புஎனு ம்புஎன்கின்ற, உடற்றியக்கம் - சரீரமயக்கம், பார்க்கத்தக்து - காணத்தக்கது, முழுதுயிர்க்குள்ளுறைபரமம் - சகல ஆத்மகோடிகளுள் நிறைந்திருக்கின்றபிர மம், ஈர்க்கத்தக்கதேர்-(பச்சைப்புரவியினால்) இழுக்கத்தக்கஇரதத்தையுடைய, இரவியினிடத்தினும் - சூரியனிடத்திலும், பாரினீக்கத்தக்கிலா - பூமியில்

தள்ளத்தகாத, புழுவினும்-கிருமியினிடத்திலும், சித்தொன்றே நிற்கும்-ஞான மொன்றே (நிலையா) யிருக்கும்—எ-று.

எ - து. நீக்கத்தக்கது, நரம்பு என்புஎன்கின்றசரீரமயக்கம், காணத்தக்கது, சலக ஆத்மகோடிக ளுள்நிறைந்திருக்கின்ற பிரமம், பச்சைப்புரவியினால்இழுக்கத்தக்கஇரதத்தையுடையசூரியனிடத்திலும், பூமியிற்றள்ளத்தகாத கிருமியினிடத்திலும், ஞானமொன்றேநிலையா யிருக்கும்—எ-ம்.

இ-ரு-க-ம். பிரமாணு சந்தானங்களின் சாரங்களைச்சுருக்கமாகக் கூறின தாம். (6)

## அநுசந்தானத்திற்குரிய குணத்தை அறிவித்தல்.

தாம தத்துட னிராசதஞ் சாத்திக மென்னும்
நாம முக்குணப் பிறவியு முயற்சியா னண்ணுஞ்
சேம முத்தியைச் செய்திடுஞ் சாத்திகச் செய்கை
இராம வுத்தம ராகவ வென்று மீட் டுரைப்பான்.

இ - ள். தாமத்துடன் - தாமதகுணத்தோடும், இராசதம் - இராசதகுண மென்றும், சாத்திகமென்னும் - சாத்துவித குணமென்றுஞ் சொல்லப்பட்ட, நாமம் - பெயரையுடைய, முக்குணம் - மூன்றுகுணங்களாகிய, பிறவியும் சநநமும், முயற்சியானண்ணும் - எத்தனத்தால் அடையும், சேமமுத்தியை - பரம சுகமான மோட்சத்தை, சாத்திகச்செய்கை - சாத்திகத்தொழிலானது, செய்திடும் - செய்விக்கும், இராமவுத்தமராகவவென்று-உத்தமமான ஸ்ரீராமாவென்று (சொல்லி), மீட்டுரைப்பான் - திரும்பவும் வசிட்டர் சொல்லுவார்-எ-று.

எ - து. தாமதகுணத்தோடும் இராசதகுணமென்றும், சாத்துவிதகுணமென்றுஞ் சொல்லப்பட்ட பெயரையுடைய, மூன்று குணங்களாகிய சநநமும் எத்தனத்தாலடையும், பரமசுகமான மோட்சத்தைச் சாத்திகத்தொழிலானது செய்விக்கும். உத்தமமான ஸ்ரீராமா வென்றுசொல்லி திரும்பவும் வசிட்டர் சொல்லுவார்—எ-ம்.

இ-ம். பவமாய் விளங்குங் குணங்களை நீக்கிச்சிவமாயிருக்குங் குணத்தை யறிவித்ததாம். (7)

திதிப்பிரகரணம் முற்றிற்று.

ஆகூ கதை 18-க்கு கவிதை 766.

உபசாந்தப்பிரகரணத்தில்

# சனகராசன் கதை.

அவதாரிகை.

முற்பிரகரணத்தில் சித்துவிலாசமே சகமென விளங்குமென்பதைநன் குயுணர்த்தி அச்சித்தே சகமாகவிளங்குதலால் அச்சகமெப்போதும்இன் றெனத்தெரிவிக்கு நிமித்தம் ஒன்பது கதைகளால் நிறைந்த உபசாந்தப் பிரகரணங் கூறத்தொடங்கி மனவுபசமனுர்த்தஞ் சனகராசன் கதையை நிரூபிக்கிறூர்.

## சர்வம் பிரமமயமென்பதைப் போதித்து அச்சர்வந் திரிகுணாத்மகமென்று உரைத்தல்.



வேறு

சுரர்குருவின் மகனுரைத்த படியேயிவ் வுலகெலாஞ் சொரூப மாகும், விரயவியநீள் பிறப்பிறப்பா மிகுமாயை யிராசததா மதத்தை மேவும், புருடர்தரித் திடவற்றாய்த் தூண்சுமக்கு மண்டபமே போல நிற்கும், திரமான சத் துவகுணத்தின் போல்வார்கள்சநநபயந் தீர்ந்து நிற்பார்.

இ - ள். சுரர்குருவின் - தேவ குருவின், மகனுரைத்தபடியே - புத்திரனாகிய கசமுனிசொல்லிய பிரகாரமே, இவ்வுலகெலாம்-இச்சகங்க ளனைத்தும், சொரூபமாகும் - ஆத்ம ஞானசொரூபமாம், விரவிய - கலந்த, நீள் பிறப்பிறப்பாம் - மிகுந்த சநநமரணமென்னும், மிகுமாயை - மிகுந்த மாயையானது, இராசத தாமதத்தை - இராசத தாமதமென்னுங் குணங்களை, மேவும்புருடர் - பொருந்திய புருடர்கள், தரித்திடவற்றாம் - தரிக்கத்தக்கதாய், தூண்சுமக்கு மண்டபமேபோல - தூண்கள் தாங்குகின்ற மண்டபத்தைப்போல, நிற்கும் - நிலையாயிருக்கும், திரமான சத்துவகுணத்து - திரமான சாத்துவிதகுணத்தை யுடைய, உன்போல்வார்கள் - உன்னையொத்தவர்கள், சநநபயந்தீர்ந்துநிற்பார் - பிறவி யச்சநீங்கி யிருப்பார்கள்-எ-று.

எ - து. தேவகுருவின் புத்திரனாகிய கசமுனிசொல்லிய பிரகாரமே இச்சகங்களனைத்தும் ஆத்மஞான சொரூபமாம். கலந்தமிகுந்த சநந மரணமென்னும் மிகுந்த மாயையானது இராசத தாமதமென் னுங் குணங்களைப்பொருந்திய புருடர்கள் தரிக்கத் தக்கதாய் தூண் கள் தாங்குகின்ற மண்டபத்தைப்போல நிலையாயிருக்கும். திரமான சாத்துவித குணத்தையுடைய உன்னை யொத்தவர்கள் பிறவி யச்சநீங்கி யிருப்பார்கள்—எ—ம்.

## பிரமத்தில் எதார்த்தமாய்ச் சர்வமும் இன்றெனல்.

வழுவறுசத் துவகுணத்தோர் தோலுரிக்கு மரவென்ன மாயாபாச
நழுவுவரெல் லாம்பிரம நாமதுவே யென்றெண்ணி நாமும் வேறே
முழுதுலகம் வேறென்னு மோகமழிப் பாய்பிரம மூலச்சித்தில் [றே.
எழுவனகற் பனையெல்லாங் கடலிலலை போலமெய்யா யில்லையென்

இ - ள். வழுவறு சத்துவகுணத்தோர் - குறைவற்ற சாத்துவித குணத்தையுடையவர்கள், தோலுரிக்குமரவென்ன - சருமத்தையுரிக்கின்ற சற்பத்தைப்போல, மாயாபாசநழுவுவர் - மாயாபாசத்தினின்று நீங்குவார்கள், எல்லாம்பிரமம் - சமஸ்தமும் பிரமம், நாமதுவேயென்றெண்ணி - நாமுமந்தப்பிரமமேயென்று சிந்தித்து, நாமும்வேறு - யாமும்வேறு, முழுதுலகம் வேறென்னும் - சகல சகங்களையும் வேறென்கின்ற. மோகமொழிப்பாய் - மயக்கத்தைக் கெடுப்பாய், பிரமமூலச்சித்தில் - காரணமான பிரமஞானத்தில், எழுவன - உண்டாகின்றனவாகிய, கற்பனையெல்லாம் - கற்பனைகளியாவும், கடலிலலை போல - சமுத்திரத்திலுண்டாகிய திரையைப்போல, மெய்யாயில்லை-உண்மையாகவில்லை-எ-று.

எ - து. குறைவற்ற சாத்துவித குணத்தை யுடையவர்கள் சருமத்தை யுரிக்கின்ற சற்பத்தைப்போல மாயாபாசத்தினின்று நீங்குவார்கள். சமஸ்தமும் பிரமம் நாமும் அந்தப் பிரமமேயென்று சிந்தித்து யாமும் வேறு, சகலசகங்களையும் வேறென்கின்ற மயக்கத்தைக் கெடுப்பாய். காரணமான பிரமஞானத்தில் உண்டாகின்றனவாகிய கற்பனைகளியாவும் சமுத்திரத்திலுண்டாகிய திரையைப்போல உண்மையாகவில்லை--ம். (2)

## பிரமமே உண்டென்று அறிந்து வேறுண்டென்பதைச் சத்துவகுணத்தால் கெடுப்பாயெனல்.



சோகமிலை மோகமிலை பிறப்பில்லை பிறப்பிறப்பிற் சுழல்வா ரில்லை
ஏகமென விங்கென்று முள்ளபொரு ளேயுள்ள திரங்க வேண்டாம்
ஊகமுற வருவனபோ வனநினையேற் றெருந்தனைக ளொன்று மில்லா
மாகனசத் துவகுணத்தோ டொருவனு யிடரெல்லா மாற்றி நிற்பாய்

இ - ள். சோகமிலை - துன்பமுமில்லை, மோகமிலை-இன்பமுமில்லை, பிறப்பில்லை - சநநமுமில்லை, பிறப்பிறப்பிற் சுழல்வாரில்லை - சநநமரணமென்னுஞ் சுழலிற் சுழல்பவர்களுமில்லை, ஏகமென - ஒன்றென்று, இங்கென்றும் - இவ்விடத்திலெப்போதும், உள்ளபொருளேயுள்ளது - இருக்கின்ற வஸ்துவேயிருக்

கின்றது, இரங்கவேண்டாம் - விசனப்படவேண்டுவதில்லை, ஊகமுற - (அனு பவ) யுத்தி பொருந்தும்படி, வருவன - வருபவைகளையும், போவன போவன வைகளையும், நினையேல் - சிந்திக்காதே, தொந்தனைகளொன்றுமில்லா-(இரா கத்துவேஷம் என்னும்)துவிதங்கள் ஒன்றும் இல்லாத, மாகன சத்துவகுணத் தோடு மிகவு மேன்மையாகிய சாத்துவிதகுணத்துடன், ஒருவனாய் -ஏகனாய், இடரெல்லாம - துக்கங்களனைத்தையும், மாற்றிநிற்பாய் - நீக்கிநிற்பாய்-எ-று.

எ - து. துன்பமுமில்லை, இன்பமுமில்லை, சநநமுமில்லை, சநந மரணமென்னுஞ் சுழலில் சுழல்பவர்களுமில்லை, ஒன்றென்று இவ்வி டத்தில் எப்போதும் இருக்கின்ற வஸ்துவே யிருக்கின்றது. விசனப் படவேண்டுவதில்லை. அனுபவயுக்தி பொருந்தும்படி வருபவைகளை யும் போனவைகளையும் சிந்திக்காதே. இராகத்துவேஷமென்னுந்துவி தங்களொன்றுமில்லாத மிகவுமேன்மையாகிய சாத்துவித குணத்து டன் ஏகனாய் துக்கங்களனைத்தையும் நீக்கிநிற்பாய்—எ-ம். (3)

## பிரமமாய்நின்று யானெனதென்கின்ற துன்பத்தைக் கெடுக்கவேண்டுமெனல்.

---

சமமாகிச் சொரூபத்தே நிலையாகித் திரமதியாய்ச் சாந்தனாகி[தீர்வாய்
அமர்மனன மௌனியாய் நன்மணிபோற் றெளிந்துதுய ரனைத்துந்
நிமலமுற நிகழ்காலத தொழிற்செய்தி யாவையினு நேயமின்றி[வாய்
நமதெனக்கொள் ளுதல்விடுத லிரண்டுமறத் துன்பமெலா நாசஞ்செய்

இ - ள். சமமாகி - (சர்வத்திர) சமமாய், சொரூபத்தேநிலையாகி - (ஆத் மஞான) சொரூபத்தி நிச்சயமுடையவனாய், திரமதியாய் - திடஞானமுள்ளவ னாய், சாந்தனாகி - உபசாந்தனாய், அமர்மனன மௌனியாய்-பொருந்தின மன தையுடைய மௌனியாகி, நன்மணிபோற்றெளிந்து - நல்ல இரத்தினத்தைப் போலத் தெளிவடைந்து, துயரனைத்துந்தீர்வாய் - துன்பங்களியாவையும் விடுவாய், நிமலமுற-நிருமலமானது பொருந்த, நிகழ்காலத்தொழி லியாவை யினும் - வர்த்தமானகாலத்தொழில்க ளனைத்திலும், நேயமின்றி - இச்சை யில்லாமல், செய்தி - செய்வாய், நமதெனக்கொள்ளுதல் - எனதென்றுகொள் ளுதலும், விடுதல் - விடுதலும், இரண்டுமற - (இவ்) விரண்டுமில்லாமல், துன் பமெலா நாசஞ்செய்வாய் - துயரனைத்தையும் (ஸ்ரீராமா நீ) கெடுப்பாய்-எ-று.

எ - து. சர்வத்திரசமமாய் ஆத்மஞான சொரூபத்தின் நிச்சய முடையவனாய் திடஞானமுள்ளவனாய், உபசாந்தனாய், பொருந்தின மனதையுடைய மௌனியாகி, நல்ல இரத்தினத்தைப்போலத் தெளி

வை அடைந்து துன்பங்களியாவையும் நிருமலமானது பொருந்த வர்த்தமான காலத்தொழில்களைத்திலும் இச்சையில்லாமல் செய்வாய். எனதென்று கொள்ளுதலும், விடுதலும் இவ்விரண்டுமில்லாமல் துயரனைத்தையும் ஸ்ரீராமா கெடுப்பாய்—எ-ம்.

இ-ச-க-ம். சர்வம் பிரமமயமாய் விளங்குவதேயன்றி வேறன்று என்பதாம். (4)

## பிரமானுபவம் உதிக்கும் பக்குவம் அறிவித்தல்.



இனிப்பிறவா முடிவான பிறப்பிலே மெய்ஞ்ஞான மெளிதிலுண்டாம், பனிச்சுடர்வெண் ணித்திலங்க ளுத்தமமா மூங்கிலல்லாற்படுவ துண்டோ, செனித்தவரின் மேலோராய் நல்லோராய் மித்திராய்த் தெளிந்தோ ராகி, அனித்தமறு முத்தராய் ஞானிகளாங் குணமெல்லா மவரைச் சேரும்.

இ - ள். இனிப்பிறவா - மேற்சநநமில்லாத, முடிவான பிறப்பில் - அந்தமான சநநத்தில், மெய்ஞ்ஞானம் - ஆத்மஞானமானது, எளிதிலுண்டாம் - எளிதிலுதயமாம், பனிச்சுடர் வெண்ணித்திலங்கள் - குளிர்ந்த பிரகாசத்தையுடைய வெண்முத்துக்கள், உத்தமமாமூங்கிலல்லால் - உத்தமமானவேணுவையன்றி, படுவதுண்டோ - உண்டாவதுண்டோ, செனித்தவரில் - பிறந்தவர்களில், மேலோராய் - மேன்மையுள்ளவர்களாகியும், நல்லோராய் நன்மையுள்ளவர்களாகியும், மித்திராய் - அன்புள்ளவர்களாகியும், தெளிந்தோராகி - தெளிந்தவர்களாகியும், அனித்தமறுமுத்தராய் - நித்தியமான சீவன்முத்தர்களாகியும், ஞானிகளாம் - (ஆத்ம) ஞானிகளாயுமிருக்கின்ற, குணமெல்லாமவரைச்சேரும் - குணங்கள் அம்முடிவான பிறப்புள்ளவர்களைச்சேரும்-எ-று.

எ - து. மேற்சநநமில்லாத அந்தமான சநநத்தில் ஆத்மஞானமானது எளிதிலுதயமாம். குளிர்ந்த பிரகாசத்தையுடைய வெண்முத்துக்கள் உத்தமமான வேணுவையன்றி உண்டாவதுண்டோ? பிறந்தவர்களில் மேன்மையுள்ளவர்களாகியும், நன்மையுள்ளவர்களாகியும், அன்புள்ளவர்களாகியும், தெளிந்தவர்களாகியும். நித்தியமான சீவன்முத்தர்களாகியும், ஆத்மஞானிகளாயு மிருக்கின்ற குணங்கள் அம்முடிவான பிறப்புள்ளவர்களைச்சேரும்—எ-ம். (5)

## பவந்தீர்ப்பதற்கு இரண்டுமார்க்கம் உண்டெனல்.

மெத்தென்ற சரித்திரத்தி னவர்தம்மை யுலகெலாம் விரும்புந்தன்மை, கொத்தொன்று வனமூங்கிற் குழலிசையான் மகிழ்விலங்கின் கூட்டம் போலும், இத்தன்மை யாவருக்கும் பொதுமையினு

வியம்பியதா மிதனில் வேறாஞ், சத்தென்ற வழியிரண்டேழ் பவந்
தீர்ப்ப வர்க்கவற்றைச் சாற்றக் கேண்மோ.

இ - ள். மெத்தென்ற சரித்திரத்தின் - மிருதுவான நடையுள்ள, அவர் தம்மை - அச்சத்துக்களை, உலகெலாம் - சகமனைத்தும், விரும்புந்தன்மை- விரும்புகின்றகுணமானது, வனம் - கானகத்தில், கொத்தென்று - ஒருகொத்தில், மூங்கிற்குழலிசையால் - வேணுவினாற்செய்த புல்லாங்குழலினது இராகத்தினால், மகிழ்விலங்கின்கூட்டம்போலும் - களிக்கின்ற பசுவினிரையைப் போலும், இத்தன்மை - இக்குணமானது, யாவருக்கும் - சகலருக்கும், பொதுமையின் - பொதுவாக, இயம்பியதாம் - சொல்லியதாம், இதனின்வேறாய்- இக்குணங்களிற்றனிமையாக, ஏழ்பவந்தீர்ப்பவர்கரு - எழுவகைப்பிறப்பையுங் கெடுப்பவர்களுக்கு, சத்தென்ற வழியிரண்டு - மோட்சமார்க்கமிரண்டு, அவற்றைச் சாற்றக்கேண்மோ - அம்மார்க்கஞ்சொல்லக்கேளும்—எ-று.

எ - து. மிருதுவான நடையுள்ள அச் சத்துக்களை சகமனைத்தும் விரும்புகின்ற குணமானது கானகத்தில் ஒருகொத்தில் வேணுவினாற்செய்த புல்லாங்குழலின் இராகத்தினால் களிக்கின்ற பசுவினிரையைப்போலும் இக்குணமானது சகலருக்கும் பொதுவாகச்சொல்லியதாம். இக்குணங்களில் தனிமையாக எழுவகைப் பிறப்பையுங் கெடுப்பவர்களுக்கு மோட்சமார்க்கம் இரண்டு. அம்மார்க்கஞ்சொல்லக்கேளும்—எ-ம். (6)

## சத்மார்க்கம் இரண்டில் சுளுவென்பதையும் பளுவென்பதையும் பகுத்துக்கூறல்.

தேசிகன்சொற் பிழையாம லனுட்டிக்கிற் பையப்பையத் தியக்க நீங்
பேசியசென் மத்தாத லடுத்தசில பிறப்பினு லாதல் பேறும் [கிப்
மாசறுவிற் பத்திசிறி துண்டாகு மனத்தாற்றன் மனனத்தாலே [ம்.
ஏசறுமா காசபழம் வீழ்வதுபோன் மெய்ஞ்ஞான மெளிதி லுண்டா

இ - ள். தேசிகன்சொல் - ஆசாரியருபதேசவாக்கியங்கள், பிழையாமல் அனுட்டிக்கில் - தவறாமல் அப்பியாசஞ்செய்யில், பையப்பையத் தியக்கநீங்கி- மெல்லமெல்ல மயக்கம்விட்டு, பேசியசென்மத்தாதல் - (ஆசாரியர்) அனுக்கிரகஞ்செய்த சென்மத்திலாவது, அடுத்த சில பிறப்பினால் - (அதற்கடுத்த) சில சநநங்களிலாவது, ஆதல்பெறும் - (வீ) டானதுண்டாம், மாசறுவிற்பத்தி- களங்கமற்ற விற்பன்னமானது, சிறிதுண்டாகும்-கொஞ்சமுண்டாகிய, மனத்தால் - மனதினால், தன்மனனத்தால் - தான்மனனஞ்செய்வதினால், ஏசறுமாகாசபழம் - குற்றமற்ற வியோமக்கனியானது, வீழ்வதுபோல் - விழுவதைப் போல, மெய்ஞ்ஞான மெளிதிலுண்டாம் - உண்மைஞானமெளிதிற் கிடைக்கும்—எ-று.

எ - து. ஆசாரியர் உபதேசவாக்கியங்கள் தவறாமல் அப்பியாசஞ்செய்யில் மெல்லமெல்ல மயக்கம்விட்டு ஆசாரியர் அனுக்கிரகஞ் செய்தசென்மத்திலாவது, அதற்கடுத்த சிலசநநங்களிலாவது, வீடானதுண்டாம். களங்கமற்ற விற்பன்னமானது கொஞ்சமுண்டாகிய மனதினால் தான்மனனஞ்செய்வதினால்குற்றமற்றஆகாசக்கனியானது விழுவதைப்போல உண்மைஞான மௌனிதிற்கிடைக்கும்—எ-ம்.

இ-௩-க-ம். ஆசிரியர் வாக்கியப்படி அனுசந்தித்தலும், அவ்வாக்கியத்திற் சுயவிற்பத்தியுண்டாய் அனுசந்தித்தலுமாகிய இரண்டையும் அறிவித்ததாம்.

## ஞானம்சுருஞவிலுதித்தற்குத் திருஷ்டாந்தம் அறிவிக்கத் தொடங்குதல்.



இவ்விரண்டி லாகாசப் பழம்போல மெய்ஞ்ஞான மியைந்ததன்மை, செவ்வியவள் ளான்முன்னோர் கதையாலே யான்செப்பத் திருந்தக் கேட்பாய், தெவ்வுலகிலாபத்தென் றொன்றுமிலோன் விதாரணத்தோன் செல்வ மிக்கோன், அவ்வியமில் விதேகநா டாசாள்வோன் சனகனெனு மாசர்கோமான்.

இ - ள். இவ்விரண்டில் இந்தவிரண்டு (மார்க்கத்தில்), ஆகாசபழம்போல-ஆகாயக்கனியைப்போல, மெய்ஞ்ஞானம் - தத்துவஞானமானது, இயைந்த தன்மை - பொருந்தியகுணத்தை, செவ்விய வள்ளால் - நல்ல வுதாரத்தையுடைய இராமா, முன்னோர்கதையால்-முன்னடந்தவொரு கதையினால், யான் செப்ப - நான்சொல்ல, திருந்தக்கேட்பாய் (மனந்) திருந்தும்படிகேள், தெவ்-சத்துருவினால், உலகிலாபத்தென்றொன்றுமிலோன்-சகத்தில் ஆபத்தென்பது ஒன்றுமில்லாதவன், விதாரணத்தோன் - உதாரத்தை யுடையவன், செல்வமிக்கோன்-செல்வத்தின் மிகுந்தவன், அவ்வியமில்-பொறாமையில்லாத, விதேகநாடு - விதேகமென்னும் பூமியை, அரசாள்வோன்-அரசாட்சிசெய்பவன், சனகனெனு மரசர்கோமான்-சனகனென்னும் பெயரையுடைய இராசராசன்.

எ - து. இந்த இரண்டுமார்க்கத்தில் ஆகாயக்கனியைப்போல தத்துவஞானமானது பொருந்திய குணத்தை நல்ல உதாரத்தையுடைய இராமா! முன்னடந்த ஒருகதையினால் நான்சொல்லமனந்திருந்தும்படிகேள். சத்துருவினால் சகத்தில் ஆபத்தென்பது ஒன்றுமில்லாதவன், உதாரத்தையுடையவன், செல்வத்தின் மிகுந்தவன், பொறாமையில்லாத விதேகமென்னும் பூமியை அரசாட்சி செய்பவன், சனகனென்னும் பெயரையுடைய இராசராசன்—எ-ம். (8)

## சனகராசன் பக்குவம் அறிவித்தல்.

சற்குணத்தாற் கடலனையான் சக்கரத்தா னெனவுலகந் தாங்கு நரான், நற்குணஞ்செய் வசந்தனா ணறுமலர்சூழ் நந்தனத்தி னயந்து மேவி, தற்குரிய தந்திரர்கள் புறநிற்பத் தனியனுய்ச் சரிக்கும் வேலைச், சிற்குரிய மனமுடைய சித்தர்கணம் பாடுவபண் செவியிற் கேட்டான்.

இ - ள். சற்குணத்தால் - சற்குணத்தில், கடலனையான் - சமுத்திரத்துக்கு ஒப்பானவன், சக்கரத்தானென - விஷ்ணுவைப்போல, உலகந் தாங்குநரான் - பூமியை ரட்சிக்கின்ற குணத்தையுடையவன், நற்குணஞ்செய் வசந்தநாள் - நல்லகுணங்களைச் செய்கின்ற வசந்தகாலத்தில், நறுமலர்சூழ் நந்தவனம் – வாசனையுள்ள புட்பங்கள் நிறைந்த சிங்காரவனத்தில், நயந்துமேவி-சந்தோஷத்துடன்போய், தற்குரிய தந்திரர்கள் புறநிற்ப - தனக்குரிய மந்திரி முதலிய சேனைகள் வெளியினிற்க, தனியனுய்ச் சரிக்கும் வேலை - தனித்துச் சஞ்சரிக்கின்றசமயத்தில், சிற்குரியமனமுடைய - சித்துக்குரித்தான மனதை யுடைய, சித்தர்கணம்பாடுவபண் - சித்தர்குழாங்கள் பாடுங்கீதங்களை, செவியிற்கேட்டான்-காதிற்கேட்டான் —எ-று.

எ - து. சற்குணத்தில் சமுத்திரத்துக்கு ஒப்பானவன். விஷ்ணுவைப்போலப் பூமியை ரட்சிக்கின்றகுணத்தையுடையவன் நல்லகுணங்களைச் செய்கின்ற வசந்தகாலத்தில் வாசனையுள்ள புட்பங்கள் நிறைந்த சிங்காரவனத்தில் சந்தோஷத்துடன்போய் தனக்குரிய மந்திரி முதலிய சேனைகள் வெளியினிற்கத் தனித்துச் சஞ்சரிக்கின்ற சமயத்தில் சித்துக்குரித்தான மனதையுடைய சித்தர்குழாங்கள் பாடுங்கீதங்களை காதிற்கேட்டான் —எ-ம்.

இ-உ க-ம். மகான்கள் அனுபவஞ் சனகனுக்குச் சிரவணமாயிற்றென்பதாம். (9)

## இருக்குவேத மகாவாக்கியார்த்த நிரூபணம்.

வெறியாரும் பொருப்புறைவோர் விழிப்புலத்தின் மேவாதோர் விளம்பு கீத, நெறியார்மன் னவன்கேட்ட படியுரைப்ப நெடியவனே நினைவிற்கொள்வாய், அறிவானு மறிபொருளுங் கூடியகூட் டரவிலெழு மறிவா னந்தம், பிறியாத வான்மதத்து வத்தெழுந்த தாமதனைப் பேணல் செய்வாம்.

இ - ள். வெறியாரும் - வாசனைநிறைந்த, பொருப்புறைவோர் – மலையிருப்பவர்கள், விழிப்புலத்தின் மேவாதோர் சோத்திரவிடயத்திற் பொருந்

தாத் (சித்தர்கணங்கள்), விளம்புகீதம் - (தங்க ளனுபவத்தைப்) பேசாநின்ற கீதையை, நெறியார்மன்னவன் - நீதிகள்நிறைந்த சனகராஜன், கேட்டபடியு ரைப்ப - கேட்டவண்ணமே (யாஞ்) சொல்ல, நெடியவனே ஸ்ரீராமா, நீனை விற்கொள்வாய் - மனதில் தரிப்பாய், அறிவானும் - ஞாதாவும், அறிபொரு ளும்-திரிசியமும், கூடியகூட்டரவிலெழும் - கூடுங்கூட்டத்தில்உண்டாகின்ற அறிவாநந்தம் - ஞானசுகமானது, பிரியாத - பிரிவுபடாத, ஆன்மதத்துவத் தெழுந்ததாம் - ஆத்மஞானத்தில் உண்டானதாம், அதனை - அவ்வாத்மஞான சுகத்தை, பேணல்செய்வாம் - விரும்பவேண்டும் என்று (ஒருசித்தர் சொன் ஞர்)—எ-று.

எ - து. வாசனைநிறைந்த மலையிலிருப்பவர்கள். நேத்திரவிட்டயத் திற்பொருந்தாத சித்தர்கணங்கள். தங்களனுபவத்தைப் பேசாநின்ற கீதையை நீதிகள் நிறைந்த சனகராசன் கேட்டவண்ணமேயாஞ்சொ ல்ல, ஸ்ரீராமா! மனதில் தரிப்பாய். ஞாதாவும் திரிசியமும் கூடுங்கூட் டத்தி லுண்டாகின்ற ஞானசுகமானது பிரிவுபடாத ஆத்மஞானத்தி லுண்டானதாம். அவ்வாத்மஞான சுகத்தை விரும்ப வேண்டுமென் றொரு சித்தர்சொன்னர்—எ-ம்.

ப-ம். பிரமஞானமென்பார், அறிவானென்றும்பிரமமென்பார், அறிபொ ருளென்றும் இவவிரண்டுங்கூடி ரசித்தவிடத்துதித்தது கூடஸ்த பிரமமென் பார்; கூட்டரவிலெழும் அறிவாநந்தமென்றும் அறிவு ஆநந்த மின்றி விளங்கா மையால் அவ்வறிவே யாநந்தமும் ஆநந்தம்அறிவையன்றி யாநந்தியாதபடியால் அவ்வாநந்தமே அறிவுமாய்ப்பிரிவற்றுவிளங்கியதாளுனன்பார், பிரியாத ஆத்மத துவத்தெழுந்ததாமென்றுங் கூறினர், அறிபொருளென்பதை ஈசனுருவெனக் கொள்க. (10)

## எசுர்வேத சாமவேத மகாவாக்கியார்த்த நிரூபணம்.

காண்பானுங் காண்பனவுங் காட்சியும்வா தனையுடனே கழல விட்டுச், சேண்பாவு காட்சிக்கு முதலொளியா மச்சொருபஞ்சிந்தை செய்வாம், ஏண்பாலா முள்ளதில தெனுமிரண்டி னிடையெய்தி யிற வி லாதாய், மாண்பான வொளிக்கெல்லா மொளியாய்ச்சொ ரூபத் தை மதித்தல் செய்வாம்.

இ - ள். காண்பானும் - ஞாதாவும், காண்பனவும் - திரிசியமும், காட்சி யும் - ஞானமும், வாதனையுடன் - வாசனையோடும், கழலவிட்டு - நீங்கச்செய் து சேண்பாவுகாட்சிக்கு - உயர்வானபாாவைக்கு, முதலொளியாம் - முதற் பிரகாசமாகிய, அச்சொருபம் - அவ் (ஆத்ம) சொருபத்தை, சிந்தைசெய்வாம்

தியானஞ்செய்வோமென்று (ஒருசித்தரும்), ஏண்பாலாம் - நிலையானகுணமு டைய. உள்ளதிலதெனும் - சத்து அசத்தென்னும், இரண்டினிடையெய்தி - இரண்டின் நடுவான (வியாபகத்தை) யடைந்து, இறவிலாதாய் - முடிவில் லாததாய், மாண்பான வொளிக்கெல்லாம் - மாட்சிமையான பிரகாசங்களுக் கெல்லாம், ஒளியாயச்சொரூபத்தை-பிரகாசஞ்செய்விப்பதாகிய (ஆத்மஞான) சொரூபத்தை, மதித்தல் செய்வாம் - சிந்திப்போமென்றொரு சித்தர் சொன் ஞர்—எ-று.

எ - து. ஞாதாவும், திரிசியமும், ஞானமும், வாசனையோடும்நீங் கச்செய்து உயர்வான பார்வைக்கு முதற் பிரகாசமாகிய அவ்வாத்ம சொரூபத்தைத்தியானஞ் செய்வோமென்றொரு சித்தரும் நிலையான குணமுடைய சத்து அசத்தென்னும் இரண்டின் நடுவான வியாபகத் தையடைந்து முடிவில்லாததாய் மாட்சிமையான பிரகாசங்களுக்கெ ல்லாம் பிரகாசஞ்செய்விப்பதாகிய ஆத்மஞானசொரூபத்தை சிந்திப் போமென்றொரு சித்தர் சொன்ஞர்—எ-ம.

ப-ம். அகமென்பார் காண்பானென்றும், பிரமமென்பார், காண்பனவெ ன்றும் அஸ்மியென்பார், காட்சியென்றும் இம்மூன்றின் அசுத்தமான சிவேஸ் வர பிரமத்தோடும், இவற்றின் சுத்தமான கூடஸ்தபிரமவயிக்கியத்தை நீக்கெ ன்பார், வாதனையுடனே சுழலவிட்டென்றும் இயாவையுமாய் விளங்குவதுசுய ம்பிரகாசமென்பார், முதலொளியாமென்றுங் கூறிப்பின்பு தற்பதமென்பார், உள்ளதென்றும்தொம்பதமென்பார் இலதென்றும் அசிபத மென்பார் இரண் டினிடை யெய்தியென்றும இச்சிவேஸ்வர கூடஸ்த பிரமமென்கின்ற நான்கு சைதன்யமுநீக்கினசுயஞ்சைதன்யமென்பார், ஒளிக்கெல்லாம் ஒளியாய்ச்சொ ரூபமென்றுங்கூறினர். இலதென்பதை சிவசிதாபாசனென்க. (11)

## அதர்வணவேத மகாவாக்கியார்த்த நிருபணஞ்செய்து இவைகளைத்தவிர வேறு அனுபவங் கூடாதெனல்.

அகமகமென்ற னைத்துயிரி னிடத்துமிருந் தனவரத முரைப்ப தாகி, நிகழொளியா யான்மதத் துவமான சொரூபத்தை நினைத்தல் செய்வார், திகழிதய குகையுறையுந் தேவதையை விட்டயலே தெய் வந்தேடன், மிகவரிய கவத்துவத்தை யெறிந்துசிறு மணிதேடும் வேட்கை போலாம்,

இ - ள். அகமகமென்று-நான் நான்என்றும், அனைத்துயிரினிடத்துமிரு ந்து-சகல ஆத்மாக்களிடத்துமிருந்து, அனவரத முரைப்பதாகி - சதகாலமு ஞசொல்லுவதாய், நிகழொளியாம் - பிரகாசமாக விளங்கா நின்ற, ஆன்மதத் துவமான சொரூபத்தை - ஆத்மஞானமாகிய வஸ்துவை, நினை

செய்வாம்-சிந்திப்போமென்று (ஒருசித்தர் சொன்னார்), திகழ்தய குகையுறை யும் - விளங்காநின்ற (தனது) உளத்திலெழுந்தருளியிருக்கும், தேவதையை விட்டு - தெய்வத்தைவிட்டு, அயலே தெய்வந்தேடல் - வேறான தெய்வந்தே டுதல், மிகவரிய கவத்துவத்தையெறிந்து, மிகவும் அருமையான (கையிலிருக் கும் கவுஸ்துவ ரத்தினத்தை எறிந்து, சிறுமணிதேடும் - சங்குமணி தேடு கின்ற, வேட்கைபோலாம் - ஆசையை யொத்திருக்கும்—எ-று.

எ-து நான் நான் என்றும் சகல ஆத்மாக்களிடத்து மிருந்து சதாகாலமுஞ் சொல்லுவதாய் பிரகாசமாக விளங்காநின்ற ஆத்ம ஞானமாகியவஸ்துவைசிந்திப்போமென்றொருசித்தர் சொன்னார் விள ங்காநின்றதனது உளத்தில் எழுந்தருளியிருக்கும் தெய்வத்தைவிட்டு வேறான தெய்வந்தேடுதல் மிகவும் அருமையான கையிலிருக்குங் கவஸ்துவரத்தினத்தை யெறிந்து சங்குமணிதேடுகின்ற ஆசையை யொத்திருக்கும்—எ-ம்,

ப-ம். அயமென்பார், அகமகமென் றனைத்துயிரினிடத் திருந்தென்றும் ஆத்மாவென்பார், அனைத்துயிரொன்றும் இவ்விரண்டாகியும் விளங்குகின்ற பிரமமென்பார், நிகழொளியா மாத்துமதத்துவமான சொரூபமென்றுங் கூறி னார், அனைத்துயிரினிடத்து மிருந்தென்றதை ஈஸ்வரபதமெனக்கொள்க. (12)

## நிராசையுள்ளவர்க்கு இவ்வனுபவங் கிடைக்குமே யன்றி அஃதில்லாதவர்க்கு இன்றெனல்.



மாளாத காதலெலும் வர்ச்சனு பிக்கொடியின் வனத்தைச்சுட்டு நீளாசை யனைத்துமறுத் தவர்க்கன்றோ விப்பயன்று னோரா நிற்குங் கோளான பொருளனைத்தின் முன்பொடுபின் பினிமையிலாக் குற் றங்கண்டு, மீளாத பாவனையாற் கட்டுண்பார் வேசரியே வேறென் றன்றால்.

இ-ள். மாளாதகாதலெலும் - முடிவில்லாத ஆசையென்கின்ற, வர்ச்ச னுபிக்கொடியின் - விடவல்லியின், வனத்தைச்சுட்டு - காட்டையெரித்து, நீளாசையனைத்தும் - மிகுந்த இச்சைகளியாவையும், அறுத்தவர்க்கன்றோ- கெடுத்தவர்களுக்கல்லவா, இப்பயன்றான் - இவ்வாத்மவிலாபமானது, னோரா நிற்கும் - கிடைக்கும், கோளானபொருளனைத்தின் - தீமையான வஸ்துக்க ளனைத்திலும், முன்பொடுபின்பி னிமையிலா-முன்னும்பின்னு மின்பமில்லாம லிருக்கின்ற, குற்றங்கண்டும் - குற்றத்தைப்பார்த்திருந்தும், மீளாதபாவனை யால் - திரும்பாத பாவனையினால், கட்டுண்பார்-பந்தப்படுபவர்கள், வேசரியே- கர்த்தப (மேயல்லாமல) வேறென்றன்று - வேறொன்றுமல்ல—எ-று,

எ - து. முடிவில்லாத ஆசையென்கின்ற விஷவல்லியின் காட்டையெரித்து மிகுந்த இச்சைகளியாவையும் கெடுத்தவர்களுக்கல்லவா? இவ்வாத்மலாபமானது கிடைக்கும். நிலையானவஸ்துக்களனைத்திலும் முன்னும் பின்னும் இன்பமில்லாமலிருக்கின்ற குற்றத்தைப் பார்த்திருந்தும் திரும்பாத பாவனையினால் பந்தப்படுபவர்கள் கர்த்தபமேயல்லாமல் வேறொன்றுமல்ல—எ-ம். (13)

## மனது விடயசுகத்தை நீக்கிப் பிரமசுகத்தை அடையவேண்டும் எனல்.

எழுந்தெழுந்து சீறுகின்ற யிந்திரியப் பாம்புகளை யிதயந் தன்னில், அழுந்துவிவேகத் தடியால் வச்சிரங்கொண் டிந்திரன்வெற் படர்வதென்ன, விழுந்திடமோ துறவேண்டுஞ் சாந்தியினாற் சமமேவி யிடர்தீர் நெஞ்ச, முழுந்துசுக வடிவாந்தற் பதநிலையைப் பெறுமிதுவே முத்தி யென்ன.

இ - ள். எழுந்தெழுந்து சீறுகின்ற - எழும்பியெழும்பி சீறுகின்ற, இந்திரியப்பாம்புகளை - இந்திரியமென்னுஞ் சற்பங்களை, இதயந்தன்னில் - மனதினிடத்தில், அழுந்துவிவேகத்தடியால் - உறுதியான விவேகமென்னுந் தண்டினால், இந்திரன் - தேவேந்திரன், வச்சிரங்கொண்டு - வச்சிராயுதத்தைக் கொண்டு, வெற்படர்வதென்ன - மலைகளைப்புடைப்பதுபோல, விழுந்திடமோதுறவேண்டும - கெடும்படியாக அடிக்கவேண்டும், சாந்தியினாற்சமமேவி- உபசாந்தத்தினாற் சமபாவத்தையடைந்து, இடர்தீர் நெஞ்சம் - துன்பமில்லாத மனமானது, முழுந்து சுகவடிவாம் - முழுதுஞ் சுகாகாரமானது, தற்பதநிலையைப்பெறும் - தனது ஆத்மசொரூப ஸ்திதியைப்பெறும், இதுவே முத்தியென்ன - இதுவே மோட்சமென்று (பலசித்தர்) சொன்னார்கள்-எ-று.

எ - து. எழும்பியெழும்பி சீறுகின்ற இந்திரியமென்னுஞ் சற்பங்களை மனதினிடத்தில் உறுதியான விவேகமென்னுந் தண்டினால் தேவேந்திரன் வச்சிராயுதத்தைக்கொண்டு மலைகளைப் புடைப்பதுபோலக் கெடும்படியாக அடிக்கவேண்டும். உபசாந்தத்தினாற் சமபாவத்தை யடைந்து துன்பமில்லாத மனமானது முழுதுஞ் சுகாகாரமான தனது ஆத்மசொரூப ஸ்திதியைப்பெறும். இதுவே மோட்சமென்று பலசித்தர் சொன்னார்கள்—எ-ம்.

முழுதுமென்பது முழுந்தெனவிகாரமாயிற்று. (இ-ரு-க-ம்.) நிட்காம புண்ணிய பரிபாகத்தினாற் சித்தசுத்தியும், அச்சித்தசுத்தியாற் சாதனசதுஷ்டயமும், அச்சாதனசதுஷ்டயத்தான் முத்தியையடைவதற் கதிதீவிரமுமுண்டாய் ஏகாந்தனாயிருக்குஞ் சமயத்தில் ஆதிவாகிக சரீரியான சித்தர்க

ஞசாவிக்கொண்டிருந்த மகாவாக்கியார்த்தங்கள் அவனுக்குச் சிரவணமாய் அதனுன் மனன நிதித்தியாசனஞ் சமாதி சாட்சாத்கார முண்டாகும்பொருட்டு ஆத்மவிசாரத்தை யறிவே குருவாய் நின்றுணர்த்தியதாம். (14)

## அவ் வனுபவம் விளங்கு நிமித்தம் விசாரத்திற்கு ஆரம்பித்தல்.

தெளிவுடைய சித்தர்கணந் திகழ்வுறப்பா டியகீதந் தெளியக் கேட்டுக், களிதருவெஞ் சினக்கருட னொலிகேட்ட பாம்பென்னக் கலங்கி மன்னன், குளிர்பொழிலி னகமடைந்தா னனைவரையும் விடைகொடுத்துக் கோயில் புக்கான், நளிர்சுதைசெய் மேனிலத்தி லொருவனே யிருந்துநனி நாட லுற்றான்.

இ - ள். தெளிவுடைய சித்தர்கணம் - தெளிவையுடைய சித்தர்குழாங்கள், திகழ்வுற - விளக்கமாக, பாடிய கீதம் - பேசிய அனுபவார்த்தங்களை, தெளியக்கேட்டு - தெளிவாகக்கேட்டு, களிதரு - செருக்குகின்ற, வெஞ்சினக்கருடன் - கொடிய கோபமுள்ள கருடனது, ஒலிகேட்ட பாம்பென்ன - சத்தத்தைக்கேட்ட சற்பத்தைப்போல, மன்னன் கலங்கி - சனகராசன் கலக்கமுற்று, குளிர்பொழிலின்று - குளிர்ச்சிபொருந்திய சிங்காரவனத்திலிருந்து, அகமடைந்தான் - தனதரண்மனைக்குவந்து, அனைவரையும் விடைகொடுத்து - மந்திரி முதலிய யாவர்க்கு முத்தரவு கொடுத்து, கோயில்புக்கான் - தனது வீட்டிற்புகுந்து, நளிர் சுதைசெய் - குளிர்ந்த சுண்ணச்சாந்தினுற் செய்த, மேனிலத்தில் - மேலுப்பரிகையில், ஒருவனேயிருந்து - தனியனுயிருந்து, நனிநாடலுற்றான் - (முன் சிரவணமான அருத்தத்தை) மிகவும் விசாரிக்கத்தொடங்கினுன் எ-று.

எ - று. தெளிவையுடைய சித்தர்குழாங்கள் விளக்கமாக, பேசிய அனுபவார்த்தங்களைத் தெளிவாகக் கேட்டுச் செருக்குகின்ற கொடிய கோபமுள்ள கருடனது சத்தத்தைக்கேட்ட சற்பத்தைப் போல சனகராசன் கலக்கமுற்றுக் குளிர்ச்சிபொருந்திய சிங்கார வனத்திலிருந்து தனதரண்மனைக்குவந்து மந்திரிமுதலிய யாவர்க்கு முத்தரவுகொடுத்துத் தனது வீட்டிற்புகுந்து குளிர்ந்த சுண்ணச் சாந்தினுற்செய்த மேலுப்பரிகையில் தனியனுயிருந்து, முன் சிரவணமான அருத்தத்தை மிகவும் விசாரிக்கத்தொடங்கினுன்—எ-ம்.

இ-ம். ஆத்மாநாத்ம விசாரணைசெய்யத் தொடங்கினதாம். (15)

## லோகாசார தூஷணம்.

பறக்கின்ற பறவைகளின் சிறகென்ன வனவரதம் பதைத்துலாவி, இறக்கின்ற வுலகநடை நோக்கிவாய் விட்டிரங்கி யியம்ப லுற்று

ன், அறக்கன்றி யவத்திலுழன் றலமருமிவ் வுலகிடையா னந்தோ வந்தோ, நிறக்கின்ற மயக்கத்தாற் கல்லிடைகற் போலுருண்டு நெரிந்தே னந்தோ.

இ-ள். பறக்கின்ற பறவைகளின்சிறகென்ன - பறக்கின்ற பட்சிகளின் இறகைப்போல, அனவரதம் பதைத்துலாவி - சதாகாலமும் பதைத்தலைந்து, இறக்கின்ற வுலகநடைநோக்கி - நசிக்கின்ற சகத்தினடையைப்பார்த்து, வாய்விட்டிரங்கி - வாய்விட்டழுது, இயம்பலுற்றான் - சொல்லத் தொடங்கினான், அறக்கன்றி - மிகவுநைந்து. அவத்திலுழன்று - அவத்தைகளிற்சுழன்று, அலமருமிவ்வுலகிடை - சஞ்சலப்படும் இச்சகத்தினிடத்தில், யான் - நான், அந்தோ வந்தோ - ஆச்சரிய மாச்சரியம், நிறக்கின்ற மயக்கத்தால் - அதிகரிக்கு மயக்கத்தினால், கல்லிடைக் கற்போல - (பெருங்) கல்லின் மத்தியிலுற்ற (பொடிக்) கற்களைப்போல, அந்தோ உருண்டுநெரிந்தேன் - அதிசயஞ் சுழன்று வருந்தினேன்—எ று.

எ-து. பறக்கின்ற பட்சிகளின் இறகைப்போல சதாகாலமும் பதைத்தலைந்து நசிக்கின்ற சகத்தினடையைப் பார்த்து வாய்விட்டழுது சொல்லத் தொடங்கினான். மிகவுநைந்து அவத்தைகளிற் சுழன்று சஞ்சலப்படும் இச்சகத்தினிடத்தில் நான் ஆச்சரியம் ஆச்சரியம்! அதிகரிக்கு மயக்கத்தினால் பெருங்கல்லின் மத்தியிலுற்ற பொடிக்கற்களைப்போல அதிசயஞ் சுழன்று வருந்தினேன்—எ-ம். ()

## ஆயுள் தூஷணம்.

---

காலமொருகான் முடியா திதனிடையெண் ணூறுண்டோர் கணமு மில்லைச், சாலமிது தனைமதித்து வன்காத லிடைவீழ்ந்து தளர்வதேனன், நூலமதி யாற்கெட்ட வென்னைப்போல வினரார் சொல்லற் பாற்றே, சீலமறு வாணாளைப் பெரிதாக நினைவதே சீசீயந்தோ.

இ-ள். ஒருகான் முடியாது - ஒருகாலமு முடியாமலிருக்கின்ற, காலதத்துவமான, இதனிடை - இதனிடத்தில், எண்ணூறுண்டு - எண்ணிக்கையுள்ள (எனதாயுளென்னும்) நூறு வருடமானது, ஓர் கணமுமில்லை - ஒரு க்ஷணநேரமுமில்லை, இதுதனை - இந்த ஆயுளை, சால மதித்து - மிகவும் பெரிதாக நிச்சயித்து, வன் காதலிடை வீழ்ந்து - வலிமையுள்ள ஆசையினிடத்தில் விழுந்து, நான் றளர்வதேன் - யான் தளர்ச்சியடைவதென்ன, நூல மதியாற் கெட்ட - நூல புத்தியினாற்கெட்ட, என்னைப்போல வினரார் - என்னைப்போல இழிவுள்ளவர்களார், சொல்லற்பாற்றே - கூறத்தக்கதோ,

சிலமறுவாணுளை - ஒழுங்கில்லாத ஆயுளை, பெரிதாகநினைவது - கனமா நினை வது, அந்தோ சிசீ - ஐயோ சை சை எ-று.

எ — து. ஒருகாலமு முடியாமலிருக்கின்றகாலதத்துவமான் இத னிடத்தில் எண்ணிக்கையுள்ள எனதாயுளென்னு நூறுவருஷமானது ஒருக்ஷண நேரமுமில்லை, இந்த ஆயுளை மிகவும் பெரிதாக நிச்சயித்து வலிமையுள்ள ஆசையினிடத்தில் விழுந்து யான்தளர்ச்சியடைவதெ ன்ன? தூலபுத்தியினுற்கெட்ட என்னைப்போல இழிவுள்ளவர்களார்? கூறத்தக்கதோ ஒழுங்கில்லாத ஆயுளைக் கனமாக நினைவது ஐயோ சை சை—எ-ம். (17)

## இராசபோக தூஷணம்.

எல்லையிலா வண்டத்தி லியானுளும் புவிநோக்கி லிறையு மில்லை, அல்லலுறு மிதுபெரிதா வாதரித்து நிற்பதே யந்தோ வந்தோ, புல் லிமையத் தினிதாகி யுதாரமாய்ச் செயப்படாப் பொருளீதென்னத், தொல்லுலகி லொருபொருளுங் காணேனித் தொடர்ச்சிநிலை யென் னேயென்னே.

இ - ள். எல்லையிலாவண்டத்தில் - அளவில்லாதஇடங்களில், யானுளும் புவிநோக்கில் நானுளுகின்ற பூமியைப்பார்க்குமளவில், இறையுமில்லை-அணு வளவுமில்லை, அல்லலுறுமிது - துன்பம்பொருந்தாநின்ற இச்சகத்தை, பெரி தா யாதரித்து - பெரிதாகவிரும்பி, நிற்பதே யந்தோவந்தோ - நிற்கின்றதே ஆச்சரியம் ஆச்சரியம், புல்லிமையத்து - பொருந்துகின்ற இமைப்பில், இனி தாகி - இனிமையாகியும், உதாரமாய் - உதாரமாகியும், செயப்படா - செய்ய ப்படாததாகியு மிருக்கின்ற, பொருளீதென்ன - பொருளிதுவென்று சொல் லும்படியான, தொல்லுலகில் - பழமையாகியசகத்தில், ஒருபொருளுங்காணே ன் - ஒரு வஸ்துவையாவது கண்டிலன், இத்தொடர்ச்சி நிலை - இத்தொடர் பாகிய தன்மை, என்னே யென்னே - என்ன அதிசயம்—எ-று.

எ - து. அளவில்லாத அண்டங்களில் நானுளுகின்ற பூமியைப் பார்க்குமளவில் அணுவளவுமில்லை துன்பம் பொருந்தாநின்ற இச்சக த்தைப் பெரியதாகவிரும்பி நிற்கின்றதே யாச்சரியம் ஆச்சரியம்! பொருந்துகின்ற இமைப்பில்இனிமையாகியும், உதாரமாகியும், செய் யப்படாததாகியுமிருக்கின்ற பொருளிது வென்றுசொல்லும்படியான பழமையாகிய சகத்தில் ஒருவஸ்துவையாவது கண்டிலன், இத்தொ டர்பாகிய தன்மை என்ன அதிசயம்—எ-ம். (18)

## போகதூஷணம்.



தலைவர்தலை மேலுறைவோர் நாட்களினாற் றாழ்ந்தோர்க்குத் தாழ வீழ்வர், நிலையில்பெரு மையையுறுதி நினைக்கின்ற நெஞ்சேயின் னினைவீ தென்னே, தொலைவில்பெரும் போகக்கள் பெரியோர்கள் கிளையோடுந் தோன்றித் தோன்றி, உலவுறமாண் டார்முன்னா ளின்னாளிங் கிவையனைத்தி லுறுதி யென்னே.

இ - ள். தலைவர் - மேலானவர்களுக்கு, தலைமேலுறைவோர்-மேலாயிருப்பவர்களும், நாட்களினால் - தினங்களினால், தாழ்ந்தோர்க்குத் தாழவீழ்வர் கீழ்ப்பட்டவர்களுக்குங் கீழாவார்கள், நிலையில்பெருமையை - (இப்படி) நிலையில்லாத செல்வத்தை, உறுதி நினைக்கின்ற நெஞ்சே - உறுதியாக நினைக்கின்றமனமே, இன்னினைவீதென்ன - இன்னினைப்பென்ன காரணம், தொலைவில் பெரும்போகங்கள் - நீங்காத மகாபோகங்களும், பெரியோர்கள்-மகான்களும், கிளையோடும் - சுற்றத்தோடும், தோன்றித் தோன்றி - உண்டாகியுண்டாகி, முன்னாள் - முற்காலம், உலவுறமாண்டார் - சஞ்சலமுற்றிறந்தார்கள், இன்னாள் - இப்பொழுது, இங்கிவையனைத்தின் - இவ்விடத்திலுள்ள வஸ்துக்கள் இயாவிலும், உறுதியென் - நிச்சயமென்ன—எ-று.

எ - து. மேலானவர்களுக்கு மேலாயிருப்பவர்களும தினங்களினால் கீழ்ப்பட்டவர்களுக்குங் கீழாவார்கள். இப்படி நிலையில்லாதசெல்வதை உறுதியாக நினைக்கின்ற மனமே இன்னினைப்பென்ன காரணம். நீங்காத மகாபோகங்களும் மகான்களும் சுற்றத்தோடும் உண்டாகியுண்டாகிமுற்காலம சஞ்சலமுற்றிறந்தார்கள் இப்பொழுதிவ்விடத்திலுள்ள வஸ்துக்களியாவிலும் நிச்சயமென்ன—எ-ம். (19)

## பிரமன்முதலியோர் பெருஞ்செல்வதூஷணம்.



மண்ணாடு மன்னவரு மவர்தனமு மாண்டனநுண் மணலையொக்கும, விண்ணாடு மிந்திரரு மவர்வாழ்வும் போயினவிண் மீனையொக்கும், எண்ணாடும் பிரமருமண் டமும்பூதங் களுமிறந்த வெல்லையில்லைக், கண்ணாடு மவையெங்கே நிலைவாழ்க்கை நிலையென்னே கவலுநெஞ்சே.

இ - ள். மண்ணாடும் - பூலோகமும், மன்னவரும் - (அதையாளும்) அரசர்களும், அவர் தனமும் - அவரது செல்வங்களும், மாண்டன - நசித்தவைகள், நுண்மணலையொக்கும்-நுட்பமான மணலுக்கொப்பாகும், விண்ணாடும் -தெய்வலோகமும், இந்திரரும் - (அதற்கரசராகிய) தேவேந்திரர்களும், அவர்

வாழ்வும் - அவாது செல்வங்களும், போயின - மரித்தவைகள், விண்மீனை யொக்கும் - ஆகாயத்தின் உடுக்களை யொத்திருக்கும், எண்ணுடும் - எண்ணிக் கையுள்ள சகங்களும், பிரமரும் - பிரமர்களும், அண்டமும் - அண்டங்களும், பூதங்களும் - சீவகோடிகளும், இறந்தவெல்லையில்லை - நசித்தது அளவில்லை, கவலுநெஞ்சே - வருத்துமனமே, கண்ணுடுமவை யெங்கே - பார்க்கப்பட்டவைகளெங்கே, நின்வாழ்க்கை நிலையென்னே - உனது வாழ்க்கையினது நிலையெங்கே-எ-று.

எ - து. பூலோகமும் அதையாளும் அரசர்களும், அவாதுசெல்வங்களும், நசித்தவைகள் நுட்பமான மணலுக்கொப்பாகும். தெய்வலோகமும் அதற்கரசராகிய தேவேந்திரர்களும் அவாது செல்வங்களும் மரித்தவைகள் ஆகாயத்தின் உடுக்களை யொத்திருக்கும். எண்ணிக்கையுள்ள சகங்களும் பிரமர்களும் அண்டங்களும் சீவகோடிகளும் நசித்தது அளவில்லை. வருத்து மனமே! பார்க்கப்பட்டவைகளெங்கே? உனது வாழ்க்கையினது நிலையெங்கே—எ-ம். (20)

## கால தூஷணம்

செல்லாத மாயையிரு ளிரவிலே தேகமயத் தியக்க மான [ணிற்
பொல்லாத நீள்கனவாஞ் சூனியத்தி லிச்சையிறை பூண்டே னென்
கல்லாத புல்லியனேன் சிசிநா னனவரதங் காணு நாட்கள் [ணேன்
எல்லாம்போ யினபோமா லிறவாதொன் றுப்நன்று மெழிலுட் கா

இ - ள். செல்லாதமாயை - ஓர்பொருளாகச்செல்லாத மாயையென்னும், இருளிரவில் - இருண்ட இராத்திரியில், தேகமயத்தியக்கமான - தேகாகார மயக்கமென்னும், பொல்லாத நீள்கனவாம் - கொடியநீண்ட சொற்பனமாகிய, சூனியத்தில் - மித்தையில், இச்சையிறை பூண்டேனென்னில் - ஆசையற்பம் வைத்தேனாயின், கல்லாத புல்லியனேன் - கற்காத கீழ்மகனேனேன், சிசி - சைசை, நானனவரதம் - யான் எப்போதும், காணுநாட்களெல்லாம்- காண்கின்ற காலங்களனைத்தும், போயினபோம் – நசித்தேபோகும், இறவாதொன்றும் - நசியாமலொன்றுவது, நன்றுமெழிலுட்காணேன் - நன்மை பொருந்திய அழகுள்ள காலத்தைப் பார்த்திலன்-எ-று.

எ - து. ஓர் பொருளாகச்செல்லாத மாயையென்னும் இருண்ட இராத்திரியில் தேகாகார மயக்கமென்னும கொடிய நீண்ட சொற்பனமாகிய மித்தையில் ஆசையற்பம் வைத்தேனாயின் கற்காத கீழ்மகனேனேன். சைசை யானெப்போதும் காண்கின்ற காலங்க ளனைத்

தும் நசித்தே போகும். நசியாமலொன்றுவது நன்மை பொருந்திய அழகுள்ள காலத்தைப் பார்த்திலன்—எ—ம். (21)

## தனதூஷணம்.

——()——

நடுவின்முடி வினிலடியி னன்றான பொருளொன்று ஞாலத் தில்லைப்
படுபொருளெல் லாமிறப்பா மலத்தினு லேபூசப் பட்ட தன்றோ
கடுவினைக ளுடோறுங் காய்துயா நாடோறுங் கரையொன் றில்லாக்
கொடுமைகளே நாடோறுஞ் செய்கின்று ரறிவிலார் குரம்பைக் கூத்
தால்.

இ - ள். நடுவில் - மத்தியிலாவது, முடிவினில் - அந்தத்திலாவது, அடியில் - ஆதியிலாவது, நன்றான பொருளொன்றும் - நன்மையாகிய வஸ்துக்களொன்றுவது, ஞாலத்தில்லை-பூமியிலில்லை, படுபொருளெல்லாம் உண்டான வஸ்துக்களியாவும், இறப்பாமலத்தினால் - நாசமென்னு மலத்தினால், பூசப்பட்டதன்றே - தடவப்பட்டதல்லவா, நாடோறும் - தினங்கடோறும், கடுவினைகள் - கடுமையான பாவவிருத்திகளையும், நாடோறும் - நாள்கள்தோறும், கரையொன்றில்லாக் கொடுமைகள் - ஓர் வரம்பின்றிய தீமைகளையும், அறிவிலார் குரம்பைக் கூத்தாற்செய்கின்றார் - மூடர்கள் சரீர நடனத்தாற் செய்கின்றார்கள்-எ-று.

எ — து. மத்தியிலாவது அந்தத்திலாவது ஆதியிலாவதுநன்மையாகிய வஸ்துக்களொன்றுவது பூமியிலில்லை. உண்டான வஸ்துக்களியாவும் நாசமென்னு மலத்தினால் தடவப்பட்டதல்லவா தினங்கள்தோறும் கடுமையான பாவவிருத்திகளையும் நாள்கள்தோறும் வருத்துகின்ற துன்பங்களையும் நாள்கடோறும் ஓர்வரம்பின்றிய தீமைகளையும் மூடர்கள் சரீரநடனத்தாற் செய்கின்றார்கள்—எ-ம். (22)

## புறப்பொருளை நியதிகளைந்து இதற்கு ஆதாரமான புறப்பிலுள்ள தேகத்தை நியதிசெய்வான் அதன் பருவங்களைத் தூஷித்தல்.

பாலகனு யஞ்ஞானத் தழுந்துவனற் காளையாய்ப் பாவை மாரார்
சாலவருந் தவன்விருத்தன் றனுசிக் குடும்பத்தாற் றளர்ந்துசாவன்
மேலவிவ னெக்காலத் தென்செய்வான் மாயக்கூத் திருந்தவாறே
ஞாலமெலா மாடரங்காய்ப் பொறிமேள மாய்மனப்பேய் நடிக்கு
மன்றே.

இ - ள். பாலகனுய் - பாலப்பருவனுய், அஞ்ஞானத்தழுந்துவன் - அஞ்ஞானத்தி லழுந்துவான், நற்காளையாய் - நல்லவெவ்வன பருவனுய், பாவையாரால் - ஸ்திரீகளால், சாலவருந்துவன் - மிகவும் வருத்தப்படுவான், விருத்தன்ருனுகி - மூப்புப்பருவமுடையவனுய், குடும்பத்தால்-சம்சாரத்தினுல், தளர்ந்துசாவன் - தளர்ந்து மாணமடைவான், மேலவிவன் - மேலிவன், எக்காலத்து - எந்தக்காலத்தில், என்செய்வான் - என்ன (சற்கிருத்தியத்தைச்) செய்வான், மாயக்கூத்திருந்தவாறு - மாயையினடடன மிருந்தவிதம் (என்ன), ஞாலமெலாமாடரங்காய் - சகங்களனைத்து நடனசபையாகவும், பொறிமேளமாய் - இந்திரியம் (பல) வாத்தியங்களாகவும், மனப்பேய்நடிக்கும் - மனப்பசாச நடனஞ்செய்யும்-எ-று.

எ - து. பாலப்பருவனுய் அஞ்ஞானத்தில் அழுந்துவான், நல்லஎவ்வன பருவனுய் ஸ்திரீகளால் மிகவும் வருத்தப்படுவான், மூப்புப்பருவமுடையவனுய் சம்சாரத்தினுல் தளர்ந்து மரணமடைவான், மேலிவன் எந்தக்காலத்தில் என்ன சற்கிருத்தியத்தைச் செய்வான்? மாயையினடன மிருந்தவிதமென்ன? சகங்களனைத்தும் நடனசபையாகவும், இந்திரியம் பலவாத்தியங்களாகவும், மனம்பசாசம்நடனஞ்செய்யும்--எ--ம். (23)

## அறம்பொருளின் இன்பத்தைநோக்கி யாவையுங் குற்றமுள்ள வஸ்துக்களெனத் தள்ளுதல்.

உள்ளத்தின் முடிமேலே யில்லாமை வீற்றிருக்கு முலகி லென்றுந், தெள்ளுற்ற நல்லறத்தின் சிரத்திலே யெப்பொழுதுந் தீமை வாழும், எள்ளற்ற வின்பத்தின் றலைமேலே துன்பங்க ளிருக்கு மென்றூற், கொள்ளத்தக் கனவான குற்றமிலாப்பொருளேது குறிப்புளோர்க்கே.

இ - ள். உள்ளத்தின் முடிமேல் - சத்தினது சிரசின்மேல், இல்லாமை வீற்றிருக்கும் -அசத்துவீற்றிருக்கும், உலகிலென்றும் சகத்திலெப்பொழுதும், தெள்ளுற்ற நல்லறத்தின்சிரத்தின் - தெளிந்த நல்லதருமத்தின்முடியில், எப்பொழுதுந் தீமைவாழும் - சதாகாலமும் பொல்லாங்கு வாழ்ந்துகொண்டிருக்கும், எள்ளற்றவின்பத்தின் றலைமேல் - இகழ்ச்சியற்ற இன்பத்தினது சிரசின்மேல், துன்பங்களிருக்குமென்றூல் - துக்கங்களிருக்குமேயாணுல், குறிப்புளோர்க்கு - (இக்) குறிப்புள்ளவெனக்கு, கொள்ளத்தக்கனவான - கொள்ளத்தகுதியவான, குற்றமிலாப்பொருளேது - குற்றமற்ற வஸ்துவெது—எ-று.

எ - து. சத்தினது சிரசின்மேல் அசத்துவீற்றிருக்கும். சகத்திலெப்பொழுதும் தெளிந்த நல்ல தருமத்தின் முடியில் சதாகாலமும்

பொல்லாங்கு வாழ்ந்துக்கொண்டிருக்கும். இகழ்ச்சியற்ற இன்பத்தி னதுசிரசின்மேல் துக்கங்களிக்குமேயாளுல், இக்குறிப்புள்ள எனக் குக் கொள்ளத்தகுதியவானகுற்றமற்ற வஸ்துவெது?—எ-ம். (24)

## மனமே சுகதுக்கமாம் என்பதை விசாரித்தல்.



விழிப்பதுவு மிமைப்பதுவுஞ் சகத்தோற்ற மொடுக்கமா மேலோ ருண்டாற், பழிப்பரிய வன்னூர்முன் னென்போல்வா ரென்னென்று பகரலாவர், இழிப்பரிய விசித்திரமாஞ் சம்பத்து மாபத்தா மிதயங் காயில் ஒழிப்பரிய விசித்திரமா மாபத்துஞ் சம்பத்தா முள்ளம் வே ண்டில்.

இ-ள். விழிப்பதுவு மிமைப்பதுவும் - (கண்) விழிக்கின்றது மூடுகின்ற தும் - சகத்தோற்றமொடுக்கமாம்-சகத்தினுற்பத்திலயமாகப்பெற்ற, மேலோ ருண்டால் - மேலானபிரமாதிக ளுண்டாயிருக்கின்றதால், பழிப்பரியவன்னூர் மூன் நிந்திக்கப்படாத அத்தன்மையுள்ளவர்கண்முன்பு, என்போல்வார்-என் னையொத்தவர்கள், என்னென்றுபகரலாவ - என்னவென்றுசொல்லப்படுவார் கள், இழிப்பரிய - இழிவுசொல்லுதற் கரிதாயிருக்கின்ற, விசித்திரமாஞ்சம்பத் தும் - அதிசயமான சம்பத்துகளும், இதை யங்காயில் - மனதுவருந்தினுல், ஆபத்தாம் - ஆபத்துகளாம், ஒழிப்பரிய - நீக்குதற்கரிய, விசித்திரமாமாபத் தும் - அதிசயமான ஆபத்துகளும், உள்ளம்வேண்டில் - மனதுவிரும்பினுல், சம்பத்தாம் - சம்பத்தாகும்-எ-று.

எ-து. கண்விழிக்கின்றது மூடுகின்றதுங் சகத்தினுற்பத்திலய மாகப்பெற்றமேலான பிரமாதிகளுண்டாயிருக்கின்றதால் நிந்திக்கப் படாத அத்தன்மையுள்ளவர்கள் முன்பு என்னையொத்தவர்கள் என்ன வென்று சொல்லப்படுவார்கள். இழிவுசொல்லுதற் கரிதாயிருக்கின்ற அதிசயமான சம்பத்துகளும் மனதுவருந்தினுல் ஆபத்துக்களாம். நீக் குதற்கரிய அதிசயமான ஆபத்துக்களும் மனது விரும்பினுல் சம்பத் தாகும்—எ-ம. (25)

## மாயாகாரணமனதே யாம் என்பதை மன்னித்தல்.



வெம்மாய வாழ்வன்றோ துயர்க்கெல்லாம் பிறப்பிடமாய் விள ம்புகின்ற, தம்மாவிங் கிதனிடையே யழுந்துமவர்க் கின்பமுளதா வதெங்ஙன், மைம்மாயை யென்னுமரம்பணையிலேபூக் காய்பழத்தால் வரம்பற் றோங்க, விம்மால்செய் மனம்வோ மிம்மனந்தான் சங்கற்ப மென்பதாகும்.

இ - ள். வெம்மாயவாழ்வன்றோ - வெப்பமுள்ள சம்சாரவாழ்க்கையல்லவா, துயர்க்கெல்லாம் - துன்பங்களனைத்திற்கும், பிறப்பிடமாய் - உற்பத்திஸ்தானமாய், விளம்புகின்றது - சொல்லப்படுகின்றது, அம்மா - ஆச்சரியம், இதனிடை - இந்தச்சகத்தினிடத்தில், அழுந்துமவாக்கு - முழுகுகின்ற உயிர்களுக்கு, இன்பமுளதாவதெங்ஙன் - இன்பமுண்டாவதெப்படி, மைம்மாயையென்னுமரம் - அஞ்ஞானமாகிய சம்சாரமென்கின்ற விருட்சமானது, பணையிலைபூககாய்பழத்தால் - கிளைபத்திரபுட்ப காயகனிகளாலும், வரம்பெற்றோங்க-அளவில்லாமல் வளரும்படியாக, இம்மால்செய் இந்தமயக்கஞ் செய்கின்ற, மனம்வேராம் - மனமேவேராகும், இம்மனந்தான் - இம்மனதுதான், சங்கற்பமென்று சொல்லப்படும்—எ-று.

எ - து. வெப்பமுள்ள சம்சாரவாழ்க்கையல்லவா? துன்பங்களனைத்திற்கு முற்பத்திஸ்தானமாய் சொல்லப்படுகின்றது, ஆச்சரியம். இந்தச் சகத்தினிடத்தில் முழுகுகின்ற உயிர்களுக்கு இன்பமுண்டாவதெப்படி? அஞ்ஞானமாகிய சம்சாரமென்கின்ற விருட்சமானது கிளைபத்திரபுட்ப காய்கனிகளாலும் அளவில்லாமல் வளருமபடியாக இநதமயக்கஞ் செயகின்றமனமே வேராகும். இம்மனதுதான் சங்கற்பமென்று சொல்லப்படும்—எ-ம் (26)

## மனதை நிகிர்த்தியிற் காட்சிப்படுத்தல்.

சங்கற்ப நாசத்தா லெளிதாக மனநாசந் தானேயெய்து
மங்குற்ற மனமிறக்கிற் சநநமர ணங்களெனு மாமு மாயும்
இங்கிப்பா லெனைதிருடுங் கள்ளனைக்கண் டேன்கண்டே னிவர்பே[ர்நெஞ்சம்
பொங்குற்ற நெஞ்சத்தால் நெடுநாளுணந் தேனின்று பொன்றுவிப்
பேன்.

இ - ள். சங்கற்பநாசத்தால் - சங்கற்பநாசத்தினால், எளிதாக மனநாசந் தானேயெய்தும் - சுளுவாக மனோநாசம் வலியவரும், மங்குற்ற மனமிறக்கில்-கேடுற்ற (வேறான) மனமானதிறந்தால், சநநமரணங்களெனும் - பிறப்பிறப்பென்கின்ற, மராமுமாயும் - விருட்சமுநாசமாகும், இங்கிப்பால் - இவ்விடத்தில், எனைத்திருடும் - (ஆத்மாத்தினமான) என்னைத்திருடுகின்ற, கள்ளனைக் கண்டேன் கண்டேன்-சோரனைப்பார்த்தேன் பார்த்தேன், இவன்பேர் நெஞ்சம் ; இவனுமமானது மன்மாம், பொங்குற்றநெஞ்சத்தால் - வளராநின்ற இந்தமனதினால், நெடுநாளுணந்தேன் - வெகுகாலந் துன்பப்பட்டேன், இன்று பொன்றுவிப்பேன் - இப்போது கெடுப்பிப்பேன்-எ-று.

எ - து. சங்கற்ப நாசத்தினால் சுளுவாக மனோநாசம் வலியவரும். கேடுற்ற வேரான மனமானதிறந்தால் பிறப்பு இறப்பென்கின்ற விருட்சமூ நாசமாகும். இவ்விடத்தில் ஆத்ம ரத்தினமான என்னைத் திருடுகின்ற சோரனைப்பார்த்தேன் பார்த்தேன் இவனுமமானதுமனமாம், வளராநின்ற இந்தமனதினால் வெகுகாலந் துன்பப்பட்டேன். இப்போது கெடுப்பிப்பேன—எ-ம். (27)

## மனதை அடக்குங் காரணந்தெரிதல்



இத்தனைநாண் மனமுத்தைத் துளைத்திலே னின்றுதுளைத் தியைந்த நூலாற், சித்திரமாய்க் கோத்தணிவன் முழுதுணர்ந்த தேசிகராற் றெளிந்தே னெல்லாஞ், சுத்தபர மாநந்தந் தோற்றிவிக்கு நல்லறிவாஞ் சோதிபெற்றேன், மெத்தவிவ னானெனவிங் கிவையெனுமப் பொய் யுள்ளொழித்தேன் மீண்டு நாடேன்.

இ - ள். இத்தனைநாள்-இவ்வளவுநாளும், மனமுத்தைத் துளைத்திலேன்-மனமென்கின்ற முத்தைச்சிகிச்சை யென்னுந்தமர்செய்கிலன், இன்றுதுளைத்து-இப்போதுசிகிச்சைசெய்து, இயைந்தநூலால்-பொருந்திய (அநுபவமென்னுஞ்) சூத்திரத்தினால், சித்திரமாய்க்கோத்தணிவன் - அழகாகக்கோவைசெய்துதரிப்பன், முழுதுணர்ந்ததேசிகரால் - சகலமுமுணர்ந்த (சித்தர்களான) ஆசாரியரால், எல்லாந்தெளிந்தேன் - (யாவையுந்) தெரிந்தேன், சுத்தபரமாநந்தம் - சுத்தமான பிரமாநந்தை, தோற்றிவிக்கும் - தெரிவிக்கின்ற, நல்லறிவாஞ்சோதிபெற்றேன் - சுகபோதமாகிய பிரகாசத்தையடைந்தேன், மெத்த-மெதுவாக, இவன் - இவனென்றும், நான் - நானென்னும், இங்கிவையெனதெனும்பொய் - இவ்விடத்து இவைகள் என்னது என்னும் அசத்தியத்தை, உள்ளொழித்தேன் - மனதிற்கெடுத்தேன், மீண்டுநாடேன் - திரும்பவுந்தேடேன்—எ-று.

எ - து. இவ்வளவு காலம் மனமென்கின்ற முத்தைச் சிகிச்சை யென்னுந்தமர்செய்கிலன். இப்போது சிகிச்சைசெய்து பொருந்திய அநுபவமென்னுஞ் சூத்திரத்தினால் அழகாகக்கோவைசெய்து தரிப்பன். சகலமுமுணர்ந்த சித்தர்களான ஆசாரியரால் யாவையுந் தெரிந்தேன். சுத்தமான பிரமாநந்தத்தைத் தெரிவிக்கின்றசுகபோதமாகிய பிரகாசத்தை யடைந்தேன். மெதுவாக இவனென்னும் நானென்னும் இவ்விடத்து இவைகள் என்னது என்னும் அசத்தியத்தை மனதிற்கெடுத்தேன் திரும்பவுந் தேடேன்—எ-ம். (28)

## சுகபோதம் தானுயிருக்கின்ற சமாதியடைதல்.

பேதிக்கு மனமென்னும் பெரும்பகையை முழுவலியாற் பிள ந்து வென்றேன், வாதித்த துயரெல்லா மாற்றினே னுபசாந்த வா ழ்வு பெற்றேன், சாதித்த விவேகமே யுனைவணங்கி னேனென்று சனக்ர் கோமான், சேதித்த மனவலைவெல் லாமொழித்துத் தானே சித் திரம்போ னின்றான்.

இ - ள். பேதிக்கு மனமென்னும் - (எனது ஆத்ம ஞானத்தைப்) பே தஞ்செய்யு மனமென்கின்ற, பெரும் பகையை - பெரிதானசத்துருவை, முழு வலியால் - மிகுந்த பலத்தினால், பிளந்து வென்றேன் - பிளந்து வெற்றி யடைந்தேன், வாதித்த துயரெல்லா மாற்றினேன் - (என்னை) வாதனைசெய்த துன்பங்க ளனைத்தையும் போக்கினேன், உப சாந்தவாழ்வு பெற்றேன் - உப சாந்த வாழ்வையடைந்தேன், சாதித்தவிவேகமே - (இப்படி) சாதிக்கப்பட்ட விவேக ஞானமே, உனை வணங்கினேனென்று - உன்னைத் தொழுதேனென் று, சனகர் கோமான் - சனகராசனானவன், சேதித்த - (என்னைக்) கெடுத்த, மனவலை வெல்லாமொழித்து - மனோசஞ்சலங்கள் அனைத்தையுங்கெடுத்து, தானே சித்திரம்போனின்றான் - தானே சித்திரப் பதுமையைப் போலச் (சமாதியிலிருந்தான்)—எ-று.

எ - து. எனது ஆத்மஞானத்தைப் பேதஞ்செய்யும் மனமென் கின்ற பெரிதான சத்துருவை மிகுந்த பலத்தினால் பிளந்துவெற்றி யடைந்தேன். என்னை வாதனை செய்த துன்பங்க ளனைத்தையும்போ க்கினேன். உபசாந்த வாழ்வை அடைந்தேன். இப்படிச் சாதிக்க ப்பட்ட விவேகஞானமே உன்னைத் தொழுதேனென்று சனகராசனா னவன் என்னைக்கெடுத்த மனோசஞ்சலங்கள் அனைத்தையுங்கெடுத்து த் தானே சித்திரப்பதுமையைப்போலச் சமாதியிலிருந்தான். எ-ம்.

## சமாதியில் சுகம்பெற்றுச் சகசத்தில் வெளிப்படல்.

வாளாசித் திரம்போல நெடிதிருந்து சனகர்பிரான் மாய்ந்த நெஞ்சை; மீளாநல் லுபசாந்த நிறைநெஞ்சா லுலகியல்பை மேவிப் பார்த்தான், றாளாண்மை யாவியற்றும் பொருளேது கைக்கொள்ளத் தக்க தேது, கோளான கற்பனையென் சுபாவவறி வாமெனக்குக் குறி க்குங் காலே.

இ - ள். வாளா சித்திரம்போல - மௌனமாய்ச் சித்திரத்தைப்போல, நெடிதிருந்து - நெடுநேரஞ் (சமாதியில்) இருந்து, சனகர் பிரான் - சனக ரா சன். மாய்ந்த நெஞ்சை - நாசமான மனதை, மீளா நல் லுபசாந்தம் - திரும் பாத நல்ல உபசாந்தமுள்ள, நிறை நெஞ்சால் - பூரண மனதினால், உலகியல்

பை - சகத்தின் குணத்தை, மேவிப்பார்த்தான் - பொருந்திப் பார்த்தான், தாளாண்மையாலியற்றும் - முயற்சியாற் செய்யப்பட்ட, பொருளேது - பொருளியாது, கைக்கொளத்தக்கதேது - கைவசமாக்கத்தக்க பொருளியாது, கோளான கற்பனையென் - குற்றமுள்ள கற்பனையாது, குறிக்குங்காலெனக்குச் சுபாவ வறிவாம் - குறிக்கும்போது எனக்கு (யாவுஞ்) சுபாவஞானமாம்.

எ — து. மௌனமாய்ச் சித்திரத்தைப்போல வெகுநேரஞ் சமாதியிலிருந்து சனகராசன்நாசமானமனதைத்திரும்பாத நல்ல உபசாந்தமுள்ள பூரணமனதினால் சகத்தின் குணத்தைப் பொருந்திப் பார்த்தான். முயற்சியாற் செய்யப்பட்ட பொருளியாது? கைவச மாக்கத்தக்க பொருளியாது? குற்றமுள்ள கற்பனையாது? குறிக்கும் போது எனக்கியாவுஞ் சுபாவஞானமாம்—எ-ம். (30)

சாட்சாத்கார அநுபவ விலாசங்கூறல்.

சுத்தமாய்ச் சொரூபமா மென்னுருவ லான்வேறு தோன்றக் காணேன், வத்தியான் வாராத பொருணயவேன் வந்தபொரு ளத் துந் தள்ளேன், நித்தமாய்த் தன்னிலையி னிற்குமென தறிவுருவி னிலையா னிற்பேன், உத்தவா றேதுவரு மதுவருக வென்றமுழ்ந்தி யொருமை யானான்.

இ - ள். சுத்தமாய் - பரிசுத்தமாய், சொரூபமாம் - (ஆத்மஞான) சொரூபமாகிய, என்னுருவலால் எனது சொரூபத்தையல்லாமல், வேறுதோன்றக் காணேன் வேறு பொருள் தோற்றக்கண்டிலன் வத்தியான் - வளராநின்ற நான், வாராத பொருணயவேன் - வாராத வஸ்துக்களை விரும்பேன், வந்த பொருளனைத்துந் தள்ளேன் - வாராநின்ற வஸ்துக்கள் இயாவையும் வெறுக்கேன், நித்தமாய் - சதாகாலமும், தன்னிலையினிற்கும் - தன்னிலையிலிருக்கின்ற, எனதறிவுருவின் - எனது ஆத்ம ஞான சொரூபத்தில், நிலையா னிற்பேன் - திரமாயிருப்பேன், உத்தவாறேதுவரும் - சொன்னபடி யெதுவருகின்றதோ, அது வருகவென்று - அது வரக்கடவதென்று (சொல்லி), அமுழ்ந்தி - (பிரமாநந்தத்தின்) முழுகி, ஒருமையானான் - சனகராச னொருமைப்பட்டான்

எ - து. பரிசுத்தமாய் ஆத்மஞான சொரூபமாகிய எனதுசொரூபத்தையல்லாமல், வேறுபொருள் தோற்றக்கண்டிலன். வளராநின்ற நான் வாராத வஸ்துக்களை விரும்பேன். வாராநின்ற வஸ்துக்களியாவையும் வெறுக்கேன் சதாகாலமும் தன்னிலையிலிருக்கின்ற எனது ஆத்மஞான சொரூபத்தில் திரமாயிருப்பேன். சொன்னபடி

எதுவருகின்றதோ அது வரக்கடவதென்று சொல்லி பிரமாநந்தத்தின்முழுகி சனகராசனொருமைப்பட்டான்—எ-ம். (31)

## சகநிஷ்டையில் சீவன்முத்தனாய்ச் சஞ்சரித்தல்.



வானேகு கதிரிரவி நாளியற்றும் வாறென்ன வந்து வந்து, தானேதோன் றியதொழிலைப் பற்றின்றிச் செய்துமெனச் சனகனெண்ணித், தீனேய வருகாலஞ் செல்கால மிவையளவுஞ் சிந்தை செய்யான், ஊனேறு நிகழ்காலத் தோரிமைப்பி னகைதலோ டுலாவலுற்றான்.

இ - ள். வானேகு - ஆகாயத்திற் சஞ்சரிக்கின்ற, கதிரிரவி - பிரகாசத்தையுடைய சூரியன், நாளியற்றும் வாறென்ன - தினங்களை (இச்சா எத்தனமில்லாமல்) நடப்பிக்கின்றதுபோல, வந்துவந்து - அடிக்கடிவந்து, தானேதோன்றியதொழிலை - தனேயுண்டாகிய கிருத்தியங்களை, பற்றின்றிச்செய்துமென — பற்றில்லாமற் செய்வோமென்று, சனகனெண்ணி - சனகராசன் சிந்தித்து, தீனேயவருகாலம் - தீமையேநேயமாகவருகின்ற எதிர்காலத்தையும், செல்காலம் - இறந்தகாலத்தையும், இமையளவுஞ் சிந்தைசெய்யான் - அற்பமாகிலுஞ்சிந்திக்காமல், ஊனேறுநிகழ்காலத்து - ஊனமுள்ளவர்த்தமானகாலத்தின் (தொழிலில்), ஓரிமைப்பில் - ஒரு நிமிட நேரத்தில், நகைதலோடு - மந்தகாசத்தோடும், உலாவலுற்றான் - சஞ்சரிக்கத்தொடங்கினான்-எ-று.

எ - று. ஆகாயத்திற் சஞ்சரிக்கின்ற பிரகாசத்தையுடைய சூரியன் தினங்களை இச்சா எத்தனமில்லாமல் நடப்பிக்கின்றதுபோல அடிக்கடி வந்து தானே உண்டாகிய கிருத்தியங்களைப் பற்றில்லாமற் செய்வோமென்று சனகராசன் சிந்தித்துத் தீமையே நேயமாக வருகின்ற எதிர்காலத்தையும் இறந்தகாலத்தையும், அற்பமாகிலுஞ், சிந்திக்காமல் ஊனமுள்ள வர்த்தமான காலத்தின் தொழிலில் ஒரு நிமிடநேரத்தில் மந்தகாசத்தோடும் சஞ்சரிக்கத்தொடங்கினான். ()

(இ-க௱-க-ம்.), சனகராஸ்மீகமா யாசிரியர் வாக்கியங்களைக் கேட்டுச் சுனுவாகப்பெற்ற சுவானுபவத்தாற் சர்வம் பிரமமயமாமென்பதை யுணர்ந்து அதுவாக விளங்கினரென்பதாம். (32)

## சனகரது அனுபவத்தைக்கூறி இவ்வனுபவம் வருவது ஆத்ம விசாரத்தாலன்றி ஏனையவற்றால் கூடாதெனல்.

பேசியதன் விசாரத்தாற் சனகர்பிரான் பெறும்பேறு பெற்ற தல்லால், வாசியுள மற்றொன்றால் வந்ததல்ல வாரீச மலர்க்கண் மாலே, ஆசிலதாய்ச் செவ்வியதாய்த் தனதான விசாரத்தா லடைவ தல்லால், தேசிகரில் லாவினர் செய்தொழிலாற் பெறலாமோ சிற் சொரூபம்,

இ - ள். பேசிய - (சித்தர்களால்) சொல்லப்பட்ட, தன் விசாரத்தால்- ஆத்மவிசாரணையினால், சனகர்பிரான் - சனகராசனென்பவர், பெறும்பேறு- அடையத்தக்க ஆதமலாபத்தை, பெற்றதல்லால் - அடைந்ததே யல்லாமல், வாசியுளம் - உபசாந்தமுள்ளமனது, மற்றொன்றால் வந்ததல்ல - வேறொன்றி னால் வந்ததன்று, வாரீசமலர்க்கண்மாலே - தாமரைகசண்ணையுடைய ஸ்ரீரா மா, ஆசிலதாய் - குற்றமற்றதாகியும், செவ்விதாய் - அழகாகியும் (இருக்கின்ற), தனதானவிசாரத்தால் - தனது ஆத்ம விசாரணையினால், அடைவதல்லால் - (பரமபதத்தை) யடைவதேயன்றி, தேசிகரில்லாதவினர் செய்தொழிலால் - ஆசாரியரில்லாத ஈனர்செய்யுங் கிரியையால், சிற்சொரூபம் பெறலாமோ- ஆத்மஞானசொரூபத்தை யடையலாகுமோ —எ-று.

எ - று. சித்தர்களாற் சொல்லப்பட்ட ஆத்மவிசாரணையினால் சனகராசனென்பவர் அடையத்தக்க ஆத்மலாபத்தை அடைந்ததேயல் லாமல் உபசாந்தமுள்ளமனது வேறொன்றினால் வந்த தன்று, தாம ரைக்கண்ணையுடைய ஸ்ரீராமா! குற்றமற்றதாகியும் அழகாகியுமிருக் கின்ற தனது ஆத்ம விசாரணையினால் பரமபதத்தை யடைவதே யன்றி ஆசாரிய ரில்லாத ஈனர்செய்யுங் கிரியையால ஆத்மஞான சொரூபத்தையடையலாகுமோ—எ-ம். (33)

## நிட்காமகன்மம வேண்டும் எனல்.

புறப்பேறு களைவேண்டி யியற்றுகின்ற புண்ணியத்தைப் புவி யி லுள்ளோர், சிறப்பான நல்லறிவு மிகவேண்டு மென்னுமுதற் செய்யிற் பேறும், விறப்பான வாபத்து விளைநிலமா யிருந்துதுயர் வேலை யாகிப், பிறப்பான நச்சுமற வித்தாகும் பேதமையைப் பிள க்கல் வேண்டும்.

இ - ள். புறப்பேறுகளைவேண்டி-(ஆத்மாவுக்குப்) புறம்பானபதப்பிராப் திகளைவிரும்பி, இயற்றுகின்றபுண்ணியததை - முயற்சிக்கின்ற தருமத்தை புவியிலுள்ளோர் - பூமியின்கணுள்ளவர்கள், சிறப்பானநல்லறிவு

மான சுகபோதமானது, மிகவேண்டுமென்று - மிகவும் (உண்டாக) வேண்டு மென்று, முதற்செய்யிற்பேறும் முன்புசெய்தால் (ஆத்ம) லாபமாம், இறப்பா னவாபத்து - அச்சமாகிய ஆபத்துக்கள் விளைநிலமாயிருந்து - விளைகின்ற பூமியாயிருந்து, துயர்வேலையாகி - துன்பசமுத்திரமாய், பிறப்பான நச்சுமர வித்தாகும் - பவமான விடவிருட்சங்களுக்கு விதையாயிருக்கின்ற, பேதைமை யைப் பிளக்கல் வேண்டும் - அஞ்ஞானத்தைக் கெடுக்கவேண்டும்—எ-று.

எ - து. ஆத்மாவுக்குப் புறம்பான பதப்பிராப்திகளை விரும்பி முயற்சிக்கின்ற தருமத்தைப்பூமியின்கண்ணுள்ளவர்கள்விசேடமான சுகபோதமானதுமிகவுமுண்டாக வேண்டுமென்றுமுன்பு செய்தால் ஆத்மலாபமாம், அச்சமாகிய ஆபத்துக்கள் விளைக்கின்ற பூமியாயிரு ந்து துன்பசமுத்திரமாய் பவமான விடவிருட்சங்களுக்கு விதையா யிருக்கின்ற அஞ்ஞானத்தைக்கெடுக்கவேண்டும்—எ-ம். (34)

## அந் நிட்காமத்தால் உண்டாயின விசாரயிணையின் பலனைக்கூறல்.



இலங்கியசிந் தாமணியா மிதயமெனுஞ் சாக்கறையி லிருக்கும் போதங், கலங்கலிலா விவேகியர்க்கிக் கருதுபொருள் கற்பகம்போற் கணத்தி னல்குந், துலங்குவிசா ரம்படைந்துப் பேதைமைபோய்நல் லறிவு தோன்றி னோரை, இலங்குகவ சத்தோரை யம்புகள் போற் காமாதி விகற்பந் தாக்கா.

இ - ள். இலங்கிய சிந்தாமணியாம் - பிரகாசிக்கின்ற சிந்தாமணியாகிய இதயமெனுஞ் சாக்கறையில் - இருதயமென்னும் பெட்டியில், இருக்கும்போ தம் - இருக்கின்ற ஞானமானது, கலங்கலிலாவிவேகியர்க்கு - கலக்கமில்லாத ஞானிகளுக்கு, கருதுபொருள்-சிந்திக்கப்பட்டபொருள்களை, கற்பகம்போல் - கற்பகவிருட்சத்தைப்போல, கணத்தினல்கும் - க்ஷணத்திற்கொடுக்கும், துல ங்குவிசாரம்படைத்து - பிரகாசிக்கின்ற ஆத்மவிசாரணையைப்பெற்று, பேதை மைபோய் அறியாமைகெட்டு, நல்லறிவுதோன்றினோரை-சுகபோதம் உதயமா னவர்களை, இலங்கு கவசத்தோரை - பிரகாசிக்கின்ற வச்சிரகவசந் தரித்தவர் களை, அம்புகள்போல்-பாணங்களைப்போல, காமாதிவிகற்பந்தாக்கா-இராகத்து வேஷமுதலிய விக்ற்பந்தாக்காது-எ-று.

எ - து. பிரகாசிக்கின்ற சிந்தாமணியாகிய இருதய மென்னும் பெட்டியில் இருக்கின்ற ஞானமானது கலக்கமில்லாதஞானிகளுக்கு ச்சிந்திக்கப்பட்ட பொருள்களைக் கற்பகவிருட்சத்தைப்போல க்ஷண த்திற்கொடுக்கும். பிரகாசிக்கின்ற ஆத்மவிசாரணையைப்பெற்று அறி யாமைகெட்டு சுகபோதம் உதயமானவர்களைப் பிரகாசிக்கின்ற வச்

சிரகவசந் தரித்தவர்களைப் பாணங்களைப்போல இராகத்துவேஷமுத லிய விகற்பந்தாக்காது—எ-ம். (35)

## அவ்விசாரணையால் அகங்காரம் நீங்கி ஞானம் உதிக்கும் எனல்.

—*—

பாமாதித் தனைமறைத்துக் கறுத்தறிவற் றுக்களித்துப் படர்ந் து மீண்டு, ரொமான வகங்கார முகில்விவே கக்காற்றாற் சிதறிப்போ கும், வாமான பதம்வேண்டிற் றன்மனத்தி னுசைமுதன் மாற்றல்வே ண்டும், உரமான புவியைமுத லுழுதன்றோ விளைபயன்க ளுறுகின் றாரே.

இ-ள். பரமாதித்தனை மறைத்து - பிரமசூரியனை மறைத்து, கறுத்தறி வற்றுக்களித்து - களங்கமாய் அறிவின்றிமதர்த்து, படர்ந்து-விரிந்து, மீண்டு ரொமான - திரும்ப உரமாகியிருக்கின்ற, அகங்காரமுகில் - அகம்பாவமென்னு மேகமானது, விவேககாற்றால் - ஞானமென்னுஞ்சண்டமாருதத்தினால், சித றிப்போகும் - சின்னபின்னமாகும், வாமானபதம்வேண்டில் - மேன்மையான (பாம) பதத்தை விரும்பினால், தன்மனத்தினசை - தனதுமனதின்கண்ணுள்ள இச்சையை, முதன்மாற்றலவேண்டும் - முன்னங்கெடுக்கவேண்டும், உரமான புவியை - பலமான பூமியை, முதலுழுதன்றோ - முந்தினதாக உழுதல்லவா, விளைபயன்களுறுகின்றார் - விளையாநின்ற தானியலாபத்தை யடைகின்றார் கள்-எ-று.

எ-து. பிரமசூரியனை மறைத்துக் களங்கமாய் அறிவின்றி மத ர்த்து விரிந்து திரும்ப உரமாகி யிருக்கின்ற அகம்பாவமென்னு மே கமானதுஞானமென்னுஞ் சண்டமாருதத்தினால்சின்னபின்னமாகும். மேன்மையான பரமபதத்தை விரும்பினால் தனது மனதின் கண்ணு ள்ள இச்சையை முன்னங்கெடுக்கவேண்டும் பலமான பூமியை முந் தினதாக உழுதல்லவா? விளையாநின்ற தனியலாபத்தை யடைகின்றா ர்கள்—எ-ம்.

இ-௩-க-ம். ஞானம் உதிக்குங் கிரமங்களை முறையே உணர்த்தியதாம்.

சனகராசன்கதை முற்றிற்று.

௮. கதை 10-க்கு கவிதை 802.

# புண்ணிய பாவனன் கதை.

அவதாரிகை.

முன்கதையில் சிதாநந்தாகாரமே யாவுமாம் என்பதனால் எளிதிற்சித்தோபசாந்தியைக்கூறி இவ்வனுபவங் கொஞ்சம் வருத்தத்திலும் வருமென்பதை அறிவிக்கு நிமித்தஞ் சநநாநதரங்களைப்போதித்த அதனால் அனுபவ முதித்த புண்ணியபாவனன் கதையை நிரூபிக்கிறார்.

## இப்பிரமாணுபவம் மாயாநாசத்து உதிக்குமெனல்

வே று.

மோகவற்ச னுபிக்கொடி முளைத்தெழு மூலஞ்
சோகமாசுண மிருந்தர சாள்வதோர் சூழல்
ஆகமேமுத லியானெனக் காணுமஞ் ஞானம்
ஏகமாகிய பராபரந் தோன்றினு லிறக்கும்.

இ - ள். மோகவற்சனுபிககொடி-மோகமென்னும் வத்சனுபிக்கொடியானது, முளைதெழுமூலம் - உண்டாகி வளர்தற்குக காரணமாகியும், சோகமாசுணம் - துக்கமென்னுஞ்சற்பமானது, இருந்தரசாள்வதோர்சூழல் - தனித்திருந்தரசாட்சி செய்வதற்கு ஒப்பற்ற இடமான, ஆகமுதல்-தேகாதிகளை, இயானெனக்காணுமஞ்ஞானம்-நானென்றுபார்க்கும் அஞ்ஞானம் மானது, ஏகமாகிய பராபரந் தோன்றினுலிறக்கும் - ஒன்றான ஆத்மஞானம் உதயமானுல் நசிக்கும் எ-று.

எ - து. மோகமென்னும் வற்சனுபிக்கொடியானது உண்டாகி வளர்தற்குக் காரணமாகியும், துக்கமென்னுஞ் சற்பமானது தனித்திருந்து அரசாட்சிசெய்வதற்கு ஒப்பற்ற இடமான தேகாதிகளை நானென்று பார்க்கும் அஞ்ஞானமானது ஒன்றான ஆத்மஞானம் உதயமானுல் நசிக்கும்—எ-ம். (1)

## மாயாநாசம் உபாயங்கூறல்.

அனித்தமிச் சகமென்பதை நாடொறு மகற்றி
நுனித்துநோக் கினர்சனகனைப் போலநுண் ணறிவால்
தனித்தமெய்ப் பொருள்பக்குவத் தறிகுவர் தனத்தால்
மனித்தாற் கருமத்திற் றேவரால் வாரா.

இ - ள். இச்சகம் - இந்தவுலகம், அனித்தமென்பதை-அசத்தென்பதை, நாடோறுமகற்றி - எப்பொழுதுங் (கண்டு) நீக்கி, நுனித்துநோக்கினர்-நுண்

மையாகப் பார்க்கின்றவர்கள், சனகனைப்போல - சனகராசனைப்போல, நுண்ணறிவால் - சூட்சும அறிவினால், தனித்த மெய்ப்பொருள் - தனிமையானபரமார்த்தத்தை, பக்குவத்தறிகுவர் - பருவகாலத்தில் அறிவார்கள், (அஃதன்றி) தனத்தால் - திரவியங்களினாலும், மனித்தரால் -மானிடர்களினாலும், கருமத்தினால் - கிரியைகளினாலும், தேவரால் - வானவர்களினாலும், வாரா - வரமாட்டாது—எ-று.

எ - து. இந்தவுலகம் அசத்தென்பதை எப்பொழுதுங் கண்டு நீக்கி நுண்மையாகப் பார்க்கின்றவர்கள் சனகராசனைப்போல சூட்சும அறிவினால் தனிமையானபரமார்த்தத்தைப் பருவகாலத்தில்அறிவார்கள், அஃதன்றி திரவியங்களினாலும், மானிடர்களினாலும், கிரியைகளினாலும், வானவர்களினாலும் வரமாட்டாது—எ-ம். (2)

## முயற்சியால் பேததிருஷ்டி நீங்கில் ஆத்மதரிசன உண்டாமெனல்.

சனனமஞ் சினர்க்கவருடைய முயற்சியே சாணுந்
தினமுமிங் கிவனெனுஞ் சிறுமைதான் சிதையில்
அனகமா யுலகெங்குமாம் விசாலமுண் டாகும்
மனனுறத் தனதுயர்ச்சி தான்காண்புற வருமால்.

இ - ள். சனனமஞ்சினர்க்கு - பிறப்பிற்பயந்தவர்களுக்கு, அவருடைமுயற்சியே சாணும் - தங்கண்முயற்சியே கதியாம், இங்கு தினமும் - இவ்விடத்தினடோறும், இவனெனும் - இவனென்கின்ற, சிறுமைதான் சிதையில் - அற்ப (உணர்வு) கெடுமானால், அனகமாய் - களங்கமில்லாதாய், உலகெங்குமாம் - சகத்து அனைத்துமான, விசாலமுண்டாகும் - வியாபக (ஞானம்) உண்டாயிருக்கும், மனனுற - மனது (விசாரணையைப்) பொருந்த, தனதுயர்ச்சிதான் காண்புறவரும் - தனதுமேலான (ஆத்மஞானந்) தெரிசிக்கவரும்.

எ - து. பிறப்பிற் பயந்தவர்களுக்குத் தங்கள் முயற்சியே கதியாம். இவ்விடத்தில் நாள்தோறும் என்கின்ற அற்பவுணர்வு கெடுமானால் களங்கமில்லாததாய் சகத்து அனைத்துமான வியாபகஞானம் உண்டாயிருக்கும். மனது விசாரணையைப்பொருந்த தனதுமேலான ஆத்மஞானந்தெரிசிக்கவரும்—எ-ம், (3)

## விருப்புவெறுப்பறில் பேதநீங்கி அசைவற்றிருக்குமெனல்.



வேறு.

பற்றுவீ டென்றி ரண்டிற் பற்றலும் விடுத றானு
முற்றவை மனத்து ரூப முயர்பந்த மதுவே றில்லை

முற்றுறு பற்று வீட்டின் மோகமுந் துயரும் விட்டு
துற்றுள பற்று வீடு துடைத்தசை யாது நிற்பாய்.

இ - ள். பற்றுவீடென்றிரண்டில் - பற்றுதலும் விடுதலுமென்று சொல்லப்பட்ட விரண்டில், பற்றலும் விடுதலுமுற்றவை - பற்றுவதும் விடுவதும் பொருந்தின அவ்விரண்டும், மனத்துரூபம் மனதின் வடிவமாம், அதுவுயர் பந்தம் - அதுவே மகாபந்தம் (அன்றி), வேறில்லை - வேறேயில்லை, முற்றுறு பற்று வீட்டின் மோகமுந் துயரும்விட்டு - முதிர்ந்த இராகத்துவேஷங்களால் வருமாசையையுந் துன்பத்தையு நீக்கி, துற்றுளபற்றுவீடு - நிறைந்த விருப்பு வெறுப்பை, துடைத்தசையாது நிற்பாய் கெடுத்துச் சலியாதிருப்பாய்—எ-று.

எ - து. பற்றுதலும் விடுதலுமென்று சொல்லப்பட்ட இரண்டில் பற்றுவதும விடுவதும் பொருந்தின அவ்விரண்டும் மனதின்வடிவமாம். அதுவே மகாபந்தமன்றி வேறேயில்லை. முதிர்ந்த இராகத்துவேஷங்களால் வருமாசையையுந் துன்பத்தையு நீக்கி நிறைந்த விருப்பு வெறுப்பைக் கெடுத்துச் சலியாதிருப்பாய்—எ-ம் (4)

அச் சமதிருஷ்டியின் குணம் உணர்தல்.



மயலின்மை யநித்த மின்மை மடமின்மை வருத்த மின்மை
செயலின்மை கரும மின்மை தியக்கின்மை விகற்ப மின்மை
பயமின்மை துவட்சி யின்மை பகையின்மை குறைவொன் றின்மை
கயமின்மை கடின மின்மை குடிலமாய்க் கழற லின்மை.

இ - ள். மயலின்மை - மயக்கமில்லாமையும், அநித்தமின்மை - அநித்திய மில்லாமையும், மடமின்மை - அஞ்ஞானமில்லாமையும், வருத்தமின்மை - துன்பமில்லாமையும், செயலின்மை - (வேண்டுந்) தொழிலில்லாமையும், கருமமின்மை - (நீக்குந்) தொழிலில்லாமையும, தியக்கின்மை - தியக்கமில்லாமையும், விகற்பமின்மை - (ஒரு) விகற்பமுமில்லாமையும், பயமின்மை - அச்சமில்லாமையும், துவட்சியின்மை - வாட்டமில்லாமையும், பகையின்மை - வெகுளல் இல்லாமையும், குறைவொன்றின்மை - குறைவொன்று மில்லாமையும், கயமின்மை - கீழ்மையில்லாமையும், கடினமின்மை - கொடுமையில்லாமையும், குடிலமாய்க்கழறலின்மை - வஞ்சகமாய்ப் பேசலில்லாமையும்-எ-று.

எ - து. மயக்கமில்லாமையும், அநித்தியமில்லாமையும், அஞ்ஞான மில்லாமையும், துன்பமில்லாமையும், வேண்டுந்தொழி லில்லாமையும், நீக்குந் தொழிலில்லாமையும், தியக்கமில்லாமையும், ஒரு விகற்பமுமில்லாமையும், அச்சமில்லாமையும், வாட்டமில்லாமையும், வெகுளல் இல்லாமையும், குறைவொன்று மில்லாமையும், கீழ்மை

யில்லாமையும், கொடுமையில்லாமையும், வஞ்சகமாய்ப் பேசவில்லா மையும்—எ-ம். (5)

## விருப்பு வெறுப்பு அறும்படி வாசனுத்தியாகம் வரவேண்டும் எனல்.

வீடுபற் றிரண்டு நீத்த மேலவ ரிடத்து மேவி
நீடுவா தனைக ளின்றி நிகழ்த்திய குணங்க ணிற்கும்
பீடுறு நினைவா நூலாற் பிணிப்புற்றுப் பிறவி வேலை
யூடுற மயன்மீன் வாரு முயர்ந்தவா தனையாஞ் சாலம்.

இ-ள். வீடுபற்றிரண்டுநீத்த - ஏயோபாதேயங்களான இரண்டையு நீக்கின, மேலவரிடத்து - சத்துக்களிடத்தில், நீடுவாதனைகளின்றி - நீண்ட வாசனைகளில்லாமல், நிகழ்த்திய குணங்கள் - முன்சொல்லிய குணங்களான வை, மேவிநிற்கும் - பொருந்தியிருக்கும், பீடுறு நினைவா நூலால் - வலிமை யுள்ள சிந்தனையென்னுஞ் சூத்திரத்தால், பிணிப்புற்று - கட்டுப்பட்டு, பிறவி வேலையூடுற - பவசாகரத்தி னிடையிற்பொருந்த, மயன்மீன்வாரும் - மயக்க மென்னு மச்சங்களைப் பிடிக்கின்ற, உயர்ந்த வாதனையாஞ் சாலம் - பெரிதா கிய வாசனையென்று சொல்லப்பட்ட வலை—எ-று.

எ-து. ஏயோபாதேயங்களான இரண்டையு நீக்கின, சத்துக்க ளிடத்தில் நீண்ட வாசனைகளில்லாமல் முன்சொல்லிய குணங்களா னவை பொருந்தியிருக்கும். வலிமையுள்ள சிந்தனையென்னுஞ் சூ த்திரத்தால் கட்டுப்பட்டு, பவசாகரத்தினிடையிற் பொருந்த மயக்க மென்னு மச்சங்களைப்பிடிக்கின்ற பெரிதாகிய வாசனையென்றுசொ ல்லப்பட்ட வலை—எ-ம். (6)

## வாசனுநாச உபாயங்கூறல்.

வாதனை யென்னு மிந்த வலைபுந்தி வாளா லீர்ந்து
மோதுசூ றைக்காற் சிந்து முகிலெனச் சிந்தி நிற்பாய்
பாதவங் குடாரத் தாலே படுப்பபோ னெஞ்சை நெஞ்சால்
தீதற மாய்த்து மேலாம் பதத்திலே திரமாய் நிற்பாய்.

இ-ள். வாதனையென்னும் - வாதனை யென்கின்ற, இந்த வலை - இந்த் வலையை, புந்தி வாளாலீர்ந்து - ஞானமென்னுங் கத்தியினால் அறுத்து. மோது சூறைக்கால் - அடிக்காநின்ற சுழற் காற்றினால், சிந்து முகிலென- சிதறுகின்ற மேகத்தைப்போல, சிந்தி நிற்பாய் - (மனு) மிறந்திருப்பாய், பாதவம் - விருட்சத்தை, குடாரத்தால் - கோடாலியினால், படுபபபோல்- கெடுப்பதுபோல, நெஞ்சை - (களங்கமான) மனதை, நெஞ்சால் (பரிசு

த்து) மனதினால், நிதரமாய்த்து - குற்றமில்லாமற்கெடுத்து, மேலாம்பதத்தில்- மேலான பரமபதத்தில், திரமாயிருப்பாய் - திடமாக இருப்பாய்—எ-று.

எ - து. வாதனையென்கின்ற இந்தவலையை ஞானமென்னுங்கத்தியினால் அறுத்து, அடிக்காநின்ற சுழற்காற்றினாற் சிதறுகின்றமேகத்தைப்போல மனமிறந்திருப்பாய் விருட்சத்தைக் கோடாலியினால் கெடுப்பதுபோல, களங்கமான மனதைப் பரிசுத்தமனதினால் குற்றமில்லாமற் கெடுத்து, மேலான பரமபதத்தில் திடமாக இருப்பாய்—எ-ம்.

(இ எ-க-ம்.) சுவானுபவம் உதித்தற்கு அஞ்ஞானமுதலிய வாசனையை நீக்கும் உபாயத்தை அறிவித்ததாம். (7)

## பின்னும் அவ்வாசனையை நீக்கவேண்டி வற்புறுத்திக்கூறல்.

---

ஏகுதல் வருத லுஞ்சல் விழித்திட லிருத்த னிற்றல்
ஆகிய வெல்லாம் பொய்யென் றழுந்தியுள் ளாசை தீர்வாய்
சேகுற வலையுஞ் சித்தப் பகுதியாற் சித்தின் பின்னே
போகலூன் மணத்தாற் சிங்கந் தனைத்தொடர் பூசை போலாம்.

இ - ள். ஏகுதல்வருதல் - போதல்வருதலும், துஞ்சல் விழித்திடல்- உறங்குதல் விழித்தலும், இருத்தனிற்றல் - இருப்பதும் நிற்பதும், ஆகிய எல்லாம் பொய்யென்று - ஆகிய (சகதொழில்) அனைத்து மித்தையென்று, அழுந்தி - அழுத்தமாய், உள்ளாசை தீர்வாய் - அகத்திச்சையை விட்டுவிடுவாய், சேகுறவலையுஞ்சித்தம - திடமாக அலைகின்றமனமானது, பகுதியால் - இயல்பானவாசனையினால், சித்தின்பின்னேபோகல - ஞானத்தின்பின்செல்லுதல், ஊன்மணத்தால் - மாமிசவாசனையினால், சிங்கந்தனை - கேசரியை, தொடர்பூசைபோலாம் - தொடருகின்ற பூனையை யொப்பாகும்-எ-று.

எ - து. போதல்வருதலும், உறங்குதல், விழித்தலும், இருப்பதும், நிற்பதும். ஆகிய சகத்தொழில் அனைத்தும் மித்தையென்று அழுத்தமாய் அகத்திச்சையை விட்டுவிடுவாய், திடமாக அலைகின்ற மனமானது இயல்பானவாசனையினால் ஞானத்தின்பின் செல்லுதல் மாமிசவாசனையினால் கேசரியைதொடருகின்ற பூனையை யொப்பாகும்—எ-ம். (8)

## மனோநாசத்தில் வாசனுட்சயமும் முத்தியும் உண்டாமெனல்.

—()—

மடங்கல்வீ ரியத்தாற் பெற்ற தசைதின்னு மாற்சா லம்போல்
தொடர்ந்துசென் மனனுஞ் சித்தாற் றோன்றிய பொருளைப் பற்றும்

படர்ந்துகாண் பவற்றைப் பற்றின் மனங்கெடாப் பந்தம் போகா
திடங்கொள்காண் பவற்றை நீக்கிற் சித்தம்போய் முத்தி யாகும்.

இ - ள். மடங்கல் வீரியத்தால் - சிம்மத்தின் வீரத்தினால், பெற்ற தசை தின்னும் - கிடைத்த ஊனைத் தின்னுகின்ற, மாற்சாலம்போல் - பூனையைப் போல, தொடர்ந்து சென்மனனும் - தொடர்பாகச் செல்லுகின்ற மனதும், சித்தால் - அறிவினால், தோன்றிய பொருளைப்பற்றும் - உண்டாகி விடய வஸ்துக்களைப் பிடித்துக்கொள்ளும், படர்ந்து காண்பவற்றை - விஸ்தாரமாகக் காணப்பட்ட திரிசியத்தை, பற்றின் மனங்கெடா - பிடிக்கின் மனநாசமாகாது, பந்தம் போகா - பந்த நீங்காது, திடங்கொள் - திடங்கொண்ட, காண்பவற்றை நீக்கில் - திரிசியத்தை நீக்கினால், சித்தம்போய் முத்தியாகும் - மனோ நாசம்வந்து நிருவாணமாகும்-எ-று.

எ - து. சிம்மத்தின் வீரத்தினால் கிடைத்த ஊனைத்தின்னுகின்ற பூனையைப்போலத் தொடர்பாகச் செல்லுகின்ற மனதும் அறிவினால் உண்டாகிய விடய வஸ்துக்களைப் பிடித்துக்கொள்ளும். விஸ்தாரமாகக் காணப்பட்ட திரிசியத்தைப் பிடிக்கின் மனநாசமாகாது. பந்தநீங்காது திடங்கொண்ட திரிசியத்தை நீக்கினால் மனோநாசம் வந்து நிருவாணமாகும்-எ-ம். (9)

## ஆத்ம தரிசனம் அறிவித்தல்.

யானிவை யிரண்டு மில்லென் றெண்ணிமே ருவைப்போ னிற்பாய்
ஊனிற மில்லா விண்போ லுாத்தனுப் நல்லு ளத்தே
தானும்வை யமுமாய்க் காண்பாய் காண்பன தம்மி னூடே
மேனிகழ் காட்சி யென்னு நின்னைநீ விடாது தேர்வாய்.

இ - ள். யானிவை - நானிவைகளென்பதாகிய, இரண்டு மில்லென்று - இரண்டுமில்லையென்று, எண்ணி - சிந்தித்து. மேருவைப்போ னிற்பாய் - மகாமேருவைப்போல ஸ்திரமாயிருப்பாய், ஊனிறமில்லா விண்போல் - களங்கமற்ற ஆகாயத்தைப்போல, உளத்தனுப் - (நின்மல) மனதுடையவனாய், நல்லுளத்து - நன்மையான மனதில், தானும் - ஆத்மாவும், வையமுமாய் - சகமுமாய் (இருக்கின்ற), காண்பான் - ஞாதாவும், காண்பன தம்மினூடு - ஞேயங்களின் மத்தியில், மேனிகழ் - மேலாக விளங்கிய, காட்சி யென்னு நின்னை - ஞானமென்கின்ற வுனதாத்ம சொரூபத்தை, நீவிடாது தேர்வாய் - நீ விடாமற் றெரிந்துகொள்வாய்-எ-று,

எ - து. நானிவைகள் என்பதாகிய இரண்டு மில்லையென்று சிந்தித்து மகாமேருவைப்போல ஸ்திரமாயிருப்பாய். களங்கமற்ற

ஆகாயத்தைப்போல நின்மல மனதுடையவனும் நன்மையான மன தில் ஆத்மாவும் சகமுமாயிருக்கின்ற ஞாதாவும் ஞேயங்களின் மத் தியில் மேலாகவிளங்கிய ஞானமென்கின்ற உனது ஆத்மசொரூ பத்தை நீ விடாமற்றெரிந்துகொள்வாய்—எ-ம். (10)

இனியன வினிமை கொள்வா னிரண்டும்விட் டிவற்றி னூடே
தனிமிக ழினிமை நாடி தற்பர மயமாய் நிற்பாய்
நனிபல துய்ப்பான் றுய்ப்ப திரண்டுக்கு நடுவே தானே
அனிசம்பற் றின்றி நிற்கு மதுபற்றி யதனு ணிற்பாய்.

இ - ள். இனியன - இனிமையான வஸ்துவும், இனிமைகொள்வான்- இனிமையைக்கொள்கின்றவனுமாகிய, இரண்டும்விட்டு - இவ்விரண்டையு நீக்கி, இவற்றினூடே - இவைகளின் மத்தியில், தனிமிகழினிமைநாடி - தனி மையாக பிரகாசிக்கின்ற இன்பத்தையாராய்ந்து, தற்பரமயமாய் நிற்பாய்- ஆத்மசொரூபமாயிருப்பாய், நனி பல துய்ப்பான் - மிகவும் பலவற்றைப்புசிப் பவனும், துய்ப்ப - பொசிக்கப்பட்ட வஸ்துவும், இரண்டுக்கு நடுவேதானே- இரண்டின்மத்தியில், அனிசம்பற்றின்றி நிற்கும் - எப்போதும் பற்றில்லாம லிருக்கின்ற, அதுபற்றி - அதைப்பிடித்து, அதனுணிற்பாய் - அதற்குள் இரு ப்பாய்-எ-று.

எ - து. இனிமையான வஸ்துவும் இனிமையைக் கொள்கின்ற வனுமாகிய இவ்விரண்டையு நீக்கி இவைகளின் மத்தியில் தனிமை யாகப் பிரகாசிக்கின்ற இன்பத்தையாராய்ந்து ஆத்மசொரூபமாயிரு ப்பாய். மிகவும் பலவற்றைப் புசிப்பவனும் புசிக்கப்பட்ட வஸ்து வும் இரண்டின் மத்தியில் எப்போதும் பற்றில்லாமலிருக்கின்ற அ தைப்பிடித்து அதற்குள்ளிருப்பாய்—எ-ம். (11)

## இச்சையையும் அகம்பாவத்தையும் நீக்கவேண்டுமெனல்.

காதலாற் கட்டி லுய்யார் கயிற்றினாற் கட்டி லுய்வார்
ஆதலா லாசைக் கட்டை யசங்கற்பத் தறுப்பாய் நானென்
றோதுபா வனையை நானென் னாததோர் வாளால் வீட்டி
ஏதமில் சுபாவம் பாவித் தெழுபவ மிலாவீ டெய்தி.

இ - ள். காதலாற்கட்டிலுய்யார் - ஆசையினாற் கட்டுப்பட்டா லுயிர் வாழமாட்டார்கள், கயிற்றினாற் கட்டிலுய்வார் - கயிற்றினாற்கட்டிலுயிர்வாழ் வார்கள், ஆதலால் - ஆசையினால், ஆசைக்கட்டை - இச்சா பந்தத்தை, அச் சங்கற்பத் தறுப்பாய் - சங்கற்ப நாசத்தாற் கெடுப்பாய், நானென்றோது பாவ னையை - நானென்று சொல்லப்பட்ட பாவனையை, நானென்னாததோர் வாளால் வீட்டி - நானென்று சொல்லப்படாத வொரு கத்தியினாற்கெடுத்து,

னதமில் சுபாவம் பாவித்து - குற்றமற்த ஆத்மபாவனைசெய்து. எழுபவமிலா வீடெய்தி - எழுபிறப்பில்லாத மோட்சத்தையடைந்து —எ-று.

எ — து. ஆசையினாற் கட்டுப்பட்டால் உயிர்வாழமாட்டார்கள். கயிற்றினாற் கட்டி லுயிர்வாழ்வார்கள். ஆகையினால் இச்சா பந்தத்தை சங்கற்ப நாசத்தாற் கெடுப்பாய். நானென்று சொல்லப்பட்ட பாவனையை நானென்று சொல்லப்படாத ஒரு கத்தியினாற்கெடுத்து குற்றமற்ற ஆத்ம பாவனைசெய்து எழுபிறப்பில்லாத மோட்சத்தை யடைந்து—எ-ம்.

இ—ருக-ம். மனோவாசனை அகம்பாவமென்னும் இரண்டினையும் நீக்கி வீடு அடையவேண்டுமென்பதாம். (12)

## அகங்காரத்தியாகத்திலும் அகத்தியாகம் நன்றெனல்.

அனைத்துயிர்க் கச்ச மில்லா நிலைநிற்பா யதுல வென்ன
வினைத்தொட ரகம்பா வத்தின் வேட்கைதீ ரென்ற நின்சொல்
நினைத்திடின் மிகவு மாழ நீடகங் கார நாசந
தனைச்செயி னுடல மென்னு மேதுவைத் தவிர்க்கின் றேனால்.

இ - ள். அனைத்துயிர்க்கு - சகலவுயிர்களுக்கும், அச்சமில்லாத நிலை. பயமில்லாத நிலையில், அதுல - சமானமில்லாத (ஸ்ரீராமா), நிற்பாயென்ன- இருப்பாய் (என்றுவசிட்டர்)சொல்ல, வினைத்தொடர்-தொழில்கள் தொடர்ந்திருக்கின்ற, அகம்பாவத்தின் - நானென்னும் பாவனையின், வேட்கை தீரென்ற நின்சொல் - ஆசையைத் தீர்ப்பாயென்று சொல்லிய உமதுவாக்கியத்தை, நினைத்திடில் - கருதுமிடத்தில், மிகவுமாழம் - மிகவும் ஆழமாம், நீடகங்கார நாசந்தனைச்செயின் - நெடிய அகங்கார நாசத்தைச் செய்வதைவிட, உடல மென்னு மேதுவைத் தவிர்க்கின்றேன் - சரீரமென்னுங் காரணம் ஒழிக்கின்றேன்-எ-று.

எ - து. சகல உயிர்களுக்கும் பயமில்லாத நிலையில் சமானமில்லாத ஸ்ரீராமா! இருப்பாயென்று வசிட்டர் சொல்ல, தொழில்கள் தொடர்ந்திருக்கின்ற நானென்னும் பாவனையின் ஆசையைத் தீர்ப்பாயென்று சொல்லிய உமது வாக்கியத்தைக் கருதுமிடத்தில் மிகவும் ஆழமாம், நெடிய அகங்கார நாசத்தைச்செய்வதைவிட சரீர மென்னுங் காரணம் ஒழிக்கின்றேன்—எ-ம். (13)

## அகங்காரத்தியாகத்துக்குஇரண்டுபாயம் உண்டெனல்.



அகமென லொழிக்கிற் றுனே யங்கமு மழியி லீர்ந்த
நகமென விறக்கு மன்றே யென்றுயர் நாதன் கூற

மகமுனி யுரைப்பான் வள்ளால் வாதனை மாற்று மாறு
நிகழ்வுறு தேய ஞேய மிரண்டென நினைப்பர் கற்றோர்.

இ - ள். அகமெனவொழிக்கில் - நானென்பதைக்கெடுத்தால், அங்கமும் - சரீரமும், அடியிலீர்ந்த நகமென - வேரோடறுத்தவிருட்சத்தைப்போல, இறக்குமென்று - நசிக்குமென்று, உயர் நாதன்கூற - உயர்வான ஸ்ரீராமன் சொல்ல, மகமுனியுரைப்பான் - வசிட்டமாமுனி சொல்லுவார், வள்ளால் - ஸ்ரீராமா, வாதனைமாற்றுமாறு - (அகங்கார) வாசனையை நீக்கும் விதம், நிகழ்வுறு தேயம் - பிரகாசிக்கின்ற தேயமென்றும், ஞேயம் - ஞேயமென்றுஞ்சொல்லப்பட்ட, இரண்டென - இரண்டுவிதமாக, கற்றோர் - ஓதியுணர்ந்தவர்கள், நினைப்பர் - சிந்திப்பார்கள்-எ-று.

எ — து. நானென்பதைக் கெடுத்தால் சரீரமும் வேரோடறுத்த விருட்சத்தைப்போல நசிக்குமென்று உயர்வான ஸ்ரீராமன்சொல்ல, வசிட்டமாமுனிசொல்லுவார். ஸ்ரீராமா! அகங்காரவாசனையை நீக்கும் விதம், பிரகாசிக்கின்ற தேயமென்றும், ஞேயமென்றுஞ் சொல்லப்பட்ட இரண்டுவிதமாக ஓதியுணர்ந்தவர்கள் சிந்திப்பார்கள்—எ-ம்.

## அவ்விரண்டில் தேயத்தியாகம் அறிவித்தல்.

இந்நகம் பொருட்கு வாணா ளியாமிவை யெமக்கு வாணாள்
நந்துறு மிவற்றா லன்றி நாமில்லை நம்மா லன்றி
வந்தவிப் பொருள்க ளில்லை யெனுமனத் துறுதி மாற்றிப்
புந்தியா லுசாவி யாமும் பொருள்களும் வெவ்வே றென்றே.

இ - ள். இந்நகம்பொருட்கு - இந்நமதுபொருளுக்கு, வாணாளியாம் - சீவிதநாம், இவை - இந்தவஸ்துக்கள், எமக்கு வாணாள் - நமக்கு சீவிதம், நந்துறு மிவற்றாலன்றி - செல்வமான இப்பொருளை யல்லாமல், நாமில்லை - நாமென்பதில்லை, நம்மாலன்றி - நம்மையல்லாமல், வந்த இப்பொருள்களில்லை - கிடைத்த இப்பொருள்களில்லை, எனு மனத்துறுதிமாற்றி - என்னுமனத்தின் நிச்சயத்தை நீக்கி, புந்தியாலுசாவி - புத்தியால் விசாரித்து, யாமும் பொருள்களும் - நாமும் விடயங்களும், வெவ்வேறென்று - வேறு வேறு என்று-எ-று

எ - து. இந்த நமதுபொருளுக்கு சீவிதநாம். இந்தவஸ்துக்கள் நமக்கு சீவிதம். செல்வமான இப்பொருளை யல்லாமல் நானென்ப தில்லை. நம்மையல்லால் கிடைத்த இப்பொருகளில்லை என்னு மனதின் நிச்சயத்தை நீக்கி, புத்தியால் விசாரித்துநாமும் விடயங்களும் வேறு வேறு என்று—எ—ம்.

பொருளினோ மல்ல நாமு நமதல்லப் பொருளு மன்றே
தெருளுற்றுட் குளிர்ந்தியாவும் விநோதமாய்ச் செய்யு நெஞ்சான்
மருளறு நிச்சயத்தால் வாதனை விடுத ருனே
அருள்பொழி மேகமொப்பாய் தேயமென் றறிவா யன்றே,

இ - ள். நாமும்பொருளினோ மல்ல - யாமும் பொருள்களுக்குடையோ மல்ல, பொருளு நமதல்லவென்று - பொருளு நம்முடையதல்லவென்று, தெருளுற்றுட்குளிர்ந்து - தெளிவடைந்து உள்ளங்குளிர்ந்து, யாவும்-யாவையும், விநோதமாய் - லீலையாக, செய்யுநெஞ்சால் - செய்கின்றமனதினாலும், மருளறு நிச்சயத்தால் - மயக்கமில்லாத நிச்சயத்தினாலும், வாதனைவிடுதருனே- வாசனையை விடுகின்ற, அருள்பொழிமேகமொப்பாய் - அருளைவருஷிக்கின்ற மேகத்துக்குச்சமானமான (ஸ்ரீராமா), தேயமென்றறிவாய் - தேயமென்றுணர்வாய்-எ-று.

எ - து. யாமும்பொருள்களுக்கு உடையோமல்ல, பொருளுநம்முடையதல்லவென்று தெளிவடைந்து உள்ளங்குளிர்ந்து யாவையும் லீலையாகச்செய்கின்ற மனதினாலும், மயக்கமில்லாத நிச்சயத்தினாலும், வாசனையைவிடுகின்றதே அருளைவருஷிக்கின்றமேகத்துக்குச்சமானமான ஸ்ரீராமா தேயமென்றுணர்வாய்—எ-ம்.

இ-௪-௧-ம். செடசித்தின் சம்பந்தங்களைப்பிரித்து அச்செடவாசனுநாசமே தேயத்தியாகமாம். (16)

## தேயத் தியாகங் கூறல்.

தனதுவா தனைமாண் டெல்லாஞ் சமமதா நெஞ்சாற் பண்ணி
எனதெனு துடலை நீக்கி னிந்தவா சனைநா சந்தான்
அனகமா நேய மாகு மகங்கா மயமாந் தன்னை
வினவுவாத னையே முற்றும் விநோதமாய் விட்டோர் மேலோர்.

இ - ள். தனதுவாதனைமாண்டு - தன்னுடையவாசனைகெட்டு, எல்லாம்- அனைத்தையும், சமமதாநெஞ்சாற்பண்ணி -சமமானபுத்தியினாற்பார்த்து, எனதெனுதுடலைநீக்கின்-நானென்றுசொல்லப்படாத சரீரத்தைத்தள்ளினால், இந்தவாசனை நாசந்தான் - இவ்வாசனுட்சயமே, அனகமாநேயமாகும் - களங்கமில்லாத ஞேயமாம், அகங்கரமயமாந்தன்னை-அகங்காரவடிவமான, வினவுவாதனையை - சொல்லப்பட்ட வாசனையை, முற்றும் விநோதமாய் - முதிர்ந்த லீலையாக, விட்டோர் மேலோர் - விட்டவர்கள் மேலான சத்துக்கள்—எ-று.

எ - து. தன்னுடைய வாசனைகெட்டு அனைத்தையும் சமமான புத்தியினாற்பார்த்து நானென்று சொல்லப்படாத சரீரத்தைத் தள்ளினால் இவ்வாசனுட்சயமே களங்கமில்லாத ஞேயமாம். அகங்கார

வடிவமான சொல்லப்பட்ட வாசனையை முதிர்ந்த விலியாக விட்டவ ர்கள் மேலான சத்துக்கள்—எ-ம்.

இ-ம். தேகோகவாசனையைக் கெடுப்பதே ஞேயத்தியாக மென்பதாம்.

## இவ் விரண்டு தியாகத்தின் பெருமை கூறல்.

தீரரா மவரே தேயத் தியாகஞ்செய் சீவன் முத்தர்
வேறறத் தொழில்க ளோடே வாதனை விட்டுள் ளாறி
தூரமா ஞேயம் விட்டோர் துகளறு முத்த ராகும்
வீரனே யிவையி ரண்டின் விடுதியுந் தம்மி லொக்கும்.

இ - ள். தீரராமவரே - தீரரான அவர்களே, தேயத்தியாகஞ்செய் - தேயத்தியாகத்தைச் செய்கின்ற, சீவன் முத்தர் - சீவன் முத்தர்களாம், தொழில்களோடு - கிரியைகளோடும், வேறற - மூலங்கெடும்படி, வாதனைவிட்டு - வாசனையைக்கெடுத்து, உள்ளாறி - மனஞ்சாந்தமடைந்து, தூரமாஞேயம் விட்டோர் - சேய்மையான ஞேயத்தியாகஞ் செய்தவர்கள், துகளறுமுத்தராகும்- குற்றமற்ற விதேகமுத்தராம், வீரனே - வெற்றியையுடைய ஸ்ரீராமா, இவையிரண்டின்- இந்த இரண்டினுடைய, விடுதியும் - தியாகமும், தம்மிலொக்கும்- ஒன்றுக்கொன்று சமானமாகும்-எ-று.

எ - து. தீரரானவர்களே தேயத்தியாகத்தைச்செய்கின்றசீவன் முத்தர்களாம். கிரியைகளோடும் மூலங்கெடும்படி வாசனையைக்கெடுத்து மனஞ்சாந்தமடைந்து சேய்மையான ஞேயத்தியாகஞ் செய்தவர்கள் குற்றமற்றவிதேகமுத்தராம். வெற்றியையுடைய ஸ்ரீராமா! இந்தஇரண்டினுடையதியாகமும் ஒன்றுக்கொன்று சமானமாகும்—எ-ம்.

இதுவுமது வேறு.

தேயஞேயத்தின் றியாகங்கண் முத்தர்பாற் செறிவ
தேயஞேயத்தின் றியாகங்கள் பிரமத்தைச் சேர்ந்த
தேயஞேயத்தின் றியாகங்க ளிடரெலாந் தீர்ந்த
தேயஞேயத்தின் றியாகங்கள் தேடருஞ் செல்வம்,

இ - ள். தேயஞேயத்தின்றியாகங்கள், தேயத்தியாகமும் ஞேயத்தியாகமும், முத்தர்பாற்செறிவ - சீவன்முத்தர் விதேகமுத்தரிடத்தினெருங்கியிருப்பன, தேயஞேயத்தின்றியாகங்கள் - தேயத்தியாகஞேயத்தியாகங்கள், பிரமத்தைச்சேர்ந்த - பிரமத்தையடைந்தன, தேயஞேயத்தின்றியாகங்கள் - தேயத்தியாக ஞேயத்தியாகங்கள், இடரெலாந்தீர்ந்த - துன்பமனைத்தையு நீங்கின, தேயஞேயத்தின்றியாகங்கள் - தேயத்தியாக ஞேயத்தியாகங்கள், தேடருஞ் செல்வம் - தேடுதற்கரிய மோட்சமாம்—எ-று.

எ - து. தேயத்தியாகமும், ஞேயத்தியாகமும், சீவன்முத்தர் விதேகமுத்தரிடத்தி னெருங்கியிருப்பன. தேயத்தியாக ஞேயத்தியாகங்கள் பிரமத்தையடைந்தன தேயத்தியாக ஞேயத்தியாகங்கள் துன்பமனைத்தையு நீங்கின. தேயத்தியாக ஞேயத்தியாகங்கள் தேடுதற்கரிய மோட்சமாம்—எ-ம்.

இ-உ க-ம். தேயத்தியாக ஞேயத்தியாகமென்னும் இரண்டுமே சீவன்முத்தி விதேகமுத்திகளாகும் என்பதாம். (19)

## சீவன்முத்தர் இலக்கணங்கூறல்.

வேறு.

சூழுறு மின்ப துன்பந் தொடர்வுறி லொருகா லத்தும்
ஆழுதன் மிதத்த லில்லா வவர்களே சீவன் முத்தர்
கேழுயர் மகிழ்ச்சி யச்சஞ் சினமின்மை பொறாமை கேதம்
ஊழுறு மிவற்றை நோக்கா வுளத்தினர் சீவன் முத்தர்.

இ - ள். சூழுறு மின்ப துன்பம் - சூழ்ந்திருக்கின்ற சுக துக்கங்கள், தொடர்வுறில் - (தன்னைத்) தொடர்ந்தால், ஒருகாலத்தும் - ஒருபோதிலும், ஆழுதல் - அழுந்துதலும், மிதத்தலில்லா - மிதத்தலுமில்லாத, அவர்களே சீவன்முத்தர் - அவர்களே சீவன் முத்தர்களாம், கேழுயர் மகிழ்ச்சி - விளங்கிய மேலான களிப்பும், அச்சம் - பயமும், சினம் - கோபமும், இன்மை- தரித்திரமும், பொறாமை - அழுக்காறும், கேதம் - துன்பமுமாகிய, ஊழுறு மிவற்றை நோக்காவுளத்தினர் சீவன்முத்தர் - ஊழினால் அடையும்; இவைகளைப் பாராத மனத்தோரே சீவன்முத்தராம்—எ-று.

எ - து. சூழ்ந்திருக்கின்ற சுகதுக்கங்கள் தன்னைத் தொடர்ந்தால் ஒருபோதிலும் அழுந்துதலும் மிதத்தலு மில்லாத அவர்களே சீவன்முத்தர்களாம். விளங்கிய மேலான களிப்பும், பயமும், கோபமும், தரித்திரமும், அழுக்காறும், துன்பமுமாகிய, ஊழினாலடையும் இவைகளைப் பாராத மனத்தோரே சீவன்முத்தராம். (20)

சுழுத்திபோ லாறி நின்ற பாவனைத் தொழிலி னாலே
பழுத்தநெஞ் சதனா னீங்காச் சாக்கிரம் பயில்வோர் நாளும்
விழுத்தகு கலைகள் சூழ்ந்த மதியென மேலோர் மேவ
முழுத்தமும் பிரிவி லோரே முத்தரென் றுரைக்கத் தக்கோர்.

இ - ள். சுழுத்திபோல் - சுழுத்தி யவத்தையைப்போல, ஆறிநின்ற பாவனைத் தொழிலினால் - சாந்தமான பாவனாவிருத்தியினால், பழுத்தநெஞ்சதனால் - பக்குவமான மனதினால், நீங்காச் சாக்கிரம் பயில்வோர் - நீக்க

சொற்பனத்திற்பழகுபவர்கள், நாளும் எப்போதும், விழுத்தகு கலைகள் சூழ்ந்த மதியென - சிறந்த கலைகள்நிறைந்த பூரணசந்திரனைப்போல, மேலோர்மேவ - சத்துக்கள் விரும்ப, முழுத்தமும் பிரிவிலோரே - முழுதும் பிரிவில்லாதவர்களே, முத்தரென் றுரைக்கத் தக்கோர் - சீவன் முத்தர்களென்று சொல்லத் தகுந்தவர்கள் எ-று.

எ - று. சுழுத்தியவத்தையைப்போலச் சாந்தமானபாவனுவிருத்தியினால் பக்குவமானமனதினால் தீர்க்கசொற்பனத்திற் பழகுபவர்கள் எப்போதும் சிறந்த கலைகள்நிறைந்த பூரணச் சந்திரனைப் போல சத்துக்கள் விரும்ப முழுதும் பிரிவில்லாதவர்களே சீவன் முத்தர்களென்று சொல்லத்தகுந்தவர்கள்—எ-ம். (21)

## இச்சையை முழுதுங் கெடுக்கவேண்டும் எனல்.



புறப்பொருள் விட்டா லுள்ளே பூண்டமா லென்று சொல்வர்
மறப்பற வனைத்தும் விட்டான் மாண்டமா லென்று சொல்வர்
திறப்பட வெனக்கீ தாக வென்றெழுஞ் சிந்தை யாசை
துறப்பில்பொன் விலங்கா மித்தைத் துவக்கறத் துடைத்தல் வேண்டும்.

இ - ள். புறப்பொருள்விட்டால் - புறம்பிலுள்ள வஸ்துக்களின் (பற்றை) விடுத்தால், உள்ளேபூண்டமாலென்றுசொல்வர் - அகப்பற்ற திருஷ்டினியென்று சொல்லுவார்கள், மறப்பறவனைத்தும்விட்டால் - மறப்பின்றி (வஸ்துக்களிலிருக்கின்ற) சகல இச்சையையும் நீக்கினால், மாண்டமா லென்று சொல்வர் - முத்ததிருஷ்டினியென்று சொல்லுவார்கள் திறப்பட வெனக்கீதாகவென்று - திரமாயெனக்கிதுவாகுமென்று, எழுஞ்சிந்தையாசை உண்டாகின்ற (பாவனையே) திருஷ்டினையாகும், துறப்பில் - விடுக்கக் கூடாத, பொன்விலங்காமித்தை - சொர்ண விலங்காகிய வித்திருஷ்டினியை, துவக்கறத்துடைத்தல்வேண்டும் - தொந்தமறக்கெடுக்கவேண்டும். - எ-று.

எ — று. புறம்பிலுள்ள வஸ்துக்களின் பற்றைவிடுத்தால் அகப்பற்ற திருஷ்டினியென்று சொல்லுவார்கள். மறப்பின்றிவஸ்துக்களிலிருக்கின்ற சகல இச்சையையும் நீக்கினால் முத்ததிருஷ்டினியென்று சொல்லுவார்கள். திரமாய் எனக்கிதுவாகுமென்று உண்டாகின்ற பாவனையே திருஷ்டினையாகும் விடுக்கக்கூடாதசொர்னவிலங்காகிய இத்திருஷ்டினியை தொந்தமறக்கெடுக்கவேண்டும்.—எ - ம். (22)

சத்தசத் தென்னப் பட்ட சகலபா வனையி லென்றுங்
கொத்தற வாசை மாற்றிக் குறைவில்பே ருளத்த னுகிச்

சுத்தநல் லுதார மான சொரூபத்தி னிற்பாய் பெத்த
முத்தமா மாசை யின்ப துன்பங்கண் முழுது நீக்கி.

இ - ள். சத்தசத்தென்னப்பட்ட - உள்ளது இல்லதென்று சொல்லப்பட்ட, சகலபாவனையில் - சமஸ்த பாவனைகளிலும், என்றுங்கொத்தற - எப்பொழுதுமிகாமல், ஆசைமாற்றி - இச்சையைக்கெடுத்து, குறைவில் பேருளத்தனாகி - பூரணமான மனதுடையவனாய், பெத்தமுத்தமாமாசை - பந்தவிச்சையு மோட்ச இச்சையுமாகிய (இவைகளையும்), இன்பதுன்பங்கள் - சுகதுக்கங்களையும், முழுதுநீக்கி - முழுமையுந்தள்ளி, சுத்தநல்லுதாரமான - பரிசுத்தமுள்ள நல்லகெம்பீரமாகிய, சொரூபத்தினிற்பாய் - (ஆத்மஞான) சொரூபத்தி லிருப்பாய்—எ-று.

எ - து. உள்ளது இல்லது என்று சொல்லப்பட்ட சமஸ்தபாவனைகளிலும் எப்பொழுதுமிகாமல் இச்சையைக்கெடுத்துப் பூரணமானமனதுடையனாய் பந்தவிச்சையு மோட்சவிச்சையுமாகிய இவைகளையும் சுகதுக்கங்களையும் முழுமையுந்தள்ளி பரிசுத்தமுள்ள நல்லகெம்பீரமாகிய ஆத்மஞான சொரூபத்திலிருப்பாய்—எ-ம்.

(இ-சு-கம்.) முத்தர்களின் சிறப்பையும் பெத்த விடுதியையுங் கூறினதென்பதாம். (23)

## ஆத்மவிசாரமுள்ளவர்களுக்குரிய நான்கு நிச்சயம் அறிவிக்கத்தொடங்கி முதலாவது நிச்சயத்தின் இலக்கணம் அறிவித்தல்.

பேனமுந் திரையு மில்லாப் பெருங்கடல் போல நிற்பாய்
மானவ கேண்மற் றொன்று மாசிலா விசார முள்ளோர்க்
கானநிச் சயநா லுண்டா மடிதலை மட்டு நானே
ஈனலுற் றவர்தாய் தந்தை யென்பதோ ரறுதி தானே.

இ - ள். பேனமுந்திரையுமில்லா - நுரையும் அலையுமின்றிய, பெருங்கடல்போல நிற்பாய் - மகோததியைப்போல (அசைவற்) றிருப்பாய், மானவ - மனிதவடிவமுடைய ஸ்ரீராமா, மற்றொன்றுகேள் - வேறொன்றை யாஞ் சொல்லக்கேட்பாய், மாசிலாவிசாரமுள்ளோர்க்கு - குற்றமற்ற விசாரணையுள்ளவர்களுக்கு, ஆனநிச்சய நாலுண்டாம் - ஆகிய நிச்சயங்கள் நான்கு உண்டாகும், அடிதலைமட்டுநானே-பாதமுதற்சிரசு அந்தமானசரீரநான், தாய்தந்தை-மாதாபிதாக்கள், ஈனலுற்றவர் - (என்னைப்) பெற்றவர்கள், என்பதோரறுதி தான் - என்பதொருநிச்சயம்—எ-று.

எ - து. நுரையும் அலையும் இன்றிய மகோததியைப்போல அசைவற்றிருப்பாய், மனிதவடிவமுடைய ஸ்ரீராமா! வேறொன்

றை யாஞ் சொல்லக்கேட்பாய் குற்றமற்ற விசாரணை யுள்ளவர்களுக்கு ஆகிய நிச்சயங்கள் நான்கு உண்டாகும், பாதமுதற் சிரசு அந்தமான சரீரநான், மாதாபிதாக்கள் என்னைப் பெற்றவர்கள் என்பதொருநிச்சயம்—எ-ம். (21)

## இரண்டாவது நிச்சயதின் இலக்கணம் அறிவித்தல்



கன்றிய பந்த மாகு மிதுமெய்ம்மைக் கருதா வாற்றுள்
நின்றன வனைத்தின் மேலோ னெல்லின்வா லினுஞ்சற் றேநான்
என்றிரண் டாவ தான நிச்சய மெய்து மென்னில்
ஒன்றிய முத்தி யுண்டா முத்தமர்க் குடைமை யாகும்.

இ - ள். மெய்ம்மைக்கருதாவாற்றால் - உண்மையைநினையாதபடியினால், இது - இந்நிச்சயம், கன்றிய பந்தமாகும் - கொடிய பந்தத்தையுடையதாம், நின்றன வனைத்தின்மேலோன் - இருக்கின்ற சகலவஸ்துக்களினும் மேலானவனாகியும், நெல்லின்வாலினுஞ்சற்றே நானென்று - நெல்லினது வாலினுஞ் சூட்சுமமாகியு மிருக்கின்றவனே யானென்று (சொல்லப்பட்ட), இரண்டாவதான நிச்சயம் - இரண்டாவதாகிய - நிச்சயமானது, எய்துமென்னில் - அடையுமானால், ஒன்றிய முத்தியுண்டாம் - பொருந்திய மோட்சம் உண்டாகும், உத்தமர்க்குடைமையாகும் - சத்துக்களுக்குள்ளதாகும்-எ-று.

எ - து. உண்மையை நினையாதபடியினால் இந்நிச்சயம் கொடிய பந்தத்தையுடையதாம். இருக்கின்ற சகலவஸ்துக்களிலும் மேலானவனாகியும் நெல்லினது வாலினுஞ் சூட்சுமமாகியு மிருக்கின்றவனே யானென்று சொல்லப்பட்ட இரண்டாவதாகிய நிச்சயமானது அடையுமானால் பொருந்திய மோட்ச முண்டாகும் சத்துக்களுக்குள்ளதாகும்.

## மூன்றாவதுநிச்சயம் நான்காவது நிச்சயம் என்னும் இரண்டின் இலக்கணம் அறிவித்தல்.



புவியெலா மெனது ரூபம் பொன்றுத லிலனு னென்று
குவிவறக் காண்டன் மூன்று நிச்சயங் குறைவில் வீடாம்
அவியுறு முலகுநானு மனைத்தும்பொய் விண்போ லொன்றுந்
தவிர்கில மென்ற னுலா நிச்சயந் தனிவீ டாகும்.

இ - ள். புவியெலாமெனதுரூபம் - சகங்களனைத்தும் எனது சொரூபம் நான்பொன்றுத லிலனுனென்று-யானழிவில்லாதவனென்று, குவிவறக்காண்டல்-சங்கோசமில்லாமற் காண்பது, மூன்றுநிச்சயம்-மூன்றாவது நிச்சயமாம்,

குறைவில்வீடாம் - (அது) குறைவற்றமோட்சமாம், அவியுறு மூலகும்-கெடுதலடைகின்றசகமும், நானும் - (அறிகின்ற) யானு (மாகிய), அனைத்தும்பொய்-சகலமும், அசத்தியமே, விண்போலென்றுந் தவிர்கிலமென்றல் - ஆகாயம்போல (யா) மெப்போது நீங்கிலமென்பது, நாலாநிச்சயமாம்-நான்காம்நிச்சயமாம், தனிவீடாகும்-ஈது ஒப்பற்ற மோட்சமாம்-எ-று.

எ - து. சகங்களனைத்தும் எனதுசொரூபம், யான் அழிவில்லாதவனென்று சங்கோச மில்லாமற்காண்பது மூன்றுவதுநிச்சயம்அது குறைவற்ற மோட்சமாம். கெடுதலடைகின்ற சகமும் அறிகின்ற யானுமாகிய சகலமும் அசத்தியமே. ஆகாயம்போல நாமெப்போதுநீங்கிலமென்பது நான்காநிச்சயமாம். ஈது ஒப்பற்ற மோட்சமாம்-எ-ம்.

## இந் நான்கு நிச்சயத்தின் பலாபலனைக் கூறல்.

பெத்தவா சையதா முன்னே பேசுநிச் சயமொ தொன்றுஞ்
சுத்தவா சைகளா மூன்று நொய்யவாய்த் துகளில் சீவன்
முத்தர்பால் விளங்கு மிந்த மூன்றினு ளெல்லா நானென்
றொத்ததோர் நிச்சயத்தை யுறிற்பின்னை யுள்ளஞ் சோரா.

இ - ள். முன்னேபேசு நிச்சயமாதொன்றும் - முன்புசொல்லப்பட்டநிச்சயமொன்றும், பெத்தவாசையதாம்- பத்ததிருஷ்டியையுடையதாம், சுத்தவாசைகளா மூன்றும் - பரிசுத்த (முத்த) திருஷ்டியையுடையமூன்றும், நொய்யவாய் - சொச்சமாய், துகளில் சீவன் முத்தர்பால் விளங்கும் - குற்றமற்ற முத்தர்களிடத்தில் பிரகாசிக்கும், இந்த மூன்றினுள்-இம்மூன்றுக்குள், எல்லா நானென்று - சகலமு நானென்று, ஒத்தோர்நிச்சயத்தை யுறில் - பொருந்திய ஒப்பற்ற நிச்சயத்தைப்பொருந்துவானாயின், பின்னை யுள்ளஞ்சோரா - பின்பு மனமானது சுகதுக்கங்களை யடையாது—எ-று.

எ - து. முன்பு சொல்லப்பட்ட நிச்சயமொன்றும் பத்ததிருஷ்டியையுடையதாம். பரிசுத்தமுத்த திருஷ்டியையுடைய மூன்றும் சொச்சமாய் குற்றமற்ற சீவன்முத்தர்களிடத்திற் பிரகாசிக்கும் இம்மூன்றுக்குள் சகலமுநானென்று பொருந்திய ஒப்பற்ற நிச்சயத்தைப் பொருந்துவனாயின் பின்புமனமானது சுகதுக்கங்களை யடையாது—எ-ம்.

இ-ஃ-க-ம். முதனிச்சயத்துக்குப் பந்தமும் மற்ற மூன்று நிச்சயத்துக்கு முத்தியும் பிரயோசனமாமென்பதாம். (27)

## ஆத்மாநாத்ம இலக்கணம் அறிவித்தல்.

சூனியப் பகுதி மாயை பிரமஞ்சிற் சோதி ஞானம்
ஈனமில் புருட ளான்மா வீசானன் சிவமே நித்தம்
ஆனவை யென்ன லாமொன் றிரண்டெனு மகல்பே தத்தால்
வானுயர் சகம் படைக்கும் விநோதத்தால் வளரு மன்றே.

இ - ள். சூனியம் - சூனியமும், பகுதி - பிரகிருதியும், மாயை - மாயையும், பிரமம்-பிரமமும், சிற்சோதி - சிற்பிரகாசமும், ஞானம்-அறிவும், ஈனமில் புருடன்-குறைவில்லாதபுருடனும், ஆன்மா-ஆத்மாவும், ஈசானன்-ஈசானனும், சிவம்-சிவமும், நித்தமானவை-நித்தியமும் ஆன இவைகளை, என்னலாம்(பிரமமென்று) சொல்லலாகும், ஒன்றிரண்டெனுமகல் பேதத்தால் - ஒன்றென்னு மிரண்டென்னும் விரிந்தவேற்றுமையினால், வானுயர் சகம்படைக்கும் - உயர்வான சகத்தை யுண்டாக்குகின்ற, விநோதத்தால் - விளையாட்டினால், வளரும் - பிரமசத்தி வளரும்-எ-று.

எ – து. சூனியமும், பிரகிருதியும், மாயையும், பிரமமும், சிற்பிரகாசமும், அறிவும், குறைவில்லா புருடனும், ஆத்மாவும், ஈசானனும், சிவமும், நித்தியமுமான இவைகளைப் பிரமமென்று சொல்லலாகும். ஒன்றென்னு மிரண்டென்னும் விரிந்தவேற்றுமையினால்உயர்வான சகத்தையுண்டாக்குகின்ற யிளையாட்டினால் பிரமசத்தி வளரும்—எ-ம். (28)

## ஒன்றிலும் பற்றற்று இருக்கவேண்டும் எனல்.

ஒன்றெனும் பரமரூபத் தொருசத்தி யொருமை யாலே
நின்றெழு கின்ற தன்றே நின்னது பிறா தென்றும்
பொன்றிய திருந்த தென்றும் பொருள்களிற் கருமந் தன்னில்
என்றுமின் பத்துன் பங்க ளிதயத்தி லூன்ற வேண்டாம்.

இ - ள். ஒன்றெனும் பரமரூபத்து - ஏகமென்கின்ற பிரமசொரூபத்தில் (உள்ள), ஒருசத்தி - ஒப்பற்றசத்தியானது, ஒருமையால் - (அதன்) ஒருமையினால், நின்றதெழுகின்றது-இருந் துவளருகின்றது, நின்னது - (ஸ்ரீராமா) உனதென்றும், பிறாதென்றும் - அன்னியரதென்றும், பொன்றியது - இறந்ததென்றும், இருந்ததென்றும் - இருப்பதென்றுஞ் (சொல்லப்பட்ட பொருள்களில் -விடயங்களிலும்," கருமந்தன்னில் - தொழில்களிலும், என்றும்-எப்போதும், இன்ப துன்பங்கள் - சுகதுக்கங்கள், இதயத்தில் ஊன்றவேண்டாம்-மனதில்தரிக்கவேண்டாம்—எ-று.

எ - து. ஏகமென்கின்ற பிரமசொரூபத்திலுள்ள ஒப்பற்ற சத்தியானது அதனொருமையாதினால் இருந்து வளருகின்றது. ஸ்ரீராமா! உனதென்றும் அன்னியரதென்றும் இறந்ததென்றும் இருப்பதென்றுஞ் சொல்லப்பட்ட விடயங்களிலும்தொழில்களிலும் எப்போதும் சுகதுக்கங்கள் மனதில் தரிக்கவேண்டாம்—எ-ம். (29)

## செனியாதவர் இலக்கணங்கூறல்.



யாதினு முயர்ந்து மாளாப் பதம்பற்றி யிதய மென்னுஞ்
சீதமா யின்ப துன்பஞ் சேர்கிலார் பிறப்பிற் சேரார்
சாதுகொள் பகைகொ ளொத்தல் தஞ்சம்வல் லபங்க ளுள்ளோர்
ஓதிய நெறியிற் செல்லு முத்தமர் பிறப்பிற் சேரார்.

இ - ள். யாதினுமுயர்ந்து-எல்லா வற்றிலுமதீதமாய், மாளாப்பதம்,பற்றி- கெடாத பரமபதத்தைப்பிடித்து, இதயம் - மனமானது, என்னுஞ் சீதமாய்- எப்போதுங்குளிர்ச்சியாய், இன்பதுன்பஞ்சேர்கிலார் - சுகதுக்கங்களடையாதவர்கள், பிறப்பிற்சேரார் - பிறவியை யடையார்கள், சாதுகொள் - சற்குணமுள்ள (மித்திரனிடத்திலும்), பகைகொள் - துற்குணமுள்ள (சத்துருவினிடத்திலும்), ஒத்தல் - சமத்துவமாகி, தஞ்சம்வல்ல பங்களுள்ளோர் - தயாதாட்சணியங்களுள்ளவர்களே, ஓதியநெறியிற்செல்லும் - சொல்லியமுறையிற்செல்கின்ற, உத்தமர் பிறப்பிற்சேரார் - உத்தமர்கள் பவத்தையடையார்கள் எ-று.

எ - து. எல்லா வற்றினும் அதீதமாய்க்கெடாதபரமபதத்தைப்பிடித்துமனமானது எப்போதுங்குளிர்ச்சியாய்சுகதுக்கங்கள் அடையாதவர்கள் பிறவியை யடையார்கள். சற்குணமுள்ள மித்திரனிடத்திலும் துற்குணமுள்ள சத்துருவினிடத்திலும் சமத்துவமாகி தயாதாட்சணியங்களுள்ளவர்களே சொல்லிய முறையிற் செல்லுகின்ற உத்தமர்கள் பவத்தை யடையார்கள்—எ-ம். (30)

இழிவுயர் விரண்டு மெண்ணா ரிச்சைகோ பங்க ளெய்தார்
தொழிறொழி லிலாமை விட்டோர் துன்னிய பிறப்பிற் சேரார்
எழில்பெற விளங்கி யார்க்கு மினியன வினிதிற் சொல்வோர்
அழிபொரு ளனைத்தின் சால்பை யறிந்துளோர் பிறப்பிற் சேரார்.

இ - ள். இழிவுயர்வு - தாழ்வு மேன்மையுமாகிய, இரண்டு, மெண்ணார் இரண்டையு நினையார்கள், இச்சைகோபங்களெய்தார், - விருப்புவெறுப் புடையார்கள், தொழிறொழிலிலாமை விட்டோர் - கிரியாக் கிரியைகளை

நீக்கினவர்கள், துன்னிய பிறப்பிற்சேரார் - செறிந்த பிறவியிற் சேரார்கள், எழில்பெறவிளங்கி - அழகாகப் பிரகாசித்து, யார்க்கு மினியன - யாவர்க்கும் இன்பமானவைகளை, இனிதிற் சொல்வோர் - இனிமையாகப் பேசுகின்றவர்கள், அழிபொருளனைத்தின் - கெடாநின்ற (பூதவஸ்துக்களில்) எல்லாவற்றின், சால்பை யறிந்துளோர் - குணத்தையறிந்தவர்கள், பிறப்பிற் சேரார்- பவத்தை யடையார்கள் எ-று.

எ - து. தாழ்வு மேன்மையுமாகிய இரண்டையு நினையார்கள். விருப்பு வெறுப்படையார்கள். கிரியாக் கிரியைகளை நீக்கினவர்கள் செறிந்தபிறவியிற் சேரார்கள். அழகாகப் பிரகாசித்து யாவர்க்கும் இன்பமானவைகளை இனிமையாகப் பேசுகின்றவர்கள் கெடாநின்ற பூதவஸ்துக்களி லெல்லாவற்றின் குணத்தை யறிந்தவர்கள் பவத்தை யடையார்கள்—எ—ம். (31)

## அனுபவியினது லீலையை நிரூபித்தல்.

### வேறு.

தேயவா தனைநீங்கிப் பூர்ண மாகித் தெளிந்தவிழி யிமையாமற் சீவன் முத்தி, யாயபா வனையாலே சொரூப மேவி யனவரத முலகில்விளை யாடு வீரா, மாயவா சையைநீங்கிப் பற்ற றுத்து வாதனை போ யுள்வெளியாய் வாகி யத்தே, மேயவா சாரமெலா மியற்றி யென்றும் வேண்டியவா றுலகில்விளை யாடு வீரா.

இ - ள். தேயவாதனைநீங்கி - தேயவாதனையைவிட்டு, பூர்ணமாகித் தெளிந்தவிழி - பூரணமாகித் தெளிந்த திருட்டி, இமையாமல் - மறையாமல், சீவன் முத்தியாய பாவனையால் - சீவன் முத்தியாகிய பாவனையினால், சொரூபமேவி - (தனதாத்மஞான) சொரூபமடைந்து, அனவரதம் - சதாகாலமும், வீரா - ஸ்ரீராமா, உலகில் விளையாடு உலகத்தின்கண் விளையாடுவாய், மாயவாசையை நீங்கி - பொய்யான இச்சையைவிட்டு, பற்றறுத்து - பற்றுதலைக்கெடுத்து, வாதனைபோய் - வாசனையைவிட்டு, உள்வெளியாய்-உள்ளே சிதாகாசமாய், வாகியத்துமேய வாசாரமெலாமியற்றி - புறத்திலுள்ள ஆசாரங்கள் அனைத்துஞ்செய்து, என்றும் - எக்காலத்தும், வேண்டியவாறு - வேண்டிய பிரகாரம், வீரா - ஸ்ரீராமா, உலகில் விளையாடு - சகத்தில்விளையாடுவாய்-எ-று.

எ - து. தேயவாதனையைவிட்டுப்பூரணமாகத்தெளிந்த திருட்டி மறையாமல் சீவன் முத்தியாகிய பாவனையினால், தனதாத்மஞான சொரூபமடைந்து சதாகாலமும் ஸ்ரீராமா! உலகத்தின்கண் விளையாடுவாய். பொய்யான இச்சையைவிட்டுப் பற்றுதலைக்கெடுத்து வாசனையைவிட்டு உள்ளே சிதாகாசமாய்ப் புறத்திலுள்ள ஆசாரங்கள் அனைத்துஞ்செய்து எக்காலத்தும் வேண்டினபிரகாரம் ஸ்ரீராமா சகத்தில் விளையாடுவாய். (32)

சகத்திலே புறத்தொழிலி லாரம்பித்துத் தனியிதயத் தாரம் பஞ் சற்று மின்றி, அகத்திலே செயாதோனாய்ப் புறத்தே செய் வோ னாகியே யுலகில்விளை யாடு வீரா, வகுத்தவகங் காரம்போய்ச் சித்தந் தேறி வானம்போ னொய்தாகி மாசொன் றற்று, வெகுத்துவ மா மடையாள மனைத்து மின்றி வேண்டியவா றுலகில்விளை யாடு வீரா.

இ - ள். சகத்தில் - உலகத்தில், புறத்தொழிலில் ஆரம்பித்து - புறம்பி லுள்ள கிரியைகளில் ஆரம்பஞ்செய்து, தனியிதயத்து - தனித்தமனதில், ஆரம்பஞ் சற்றுமின்றி - ஆரம்பம் எவ்வளவு மில்லாமல், அகத்திலே செயா தோனாய் - உள்ளே செய்யாதவனாய், புறத்து செய்வோனாகி - புறம்பிற்செய் பவனாய், வீரா - ஸ்ரீராமா, உலகில் விளையாடு - உலகத்தின்கண் விளையாடு வாய், வகுத்த வகங்காரம்போய் - (தேகநானென்று) பகுத்த அகம்பாவங்கெ ட்டு, சித்தந்தேறி — மனந்தெளிந்து, வானம்போல் - ஆகாயத்தைப்போல, நொய்தாகி - சொச்சமாய், மாசொன்றற்று - களங்கமொன்றுமின்றி, வெகுத் துவமா மடையாள மனைத்துமின்றி - பலசின்னங்களின்றி, வீரா - ஸ்ரீராமா, வேண்டியவாறு - வேண்டியபடி, உலகில்விளையாடு - சகத்தின்கண் விளை யாடுவாய்—எ-று.

எ - து. உலகத்தில் புறம்பிலுள்ள கிரியைகளில் ஆரம்பஞ் செய்து தனித்த மனதில் ஆரம்பம் எவ்வளவும் இல்லாமல் உள்ளே செய்யாதவனாய் புறம்பிற் செய்பவனாய் ஸ்ரீராமா! உலகத்தின்கண் விளையாடுவாய். தேகன் நானென்று பகுத்த அகம்பாவங்கெட்டு மனந்தெளிந்து ஆகாயத்தைப்போல சொச்சமாய் களங்கமொன்று மின்றிப் பல சின்னங்களின்றி ஸ்ரீராமா! வேண்டியபடி சகத்தின் கண் விளையாடுவாய்—எ-ம். (33)

இதமான வுதாரியாய்க் கடினா சார மின்றியா சாரங்கட் கெளிது பின்போய், விதமான வனைத்துக்குஞ் சார்பை நோக்கி வேண்டியவா றுலகில்விளை யாடு வீரா, புதனாகி நிராசைதனை யுள்ளே தேக்கிப் புறத்தேயா சையிற்றொழில்கள் பூண்டான்போலாய், அத்னாலுட் சீதளமாய்ப் புறம்வெய் தாகி யனவரத முலகில்விளை யாடுவீரா.

இ - ள். இதமான உதாரியாய் - உரிமையுள்ள உதாரத்தை உடையவ னாய், கடினாசாரமின்றி - கடினமான ஆசாரமில்லாமல், ஆசாரங்கட்கு - ஆசாரங்களுக்கு, எளிது பின்போய் - எளிதாகப் பின்சென்று, விதமான வனைத்துக்கும் - பலவிதமாகிய சகல (வஸ்துக்களுக்கும்), சார்பைநோக்கி- ஆதாரத்தைப் பார்த்து, வேண்டியவாறு - வேண்டிய பிரகாரம், வீரா- ஸ்ரீராமா, உலகில்விளையாடு - சகத்தின்கண் விளையாடுவாய், புதனாகி - அறி வையுடையவனாய், நிராசைதனையுள்ளே தேக்கி - நிராசையுள்ளே நிறைத்து,

புறத்து - வெளியில் ஆசையிற்றெழில்கள் பூண்டான்போலாய் - காமக்கிரியைகளைத் தரித்தவன்போல, அதனுளுட்சீதளமாய் - அதனுளுள்ளே குளிர்ந்தவனும், புறம் வெய்தாகி - வெளியில் வெப்பமுள்ளவனும், அனவரதம் - சதாகாலமும், வீரா - ஸ்ரீராமா, உலகில் விளையாடு - சகத்தின் கண் விளையாடுவாய்—எ-று.

எ - து. உரிமையுள்ள உதாரத்தை உடையவனும் கடினமான ஆசாரமில்லாமல் ஆசாரங்களுக்கு எளிதாகப் பின்சென்று பலவித மாகிய சகல வஸ்துக்களுக்கும் ஆதாரத்தைப்பார்த்து வேண்டிய பிரகாரம் ஸ்ரீராமா! சகத்தின்கண் விளையாடுவாய். அறிவையுடையவனும் நிராசையுள்ளே நிறைத்து வெளியில் காமக்கிரியைகளைத் தரித்தவன்போல அதனுளுள்ளம் குளிர்ந்தவனும் வெளியில் வெப்பமுள்ளவனும் சதாகாலமும் ஸ்ரீராமா! சகத்தின்கண் விளையாடுவாய்—எ-ம்.

(இ-எ-க-ம்.) வாசனுட்சயஞ்செய்து பூரணானந்தவேத்தியமாய் விளங்கிய சொரூபானுபவத்தினால் உலகத்தில் இச்சையானபடி சஞ்சரிக்கலாம். ()

## திருக்குதிருஷ்டியிற் சகலமும் பிரிய வடிவாமெனல்.



இவன்சுற்ற னிவன்பகைவ னிவனு னென்னு மிவ்வெறும்பொய் யிராமநீ யிறைபு மெண்ணேல், அவம்பற்று நொய்யமனத் தவர்க்கிவ் வாறு மறிந்தோர்க்குச் சகமுழுது மகலாச் சுற்ற, நிவந்துற்ற பலகோடி பவமோ கத்தா னீபகைநீ யுறவென்பர் நிமிடந் தோறும், உவந்துற்ற மயக்கிதுவாம் பரமார்த் தத்தா லுலகெல்லாம் பகையாகு முறவு மாகும்.

இ - ள். இவன் சுற்றன் - இவனுறவன், இவன்பகைவன் - இவன்பகைஞன், இவனுனென்னும் - இவன் நான் என்கின்ற, இவ்வெறும்பொய் - இந்த மிகுந்தபொய்யை, இராமநீ யிறையுமெண்ணேல் - இராமா நீ சற்று நினையாதே, அவம்பற்றுநொய்யமனத்தவர்க்கு - பயன் இன்மையைப்பிடித்த அற்பமனதுடையவர்களுக்கு, இவ்வாறும் - இந்தப் பிரகாரமாம், அறிந்தோர்க்கு - அறிஞருக்கு, சகமுழுதுமகலாச்சுற்றம் - உலகமுழுது நீங்காத உறவாகும், நிவந்துற்ற பலகோடி - ஓங்கி அளவில்லாத, பவமோகத்தால் - சநநமயக்கத்தினால், நீ பகை - நீபகைவனென்றும், நீயுறவென்பர் - நீ உறவென்றுஞ் சொல்லுவார்கள், நிமிடந்தோறும் - க்ஷணந்தோறும், உவந்துற்றமயக்கிதுவாம் - களிப்புற்ற மயக்கமானது இதுவேயாகும், பரமார்த்தத்தால் - எதார்த்த திருஷ்டியினால், உலகெலாம் - சகங்களனைத்தும், பகையாகும் - பகையுமாம், உறவுமாகும் - உறவுமாகும்—எ-று.

எ - து. இவனுறவன், இவன்பகைஞன், இவன்நான் என்கின்ற இந்த மிகுந்த பொய்யை இராமா! நீ சற்றுநினையாதே பயனின்

மையைப்பிடித்த அற்ப மனதுடையவர்களுக்கு இந்தப்பிரகாரமாம். அறிஞருக்கு உலகமுழுதும் நீங்காத உறவாகும். ஓங்கி அளவில்லாத சகதியக்கத்தினுல் நீ பகைவனென்றும் நீ உறவென்றுஞ் சொல்லு வார்கள் க்ஷணந்தோறும் களிப்புற்ற மயக்கமானது இதுவேயா கும். எதார்த்த திருஷ்டியினுல் சகங்களனைத்தும் பகையுமாம் உறவு மாகும்—எ-ம்.

இ-ம். சகல சீவர்களுந் தனது அம்சமாயிருக்கின்றபடியால் அவை தனக்கு உறவாகுமென்பதாம். (35)

## இவ்வனுபவ நிச்சயங்கூறி இஃதுறுதிப்படுத்தும் நிமித்தம் புண்ணியபாவனன் ஞானமடைந் ததைத் திருஷ்டாந்தமாகக்கூறல்.

இதுபொருட்டா விதிகாச மொன்று கேள்பண் டியைந்ததுகங் கையின்கரையி னிருடி மைந்தர், அதுலமயேந் திரகிரியி னயலே வாழ்வோ ரருந்தவத்தோர் தீர்க்கதவ னளிக்க வந்தோர், சதுமறை தேர் புண்ணியபா வனனென் றுள்ளார் தந்தையொடு கங்கையின் பாற் றவஞ்செய் நாளிற், பொதுவுறச்செய் தவப்பயனுற் கால முற் றிப் புண்ணியனும் புண்ணியவான் போதம் பெற்றுன்.

இ - ள். இதுபொருட்டு - இவ்வனுபவம் விளங்கும்பொருட்டு, பண்டி யைந்தது - முன்னுள்ளதாகிய, இதிகாசமொன்றுகேள் - ஒருகதையைக் கேட்பாய், கங்கையின் கரையின் - கங்காதீரத்தில், இருடிமைந்தர் - இருடி புத்திரரும், அதுல மயேந்திரகிரியின் - சமானமற்ற மயேந்திரமலையினது அயலேவாழ்வோர் - பக்கத்தில் வாழுகின்றவர்களும், அருந்தவத்தோர் -அரிய தவத்தையுடையவர்களும், தீர்க்கதவன் - தீர்க்கதவனென்னு நாமததை யுடைய ரிஷியானவர், அளிக்க வந்தோர் - பெறவந்தவர்களுமாகிய, சது மறைதேர் - நான்கு வேதங்களையும் ஆராய்ந்தறிந்த, புண்ணிய பாவனனென் றுள்ளார் - புண்ணியனென்றும் பாவனனென்று நாமத்தையுடையவர்கள், தந்தையொடு - பிதாவுடன், கங்கையின்பால் - கங்காதீரத்தில், தவஞ்செய் நாளில் - தவமியற்றுங்காலத்தில், பொதுவுறச்செய் தவப்பயனுல் - நிட்காமிய மாகச்செய்த தபோபலத்தால், காலமுற்றி - காலமுதிர்ந்து, புண்ணியனும் புண்ணியவான் - புண்ணியனென நாமமுள்ள புண்ணியவான், போதம்பெற் றுன் - ஞானமடைந்தான் —எ-று.

எ - து. இவ்வனுபவம் விளங்கும்பொருட்டு முன்னுள்ளதாகிய ஒரு கதையைக் கேட்பாய். கங்காதீரத்தில் இருடி புத்திரரும் சமான மற்ற மயேந்திரமலையினது பக்கத்தில் வாழுகின்றவர்களும், அரிய தவத்தையுடையவர்களும், தீர்க்க தவனென்னு நாமத்தையுடைய

ரிஷியானவர் பெறவந்தவர்களுமாகிய நான்கு வேதங்களையும் ஆராய்ந்தறிந்த புண்ணியனென்றும் பாவனனென்று நாமத்தையுடையவர்கள். பிதாவுடன் கங்காதீரத்தில் தவமியற்றுங் காலத்தில் நிட்காமியமாகச்செய்த தபோபலத்தால் காலமுதிர்ந்துபுண்ணியனுன நாமமுள்ள புண்ணியவான் ஞானமடைந்தான்—எ-ம். ()

## பாவனனது பக்குவங்கூறல்.



அங்கவன்பின் னவனுன பாவ னென்போ னறிவுடைமை பாதியள வாத லாலே, செங்கதிரோ னுதிப்பதன்மு னருணன் றேன்றச் செங்கமலங் கிண்கிணிவாய்ச் செய்வ தொத்து, துங்கவறியாமையுமெய் வீடு மின்றித் தோளாவெந் திரம்போலத் துவண்டு நின்றுன், பொங்குதவத் தீர்க்கதவ னென்னுந் தந்தை போகத்தி லிச்சையெலாம் புந்தி தீர்ந்தான்.

இ - ள. அங்கவன்பின்னவனுன - அவன்றம்பியாகிய, பாவனனென்போன் - பாவனனென்னும் பெயரையுடையவன், அறிவுடைமை - ஞானமடைந்தது, பாதியளவாதலால் - அரைவரிசையானபடியினுல், செங்கதிரோனுதிப்பதன்முன் சிவந்த கிரணங்களையுடைய சூரியனுதிப்பதற்கு முன்னம், அருணன்றேன்ற - அருணேதயமாக, செங்கமலம் - செந்தாமரைப்பூ, கிண்கிணிவாய் செய்வதொத்து - சதங்கையின் வாய்க்கொப்பாய், துங்கவறியாமையும் - அதிக அறியாமையும், மெய்வீடுமின்றி - உண்மை ஞானமுமில்லாமல், தோளாவெந்திரம்போல - ஊசலைப்போல, துவண்டு நின்றுன் - துவள்வுற்றுநின்றுன், பொங்குதவம் - மிகுந்த தவமுடைய, தீர்க்க தவனென்னுந்தந்தை - தீர்க்க தவன் என்கின்றபிதாவானவர், போகத்தி லிச்சையெலாம் - விடயபோகத்தில் ஆசைகள் அனைத்திலும், புந்திதீர்ந்தான் - புத்திவிடுத்தான்—எ-று.

எ - து. அவன்றம்பியாகிய பாவனனென்னும் பெயரையுடையவன் ஞானமடைந்தது அரைவரிசையானபடியினுல், சிவந்தகிரணங்களையுடைய சூரியனுதிப்பதற்கு முன்னம் அருணேதயமாக செந்தாமரைப்பூச்சதங்கையின்வாய்க்கொப்பாய், அதிக அறியாமையும் உண்மைஞானமுமில்லாமல் ஊசலைப்போல துவள்வுற்று நின்றுன். மிகுந்த தவமுடைய தீர்க்கதவன் என்கின்ற பிதாவானவர் விடய போகத்தில் ஆசைகளனைத்திலும் புந்திவிடுத்தான்—எ-ம். ()

## விதேகமுத்தி யடைதல்.

காலமே காரணமாய்க் குடும்ப வாழ்விற் காதலொழித் தறச் செறிந்த காயந் தன்னைச், சாலமிகு தொழிற்பறவைக் கிடமாங்கூட் டைச் சானவியின் கரைவரையிற் றானேநீர்ந்தான், கோலியொரு சுமைசுமப்பான் குறித்த வெல்லைக் கொண்டுபோய்ப் போடுவபோற் கூம்பைப் போட்டு, மாலுறுபற் றொன்றின்றிப் பூவி னாற்றம் வானு றல்போற் பரமபத வாழ்வுபெற்றான்.

இ-ள். காலமே காரணமாய் - காலங்காரணமாக, குடும்பவாழ்வில்-சமு சாரவாழ்க்கையில், காதலொழித்து - ஆசையைவிட்டு, சாலமிகுதொழிற் பற வைக்கு-மிகுந்ததொழிலென்னும் அகங்காரப்பட்சிகளுக்கு, இடமாங்கூட்டை- இடமாகுங் கூடுபோன்ற,அறச்செறிந்த காயந்தன்னை - மிகவும் நெருங்கினசரீ ரத்தை, சானவியின்கரைவரையில் - கங்காதீரத்திருக்கின்ற மலையினிடத்தில், தானேநீர்த்தான் - தானே விட்டுவிட்டான், கோலியொரு சுமைசுமப்பான்- சங்கற்பித்தொருசுமையைச்சுமப்பவன், குறித்தவெல்லை - குறித்த இடத்தில், கொண்டுபோய்ப்போடுவபோல் - கொண்டுபோய்ப் போடுவதுபோல, கூம் பைபோட்டு - சரீரத்தைவிட்டு, மாலுறுபற்றொன்றி - ஆசைபொருந்தினபற் றுக்கள் ஒன்றுமில்லாமல், பூவினாற்றம் வானுறல்போல் - புட்பவாசனை ஆகா யத்திற் பொருந்துவதுபோல, பரமபதவாழ்வுபெற்றான்-பிரமாநந்தத்தையடை ந்தான்-எ-று.

எ-து. காலங்காரணமாக சமுசாரவாழ்க்கையில் ஆசையைவி ட்டு மிகுந்த தொழிலென்னும் அகங்காரப்பட்சிகளுக்கு, இடமாகுங் கூடுபோன்ற மிகவு நெருங்கின சரீரத்தை கங்காதீரத்திருக்கின்ற ம லையினிடத்தில் தானேவிட்டுவிட்டான்' சங்கற்பித்தொரு சுமையைச் சுமப்பவன். குறித்த இடத்தில் கொண்டுபோய்ப் போடுவதுபோல சரீரத்தைவிட்டு ஆசைபொருந்தினபற்றுக்கள் ஒன்றுமில்லாமல்புட்ப வாசனை ஆகாயத்திற் பொருந்துவதுபோல பிரமாநந்தத்தை யடைந் தான்—எ-ம். (38)

## புண்ணியபாவனன் அநுபவங்கூறல்.

தொழிலின்றிக் காட்சியெனுந் துன்ப மின்றித் தொல்லறிவு தோன்றிடமாஞ் சொரூபம் பெற்ற, அழிவின்முனி யிறத்தலுமேயவ ன்றன்பன்னி யம்புயநின்றகலஸிபோ லங்கம் விட்டாள், விழிகணிகர் தாய்தந்தை யிறப்பக் கண்டு மேற்செயவேண் டியகிரியை விதியிற்

செய்வான். வழிபடுபுண் ணியன் முயன்றான் பாவன் றானும் வருத்த மெனுங் கடற்புகுந்து மயங்க லுற்றான்.

இ - ள். தொழிலின்றி - தொழிலில்லாததாகியும், காட்சியெனுந்துன்ப மின்றி - சகமென்னுந் துன்பமில்லாததாகியும், தொழில் அறிவு தோன்றிடமாம் - பழமையான ஞானேதய மாதற் கிடமாகியு மிருக்கின்ற, சொரூபம் பெற்ற - (தனது ஆத்ம) சொரூபத்தைப்பெற்ற, அழிவின்முனியிறத்தலும்- கெடாத (சத்துவடிவமான) முனி (யுடன்) மரிக்கவும், அவன்றன் பன்னி- அவனது பாரியானவள், அம்புயத்தின் றகலளிபோல் - தாமரைப்பூவிலிருந்து நீங்குகின்ற வண்டைப்போல, அங்கம்விட்டாள் - சரீரத்தை நீங்கினாள், விழி கணிகர் - கண்களையொத்த, தாய்தந்தையிறப்பக்கண்டு - மாதாபிதாக்கள் மரிக்கப்பார்த்து, மேற்செயவேண்டிய கிரியை - இனிச்செய்யவேண்டிய கருமங்களை, விதியிற்செய்வான் - விதிப்படி செய்யும் பொருட்டு, வழிபடு புண்ணியன் முயன்றான் — வழிபடுகின்ற புண்ணியன் எத்தனஞ்செய்தான், பாவன் றானும் - பாவனனும், வருத்தமெனுங் கடற்புகுந்து - துக்கமென்னுஞ் சமுத்திரத்திலழுந்தி, மயங்கலுற்றான் - மயக்கமடைந்தான்-எ-று.

எ - து. தொழிலில்லாதாகியும், சகமென்னுந் துன்பமில்லாத தாகியும், பழமையான ஞானோதயமாதற் கிடமாகியுமிருக்கின்ற தன தாத்மசொரூபத்தைப்பெற்ற கெடாத சத்துவடிவமான முனியுடன் மரிக்கவும், அவனது பாரியானவள் தாமரைப்பூவிருந்து நீங்குகின்ற வண்டைப்போல சரீரத்தை நீங்கினாள். கண்களையொத்த மாதாபிதாக்கள் மரிக்கப்பார்த்து இனிச்செய்யவேண்டிய கருமங்களை விதிப்படி செய்யும்பொருட்டு வழிபடுகின்ற புண்ணியன் எத்தனஞ்செய்தான். பாவனனும் துக்கமென்னுஞ் சமுத்திரத்திலழுந்தி மயக்கமடைந்தான்—எ-ம். (39)

அன்னையன் னையென்னு மென்னையீன்ற வையாவை யாவென்னு மந்தோ வந்தோ, என்னேயென் னேயென்னு மாற்றாளுகியெரிமிதித்தாற் போற்கான மெங்கு மோடித், தன்னோரின் முன்னவனை நோக்கித் தேறான் றம்பிமிகத்தளர்வுற்றான் றளரா முன்னோன், பின்னொரு முடற்கிறந்த வியல்பேயென்று வேறொன்று நினையாமல் விதியே செய்தான்.

இ - ள். தம்பி - பாவனனானவன், என்னையீன்ற- என்னைப்பெற்ற, அன்னே யன்னேயென்னும் - தாயேதாயேயென்பவன், ஐயாவையாவென்னும் பிதாவே பிதாவேயென்பான், அந்தோவந்தோ - ஐயோ ஐயோவென்பான், என்னேயென் னேயென்னும் - இதென்ன இதென்னவென்பவன், ஆற்றானாகி- (துன்பத்துக்குச்) சகிக்க மாட்டாதவனாய், எரிமிதித்தாற்போல் - நெருப்பை

மிதித்தவனைப்போல, கானமெங்குமோடும் - வனங்களெல்லாமோடுவான், தன்னேரில் - தனக்கெதிரில்இருக்கின்ற, முன்னவனைநோக்கித்தேறான்- தமையனைப்பார்த்துத் தெளியான், மிகதளர்வுற்றான் - மிகவுந் தளர்வையடைந்தான், தளராமுன்னோன் - தளர்ச்சியில்லாத தமையனானவன், மின்னேருமுடற்கு- மின்னலையொத்த சரீரத்துக்கு, இறத்தலியல்பேயென்று-மரிப்பது சுபாவமேயென்று, வேறொன்று நினையாமல் - மற்றொன்றையுஞ்சிந்தியாமல், விதியே செய்தான் (கருமத்தை) விதிப்படி செய்தான்-எ-று.

எ - து. பாவனனானவன் என்னைப்பெற்றதாயேதாயேஎன்பன். பிதாவே பிதாவே என்பான். ஐயோ ஐயோ என்பான். இதென்ன இதென்ன என்பான். துன்பத்துக்குச் சகிக்கமாட்டாதவனாய் நெருப்பை மிதித்தவனைப்போலவனங்களெல்லாம் ஓடுவான். தனக்கெதிரிலிருக்கின்ற தமையனைப்பார்த்துத்தெளியான் மிகவுந்தளர்வை யடைந்தான். தளர்ச்சியில்லாத தமையனானவன்மின்னலையொத்த சரீரத்துக்கு மரிப்பது சுபாவமேயென்று மற்றொன்றையுஞ் சிந்தியாமல் கருத்தை விதிப்படி செய்தான்—எ-ம். (40)

## ஞானோபதேசங் கூறல்

மறைநெறிகண் முடித்தகற்பின் சோகத்தாலே வாய்மூடாவிளவறனை வந்து சார்ந்து, நிறையறிவாம் புண்ணியன் பாவனனை நோக்கி நெஞ்சழிக்குந் துயரமைந்தா நீத்தலென்னப், பொறை மிகுநின் பிதாநின்னதன்னையோடும் பொருந்தியிருந் துளபதத்தின் பொலிவைக்கேளாய், குறைவுநிறை விலதென்றுந் தனதாய்த் தானுய்க்கோதிலதாம் வீடெனும்பேர் கூற வற்றும்.

இ - ள். மறைநெறிகண் முடித்தகற்பின் - வேதமார்க்கத்தின்படி (கரும)நிறைவேற்றினபின்பு, சோகத்தால் - துன்பத்தினால், வாய்மூடாவிளவறனை - வாய்மூடாமல் அழுகின்றதம்பியை, வந்துசார்ந்து - வந்தடைந்து, நிறையறிவாம் புண்ணியன் - பூரணஞானத்தையுடைய புண்ணியனானவன், பாவனை நோக்கி - பாவனனைப்பார்த்து, நெஞ்சழிக்குந்துயரம்-மனதைவருத்துகின்ற துன்பத்தை, மைந்தா - குழந்தாய், நீ நீத்தலென்ன - நீயேனீக்கவில்லை, பொறைமிகுநின் பிதா - பொறுமைமிகுந்த உனது தந்தையானவர், நின்னதன்னையோடும் - உனது மாதாவோடும், பொருந்தியிருந்துள - அமைந்திருக்கின்ற, பதத்தின்பொலிவைக்கேளாய் - இடத்தின்சிறப்பைக்கேட்பாய், குறைவுநிறை

விலது - அற்பமுமகத்துமென்பதின்று, என்றும் - எப்போதும், தனதாய் - தனதிடமாய், தானுய்-தன்மயமாய், கோதிலதாம்-குற்றமில்லாததான, வீடெனும்பேர் கூறவற்றாம் - மோட்சமென்னு நாமத்தினுற் சொல்லத்தக்கதாம்.

எ - து. வேதமார்க்கத்தின்படி கருமநிறைவேற்றினபின்புதுன் பத்தினுல் வாய்மூடாமல் அழுகின்ற தம்பியை வந்தடைந்து பூரண ஞானத்தையுடைய புண்ணியனுனவன்பாவனனைப்பார்த்து, மனதை வருத்துகின்ற துன்பத்தைக்குழந்தாய்! நீயேனீக்கவில்லை பொறுமை மிகுந்த உனது நந்தையானவர் உனது மாதாவோடும், அமைந்திருக் கின்ற இடத்தின் சிறப்பைக்கேட்பாய். அற்பமு மகத்து மென்பதி ன்று எப்போதும் தனதிடமாய தன்மயமாய் குற்றமில்லாததான மோட்சமென்னு நாமத்தினுற் சொல்லத்தக்கதாம்—எ-ம்.

ப-ம். அணுத்துவம் மகத்துவமில்லையென்பார், குறைவு நிறைவில தென் றும், தானேதானுய் விளங்குகின்றதுவீடென்பார், தனதாய்த்தானுயென்றுங் கூறினர். (41)

## வீட்டினதுஇலக்கணங்கூறி அஃது உறுதிபயடு நிமித் தஞ் சநநபரம்பரையை அறிவிக்கத் தொடங்குதல்.

அனைவருக்கு மேவுமிட வதுவே யாகு மறிஞருக்கு மெய்யுருவ மதுவே யாகுந், தனையகலா வப்பதத்தில் வாழுந்தாதைதனைநோக்கி த்தளருமது தகவோ தம்பி, துனைபுனலி னோட்டத்துக் கெய்தும் பள்ளத் தொகுதிபோற் பிறவிதொறுந் தொடர்பாய்ப் போன, வினை யுறுநின் றாய்தந்தைக் கிலக்கமுண்டோ மனைமக்கள் சுற்றமொருமட் டுண் டாமோ.

இ - ள். அனைவருக்கும் - யாவருக்கும், மேவுமிடமதுவேயாகும் - அடை யத்தக்கவிடம் அப்பதமேயாகும், அதுவே அறிஞருக்குமெய்யுருவமாகும்-அது வே ஞானவான்களுக்குத் தத்துவசொரூபமாயிருக்கும், தனையகலா - தன்னை விட்டு நீங்காத, அப்பதத்தில் - அப் (பரம) பதத்தில், வாழுந்தாதை தனைநோ க்கி - வாழாநின்ற பிதாவைப்பார்த்து, தம்பிதளருமதுதகவோ - தம்பிநீ தளர் வடைவதுஞாயமோ, துனைபுனலினோட்டத்துக்கு, ஆற்றினீரோட்டத்துக்கு, எய்தும்பள்ளத்தொகுதிபோல் அடையும் பள்ளத்தின் திரளைப்போல, பிறவி தொறும் - சநநங்கடோறும், தொடர்பாய்ப்போன - தொடர்பாய் நீங்கின, வினையுறுநின்றாய் தந்தைக்கு - பெற்றவனது மாதாபிதாக்களுக்கு, இலக்கமு ண்டோ - கணக்குண்டோ, மனைமக்கள் சுற்றம - மனைவிபுத்திரர் (முதலிய) உறவினருக்கு, ஒருமட்டுண்டாமோ - ஓரளவுண்டாமோ-எ-று.

எ - து, யாவருக்கும் அடையத்தக்கவிடம் அப்பதமேயாகும் அதுவே ஞானவான்களுக்குத் தத்துவசொரூபமாயிருக்கும். தன்னை விட்டு நீங்காத அப்பரம பதத்தில் வாழாநின்ற பிதாவைப்பார்த்துத் தம்பி நீதளர்வடைவது ஞாயமோ? ஆற்றினீரோட்டத்துக்கு அடையும் பள்ளத்தின் திரளைப்போல சநநங்கடோறும் தொடர்பாய் நீங்கின. பெற்ற உனது மாதாபிதாக்களுக்குக் கணக்குண்டோ மனைவிபுத்திரர் முதலிய உறவினருக்கு அளவுண்டாமோ—எ-ம்.

ப-ம். பரமாநந்தமே ஆத்மாதாரமாமென்பார், அனைவருக்கு மேவுமிடமதுவென்றும், அவ்வாநந்தமே ஞானத்திற்கு உருவமாமென்பார். அறிஞருக்கு மெய்யுருவம் அதுவேயென்றும், தானாய் விளங்குஞ்சத்தென்பார், தனையகலா அப்பதமென்றுங்கூறினர். (42)

## சநநத்தின் பந்துக்களுக்கு அளவு இன்றெனல்.

பருவங்க டோறும்பெரிய வனத்திற் காய்க்கும் பழங்கள்போற் பவங்கடோறும் பரந்த சுற்றங், கருதுங்கா லிறந்தவவர்க் கிரங்க வேண்டிற் கற்பமள வலறினுமோர் கரையுண் டாமோ, சொருபமிலா வஞ்ஞானக் கானன் மேட்டிற் றொடர்ந்தவா தனைக்கோடைச் சுழல் வெங் கானற், பெருகுநீர்ச் சுகாசுகமாந் திரைகண் மோதிப்பேதமொரு கரையினறிப் பிறழு மன்றே.

இ - ள். பருவங்கடொறும் - காலங்கள்தோறும், பெரியவனத்தில் மகா அடவியில், காய்க்கும் பழங்கள்போல் - காயக்கின்ற கனிகளைப்போல, பவங்கடொறும் - சநநங்கள்தோறும், பரந்தசுற்றம் - மிகுந்தஉறவினர்களை, கருதுங்கால் - நினைக்கின்றகாலத்தில், இறந்தவவர்க்கு - மரணமடைந்தஅவர்களுக்கு, இரங்கவேண்டில்-விசனப்படவேண்டினல், கற்பமளவலறினும்- கற்பகாலமட்டுங் கதறினுலும், ஓர் கரையுண்டாமோ - ஒரு வரம்புண்டாயிருக்குமோ, சொரூபமிலா - உருவமில்லாத, அஞ்ஞானககானன்மேட்டில் - அறியாமையென்னுங்கானல்திடலில், தொடர்ந்தவாதனைக்கோடை தொடர்ந்து வாராநின்ற வாசனையென்னும் வேனிற்காலத்தில், சுழல்வெங்கானற் பெருகுநீர் - சுழலுகின்ற வெவ்விய கானற்பிரவாகசலமானது, சுகமாந்திரைகண்மோதி - சுகதுக்கமென்னு அலைகளையடித்துக்கொண்டு, பேதமொருகரையின்றிப்பிறழும்-வேற்றுமையோர் வரம்பில்லா மற்பிறளும்---எ-று.

எ — து, காலங்கள்தோறும்மகா அடவியில்காய்க்கின்றகனிகளைப்போல சநநங்கள் தோறும் மிகுந்த உறவினர்களை நினைக்கின்றகாலத்தில் மரணமடைந்தவர்களுக்கு விசனப்படவேண்டினுல் கற்பகால

மட்டுங் கதறினும் ஒரு வரம்புண்டாயிருக்குமோ? உருவ மில்லாத அறியாமையென்னுங் கானல் திடலில் தொடர்ந்து வாராநின்றவாசனை யென்னும் வேனிற்காலத்தில் சுழலுகின்றவெவ்விய கானற் பிரவாக சலமானது, சுகதுக்கமென்னு அலைகளை யடித்துக்கொண்டு வேற்று மையோர் வரம்பில்லாமற்பிரழும்—எ-ம். (43)

## பாவனையே சுகதுக்கமாம் எனல்.



இல்லுறவு பகைநேயங் கோபமாசை யிழிவுயர்வா திகள்வடி வ யெழுந்த ஞாலம், புல்லுறுதன் ஞமாத் திரத்தினாலே பொலிந்து விரிகின்றதலாற் புறனிலுண்டோ, நல்லுறவா நினைத்திடினல் லுற வே யாவர் நண்ணாராய்ப் பாவிக்கி னண்ணாரவர், கொல்லுறுநஞ் சமுதிரண்டின் குணங்கள் போலுங் குறித்திடுபா வனைக் கட்டுக்கொ லைந்தா லுண்டோ.

இ - ள். இல்லுறவு - மனைவிமுதலிய பந்துவும், பகைநேயம் - துவேஷ முஞ் சிநேகமும், கோபமாசை - வெறுப்பு விருப்பும், இழிவுயர்வாதிகள் - தா ழ்வு மேன்மை முதலியவைகளையே, வடிவாயெழுந்தஞாலம் - உருவமா யுண் டான சகமானது, புல்லுறுதன்ஞமாத்திரத்தினால் - பொருந்திய தனதுபெ யர் மாத்திரனல், பொலிந்து விரிகின்றதலால் - மிகுந்து பாவுகின்றதே யல்லா மல், புறனிலுண்டோ - வேறொன்றினலுண்டாமோ, நல்லுறவாநினைத்திடில் - நல்லபந்துவாக நினைத்தால், நல்லுறவேயாவர் - நல்லுறவே யாவார்கள், நண் ணாராய்ப்பாவிக்கில் - பகைவராகநினைத்தால், நண்ணாரவர் - பகைவராவார் கள், கொல்லுறு நஞ்சு - கொல்லுகின்ற விஷமும், அமுது - (பிழைப்பிக்கின்ற) அமுதமுமாகிய, இரண்டின்குணங்கள் போலும் - இரண்டின் குணங்களைப்போ லவும், குறித்திடு பாவனைக்கட்டு - குறித்திடுகின்றபாவனுபந்தமானது, கொலை ந்தாலுண்டோ - கெட்டாலுண்டாகுமோ - எ - று.

எ - து. மனைவிமுதலியபந்துவும், துவேஷமுஞ்சிநேகமும், வெ றுப்பு விருப்பும், தாழ்வுமேன்மை முதலியவைகளையே உருவமாயுண் டான சகமானது பொருந்திய தனதுபெயர் மாத்திரத்தினல்மிகுந்து பாவுகின்றதே யல்லாமல்வேறொன்றினல் உண்டாமோ? நல்லபந்து வாக நினைத்தால் நல்லுறவேயாவர்கள், பகைவராக நினைத்தால்பகை வராவார்கள். கொல்லுகிற விடமும் பிழைப்பிக்கின்ற அமுதமுமாகிய இரண்டின்குணங்களைப்போலவும் குறித்திடுகின்ற பாவனுபந்தமான துகெட்டாலுண்டாகுமோ—எ-ம்.

## பேதபாவத்தை அபேதஞானத்தைக்கூறல்.

ஒன்றிலே தோன்றியனைத் துருவ மான வுணர்வுக்குப் பகையுற வென் றுரைப்ப தெங்ஙன், நின்றியொழி தசைபுண்ணீர் தோல்கண் மேய்ந்த வெலுப்புப்பஞ் சரந்தன்னி லியாமா ரென்று, நின்றிவனீ நின்மனத்தா னினைந்து நோக்காய் நிமலமாம் பரமவிழிநெறியாநோக்கிற், பொன்றுதுயர் நீயில்லை நானுமில்லைப் புண்ணியபா வனனெனல்போய்ப் போதந் தோன்றும்.

இ - ள். ஒன்றிலேதோன்றி - ஒன்றான (ஆத்மாவில்) உண்டாய், அனைத்துருவமான - சகல வடிவங்களுமாகிய, உணர்வுக்கு - அறிவுக்கு, பகையுறவென்று - பகையென்றும் உறவென்றும், உரைப்பதெங்ஙன் - சொல்லுவதெப்படி, இன்றியொழி - இல்லாமற்கெடுக்கின்ற, தசை - ஊன்களினாலும், புண்ணீர் உதிரங்களினாலும், தோல்கள் - சருமங்களினாலும், மேய்ந்த - கட்டியிருக்கின்ற, எலுப்புப்பஞ்சரந்தன்னில் - அஸ்திக்கூடான சரீரத்திலிருக்கின்ற, இயாமாரென்று - நாமாரென்று (விசாரிக்கின்), நின்றவனீ - இருந்தவனீயே, நின்மனத்தால் - உன்மனதினால், நினைத்து நோக்காய் - சிந்தித்துப் பார்ப்பாய், நிமலமாம்பரமவிழி - மாசற்ற பிரமதிருஷ்டியினது, நெறியானோக்கில் - கிரமமாகப்பார்த்தால், பொன்று துயர் நீயுமில்லை - நசிக்கின்றதுன்பமுள்ள நீயென்பதுமில்லை, நானுமில்லை - நானென்பதுமில்லை, புண்ணியபாவன னெனல்போய் - புண்ணியனென்றும்பாவனென்றுஞ்சொல்லப்பட்டனாமும்போய், போதந்தோன்றும் ஞானந்தோற்றும்—எ-று.

எ - து. ஒன்றான ஆத்மாவிலுண்டாய் சகலவடிவங்களுமாகிய அறிவுக்குப் பகையென்றும் உறவென்றும் சொல்லுவதெப்படி? இல்லாமற் கெடுக்கின்ற ஊன்களினாலும், உதிரங்களினாலும், சருமங்களினாலும் கட்டியிருக்கின்ற அஸ்திக்கூடான சரீரத்திலிருக்கின்ற நாமாரென்றுவிசாரிக்கின் இருந்தவனீயே உன்மனதினால்சிந்தித்துப்பார்ப்பாய். மாசற்ற பிரமதிருஷ்டியினதுகிரமமாகப்பார்த்தால் நசிக்கின்றதுன்பமுள்ளநீயென்பதுமில்லை. நானென்பதுமில்லை. புண்ணியனென்றும்பாவனென்றுஞ் சொல்லப்பட்ட நாமும்போய் ஞானந்தோற்றும்.

## சநநமித்தையாமென்று அறிவிக்கும் நிமித்தம் அச் சநநாந்தரங்களைக் கூறல்.

---

எகிபதீ வுகடோறும் பிறந்தசென்ம மெள்ளவொண்ணு மின்னுவற் பெருந்தீ வத்திற், கோகிலமாய் முன்பிறந்தாய் விலங்குமேகங் குன்றுமா மூர்வனபுட் குலங்க டம்மிற், போகியசென் மத்தி ராகுதி புகலவொண்ணுப் பொருந்துமவற் றுன்கிளையாய்ப் பொ[illegible] கேள்

லாம், ஆகுலமுற் றிலயென்ன யவற்றின் மாட்டோ வனந்ததே சப் பிறவி யறையக் கேளாய்.

இ - ள். ஏகிய தீவுகடோறும்-போனதீவுகள்தோறும், பிறந்தசென்மம் (நீ) செனித்த சென்மமானது, எண்ணவொண்ணு - எண்ணமுடியாது, இன் னுவற்பெருந்தீவத்தில் - இந்த நாவலென்னு மகாதீவில், முன்கோகிலமாய்ப் பிறந்தாய் - முன்னங் குயிலாகப்பிறந்தாய், விலங்கு - (பின்பு) மிருகங்களும், மேகம் - மேகங்களும், குன்று - மலைகளும், மரம் - விருட்சங்களும், ஊர்வன- ஊர்வனங்களும், புட்குலங்கள் - பறவையினங்களுமாகிய, தம்மில் - இவைக ளிடத்தில், போகிய சென்மத்தொகுதி - கழிந்தபிறப்பின் திரளானது, புகல வொண்ணு - சொல்லமுடியாது, பொருந்து மவற்று - பொருந்தாநின்றஅவை களில், உன்கிளையாய்ப்போனூர்க்கெல்லாம் - உனது உறவினர்களாய் இறந்து போனவர்களுக்கெல்லாம், நீ யாகுலமுற்றிலயென்-நீ விசனப்படாததென்ன, அவற்றின்மட்டோ - அதுமட்டுந்தானே, அனந்த தேசப்பிறவி-இன்னம் அள வற்ற தேசங்களிற் செனித்த பவங்களை, அறையக்கேளாய் - சொல்லக்கேட் பாய்-எ-று.

எ - து. போனதீவுகள்தோறும் நீசெனித்த சென்ம மானது எண்ணமுடியாது. இந்த நாவலென்னு மகாதீவில் முன்னங் குயிலாக ப்பிறந்தாய். பின்புமிருகங்களும், மேகங்களும், மலைகளும், விருட்சங் களும், ஊர்வனங்களும், பறவையினங்களுமாகிய இவைகளிடத்தில் கழிந்த பிறப்பின் திரளானது சொல்லமுடியாது. பொருந்தாநின்ற அவைகளில் உனது உறவினர்களாய் இறந்துபோனவர்களுக்கெல்லாம் நீவிசனப்படாததென்ன? அதுமட்டுந்தானே இன்னம் அளவற்றதே சங்களிற் செனித்த பாவங்களை சொல்லக்கேட்பாய்-எ-ம். (46)

கோசலத்துந் தெசார்வணத்தும் பௌண் டரத்துங் குச்சரத் துந் துழாரத்துங் கோக னத்தும், போசலத்து மேகையத்துஞ்சாளு வத்தும் பூபதியாய் வானரமாய் புழுவாய்ப் புல்வாய், மாசலத்திற் கா ண்டமாய்ப் பதங்க மாகி மாதுணமாய் வேசரியாய் மட்டில் சென்ம, நீசகல வாத்தையாற் பிறந்தபோதி னின்கிளைஞர்க் கிரங்காத நீதி யெ ன்னே.

இ - ள். கோசலத்தும் - கோசலதேசத்திலும், தெசார்ணவத்து - தெசா ர்ணவதேசத்திலும், பௌண்டரத்தும் - பௌண்டரதேசத்திலும், குச்சரத் தும் குச்சரதேசத்திலும், துழாரத்தும்-துழாரதேசத்திலும், கோகனத்தும்- கோகனதேசத்திலும், போசலத்தும் - போசலதேசத்திலும், ஏகையத்தும்- ஏகையதேசத்திலும், சாளுவத்தும் - சாளுவதேசத்திலும், பூபதியாய் - அரச

னாகவும், வானரமாய் - குரங்காகவும், புழுவாய் - கிருமியாகவும், புல்வாய்- கலைமானாகவும், மாசலத்திற் கரண்டமாய் - பெருநீரில் நீர்க்காக்கையாகவும், பதங்கமாகி - பட்சியாகவும், மாசுணமாய் - சற்பமாகவும், வேசரியாய் - கழுதையாகவும், மட்டில்சென்மம் - அளவற்ற பிறவிகளை, நீ சகலவாதனையால் - நீ சமஸ்தவாசனைகளினால், பிறந்தபோதில் - செனித்தபோதில் (உண்டாகிய,) கின்கிளைஞர்க்கு - உனது உறவினர்க்கு, இரங்காதநீதியென்னே - விசனப்படாத ஞாயமென்ன-எ-று.

எ - து. கோசலதேசத்திலும், தெசார்ணவதேசத்திலும், பௌண்டா தேசத்திலும், குச்சா தேசத்திலும். துமார தேசத்திலும், கோகன்னதேசத்திலும், போசலதேசத்திலும், எகையதேசத்திலும், சாளுவதேசத்திலும். அரசனாகவும், குரங்காகவும், கிருமியாகவும், கலைமானாகவும், பெருநீரில் நீர்க்காக்கையாகவும், பட்சியாகவும், சற்பமாகவும், கழுதையாகவும், அளவற்ற பிறவிகளை நீ சமஸ்த வாசனைகளினால் செனித்தபோதிலுண்டாகிய உனது உறவினர்க்கு விசனப்படாத ஞாயமென்ன—எ-ம். (47)

## இச் சநநமரணமற்ற ஆத்மாவைத் தெரிசிக்கவேண்டுமெனல்.

அளவிறந்த பிறவிதொறும் பிறந்தோர்க் கெல்லா மன்னைதாதையையெண்ணி லகன்ற கானிற், கிளர்மரங்க டருஞ்சருகை யெண்ண வற்றுங் கேதமுறக் கணக்கில்லைக் கேளாய் மைந்தா, தளர்வின்றிப்பாவாபா வனைக ளின்றிச் சராமரண மற்றவுனைச் சங்கியாதே, உளமுறநோக் காய்துயர்விட் டஞ்ஞா னத்தை யொழித்துணரி லுள்ளபடி யுன்னைக் காண்டி

இ - ள். அளவிறந்த பிறவிதொறும் - அளவற்ற சநநங்கடோறும், பிறந்தோர்க்கெல்லாம் - செனித்தவர்க்கெல்லாம், அன்னை தாதையையெண்ணில்- மாதாபிதாக்களை எண்ணுமிடத்தில், அகன்றகானில் - விசாலமானவனத்தில், கிளர்மரங்கடருஞ்சருகை - நெருங்கிய விருட்சங்கள் கொடுக்கின்றசருகை, எண்ணவற்றும் - எண்ணினதுக்கொப்பாம், கேதமுறக்கணக்கில்லை - துன்பமடையஞாயமில்லை, கேளாய் மைந்தா - கேள் குழந்தாய், தளர்வின்றி - தளர்ச்சியில்லாமல், பாவாபாவனைகளின்றி - பாவமும் அபாவமுமில்லாமல், சராமரணமற்ற - சரையுமரணமுமில்லாத, உனைச் சங்கியாது - உன (தாத்மசொரூபத்) திற்றடையின்றி, உளமுறநோக்காய் - மனம் பொருந்தப்பார்ப்பாய், துயர்விட்டு - துன்பத்தைவிட்டு, அஞ்ஞானத்தையொழித்துணரில் - அறியாமையை நீக்கி அறிவில், உள்ளபடி யுன்னைக்காண்டி - உள்ளபடியாக உனது (ஆத்மசொரூபத்தைக்) காண்பாய்-எ-று.

எ - து. அளவற்ற சநநங்கள் தோறும் செனித்தவர்க் கெல்லாம் மாதாபிதாக்களை எண்ணுமிடத்தில் விசாலமான வனத்தில் விளங்கிய விருட்சங்கள் கொடுக்கின்ற சருகை எண்ணினதுக்கொப்பாம். துன்பமடைய ஞாயமில்லை. கேள் குழந்தாய் தளர்ச்சியில்லாமல் பாவமும் அபாவமுமில்லாமல் சனையுமரணமுமில்லாத உனது ஆத்மசொரூபத்தில் தடையின்றி மனம்பொருந்தப் பார்ப்பாய். துன்பத்தைவிட்டு அறியாமையைநீக்கி அறிவில் உள்ளபடியாக உனதுஆத்மசொரூபத்தைக்காண்பாய்—எ—ம். (48)

## தன்னைத்தெரிசிக்கில் ஆநந்தவடிவம் ஆவாயெனல்.



உன்னுருவை நீகாணு ஞானக் கண்ணு லொன்றலா வாசையெனுங் காச மூறு, மன்னதுதீர்த் துளக்கமலத் துள்ளே தொய்ய வறிவுடைய வுன்மனத்தா லுன்னு லுன்னை, இன்னபடி யெனநோக்கி மயக்க மெல்லா மிறையுமற வொழித்தின்ப மெய்தி நிற்பாய், பின்னவனே யென்முன்னே னுரைத்தா னென்று பெருந்தகைக்கு வசிட்ட முனி பேசி னானே.

இ - ள். உன்னுருவை - உனது (ஆத்ம) சொரூபத்தை, நீ காணுஞானக் கண்ணில் - காண்கின்ற ஞானதிருஷ்டியில், ஒன்றலா வாசையெனும் - பலவான இச்சையென்னும், காசமூறும் - படலமுண்டாகும், அன்னது தீர்த்து - அதைநீக்கி, உளக்கமலத்துள் - இருதயத்தாமரையில், தொய்ய வறிவுடைய - சொச்சமான உணர்வையுடைய, உன்மனத்தால் - உனதுமனதினால், உன்னு லுன்னை - உன்னாலுனது சொரூபத்தை, இன்னப்படி யெனநோக்கி-இப்படிப்பட்டதென்றுபார்த்து, மயக்கமெல்லாம் - மயக்கங்களனைத்தையும், இறையுமறவொழித்து - இறையளவேனுமில்லாமற்கெடுத்து, இன்பமெய்தி நிற்பாய் - நிருவாணசுகத்தை யடைந்திருப்பாய், பின்னவனேயென - தம்பியேயென்று, முன்னோனுரைத்தானென்று - தமையன்சொன்னானென்று, பெருந்தகைக்கு - (ஸ்ரீராமனென) அரசனுக்கு, வசிட்டமுனி பேசினான் - வசிட்டமுனி சொன்னான்—எ-று.

எ - து. உனது ஆத்ம சொரூபத்தை நீ காண்கின்ற ஞானதிருஷ்டியில் பலவான இச்சையென்னும் படலமுண்டாகும். அதைநீக்கி இருதயத் தாமரையில் சொச்சமான உணர்வையுடைய உனது மனதினால் உன்னாலுனதுசொரூபத்தை இப்படிப்பட்டதென்று பார்த்து மயக்கங்களனைத்தையும் இறையளவேனு மில்லாமற்கெடுத்து நிருவாண சுகத்தை யடைந்திருப்பாய். தம்பியேயென்று தமையன்சொன்னானென்று ஸ்ரீராமனென அரசனுக்கு வசிட்டமுனி சொன்னான்.

இ-ங-க-ம். மாதாபிதாக்கள் பிரிவிற்படுந் துன்பத்தை முன்னிட்டவர்களும், நாமும் மித்தையே யாமென் றறிவித்ததையறிந்த ஞானமே சர்வமுமாய் விளங்குகின்ற நமது ஆத்ம சொரூபமாமென்று ஆநந்திக்கும்படி அனுக்கிரகித்ததாம். (49)

புண்ணியபாவனன்கதை முற்றிற்று.

ஆ. கதை -20க்கு கவிதை 851.

# மாவலிகதை.

அவதாரிகை.

முன்கதையில் திரிசியத்தில் அகம்பாவ நிவிர்த்தியையுந் திருக்குவில் அகம்பாவத்தையுஞ் செய்வதனுற் சர்வமுந் தன்மயமாய் விளங்கும்அனுபவத்தைக் கூறி மேல்நிட்காமபுண்ணியத்தினுல் விடயாநந்தமிகுதி பிரமாநந்தத்தின்பொருட்டாகுமென்பதை அறிவிக்கு நிமித்தம் மாவலிகதையை நிரூபிக்கிறுர்.

பாவனன் ஞானமடைதல்

வேறு.

புண்ணிய னுணர்ந்த ஞானம் பொலிந்தபா வனன்ற னுள்ளம்
நண்ணிய விடியற் கண்ட ஞாலம்போல் விளங்கித் தோன்ற
திண்ணிய விருவர் தாமுஞ் சித்தராய் விவேக ஞானத்
தெண்ணிய கரையை யெய்தி யியம்பிய வனத்தி ருந்தார்.

இ-ள். புண்ணியனுணர்ந்த - புண்ணியமுனிவன்போதிக்க, ஞானம் பொலிந்த - ஞானம் பிரகாசித்த, பாவனன்றனுள்ளம் - பாவனனுடைய இருதயமானது, நண்ணிய விடியற்கண்ட - பொருந்திய வைகறைக்காலங்கண்ட, ஞாலம்போல் - சகத்தைப்போல, விளங்கித்தோன்ற - பிரகாசித்துத்தோற்ற, திண்ணிய விருவர்தாமும் - திடஞானமுடையஇரண்டுபேர்களும், சித்தராய் - சித்த புருடர்களாய், விவேகஞானத்து - விவேகஞானத்தினது, எண்ணிய கரையையெய்தி - சிந்தித்த ஆத்மஞானத்தையடைந்து, இயம்பியவனத்திருந்தார் - முன்சொல்லிய வனத்தில் வசித்தார்—எ-று.

எ-து. புண்ணிய முனிவன்போதிக்க ஞானம் பிரகாசித்த பாவனனுடைய இருதயமானது பொருந்திய வைகறைக்காலங்கண்ட சகத்தைப்போல பிரகாசித்துத்தோற்றத்திடஞானமுடைய இரண்டு பேர்களும் சித்தபுருடர்களாய் விவேகஞானத்தினது சிந்தித்த ஆத்மஞானத்தை யடைந்து முன்சொல்லிய வனத்தில் வசித்தார்கள்-எ-ம்.

## விதேகமுத்தியடைதல்.

வேண்டிய கால மெல்லாம் விநோதமாம் விளையாட் டெய்தி
ஈண்டிய காலஞ் செல்ல யாக்கைநீர் வீட்டி லெய்தி
தூண்டிடு திரிநெய் யில்லாச் சுடர்கள்போற் சாந்த முற்றார்
மாண்டிடு முயிர்கட் கெல்லா மாபிந்த மரபு போலாம்.

இ - ள். வேண்டியகாலமெல்லாம் - (தங்களுக்கு) வேண்டிய காலங்கள் அனைத்தும், விநோதமாம் விளையாட்டெய்தி - விநோதமாக விளையாடி, ஈண் டிய காலஞ்செல்ல - வெகுகாலஞ்செல்ல, ஆக்கைநீர் வீட்டிலெய்தி - விதேக முத்தியை அடைந்து, தூண்டிடுதிரிநெய்யில்லா - தூண்டப்பட்ட திரியும் நெய்யுமில்லாத, சுடர்கள்போல்-தீபங்களைப்போல, சாந்தமுற்றார் - உபசாந்த மடைந்தார்கள், மாண்டிடு முயிர்கட்கெல்லாம் - மரணமடைகின்ற சீவர்க ளனைவர்க்கும், மாபிந்த மரபுபோலாம் - குணங்கள் இம்முறையைப்போல வாகும்—எ-று.

எ — து. தங்களுக்கு வேண்டிய காலங்களனைத்தும் விநோத மாக விளையாடி வெகுகாலஞ்செல்ல விதேக முத்தியையடைந்து தூண்டப்பட்ட திரியுநெய்யுமில்லாத தீபங்களைப்போல உபசாந்த மடைந்தார்கள். மரணமடைகின்ற சீவர்களனைவர்க்கும் குணங்கள் இம்முறைமையைப்போலவாகும்—எ-ம்.

(இ-உ-கம்.) இவ்விருவருஞ் சீவன்முத்தராயிருந்து விதேக முத்தியை அடைந்தன ரென்பதாம். (2)

## சர்வமுந் தனது பிரிய வடிவமாமென்று அறிவித்து அவ்வனுபவமா உதிப்பதற்கு இச்சாந்தி யாகம் வேண்டு மெனல்.

அனந்தமாம் பிறப்புற் றோருக் ககிலமு மயலன் றாகிற்
சினந்திட னயத்தல் வேண்டா வாதலாற் செறிந்த வாசை
கனந்தனை விடுவ தல்லாற் கதித்துற வளர்க்க லாகா
மனந்தனில் வளர்க்கிற் சிந்தை வன்னிக்கு விறகா மன்றே.

இ - ள். அனந்தமாம் பிறப்புற்றோருக்கு - அளவற்ற சநந மடைந்தவர்க ளுக்கு, அகிலமு மயலன்றாகில் - சமஸ்தமும் பந்துவாயிருக்குமானால், சினந் திடனயத்தல்வேண்ட - பகைத்தலும் விரும்புதலும் வேண்டுவதென்ன, ஆத லால் - ஆகையினால், செறிந்தவாசை - மிகுந்த ஆசையின், கனந்தனை விடுவ தல்லால்-பாரத்தை விடுவதேயன்றி, கதித்துற வளர்க்கலாகா - பெருகவளர்க் கக்கூடாது, மனந்தனில் வளர்க்கில் - மனதில் ஆசையை வளர்த்தால், சிந் தைவன்னிக்கும்-சிந்தனையென்னும் அக்கினிக்கு, விறகாம் - (ஆசையானது) விறகாகும்—எ-று.

எ — து. அளவற்ற சுகநமடைந்தவர்களுக்குச் சமஸ்தமும் பந்துவாயிருக்குமானால் பகைத்தலும் விரும்புதலும் வேண்டுவதென்ன? ஆகையினால் மிகுந்த ஆசையின் பாரத்தை விடுவதேயன்றி பெருக வளர்க்கக்கூடாது. மனதிலாசையை வளர்த்தால் சிந்தனையென்னு மக்கினிக்கு ஆசையானது விறகாகும்—எ - ம். (3)

## அவ் விச்சாத்யாகத்திற் சுகம் உதிக்குமெனல்.

——()——

இச்சையாம் விறகு மாண்டா லெண்ணமாம் வன்னி மாளுமெ
நிச்சய மாகுந் தேயத் தியாகமா நெடுந்தே ரேறி
மெச்சிய வுதாரக் கண்ணால் வேட்கையான் மிகவும் வாடுங்
கொச்சைஞா லத்தை நோக்கிக் குறைவற விருப்பாய் தீரா.

இ - ள். இச்சையாம் விறகுமாண்டால்-ஆசையென்னு விறகு நசித்தால்' எண்ணமாம் வன்னிமாளும் - சிந்தையென்னும் அக்கினி நசிக்கும், நிச்சயமாகும் - இதுவுண்மையாகும், தேயத்தியாகமாம் - தேயத்தியாகமாகிய, நெடுந்தேரேறி - மகாரதத்திலேறி, மெச்சிய வுதாரக்கண்ணால் - சகலருந் துதித்த உதாரமான (கருணை) திருஷ்டியினால், வேட்கையான் மிகவும்வாடும் ஆசையினான் மிகவும் வாடாநின்ற, கொச்சை ஞாலத்தை நோக்கி - அற்பமான சகத்தைப்பார்த்து, தீரா தீரத்தையுடைய ஸ்ரீராமா, குறைவற விருப்பாய்-குறைவில்லாமலிருப்பாய்—எ-து.

எ - து. ஆசையென்னும் விறகு நசித்தால் சிந்தை யென்னும் அக்கினி நசிக்கும். இது உண்மையாகும். தேயததியாகமாகிய மகாரதத்திலேறி சகலருந்துதித்த உதாரமான கருணைதிருஷ்டியினால் ஆசையினான் மிகவும் வாடாநின்ற அற்பமான சகததைப் பார்த்து தீரத்தையுடைய ஸ்ரீராமா! குறைவில்லாம விருபபாய—எ-ம. (4)

இதுவுமது.

வேறு.

நொய்ய தாயொரு மயலின்றி நோயெலா நீங்கி
மெய்ய தாகிய பிரமமா நிலையிது வீரா
ஐய மின்றியிந் நிலையுறி லறிவில ரேனும்
மையன் மேவல ரிராமநீ யிவ்வகை வாழ்வாய்.

இ - ள். வீரா - ஸ்ரீராமா, நொய்யதாய் - சொச்சமாகியும், ஒருமயலின்றி- ஒருமயக்கமு மில்லாததாகியும், நோயெலாநீங்கி - வியாதிகளனைத்து மில்லாததாகியுமிருக்கின்ற, மெய்யதாகிய - சத்தியமான, பிரம்மாநிலையிது - பிரமமான நிச்சயமிதுவாகும், ஐயமின்றி - சந்தேகமில்லாமல், இந்நிலையுறில்-இந்த

நிலையை யடைந்தால், அறிவிலரேனும் - அறிவில்லாதவர்களாயினும், மையன் மேலவர் - மயக்கத்தை யடையார்கள், இராம - ஸ்ரீராமா, நீ யிவ்வகைவாழ் வாய் - நீ யிந்தப்பிரகாரம் வாழக்கடவாய்-எ-று.

எ-து. ஸ்ரீராமா! சொச்சமாகியும், ஒரு மயக்கமுமில்லாததா கியும், வியாதிகளனைத்தும் இல்லாததாகியும் இருக்கின்றசத்தியமான பிரமமான நிச்சயம் இதுவாகும் சந்தேகமில்லாமல் இந்த நிலையை யடைந்தால் அறிவில்லாதவர்களாயினும்மயக்கத்தை அடையார்கள். ஸ்ரீராமா! நீ யிந்தப்பிரகாரம் வாழக்கடவாய்—எ-ம்.

இ-ரு-க-ம். விடய இச்சையினது நீக்கத்திற் பிரமநிச்சயம் உதிக்குமென் பதாம், (5)

## இச்சை நீங்குதற்கு உரிய சகாயங்கூறல்.

---

நல்ல புந்தியும் விவேகமு மெனவிரு நண்பால்
அல்ல நீர்ந்திடு மொருவரை யெய்தினு மணுகிற்
சொல்லு பல்பொருட் சுற்றங்க டொடக்கறத் தீர்ந்து
புல்லு திண்மையி னுலன்றித் துயரெலாம் போகா.

இ-ள். நல்ல புந்தியும் - நல்லவறிவும், விவேகமும் - நல்ல விவேகமும், எனவிருநண்பால் - என்கின்ற இரண்டுநட்பினுல், அல்லநீர்ந்திடும் - துன்ப நீங்கும், ஒருவரையெய்தினு மணுகில்-ஒருவரையாவ தடைந்தாலும், சொல்லு பல்பொருள் - சொல்லப்பட்ட பலவஸ்துக்களையும், சுற்றங்கள் - உறவுகளை யும், தொடக்கறத்தீர்ந்து - தொடர்பில்லாமல் கெடுத்து, புல்லு திண்மையினு லன்றி-பொருந்துகின்ற தனது தயிரியத்தினுலல்லாமல், துயரெலாம் போகா-துன்பங்க ளனைத்து நீங்காவாம் —எ-று.

எ-து. நல்ல அறிவும் நல்ல விவேகமும் என்கின்ற இரண்டு நட்பினுல் துன்பநீங்கும். ஒருவரையாவது அடைந்தாலும் சொல்லப் பட்ட பலவஸ்துக்களையும் உறவுகளையும் தொடர்பில்லாமற் கெடுத்து பொருந்துகின்ற தனது தயிரியத்தினுல் அல்லாமல் துன்பங்கள் அனைத்து நீங்காவாம்—எ-ம். (6)

## நிராசையுள்ள மனதின் பெருமையைக் கூறல்.

---*---

மயலி லாமையா னூல்களான் மகத்துவ முதலாம்
உயர்கு ணங்களால் வருந்தியு மனத்தினை யுய்க்கில்
துயர்க ணீங்கழு வுலகுறு செல்வமுந் தொக்கு
பயன ளிக்கினு முயர்வுறு மனமெனப் பயிலா.

இ - ள். மயலிலாமையால் - வைராக்கியத்தினாலும், நூல்களால் - ஞான சாத்திரங்களினாலும், மகத்துவமுதலாம் - மகத்துவமுதலான, உயர்குணங்களால் - மேன்மையான குணங்களினாலும், வருந்தியும் - வருத்தப்பட்டு, மனத்தினையுய்க்கில்-மனதை ஆத்ம வாழ்வடையச்செய்தால், துயர்கணீங்கும் - துக்கங்கள்போகும், மூவுலகுறுசெல்வமும் - மூன்றுலகங்களிலுண்டான செல்வங்களும், தொக்கு - தொகுத்து, பயனளிக்கினும் - இலாபத்தைக் கொடுத்தாலும், உயர்வுறு மனமெனப்பயிலா - கைவல்லியத்தை யடைகின்ற மனதுக்கொப்பென்று சொல்லமாட்டார்கள்-எ-று.

எ - து. வைராக்கியத்தினாலும், ஞானசாத்திரங்களினாலும், மகத்துவமுதலான மேன்மையான குணங்களினாலும், வருத்தப்பட்டு மனதை ஆத்மவாழ்வடையச்செய்தால் துக்கங்கள் போகும். மூன்றுலகங்களிலுண்டான செல்வங்களும் தொகுத்து இலாபத்தைக் கொடுத்தாலும் கைவல்லியத்தை அடைகின்றமனதுக்கு ஒப்பென்று சொல்லமாட்டார்கள்—எ-ம். (7)

## மனதிற்குரிய இச்சாவநிச்சையின் பலாபலனைக்கூறல்.



மனநிறைந்திடி லமுதமாய் நிறைந்திடும் வையந்
தனது தாட்செருப் புலகெலாந் தோன்மூச்சுந் தரம்போற்
கனநிராசையா னிறையுநெஞ் சாசையிற் கவிழா
தினமு மாசையா னிறைமனங் குறைவென்றுந் தீரா.

இ - ள். தனது தாட்செருப்பு-தன் பாதத்திலிருக்கின்ற செருப்பானது உலகெலாம் - சகங்களனைத்தும், தோல்மூச்சுந்தரம்போல் - தோலால் மூடுந்தன்மையைப்போல, மனநிறைந்திடில் - மனது பூரணமானால், வையம் - சகமானது, அமுதமாய் நிறைந்திடும் - அமுதமாக நிறையும், கனநிராசையால்-கனமுள்ள நிராசையினால், நிறையுநெஞ்சு - நிறைந்த மனமானது, ஆசையிற் கவிழா - ஆசையின்மூழ்காது, தினமுமாசையா னிறைமனம் - எப்போதும் இச்சையினால் நிறைந்த மனமானது, குறைவென்றுந்தீரா - குறையெப்போதுந்தீராது-எ-று.

எ - து. தன் பாதத்திலிருக்கின்ற செருப்பானது சகங்களனைத்துந் தோலால் மூடுந்தன்மையைப்போல மனது பூரணமானால் சகமானது அமுதமாக நிறையும். கனமுள்ள நிராசையினால் நிறைந்த மனமானது ஆசையின் மூழ்காது. எப்போதும் இச்சையினால் நிறைந்த மனமானது குறை யெப்போதுந் தீராது—எ-ம். (8)



## இச்சையாற் கெடாத மனதின் உயர்வைக் கூறல்.

அகத்தி யன்கவர் கடலென நன்னெஞ்சை யழிக்கும்
மிகுத்த மாலிலா மனமென நிறைமதி விளங்காப்
பகுத்த பாற்கட னிறைவுறாப் பரிமளக் கோக
னகத்தி ருயகி திருமுக நலம்பெறத் தோன்றா.

இ - ள். அகத்தியன் கவர்கடலென - குறுமுனி நுகர்ந்த உததியைப் போல, நன்னெஞ்சையழிக்கும்-நல்லமனதைக் கெடுக்கின்ற, மிகுத்தமாலிலா மனமென - மிகுந்த ஆசையில்லாத மனதைப்போல, நிறைமதிவிளங்கா - பூரணசந்திரனும் பிரகாசியாது, பகுத்தபாற்கடனிறைவுறா - (சுகத்தைக்) கொடுத்த பாற்சமுத்திரமு நிறையமாட்டாது, பரிமளக்கோகனகத்திருயகி-வாசனை பொருந்திய தாமரையிலிருக்கின்ற இலக்குமி, திருமுகம் - சிறப்புள்ள முகமும், நலம்பெறத்தோன்றா - நன்மையாக வுண்டாகாது—எ-று.

எ - து. குறுமுனி நுகர்ந்த உததியைப்போல நல்ல மனதைக் கெடுக்கின்ற மிகுந்த ஆசையில்லாத மனதைப்போல பூரணசந்திரனும் பிரகாசியாது சுகத்தைக் கொடுத்த பாற்சமுத்திரமு நிறைய மாட்டாது. வாசனை பொருந்திய தாமரையிலிருக்கின்ற இலக்குமி சிறப்புள்ள முகமும் நன்மையாக வுண்டாகாது—எ-ம். (9)

## மனதிற்கு இச்சாபந்தம் நீங்கலே முத்தியாம் எனல்

மதியை மேகம்போல் வெண்டலச் சுதையினை மைபோல்
அதிக நன்னெஞ்சை யாசையாம் பேயழ கழிக்கும்
பொதியு மாலெல்லா நீக்கிவன் பவப்பயன் போக்கி
முதிர்ம னத்தின்மால் பிணிப்பறின் முத்திவே றுளதோ.

இ - ள். மதியைமேகம்போல் - சந்திரனை மேகமறைகின்றதுபோலும், வெண்டலச்சுதையினை-வெண்மையான இடத்தில் தீற்றிய சுண்ணச்சாந்தைக் (கெடுக்கும்), மைபோல் - மையைப்போலவும், அதிக நன்னெஞ்சை - மிகவு நல்லமனதை, ஆசையாம்பேய் - இச்சாபசாசமானது, அழகழிக்கும் - தேயசைக்கெடுக்கும், பொதியுமாலெலாநீக்கி - அடைந்த ஆசைகளனைத்தையுங் கெடுத்து, வன்பவப்பயன்போக்கி வலியஜனனத்தின் அச்சத்தைக் கெடுத்து, முதிர்மனத்தின் - பக்குவமானமனத்தின், மால்பிணிப்பறில் - ஆசைக்கட்டானது நாசமானால், முத்திவேறுளதோ - மோட்சம் வேறுண்டோ-எ-று.

எ - து. சந்திரனை மேகமறைக்கின்றதுபோலும், வெண்மையானவிடத்தில் தீற்றிய சுண்ணச்சாந்தைக் கெடுக்கும் மையைப்போல

வும், மிகவு நல்லமனதை இச்சாபசாசமான்து தேயசைக்கெடுக்கும். அடைந்த ஆசைகளனைத்தையுங் கெடுத்து வலிய சநநத்தின் அச்சத்தைக்கெடுத்து பக்குவமான மனத்தின் ஆசைக்கட்டானது நாசமானல் மோட்சம் வேறுண்டோ—எ-ம்.

இ-ரு-க-ம். மனமானது சிற்சுகமாய்ச்சக இச்சையை நீக்குதலேமோட்மாமென்பதாம். முன்கதையிற் கூறவேண்டிய இப்பத்துக்கவிதையை இந்நூலாசிரிய ரிக்கதையிற் கூறினதென்னவெனிற் சமாதிக்கருளிய இவ்விச்சாத்தியாகஞ் சகசத்துக்கு வரும்பொருட்டெனக்கொள்க. (10)

## இச்சையைச்சுருக்கிற் கெடுப்பதை அறிவித்து இஃது பெருக்கிற் கெடுப்பதையும அறிவிக்கத் தொடங்கல.



இன்ன தன்றெனி லிராகவ மாபலி யென்ன
நன்ன தாகிய புந்தியால் ஞானமே சேர்வாய்
அன்ன தேநல னென்றலு மனையதே தென்று
சொன்ன மாமுனி தன்னையே யிராமனுஞ் சொன்னான்.

இ - ள். இன்னதன்றெனில் - இத்தன்மை கூடாவிடின், இராகவ-ஸ்ரீராமா, மாபலியென்ன - மாவலியைப்போல, நன்னதாகிய புந்தியால் - நன்மையான புத்தியினால், ஞானமே சேர்வாய் - ஞானத்தையே யடைவாய், அன்னதே நலனென்றலும்-அத்தன்மையதே நன்மையென்று சொல்லவும், அனையதேதென்று - அப்படிப்பட்ட தெதுவென்று, சொன்னமாமுனிதன்னை-சொல்லிய மகாமுனியைப்பார்த்து, இராமனுஞ்சொன்னான் - ஸ்ரீராமனுங் கேட்டார்—எ-று.

எ - து இத்தன்மை கூடாவிடின் ஸ்ரீராமா. மாவலியைப்போல நன்மையான புத்தியினால் ஞானத்தையே யடைவாய். அத்தன்மையதே நன்மையென்று சொல்லவும், அப்படிப்பட்டதெதுவென்றுசொல்லிய, மகாமுனியைப்பார்த்து, ஸ்ரீராமனுங் கேட்டார்-எ-ம். (11)

## மாவலியின் பெருமை உரைத்தல்.



வினைய வள்ள லுக் கருந்தவ னுத்தரம் விளம்பும்
தனுது தோள்களா லுலகெலா மஞ்சுறச் சயித்தோன்
பினகி சார்ங்கியை முதலினர் தாழ்வுறப் பெரியோன்
அனுதி யாமெனப் பாதலத் தரசுசெய் யவுலன்.

இ - ள். வினயவள்ளலுக்கு - இப்படிகேட்ட உதாரமுள்ள ஸ்ரீராமனுக்கு, அருந்தவன் - அரியதவத்தையுடைய வசிட்டமுனி, உத்தரம் விளம்பும்-உத்த

ரஞ் சொல்லுவார், தனதுதோள்களால - தனது புயங்களினல், உலகெலா மஞ்சுறச்சயித்தோன் - சகங்களனைத்தும் நடுங்கும்படிச் சயஞ்செய்தவன், பிஞகி - ஈஸ்வரனும், சார்ங்கியை முதலினர்-விஷ்ணுமுதலிய சகலரும், தாழ் வுறப்பெரியோன் - தாழும்படி பெருமையுள்ளவன், அனுதியாமெனப் பாத லத்தரசு செய்யதுலன் - அநாதியாமெனக்கூறப் பாதாளலோகத்து அரசு செய்யுஞ் சமானமற்ற (அசுர) ராசன் —எ-று.

எ - து. இப்படிகேட்டஉதாரமுள்ள ஸ்ரீராமனுக்கு அரியதவத் தையுடைய வசிட்டமுனி உத்தரஞ்சொல்லுவார். தனது புயங்களி ஞல் சகங்களனைத்து நடுங்கும்படி சயஞ்செய்தவன். ஈஸ்வரனும் விஷ்ணுமுதலிய சகலரும் தாழும்படிப் பெருமையுள்ளவன், அநாதி யாமெனக்கூறப் பாதாளலோகதது அரசுசெய்யுஞ்சமானமற்ற அசுர ராஜன்—எ-ம். (12)

மாவலி தனித்திருத்தல்.

---

மாவலிப் பெயரா னுயர்விரோ சனன்மைந்தன்
ஆவ லிப்புறு கோடிபத் தாண்டர சானேன்
காவ லிற்றிகழ் மேருவின் சிரமணிக் கதுவுப
மேவ லிற்பொலி சாளர மேனில மேவி.

இ - ள். மாவலிபெயரான் - மகாபலிச் சக்கரவர்த்தியென்னு நாமமுடை யவன், உயர்விரோசனன்மைந்தன் - மேன்மையான விரோசனனுடைய புத் திரன், ஆ - ஆச்சரியம், வலிப்புறு - வலிமையுள்ள. பத்துகோடியாண்டு பத்து கோடிவருடம், அரசானேன் - இராசாவானவன், காவலிற்றிகழ் - காவலிஞ ல்விளங்குகின்ற, மேருவின்சிரம் - மகாமேருவினுடைய முடியிலிருக்கின்ற, மணிக்கதுவும் இரத்தினங்களை பதித்த, மேவலிற்பொலி - மேவுதற் கரிய பிரகாசம்பொருந்திய, சாளரம் - பலகணிகளையுடைய, மேனிலமேவி- மேல்வீடடைந்து — எ-று.

எ — து. மகாபலிச் சக்கரவர்த்தியென்னும் நாமமுடையவன், மேன்மையான விரோசனனுடைய புத்திரன், ஆச்சரியம்! வலிமை யுள்ள பத்துகோடிவருடம் இராசாவானவன். காவலினுல் விளங்கு கின்ற மகாமேருவினுடைய முடியிலிருக்கின்ற இரத்தினங்களைப் பதி த்த மேவுதற்கரிய பிரகாசமபொருநதிய பலகணிகளையுடைய மேல் வீடடைந்து—எ-ம்.

இ-ள-க-ம். புண்ணியபரிபாகத்திஞற் சித்தசுத்தியும், அச்சித்தசுத்தியாற் சாதன சதுஷ்டயமும், அச்சாதன சதுஷ்டயத்தான் முத்தியை யடைவதற்

சேதுவான ஆத்மவிசாரமும் உதித்து அதனால் அனித்திய வஸ்துவை நீங்கிக் கத் தொடங்கினதாம். (13)

## அரசை வெறுத்தல்.

ஒருப கற்றனி யிருந்தன னிவையிவை யுணர்ந்தான்
பெருகு போகங்கண் முனிந்தனன் பிறவியை நினைந்தான்
பொருவின் மூவுல கங்களிற் போகங்க ணெடுநாட்
பருக நல்குநம் பேரா சாலென்சொல் பயனே.

இ - ள். ஒருபகற்றனியிருந்தனன் - ஒருநாள் தனியேயிருந்தவனாய், இவை யிவையுணர்ந்தான் - இவையிவைகளை யெண்ணினான், பெருகுபோகங் கண் - மிகுந்த போகங்களை, முனிந்தனன்-வெறுத்து, பிறவியைநினைந்தான்-சம்சாரத்தை நினைத்தான், பொருவின்மூவுலகங்களில் - சமானமற்ற மூன்று லகங்களிலுள்ள, போகங்கள் - செல்வங்களை, நெடுநாட்பருக நல்கும் - வெகு காலமாய் அனுபவிக்கக்கொடுக்கின்ற, நம்பேராசால் - நமது மகாராசாங்கத்தி னால், என்சொல்பயன் - என்னபிரயோசனம் எ-று.

எ - து. ஒருநாள்தனியே யிருந்தவனாய் இவையிவைகளையெண் ணினான். மிகுந்த போகங்களைவெறுத்துச் சம்சாரத்தை நினைத்தான். சமானமற்ற மூன்றுலகங்களிலுள்ள செல்வங்களை, வெகுகாலமாய் அனுபவிக்கக் கொடுக்கின்ற நமது மகாராசாங்கத்தினால் என்ன பிர யோசனம்—எ—ம். (14)

## போகத்தை வெறுத்தல்.

——()——

எய்து போதினி லினியவா யெங்ஙனே யெனினும்
நொய்தி னீங்குமிப் போகத்தி னின்பமே நுவலின்
எய்த நோக்கிய வின்பமு நெருநல்போ லின்றுஞ்
செய்த செய்வதே யல்லது கண்டிலஞ் செயல்கள.

இ - ள். எய்துபோதினில் - அடைந்தகாலத்தில், இனியவாய் - இன்ப மாய், எங்ஙனேயெனினும் - எவ்விடத்திலானாலும், நொய்தினீங்கும் - அற்ப நேரத்தினீங்குகின்ற, இப்போகத்தின் - இச்செல்வத்தினது, இன்பமேநுவ லின் - இன்பத்தைச் சொல்லுமிடத்தில், எய்தநோக்கிய வின்பமும் - அடை யப் பார்க்கின்ற சுகமும், நெருநல்போல் - நேற்றைப்போல, இன்றும் - இன் றைக்கும், செய்தசெய்வதேயல்லது - செய்ததைச் செய்வதேயல்லாமல், செயல்கள் கண்டிலம் - (வேறு) செயல்களைப் பார்த்திலம்-எ-று.

எ – து. அடைந்தகாலத்தில் இன்பமாய் எவ்விதத்திலானும் அற்பநேரத்தினீங்குகின்ற இச்செல்வத்தினது இன்பத்தைச் சொல்லுமிடத்தில் அடையப்பார்க்கின்றசுகமும்நேற்றைப்போல இன்றைக்கும் செய்ததைச் செய்வதேயல்லாமல் வேறு செயல்களைப் பார்த்திலம்—எ-ம். (15)

## போக்கியத்தை வெறுத்தல்.

உண்ட வின்பமே மீளவு முண்கின்ற தொருநாட்
கண்ட காட்சியே மீளவுங் காண்கின்ற துவந்து
கொண்ட கோலமே மீளவுங் கொள்கின்ற தென்றால்
விண்ட மேலவர் நாணுறு தொழிவரோ வெறுத்து.

இ - ள். உண்டவின்பமே - புசித்தசுகமே, மீளவுமுண்கின்றது - திரும்பவும் புசிக்கப்படுகின்றது, ஒருநாட்கண்டகாட்சியே - ஒருநாட்காணப்பெற்ற காட்சியே, மீளவுங்காண்கின்றது - திரும்பவுங்காணப்படுகின்றது, உவந்து கொண்டகோலமே - மகிழ்ச்சியாகக்கொண்ட அலங்காரமே, மீளவுங்கொள்கின்றது - திரும்பவுந்தரிக்கப்படுகின்றது, என்றால்-என்று சொன்னால், விண்ட மேலவர் - சொல்லிய மேன்மையான சத்துக்கள், வெறுத்து - வெறுப்புற்று, நாணுறுதொழிவரோ - வெட்கப்படாமற் போவார்களோ—எ-று.

எ - து. புசித்தசுகமே திரும்பவும் புசிக்கப்படுகின்றது. ஒருநாட்காணப்பெற்ற காட்சியே திரும்பவுங்காணப்படுகின்றது மகிழ்ச்சியாகக்கொண்ட அலங்காரமே திரும்பவுந் தரிக்கப்படுகின்றது என்று சொன்னால், சொல்லிய மேன்மையான சத்துக்கள் வெறுப்புற்று வெட்கப்படாமற் போவார்களோ—எ-ம். (16)

## காலத்தை வெறுத்தல்.

அருந்து மட்டினி யென்றதே மீண்டு மீண் டருந்தி
திருந்தி டாதபுன் சிறுவர்போற் செயலறி யாது
வருந்து கின்றன நாள்பக்கம் மாதமாண் டுகங்கள்
பொருந்தி வந்ததே யல்லது புதிதொன்றும் வாரா.

இ - ள். அருந்துமட்டு - புசிக்கின்றவனவும், இனியென்றதே -இன்பமென்றுசொல்லுவதையே, மீண்டுமீண்டருந்தி - திரும்பத்திரும்பப்புசித்து, திருந்திடாத - (அறிவு) திருத்தமில்லாத, புன்சிறுவர்போல் - அற்பமான குழந்தைகளைப்போல, செயலறியாது - ஒழுக்கந்தெரியாமல், வருந்துகின்றனம் - வருத்தப்படுகின்றோம், நாள் - தினமும், பக்கம் - பட்சமும், மாதம் - திங்களும்,

ஆண்டு - வருஷமும், உகங்கள் - யுகங்களும், பொருந்திவந்ததேயல்லது-முன் பொருந்தி வந்ததேயன்றி, புதிதொன்றும்வாரா - புதிதாக வேறொன்றும் வாராது-எ-று.

எ - து. புசிக்கின்ற அளவும் இன்பமென்று சொல்லுவதையே திரும்பத்திரும்பப் புசித்து அறிவு திருத்தமில்லாத அற்பமானகுழந்தைகளைப்போல ஒழுக்கந்தெரியாமல் வருத்தப்படுகின்றோம். தினமும், பட்சமும். திங்களும். வருஷமும், யுகங்களும், முன்பொருந்தி வந்ததேயன்றி புதிதாக வேறொன்றும் வாராது. (17)

## நித்திய வஸ்துவை விசாரித்தல்.

செய்யத் தக்கன யாவையுஞ் செய்துமிச் செயலால்
உய்யப் பெற்றதென் செயன்மறுத் திலாதவொன் றுலகில்
ஐயப் பாடற யாதினு மெய்துமப் பொருடான்
மையப் போகத்தா லொழிந்துமேல் வருநெறி யாதே.

இ - ள். செய்யத்தக்கன - செய்யத்தக்கனவாகிய, யாவையுஞ்செய்தும்- அனைத்தையுஞ்செய்தும், இச்செயலால் - இச்செய்கையினால், உய்யப்பெற்றதென் - உயிர்வாழப்பெற்றதென்ன, செயன்மறுத்திலாத — தொழில்கள்பின்பில்லாத, ஒன்று - ஒருபொருளானது, உலகில் - சகத்தின்கண், ஐயப்பாடற- சந்தேகமில்லாமல், யாதினுமெய்தும் - எதினுற்கிடைக்கும், அப்பொருடான்- அவ்வஸ்துவானது,· மையப்போகத்தாலொழிந்து - மயக்கமுள்ள (விடய) போகத்தினால் விடுபட்டு, மேல்வருநெறியாது - மேலேவருமார்க்கமெது.

எ - து. செய்யததக்கனவாகிய அனைத்தையுஞ் செய்தும், இச்செய்கையினால் உயிர்வாழப்பெற்றதென்ன? தொழில்கள் பின்பில்லாத ஒருபொருளானது சகத்தின்கண் சந்தேகமில்லாமல் எதினுற் கிடைக்கும்? அவ்வஸ்து வானது மயக்கமுள்ள விடயபோகத்தினால் விடுபட்டு மேலேவரு மார்க்கமெது—எ—ம்.

இ-ரு-க-ம். சகலமும் அனித்திய வஸ்துவென்றறிந்து நீக்கிநித்தியவஸ்துவை விசாரிக்கத் தொடங்கினதாம். (18)

## முன்பிதாபோதித்த அனுபவம் ஞாபகப்படல்.

அழிவி லாததா யன்னிய மாகிய வதுசேர்
வழிய தேதெனச் சிந்திப்பான் மனத்தொன்றை நினைந்து

மொழிய லுற்றன னறிந்தன மென்றொரு நொடியில்
விழிபெ ருந்திடப் புருவமே லேற்றினன் வியந்தான்.

இ - ள். அழிவிலாததாய் - அழிவற்றதாகியும், அன்னியமாகிய - விடயத்துக்கயலாகியு மிருக்கின்ற, அதுசேர் - அப்பொருளைச்சேருகின்ற, வழியதேதென - மார்க்கமெதுவென்று, சிந்திப்பான்-சிந்திக்கும்பொருட்டு, மனத்தொன்றைநினைந்து - மனதிலொன்றைச்சிந்தித்து, விழிபெருந்திட-கண்கள்மலர, புருவமேலேற்றினன் - புருவத்தைநெறித்து வியந்தான் - அதிசயித்து, ஒருநொடியில் - ஒருகணத்தில், அறிந்தனமென்று - அறிந்தோமென்று, மொழியலுற்றனன் - சொல்லத்தொடங்கினன் —எ - று.

எ - து. அழிவற்றதாகியும், விடயத்துக்கயலாகியு மிருக்கின்ற அப்பொருளைச்சேருகின்ற மார்க்கமெதுவென்று சிந்திக்கும் பொருட்டு, மனதிலொன்றைச் சிந்தித்து கண்கள் மலரப் புருவத்தை நெறித்து அதிசயித்து, ஒருகணத்தில் அறிந்தோமென்று சொல்லத்தொடங்கினன்— எ-ம். (19)

## அக்கதை யாலோசனை செய்தல்

தன்ன துள் ளுற நினைத்தது விளம்பினன் றானே
முன்ன மிங்கியான் கேட்டனன் முழுதுணர் முதன்மை
யென்ன ருமபிதா விரோசனன் றன்னையிப் படியே
அன்ன வன்புகன் றனனென விவையெலா மறைவான்.

இ - ள். தன்னதுள்ளுற - தனதுள்ளத்திற்பொருந்த, நினைத்தது - நினைத்ததை, தானேவிளம்பினன் - தானேசொல்லினன், முழுதுணர்முதன்மை- எல்லாமுணர்ந்த முதன்மையான, என்னருமபிதா - எனதரிய பிதாவாகிய, விரோசனன்றன்னை - விரோசனனை, முன்னமிங்கி யான்கேட்டனன் - பூர்வமிவ்விடத்தில் யான்கேட்டேன், இப்படியே - இந்தப்பிரகாரமே, அன்னவன் புகன்றனனென - அவருஞ்சொன்னரென்று, இவையெலாமறைவான் - (மாபலியானவன்) இவைகளனைத்தையுஞ்சொல்லுவான்-எ-று.

எ - து. தனதுள்ளத்திற் பொருந்த நினைத்ததைத்தானே சொல்லினன், எல்லாமுணர்ந்த முதன்மையான எனதரிய பிதாவாகிய விரோசனனைப் பூர்வமிவ்விடத்தில் யான் கேட்டேன், இந்தப்பிரகாரமே அவருஞ் சொன்னரென்று மாபலியானவன் இவைகளனைத்தையுஞ்சொல்லுவான்— எ-ம். (20)

## நித்தியவஸ்து யாதென விசாரித்து அதனை மனனஞ்செய்தல்.

அய்ய துன்பமு மின்பமு மென்பன வனைத்தின்
மைய லியாவையு மடிந்ததோ ரிடமெது மனத்தின்
வெய்ய மோகந்தீ ரிடமெது வேட்கைக ளெல்லாங்
கைய றப்பட்ட விடமெது கருணையா லுரையாய்.

இ - ள். அய்ய - (எனது) பிதாவே, துன்பமும் - துக்கமும், இன்பமும்- சுகமும், என்பன - என்று சொல்லப்படுவனவாகிய, அனைத்தின் - சகலத்தினுடைய, மையலியாவையும் - மயக்கங்களனைத்தும், மடிந்ததோ ரிடமெது- இறந்த வொப்பற்ற இடமியாது, மனத்தின் வெய்யமோகம்-மனதின்கொடிய மோகமானது, தீரிட மெது - தீர்கின்ற இடமியாது, வேட்கைகளெல்லாம் - ஆசைகளனைத்தும், கையறப்பட்ட விடமெது - பற்றறவிடுபட்ட இடமியாது, கருணையாலுரையாய் - தயவாக அனுக்கிரகஞ்செய்வாய் —எ-று.

எ - து. எனது பிதாவே. துக்கமும் சுகமும் என்றுசொல்லப் படுவனவாகிய சகலத்தினுடைய மயக்கங்க ளனைத்தும் இறந்தவொப்பற்ற இடமியாது? மனத்தின் கொடியமோகமானது தீர்கின்றஇடமியாது? ஆசைகளனைத்தும் பற்றற விடுபட்ட இடமியாது? தயவாக அனுக்கிரகஞ் செய்வாய் —எ-ம் (21)

நிராசை யாகியே யிளைப்பெலா நீங்கிட மேது
விராவு பேரின்பத் தழகிதாய் விரிவிட மேது
பராப ரந்தெளிந் துணர்ந்தநீ பகர்தியென் னெஞ்சை
யராவு துன்பமஃ திட் டிளைப்பெலா மாறுதற் கென்றேன்.

இ - ள். நிராசையாகி-ஆசையற்றதாய், இளைப்பெலாநீங்கிடமேது-இளைப்புகளனைத்துவிடுபடும் (விஸ்ராந்திஸ்தான) மியாது, விராவுபேரின்பத்தழகிதாய் - மிகுந்த பேரானந்தச்சுந்தரமாகி, விரிவிடமேது - வியாபித்திருக்கின்ற இடமியாது, பராபரம் - பராபரத்தை, தெளிந்துணர்ந்தநீ - தெளிந்தறிந்திருக்கின்றநீர், என்னெஞ்சை - என்மனதை, அராவுதுன்பம் விட்டு - அறுத்துக் கொண்டிருக்கின்றதுன்பத்தைவிடுத்து, இளைப்பெலாமாறுதற்கு - இளைப்புகளனைத்து நீங்குதற்கு, பகர்தியென்றேன் - சொல்லென்று கேட்டேன்-எ-று.

எ - து. ஆசையற்றதாய் இளைப்புகளனைத்தும் விடுபடும் விஸ்ராந்திஸ்தான மியாது? மிகுந்த பேரானந்தச் சுந்தரமாகி வியாபித்திருக்கின்ற இடமியாது? பராபரத்தைதெளிந்தறிந்திருக்கின்ற நீர் என் மனதை அறுத்துக்கொண்டிருக்கின்ற துன்பத்தை விடுத்து இளைப்புகளனைத்து நீங்குதற்குச் சொல்லென்று கேட்டேன் (22)

இ-சு-க-ம். துக்கநிவர்த்தியாய்த் தடையற்ற ஆநந்தத்தை அடைய விரும்பினதாம். (22)

## சித்தை அரசாங்கமாகத் தொகுத்துக்கூறத் தொடங்கித் தேய இலக்கணங்கூறல்.

——()——

எந்தை யப்பொழு துரைசெய்வான் மைந்தகே ளியம்ப
அந்த மற்றற விசாலமா யளவற வகன்று
சுந்த ரத்ததாந் தேசமுண் டண்டத்தின் றொகுதி
வந்து இத்திருந் திறப்பதற் கிடமதாய் வயங்கும்.

இ - ள். எந்தை - எனது பிதாவானவர், அப்பொழு துரைசெய்வான்- அப்போது சொல்லுவார், இயம்ப - (யான்) சொல்ல, மைந்தாகேள் - மகனே கேட்பாய், அந்தமற்று - முடிவில்லாமல், அறவுசாலமாய் - மிகவும் வியாபக மாகியும், அளவறவகன்று - மட்டின்றி விஸ்தாரமாகியும், சுந்தரத்ததாம் - அழகுள்ளதாகியுமிருக்கின்ற, தேசமுண்டு - ஓர் தேயமுள்ளது, அண்டத்தின் றொகுதி - அண்டத்தினது கூட்டங்கள், வந்துஇத்து - வந்துண்டாகி, இருந்து - விளங்கி, இறப்பதற்கு - நசிப்பதற்கு, இடமதாய் வயங்கும் - (அதுவே) யிடமாகப் பிரகாசிக்கும்—எ-று.

எ - து. எனது பிதாவானவர் அப்போது சொல்லுவார். யான் சொல்ல மகனே கேட்பாய். முடிவில்லாமல் மிகவும் வியாபகமாகியும், மட்டின்றி விஸ்தாரமாகியும், அழகுள்ளதாகியு மிருக்கின்ற ஓர் தேயமுள்ளது. அண்டத்தினது கூட்டங்கள் வந்து உண்டாகி விளங்கி நசிப்பதற்கு அதுவேயிடமாகப் பிரகாசிக்கும்—எ—ம். (23)

## அரசன் இலக்கணங்கூறல்.

——*——

ஆய தேயத்தி லைம்பெரும் பூதமு மில்லைச்
சேய குன்றில்லை வனமில்லைத் தீர்த்தங்க ளில்லைத்
தூய தேவரோ முதலிய தொல்லுயி ரில்லை
நாய கன்பெருஞ் சுடரெனு மொருவனே நண்ணும்.

இ - ள். ஆயதேயத்தில் - (இப்படி) யாகிய தேசத்தில், ஐம்பெரும்பூதமு மில்லை - பஞ்சமகாபூதங்களுமில்லை, சேயகுன்றில்லை - நீண்டமலைகளுமில்லை வனமில்லை - (நீண்ட) காடுகளுமில்லை, தீர்த்தங்களில்லை - (நீண்ட) தீர்த்தங் களுமில்லை, தூயதேவரோ முதலிய - பரிசுத்தமுள்ள தேவர்கள் முதலாகிய தொல்லுயிரில்லை - பழமையான ஆத்மாக்களுமில்லை, பெருஞ் சுடரெனும்,

மகா பிரகாசமென்கின்ற, நாயகன் - அரசன், ஒருவனே நண்ணும் - ஒருத்தனே யிருக்கின்றான்-எ-று.

எ - து. இப்படியாகிய தேசத்தில் பஞ்சமகா பூதங்களுமில்லை. நீண்டமலைகளுமில்லை. நீண்ட காடுகளுமில்லை. நீண்ட தீர்த்தங்களுமில்லை. பரிசுத்தமுள்ள தேவர்கள் முதலாகிய பழமையான ஆத்மாக்களுமில்லை. மகாப் பிரகாசமென்கிற அரசன் ஒருத்தனேயிருக்கின்றான்—எ-ம். (24)

## அமைச்சன் இலக்கணங் கூறல்.

முழுதுங் காண்பவன் முழுதினுஞ் செறிபவன் முதல்வன்
பழுதில் சாந்தனாய் நிறைந்துவா ளாவுறை பண்போன்
வழுவி லாவிவ னுக்கிய மந்திரி வசத்தால்
தழுவு செய்கைக ளியாவையு நடத்திடுந் தானே.

இ - ள். முழுதுங்காண்பவன் - சர்வஞ்ஞனாகியும், முழுதினுஞ் செறிபவன் - சர்வ வியாபகனாகியும், முதல்வன் - சர்வ காரணனாகியும், பழுதில் சாந்தனாய் - குற்றமற்ற உபசாந்தனாகியும், நிறைந்து - பரிபூரணமாய், வாளாவுறை - மௌனமாயிருக்கின்ற, பண்போன் - குணத்தையுடையவன், வழுவிலாவிவனுக்கிய - தவறில்லாத இவ்வரசனாலமைத்த, மந்திரி வசத்தால் - மந்திரியினது வசமாக, தழுவுசெய்கைக ளியாவையும் - தழுவாநின்ற தொழில்களனைத்தையும், தானே நடத்திடும் - தானே நடத்திவிக்கும்-எ-று.

எ - து. சர்வஞ்ஞனாகியும், சர்வவியாபகனாகியும், சர்வகாரணனாகியும், குற்றமற்ற உபசாந்தனாகியும், பரிபூரணமாய் மௌனமாயிருக்கின்ற குணத்தையுடையவன். தவறில்லாத இவ்வரசனால் அமைத்த மந்திரியினது வசமாகத் தழுவாநின்ற தொழில்களனைத்தையும் தானே நடத்திவிக்கும்—எ-ம். (25)

இல்ல துள்ளதா முள்ளது மில்லதா மிமைப்பிற்
புல்லு மந்திரி நினைத்திடி லிவனொன் றும் புசிக்க
வல்ல தில்லையொன் றறிகிலன் மன்னனை விடாது
செல்லுந் தன்மையாற் கேவல மனைத்தையுஞ் செய்யும்.

இ - ள். புல்லுமந்திரி நினைத்திடில் - பொருந்திய மந்திரியானவன் சிந்தித்தால், இமைப்பில் - நிமிடத்தில், இல்ல துள்ளதாம் - இல்லது உள்ளதாகும், உள்ளதுமில்லதாம் - உள்ளது மில்லாததாகும், இவன் - இந்த மந்திரிக்கு, ஒன்றும் புசிக்க வல்லதில்லை - ஒன்றாகிலும் அனுபவிக்க வல்லமையில்லை, ஒன்றறிகிலன் - ஒன்றையு மறிந்திலன், மன்னனை விடாது-

அரசனைவிடாமல், செல்லுந்தன்மையால் - நடக்கின்ற குணத்தினல், கேவல மனைத்தையுஞ்செய்யும் - மிகவுஞ் சகலத்தையுஞ்செய்யும்-எ-று.

எ - து. பொருந்திய மந்திரியானவன் சிந்தித்தால் நிமிடத்தில் இல்லதுள்ளதாகும். உள்ளது மில்லாதாகும். இந்த மந்திரிக்கு ஒன்றுகிலும் அனுபவிக்க வல்லமையில்லை. ஒன்றையுமறிந்திலன் அரசனை விடாமல் நடக்கின்ற குணத்தினல் மிகவுஞ் சகலத்தையுஞ் செய்யும்—எ-ம்.

இ-சு க-ம். பிரமத்தை உருவகப்படுத்தித் தொகுத்துச் சொன்ன தென்பதாம். (26)

## இவ் வரசாங்கத்தைப் பகுத்து வினவுதல்.



இந்த மந்திரி தன்னெதி ரியாவையு மியற்ற
அந்த மன்னவ னென்றுமே காந்தத்த னாகும்
மைந்த வென்றுரைத் தருளிய பிதாவைநான் மகிழ்ந்து
புந்தி யாலந்த வகையெலாம் வினவினேன் புகழ்ந்து.

இ - ள். இந்தமந்திரி - இந்தமந்திரியானவன், தன்னெதிர் - இராசாவினுடைய சந்நிதியில், இயாவையுமியற்ற - சகலத்தையு நடத்த, அந்த மன்னவன் - அந்த அரசனானவன், என்றுமேகாந்தத்தனாகும் - எப்போதுந் தனிமையாகவேயிருப்பன், மைந்தனென்று - குழந்தாயென்று, உரைத்தருளிய பிதாவை - அருளிச்செய்த (எனது) தந்தையை, நான் மகிழ்ந்து-யான் மகிழ்ச்சியுற்று, புந்தியால்-அறிவினல், அந்தவகையெலாம் - முன் சொல்லப்பட்ட விதங்களனைத்தையும், புகழ்ந்துவினவினேன் துதித்துக்கேட்டேன்—எ-று.

எ — து. இந்த மந்திரியானவன் இராசாவினுடைய சந்நிதியில் சகலத்தையும் நடத்த அந்த அரசனானவன் எப்போதுந் தனிமையாகவே யிருப்பன். குழந்தாயென்று அருளிச்செய்த எனது தந்தையை யான் மகிழ்ச்சியுற்று அறிவினல் முன்சொல்லப்பட்ட விதங்களனைத்தையம் துதித்துக்கேட்டேன்—எ-ம். (27)

அறவி லாசமா பாதியும் வியாதியு மின்றி
நிறைவி தானவத் தேசமே ததுதனை நேருந்
திறவி யாததை யாதினு லெய்துமத் தேசத்
திறவி லாதவம் மன்னனூர் மந்திரி யாவன்.

இ - ள். அறவிலாசமாய்-மிகவும் விஸ்தாரமாய், ஆதியும் வியாதியுமின்றி- ஆதிவியாதிகளில்லாமலிருக்கின்ற, நிறைவிதான - பிரகாசமாகிய, அத்தேசமேது - அத்தேசமெப்படிப்பட்டது, அதுதனை நேரும் - அதை அடைகின்ற,

திறவியாது - காரணமெது, அதுயாதினுலெய்தும் - அது எதினுற் கிடைக்கும், அத்தேசத்து - அந்தத்தேசத்தில், இறவிலாத அம்மன்ஞர்-நாசமில்லாத அந்தவரசனுர், மந்திரியாவன் - மந்திரியெவன்—எ-று,

எ - து. மிகவும் விஸ்தாரமாய் ஆதிவியாதிகளில்லாமலிருக்கின்ற பிரகாசமாகிய அந்தத் தேச மெப்படிப்பட்டது, அதை யடைகின்ற காரணமெது? அது எதினுற்கிடைக்கும்? அந்தத்தேசத்தில் நாசமில்லாத அந்தவரசனுர்? மந்திரி எவன்—எ-ம்.

இ-உ-க-ம். இத்தேச முதலியவற்றைச் செயிக்கப்படுதலைச் சொல்லும்படி கேட்டதென்பதாம். (28)

மந்திரியின் வலிமை கூறல்.

புவன மியாவையும் விநோதத்தா லடர்ந்தவென் புயத்தால
அவனம் மந்திரி யுடனடர்ப் புறுவலி யமர்ந்த
தெவன றைந்தருள் கென்றலு மென்பிதா விசைப்பான்
கவன நீள்வலி மந்திரி வேகமார் கடப்பார்.

இ - ள். புவனமியாவையும்-பூமிகளனைத்தையும், விநோதத்தால்-விளையாட்டினுல், அடர்ந்தவென்புயத்தால் - செயஞ்செய்த எனது புயத்தினுல், அவன் - அவ்வரசன், அம்மந்திரியுடன் - அவ்வமைச்சனேடும், அடர்ப்புறு-சயிக்கக்கூடாமல், வலியமர்ந்ததெவன்-வலிமையுண்டா யிருக்கின்றவனியார், அறைந்தருள்கென்றலும் - கிருபைசெய்வாயென்று நான் கேட்கவும், என்பிதா விசைப்பான் - எனது தந்தையானவர் சொல்லுவார், கவனநீள்வலி-வேகத்தையுடைய மிகுந்த வலிமை பொருந்திய, மந்திரி வேகமார் கடப்பார்-மந்திரியினது கடுமையை யார்தான் தாண்டவல்லவர்-எ-று.

எ - து. பூமிகளனைத்தையும் விளையாட்டினுல் செயஞ்செய்தவெனது புயத்தினுல் அவ்வரசன் அவ்வமைச்சனேடும் சயிக்கக்கூடாமல் வலிமையுண்டா யிருக்கின்றவனியார், கிருபை செய்வாயென்று நான் கேட்கவும் எனது தந்தையானவர் சொல்லுவார். வேகத்தையுடைய மிகுந்த வலிமை பொருந்திய மந்திரியினது கடுமையை யார்தான் தாண்டவல்லவர்—எ-ம். (29)

தேவர் தானவ ரெண்ணறு கோடிக டிரண்டு
மேவ வென்றலர் சூலகே மிகண்முத லென்ற
மேவ ரும்படைக் கலமெலா மவன்மிசை விட்டான்
மாவ ருக்கல்வி லறைந்தபூ வெனமுனை மடியும்.

இ - ள். தேவர்தானவர் - தேவருமசுரரும், எண்ணறு கோடிகடிரண்டு - அளவற்ற கோடிகளொன்றாய்க்கூடி, மேவவென்றலர் - மேவினாலும் வென்றவர்களல்ல. சூலநேமிகள் முதலென்ற - சூலஞ் சக்கர முதலாகச் சொல்லப்பட்ட, மேவரும் படைக்கலமெலாம் - பொருந்துதற்கரிய ஆயுதங்களனைத்தையும், அவன்மிசைவிட்டால் - அவன்மேல் விடுத்தால், மாவருங் கல்லில் - மிகவுமரிதானகல்லில், அறைந்தபூவென - மோதிய பூவைப்போல, முனைமடியும் - நுனியானதுகெடும்-எ-று.

எ - து. தேவரும் அசுரரும் அளவற்ற கோடிகளொன்றாய்க் கூடிமேவினாலும் வென்றவர்களல்ல. சூலஞ் சக்கர முதலாகச் சொல்லப்பட்ட பொருந்துதற்கரிய ஆயுதங்கள் அனைத்தையும் அவன்மேல்விடுத்தால் மிகவுமரிதானகல்லில் மோதிய பூவைப்போல நுனியானது கெடும்—எ-ம். (30)

## அம் மந்திரியை வெல்லும் உபாயங் கூறல்.

விளிவ ருந்திற லந்தமந் திரியந்த வேந்தால்
எளிது வென்றிடில் வணங்குறு மிவ்வகை யின்றேல்
அளிய மேருவை யசைப்பினு மசைப்பரி தாகும்
ஒளிகொ ளூகபுந் தியினலால் வெலப்படா னொருங்கே.

இ - ள். விளிவருந்திறலந்தமந்திரி - கெடுதற்கரிய பலமுள்ள அவ்வமைச்சன், அந்த வேந்தாலெளிதுவென்றிடில் - அவ்வரசனால் எளிதாகச் செயித்தால், வணங்குறும் - (அவனுக்கு) வணங்குவான், இவ்வகையின்றேல் - இப்படியிலாவிடின், அளியமேருவை - குளிர்ந்த மகாமேருவை, அசைப்பினும் - அசைத்தாலும், அசைப்பதாகும் - (இவனை) அசைக்கக்கூடாததாம் ஒளிகொள் - பிரகாசம் பொருந்திய, ஊகபுந்தியினலால் - அனுபவயுத்தியையுடைய அறிவினால் அல்லாமல், ஒருங்கு வெலப்படான் - முழுதுஞ்செயிக்கப்படான்-எ-று.

எ - து. கெடுதற்கரிய பலமுள்ள அவ்வமைசசன் அவ்வரசனால் எளிதாகச் செயித்தால் அவனுக்கு வணங்குவான். அப்படி யிலாவிடின், குளிர்ந்த மகாமேருவை அசைத்தாலும் இவனையசைக்கக் கூடாததாம், பிரகாசம்பொருந்திய அனுபவ யுத்தியையுடைய அறிவினால் அல்லாமல் முழுதுஞ் செயிக்கப்படான்—எ-ம். (31)

## சித்துருவகத்தை வெளிப்படுத்திச் சொல்லத் தொடங்கல்.



ஊக புந்தியர் லல்லதவ் வமைச்சனை யுற்றால்
வேக நாகம்போ லெரித்திடும் வேந்தனோ டமைச்சன்

ஏக ராச்சியஞ் செய்யுமத் தேசமு மியாவையுஞ்
சோக மற்றிடக் கேளென விரித்திது சொன்னான்.

இ-ள். ஊகபுந்தியாலல்லது - அனுபவயுத்தியையுடைய அறிவினால் அல்லாமல், அவ்வமைச்சனையுற்றால் - அந்தமந்திரியைப் பொருந்தினால், வேக நாகம்போல் - கோபத்தையுடைய சற்பத்தைப்போல, எரித்திடும்-எரிப்பான், வேந்தனோடு - அரசனோடும், அமைச்சன் — மந்திரியானவன், ஏகராச்சியஞ் செய்யும் - தனியே யரசாட்சிசெய்கின்ற, அத்தேசமுமியாவும் - அந்தத்தேசமும் (அதிலுள்ள) சகலமும், சோகமற்றிடக்கேளென - (உனது) துன்பமறும் பொருட்டுக் கேட்பாயென்று, விரித் திதுசொன்னான் - பிரித்து இதைச் சொன்னான்-எ-று.

எ-து. அனுபவயுத்தியையுடைய அறிவினால் அல்லாமல் அந்த மந்திரியைப் பொருந்தினால் கோபத்தையுடைய சற்பத்தைப்போல எரிப்பான். அரசனோடும் மந்திரியானவன் தனியே யரசாட்சி செய்கின்ற அந்தத்தேசமும் அதிலுள்ள சகலமும் உனதுதுன்பம் அறும் பொருட்டுக் கேட்பாயென்று பிரித்து இதைச் சொன்னான்—எ-ம்.

## தேயமுதலிய மூன்றையுங் கூறல்.

முன்ன நாஞ்சொன்ன தேசமோர் முடிவிலா முத்தி
மன்ன னென்றது மாசிலா மணியென வயங்குந்
தன்னில் வேறிலா வாத்தும தத்துவந் தானே
அன்ன வேந்தனா லமைத்தமந் திரிமன மாகும்.

இ-ள். முன்னம் - முன்னமே, நான்சொன்னதேசம் - யாஞ்சொல்லிய தேயமானது, ஓர் முடிவிலாமுத்தி - ஒப்பற்ற முடிவிறந்த மோட்சமாகும், மன்னனென்றது - இராசாவென்று சொல்லியது, மாசிலாமணியென களங்கமற்ற இரத்தினத்தைப்போல, வயங்கும் - பிரகாசிக்கின்ற, தன்னில் வேறிலா தன்னிடத்தில் வேறுபடாத, ஆத்தும தத்துவந்தானே - ஆத்மதத்துவமே யாகும், அன்னவேந்தனால் - அப்படிப்பட்ட அரசனால், அமைத்தமந்திரி-படைத்தமந்திரியானவன், மனமாகும் - மனமாகும்-எ-று.

எ-து. முன்னமே யாஞ்சொல்லிய தேயமானது ஒப்பற்ற முடிவிறந்த மோட்சமாகும். இராசாவென்று சொல்லியது களங்கமற்ற இரத்தினத்தைப்போல பிரகாசிக்கின்ற தன்னிடத்தில் வேறுபடாத ஆத்மதத்துவமேயாகும். அப்படிப்பட்ட அரசனால் படைத்த மந்திரியானவன் மனமாகும்—எ-ம்.

## யூகமென்பதைக் கூறல்.

விடைய மியாவையு மொருப்பட வொருக்கிநல் விராக
முடைமை யாவது பரமமாம் யூகமென் றுரைத்தேந்
தடையி லாமனம் விராகத்தால் வெலப்பட்ட தன்மை
படைசெய் மத்தமா தொழுவத்து ளகப்பட்ட பண்பே.

இ - ள். விடமியாவையும்-விடயங்களனைத்தையும், ஒருப்படவொருக்கி-ஒருமிக்கக்கெடுத்து, நல்லவிராகம்-நல்ல வயிராக்கியத்தை, உடைமையாவது-உடையதாவதே, பரமமாம் யூகமென்றுரைத்தேம் - மேலான யுத்தியென்று சொன்னோம், தடையிலாமனம் - தடையற்றமனமானது, விராகத்தால்-நிராசையினால், வெலப்பட்ட தன்மை - வெல்லப்பட்ட குணமானது, படைசெய் மத்தமா - சண்டைசெய்கின்ற மதத்தையுடைய யானையானது, தொழுவத்துள் - தொழுவத்தினுள், அகப்பட்ட பண்பு-அகப்பட்ட தன்மையாம்-எ-று.

எ - து. விடயங்க ளனைத்தையும் ஒருமிக்கக் கெடுத்து நல்லவயிராக்கியத்தை உடையதாவதே மேலானயுத்தியென்று சொன்னோம். தடையற்ற மனமானது நிராசையினால் வெல்லப்பட்ட குணமானது சண்டைசெய்கின்ற மதத்தையுடைய யானையானது தொழுவத்தினுள் அகப்பட்ட தன்மையாம்—எ-ம்.

இ-சு க-ம். தேயமுதலிய நான்கையும் முத்திமுதலிய நான்காகப்பிரித்துச் சொன்னதாம். (34)

## பிரமத்தை அபரோக்ஷமாக உருவகப்படுத்தி அதைச் செய்விக்கும் உத்தியைமூன்றுவிதமாகக் கூறத்தொடங்கி முதல் உத்தியைக் கூறல்.

கற்ற றிந்திலார் மனத்தைநாற் கூறெனக் கற்பித்
துற்ற போகத்தி லுபயமு நூல்வழி யொன்றும்
பெற்ற தேசிகன் பூசையி லொன்றுமாய்ப் பேணில்
துற்ற கங்குல்போய் விவேகமாஞ் சுடர்வந்து தோன்றும்.

இ - ள். கற்றறிந்திலார் மனத்தை - (ஞானநூலை) உணர்ந்தறியாதவர்கள் மனதை, நாற்கூறெனக்கற்பித்து -நான்குபங்காகப்பிரித்து, உற்றபோகத்திலுபயமும் - அடைந்த விடயபோகங்களி லிரண்டுபங்கும், நூல்வழியொன்றும் - (ஞான) சாஸ்திரமார்க்கத்தி லொருபங்கும், பெற்றதேசிகன் பூசையிலொன்றுமாய் - (அனுக்கிரகம்) பெற்ற ஆசாரியர் ஆராதனையில் ஒருபங்காகவும், பேணில் -செலுத்தினால், துற்றகங்குல்போய்-நிறைந்த (அஞ்ஞான) அந்த

காரம்போய், விவேகமாஞ்சுடர் ஞானப்பிரகாசமானது வந்துதோன்றும் வந்துநிற்கும்-எ-று.

எ – து. ஞானநூலை யுணர்ந்தறியாதவர்கள் மனதைநான்குபங்காகப் பிரித்து அடைந்த விடயபோகங்களி லிரண்டு பங்கும் ஞானசாஸ்திர மார்க்கத்தி லொருபங்காகவும் செலுத்தினால் நிறைந்த அஞ்ஞான அந்த காரம்போய் ஞானப்பிரகாசமானது வந்துநிற்கும்-எ-ம்.

## இரண்டாவது யுத்தியைக்கூறல்.



சிறித றிந்தவர் மனத்தைநால் கூறெனச் செய்து
பொறிவ சத்தொன்றுந் தேசிகர் பூசையி லிரண்டும்
அறியு நூற்பொருண் மனனத்தோர் கூறுமே யாக்கில்
நெறிவி வேகத்தா லொன்றுணர் ஞானமே நிரம்பும்.

இ-ள். சிறிதறிந்தவர் மனத்தை - கொஞ்சமறிந்தவர்கள்மனதை, நாற்கூறெனச்செய்து - நான்கு பங்காகச்செய்து, பொறிவசத்தொன்றும் - இந்திரிய வசத்திற் (செல்லுகின்ற போகங்களில்) ஒருபங்கும், தேசிகர் பூசையிலிரண்டும் - ஆசாரியர் ஆராதனையிலிரண்டுபங்கும், அறியுநூற்பொருண் மனனத்து - விசாரித்தறிகின்ற ஞானசாஸ்திரார்த்தங்களை மனனஞ்செய்வதில், ஓர் கூறுமேயாக்கில் - ஒரு பங்காகவுஞ்செய்தால், நெறிவிவேகத்தால் - செவ்வையான விவேகத்தினால், ஒன்றுணர் ஞானமே நிரம்பும் - பரதத்துவமறியு ஞானமே நிறையும்-எ-று.

எ – து. கொஞ்சம் அறிந்தவர்கள்மனதைநான் பங்காகச்செய்துஇந்திரியவசத்திற்செல்லுகின்றபோகங்களிலொருபங்கும், ஆசாரியர் ஆராதனையிலிரண்டு பங்கும், விசாரித்தறிகின்ற ஞானசாஸ்திரார்த்தங்களை மனனஞ்செய்வதில் ஒரு பங்காகவுஞ்செய்தால் செவ்வையான விவேகத்தினால் பரதத்துவம் அறியுஞானமே நிறையும்—எ-ம்.

## மூன்றாவது யுத்தியைக்கூறல்.

ஞானமுற்றவர் மனத்தைநாற் கூறெனநாட்டி
யான நூலினும் விராகத்து மனுபவந் தனினும்
மான நற்குரு பூசையின் வழியினுஞ் செலுத்தில்
ஈன மற்றநன் முத்திவந் தெய்திடு மெளிதின்.

இ - ள். ஞானமுற்றவர் மனத்தை-ஞானத்தையடைந்தவர்கள் மனதை, நாற்கூறெனநாட்டி - நான்குபங்காக நிறுத்தி, ஆனநூலினும் - அயிக்கிய (சொரூபத்தையறிவிக்கும்) ஞானசாஸ்திரங்களிலும், விராகத்தும் - நிராசையி லும், அனுபவந்தனிலும் - சுவானுபவத்திலும், மானநற்குருபூசையின்-மகாஞ கிய சற்குரு ஆராதனையின், வழியினுஞ்செலுத்தில் - மார்க்கஞ்செலுத்தினல், ஈனமற்ற நன்முத்தி - குற்றமற்றதாயிருக்கின்ற நல்ல மோட்சமானது, எளி தின் வந்தெய்திடும் - எளிதாகவே வந்து கிடைக்கும்—எ-று.

எ - து. ஞானத்தையடைந்தவர்கள் மனதை நான்கு பங்காக நிறுத்தி அயிக்கியசொரூபத்தையறிவிக்கும்ஞானசாஸ்திரங்களிலும், நிராசையிலும், சுவானுபவத்திலும் மகாஞகிய சற்குரு ஆராதனையின் மார்க்கத்திலுஞ் செலுத்தினல், குற்றமற்றதாயிருக்கின்ற நல்லமோட்சமானது எளிதாகவே வந்துகிடைக்கும்—எ-ம்.

மனதை நாற்கூறு செய்யென்றது அதன் விருத்தியை. (37)

இவ்யுத்திக்குச் சகாயங்கூறல்.



வேறு.

மிக்கவறிவால் விசாரத்தால் மெய்ம்மையுணர்வு நிராசையும்
ஒக்கவென்றுங் கைக்கொள்வா யூற்றமான நிராசையினல்
தக்கவிசாரம் விசாரத்தாற் றவிராநிராசை தம்மாற்றுந்
தொக்குநிரம்பும் வாரிதியுந் தொடர்மேக முந்துன் னுதல்போலாம்.

இ - ள். மிக்கவறிவால்-மிகுந்த அறிவினலும், விசாரத்தால் - விசாரணை யினலும், மெய்ம்மையுணர்வும் - ஆத்மதரிசனமும், நிராசையும் - விராகமும், நீயொக்க - நீயொருமிக்க, என்றுங்கைக்கொள்வாய் - எப்போதுங் கைவசமாக் குவாய், ஊற்றமான நிராசையினல் - நிலையாகிய விராகத்தினல், தக்கவிசாரம்- தகுந்த (ஆத்ம) விசாரணையும், விசாரத்தால் - (அவ்வாத்மவிசாரணையினல்,) தவிராநிராசை - ஒழிவில்லாத விராகமும், தம்மாற்றும் - ஒன்றுக்கொன்று, தொக்கு நிரம்பும் வாரிதியும் - தொகுப்பாய் நிறைந்த சமுத்திரமும், தொடர் மேகமும் - தொடர்பான்மேகமும், துன்னுதல்போலாம் - அமைவதுபோல வாம்—எ-று.

எ - து. மிகுந்த அறிவினலும், விசாரணையினலும், ஆத்ம தரிச மும், விராகமும் நீயொருமிக்க எப்போதுங் கைவசமாக்குவாய். நிலை யாகிய விராகத்தினல் தகுந்த ஆத்மவிசாரணையும், அவ்வாத்ம விசா ரணையினல் ஒழிவில்லாத விராகமும், ஒன்றுக்கொன்று தொகுப் பாய் நிறைந்த சமுத்திரமும், தொடர்பான மேகமும் அமைவது போலவாம் -எ-ம். (38)

## இச் சகாயத்தோடு முத்தியையடையும் மரபுகூறல்.

நாட்டினியல்பு வழுவாம னட்டோர்க்கிதமா நற்பொருள்கள்
ஈட்டிமுன்ன மதனாலே யினியகுணத்தி லுயர்ந்தோரைக்
கூட்டியவரா னிராசையினைக் கூடியதனால் விசாரத்தைத்
தீட்டியதனான் மெய்ஞ்ஞானந் தெளிந்தான்முத்தி சித்திக்கும்.

இ - ள். நாட்டினியல்பு வழுவாமல் - தேசசாரந்தவறாமல், நட்டோர்க்கிதமாம் - உறவினர்க்குரித்தான, நற்பொருள்களீட்டி - நல்ல திரவியங்களைச் சம்பாதித்து, முன்னமதனால் - முன்பு அப்பொருளினால், இனிய குணத்தில்- இனிமையான (சாத்மீக) குணத்தில், உயர்ந்தோரைக்கூட்டி - மேன்மையான சத்துக்களைச்சேர்ந்து, அவரால் - அவர்களால், நிராசையினைக்கூட்டி - வயிராக்கியத்தையடைந்து, அதனால்- அந்தவயிராக்கியத்தினால், விசாரத்தைத்தீட்டி- (ஆத்ம) விசாரணையைச்செய்து, அதனால் - அந்தவிசாரணையினால், மெய்ஞ்ஞானந் தெளிந்தால் - உண்மைஞானத்தைத் தெளிவுற்றால், முத்திசித்திக்கும் மோட்சமுண்டாகும்-எ-று.

எ - று. தேசசாரந்தவறாமல் உறவினர்க் குரித்தான நல்லதிரவியங்களைச் சம்பாதித்து, முன்புஅப்பொருளினால் இனிமையான சாத்மீககுணத்தில் மேன்மையான சததுக்களைச் சேர்ந்து, அவர்களால் வயிராக்கியததை யடைந்து, அந்த வயிராக்கியத்தினால் ஆத்மவிசாரணையைச்செய்து, அநத விசாரணையினால் உண்மை ஞானத்தைத் தெளிவுற்றால் மோட்சமுண்டாகும்—எ-ம். (39)

## முன்விசாரித்த அநுபவத்தை மனனஞ் செய்ததினாற் சுகித்தல்.

என்றுமுன்ன மென்றந்தை யிசைத்தான்றெய்வ சகாயத்தால்
ஒன்றுமொழியா தின்றுணர்ந்தே னுணர்வுபெற்றேன் போகத்தில்
நின்றவாசை யின்றொழித்து நிராசையென்னு நிதியாலே
துன்றிநொய்தா யுபசாந்தச் சுதையிற்குளிர்ந்த சுகம்பெற்றேன்.

இ ள். என்று முன்னமென்றந்தை - இப்படியென்றுமுன்னமேயெனது பிதாவானவர், இசைத்தான் - சொன்னார், தெய்வ சகாயத்தால் - தெய்வசகாயத்தினால், ஒன்று மொழியாது - ஒன்றையும்விடாமல், இன்றுணர்ந்தேன்- இப்பொழுதறிந்தேன், உணர்வுபெற்றேன் - ஞானத்தையடைந்தேன், போகத்தில்நின்றவாசை - போகத்திலிருந்தஇச்சையை, இன்றொழித்து - இப்போது நீக்கி, நிராசையென்னு நிதியாலே துன்றி - விராகமென்கிறசெல்வத்தினால் நிறைந்து, நொய்தாய் சொச்சமாய், உபசாந்தச்சுதையில் - உபசாந்த

மென்னும் அமிர்தத்தினுல், குளிர்ந்தசுகம்பெற்றேன்-சீதளமான பரமசுகத்தையடைந்தேன்-எ-று.

எ - து. இப்படியென்று முன்னமே எனது பிதாவானவர் சொன்னர். தெய்வ சகாயத்தினுல் ஒன்றையும் விடாமல் இப்பொழுதறிந்தேன், ஞானத்தை யடைந்தேன். போகத்திலிருந்த இச்சையைஇப்போதுநீக்கி விராகமென்கின்ற செல்வததினுனிறைந்து சொச்சமாய் உபசாந்தமென்னும் அமிர்தத்தினுல் சீதளமான பரமசுகத்தையடைந்தேன்—எ—ம். (40)

## நிதித்தியிற் காட்சிப்படல்.

அந்தோவந்தோ விதுநெடுநா ளறிந்திலேனின் றறிவுற்ற
சந்தோடத்தை யென்சொல்வேன் சகலநினைவுஞ் சமித்தாறி
நொந்தோரின்ப துன்பத்தா னோவாதிருக்கு மிடமிதுவே
உய்ந்தோருறையும பதமிதுவே யுபசாந்தத்தி னுயர்விதுவே.

இ - ள். அந்தோவந்தோ - அகோஅகோ, இது - இவ்வனுபவத்தை, நெடுநாளறிந்திலன் - வெகுநாளறியாதவனுனேன், இன்றறிவற்றசந்தோடத்தை- இபபோதறிந்தமகிழ்ச்சியை, என்சொல்வேன் - என்னவென்றுசொல்லுவேன், சகலநினைவுஞ் சமித்தாறி எல்லாநினைவுகளும் உபசாந்தமாய், இன்பதுன்பத்தால் - சுகதுக்கங்களில், நொந்தோர் - துன்ப முற்றவர்கள், நோவாதிருக்குமிடமிதுவே - வருந்தாமலிருக்கின்ற இடமிதுதான், உய்ந்தோருறையும் பதமிதுவே - ஆத்மவாழ்வையடைந்தவர்கள், பொருந்தநின்ற பதமிதுதான், உபசாந்தத்தின்-உபசமனததினுடைய, உயர்விதுவே-மாட்சிமையிதுதான்-எ-று.

எ - து. அகோ அகோ! இவ்வனுபவததை வெகுநாளறியாதவனுனேன். இப்போதறிந்தமகிழ்ச்சியைஎன்னவென்றுசொல்வேன். எல்லாநினைவுகளும் உபசாந்தமாய் சுசதுக்கங்களினுல் துன்பமுற்றவர்கள் வருந்தாமலிருக்கின்ற இடமிதுதான். ஆத்மவாழ்வை யடைந்தவர்கள் பொருந்காநின்ற பதமிதுதான், உபசமனத்தினுடைய மாட்சிமையிதுதான்—எ-ம். (41)

## பரோட்சார்த்தத்தில் சந்தேகநீங்கி யபரோட்சமாய் அதனில் நிற்றற்பொருட்டு ஆசிரியரைச் சிந்தித்தல்.



என்னவுரைத்து நானுமொன் றுருவமேதென் றியான் விளங்கத்
தன்னையறியுஞ் சுக்கிரனைத தாழ்ந்துள்ளி தத்துவத்தை

உன்னும்பொழுதே யஞ்ஞான மோடுமென்ன வுசனுவை
முன்னவேண்டு மெனக்கண்கண் முகிழ்ந்துநினைந்தான்முழுதன்பால்

இ - ள். என்னவுரைத்து - இப்படியென்றுசொல்லி, யானுர் - யானுர் என்னுருவமேதென்று - எனதுசொரூப மியாதென்று விசாரித்து, இயான் விளங்க - நான் பிரகாசிக்கும்படி, தன்னையறியுஞ் சுக்கிரனை - தனது சொரூபத்தை யுணர்ந்திருக்கின்ற (நமது குருவாகிய) சுக்கிராசாரியரை, தாழ்ந்து - வணங்கி, வினவி - விசாரித்து, தத்துவத்தை - உண்மையை, உன்னும்பொழுது - நினைக்குமளவில், அஞ்ஞானமோடுமென்ன - அஞ்ஞானங் கெடுமென்று (நினைத்து), உசனுவை - சுக்கிராசாரியரை, முன்னவேண்டுமென - நினைக்க வேண்டுமென்று, கண்கண்முகிழ்த்து - கண்களைக்குவித்து, முழுதன்பால் பூரணமான அன்பினுல், நினைந்தான் தியானித்தான்—எ-று.

எ - அ. இப்படியென்று சொல்லி யானுர்? எனதுசொரூபமியாதென்று விசாரித்து நான் பிரகாசிக்கும்படி தனது சொரூபத்தையுணர்ந்திருக்கின்ற நமதுகுருவாகிய சுக்கிராசாரியரைவணங்கி, விசாரித்து, உண்மையை நினைக்குமளவில், அஞ்ஞானங்கெடுமென்று நினைத்துச், சுக்கிராசாரியரை நினைக்கவேண்டுமென்று கண்களைக்குவித்துப் பூரணமான அன்பினுல் தியானித்தான்- ம-ம்.

இ-ரு-க-ம். முத்தியை யடைதற்கு உத்தியும் அவ்வுத்திக்குச் சகாயமும் அச்சகாயத்துக்குச் சாதனமுமாகிய நிலைகளை அறிவித்ததாம். (42)

## ஆசாரியரைத் தரிசித்துத் துதித்தல்.

மெய்யாகியசச்சிதானந்த வெளியேயவடிவா கியவெள்ளி
உய்யாநின்ற மாவலிமுன் னுதிப்பவவனு முவந்திறைஞ்சிக்
கையார்மணியா லுயர்மலராற் காலிலருச்சித் துரைசெய்வான்
ஐயாநின்னன் பெனையெழுப்ப வடியேனுரைப்ப தறிந்தருள்வாய்.

இ - ள். மெய்யாகிய - உண்மையான, சச்சிதானந்தவெளியே - சச்சிதானந்தாயமே - வடிவாகியவெள்ளி - சொரூபமாயிருக்கின்றசுக்கிராசாரியார், உய்யாநின்ற - ஆத்மவாழ்வை யடையாநின்ற, மாவலிமுன்னுதிப்ப - மாவலியின் முன்னேதோன்ற, அவனுமுவந்திறைஞ்சி - அவ்வாசனு மகிழ்ச்சியோடும் வணங்கி, கையார்மணியால் - கைநிறைந்தஇரத்தினங்களினுலும், உயர்மலரால் - நல்லபுட்பங்களினுலும், காலிலருச்சித்து - பாதத்திலருச்சனைசெய்து, உரைசெய்வான் - (மாவலி) சொல்லுவான், ஐயா - எனதாச்சாரியரே, நின்னன்பெனையெழுப்ப-தேவரீர்அருளானதுஎன்னைத்தூண்ட,அடியேனுரை

ப்பது - அடியேன் சொல்லுவதை, அறிந்தருள்வாய் - கேட்டு அனுக்கிரகஞ் செய்வாய்—எ-று.

எ — து. உண்மையான சச்சிதாநந்த ஆகாயமே சொரூபமாயிருக்கின்ற சுக்கிராசாரியார் ஆத்மவாழ்வை யடையாநின்ற மாவலியின் முன்னேதோன்ற அவ்வாசனும் மகிழ்ச்சியோடும் வணங்கி கையினிறைந்த இரத்தினங்களினாலும், நல்ல புட்பங்களினாலும, பாதத்திலருச்சனைசெய்து, மாவலிசொல்லுவான், எனதாசிரியரே தேவரீர் அருளானது என்னைத்தூண்ட அடியேன் சொல்லுவதைக் கேட்டு அனுக்கிரகஞ் செய்வாய்—எ-ம். (43)

## உலகமுதலியா வழிலுமிருக்கின்றது யாதென விசாரித்தல்.

---

என்னிங்குள்ள தப்பாலென் னெல்லைசொல்லப் பட்டுளதென்
துன்னுமெல்லை யில்லாதென் சொல்லுநானார் நீயாரிம
மன்னுமுலக மேதென்று மயக்கந்தீர வருளென்ன
அன்னதெல்லாந் தெரியவிரித் தவனுக்கிவனன் றறிவித்தான்.

இ - ள். இங்குள்ளதென் - இவ்விடத்துள்ளதென்ன, அப்பாலென்-அப்பாலிருக்கின்றதென்ன, எல்லை சொல்லப்பட்டுளதென் அளவுசொல்லப்பட்டதென்ன, துன்னுமெல்லையில்லாதென் - நெருங்கிய அளவில்லாததென்ன, சொல்லு நானார்-பேசுகின்ற யானார், நீயார் - (கேட்கின்ற) நீயார், இம்மன்னுமுலகமேதென்று - இந்த நிலைபெற்ற சகமியாதென்று, மயக்கந்தீர வருளென்ன - மயக்கந்தீரும்படி அனுக்கிரகஞ்செய்வாயென்று கேட்க, அன்னதெல்லாம் - அவன்கேட்ட சகலமும், தெரியவிரித்து - தெரியும்படி பகுத்து, அவனுக்கு - அந்த மாவலிக்கு, இவன் - சுக்கிராசாரியானவர், நன்றறிவித்தான்- நன்றாகத் தெரிவித்தார்—எ-று.

எ - து. இவ்விடத்துள்ளதென்ன? அப்பாலிருக்கின்றதென்ன? அளவு சொல்லப்பட்டதென்ன? நெருங்கிய அளவில்லாததென்ன பேசுகின்ற யானார்? கேட்கின்ற நீரார்? இந்த நிலைபெற்ற சக மியாதென்று மயக்கந்தீரும்படி அனுக்கிரகஞ் செய்வாயென்று கேட்க, அவன்கேட்ட சகலமும் தெரியும்படி பகுத்து அந்த மாவலிக்கு இச் சுக்கிராசாரியானவர் நன்றாகத் தெரிவித்தார்—எ-ம். (44)

---

## இந்த எழு முதலியயாவுஞ் சின்மாத்திரமேயென உபதேசித்தல்.

வருங்கற்பகவிண் விரைந்தேக வந்தேன்பலசொல் வியும்பயனென்
சுருங்கச்சொல்லும் பயன்கேளாய் தோன்றவிங்குள் ளதுவுஞ்சித்
தொருங்கப்புறத்துஞ் சித்தெல்லை யுள்ளதுஞ்சித் தெல்லையற
நெருங்குற்றதுஞ்சித் தியான்சித்து நீசித்துலக நிறைசித்தே.

இ-ள். வருங்கற்பகவிண் - வளருகின்ற கற்பக விருட்சத்தையுடைய தேவலோகத்துக்கு, விரைந்தேகவந்தேன் - விரைவோடுஞ்செல்ல வந்தேன், பலசொல்வியும் பயனென் - பலவாகப்பேசியும் பிரயோசனமென்ன, சுருங்கச்சொல்லும் - சுருக்கமாகச்சொல்லுகின்ற, பயன்கேளாய் - பிரயோசனத்தைக் கேட்பாய், தோன்ற விங்குள்ளதுவும் - தோற்றமாக இவ்விடத்துள்ளதுவும், சித்து - ஞானமே, ஒருங்கப்புறத்தும் - சமஸ்தமான புறம்பிலுள்ள இடங்களும், சித்து - ஞானமே, எல்லையுள்ளதும் - அளவுள்ளதும், சித்து - ஞானமே, எல்லையற நெருங்குற்றதும் - அளவில்லாமற் செறிவுள்ளதும், சித்து - ஞானமே, யான்சித்து - (சொல்லுகின்ற) யானும் ஞானமே, நீசித்து - (கேட்கின்ற) நீயும் ஞானமே, உலக நிறை சித்தே - சகலமும் பூரணஞானமே-எ-று.

எ-து. வளருகின்ற கற்பகவிருட்சத்தையுடைய தேவலோகத்துக்கு விரைவோடுஞ் செல்லவந்தேன். பலவாகப்பேசியும் பிரயோசனமென்ன, சுருக்கமாகச்சொல்லுகின்ற பிரயோசனத்தைக் கேட்பாய். தோற்றமாக இவ்விடத்துள்ளதுவும் ஞானமே, சமஸ்தமான புறம்பிலுள்ள இடங்களும் ஞானமே, அளவுள்ளதும் ஞானமே, அளவில்லாமற் செறிவுள்ளதும் ஞானமே, சொல்லுகின்ற யானும் ஞானமே, கேட்கின்ற நீயும் ஞானமே, சகலமும் பூரணஞானமே—எ-ம். (45)

## இவ் வனுபவத்தில் அழுந்தென்று அருளி ஏகுதல்.

இதுவேசுருக்க மிவ்வுறுதி யிதயங்கொண்டிவ் வகைக்கேற்ற
மதியானின்னை நினைநீயே மாறுதுணர்ந்து நோக்குதியேல்
அதனாலந்த மாம்பதத்தை யடைதியோரே முருந்தவரும்
புகிதோர்தெய்வ காரியத்திற் புகுந்தாரியாமும் போகுதுமால்.

இ-ள். இதுவே சுருக்கம் - இந்நிலையே சுருக்கமாம், இவ்வுறுதி - இச்சித்தாந்தத்தை, இதயங்கொண்டு - மனதிற் றரித்துக்கொண்டு, இவ்வகைக்கேற்ற மதியால் - இவைகளுக்குரிய அறிவினால், நின்னை - உனது சொரூபத்தை, நீயே நினை - நீயே சிந்திப்பாய், மாறுதுணர்ந்து - திரிவின்றி யறி

ந்து, நோக்குதியேல் - பார்ப்பாயானால், அதனால் - அதினால், அந்தமாம்பதத்தையடைதி - முடிவான பரமபதத்தை யடையக்கடவாய், ஓரேழருந்தவரும்-ஒப்பற்ற அரியதவத்தையுடைய சத்தரிஷிகளும், புதிதோர் தெய்காரியத்தில்-நூதனமாயொரு தெய்வகாரியத்தில், புகுந்தார் - பிரவேசித்தார்கள், இயாமும்போகுதும் - நாமும்போவோம்-எ-று.

எ - து. இந்நிலையே சருக்கமாம். இச் சித்தாந்தத்தை மனதிற்றரித்துக்கொண்டு, இவ்வகைகளுக்குரிய அறிவினால், உனது சொரூபத்தை நீயே சிந்திப்பாய். திரிவின்றி அறிந்து பார்ப்பாயானால், அதினால் முடிவான பரமபதத்தை யடையக்கடவாய் ஒப்பற்ற அரிய தவத்தையுடைய சத்தரிஷிகளும் நூதனமாயொரு தெய்வகாரியத்தில் பிரவேசித்தார்கள் நாமும்போவோம்—எ-ம். (46)

இவ் வனுபவத்தை மன்னிதத்தல்.

என்றுவெள்ளி யேகியபின் னெல்லாமறிவா முலகினைப்பார்த்
துன்றுவொக்கு மொக்குமெனக் குசனுலுரைத்த துண்மையதே
முன்றுமவனி சித்துலகு மூன்றுஞ்சித்து நான்சித்து
நன்றலான திசைசித்து நாட்டுகின்ற தெலாஞ்சித்தே.

இ - ள். என்று - (இப்படி) யென்றுசொல்லி. வெள்ளி யேகியபின்-சுக்கிராசாரியர் போனபின்பு, எல்லாமறிவாம் - சகலமுஞானமாகிய, உலகினைப்பார்த்து சகத்தைப்பார்த்து, உன்று - நினைத்து, ஒக்குமொக்கும் - ஒவ்வும் ஒவ்வும், எனக்கு - என்றனுக்கு, உசனுலுரைத்தது - சுக்கிராசாரியராற் சொல்லியது. உண்மையதே - எதார்த்தமே, முன்றுமவனிசித்து - முதன்மையாகிய பூமியுஞானமே, உலகமூன்றுஞ்சித்து - திரிலோகமுஞானமே, நான் சித்து-எனது சொரூபமு ஞானமே, நன்றலான திசைசித்து-நல்ல நான்கு திக்குகளும் ஞானமே, நாட்டுகின்றதெலாஞ்சித்தே - ஸ்தாபிக்குங் கிரியைகளனைத்து ஞானமே-எ-று.

எ — து. இப்படி யென்று சொல்லிச் சுக்கிராசாரியர் போனபின்பு, சகலமு ஞானமாகிய சகத்தைப்பார்த்து நினைத்து, ஒவ்வும் ஒவ்வும் என்றனக்குச் சுக்கிராசாரியராற் சொல்லியது எதார்த்தமே, முதன்மையாகிய பூமியுஞானமே, திரிலோகமு ஞானமே, எனது சொரூபமுஞானமே. நல்ல நான்குதிக்குகளுஞானமே, ஸ்தாபிக்குங் கிரியைகளனைத்து ஞானமே—எ-ம். (47)

## நிதித்தியிற் காட்சிப்படல்.

தெரிக்கும்பொருளுந் தரிசனமுந் தீர்ந்துவெறுநின் மலவடிவாய்ப்
புரிக்குமுதயம் விடாதென்றும் பொலியும்பரமப் பொருளானேன்
வரிக்குங்காட்சி யிலாவறிவே வடிவாயொருகா லேயெங்கும்
விரிக்குநிறைவா யுபசாந்த வெளியாயறிவா மிகுபொருளேன்.

இ - ள். தெரிசிக்கும்பொருளும் - காணப்படுந்திரிசியமும், தரிசனமும் - காட்சியும், தீர்ந்து - ஒழிந்து, வெறு நின்மலவடிவாய்-கேவலகளங்கமற்றசொரூபமாய், புரிக்குமுதயம்விடாது - விளங்குகின்ற சதோதயமாய், என்றும் - எப்பொழுதும், பொலியும்பரமப் பொருளானேன் - பிரகாசிக்கின்ற பிரமவஸ்துவானேன், வரிக்குங் காட்சியிலா - பந்தப்படுத்துகின்றவிடயமில்லாத, அறிவேவடிவாய் - ஞானமேயுருவமாய், ஒருகால் - ஏககாலத்தில், எங்கும் - எவ்விடத்தும், விரிக்குநிறைவாய் - வியாபகமாகியும், உபசாந்தவெளியாய் - உபசமனமான ஞானாகாசமாகியும், அறிவாம் - அறிவாகியுமிருக்கின்ற, மிகுபொருளேன் - மகத்தாகிய பூரணவஸ்துவேயான்-எ-று.

எ - து. காணப்படுந் திரிசியமும், காட்சியும் ஒழிந்து கேவலகளங்கமற்ற சொரூபமாய் விளங்குகின்ற சதோதயமாய் எப்பொழுதும் பிரகாசிக்கின்ற பிரமவஸ்துவானேன். பந்தப்படுத்துகின்ற விடயமில்லாத ஞானமே யுருவமாய், ஏககாலத்தில் எவ்விடத்தும், வியாபகமாகியும், உபசமனமான ஞானாகாசமாகியும், அறிவாகியுமிருக்கின்ற மகத்தாகிய பூரணவஸ்துவே யான்—எ - ம். (48)

### சமாதி அடைதல்.

ஓங்குஞ்சின்மாத் திரப்பொருளா மோங்காரத்தை யுண்ணினைந்து
தூங்குந்தியான பரனுகித் தொடர்சங்கற்ப மெல்லாம்போய்
வாங்குந்தொழிலே டணையைய மனனஞான ஞேயமிவை
தாங்குஞாதா மனைத்துமறத் தனிச்சித்திரம்போ னெடிதிருந்தான்.

இ - ள். ஓங்கும் - ஓங்காநின்ற, சின்மாத்திர பொருளாம் - ஞானமாத்திரார்த்தமாகிய, ஓங்காரத்தை - பிரணவசொரூபத்தை, உண்ணினைந்து மனதிற் சிந்தித்து, தூங்குந் தியானபரனுகி - அறிதுயிலான தியானருடனும், தொடர்சங்கற்பமெல்லாம்போய் - தொடராநின்ற சங்கற்பங்களனைத்தும் விடுபட்டு, வாங்குந்தொழில் - கொள்ளாநின்ற செயல்களும், ஏடணை

ஈடணத்திரயமும், ஐயம்-சந்தேகமும், மனனம்-மனனமும், ஞானம் - அறிவும், ஞேயம்-விடயமும், இவைதாங்குஞாதா - இவைகளைத்தாங்குகின்ற ஞாதாவுமாகிய, அனைத்துமற - சகலமு நீங்க, தனிச்சித்திரம்போல் - தனித்த சித்திரத்தைப்போல, நெடிதிருந்தான் - வெகுநேரஞ் (சமாதியில்) இருந்தான்.

எ - து. ஓங்காரமென்ற ஞானமாத்திரார்த்தமாகிய பிரணவசொரூபத்தை மனதிற்சிந்தித்து அறிதுயிலான நியானருடனுப்தொடரா நின்ற சங்கற்பங்களனைத்தும் விடுபட்டுக்கொள்ளா நின்ற செயல்களும், ஈடணத்திரயமும், சந்தேகமும், மனனமும், அறிவும், விடயமும் இவைகளைத் தாங்குகின்ற ஞாதாவுமாகிய சகலமுநீங்க தனித்த சித்திரத்தைப்போல வெகுநேரஞ் சமாதியிலிருந்தான்.

## சச்சிதானந்தமாய் விளங்குதல்.

காற்றிலாத விளக்கொளிபோற் கலங்காதிருந்த மாவலிதான்
சீற்றமயறீர்ந் தறநிறைந்து சிந்தையென்னு மாசின்றித்
தோற்றுஞ்சத்தா மாத்திரத்தாற் சுடர்விட்டெறித்த படிசொல்லில்
ஆற்றமுகிறீர் சாற்காலத் தறவேதெளிந்த விண்போலும்.

இ - ள். காற்றிலாத விளக்கொளிபோல் - வாயுவில்லா இடத்துள்ள தீபப் பிரகாசத்தைப்போல கலங்காதிருந்த-சலனமற்றிருந்த, மாவலிதான்-மாவலிச்சக்கரவர்த்தி யானவன், சீற்றமயறீர்ந்து - இராகத்துவேஷநீங்கி, அற நிறைந்து மிகவும் பூரணமாய், சிந்தையென்னுமாசின்றி - சிந்தையென்கின்ற களங்கமில்லாமல், தோற்றுஞ் சத்தாமாத்திரத்தாற் சுடர்விட்டெறித்தபடி சொல்லில் - தோன்றுஞ்சத்தாமாத்திரத்தினல் ஒளிவிட்டுப் பிரகாசித்த விதத்தைக்கூறில், ஆற்றன்முகிறீர் சாற்காலத்து - வலிமையுள்ள மேகங்களில்லாதசாற்காலத்தில், அறவேதெளிந்த விண்போலும் - மிகவுந் தெளிந்த ஆகாயத்தைப்போலுமாம்-எ-று.

எ - து. வாயுவில்லாவிடத்துள்ள தீபப் பிரகாசத்தைப்போல சலனமற்றிருந்த மாவலிச்சக் கரவர்த்தியானவன் இராகத்துவேஷ நீங்கி மிகவும் பூரணமாய்ச் சிந்தையென்கின்ற களங்கமில்லாமல்தோன்றுஞ், சத்தாமாத்திரத்தினுல் ஒளிவிட்டுப் பிரகாசித்த விதத்தைக் கூறில் வலிமையுள்ள மேகங்களில்லாத சாற்காலத்தில் மிகவுந்தெளிந்த ஆகாயத்தைப்போலுமாம்—எ-ம். (50)

## சகசத்துக்கு வெளிப்படல்.

ஆங்கப்படியே யவனிருப்ப வவனதேவற் புரியசுரர்
ஓங்கற்கோயின் மேனிலத்தை யுற்றாருயர்மா வலிதானும்
நீங்கற்கரிய நிருவிகற்ப நிலைகூர்சமாதி நெடும்போது
தேங்குற்றதற்பின் விழித்துணர்ந்து மமதைதீர்ந்த சிந்தையனாய்.

இ - ள். ஆங்கப்படியே - அவ்விடத்து அந்தப் பிரகாரமே, அவனிருப்ப - அந்தமாவலியானவர் சமாதியில் இருக்க, அவனதேவற்புரியசுரர் - அவனது பணியைச்செய்கின்ற அவுணர்கள், ஓங்கற்கோயின் - அரண்மனையினது, மேனிலத்தையுற்றார் - மேல்வீட்டையடைந்தார்கள், உயர்மாவலிதானும் - மேன்மையானமகாபலியும், நீங்கற்கரிய - நீங்குதற்கரிய, நிருவிகற்பம் - நிருவிகற்பமான, நிலைகூர் சமாதி - நிலைமிருந்தசமாதியில், நெடும்போது - வெகுநேரம், தேங்குற்று - தங்கிநின்று, அதற்பின் - அதன்பின்பு, விழித்து - விழித்துக்கொண்டு, உணர்ந்து - அறிந்து, மமதைதீர்ந்த சிந்தையனாய் - மமதையற்ற மனதுடையவராய் - எ - று.

எ - து. அவ்விடத்து அந்தப் பிரகாரமே அந்த மாவலியானவர்சமாதியிலிருக்க, அவனது பணியைச்செய்கின்ற அவுணர்கள் அரண்மனையினது மேல்வீட்டை யடைந்தார்கள். மேன்மையான மகாபலியும் நீங்குதற்கரிய நிருவிகற்பமான நிலைமிருந்த சமாதியில்வெகுநேரம் தங்கிநின்று, அதன்பின்பு விழித்துக்கொண்டு அறிந்துமமதையற்ற மனதுடையவராய் — எ-ம். (51)

## சாட்சாத்காரம் அடைதல்.

பற்றிலாத மனத்தாலே பயின்றிராச காரியங்கண்
முற்றுமியற்றி யாபத்து முதிர்சம்பத்துஞ் சமமாகக்
குற்றமில்லாக் குறிப்பாலே குறிப்புற்றின்ப துன்பத்திற்
சற்றுமிதவா தமிழாது சமபாவனையிற் றானானான்.

இ - ள. பற்றிலாதமனத்தால் - நிராசைபொருந்திய மனதினால், பயின்ற - சொல்லிய, இராசகாரியங்கள் - இராசகாரியங்கள், முற்று மியற்றி - முழுதுஞ்செய்து, ஆபத்து - ஆபத்துகளிடத்திலும், முதிர்சம்பத்தும் - மிகுந்த சம்பத்துக்களிடத்திலும், சமமாக - சமதிருஷ்டியாக, குற்றமில்லாக்குறிப்பால் - குற்றமற்றகருத்தினால், குறிப்புற்று - ஒருமைப்பாடாய், இன்பதுன்பத்தில் - சுகதுக்கங்களில், சற்றும் - எவ்வளவேனும், மிதவாதமிழாது - மிதவாமலும் அமிழாமலும், சமபாவனையிற்றானானான் - சமபாவனையில்தானாக விளங்கினான் — எ - று.

எ - து. நிராசை பொருந்திய மனதினால்சொல்லிய இராசகாரியங்கள் முழுதுஞ்செய்து ஆபத்துக்களிடத்திலும், மிகுந்த சம்பத்துக்களிடத்திலும், சமதிருஷ்டியாகக் குற்றமற்ற கருத்தினால் ஒருமைப்பாடாய், சுகதுக்கங்களில் எவ்வளவேனும் மிதவாமலும் அமிழாமலும் சமபாவனையில் தானாகவிளங்கினான்—எ—ம்.

இ-ம்-க-ம். சிரவணமுதற் சாட்சாத்கார பரியந்தமுள்ள அனுபவத்தைக் கூறியதாம். (52)

## மாவலி ஞான அரசனாய் மனதை மந்திரியாக்கிச் சகலமுந் தன்வசமாய் அரசாட்சிசெய்ததுபோலச் செய்வாயெனல்.

ஓவாதவன்ற னுள்ளெழுந்த வூகாபோகம் பலகோடி
பாவாபாவம் பலகோடி பரந்ததெல்லா மிளைப்பாறி
மேவாநின்றா னெவ்விடத்தென் விண்ணின்மண்ணில் வேட்கைகளில்
தாவாநின்ற மனந்தன்னைத் தன்னதிதயத் துள்வைப்பாய்.

இ - ள். ஓவாது - ஒழியாமல், அவன்றன் - அவனுடைய, உள்ளெழுந்த - மனதிலுண்டாகிய, ஊகம் - இஷ்டசிந்தனையும், அபோகம் - அனுஷ்டசிந்தனையும், பலகோடி - அளவில்லாததாகவும், பாவம்-உண்டானதும், அபாவம்-இல்லாததுமான (பதார்த்தங்கள்), பலகோடி - அளவில்லாததாகவும், பரந்ததெல்லாம் - விரிந்திருக்கின்ற அனைத்திலும், இளைப்பாறி - விஸ்ராந்தியடைந்து, (பின்பு) எவ்விடத்தென் - எந்தஇடத்திலெதை, மேவாநின்றான் பொருந்தினான், விண்ணில் - பரத்திலும், மண்ணில் - இகத்திலுமுள்ள, வேட்கைகளில் - ஆசைகளில், தாவாநின்றமனந்தன்னை - பாயாநின்றமனதை, தன்னதிதயத்தின் வைப்பாய் - தனது இதயாம்பரத்தில் வைப்பபாய்-எ-று.

எ - து. ஒழியாமல் அவனுடைய மனதி லுண்டாகிய இஷ்டசிந்தனையும், அனுஷ்ட சிந்தனையும், அளவில்லாத தாகவும் உண்டானதும் இல்லாததுமான் பதார்த்தங்கள்; அளவில்லாததாகவும் விரிந்திருக்கின்ற அனைத்திலும் விஸ்ராந்தி யடைந்து பின்புஎந்த இடத்தில் எதைப்பொருந்தினான். பரத்திலும் இகத்திலுமுள்ள ஆசைகளில் பாயாநின்ற மனதைத்தனதுஇதயாம்பரத்தில் வைப்பாய்—எ-ம். (53)

## மனதைச்செயித்து முத்தி அடைவாயெனல்.

எங்கேயெங்கே மனமோடி யினையோரென்ன வீழ்ந்தழுந்தும்
அங்கேயங்கே நின்றெழுப்பி யகண்டவறிவி லடைவிப்பாய்

சங்கேதமதா யிவ்வாறு சாதித்துளமா மதகரியை
வெங்கேமறத் தளைத்தெல்லா விசாரத்தாலும் வீடணைவாம்.

இ - ள். எங்கேயெங்கே-எவ்விடத்தில் எவ்விடத்தில், மனமோடி-மனது சென்று, இளையோரென்ன - குழந்தைகளைப்போல, வீழ்ந்தழுந்தும் - (விடயங்களில்) விழுந்தழுந்தாநின்றது, அங்கேயங்கேநின்று - அவ்விடத்தில் அவ்விடத்திலிருந்து, எழுப்பி - கிளப்பி, அகண்டவறிவில் - அகண்டாகாரஞானத்தில், அடைவிப்பாய் - அடையச்செய்வாய், சங்கேதமதாய் - குறிப்பாய், இவ்வாறு சாதித்து - இந்தப் பிரகாரஞ்சாதனைசெய்து, உளமா மதகரியை - மனமென்னு மதர்த்தயானையை, வெங்கேதமற - கொடியதுன்பமறும்படி, தளைத்து - கட்டி, எல்லா விசாரத்தாலும்- சகல விசாரணையினாலும், வீடணைவாம் மோட்சமடையப்படுவதாம்—எ-று.

எ - து. எவ்விடத்தில் எவ்விடத்தில் மனது சென்று குழந்தைகளைப்போல விடயங்களில் விழுந் தழுந்தாநின்றது. அவ்விடத்தில் அவ்விடத்திலிருந்துகிளப்பி அகண்டாகார ஞானத்தில் அடையச்செய்வாய் குறிப்பாய் இந்தப்பிரகாரஞ் சாதனைசெய்து மனமென்னுமதர்த்த யானையைக்கொடிய துன்பமறும்படி கட்டிச் சகல விசாரணையினாலும் மோட்சமடையப்படுவதாம்--எ-ம்.

இ-உ-க-ம். இவ்விதமாக மனோவிச்சையை நீக்கி ஞானம் பெறுவா யென்பதாம், (54)

மாவலிகதை முற்றிற்று.

ஆக கதை 21-க்கு கவிதை 905.

---

# பிரகலாதன் கதை.

அவதாரிகை.

முன்கதையி னிச்சாத்தியாக பலதநினுலுண்டான விசாரத்தாற் சட்வாசாங்கஞ் சித்தாசாங்கமான அனுபவத்தை யறிவித்து இவ்வனுபவ மீஸ்வரானுக்கிரகத்தினாலும் வருமென்பதை யறிவிக்கு நிமித்தம் பிரகலாதன் கதையை நிரூபிக்கிறார்.

## பகையை வசப்படுத்த ஆலோசித்தல்.

பின்னுமீதோர் கதைகேட்பாய் பிரகலாதப் பெயரோனுந்
தன்னதுணர்வான் மெய்ஞ்ஞான தத்துவத்தைச் சாதித்தான்

அன்னதுரைப்பா மிரணியனு மசுரவேந்த னிறந்தளவே
இன்னல்கூரு மவன்மைந்த னிதயநடுங்கி யிவையுணர்ந்தான்.

இ-ள். பின்னும்-பின்பும், ஈதோர் கதைகேட்பாய் - இந்த ஒருகதை யைச்சொல்லக்கேட்பாய், பிரகலாதப்பெயரோனும் - பிரகலாதனென்னும் நாமத்தையுடையவனும், தன்னதுணர்வால் - தனதறிவினால், மெய்ஞ்ஞான தத்துவத்தை-மெய்ஞ்ஞானமானதத்துவசொரூபத்தை, சாதித்தான் - அடைந்தான், அன்னதுரைப்பாம்-அதைச்சொல்லுவோம், இரணியனும் - இரணிய னென்னு நாமத்தையுடைய, அசுரர்வேந்தன்-தானவர்களுக்கரசன், இறந்தளவே மரணமடைந்தமாத்திரத்தில், இன்னல்கூரும் - துன்பமிகுந்த, அவன் மைந்தன் - அவனது புத்திரன், இதயநடுங்கி - மனநடுக்கமுற்று, இவையுணர்ந்தான் - இவையெண்ணினன்-எ-று.

எ-து. பின்பும் இந்த ஒருகதையைச் சொல்லக்கேட்பாய். பிரகலாதனென்னு நாமத்தையுடையவனும், தனதறிவினால் மெய்ஞ் ஞானமான தத்துவசொரூபத்தை அடைந்தான். அதைச்சொல்லு வோம் இரணியனென்னு நாமத்தையுடைய தானவர்களுக்கரசன மரணமடைந்தமாத்திரத்தில் துன்பமிகுந்த அவனது புத்திரன் மன நடுக்கமுற்று இவையெண்ணினன்—எ-ம். (௧)

## பகைவன் வலிமையை உணர்தல்.

எனதுதாதை முதலசுர ரெனதுகுலத்தோ ரெண்ணிறந்தோர்
கனகமேரு வணுவென்னக் காயநிலைமைப் பெரிதுடையோர்
வனசயோனி யதிகார மாற்றவல்லோர் தாவல்லோர்
புனைவண்டுளவோ னெனுங்கனலிற் பூளைவீபோற் போயொழிந்தார்.

இ-ள். எனதுதாதைமுதலசுரர் - என்னுடைய பிதாமுதலியதானவர் கள், எனதுகுலத்தோர் - என்குலத்திலுள்ளவர்கள், எண்ணிறந்தோர் - அள வற்றவர்கள், கனகமேருவணுவென்ன - மகாமேரு அற்பமென்னும்படி, காய நிலைமை - சரீரநிலையை, பெரிதுடையோர் - பெரிதாகவுடையவர்கள், வனச யோனியதிகாரம் - தாமரையிடமாகப்பிறந்த பிரமாவி னதிகாரத்தை, மாற்ற வல்லோர் - கெடுக்கவல்லவர்கள், தாவல்லோர் - கொடுக்கவல்லவர்கள், புனை வண்டுளவோனெனுங்கனலில் - தரிக்கும்வளப்பம்பொருந்திய துளசிமாலை யையுடைய விஷ்ணுவென்னு மக்கினியில், பூளைவீபோல் இலவம்பஞ்சு கெடுதல்போல, போயொழிந்தார் - நசித்தார்கள்—எ-று.

எ-து. என்னுடைய பிதாமுதலிய தானவர்கள் என்குலத் திலுள்ளவர்கள் அளவற்றவர்கள் மகாமேரு அற்பமெனும்படி

சரீர நிலையைப் பெரிதாக உடையவர்கள். தாமரையிடமாகப்பிறந்த பிரமாவி னதிகாரத்தைகெடுக்கவல்லவர்கள். கொடுக்கவல்லவர்கள். தரிக்கும் வளர்ப்பம்பொருந்திய துளசிமாலையையுடைய விஷ்ணுவெ ன்னும் அக்கினியில் இலவம்பஞ்சு கெடுதல்போல நசித்தார்கள். (2)

## பகைவனைச்செயிக்கும் உபாயம் உணர்தல்.

---*---

அன்றொக்கும் பேரசுர ரழியுமூழிப் பெருங்காற்றாற்
சின்னகங்கள் போனமடிந்தார் செறிநுண்மணலிற் பலகோடி
இன்னளவனுக் கஞ்சாதா ரியாருமில்லை யெம்பகையா
மின்னார்நேமிப் படையோனை வெல்வானுபாய மீதொன்றே.

இ - ள். அன்றொக்கும் - அவர்களுக்கொப்பான, பேரசுரர் - பெரிதான அவுணர்கள், ஊழிப்பெருங்காற்றால் - கற்பாந்த சண்டமாருதத்தால், அழியுஞ்சின்னகங்கள்போல - கெடுகின்ற சிறுமலைகளைப்போல, மடிந்தார் - இறந்தவர்கள், செறிநுண்மணலில் - நெருங்கிய பொடிமணலைப்போல, பலகோடி- அளவில்லனவாம், இன்னள் - இக்காலம், அவனுக்கஞ்சாதார் -அம்மாலுக்குப் பயப்படாதவர்கள், யாருமில்லை - ஒருவருமில்லை, எம்பகையா - எமக்குப்பகையாகிய, மின்னார்நேமிப்படையோனை - ஒளிநிறைந்த சக்கராயுதத்தையுடைய விஷ்ணுவை, வெல்வானுபாய மீதொன்றே - செயித்தற்குபாய மீதொன்றே.

எ - து. அவர்களுக்கொப்பான பெரிதான அவுணர்கள் கற்பாந்த சண்டமாருதத்தால் கெடுகின்ற சிறுமலைகளைப்போல இறந்தவர்கள் நெருங்கிய பொடிமணலைப்போல அளவில்லனவாம். இக்காலம் அம்மாலுக்குப்பயப்படாதவர்கள் ஒருவருமில்லை. எமக்குப் பகையாகிய ஒளிநிறைந்த சக்கராயுதத்தையுடைய விஷ்ணுவைச்செயித்தற்கு உபாயமீதொன்றே—எ-ம்.

இ-ங-க-ம். முன்னுள்ளயாவும் அனித்தியமாய்ப் போனது காரணமாகச்சித்தசுத்தியுண்டாயதனால் நித்தியத்தையடைய 'விவேக முதித்த' தென்பதாம். (3)

## மூர்த்தியுபாசனைசெய்யச் சிந்தித்தல்.

---()---

எத்தன்மையினு லெண்ணுங்கினு மிதில்வேறுயர்ங்க நெறியில்லை
தத்துந்திரைப்பாற் கடலுறைவோன் சரணமன்றிச் சரணில்லை
சித்தமிந்தக் கணந்தொடங்கிச் சேர்கநாரா யணன்சரணம்
பத்தனுகி நானவனுப் பகிராதொழிக பாவனையே.

இ - ள். எத்தன்மையினால் - எந்தப்பிரகாரமாக, எண்ணுகினும் - நினைத்தாலும், இதில்வேறு - இதற்குவேறாக, உயர்ந்தநெறியில்லை - மேலான கதியில்லை, தத்தரங்கிரை - தாவாநின்ற அலைகளையுடைய, பாற்கடலுறைவோன் - திருப்பாற்கடலில்வசிக்கும் விஷ்ணுவினது, சரணமன்றிச்சரணில்லை - அடைக்கலமன்றிவேறடைக்கலமில்லை, சித்தம் - மனமானது, இத்தக்கணந்தொடங்கி - இந்தட்சணந்தொடங்கி, நாராயணன்சரணஞ்சேர்க- நாராயணனது பதத்தைச்சேரக்கடவது, பத்தனாகி - பத்தியையுடையவனாய், பாவனை - பாவனையினால், நானவனாய் - நானேயவனாகி, பகிராதொழிக - பிரியாதிருக்கக்கடவன்-எ-று.

எ - து. எந்தப்பிரகாரமாக நினைத்தாலும் இதற்கு வேறாக மேலான கதியில்லை. தாவாநின்ற அலைகளையுடைய திருப்பாற்கடலில் வசிக்கும் விஷ்ணுவினது அடைக்கலமன்றி வேறடைக்கலமில்லை. மனமானது இந்தட்சணந்தொடங்கி நாராயணனது பதத்தைச்சேரக்கடவது. பத்தியை யுடையவனாய் பாவனையினால் நானே அவனாகி பிரியாதிருக்கக்கடவன—எ-ம். (4)

## அஷ்டாக்ஷரத்தின் பெருமையை உணர்தல்.

நயந்ததெல்லா மெளிதருளு நாராயணாய நமவென்னும்
உயர்ந்ததிருமந் திரமென்ற னுளத்தி லிவிண்ணின் மாருதம்போற்
பெயர்ந்துநீங்கா துள்ளுறைக பேணியரியைப் பூசிப்போர்
இயைந்தவரிதா மப்பூசை யியற்றிப்பலனு மலதில்லை.

இ - ள். நயந்ததெல்லாம் - இச்சித்த சகலமும், எளிதருளும் - எளிதிற்கொடுக்கின்ற, நாராயணாயநமவென்னும் - நாராயணாயநம என்கின்ற, உயர்ந்த திருமந்திரம் - மேலான திருமந்திரமானது, என்றனுளத்தில் - என் மனதில், விண்ணின்மாருதம்போல் - ஆகாயத்தில் (நிறையுங்) காற்றைப்போல, பெயர்ந்து நீங்காது - விட்டு நீங்காமல், உள்ளுறைக - உள்ளே சேர்ந்திருக்கக்கடவது, அரியைப்பேணி - விஷ்ணுவைவணங்கி, பூசிப்போர் - ஆராதனை செய்பவர்கள், இயைந்த-இசைந்த, அரி-விஷ்ணுவே, தாமப்பூசை-தாமாகவந்த வாராதனையை, இயற்றிப்பலனும் - செய்யின் (முத்தி) லாபம், அலதில்லை அல்லாவிடிவில்லை-எ-று.

எ - து. இச்சித்தசகலமும் எளிதிற்கொடுக்கின்ற நாராயணாய நமவென்கின்ற மேலான திருமந்திரமானது என்மனதில் ஆகாயத்தில் நிறையுங்காற்றைப்போல விட்டு நீங்காமல் உள்ளே சேர்ந்திருக்கக்கடவது விஷ்ணுவை வணங்கி ஆராதனைசெய்பவர்கள் இசைந்த விஷ்ணுவே தாமாக வந்த ஆராதனையைச் செய்யின் முத்திலாபமாம். அல்லாவிடிவில்லை—எ-ம். (5)

## மூர்த்தியின் சகுணவுருவத்தைச் சிந்தித்தல்.

அந்தநெறியா லரியுருநா ளுகியரியைப் பூசிப்பன்
இந்தவுடன்மா தவன்வடிவா மிதனில்வாயு வடிவாகிப்
பந்தமுறுவோன் பராபரனு மிவனேபிராண பவனத்தின்
முந்துமோட்டத் தாலிரண்டா முகுந்தனுகிப் புறத்துறைவான்.

இ-ள். அந்தநெறியால் - அந்தமார்க்கத்தினுல், அரியுருநானுகி - விஷ்ணுசொரூபமே நானுய், அரியைப்பூசிப்பன் - விஷ்ணுவை ஆராதனை செய்வன், இந்தவுடல் - இச்சரீரமானது, மாதவன் வடிவாம் - விஷ்ணுவினது சொரூபமாம், இதனில் - இந்த வடிவத்தில், வாயுவடிவாகி - பிராணவாயுவின் வடிவமாய், பந்தமுறுவோன் - கட்டுப்படுவோன், பராபரனுமிவனே - பராபரனுகிய இந்தவிஷ்ணுவே, பிராணபவனத்தின் - பிராணவாயுவின், முந்துமோட்டத்தால் - முன்செல்லுதலால், இரண்டா முகுந்தனுகி - இரண்டாவது விஷ்ணுவாய், புறத்துறைவான் - புறம்பில் வசிப்பான்-எ-று.

எ-து. அந்தமார்க்கத்தினுல் விஷ்ணுசொரூபமே நானுய் விஷ்ணுவை ஆராதனைசெய்வன். இச்சரீரமானது விஷ்ணுவினது சொரூபமாம். இந்தவடிவத்தில் பிராணவாயுவின் வடிவமாய் கட்டுப்படுவோன் பராபரனுகிய இந்த விஷ்ணுவே பிராணவாயுவின் முன்செல்லுதலால் இரண்டாவது விஷ்ணுவாய்ப் புறம்பில் வசிப்பான்—எ-ம்.

(இ-ங-க-ம்.) மூர்த்தியைத் தியானிக்கு முறைமையை உணர்ந்தாம். (6)

## அகத்தில் ஆராதித்தல்.

அவ்வாறுன விவ்வரியை யகிலவுபசா ரங்களையுந்
தவ்வாமனத்தா லுளதாக்கிச் சதாபூசனையே சமைப்பனெனு
இவ்வாறெண்ணிப் பாரமெலா மெடுத்துச்சுமக்கு மனத்தாலே
செவ்வான்மணிப்பாத் திரதூப தீபங்கந்த மெலாஞ்செறித்து.

இ-ள். அவ்வாறுன - அந்தப்பிரகாரமாகிய, இவ்வரியை - இந்தவிஷ்ணுவை, அகிலவுபசாரங்களையும் சமஸ்தவுபசார வஸ்துக்களையும், தவ்வாமனத்தால் - தவருத மனதினுல் உளதாக்கி - கற்பித்து, சதாபூசனையே சமைப்பனென - எப்போதும் ஆராதனையைச்செய்வேனென்று, இவ்வாறெண்ணி - இதைப்பிரகாரமெனத்து, பாரமெலாமெடுத்து - (பூசாதிரவியமான) பாரங்களனைத்தையு மெடுத்து, சுமந்து மனத்தால் - தாங்குகின்ற மனதினுல், செவ்வான் - சிவந்ததான, மணிப்பாத்திரம் - இரத்தினபாத்

திரங்களும், தூபம் - தூபங்களும், தீபம் - தீபங்களும், கந்தமெலாஞ்செறித்து-வாசனைத் திரவியங்களனைத்தையு நிறைத்து-எ-று.

எ — து. அந்தப் பிரகாரமாகிய இந்த விஷ்ணுவை சமஸ்த உபசார வஸ்துக்களையும் தவறாத மனதினால்கற்பித்து எப்போதும் ஆராதனையைச் செய்வேனென்று இந்தப்பிரகார நினைத்து பூசாதிரவிய மான பாரங்களனைத்தையு மெடுத்துத் தாங்குகின்ற மனதினால் சிவந்ததான இரத்தினாபரணங்களும், தூபங்களும், தீபங்களும், வாசனைத்திரவியங்களனைத்தையு நிறைத்து—எ-ம். (7)

## புறத்தில் ஆராதித்தல்

——()——

மணிப்பூண்களும்பீ தாம்பரமும் வாடாமலரு நல்லமுதுங்
கணிப்பிலாத பொருளெல்லாங் கருத்தாற்பாவித் தரிச்சித்துத்
தணிப்பிலாத வன்பான்முன் றந்தப் புறத்தின் பொருட்டிரளாற்
பணிப்பா யவனையுட்போலப் பரிந்துபுறத்தும் பூசித்தான்.

இ - ள். மணிப்பூண்களும் - இரத்தினாபரணங்களும், பீதாம்பரமும்-சொன்னவஸ்திரங்களும், வாடாமலரும் - வாடாத (சொன்ன) புஷ்பங்களும், நல்லமுதும்-நல்லவடிசில்களுமாகிய, கணிப்பிலாதபொருளெல்லாம் - எண்ணிக்கையற்ற பூசாதிரவியங்களனைத்தையும், கருத்தாற்பாவித்து - மனதினாற்பாவனைசெய்து, அரிச்சித்து -ஆராதனைசெய்து, தணிப்பிலாதவன்பால்-தணிவில்லாத அன்பினால், முன்றந்த - முன்னே கொடுத்த, புறத்தின் பொருட்டிரளால் - புறம்பிலுள்ள திரண்டதிரவியங்களினால், பணிப்பாயவனை-சற்பசயனத்தையுடைய விஷ்ணுவை, உட்போல - அகத்திற் (பூசித்தது) போல, பரிந்து புறத்தும்பூசித்தான் - அன்புற்று புறத்தில் (தேவக்கிரகத்தில்) ஆராதனைசெய்தான்-எ-று.

எ — து. இரத்தினாபரணங்களும், சொன்னவஸ்திரங்களும், வாடாத சொன்னபுஷ்பங்களும், நல்ல அடிசில்களுமாகிய எண்ணிக்கையற்ற பூசாதிரவியங்களனைத்தையும் மனதினாற் பாவனைசெய்து ஆராதனைசெய்து தணிவில்லாத அன்பினால் முன்னேகொடுத்த புறம்பிலுள்ளதிரண்ட திரவியங்களினால் சற்பசயனத்தையுடைய விஷ்ணுவை அகத்திற்பூசித்ததுபோல அன்புற்று புறத்திற் தேவக்கிரகத்திலும் ஆராதனை செய்தான்—எ-ம். (8)

## அசுரர் யாவரும் ஆராதித்தல்.

ஆயவாறக் கணந்தொடங்கி யகண்டவடிவப் பரம்பொருளாம்
மாயனடிக ளருச்சித்தா னவனைப்போல வாளசுரர்

தீயகுணம்விட் டெல்லோருந் திருமாற்கடிமைத் திறம்பூண்டார்
மேயமன்னன் குணமன்றோ விரிந்தவுயிரின் குணந்தானே.

இ - ள். ஆயவாறு - அருச்சித்தப்படியே, அக்கணந்தொடங்கி - அந்த க்ஷணந்தொடங்கி, அகண்டவடிவம் - அகண்டாகாரசொரூபமாகிய, பரம்பொருளாம் - பிரமவஸ்துவான, மாயனடிகள் - விஷ்ணுவினுடைய பதங்களை, அருச்சித்தான் - ஆராதனைசெய்தான், அவனைப்போல - அப்பிரகலாதனைப் போல, வாளசுரர் - வாளாயுதத்தையுடைய அவுணர்களும், தீயகுணம் விட்டு - தீமையானகுணங்களைநீக்கி, எல்லோரும் - சகலரும், திருமாற்கடிமைதிறம் பூண்டார் - அரிக்கடிமைப்பட்டார்கள், மேயமன்னன் குணமன்றோ - பொருந்திய அரசனது குணமல்லவா, விரிந்த வுயிரின்குணந்தான் - பரந்தசீவர்களின்குணங்கள்-எ-று.

எ - து. அருச்சித்தப்படியே அந்தக்ஷணந்தொடங்கி அகண்டாகார சொரூபமாகிய பிரமவஸ்துவான விஷ்ணுவினுடைய பதங்களை ஆராதனை செய்தான். அப்பிரகலாதனைப்போல வாளாயுதத்தையுடைய அவுணர்களும், தீமையான குணங்களைநீக்கி சகலரும் அரிக்கடிமைப்பட்டார்கள். பொருந்திய அரசனது 'குணமல்லவா ? பரந்த சீவர்களின் குணங்கள்—ஏ-ம்.

(இ-ங-க-ம்.) பிரகலாதன் முதலிய யாவரு மூர்த்தியை உபாசித்து அம்மூர்த்திவடிவ மானார்களென்பதாம். (9)

## தேவர்கள் ஐயமுறல்.

திதிகாதலரு மவர்க்கரசுஞ் செங்கண்மான்மேற் சினந்தீர்ந்து
புதிதாகியபத் தியிலடிமை புக்காரென்றும் புரந்திரனுந்
துதிவானவருங் கேட்டலுமே துணுக்கமோடு வியப்பெய்தி
அதிபாதகர்க ளெம்பெருமாற் கன்பாகியதென் னெனவயிர்த்தார்.

இ - ள். திதிகாதலரும் - திதிபுத்திரர்களாகிய அசுரர்களும், அவர்க்கரசும் - அவர்க்கரசாகியபிரகலாதனும், செங்கண்மான்மேல் - சிவந்தகண்களையுடைய விஷ்ணுவினிடத்தில் (இருக்கின்ற), சினந்தீர்ந்து - கோபம் விட்டு, புதிதாகிய பத்தியில் - நூதனமான பக்தியினால், அடிமைபுக்காரென்று - அடிமைபுகுந்தார்களென்று, புரந்தரனும் - தேவேந்திரனும், துதிவானவரும் - துதிக்கின்ற தேவர்களும், கேட்டலும் - கேட்கவும், துணுக்கமோடு வியப்பெய்தி - அச்சத்துடனாச்சரியமடைந்து, அதிபாதர்கள் - மிகுந்த பாவத்தை யுடையவர்கள், எம்பெருமாற்கன்பாகியது எமதுபெருமானுக்கன்பானது, என்னெனவயிர்த்தார் - என்னவென்று சந்தேகமடைந்தார்கள்—எ-று.

எ - து. திதிபுத்திரர்களாகிய அசுரர்களும், அவர்க்கரசாகிய பிரகலாதனும், சிவந்த கண்களையுடைய விஷ்ணுவினிடத்திலி

ருக்கின்ற கோபம்விட்டு நூதனமான பக்தியினால் அடிமை புகுந்தார்களென்று தேவேந்திரனும் துதிக்கின்ற தேவர்களும் கேட்கவும், அச்சத்துடன்ஆச்சரியமடைந்து மிருந்த பாவத்தையுடையவர்கள் எமது பெருமானுக்கன்பானது என்னவென்று சந்தேகமடைந்தார்கள்—எ-ம். (10)

## தேவர்கள் வினவுதல்.

திருப்பாற்கடலிற் கண்வளருந் திருமான்முன்பு சென்றணுகி
விருப்பாற்றுதித்திந் திரன்முதலோர் மேகமேனி யனைநோக்கி
நெருப்பாந்தன்மை யசுரரெலா நினைப்பாவித்து நின்வடிவாய்
இருப்பாராலுன் மாயையென வெண்ணினோமீ தென்னென்னு.

இ - ள். திருப்பாற்கடலில் - அழகிய பாற்சமுத்திரத்தில், கண்வளரும் நித்திரைசெய்கின்ற, திருமான்முன்பு சென்றணுகி - விஷ்ணுவின் முன்னே போய்ச்சேர்ந்து, விருப்பாற்றுதித்து - விருப்பத்தினால் தோத்திரஞ்செய்து, இந்திரன் முதலோர் - தேவேந்திரன் முதலிய தேவர்கள், மேகமேனியனை நோக்கி - மேகநிறத்தையுடைய விஷ்ணுவைப்பார்த்து, நெருப்பாந்தன்மை - அக்கினியானசுபாவத்தையுடைய, அசுரரெலாம் - தயித்தியரனைவரும், நினைப்பாவித்து - உன்னைப்பாவனைசெய்து, நின்வடிவாயிருப்பாரானால் - உனதுருவமாயிருப்பார்களானால், மாயையென வெண்ணினோம் - (இதை) வஞ்சகமாக நினைத்தோம், ஈதென்னென்னு - இதென்னவென்று-எ-று.

எ — து. அழகிய பாற்சமுத்திரத்தில் நித்திரை செய்கின்றவிஷ்ணுவின் முன்னேபோய்ச்சேர்ந்து விருப்பத்தினால் தோத்திரஞ்செய்து தேவேந்திரன் முதலிய தேவர்கள் மேகநிறத்தையுடைய விஷ்ணுவைப்பார்த்து அக்கினியான சுபாவத்தையுடைய தயித்தியரனைவரும் உன்னைப் பாவனைசெய்து உனதுருவமா யிருப்பார்களானால் இதைவஞ்சகமாக நினைத்தோம் இதென்னவென்று—எ-ம்.

கொடியகொலைசெய் வல்லசுரர் குணங்களெங்கே பெறவரிய
முடிவதான·பிறப்பெங்கே முகுந்தன்பத்திப் பேறெங்கே
கடியதீயோர் நற்குணங்கள் கலவாரென்று கதையல்லால்
நெடியமாலே நின்பத்தி நீசர்க்கெல்லா நேருமதோ

இ - ள். கொடியகொலைசெய் - கொடிதானகொலையைச்செய்யும் வல்லசுரர் - வல்லமையுள்ள அவுணர்கள், குணங்களெங்கே - குணங்களெவ்விடம் பெறவரிய - பெறுதற்கரிய, முடிவதானபிறப்பெங்கே - முடிவாகிய சநநமெவ்

விடம், முகுந்தன் பத்திப்பேறெங்கே - விஷ்ணுவின் பத்தியைப் பெறுவதெவ்விடம், கடியதீயோர் - கொடிதான தீமைமையுடையவர்கள், நற்குணங்கள்-சற்குணங்களை, கலவாரென்று-கலந்தார்களென்று (சொல்லுவது), கழையல்லால் - சொல்லேயல்லாமல், நெடியமாலே - வியாபகமுள்ளவிஷ்ணுவே, நின்பத்தி - உனது பத்தியானது, நீசர்க்கெல்லாநேருமோ - சண்டாளருக்கெல்லாங் கிடைக்குமோ-எ-று.

எ-து. கொடிதான கொலையைச்செய்யும் வல்லமையுள்ள அவுணர்கள் குணங்களெவ்விடம்? பெறுதற்கரிய முடிவாகிய சுகமெவ்விடம்? விஷ்ணுவின்பத்தியைப்பெறுவதெவ்விடம்? கொடிதானதீமையை யுடையவர்கள் நற்குணங்களைக் கலந்தார்களென்றுசொல்லுவது சொல்லேயல்லாமல், வியாபகமுள்ள விஷ்ணுவே உனது பத்தியானதுசண்டாருக்கெல்லாங் கிடைக்குமோ—எ-ம்.

## சுவாமியானவர் உண்மையைக் கூறல்.

என்றவிண்ணோர்க் கெம்பெருமா னிமையோரஞ்சா தொழிமின்கள்
வென்றிபயிலும் பிரகலாதன் மீண்டும்பிறவாப் பிறப்புற்றான்
கன்றுதுயர்போய் மெஞ்ஞானக் கண்ணால்வீடு காண்குவனால்
ஒன்றுமிதனிற் கைதவமென் றுணரற்பால தில்தாகும்.

இ-ள். என்றவிண்ணோர்க்கு - (இப்படி)யென்றுசொல்லிய தேவர்களுக்கு, எம்பெருமான் - எமதுபெருமானாகியவிஷ்ணு, இமையோர்-தேவர்களே, அஞ்சாதொழிமின்கள் - அச்சப்படாதிருங்கள், வென்றிபயிலும் - சயஞ்செய்கின்ற, பிரகலாதன் - பிரகலாதனானவன், மீண்டும்பிறவா - திரும்பவுஞ்செனியாத, பிறப்புற்றான் சுகத்தையடைந்தான், கன்றுதுயர்போய் - கொலைசெய்கின்றதுன்பநீங்கி, மெய்ஞ்ஞானக்கண்ணால் - தத்துவஞானதிருஷ்டியினால், வீடுகாண்குவன் - மோட்சத்தையடைவனானையால், ஒன்றுமிதனிற்கைதவமென்று - ஒன்றுமிதனில்வஞ்சகமென்று, உணரற்பாலதிலதாகும் - அறியத்தக்கதில்லையாம்-எ-று.

எ-து. இப்படியென்று சொல்லிய தேவர்களுக்கு எமது பெருமானாகிய விஷ்ணு தேவர்களே! அச்சப்படாதிருங்கள். சயஞ்செய்கின்றபிரகலாதனானவன் திரும்பவுஞ் செனியாத சுகத்தையடைந்தான். கொலை செய்கின்ற துன்பநீங்கி தத்துவஞான திருஷ்டியினால் மோட்சத்தை யடைவனானையால் ஒன்று மிதனில் வஞ்சகமென்று அறியத்தக்கதில்லையாம்—எ-ம். (13)

## தேவரும் அசுரரும் உறவாதல்.

நல்லோர்தீமை யுறிற்கேடாந் தீயோர்நன்மை யுறினன்றும்
எல்லோரும்போ மெனவருளி யெம்மானங்கே மறைதலுமே
கல்லோலஞ்சூழ் கடலின்றுங் ககனாலயஞ்சேர்ந் தமரரெலாம்
புல்லாரென்ற வசுரருடன் புரையிலாத தமரானார்.

இ - ள். நல்லோர் - நன்மையுள்ளவர்கள், தீமையுறிற்கேடாம் பொல்லாங்கைப் பொருந்தினாற் கெடுதலாகும், தீயோர் - தீமையுள்ளவர்கள், நன்மையுறினன்றும் - நன்மையைப்பொருந்தினால்நன்மையேயாகும், எல்லோரும்போமெனவருளி - சகலரும்போமினென்றனுக்கிரகித்து, எம்மான் - எமதுமகானாகிய விஷ்ணுவும், ஆங்கேமறைதலும் - அவ்விடத்துமறையவும், கல்லோலஞ்சூழ் - பேரலைசூழ்ந்திருக்கின்ற, கடலின்றும் - (திருப்பாற்) கடலிலிருந்தும், ககனாலயஞ்சேர்ந்து - விண்ணுலகத்தையடைந்து, அமரரெலாம் - தேவர்களனைவரும், புல்லாரென்றவசுரருடன் - பகைவரென்று சொல்லப்பட்டதானவருடன், புரையிலாத தமரானார் - குற்றமற்றவுறவானார்கள்—எ-று.

ப - உ. நன்மையுள்ளவர்கள்பொல்லாங்கைப்பொருந்தினாற்கெடுதலாகும். தீமையுள்ளவர்கள்நன்மையைப்பொருந்தினால்நன்மையேயாகும் சகலரும் போமினென்று அனுக்கிரகித்து எனதுமகானாகிய விஷ்ணுவும் அவ்விடத்துமறையவும்பேரலைசூழ்ந்திருக்கின்றதிருப்பாற்கடலிலிருந்தும் விண்ணுலகத்தை யடைந்துதேவர்க ளனைவரும் பகைவரென்று சொல்லப்பட்ட தானவருடன் குற்றமற்ற உறவானார்கள்—எ-ம்.

இ-ரு-க-ம். அரியினால் தேவர்களும் அசுரர்களுந் தமதிடத்துள்ள ஐயம் நீங்கி அன்பிற் கலந்தனரென்பதாம். (14)

## நிராசை உண்டாதல்.



என்புகுளிரும் பத்தியினா லிமைப்போதொழியா தெப்போதும்
அன்புகூர நெடுமாலை யசுரர்வேந்த னருச்சித்தான்
வன்புபயிலு முக்கரணம் வழுவாபூசா பலத்தாலே
முன்புவிவேக மாநந்த முதிர்வும்விராக முளைத்தெழுந்த.

இ - ள். என்புகுளிரும்பத்தியினால் - அஸ்திகுளிர்கின்ற பரபத்தியினால், இமைப்போதொழியாது - இமைநேரநீங்காமல், எப்போதும் - சதாகாலமும், அன்புகூரநெடுமாலை - அன்புபெருக வியாபகமுள்ள விஷ்ணுவை, அசுரர்வேந்தன் - அவுணர்க்கரசனாகிய பிகலாதன், அருச்சித்தான் - ஆராதனைசெய்தான், வன்புபயிலு முக்கரணம் வழுவா - வலிமையிற் சுழலுகின்ற திரிகரணங்க

[illegible], பூசாபலத்தால்-பூசாபலத்தினல், முன்புவிவேகம் - முதன்மையா னவிவேகமும், ஆநந்தமுதிர்வும் - ஆநந்தமுதிர்ச்சியும், விராகம் - வயிராக்கிய மும், மூளைத்தெழுந்த - உண்டாய் வளர்ந்தன—எ-று.

எ - து. அஸ்திருளிர்கின்றபரமபத்தியினுல்இமைநேரநீங்காமல் சதாகாலமும் அன்புபெருக வியாபகமுள்ள விஷ்ணுவை அவுணர் க்கரசனுகிய பிரகலாதன் ஆராதனைசெய்தான். வலிமையிற் சுழலுகி ன்ற திரிகரணங்களுந்தவருத பூசாபலத்தினுல் முதன்மையானவிவே கமும் ஆநந்தமுதிர்ச்சியும் வயிராக்கியமும் உண்டாய் வளர்ந்தன.

## போகப்பற்று நீங்கல்.



சாதனங்கண் முதற்குணங்கள் சாலவுண்டா யிவனெஞ்சங்
காதலான போகத்திற் கவலும்பற்று கழன்றனவாற்
சீதமுத்து முததுடனே சேர்ந்தாறபற்று சேர்வுறுமோ
ஆதலாலே போகத்தி லழுநதாதுள்ள மாறினதே.

இ - ள். சாதனங்கண் முதற்குணங்கள் - நான்குசாதன முதலியகுணங் கள், சாலவுண்டாய் - மிகவுமுண்டாய், இவனெஞ்சம் -இவன்மனது, காதலா னபோகத்தில் - ஆசையாகிய போகங்களில், கவலும்பறறு கழன்றன - வருந்து கின்ற பற்றுக்கணீங்கின, சீதமுத்து - குளிர்ச்சியையுடைய முத்தானது, முத் துடன்சேர்ந்தால் - தாளத்தோடுஞ்சேரில், பற்றுசேர்வுறுமோ - பற்றுதலுண் டாகுமோ, ஆதலால் - ஆதலினுல், போகத்திலழுந்தாது - போகங்களிலழுந் தாமல், உள்ளமாறினது - மனது விஸ்ராந்தியடைந்தது-எ-று.

எ - து. நான்கு சாதனமுதலிய குணங்கள்மிகவுமுண்டாய்இவ ன் மனது ஆசையாகிய போகங்களில் வருந்துகின்ற பற்றுக்கள் நீங் கின. குளிர்ச்சியையுடைய முத்தானது தாளத்தோடுஞ் சேரில் பற் றுதலுண்டாகுமோ? ஆதலினுல் போகங்களில் அழுந்தாமல் மனது விஸ்ராந்தி யடைந்தது—எ-ம். (16)

## மூர்த்தி பிரசன்னமாதல்.



பூன்றவடிவுங் காணுமற் போகத்துள்ளு மழுந்தாமல்
நான்றவூச லாடுவபோ னல்லோனுள்ளந் திரிவதனை
மூன்றுசகத்தின் சான்றுன முகுந்தன்றிருவுள் ளத்துணர்ந்து
சான்றகுணத்தோன் பூசிக்குந் தனிமாமனையிற் றுனடைந்தான்.

இ - ள். பூன்றவடிவங்காணுமல்-பூரணவடிவையுந்தரிசியாமல், போகத்தன்னு மழுந்தாமல் போகத்தினிடத்திலும் அழுந்தாமல், நான்றஞசலாறுவ போல்-தொங்கின ஊசல் அலைவதுபோல, நல்லோனுள்ளம் - நன்மையுள்ள பிரகலாதனுடைய மனமானது, திரிவதனை - சுழலுவதை, மூன்றுசகத்தின் சான்றான - மூன்றுலகத்துக்குஞ் சாட்சியாகிய, முகுந்தன்-திருமாலானவர், திருவுள்ளத்துணர்ந்து - திருவுளத்திலறிந்து, சான்றகுணத்தோன் பூசிக்கும்-அறிவானகுணத்தை யுடையவன் ஆராதிக்கின்ற,தனிமாமனையில்-ஏகாந்தமான பூசாக்கிரகத்தில், தானடைந்தான்-தான்வந்துசேர்ந்தார் —எ-று.

எ - து. பூரணவடிவையுந் தரிசியாமல் போகத்தினிடத்திலும் அழுந்தாமல் தொங்கின ஊசல்அலைவதுபோலநன்மையுள்ள பிரகலாதனுடைய மனமானது சுழலுவதை மூன்றுலகத்துக்குஞ் சாட்சியாகிய திருமாலானவர்திருவுளத்திலறிந்து அறிவானகுணத்தையுடையவன் ஆராதிக்கின்ற ஏகாந்தமான பூசாக்கிரகத்தில் தானவந்துசேர்ந்தார்.

இ-ங-க-ம். பக்குவிக்கு அனுக்கிரகஞ்செய்ய உபாசனமூர்த்தி எழுந்தருளினதாம். (17)

## பிரத்தியட்சமான மூர்த்தியை ஆராதித்துத் துதித்தல்.

---

மூவராகி நின்றமுதன் மூலமடைந்த படியறிந்து
தேவதேவன் றனைமுன்னே செயலினிரட்டிப் பூசனைசெய்
தியாவராலுங்காண்பரிய வெம்மானம்மா வெதிர்ந்தனனென்
றூவதான படியன்பா லவனைத்துதித்தா னசுரேசன்.

இ - ள். மூவராகிநின்ற-மும்மூர்த்தியாய்நின்ற, முதன்மூலம் - முதன்மையான காரணமானது, அடைந்தபடி யறிந்து - வந்தடைந்தவிதத்தைப் (பிரகலாதன்) அறிந்து, தேவதேவன்றனை-தேவதேவனாகியவிஷ்ணுவை, முன்னே செயலின்-முன்னேசெய்ததிலும், இரட்டிப்பூசனைசெய்து - இரட்டித்து ஆராதனைசெய்து, இயாவராலுங்காண்பரிய - எவர்களாலுந்தரிசிப்பதற்கரிய, எம்மான் - எமதுசுவாமி, அம்மா - ஆச்சரியம், எதிர்ந்தனனென்று - பிரசன்னமானுனென்று, ஆவதானபடியன்பால் - ஆகின்ற பிரகாரமன்பினால், அசுரேசன் அவனைத்துதித்தான்-அசுரேசன் அந்த விஷ்ணுவைத் தோத்திரஞ்செய்தான்.

எ — து. மும்மூர்த்தியாய்நின்ற முதன்மையான காரணமானது வந்தடைந்த விதத்தைப் பிரகலாதனறிந்து தேவதேவனாகிய விஷ்ணுவை, முன்னேசெய்ததிலும் இரட்டித்துஆராதனைசெய்து,எவர்களாலுந் தரிசிப்பதற்கரிய எமது சுவாமி ஆச்சரியம் பிரசன்னமானு

றென்று ஆகின்றபிரகாரம் அன்பினால் அசுரேசன் அந்தவிஷ்ணுவைத் தோத்திரஞ்செய்தான்.—எ-ம். (18)

அண்டமென்னுமொருவீட்டி லரியபொருள்சேர் சரக்கறையே
சண்டபானு வெனவுதயாத் தமமற்றொளிருந் தற்பரமே
கண்டவுயிர்க ளனைத்திற்குங் கருணைகணான வான்றுணையே
புண்டரீகை நாயகமே போற்றிபோற்றி மிகப்போற்றி.

இ - ள். அண்டமென்னு மொருவீட்டில் - அண்டமென்கின்ற ஒப்பற்ற வீட்டில், அரியபொருள்சேர்-அரிதானபொருள் சேர்ந்திருக்கின்ற, சரக்கறையே பண்டாரமே, சண்டபானுவென - சூரியனைப்போல, உதயாத்தமமற்று, உதயாத்த மனமில்லாமல், ஒளிருந்தற்பரமே - பிரகாசிக்கின்ற பிரமமே, கண்ட வுயிர்களனைத்திற்கும் - தரிசித்த ஆத்மாக்களனைவர்க்கும், கருணைகணவான்பொருளே-கருணைக்கண்ணாகிய பரவஸ்துவே, புண்டரீகைநாயகமே - இலக்குமிக்கு நாயகனானவரே, போற்றி போற்றி-வந்தனம் வந்தனம், மிகப் போற்றி - மிகவும் வந்தனம் —எ-று.

எ - து. அண்டமென்கின்ற ஒப்பற்றவீட்டில் அரிதானபொருள் சேர்ந்திருக்கின்ற பண்டாரமே, சூரியனைப்போல உதயாத்த மனமில்லாமல் பிரகாசிக்கின்ற பிரமமே! தரிசித்த ஆத்மாக்களனைவர்க்கும் கருணைக்கண்ணாகிய பரவஸ்துவே! இலக்குமிக்கு நாயகனானவரே! வந்தனம் வந்தனம் மிகவும் வந்தனம—எ-ம்.

மேலோனாகிச் சகம்படைக்கும் விளையாட்டுடைய வித்தகனே
நாலேழொருப தெனுமுலகி னண்ணாவுயர்ந்த நற்பொருளே
ஆலேனாகிக் கண்வளர்ந்த வையா மெய்யாவருண்மூர்த்தி
பூலோகத்தி னாயகமே போற்றிபோற்றி மிகப்போற்றி

இ - ள். மேலோனாகி - மேலானவனாய், சகம்படைக்கும் உலகத்தை யுண்டாக்குகின்ற, விளையாட்டுடைய-லீலையையுடைய, வித்தகனே - ஞானமுடையவனே, நாலேழொருபதெனுமுலகின் - பதினான்குலகத்திலும்; நண்ணாவுயர்ந்த நற்பொருளே - சாராதமேலான நல்ல வஸ்துவே, ஆலேனாகி-ஆலிலையின்கண் துயிலவனாய் கண்வளர்ந்தவையா - நித்திரைசெய்த கடவுளே, மெய்யா - தத்துவமே, அருண்மூர்த்தி - தயாசொரூபமே, பூலோகத்து நாயகமே-பூலோகங்களுக்கு நாயகனானவரே, போற்றி போற்றி-வந்தனம் வந்தனம், மிகவும்போற்றி - மிகவும் வந்தனம் —எ-று.

எ - து. மேலானவனாய் உலகத்தை யுண்டாக்குகின்ற லீலையையுடைய ஞானமுடையவனே! பதினான் குலகத்திலும்

சாராத மேலான நல்லவஸ்துவே. ஆலிலையின் கண்ணுள்ளவனுய் நித்திரைசெய்த கடவுளே! தத்துவமே! தயாசொரூபமே! பூலோகங்களுக்கு நாயகனுனவரே! வந்தனம் வந்தனம் மிகவும் வந்தனம். (20)

கேதமிகுந்த வசுரரெனுங் கிளைத்தாமரைக்கு நெடும்பனியே
வேதநெறிச்செல் லமரரெனும் விரிதாமரைக்கு வெய்யோனே
பேதமறுத்தோ ருள்ளமெனும் பெருந்தாமரையிற் பிரமரமே
பூதமனைத்தி னுயகமே போற்றிபோற்றி மிகப்போற்றி.

இ - ள். கேதமிகுந்த வசுரரெனும் - துன்பமிகுந்த அவுணர்களென்கின்ற, கிளைத்தாமரைக்கு - கிளைகளையுடைய தாமரைப்பூவிற்கு, நெடும்பனியே நீண்டபனியானவரே, வேதநெறிச்செல் லமரரெனும் - வேதமார்க்கத்திற்செல்லுந் தேவர்களென்கின்ற, விரிதாமரைக்கு - விகசிதமான தாமரைப்பூவுக்கு, வெய்யோனே - சூரியனுனவரே, பேதமறுத்தோர் - வேற்றுமையைக் கெடுத்தவர்கள், உள்ளமெனும் - இருதயமென்கின்ற, பெருந்தாமரையிற் பிரமரமே- பெரிய தாமரைப்பூவிற்கு வண்டானவரே, பூதமனைத்தினுயகமே - ஆத்மாக்களுக்கெல்லா நாயகனுனவரே, போற்றிபோற்றி - வந்தனம் வந்தனம், மிகப்போற்றி - மிகவும் வந்தனம்—எ-று.

எ - று. துன்பமிகுந்த அவுணர்களென்கின்ற கிளைகளையுடைய தாமரைப்பூவிற்கு நீண்ட பனியானவரே! வேதமார்க்கத்திற் செல்லுந் தேவர்களென்கின்ற விகசிதமான தாமரைப்பூவிற்குச் சூரியனுனவரே! வேற்றுமையைக்கெடுத்தவர்கள் இருதயமென்கின்ற பெரிய தாமரைப்பூவிற்கு வண்டானவரே! ஆத்மாக்களுக்கெல்லா நாயகனுனவரே வந்தனம் வந்தனம் மிகவும் வந்தனம்—எ-ம். (21)

## பிரமாநந்தம் வேண்டல்.

——()——

என்பதான துதிபலவு மிசைப்பவிதயங் குளிர்ந்தருளி
அன்பமறுத்துப் பிறவாவா ருயவரங்கே ளெனக்கருணை
முன்பனுரைப்ப வனைத்திதய முளரியினுஞ்சேர் முதற்பொருளே
துன்பமில்லா வுயர்பதமே ததுவேயருள்வா யெனச்சொன்னுன்.

இ - ள். என்பதான - (இப்படி) என்றுசொல்லிய துதிபலவுமிசைப்ப - பலதோத்திரங்களைப் பிரகலாதன் சொல்ல, இதயங்குளிர்ந்தருளி - மனங்களித்தருள்செய்து, அன்ப-அன்பையுடைய பிரகலாதனு, மறுத்து - திரும்பவும், பிறவாவாருயவரங்கேளென செனியாததான வரத்தைக் கேளென்று கருணைமுன்பனுரைப்ப - கருணையின் முதல்வனுன விஷ்ணுவானவர் சொல்ல அனைத்திதய முளரியெனுஞ்சேர் - சகல ஜீருதயகமலங்களிலும் வசிக்கின்ற

முதற்பொருளே முதன்மையான வஸ்துவே, துன்பமில்லா - துக்கமற்ற, உயர்பதமேது - மேலானஆநந்த மியாது, அதுவே யருள்வாயெனச் சொன்ஞன்-அதையே யனுக்கிரகஞ்செய்வாயென்று (பிரகலாதன்) சொன்ஞர்-எ-று

எ - து இப்படியென்று சொல்லிய பலதோத்திரங்களைப் பிரகலாதன்சொல்ல, மனங்களித்தருள்செய்து அன்பையுடைய பிரகலாதனை திரும்பவும் செனியாகதான வரத்தைக்கேளென்று கருணையின் முதல்வனை விஷ்ணுவானவர்சொல்ல, சகலர் இருதய கமலங்களிலும் வசிக்கின்ற முதன்மையான வஸ்துவே! துக்கமற்ற மேலான வானநதமியாது? அதையேயனுக்கிரகஞ்செய்வா யென்று பிரகலாதன் சொன்ஞர்- -எ-ம் (22)

## அனுக்கிரகஞ்செய்தல்.

---

சித்தப்பிரம மெலலாமபோய்த் தெளிநதபரம சுகமபெற்றுச்
சுததபிரமத கிளைபபாற முடிவாம்விசாரந தோன்றுகவென்
றத்தப்பதும மமைத்தருளி யமலனேக வவன்றுதியால
மெதகப்பரவி மலாதூவித தொழுதான்விவேகி களினமிகோன்.

இ - ள. சித்தப்பிரம மெல்லாமபோய் - மனதிலுள்ள மயககஙகளைத் துநீங்க. தெளிந்த பரமசுகமபெற்று - தெளிவான பிரமாநநதத்தையடைந்து, சுத்தபிரமத கிளைபபாற - சுததபிரமத்தில விளாரங்கியடையமபொருட்டு,முடிவாம் விசாரம முடிவான (ஆத்ம) விசாரம் தோன்றுகவென்று - உண்டாககடவதென்று, அததப்பதுமமமைதத ருளி - காமலத்தைச் (சிரசின்மேல்) வைத்து அனுக்கிரகஞ்செய்து, அமலனேக - நின்மலஞன விஷ்ணு எழுந்தருள, அவன்றுதியால அவன் தோத்திரததிஞல, மெத்தபபரவி - மிகவும்வணஙகி, மலர்தூவி - புட்பத்தை வருஷித்து, விவேகிகளின் மிகோன் விவேகிகளுக்கு மேலான பிரகலாதன், தொழுதான் - வணஙகினன்-எ-று.

எ - து. மனதிலுள்ள மயக்கங்களைநது நீங்கித் தெளிவான பிரமாநநதத்தையடைநது, சுத்தப்பிரமததில விஸ்ராநதியடையும பொருட்டு, முடிவான ஆத்மவிசாரம உண்டாகக்கடவதென்று கரகமலத்தைச சிரசின்மேல்வைத்து அனுக்கிரகஞ்செய்து நின்மலஞன விஷ்ணுவெழுந்தருள, அவரைத, தோத்திரததிஞல மிகவும் வணஙகி புடபத்தை வருஷித்து விவேகிகளுக்கு மேலான பிரகலாதன் வணங்கினன— எ-ம

(இ-சு-க-ர.) உபாசித்தவன் வேண்டிய பரமசுகம் கூடுதற்கு ஏதுவான விசாரமுதிக்கக்கடவதென்று அருளினரென்பதாம்.

## தனித்திருந்து ஆத்மவிசாரத்துக்கு ஆரம்பித்தல்.

பனிவார்கடலிற் றிரையென்னப் பரமபுருடன் மறைந்ததற்பின்
இனிதாம்பதுமா தனத்திலிருந் திறைவன்றுதிக ளேத்தியபின்
சனியாவிசாரந் தந்தளித்தான் சநநமறுக்குந் தனிமூர்த்தி
நனிநானம்மை யாரென்று நாடுவோமுள் ளெனநினைவான்.

இ - ள். பனிவார்கடலில் - குளிர்ச்சிபொருந்திய நீண்டசமுத்திரத்தில், திரையென்ன - அலையைப்போல, பரமபுருடன் - புருடோத்தமன், மறைந்ததற்பின் - மறைந்ததன்பின்பு, இனிதாம்பதுமாதனத்திலிருந்து - இனியபதுமாசனத்திலிருந்து, இறைவன்றுதிகள் - கடவுளினதுதோத்திரங்களை, ஏத்தியபின் - துதித்தபின், சநநமறுக்குந்தனிமூர்த்தி - பிறவியைக்கெடுக்கின்ற ஒப்பற்ற சுவாமியானவர், சனியாவிசாரம் - பிறவாத (ஆத்ம) விசாரணையை, தந்தளித்தான்-கொடுத்திரட்சித்தான், நனிநான-மிகவுமியான், நம்மையாரென்று நாமாரென்று, உண்ணுடுவோமென - உள்ளே விசாரிப்போமென்று, நினைவான் - சிந்திப்பான் எ-று.

- து. குளிர்ச்சிபொருந்திய நீண்ட சமுத்திரத்தில் அலையைப்போல புருடோத்தமன் மறைந்ததன்பின்பு இனியபதுமாசனத்திலிருந்து கடவுளினது தோத்திரங்களைத் துதித்தபின், பிறவியைக்கெடுக்கின்ற ஒப்பற்ற சுவாமியானவர், பிறவாத ஆத்மவிசாரணையைக் கொடுத்திரட்சித்தான் மிகவுமியான்நாமாரென்று உள்ளே விசாரிப்போமென்று சிந்திப்பான்—எ-ம். (24)

## பஞ்சபூதவடிவமான சகத்துயான் அன்றெனல்.

யானூர்முன்ன மெவனேனி னிந்தப்புவியா டம்பரத்தில்
ஆனுநிருந்து நின்றோடி யழுதுசிரித்து மகிழ்ந்தயர்ந்தேன்
நானாவான சகமல்லே னங்கல்புல்லு மண்மரங்கள்
தானாய்ப்புறம்பாய்ச் சேதனமாஞ் சகநானென்னத் தக்கதுவோ.

இ - ள். முன்னம் முன்னமே, எவனேனேன் - எவனாயிருந்தயான், இந்தப்புவியாடம்பரத்தில் - இச்சகதாடம்பரத்தில், ஆனுநிருந்தும் - நீங்காமலிருந்தும், நின்று - நின்றும், ஓடி - ஓடியும், அழுது - அழுதும், சிரித்து - நகைத்தும், மகிழ்ந்து - களித்தும், அயர்ந்தேன் - வருந்தினவனாகிய, யானூர்-நானென்னுந்தன்மையன், நானாவான - நாநாவிதமாகிய, சகமல்லேன் -உலகநானல்லன், நகம் - மலைகளும், கல் - கற்களும், புல் - திரணங்களும், மண் - மண்களும், மரங்கடானாய் - மரங்களுமாகியும், புறம்பாய் - புறம்பாகியும், சேதனமாம் - சடமாகியுமிருக்கின்ற, சகம் - (இச்) சகத்தை, நானென்னத் தக்கதுவோ-யானென்று சொல்லத்தகுந்ததோ-எ-று.

